ஓம்.

# திருக்குறள் விளக்கம்

இதில் தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் திருவருள்செய்த

## திருக்குறள் மூலமும், அதற்குப் பரிமேலழகர் உரையும்

சேர்ந்துள்ளன

இரண்டாம் பாகம்.

## "பொருட்பால்"



இவை "சித்தாந்தப்" பத்திராசிரியர்

திருவாளர் - கிருஷ்ணாம்பேட்டை - குப்புசாமி முதலியார்

அவர்களால்

ஷை யார் மாணவர்கள்

கா. ரா. காளத்தீசுர முதலியார்,

முதலியார் விருப்பத்தின்படி

[illegible]

1926



DIWAN BAHADUR
P. SUBBIAH MUDALIYAR,
*Retired Judge.*

MYLAPORE,
3rd, Oct. 1926.

It is too late in the day and it would be almost presumptuous on the part of any one now to extol the greatness of that unique and immortal work *Tirukkural*, which prescribes, in an authoritative manner, the duties of citizens of different classes and in different stations in life. If *Tirukkural* is properly studied and acted upon by citizens in general, the world would be much happier than it is today; and there would be much more harmonious feeling than what exists now and there is now, more than ever before, need for greater harmony between the various classes and communities inhabiting this vast Indian Empire. But, owing to the generally low level of attainment in Tamil even among those Tamils classed as literate, *Tirukkural*, which may be truly said to contain maximum thought in minimum space, and the learned commentaries on that work like those of *Parimelazhagar* and others have been more or less sealed books to the public generally; and *Pandit Kuppuswami Mudaliyar* has rendered a great public service by laying bare the treasures of the immortal work even to ordinary readers, by the simple and effective manner of his exposition in his *Tirukkural Vilakkam*. He has adopted the conversational style and the language is easy and flowing and singularly free from pedantry. His illustration of the points he wishes to elucidate by reference to other works of repute, besides widening the vision of the reader, helps him in understanding the true meaning of *Tirukkural*

Every family in the Tamil country, that can lay any claim to literacy, may, with advantage, provide itself with a set of the *Vilakkam* and use it as a book of constant reference for regulating its conduct; and select portions of the *Vilakkam* may also be prescribed as text books for all classes in Arts Colleges and for the higher classes in Secondary Schools, so that the great lessons of life laid down in the *Tirukkural* for all time, and so well elucidated by the learned Pandit in his *Vilakkam* may be well impressed on our youths, at their impressionable age, so as to mould their character on proper lines and make them useful citizens in after life.

The learned Pandit has spared no pains and put himself to considerable expense in producing and publishing his *Tirukkural Vilakkam* and he deserves the encouragement of the public generally and the patronage of the richer classes in particular.

(Sd) P. SUBBIAH.

# திருக்குறள் விளக்கம்



## பொருட்பால்

---

### அரசியல்.

(பரி.) இனி இல்லறத்தின் வழிப்படுவனவாய பொருளின்பங்களுள் இருமையும் பயப்பதாய பொருள் கூறுவானெடுத்துக்கொண்டார். அது தன் றன்மைக்காரணமாய அரசநீதி கூறவே யடங்கும். அரசநீதியாவது காவல் நடாத்து முறைமை. அதனை அரசியல், அங்கவியல், ஒழிபியலென மூவகைப்படுத்து, மலர்தலை யுலகிற்குயிரெனச் சிறந்த அரசனதியல்பு இருபத்தைந்ததிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கண் இறைமாட்சி கூறுகின்

ருர்.

விளக்கம்:—அறம், பொருள், இன்பம் என்னும் பகுதிகள் மூன்றனுள் இம்மை, மறுமை, வீடு என்னும் மும்மையும் பயப்பதாகிய அறம் என்பதனை இதுகாறுங் கூறினாராதலின், இனி இல்லறத்தார்க்கு உரியனவாகிய பொருள் இன்பங்களுள் இம்மை, மறுமையாகிய இரண்டினையும் உண்டுபண்ணும் பொருள் என்பதனைக் கூறத்தொடங்கினர். அவ்விதப் பொருளையடைவதற்கு ஊழ் முதற் காரணமாதலின், அதனை முன்னரே கூறிப் போந்து, இனி அதன் துணைக்காரணமாகிய அரசனுடைய நீதியினைக் கூறுதலாலேயே அப்பொருளைக் கூறியதாகுமாதலால், அதனை இப் "பொருட்பால்" என்னும் பெரும் பிரிவினுள் கூறத் தொடங்கினர். அரசநீதியாவது அரசன் தன்னுடைய ஆளுகையைச் சரியாகச் செய்யும் முறைமை. அவ்விதஞ் செய்வானாயின், அவன் நீதியால் உலகத்துள்ள மக்களெல்லாம் இருமைக்கும் காரணமாகிய பொருளைப் பெற்று வாழ்வார்களென்பதாம். அவ்விதக் காவலைப்பற்றிக் கூறும் நீதிகள் அரசியல், அங்கவியல், ஒழிபியல் என்று மூவகைப்படும்.



அம்மூன்றனுள்ளும் உலகத்து உயிர்களுக்கு உயிர் என்று சொல்லும்படிச் சிறப்புடைய அரசனுடைய இயற்கையாகிய "அரசியல்" என்பதை முதலில் கூறத்தொடங்கி இருபத்தைந்து அதிகாரங்களால் கூறுகின்றனர். அவற்றுள் முதலாவதாக "இறைமாட்சி" என்பதைக் கூறப் புகுந்தனர் என்று முப்பத்தொன்பதாவது அதிகாரமாகிய இறைமாட்சியை ஆசிரியர் சொல்லத் தொடங்கினர்.

---

## 39. அதிகாரம்.

## இறைமாட்சி.

---

(பரி.) அஃதாவது அவன்றன் நற்குண நற்செய்கைகள். உலகபாலருரு

வாய்மின்று உலகங்காத்தலின், இறையென்றார்; "திருவுடைமன்னரைக் காணிற் திருமாலைக் கண்டேனே யென்னும்"* என்று பெரியாரும் பணித்தார்.

விளக்கம்:—இறைமாட்சியாவது அரசனுடைய நற்குணமும் நற்செய்கைகளுமாம். உலகத்தைக்காக்கும் காப்புக் கடவுள்போல் இருந்து உலகத்தைக் காத்தலால் அரசனை "இறை" என்றார். நல்லைக் குணங்கள்யாவும் உடைய நல்லவனே இறை என்னும் பெயருக்கு உரியனாவன். இது கருதியே திருவாய் மொழியில் 34-ம் திருப்பதிகம் 8-வது செய்யுளில்,

"திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னு
முருவுடை வண்ணங்கள் காணிலுலகளந் தானென்று துள்ளுங்
கருவுடைத் தேவிற்க ளெல்லாம் † கடல்வண்ணன் கோயிலே
[யென்னும்
வெருவிலும் வீழ்விலுமோவாள் கண்ணன் கழல்கள் விரும்புமே"*

என்று கூறப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "அரசனுடைய மாட்சிக்கு முக்கியமாக வேண்டப்படுவன எவை?" என்னலும், ஆசிரியர் முதற்றிருக்குறளைக் கூறத்தொடங்கினர்.

† தேவிற்கள்=தேவு+இல்கள் (கோயில்கள்).

## இறைமாட்சி 3

381. படை குடி கூழமைச்சு நட்பா ரணாறு
முடையா னரசரு ளேறு.

(பரி.) இ-ள். படை குடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும் உடையான் = படையுங் குடியுங் கூழும் அமைச்சும் நட்பும் அரணுமென்று சொல்லப்பட்ட ஆறங்கங்களையுமுடையவன் – அரசருள் ஏறு = அரசருள் ஏறு போல்வான். எ-று.

ஈண்டுக் குடியென்றது அதனையுடைய நாட்டினை. கூழென்றது அதற்கேதுவாய பொருளை. அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பென்பதே முறையாயினும், ஈண்டுச் செய்யுணோக்கிப் பிறழவைத்தார். 'ஆறுமுடையான்' என்றதனால், அவற்றுள் ஒன்றில்வழியும் அரசநீதி செல்லாதென்பது பெற்றாம்; வடநூலார் இவற்றிற்கு அங்கமெனப் பெயர்

கொமேத்தலுடம் அது நோக்கி. ஏறென்பது உபசாரவழக்கு. இதனால் அரசற்கங்கமாவன இவையென்பதூஉம் இவை முற்றுமுடைமையே அவன் வெற்றிக்கேது வென்பதூஉங் கூறப்பட்டன. (க)

விளக்கம் :—அமைச்சனும், நாடும், அரணும், பொருளும், படையும், நட்பும் ஆகிய இவ்வாறு அங்கங்களையும் அடைந்துள்ளவன் எவனோ அவனே அரசர்களுள் ஆண் சிங்கம் போன்றவன் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இவ்விதம் கூறிய ஆறு அங்கங்களுள் ஒன்று இல்லாத வழியும் அரசனுடைய நீதியாகிய இறைமாட்சி என்பது மாட்சிமைப்படாதென்பதாம். இதனாலேயே வடநூல் வல்லவர்களும் இவ்வாறினையும், அங்கம் போன்றிருப்பதால், அங்கமென்று கூறினர். இவை ஆறும் அரசன் ஒருவனுக்கு இருக்குமாயின், அவன் வெற்றியையே பொருந்தி குடிகளைக்காத்து அரசு நடத்துவான் என்றனர். இதுகேட்ட மாணாக்கர், "இவ்வங்கங்கள் ஆறும் அரசன் ஒருவனுக்கு இருக்குமாயின், அவை போதும் போதும்! அவனுக்கென்று ஓர் இயல்பும் வேண்டுவதில்லைபோலும் !" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

382. அஞ்சாமை யீகை யறிவூக்க மிந்நான்கு
மெஞ்சாமை வேந்தற் கியல்பு.

(பரி.) இ-ள். வேந்தற்கு இயல்பு=அரசனுக்கியல்பாவது—அஞ்சாமை ஈகை அறிவு ஊக்கம் இந்நான்கும் எஞ்சாமை=திண்மையும் கொடை



யும் அறிவும் ஊக்கமுமென்னும் இந்நான்கு குணமும் இடைவிடாது நிற்றல். எ-று.

ஊக்கம்=வினைசெய்தற்கண் மனவெழுச்சி. இவற்றுள் அறிவு ஆறங்கத்திற்கு முரித்து; ஈகை படைக்குரித்து; ஏனைய வினைக்குரிய. உயிர்க் குணங்களுள் ஒன்றுதோன்ற ஏனைய அடங்கிவரும்; அவற்றுள் இவை யடங்கின், அரசற்குக் கெடுவன பலவாமாகலின், இவை எப்பொழுதுந் தோன்றி நிற்றல் இயல்பாக வேண்டுமென்பார், 'எஞ்சாமை வேந்தற் கியல்பு' என்றார். (உ)

விளக்கம் :—அரசன் ஒருவனுக்கு இயல்பாகவே அமைச்

இருக்கவேண்டிய குணங்கள் நான்கென்றும், அவை அஞ்சாமை என்றும், ஈகையென்றும், அறிவுடைமை என்றும், ஊக்கமுடைமை என்றும் கூறுவனவாகும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் ஒருவன் ஒரு தொழிலைச் செய்யுங்கால் மன வெழுச்சி வேண்டுமாதலால் ஊக்கமென்றும், மேற்கூறிய ஆறு அங்கங்களையும் நடத்துவதற்கு அறிவு வேண்டுமாதலால் அறிவுடைமை என்றும், படைக்குக் கொடையினால் ஊக்கந்தோன்றுமாதலால் ஈகை என்றும், தான் எடுக்கும் காரியத்தில் காரணமில்லாமல் அரசன் அஞ்சுவானாயின் எடுத்த தொழில் பயன்படாதாதலால் அஞ்சாமை என்றும் அரசனுக்கு இயல்பாக வேண்டப்படும் குணங்களை விதந்து கூறினர். ஆதலால், அரசனொருவனுக்கு இந்நான்கினுள்ளும் ஒன்று குறையுமாயினும் பல கெடுதிகள் நேருமாதலால், ஒன்றுங்குறையாது இருத்தல் வேண்டும் என்பதும் பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "அரசனுக்கு இருக்கவேண்டிய குணங்கள் இவை தாமோ? இன்னும் வேறொன்றும் இல்லையோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

383. தூங்காமை கல்வி துணிவுடைமை யிம்மூன்று
நீங்கா நிலனாள் பவற்கு.

(பரி.) இ-ள். நிலன் ஆள்பவற்கு = நிலத்தினையாளுந் திருவுடையார்க்கு — தூங்காமை கல்வி துணிவுடைமை இம்மூன்றும் நீங்கா = அக்காரியங்களில் விரைவுடைமையும், அவையறிதற்கேற்ற கல்வியுடைமையும், ஆண்மையுடைமையுமாகிய இம்மூன்று குணமும் ஒருகாலும் நீங்கா. எ-று.



கல்வியது கூறுபாடு முன்னர்க் கூறப்படும். ஆண்மையாவது ஒன்றனையும் பாராது கடிதிற் செய்வதாகலின், அஃது ஈண்டு உபசார வழக்காற் றுணிவெனப்பட்டது. உம்மை, இறந்தது தழீஇய வெச்சவும்மை. இவற்றுட் கல்வி ஆறங்கத்திற்கு முரித்து; ஏனைய வினைக்குரிய. நீங்காவென்பதற்கு மேலெஞ்சாமைக் குரைத்தாங்குரைக்க. (௩)

விளக்கம்:—பூமியையாளும் கல்வியைவாய்ந்த அரசனொருவனுக்குத் தான் செய்யும் காரியங்களில் விரைந்துசெய்யும் தன்மையும், அவ்விதம் விரைந்து செய்யுங் காலத்தும் செய்யும் காரியங்கள் தகுதியுடையனவோ என்று அறிதற்குத் தக்க கல்வியுடைமையும், அக்கல்வியோடு அஞ்சா நெஞ்சுடைய ஆண்மையும் ஆகிய இம் மூன்று குணங்களும் நீங்காது இருத்தல் வேண்டுமென்று இத் திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், மேற்கூறிய இயற்கைக் குணங்களாகிய நான்கனோடு இம்மூன்றும் இருத்தல்வேண்டும் என்பதும் அறிந்தோம். இனிக் கல்வி முதலாகக் கூறிய குணங்களை அவ்வவ்வதிகாரங்களில் காட்டப்படும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித நற்குணங்கள் அமைந்த அரசனொருவன் தனது அஞ்சாமைக் குணத்தால் எக்காலத்தேனும் தவறுதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

384. அறனிழுக்கா தல்லவை நீக்கி மறனிழுக்கா
மான முடைய தரசு.

(பரி.) இ-ள். அறன் இழுக்காது = தனக்கோதிய அறத்தின் வழுவாதொழுகி—அல்லவை நீக்கி = அறனல்லவை தன்னாட்டின்கண்ணும் நிகழாமற் கடிந்து—மறன் இழுக்கா மானம் உடையது அரசு = வீரத்தின் வழுவாத மானத்தினையுடையான் அரசன். எ-று.

'அவ்வறமாவது :—ஓதல், வேட்டல், ஈதலென்னும் பொதுத்தொழிலினும், படைக்கலம் பயிறல், பல்லுயிரோம்பல், பகைத்திறத்தெறுதலென்னுஞ் சிறப்புத்தொழிலினும் வழுவாது நிற்றல். "மாண்ட—வறநெறி முதற்றே யரசின் கொற்றம்"* என்பதனான் இவ்வறம் பொருட்குக் காரணமாதலறிக. அல்லவை = கொலை, களவு முதலாயின. குற்றமாய மானத்தினீக்குதற்கு, 'மறனிழுக்கா மானம்' என்றார்; அஃதாவது "வீறின்மையின் விலக்காமென மதவேழமு மெறியா—னேறாண்டவர் மேலாயினும் பிறர்மிச்சிலெனீறெறியான்—மாறன்மையின் மறம்வாடுமென் றிளையாரையு

* புறநானூறு, 55.



மெறியா—னூறன்மையின் முதியாரையு மெறியானவி ழுழவன்."* எனவும், "அழியுநர் புறக்கொடை யயில்வே லோச்சான்" எனவுஞ் சொல்லப்

படுவது. அரசு=அரசனது தன்மை; அஃது உபசாரவழக்கால் அவன்றன் மேனின்றது. (௪

விளக்கம்:—அரசனென்று சொல்லப்படுவான் அரசனுக்குச் சொல்லியுள்ள தருமத்திற் சிறிதும் வழுவாது நடப்பவனுகி, தருமத்துக்கு மாறுகிய விஷயங்கள் தன்னாட்டில் நடக்கவொட்டாமல் தடுத்து, இவ்விதம் செய்வதால் தன்னுடைய வீரத்தன்மையில் சிறிதும் குறையாத பெருமையுடையவனாக இருத்தல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசனுக்குக் கூறிய தருமமானது ஓதல், வேட்டல், ஈதல் என்று சொல்லப்படுகின்ற படித்தல், வேள்விசெய்தல், கொடுத்தல் என்னும் பொதுத் தொழிலினும், ஆயுதப்பயிற்சி செய்தல், பல உயிர்களைக் காப்பாற்றுதல், பகைவர்களை வெல்லுதல் என்று கூறப்படுகின்ற சிறப்புத் தொழிலினும் ஆகிய இரண்டு தொழில்களிலேயும் தவறுது நின்று அரசு செய்வதாகும். இவ்விதம் செய்வதால் பொருட்குக் காரணமாகும் என்பதைப் புறநானூறு கூறுவதாகக் கூறும்,

"ஓங்குமலைப் பெருவிற்பாம்பு ஞாண்கொளீஇ
யொருகணைகொண்டு மூவெயிலுடற்றிப்
பெருவிறலமரர்க்கு வென்றிதந்த
கறைமிடற் றண்ணல் காமர் சென்னிப்
பிறைநுதல்விளங்கு மொருகண்போல
வேந்துமேம்பட்ட பூந்தார் மாற
கடுஞ்சினத்த கொல்களிறுங்
கதழ்பரிய கலிமாவு
நெடுங்கொடிய நிமிர்தேரு
நெஞ்சுடையபுகன் மறவருமென
நான்குடன் மாண்டதாயினுமாண்ட
வறநெறிமுதற்றே யரசின் கொற்றம்
அதனால், நமரெனக் கோல்கோடாது
பிறரெனக் குணங் கொல்லாது
ஞாயிற்றன்ன வெந்திறலாண்மையுங்

* சீவகசிந்தாமணி, மண்மகளிலம்பகம், 169.

திங்களன்ன தண்பெருஞ் சாயலும்
வானத்தன்ன வண்மையு மூன்று
முடையையாகி யில்லோர் கையற
நீ, நீடுவாழிய நெடுந்தகை தாழ் நீர்
வெண்டலைப் புணரி யலைக்குஞ் செந்தி
னெடுவேணிலைஇய காமர் வியன்றுறைக்
கடுவளி தொகுப்ப வீண்டிய
வடுவாழெக்கர் மணலினும் பலவே."

என்றதனாலும் அறிதல்கூடும். தருமத்துக்கு மாறாகிய பாவம் என்பது கொலை களவு முதலாயின என்றும், அவை நிகழ்தல் கூடாவென்பதும் பெற்றாம். மானத்திற் சிறிதும் குறைவு படாது அரசினை இயற்றவேண்டுமென்பதைப் பரிமேலழகர் எடுத்துக் காட்டிய சீவகசிந்தாமணி மண்மகளிலம்பகம் 159-வது செய்யுளே விளக்கும். ஆதலால், அரசனொருவன் அறத்தைச் செய்து மறத்தைக்கடிந்து மானமுடையவனாய் இருத்தல்வேண்டு மென்பது பெற்றாமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் அறத்தைச் செய்வதாலேயே பொருள் அரசனுக்குக் குவியும் போலும்! வேறு செயல்கள் வேண்டாபோலும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

385. இயற்றலு மீட்டலுங் காத்தலுங் காத்த
வகுத்தலும் வல்ல தரசு.

(பரி.) இ-ள். இயற்றலும் = தனக்குப் பொருள்கள் வரும் வழிகளை மேன்மேலுண்டாக்கலும்—ஈட்டலும் = அங்ஙனம் வந்தவற்றை ஒருவழித் தொகுத்தலும்—காத்தலும் = தொகுத்தவற்றைப் பிறர்கொள்ளாமற் காத்தலும்—காத்த வகுத்தலும் = காத்தவற்றை அறம்பொருளின்பங்களின் பொருட்டு விடுத்தலும்—வல்லது அரசு = வல்லவனே அரசன். எ-று.

ஈட்டல், காத்தல், வகுத்தலென்றவற்றிற்கேற்ப இயற்றலென்பதற்குச் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. பொருள்களாவன:—மணி, பொன், நெல் முதலாயின. அவை வரும் வழிகளாவன:—பகைவரை யழித்தலும், இறைகோடலும், தன்னாடு தலையளித்தலும்* முதலாயின. பிறரென்றது

* தலையளித்தல் = இனிமையோடு காத்தல்.

பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வார் முதலாயினார். கடவுளர், அந்தணர், வறியோரென்றிவர்க்கும் புகழ்க்குங்கொடுத்தலை அறப்பொருட்டாகவும், யானை, குதிரை, படை, நாடு, அரணென்றிவற்றிற்கும் பகையொடு கூடலிற் பிரிக்கப்படுவார்க்குந் தன்னிற் பிரிதலிற் கூட்டப்படுவார்க்கும் கொடுத்தலைப்பொருட் பொருட்டாகவும், மண்டபம், வாவி, செய்குன்று,* இளமரக்கா † முதலிய செய்தற்கும் ஐம்புலன்களா னுகர்வன வற்றிற்கும் கொடுத்தலை இன்பப்பொருட்டாகவும் கொள்க. இயற்றன் முதலிய நான்கு மற்செய்தல் அரிதாகலின், 'வல்லது' என்றார். இவை நான்குபாட்டானும் மாட்சியே கூறப்பட்டது. (௫)

விளக்கம்:— அரசனானவன் தனக்குப் பொருள்கள் வருகின்ற வழிகளை மேலும் மேலும் உண்டாக்குதலும், அவ்விதம் உண்டாக்குவதால் வந்தபொருள்களை ஒருவழிச் சேர்த்து வைத்தலும், சேர்த்த பொருள்களைப் பிறர் அபகரித்துச் செல்லாமல் காத்தலும், காத்தனவாகிய பொருள்களை அறம், பொருள், இன்பங்களாகிய மூன்றின் பொருட்டும் செலவழித்தலும் ஆகிய இவ்வித தகுதிகளைச் செய்ய வல்லவனாய் இருத்தல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மணி, பொன், நெல் ஆகிய இன்றியமையாப் பொருள்கள் மூன்றும் பொருள்கள் என்பதும, அவ்வித பொருள்கள் வருவதற்குத் தன்மீது பகைவர் வாராவண்ணம் அவர்களை யழித்து அவரிடத்துக் கப்பம் வாங்குவதாலும் தன் நாட்டினைக் கிருபையோடு காத்தலாலும் ஆகும். அதுவன்றியும், வந்த பொருளைக் காத்தலாவது பகைவர், கள்வர், சுற்றத்தவர், ஏவலாளர் முதலாயினோர் அப்பொருளை அபகரியாது பார்த்துக் கொள்ளுதலேயாகும். அன்றியும், கடவுள் பூசை, அந்தணரை ஓம்புதல், வறியோர்க்குக் கொடுத்தல் என்கின்ற காரியங்களுக்குக் கொடுத்தல் அறத்தின் பொருட்டுச் செலவழித்தல் என்றும், நால்விதப் படைகளுக்கும், நாட்டிற்கும், காவல் செய்யும் அரணுக்கும், பகைவர்களோடு கூடுகின்றவர்களைப் பிரித்தற்கும், தன்னிடத்து நின்றும் பிரிகின்றவரைக்கூட்டுதற்கும் செலவழிக்கும் பொருள்கள் பொருட் பொருட்டென்றும், மண்டபங்கள், குளங்கள், மகிழ்வடைவதற்

* செய்குன்று = செய்யப்பட்ட குன்று

† இளமரக்கா = இளமையான மரங்களையுடைய சோலை.

## இறைமாட்சி

காகச் செய்யும் செய்குன்று என்னும் சிறுமலைகள், கந்தவனங்கள் ஆகிய இவைகளுக்கும், மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்புலன்களுக்கும் ஆக இன்பம் அளிப்பதற்குக் கொடுப்பனவும் ஆகிய இவைகளில் செலவழிப்பன இன்பப்பொருட்டென்றும் கண்டோம். இவற்றைத் தவறாமல் செய்பவனே அரசர்களுள் அரசனாவானாதலால், அவ்வித அரசனை வல்லவனென்றும் கூறினர். அது கேட்ட மாணாக்கர், "இவ்வித பெருந்தகுதி யுடையவனாகிய அரசன் தனது குடிகளிடத்து எவ்விதம் நடந்துகொள்ளுதல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்

386. காட்சிக் கெளியன் கடுஞ்சொல்ல னல்லனேல்
மீக்கூறு மன்ன னிலம்.

(பரி.) இ-ள். காட்சிக்கு எளியன் முறைவேண்டினார்க்குங் குறைவேண்டினார்க்குங் காண்டற்கெளியனாய்,—கடுஞ்சொல்லன் அல்லனேல் = யாவர்மாட்டுங் கடுஞ்சொல்லனல்லனுமாயின்,—மன்னன் நிலம் மீக்கூறும் = அம்மன்னனது நிலத்தை எல்லா நிலங்களினும் உயர்த்துக்கூறும் உலகம். எ-று.

முறைவேண்டினார் = வலியரான் மெலிவெய்தினோர். குறைவேண்டினார் = வறுமை யுற்றிரந்தார். காண்டற்கெளிமையாவது:- பேரத்தாணிக்கண் * அத்தனைச் சான்றோருள்ளிட்டாரோடு செவ்வியுடையனா யிருத்தல். கடுஞ்சொல் = கேள்வியினும் வினையினுங் கடியவாய சொல். நிலத்தை மீக்கூறு மெனவே, மன்னனை மீக்கூறுதல் சொல்லவேண்டாவாயிற்று. மீக்கூறுதல் = இவன் காக்கின்ற நாடு பசி, பிணி, பகை முதலிய வின்றி யாவர்க்கும் பேரின்பந்தருதலிற் றேவருலகினும் நன்றென்றல். உலகமென்னு மெழுவாய் வருவிக்கப்பட்டது. (௬)

விளக்கம் :—அரசன் தருமன், பலமுடையவர்கள் எளியோரைத் துன்புறுத்தியகாலத்து, நீதியாகிய முறையினைச் செலுத்துவதற்கும், தரித்திரராயினோர் தரித்திரத்தால் வருந்தி குறை

வேண்டி நின்றால் குறை தீர்ப்பதற்கும், அந்தணர் முதலிய தகுதியுடையவரோடு பெரிய சபாமண்டபத்தில் இருந்து யாருங்காணும்படி இருப்பதுடன் கடுஞ் சொல் சொல்லாது எவரிடத்தும் இனிய

* பேரத்தாணிக்கண் = பெரிய சபையின்கண்.

2



சொல்லியே கூறும் இயற்கையுடையவனுமாக இருப்பானாயின், அவனுடைய நாடானது தேவ உலகத்தினும் மேம்பட்ட உலகமாகவிருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மேற்கூறிய திருக்குறள்களில் கூறிய மாட்சிமையுடன் அரசன் யாரும் பார்க்கத்தகுந்த எளியனாகவும், இன்சொல் கூறும் இயற்கையுடையவனாகவும் இருந்து காக்கும் நாடானது பசியும், பிணியும், பகைவரும் இல்லாமல் எவர்க்கும் பேரின்பமே கொடுத்துக்கொண்டிருப்பதுடன் எல்லாப் போகங்களையும் கொண்டு உள்ள தேவருலகத்திலும் மிகச் சிறந்ததாக இருக்கும் என்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித தகுதியுடைய அரசனொருவனுக்கு உலகம் எவ்வித கட்டுப்பட்டிருக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

387. இன்சொலா லீத்தளிக்க வல்லாற்குத் தன்சொலாற்
றான்கண் டனைத்திவ் வுலகு.

(பரி.) இ-ள். இன்சொலால் ஈத்து அளிக்க வல்லார்க்கு = இனியசொல்லுடனே ஈதலைச்செய்து அளிக்கவல்ல அரசனுக்கு—இவ்வுலகு தன்சொலால் தான் கண்டனைத்து = இவ்வுலகம் தன்புகழோடு மேவித் தான் கருதிய அளவிற்றாம். எ-று.

இன்சொல் = கேள்வியினும் விளைவினும் இனியவாய சொல். ஈதல் = வேண்டுவோர்க்கு வேண்டுவன கொடுத்தல். அளித்தல் = தன்பரிவாரத்தாலும் பகைவராலும் நலிவுபடாமற் காத்தல். இவை அரியவாகலின் 'வல்லார்க்கு' என்றும், அவன் மண்முழுதும் ஆளுமாகலின் 'இவ்வுலகு' என்றும் கூறினார். கருதியவளவிற்றாதல் = கருதிய பொருளெல்லாம் தருதல். (எ)

விளக்கம்:—இனிய சொற்களைத் தன் குடிகளிடத்தே கூறி

அவர் வறுமை படையாவண்ணம் ஈகையும் செய்து அக்குடிகளைக் காப்பாற்றவல்ல அரசனொருவனுக்குத் தான் அடையவேண்டிய புகழெல்லாம் வந்து சேர்வதுடன் அவன் எவ்விதம் எண்ணுகின்றானோ அவ்விதமே உலகம் அவன் கீழ்ப்பட்டு நடக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அரசனொருவன் இன்சொல்லும் ஈதலும் உடையவனாயிருப்பதுடன் அவனைத் பரிவாரங்களாலும் பகைவர்களாலும் குடிகள் துன்பப்படாமல் காத்தல் அருமையினும்



அருமையென்றும், அவ்வித அரிய காரியத்தைச் செய்யும் அரசனொருவன் இறவாப்புகழோடு இருப்பதுடன் அரசர்க்கரசனும் இவ்வுலகம் முழுவதையும் ஆளுவானென்றும் அறிகிறோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்வித தகுதியுடையானாகிய அரசனொருவனை அவன் கீழ்ப்பட்ட குடிகளாகிய மக்கள் எவ்விதம் கருதுவர்? மகனொருவனாகவே கருதுவரோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

388. முறைசெய்து காப்பாற்று மன்னவன் மக்கட்
கிறையென்று வைக்கப் படும்.

(பரி.) இ-ள். முறைசெய்து காப்பாற்று மன்னவன் = தான் முறை செய்து பிறர் நலியாமற் காத்தலையுஞ் செய்யுமரசன், — மக்கட்கு இறை என்று வைக்கப்படும் = பிறப்பான் மகனேயாயினும், செயலான் மக்கட்குக் கடவுளென்று வேறு வைக்கப்படும். எ-று.

முறை = அறநூலும் நீதிநூலுஞ் சொல்லும் நெறி. பிறசென்றது மேற் சொல்லியவாறு. வேறுவைத்தல் = மக்களிற்பிரித்து உயர்த்துவைத்தல். (அ)

விளக்கம்:—அறமும் நீதியுமாகிய இரண்டு நூல்கள் சொல்லும் வழியே நின்று முறையாகக் குடிகள் வருந்தாவண்ணம் காப்பாற்றுகின்ற அரசனொருவன் பிறப்பினால் மக்களுள் ஒருவனாக இருந்தும் இவனது மேலாகிய தகுதியால் குடிகள் இவனைத் தெய்வமாக எண்ணித் தெய்வத்தினிடத்தே நடந்துகொள்வது போல் நடந்துகொள்வார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. நடுவும் நன்றியுமாகிய நீதியும் அறத்தையும்செய்து குடி

ளைக் காக்கின்ற அரசன் மக்களால் தெய்வமாக எண்ணப்படுகின் றான். இது கருதியே நீதிநெறி விளக்கத்திலும்,

“ குலமகட்குத் தெய்வம் கொழுநனே மன்ற
புதல்வர்க்குத் தந்தையுந் தாயும்—அறவோர்க்கடிகளே
தெய்வ மனைவோர்க்குந் தெய்வம்
இலைமுகப் பைம்பூண் இறை ”

என்று கூறியுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், “இவ்விதப் பெரியதோர் அறிவினையுடைய அரசனொருவன் அமைச்சர் முதலி



யோர் கூறும் நற்குணச் செய்கைகளையும் ஏற்றுக்கொள்ளுதல் வேண்டுமோ? அன்றி, அவன் இச்சையின் வண்ணம் நடத்தல் வேண்டுமோ?” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

389. செவிகைப்பச் சொற்பொறுக்கும் பண்புடை வேந்
கவிகைக்கீழ்த் தங்கு முலகு. [தன்

(பரி.) இ-ள். சொல் செவி கைப்பப் பொறுக்கும் பண்பு உடை வேந்தன் = இடிக்குந் தகைமையினுடைய சொற்களைத் தன்செவி பொறாதாகவும் விளைவுநோக்கிப் பொறுக்கும் பண்புடைய அரசனது—கவிகைக்கீழ்த் தங்கும் உலகு = குடை நிழற்கண்ணே தங்கும் உலகம். எ-று.

‘செவிகைப்ப’ வென்றதற் கேற்ப ‘இடிக்குந் தகையார்’ என்பது வருவிக்கப்பட்டது. காவின்புலத்தைச் செவிமேலேற்றிக் ‘கைப்ப’ என்றார். பண்புடைமை = விசேடவுணர்வினுடைமை. அறநிலைபிறழாமையின், மண்முழுதுந் தானேயாளுமென்பதாம். (க)

விளக்கம்:—அமைச்சர் முதலிய பெரியோர் தன் செவிப் புலம் பொறுக்கக்கூடாத அளவாக இடித்து இடித்துப் புத்தி சொல்லுமிடத்து, அச்சொற்கள் தன்னுடைய மேலாகிய தகுதியி னால் செவியினிடத்தே பொறுக்கக் கூடாதனவாக இருக்கினும், அச்சொற்களின் பயனாகிய விளைவினை நோக்கித் தன்னுடைய மே

லாகிய தகுதியொன்றினையே எண்ணாது கேட்டுக்கொள்ளுகின்ற அரசன் ஒருவனது சந்திரவட்டக் குடையின் கீழ் உலகத்து உயிர்க ளெல்லாம் தங்குமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அறம் நீதி முதலியவற்றில் சிறிதும் தவறாது நடப்பவனாகிய அரச னாயினும், தன் மேம்பட்ட அமைச்சர் முதலிய அறிவுடையோர் கூறும் சொற்களையே ஏற்று அவர்வழி நடப்பானாயின், அவ்வித அரசன் பூவுலக முழுவதையும் ஆளுவான் என்பது போந்த பொரு ளாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித வேந்த னொருவன் எல்லா அரசர்களினும் மேம்பட்டு இருத்தல் கூடு மென்று அறிந்தோம். இவ்வித தகுதியுடைய அரசனுக்கு இருக்க வேண்டிய முக்கியமாகிய செயல்கள் இவை என்று முடிவாக விளக் கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

## இறைமாட்சி 18

390. கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு
முடையானாம் வேந்தர்க் கொளி.

(பரி.) இ-ள். கொடை=வேண்டுவார்க்கு வேண்டுவன கொடுத்த லும்—அளி=யாவர்க்குந் தலையளி செய்தலும்—செங்கோல்=முறைசெய் தலும்—குடி ஓம்பல்=தளர்ந்த குடிகளைப் பேணலுமாகிய—நான்கும் உடையான்=இந்நான்கு செயலையுமுடையவன்—வேந்தர்க்கு ஒளியாம்= வேந்தர்க்கெல்லாம் விளக்காம். எ-று.

தலையளி=முகமலர்ந்தினிய கூறல். செவ்வியகோல்போறலின், 'செங் கோல்' எனப்பட்டது. குடியோம்பலை வேறெடுத்துக் கூறினமையால், தளர்ச்சி பெற்றும்; அஃதாவது ஆறிலொன்றாய பொருடன்னையும் வறுமை நீங்கியவழிக் கொள்ளல்வேண்டின் அவ்வாறு கோடலும், இழத்தல் வேண் டின் இழத்தலுமாம். சாதிமுழுதும் விளக்கலின், 'விளக்கு' என்றார். ஒளி—ஆகுபெயர். இறைமையைத் தபாட்டானும் மாட்சியும் பயனும் உடன் கூறப்பட்டன. (ல)

விளக்கம்:—அரசனொருவன் தன்னையடைந்து யாதவர்கள் எவராயினும் அவர்கள் வேண்டுவதை யெல்லாம் வேண்டியபடி கொடுத்தலும், எவரிடத்தும் அன்பின்மிகுதியாகிய அருள்கொண்டு நிற்றலும், முறை செய்யுங் காலத்துச் செங்கோலன் என்னும்படி

செம்மையுடையவனும் இருத்தலும், தன் கீழ்ப்பட்ட குடிகள் ஊழ்
வலியால் தளர்ச்சி யடைவார்களாயின் அக்குடிகளைக் காப்பாற்று
தலும் ஆகிய இவ்வித நான்கு செயல்களையும் உடையவனுமிருப்பா
னாயின், வேந்தர்களுக்கெல்லாம் ஒளிபோன்று வேந்தர் வேந்தனும்
இருப்பானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஈகை
யும், முகமலர்தலும், செங்கோல் செலுத்துதலும், தனக்குக் கூறிய
ஆறிலொருகடமைவாங்க வேண்டும் காலத்துத் தன் குடிகள் வறு
மைப்பட்டவர்களாக இருக்கக் காணுவானாயின் வறுமை நீங்கு
கின்ற வரையில் அப்பொருளை வாங்காதிருந்து வறுமை நீங்கிய
காலத்து வாங்குவதும், அன்றி அவர்களது வறுமைநோக்கி வேண்
டாமென்று விட்டுவிடுவதும் ஆகிய குடிகளைப் பாதுகாத்தலும்
என்று வகுக்கப்படும் செயல்கள் நான்கும் அரசனுக்கு இன்றி
யமையாதன என்றும், அவனையே அரசர்க்கரசனாகிய சக்கரவர்த்தி
என்று உலகோர் கூறுவர் என்றும் அறிந்தோம் என்றனர். அதை



கேட்ட மாணாக்கர், "இவ்வதிகாரத்தால் அரசனது மாட்சியெல்
லாம் நன்கு அறிந்தோம். இனி, இவ்வரசர்க்குக் கூறிய செயற்
கையறிவாகிய குணங்களுள் கல்வி என்பது ஒன்றென்றும், அதனை
முன்னர்க் கூறப்படும் என்றும், இவ்வதிகாரம் மூன்றாவது திருக்
குறளில் கூறியுள்ளீர்களாதலால், அவ்வித கல்வி என்னும் கூறு
பாட்டினை அறிய விருப்பமும் ஆசைப்படுகின்றோம்" என்னலும்,
ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 40 அதிகாரம்.
## க ல் வி.

---

(பரி.) அஃதாவது அவ்வரசன் தான் கற்றற்குரிய நூல்களைக் கற்றல்.
அவையாவன அறநூலும், நீதிநூலும், யானை குதிரை தேர் படைக்கல
மென்றிவற்றினூல்களும் முதலாயின. அரசன் அறிவுடையனாயக்கால் தன்
னுயிர்க்கேயன்றி மன்னுயிர்க்கும் பயன்படுதலோக்கி, இஃதரசியலுள்

வைக்கப்பட்டதாயினும், யாவர்க்கும் உறுதிபயத்தற் சிறப்புடைமையிற் பொதுப்படக் கூறுகின்றார். மேல் 'தூங்காமை கல்வி' எனத் தோற்றுவாய் செய்த மாட்சியை விரித்துக் கூறுகின்றமையின், இஃதிறைமாட்சியின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, மேற்கூறிய மாட்சிமை எல்லாம் உடைய அரசன் கல்வியுடையவனும் இருத்தல் வேண்டுமாதலால் அவன் தான் கற்றற்குவேண்டிய நூல்களை எல்லாம் கற்றல் என்பதாம். அவ்விதம் கற்கவேண்டிய நூல்களாவன அறத்தையும் நீதியையும் போதிக்கின்ற நூல்களும், யானையேற்றம், குதிரையேற்றம், தேர்கடாவுதல், படைக்கலம் பயிறல் என்று கூறப்படும். ஏனெனில்? அரசன் அறிவுடையவனாக இருப்பானாயின் அவனுயிர்க்கேயல்லாது அவன் கீழ்ப்பட்ட ஏனைய உயிர்களுக்கும் அவன் பயன்படுவானாதலால், அரசனுக்குக் கல்வியுடைமை மிகமுக்கியம் என்று அறிந்தோம். ஆயினும், குடிகளுக்குத் தெய்வமாகும் அரசனுக்கு இக்கல்வியைச் சிறப்புடைமையாகக் கூறினாராயினும், உலகத்துள்ள உயிர்களெல்லாம் இக்கல்வி என்னும் ஒன்றினாலேயே அடையவேண்



டிய உறுதிப் பயனை அடைய இருக்கின்றன ஆதலால், உலகத்திலுள்ள உயிர்கள் எவற்றிற்கும் இக்கல்வி என்னும் அதிகாரம் பொதுப்படக் கூறப்பட்டதாகும். அன்றியும், இவ்வதிகாரம் இறைமாட்சி என்பதன் பின் வைக்கப்பட்டதற்குக் காரணமும் இதுவேயாகும் என்று கூறினர். அதுகேட்ட மாணாக்கர், "தாங்கள் கல்வி என்பதற்குக் கற்கவேண்டிய நூல்கள் என்று விளக்கினீர்கள். அவை எவை? ஏன் கற்கவேண்டிய நூல்களையே கற்கவேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

391. கற்க கசடறக் கற்பவை கற்றபி
னிற்க வதற்குத் தக.

(பரி.) இ-ள். கற்பவை கசடு அறக் கற்க=ஒருவன் கற்கப்படுநூல்

களைப் பழுதறக் கற்க;—கற்றபின் அதற்குத் தக நிற்க = அங்ஙனங்கற்றால் அக்கல்விக்குத் தக அவை சொல்லுகின்ற நெறிக்கண்ணே நிற்க. எ-று.

கற்பவையென்றதனான், அறம் பொருள் இன்பம் வீடென்னும் உறுதிப் பொருளுணர்த்துவனவன்றிப் பிறபொருளுணர்த்துவன சென்றாட் பல பிணிச் சிற்றறிவினர்க்கு ஆகாவென்பது பெற்றாம். கசடறக் கற்றலாவது விபரீதவையங்களை நீக்கி மெய்ப்பொருளை நல்லோர் பலருடனும் பல காலும் பயிறல். நிற்றலாவது இல்வாழ்வழிக் "கருமமு முன்படாப் போகமுந் துவ்வாத்—தருமமுந் தக்கார்க்கே செய்"* தலினும், துறந்தவழித் தவத்தான் மெய்யுணர்ந்து அவாவறுத்தலினும், வழுவாமை. சிறப்புடை மக்களாயிற் கற்றல் வேண்டுமென்பதூஉம், அவனாற் கற்கப்படு நூல்களும், அவற்றைக் கற்குமாறும், கற்றதனாற் பயனும் இதனாற் கூறப்பட்டன. (௧)

விளக்கம்:—ஒருவன் கற்கவேண்டிய நூல்களைக் குற்றமில்லாமல் கற்கவேண்டும் என்றும், அவ்விதம் குற்றமில்லாது நூல்களைக் கற்றபின் அந்நூல்களில் சொல்லுகின்ற நல்வழியிலேயே நிற்றல் வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அறம், பொருள், இன்பம், வீடு என்னும் உறுதிப் பொருள்களையுணர்த்தும் நூல்களல்லாமல் பிற சிற்றின்பம் பயக்கும் நூல்களில் செல்லுதலாகாதென்றும், அவ்விதம் சென்றால் உயிர்களோ சில நாள் பிழைத்திருப்பனவாயும் அச்சில நாளகளுள்ளும் பலநோய்களை

* நாலடியார்—அறிவுடைமை.



யுடையனவாயும் அன்றியும் சிற்றறிவினையுடையனவாயும் இருப்பனவாதலால், சிறு நூல்களில் செல்லுமாயின் நிற்பொழுதை அவற்றின் பொருட்டுத் தொலைத்து நிலையுடைய பொருளைப் பயப்பிக்கும் அறநூல் முதலாகிய நூல்களைப்போதற்கு இல்லாமற் போம் என்றும் அறிந்தோம். அவ்விதம் கற்கவேண்டிய நூல்களை ஒருவன் குற்றமில்லாது கற்கவேண்டும் என்பது ஆசிரியனிடத்து நூல்களைக் கேட்குங்காலத்து ஒன்றை மொன்றாக எண்ணிக் கொள்ளும் வேறுபாடாகிய விபரீதமும், இதுவோ அதுவோ என்று மயங்குகின்ற சந்தேகமும் நீக்கி உண்மைப் பொருளை ஆசிரியனிடத்துக் கேட்டவண்ணமே நன்னெறியில் நிற்கின்ற பலரோடும் பலகாலும் பழகிவருவதே ஆகும். பிறகு, கற்ற வழி நிற்றல் என்று கூறியது

இல்வாழ்வானொருவன், இல்வாழ்வானுக்குச் சொல்லியுள்ள வழியில் நின்று மனைவியோடு போகம் புசித்துக் கெடாத தருமங்களைத் துறந்தவர்களுக்குச் செய்வது ஆகும் என்றும், இல்வாழ்க்கையை வெறுத்துத் துறவினையடைந்தவராயின் தாம் நிலையாமையையுணர்ந்து துறந்தவராதலால், தவத்தினால் மெய்ம்மையுணர்ந்து அவா அறுத்துச் சிறிதும் குற்றப்படாது வாழ்தல் வேண்டுமென்பதும் ஆகும். ஆதலால், இத்திருக்குறளால் மாட்சிமைப்பட்ட அரசனொருவனும், அவன் கீழ்ப்பட்ட குடிகளும் கற்கவேண்டிய நூல்கள் இவை என்றும், அவ்விதம் கற்கவேண்டிய காலத்துக் கற்கவேண்டும் முறை இதுவென்றும், முறைப்படி கற்ற பிறகு அந்நூல்களால் சொல்லிய வழியே நிற்கவேண்டிய நிலை இதுவென்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கற்கவேண்டிய நூல்கள் என்றமையால் பொதுப்பட முதலில் நூல்கள் இவை என உணர்த்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

392. எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்
கண்ணென்ப வாழு முயிர்க்கு. [டுஉ

(பரி.) இ-ள். எண் என்ப ஏனை எழுத்து என்ப இவ்விரண்டும் = அறியாதார் எண்ணென்று சொல்லுவனவும் மற்றை யெழுத்தென்று சொல்லுவனவுமாகிய கலைகளிரண்டினையும்—வாழும் உயிர்க்குக் கண் என்ப = அறிந்தார் சிறப்புடையுயிர்கட்குக் கண்ணென்று சொல்லுவர். எ-று.



எண்ணென்பது கணிதம்; அது கருவியுஞ் செய்கையுமென இருவகைப்படும்; அவை ஏரம்பமுதலிய நூல்களுட் காண்க. எழுத்தெனவே, அதனோடொற்றுமையுடைய சொல்லுமடங்கிற்று. இவ்விருதிறமும், அறமுதற் பொருள்களைக் காண்டற்குக் கருவியாகலின், 'கண்' எனப்பட்டன. அவை கருவியாதல் "ஆதிமுதலொழிய வல்லாதனவெண்ணி, வீதி வழுவா நிலைமையவான்—மாதே, பதமாச் பொருளின்பம் வீடென் றிவற்றின், திறமாமோ வெண்ணறாதாற் செப்பு." "எழுத்தறியத் தீருமிழிதகைமை தீர்ந்தான், மொழித்திறத்தின் முட்டறுப்பா னாகு—மொழித்திறத்தின், முட்டறுத்த நல்லோன் முதனூற் பொருளுணர்ந்து, கட்டறுத்து வீடு பெறும்." இவற்றானறிக. என்பவென்பவற்றுள், முன்னையவிரண்டும் அஃறிணைப் பன்மைப்பெயர்: பின்னது உயர்திணைப்பன்மை வினை. அறி

யாதனர் அறிந்தாரென்பன வருவிக்கப்பட்டன. சிறப்புடையுயிரென்றது மக்களுயிருள்ளும் உணர்வுமிகுதியுடையவரை. இதனாற் கற்கப்படுதல் கட்குக் கருவியாவனவும் அவற்றறின்றியமையாமையும் கூறப்பட்டன. (உ)

விளக்கம்:—உலகத்து அறிவிலாதாரெல்லாம எண்ணென்று சொல்லுவனவும், எழுத்தென்று சொல்லுவனவுமாகிய நூல்களிரண்டினையும் அறிவுடையோர் உலகத்து வாழும் சிறப்புடைய உயிர்களுக்குக் கண்ணென்று சொல்லுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆகலால், மக்கள் உயிருள்ளும் சிறப்புடைய உயிர்களாய் எண்ணப்படுகின்றவர்கள் கல்வியைக் கற்கும் கருவியுடையோர் என்றும், அவர் எழுத்து சொல் முதலானவைகளாகிய உலகத்து மக்கட்குக் கண்களென்று எண்ணுகின்றனர் என்றும், கற்கவேண்டிய நூல்களையே கற்பவர்களுக்கு எண்ணும் எழுத்தும் ஒரு மனிதன் உறுப்புகளில் சிறந்தனவாகிய கண்கள்போல் கருவியாகவுள்ளன என்றும் அறிவின்றோம என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் கற்றவரையே கண்ணுடையர் என்று கூறுவதால் ஏனையோரை என்னென்று கூறுவது?" என்று கேட்டதும், ஆசிரியர் கூறலாயினர்.

393. கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லா தவர்.

(பரி.) இ-ள். கண் உடையர் என்பவர் கற்றோர் = கண்ணுடைய ரென்று உயர்த்துச் சொல்லப்படுவோர் கற்றவரே:—கல்லாதவர் முகத்து





இரண்டு புண் உடையர் = மற்றைக் கல்லாதவர் முகத்தின்கண் இரண்டு புண்ணுடையர்: கண்ணிலர். எ-று.

தேயமிடையிட்டவற்றையும் காலமிடையிட்டவற்றையும் காணும் ஞானக்கண்ணுடைமையிற் கற்றாரைக் 'கண்ணுடையர்' என்றும், அஃதின்றி சோப் முதலியவற்றாற் றுன்பஞ்செய்யும் ஊனக்கண்ணேயுடைமையிற் கல்லாதவரைப் 'புண்ணுடையர்' என்றுங் கூறினார். மேற்கண்ணென்னவுணர்நின்ற ஞானக் கண்ணின் மெய்ம்மை கூறியவாற்றான், பொருணூல்களையும் கருவிநூல்களையும் கற்றாருயர்வும் கல்லாதாரிழிவும் இதனாற்பெருகக் கூறப்பட்டன. (ங)

விளக்கம் :—கற்றவர்களே கண்ணுடையவர்களென்று உயர்த்திச் சொல்லக்கூடியவர்கள் என்றும், கல்லாதவர்கள் முகத்தினிடத்தே இரண்டு புண்ணுடையரே யன்றிக் கண்ணுடையராகார் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், கற்றவர்க்கு உள்ள கண்கள் ஞானக் கண்களென்றும், அக்கண்கள் எக்காலத்தும் நோய் கொள்ளாவென்றும், ஏனையோர் கண்கள் அழகினைச் செய்வனவாயினும் உறுதி தரும் பொருள்களை யுணரவல்லாதனவாய் நோய் முதலியன கொண்டு துன்பமடைவதனால் ஊனக் கண்களேயாகின்றனவென்றும் அறிகின்றோம். அன்றியும், கல்லாதாரது இழிவும், கற்றாருடைய உயர்வும் இத்திருக்குறள் தொகுத்துக் கூறுகின்றது என்றும் அறிக்கோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் ஊனக்கண் பெறாத ஞானக் கண்ணினைப் பெற்ற கற்றவர்கள் மாட்டு உலகம் எவ்விதம் நடந்துகொள்ளும் ?" என்று கேட்டதும், ஆசிரியர் கூறுவாராயினர்.

394. உவப்பத் தலைக்கூடி யுள்ளப் பிரித
லனைத்தே புலவர் தொழில்.

(பரி) இ-ள். உவப்பத் தலைக்கூடி உள்ளப் பிரிதல் அனைத்தே= யாவரையும் அவருவக்குமாறு தலைப்பெய்து இனி இவரை யாமெங்ஙனங் கூடுதுமென நினையுமாறு நீங்குதலாகிய அத்தன்மைத்து—புலவர் தொழில் =கற்றறிந்தாரது தொழில். எ-று.

தாம் கல்வழியொழுகல் பிறர்க்குறுதிகூறலென்பன இரண்டுந் தொழிலென ஒன்றாயடங்குதலின், 'அத்தன்மைத்து' என்றார். அத்தன்மை=அப்



பயனைத்தருந்தன்மை. நல்லொழுக்கங் காண்டலானும், தமக்கு மதுரமுமுறுதியுமாய கூற்றுக்கள் கேட்டுவெதிர்வுகளின் இன்பம் பயத்தலானும், கற்றார்மாட்டு எல்லாருமன்புடையராவரென்பதாம். இதனாற் கற்றாரது உயர்வு வகுத்துக் கூறப்பட்டது. (௪)

விளக்கம் :—கற்றறிந்த அறிவுடையோரது தொழிலாவது எவரிடத்தும் நட்புச்செய்து நட்பைக்கொண்ட அவர்கள் தம்மை

விரும்பும்படி அவர்களோடு இருந்து பின்னர் அவரை விட்டுப் பிரியுங்காலத்து 'இனி இவ்வித பெரிய தகுதியுடையாரை நாம் எக்காலத்துக் கூடுதல் கேரும்' என்று எண்ணும்படி நடந்துகொள்வதேயாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், கல்வியுடைய அறிஞன் ஒருவன் தான் உலகத்துப் பயிலுங் காலத்து முதலில் தான் நல்வழியில் நடப்பதும், தன்னை படித்தவர்களுக்கு உறுதி மொழிகளைக் கூறுவதும் ஆகிய தொழில்களைப் பெற்றிருத்தல் வேண்டுமென்பது. அத்தன்மைகளைக் கண்டு பிறர் இவனது ஒழுக்கத்தினையும் இவன் கூறுவனவாகிய மதுரம் போன்றும் உயிருக்கு உறுதியாகிய இம்மை மறுமைப் பயன்களைத் தருவனவுமாகிய சொற்களைக் கேட்ட காலத்தும் அதற்கப்பாலும் இன்பம் பயக்கக்கூடியனவாய் அச்சொற்கள் இருக்குந் தகுதியைநோக்கி அவனை இன்னுயிர்போல் கருதி அவனிடத்தே பண்புசெய்து வாழ்வாரென்றும் அறிகிறோம். அன்றியும், கல்வியாகிய ஞானக்கண்ணைப் பெறுவதால், எல்லாராலும் விரும்பப்படுவதுடன் ஒளியோடு வாழ்வானென்றும் இத்திருக்குறள் வருத்துக் கூறியதாகும். இதனை நாலடியார், கல்வி என்னும் அதிகாரத்தில்,

" தவலருந் தொல்கேள்வித் தன்மை யுடையார்
இகலிலர் எஃகுடையார் தம்முட்—குழீஇ
நகலின் இனிதாயிற் காண்பாம் அகல்வானத்து
உம்பர் உறைவார் பதி"

என்று கூறியபடி, கற்றறிந்தவர்கள் பலர் கூடி வாழ்வதினும் அறக்க இன்பம் அத்துணைப் பெரிதன்று என்பதும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், " இவ்வித பெருஞ்சிறப்புடைய கல்வியை பெல்லோருங் கல்லாது விடுவதற்குக் காரணம் என்னை?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



895. உடையார்மு னில்லார்போ லேக்கற்றுங் கற்றார்
கடையரே கல்லா தவர்.

(பரி.) இ-ள். உடையார்முன் இல்லார்போல் ஏக்கற்றும் கற்றார்= "பிற்றை நிலைமுனியாது கற்றல் நன்று"* என்பதனால், செல்வர்முன் நல்கூர்ந்தார் நிற்குமாறுபோலத் தாமும் ஆசிரியர்முன் ஏக்கற்றுநின்றுங் கற்றார்

தலையாயினர்:--கல்லாதவர் கடையரே= அந்நிலைக்கு நாணிக் கல்லாதவரா என்றுமிழிந்தோரேயாவர். எ-று.

உடையார் இல்லாரென்பன உலகவழக்கு. ஏக்கறுதல் = ஆசையாற் றாழ்தல். கடையரென்றதனான் அதன் மறுதலைப்பெயர் வருவிக்கப்பட்டது. பொய்யாய மானம்நோக்கி மெய்யாய கல்வியிழந்தார் பின்னொருஞான்றும் அறிவுடையாராகாமையின், 'கடையரே' என்றார். இதனாற் கற்றாருயர்வும் கல்லாதாரதிழிவுங் கூறப்பட்டன. (௫)

விளக்கம்:--செல்வந்தன் ஒருவன் முன்பு வறிஞன் ஒருவன் எவ்வாறு கைகட்டி வாய் பொத்தி நின்று தான் எண்ணிச் சென்ற காரியத்தை முடித்துவருவானோ அதுபோல, மாணாக்கன் ஒருவன் தனக்கு வரும் துன்பம் நாணம் முதலியவைகளைக் கருதாமல் ஆசிரியர் முன்பு சென்று அவர் எப்படி யிருந்து கல்வியைக் கற்று வருவானாயின் தலைமைப்பட்ட குணமுடையவனாவானென்றும், அவ்விதம் அல்லாது தன் பெருமிதத்தால் கல்லாது வந்தவன் இழிந்தவனாவானென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நன்மாணாக்கர்கள் ஆசிரியனிடத்தே சென்றகாலத்துத் தாம் எத்துணை மன்னர் மன்னர் மகாராயினும் ஆசிரியனது கண் குறிப்பின்படி நடந்து 'கல்வியைக் கற்பது ஒன்றே இம்மை மறுமை வீடு என்னும் மூன்றும் பயக்கும் கருவியுடையது' என்று கற்று அறிவுடையாராவா ரென்றும், அவ்விதமல்லாதவர் அழிந்துபோகின்ற பொய்யாகிய மானம் ஒன்றையே பெரிதென்று கருதி உறுதிப் பொருளைத்தரும் உண்மையாகிய கல்வியைக் கல்லாது மக்கட் பிறப்பாலாகிய பயனையிழப்பாரென்றும் அறிகின்றோம். ஏனெனின்? நன்மாணாக்கர் ஆசிரியரிடத்துக் கல்வியைக் கற்கும் முறை,

* புறநானூறு—183.



" கோடல்மரபே கூறுங்காலைப்
பொழுதொடு சென்று வழிபடல் முனியான்
குணத்தொடு பழகி அவன் குறிப்பிற் சார்ந்து

இருவென இருந்து சொல்லெனச் சொல்லிப்
பருகுவ னன்ன ஆர்வத்த னாகிச்
சித்திரப் பாவையின் அத்தக அடங்கிச்
செவிவா யாக நெஞ்சுகள னாகக்
கேட்டவை கேட்டவை விடாது உளத்தமைத்துப்
போவெனப்போதல் என்மனார் புலவர்."*

என்று இருப்பதால், மாணாக்கன் ஒருவன் நல்லாசிரியனிடத்துப் பாடம் கேட்கவேண்டுமாயின், ஆசிரியன் குறித்த காலத்துச் செல்லுதல் வேண்டும்; சென்றவண்ணமே ஆசிரியனைக் கண்ட வுடன் அவனை வணங்கிக் கொள்ளலவேண்டும்; அவ்வாறு செய் கின்ற காலத்துத் 'தான் பெரிய தகுதியுடைய ஒருவனது மகனாக இருக்க உண்ணச் சோறும் உடுக்கத் துணியும் இல்லாத ஏழையுடைய னாய்க் கல்வியறிவு ஒன்றையேகொண்ட ஏழ் உடையனாகிய இவ் வற்றனுக்கோ நாம் வணங்குவது?' என்று மனத்தான் தருக்குத் தோன்றி, அதனால் முகம் சுருங்காது வணங்குதல் வேண்டும்; பிறகு ஆசிரியன் எவ்வித குணத்தில் உள்ளான் என்பதை யறிந்து அதற்கு ஏற்க நிற்றல்வேண்டும்; பின்னர், அவன் 'உட்கார்தல் வேண்டும்' என்று கூறிய பிறகே யிருத்தல் வேண்டும்; உட் கார்ந்த பிறகு 'பாடத்தைச்சொல்' என்று கட்டளையிட்ட பிறகு பாடத்தைப் படித்தல்வேண்டும்; அவ்விதம் படிக்குங்கால், ஆசிரியன் கூறுகின்ற பொருள்களைக் காணக்கிடையா அமுதத்தைக் கண்ட காலத்தே ஒருவன் உண்ணப் புகுவதற்கு ஆசைப்படுவதுபோல் ஆசையுடையவனாய்ச் சித்திரத்தில்எழுதியப் பிரதிமையொன்று அசை யாது சுவற்றிலிருப்பதுபோல் அடக்கமுடையவனாய், அமுதமுண் பவன் வாயால் உண்ணுவதுபோல் ஆசிரியன்சொல்லும் பொருளைக் காதாற் கேட்டும், உண்ட அமுதத்தை உண்டவன் வயற்றிலடக்கிக் கொள்வதுபோல் இவன் கேட்டபொருள்களை நெஞ்சினிடத்தே

* நன்னூல்.

விடாது அடக்கிக்கொண்டும், பிறகு ஆசிரியன் 'போ' என்று கட்டளையிட்ட பிறகேயே போதல் வேண்டும் என்று இருப்பதால், பாடங்கேட்கும் முறை அவ்வூழுடையார்க்கே அமையப் பெற்று கற்பவரைத் தருமேயன்றி பொய்யின்பம் கருதிச் செல்வத் தருக்கால் இறுமாந்து ஆசிரியனை மதியாது அடையவேண்டிய உண்மைப் பொருளை இழக்கும் ஏனையோர்க்கு அடைவதுகூடாதென்பதை அநுபவவாயிலாக அறிகின்றோமாதலால், இத்திருக்குறளால் கற்றாரைத் தலையாயினரென்றும், கல்லாதவரைக் கடையாயினரென்றும் கூறுகின்றனர். ஆதலால், இவ்வித துன்பத்தை யெல்லாம் நோக்காது நாணிற்கு அஞ்சாது கற்றவர் சிலரே யாவர் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அறிவு என்பது யார்க்கும் பொதுவாக விருக்க, இக்கற்றார்க்கு மாத்திரம் விசேடமாகிய மதிப்பினை உலகத்தார் ஏன் தருகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

**396. தொட்டனைத் தூறு மணற்கேணி மாந்தர்க்குக்
கற்றனைத் தூறு மறிவு.**

(பரி.) இ-ள். மணற்கேணி தொட்டனைத்து ஊறும்=மணலின்கட் கேணி தோண்டிய அளவிற்று ஆகும்;—மாந்தர்க்கு அறிவு கற்றனைத்து ஊறும்=அதுபோல மக்கட்கறிவு கற்றவளவிற்று ஆகும். எ-று.

ஈண்டுக் கேணியென்றது அதன்கணீரை. அளவிற்றாகவென்றது அதனளவுஞ் செல்லவென்றவாறு. சிறிது கற்றதனையான் அமையாது மேன்மேற் கற்றல்வேண்டுமென்பதாம். இஃது ஊழ் மாறுகொள்ளா வழியாகலின், மேல் "உண்மையறிவேமிகும்." * என்றதனோடு மலையாமை யறிக. (௬)

விளக்கம்:—மணலுள்ளே ஒருவன் தன் கேணியைத் தோண்டுவானாயின் அக்கேணியானது எவ்வளவு ஆழமாகத் தோண்டப்படுகிறதோ அதிற் சுரக்கும் நீரும் அவ்வளவு அதிகமாகச் சுரப்பதுபோல, கற்கின்ற மக்களுக்கும் அறிவானது, அவர்கள் எவ்வளவுக்கெவ்வளவு அதிகமதிகமாகக் கற்கின்றார்களோ அவ்வளவுக் கவ்வளவு உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், கற்றவர்களுக்கு இயற்கை யறிவோடு கல்வியறிவு என்

* திருக்குறள், 378.

பதும் சேர்ந்து மிக்கதோர் பயனைத் தருவதால் கற்றவர் அறிவு சிறப்புடையதென்றும், அவ்வறிவும் சிறிது கற்கப்பட்டு விடப்படுமாயின் அத்துணைப்பெரும் பயனைத்தராதென்றும், மேலும் மேலும் விடாது கற்றலே வேண்டும் என்றும், அவ்விதம் கற்பதால் ஒருவன் பெரும் பயனையடைதல் கூடுமென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஒருவன் 'இளமையிற்கல்' என்றபடி இளமையிலேயே கற்றலும், கற்ற அவ்வளவே பயனையும் அடைதல் கூடும் என்று அறிகின்றோம். ஆதலால், கல்வியைக் கற்க விரும்பும் ஒருவன் எவ்வளவு காலம் கற்றல் வேண்டும் என்று அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

397. யாதானு நாடாமா லூராமா லென்னொருவன்
சாந்துணையுங் கல்லாத வாறு.

(பரி.) இ-ள். யாதானும் நாடாம் ஊராம் = கற்றவனுக்குத் தன்னாடேயன்றி யாதானுமொருநாடும் நாடாம், யாதானுமோரூரும் ஊராம்; — ஒருவன் சாந்துணையும் கல்லாதவாறு என் = இங்ஙனமாயின் ஒருவன் தானிறக்குமளவுங் கல்லாது கழிகின்றது என்கருதி? எ-று.

உயிரோடு சேறலிற் 'சாந்துணையும்' என்றார். பிறர்நாடுகளும் ஊர்களுந் தமபோல உற்றுப் பொருட்கொடையும் பூசையும் உவந்து செய்தற்கேதுவாகலிற் கல்விபோலச் சிறந்தது பிறிதில்லை; அதனையே எப்பொழுதுஞ் செய்கவென்பதாம். (எ)

விளக்கம்:—படித்த ஒருவனுக்குத் தன்னுடைய நாடும் தன்னுடைய ஊரும் அல்லாமல் அவன் போகின்ற நாடுகளும் ஊர்களும் அவனுடைய நாடுகளும் ஊர்களும் ஆகுமென்றும், ஆதலால் அவ்வித பெரிய தகுதியைக் கொடுக்கும் கல்வியை ஒருவன் ஏன் தான் சாகின்ற வரையில் கல்லாது விட்டுவிடுதல் வேண்டும் என்றும் இத்திருக்குறள் வினவுகின்றது. இதனால், கல்வியைக் கற்ற ஒருவன் எங்குச் சென்றாலும் அவனுக்குப் பொருளும் பூசையும் கிடைக்கின்றனவாதலால், இவ்வித பொருள், பூசை, புகழ் மூன்றையும் கொடுக்கின்ற கல்வியைச் சாகும் வரையில் ஒருவன் கற்றல் வேண்டும் என்றும், அவ்விதம் கற்றலால் இம்மைப் பயனை அடை

காணுதல்கூடும். ஆகலால், ஒருவன் இக்கல்வியை ஒரு பிறப்பில் முயன்று வருந்திக் கற்று விடுவானாயின், அவனுக்குக் கிடைத்த ஏனைய பொருள்களைப்போல் அழிவுபெறாமல் பிறவிகள் தோறும் உயிர்த்துணையாக நிற்கும் என்று அறிந்தோம் என்றனர். கேட்ட மாணாக்கர், "இக்கல்வியை ஒருவன் பெறுவானாயின் பெற்ற அவன்

* 62-ம் குறள் உரைபார்க்க.



இன்பமடைதற்கு அது ஏதுவாகவிருக்குமோ? அன்றிப் பலர்க்கும் பயன்படுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

399. தாமின் புறுவ துலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

(பரி.) இ-ள். தாம் இன்புறுவது உலகு இன்புறக் கண்டு = தாமின் புறுதற்கு ஏதுவாய கல்விக்கு உலகமின்புறுதலான் அச்சிறப்பு நோக்கி— கற்றறிந்தார் காமுறுவர் = கற்றறிந்தார் பின்னும் அதனையே விரும்புவர். எ-று.

தாமின்புறுதலாவது:—இம்மையின்கட் சொற்பொருள்களின் சுவைநுகர்தலானும், புகழ் பொருள் பூசை பெறுதலானும், மறுமையின்கண் அறம் வீடு பயத்தலானும், அதனான் இடையறாதவின்ப மெய்துதல். உலகின்புறுதலாவது:—இம்மிக்காரோடு தலைப்பெய்து அறியாதனவெல்லாம் அறியப் பெற்றோமென்றும், "யாண்டுபலவாக நரையிலமாகியரோ" *மென்று முவத்தல். செல்வமாயின், ஈட்டல் காத்தல் இழத்தலென்றிவற்றாற் றன் புறத்தும் பலரையும் பகையாக்குதலுடைத்தென அறிந்து அதனைக் காமுறாமையிற் 'கற்றறிந்தார்' என்றும், கரும்பயிற்குக் கூலிபோலத் தாமின் புறுதற்கு உலகின்புறுதல் பிறவாற்றானின்மையின் அதனையே காமுறுவ ரென்றும் கூறினார். (க)

விளக்கம்:—கல்வியைக் கற்றோர் தாம் இன்பம் அடைவதற்குக் காரணமாகிய கல்வியைக் கண்டு ஏனைய உலகத்திலுள்ளவர்களும் இன்பம் அடைகின்றார்கள் என்பதைக் காட்சியளவையாக

அறிகின்றார்களாகையால், அவ்விதம் தமக்கும் பிறர்க்கும் இன்பத்தைத் தருகின்ற அக்கல்வியினை மேலும் மேலும் கற்பதற்கு விருப்பங் கொள்ளுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது எவ்வா றெனின்? கற்ற ஒருவன்றான் கற்கின்ற காலத்துச் சொல் பொருள் முதலியவற்றில் உள்ள சுவைகளை அமிழ்தினையொப்பதாகச் சுவைத்து உண்ணுதலாலும், பிறரிடத்துப் புகழ் பொருள் பூசை அடைதலாலும், மறுமையில் அறத்தானாகிய தேவபோகத்தையும், பிறகு வீட்டு இன்பத்தையும் கொடுத்தலாலும் இடைவிடாத இன்பம் அடைகின்றவனாகின்றான். அன்றியும், *இவனது கல்வியால்

* புறநானூறு, 191.



உலகம் இன்பம் அடைவது எவ்வாறு எனின்? இவ்வுலகில் இருந்த பெரியாரோடு கூடி, நாம் இதுவரையும் அறியாத விடயங்களையெல்லாம் எளிதில் அறியப் பெற்றோம் என்றும், இவ்விதப் பெரியாரிடத்துக் கேட்ட கேள்வியின் முயற்சியால் பல ஆண்டுகள் கழிந்தனவாயினும் நன்னெறியிலேயே காலத்தைக் கழித்தோமாதலால் நரை முதலியவையும் கொள்ளாது இளமைப்பருவமாகவே உள்ளோம் என்றும் மகிழ்தல். இக்கல்வியறிவைவிட்டு வேறு செல்வப்பொருளை பொருளவன் விரும்பி அதனைத்தேட முயல்வானாயின், அதனைத் தேடுங்கால் உண்டாகுந் துன்பமும், தேடியபொருளைப் பிறர் கொண்டுபோகா விதம் காக்கின்ற துன்பமும், காத்தும் இழக்கின்ற காலத்தே அவ்விழப்பினாலாய துன்பமும் அடைவதுடன் பல்லையும் பலகையாக்கிக் கொள்ளவும் நேருமாதலால் அதனை விரும்பாது கல்வியொன்றினையே விரும்பியபடியால் கற்று அறிந்தாரென்றும், கரும்பை யுண்பானொருவனுக்குக் கூலிகொடுத்து உண்ணச் செய்வதுபோல், கல்வியைக்கற்ற ஒருவனுக்குக் கல்வியை விரும்புகின்ற உலகத்தவர்கள் பொருளையும் பூசையையும் கொடுத்துப் புகழ்கின்றார்களாதலால், அக்கல்வியையே விரும்புகின்றார்களென்றும், இக்கல்வியன்றி பிறவற்றிற்கெல்லாம் உலகோர் விருப்பத்தைச் செலுத்துவதில்லை என்றும், ஆதலால் இக்கல்வியையே விரும்பிக் கற்றல்

வேண்டுமென்றும் பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இக்கல்வி நீங்கலாக ஏனைய செல்வங்கள் ஒருவனுக்குச் செல்வங்களாகாவோ?" என்னலும், ஆசிரியர் இயம்புவாராயினர்.

**400. கேடில் விழுச்செல்வம் கல்வி யொருவற்கு**
**மாடல்ல மற்றை யவை.**

(பரி.) இ-ள். ஒருவற்குக் கேடில் விழுச்செல்வம் கல்வி=ஒருவனுக்கு அழிவில்லாத சிறந்த செல்வமாவது கல்வி;—மற்றையவை மாடு அல்ல=அஃதொழிந்த மணியும் பொன்னும் முதலாயின செல்வமல்ல. எ-று.

அழிவின்மையாவது:—தாயத்தார், கள்வர், வலியர், அரசரென்றிவரால் கொள்ளப்படாமையும், வழிபட்டார்க்குக் கொடுத்தழிக் குறையாமையுமாம். சிறப்பு=தக்கார்கண்ணே நிற்றல். மணி பொன் முதலியவற்றிற்கு



இவ்விரண்டு மின்மையின், அவற்றை 'மாடல்ல' என்றார். இவையைந்து பாட்டானும் கல்வியது சிறப்புக் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—உலகத்துத் தோன்றிய மனிதரொருவனுக்கு அழிவில்லாததும் சிறப்புடையதும் ஆகிய செல்வமானது கல்வி யொன்றேயென்றும். இக்கல்வி நீங்கலாக உள்ள மணியும் பொன்னும் முதலாகிய பொருள்களெல்லாம் செல்வமாகாவென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னேயோவெனின்? கல்வியைப் பொருளாக ஒருவன் விரும்பிக் கொள்ளுவானாயின், அக்கல்வியாகிய பொருள் ஞாதிகள், திருடர், பலமுடையவர், அரசர் என்னும் இவர்களால் கொள்ளப்படுதற்கு இல்லாமற்போதலாலும், அல்லது தன்னைச் சரண் அடைந்தவர்களுக்குக் கொடுக்கின்றகாலத்தே ஆயுள் முழுவதும் கொடுக்கினும் சிறிதும் குறையாது பெரிதும் வளர்ந்து வருவதாலும் இதுவே சிறந்த செல்வமென்றும், ஏனைய மணி பொன் முதலியன மேற்சொன்னவர்களெல்லாம் கொள்ளுதற்கு இடந்தருவதாலும், அவற்றைக்கொடுக்கின்ற காலத்தே தக்கவர்களுக்குக் கொடாவிடின் குறைந்து போவதாலும் அவை சிறப்புடைய செல்வங்களாகா என்றார். அறிந்தோம் என்றனர். இதனை

நாலடியார், கல்வி என்னும் அதிகாரத்தில், கீழ்வரும் செய்யுள்களால் அறிதல் கூடும்.

> "குஞ்சி யழகுங் கொடுந்தானைக் கோட்டழகும்
> மஞ்சள் அழகும் அழகல்ல—நெஞ்சத்து
> நல்லம் யாமென்னு நடுவு நிலைமையால்
> கல்வி யழகே யழகு."

> "இம்மை பயக்குமால் ஈயக் குறைவின்றால்
> தம்மை விளக்குமால் தாமுளராக் - கேடின்றால்
> எம்மை யுலகத்தும் யாங்காணேங் கல்வி போல்
> மம்மர் அறுக்கு மருந்து."

> "வைப்புழிக் கோட்படா வாய்த்தீயிற் கேடில்லை
> மிக்க சிறப்பின் அரசர்—செறின்வவ்வார்
> எச்சமென வொருவன் மக்கட்குச் செய்வன
> விச்சைமற் றல்ல பிற."



ஆதலால், கல்வியைக் காட்டிலும் மக்களுயிர்க்குச் சிறந்த பேறு வேறு ஒன்று இல்லையாகும் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "கல்வி யுடையவன் ஒருவன்தானே அறிவுடையவனாக உலகத்தார்க்கு இன்பத்தை யூட்டல் கூடும்' எத்துணையோ மக்கள் கல்வி பயிலாமலே பலர் இன்புறப் பேசுதலையும், அறிவோடிருத்தலையும், பொருள் தேடுதலையும் காண்கின்றோமே" என்னலும், ஆசிரியர் "கல்லாமை" என்னும் அதிகாரத்தையுங் கூறுவாராயினர்.

---

## 41. அதிகாரம்

## கல்லாமை.

---

(பரி.) அஃதாவது கற்றலைச்செய்யாமை. என்றது அதனினாய இழி பினை. கல்விச் சிறப்பு மேல் விதிமுகத்தாற் கூறியதனையான் முற்றப் பெறுமை நோக்கி, எதிர்மறைமுகத்தானும் கூறுகின்றதாகலின், இது கல்வியின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:-- அதாவது கல்வியைக் கற்காமை. அது என்னை யோவெனின்? கல்வியைக் கற்காமையால் வருகின்ற இழிவினைக் கல்லாமை என்று கூறுவதாகும். ஏனெனின்? முன்னர்க் கல்வியி னுடைய சிறப்பையும், அது கற்றாருடைய பெருமையினையும் கூறியதுபோல், அக்கல்வியைக் கல்லாதவனது இழிவினையும் எடுத் துக் காட்டாவிடில் கல்வியின் சிறப்பு முற்றும் எடுத்துக் கூறியதாக இராதாகையால், இக்கல்லாமை என்பது கல்வி என்னும் அதிகாரத் திற்குப் பிறகு வைத்து உள்ளது என்றனர். அதைக்கேட்ட மாணாக் கர், "கல்லாமையால் ஒருவனுக்கு என்ன இழிவுவரும்?" என்று கேட்டதும், ஆசிரியர் கூறுவாராயினர்.

401. அரங்கின்றி வட்டாடி யற்றே நிரம்பிய
நூலின்றிக் கோட்டி கொளல்.

(பரி.) இ-ள். அரங்கு இன்றி வட்டு ஆடியற்று = அரங்கினையிழை யாது வட்டாடினாற்போலும்—நிரம்பிய நூல் இன்றிக் கோட்டிகொளல் =



ஞானநிரம்புதற்கேதுவாகிய நூல்களைக்கல்லாது ஒருவன் அவையின் கண் ஒன்றனைச் சொல்லுதல். எ - று.

அரங்கு = வகுத்ததானம். வட்டாடல் = உண்டையுருட்டல். இதனை "கட்டளை யன்ன வட்டரங் கிழைத்துக்—கல்லாச் சிறாஅர் நெல்லிவட் டாடும்" என்பதனானறிக. நிரம்புதல் = அறியவேண்டுவனவெல்லாமறி தல். கோட்டியென்பது ஈண்டாகுபெயர், "புல்லாவெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி" என்புழிப்போல. சொல்லும் பொருளும் தெரிப்படா வென்பதாம். (க)

விளக்கம்:—ஒருவன் தான் கல்வியால் நிரம்புதற்குக் காரணமாகிய நூல்களையெல்லாம் படியாது கற்றறிந்தவர் சபையினிடத்தே சென்று ஏதேனும் ஒன்றைச் சொல்லப் புகுவானாயின், அவனதற்கு அமைந்த சபையொன்றினை வகுத்துக் கொள்ளாமலே ஒருவன் வட்டாடல் என்னும் உண்டை உருட்டும் விளையாட்டினைச் செய்தது போலும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனின்? வட்டாடுதல் என்னும் ஆட்டத்திற்குப் போந்த இடம் இருந்தே அவ்வாட்டத்தை ஆடல்வேண்டியிருக்க அவ்விதம் செய்யாது ஒருவன் ஆடுவானாயின் அவ்வாட்டமானது அவ்விதம் முடியாமற் போமே, அதுபோல் அவைக்களத்தே சொல்ல எண்ணிய சொல்லிற்கு உரிய எண்ணுமெழுத்தினையும் அறியாத ஒருவன் ஒன்றைச் சொல்லப் புகுவானாயின், அங்குள்ள மேலோராகிய கற்றவர்களாலும் ஏனையோராலும் இழித்துக் கூறப்படுவான் என்று அறிகின்றோமாதலால், நிரம்பிய நூலறிவும் இயற்கை யறிவும் இல்லாதவர்கள் அவைக்களத்தே செல்லுதல் ஆகாதென்றும், சென்றாலும் அவர் வாய்ச்சொல்லைக் கேளாரென்றும், கேட்டினும் சிரிக்கிடவே கேட்பரென்றும் அறிகிறோம். வட்டாடல் முதலிய உவமைகளைக் கீழ்வரும் செய்யுள்களால் அறிதல் கூடும்.

" ஈன்பருந் துயவும் வான்பொரு நெடுஞ்சினைப்
பொரியரை வேம்பின் புள்ளி நீழற்
கட்டளையன்ன வட்டரங்கிழைத்துக்
கல்லாச்சிறாஅர் நெல்லி வட்டாடும்



வில்லேர் குழவர் வெம்முனைச் சீறூர்ச்
சுரன் முதல் வந்த உரன்மாய் மாலை
உள்ளினெ னல்லனோ யானே உள்ளிய
வினைமுடித் தன்ன இனியோள்
மனமாண் கடைதொறு படர்மொழிதனவே " *

"புல்லா வெழுத்திற் பொருளில் வறுங்கோட்டி
கல்லாவொருவ னுரைப்பவுங் கண்ணோடி
நல்லார் வருந்தியுங் கேட்பரே மற்றவன்
பல்லாரு ணாணல் பரிந்து." †

இவ்விதம் ஆசிரியர் கூறலும், "கல்லாதானொருவன் அவையுடைய இயற்கை யறிவினுள் ஏதேனுமொன்றைச் சொல்லப் புகுவானாயின் நல்லறிஞர் அதனை என் வருந்திக்கேட்பர்? விரும்பிக் கேட்டலாகாதோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

402. கல்லாதான் சொற்கா முறுதன் முலையிரண்டு
மில்லாதான் பெண்காமுற் றற்று.

(பரி.) இ-ள். கல்லாதான் சொற்காமுறுதல் = கல்வியில்லாதானொருவன் அவையின்கணொன்று சொல்லுதலை அவாவுதல்— முலையிரண்டும் இல்லாதாள் பெண் காமுற்றற்று = இயல்பாகவே முலையிரண்டு மில்லாதாளொருத்தி பெண்மையை அவாவினாற்போலும்; எ - று.

"இனைத்தெனவறிந்த சினை" ‡ யாகலின், தொகையொடு முற்றும்மை கொடுத்தார். சிறிது மில்லாதாளென்பதாம். அவாவியவழிக்கிடை போகாது, பரிசினும் நகைவிளைக்குமென்பதாயிற்று. (உ.)

விளக்கம்:—கல்வியில்லாத ஒருவன் கற்றறிந்தவர்கள் சபையின் கண்ணே சென்று ஏதேனும் ஒன்று சொல்ல விரும்புவானாயின், இயல்பாகவே முலைகளிரண்டும் இல்லாத பெண் ஒருத்தி தன் பெண்தன்மையாலாகிய பயனை யடைய ஆசைப்பட்டாற்போலும்

* சற்றினை, 3. † நாலடியார், பன்மக்கள். ‡ தொல்காப்பியம், சொல்லதிகாரம். கிளவியாக்கம், 33.



என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனின்? பெண்ணொருத்திக்கு அழகினைச் செய்வதும் விரும்பிய ஒருவனைக்

குப் போகத்தின் பயனைத் தருவதும் முலைகளாதலால், அவையில் லாத பெண்ணொருத்தி ஒரு காமுகனோடு இருந்து பயனடைவது முடியாதென்பதை நோக்கியே அவ்வித உவமையைக் கல்வியறிவில் லாது சபையில் பேசிய ஒருவனுக்கு உவமையாகக் காட்டினர். எவ்விதம் அப்பெண் அவனிடம் பயனடையவில்லையோ அது போல், இவனும் பயனடைவதற்கு இல்லாமற்போகும் என்றும், அவ்விதம் வருந்திப் பயன்கொள்ள எண்ணினும் அப்பெண்ணின் தன்மையைப் போகவுணர்ச்சியுடைய ஒருவன் விரும்பாததுபோல் இக்கல்வியறிவில்லாதவனது அறிவினையும் கல்வியறிவுடையோர் விரும்பாரென்றும் பொருளின்றோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "கல்லாத ஒருவன் சபைக்களத்து ஒன்றும் பேசாதிருத் தல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

403. கல்லா தவரு நனிநல்லர் கற்றார்முற்
சொல்லா திருக்கப் பெறின்.

(பரி.) இ-ள். கல்லாதவரும் நனி நல்லர்—கல்லாதாரும் மிகநல்ல ராவர்,—கற்றார்முன் சொல்லாது இருக்கப்பெறின்—தாமே தம்மையறிந்து கற்றாரவையின்கண் ஒன்றனையுஞ் சொல்லாதிருத்தல் கூடுமாயின். எ-று.

உம்மை இழிவுசிறப்பும்மை. தம்மைத்தாமறியாமையின் அது கூடா தென்பார் 'பெறின்' என்றும், கூடின் ஆண்டுத் தம்மை வெளிப்படுத் தாமையானும், பின் கல்வியை விரும்புவாராகலானும் 'நனி நல்லர்' என் றுங் கூறினார். இவை மூன்றுபாட்டானும் கல்லாதார் அவைக்கட்சொல்லு தற்குரியரன்மை கூறப்பட்டது. (௩)

விளக்கம்:—நீங்கள் மேல் வினவியவண்ணம், கல்வியறிவில்லாத வர்கள் கற்றவர்கள் சேர்ந்துள்ள அவைக்களத்தே சென்று தம் முடைய தகுதி இதுவென்று அறிந்து ஒன்றும் பேசாதிருப்பாரா யின், அவர்களைக் காட்டிலும் மிகுதியும் நல்லவர்கள் ஒருவருமிலர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது ஏனெனின்? படியாத வர்கள் தம்மைத் தாம் அறிந்துகொள்ள நோக்கிய மிக்காரை

யாதும், இன்னது சொல்லின் இன்னது வரும் என்று அறியும் ஆற்றல் தங்களுக்கு இல்லாமையாலும் அவையினிடத்துச் சென் றால் அடங்கியிராது ஏதேனும் ஒன்றைக் கூறி, பழிபடுவார் என்று அறிந்துகொள்ளுகின்றோம். ஆதலால், படியாதவர்கள் படித்தவர் கள் சபையில் ஒன்றும் கூறாது அமைதியுடன் இருத்தல் வேண்டும் என்று ஆசிரியர் கூறினர். இதுகேட்ட மாணாக்கர், "எவ்வளவோ மக்கள் கல்வியறிவு இல்லாவிடினும் இயற்கையறிவுடையவர்களாக இருக்கக் காண்கின்றோம். அவ்வித அறிவுடையோர் ஏதேனும் ஒன்றை அவைக்களத்துச் சொல்லுதல் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

404. கல்லாதா னொட்பங் கழியநன் றாயினுங்
கொள்ளா ரறிவுடை யார்.

(பரி.) இ-ள். கல்லாதான் ஒட்பம் கழிய நன்றாயினும் = கல்லாத வனது ஒண்மை ஓரோவழி மிக நன்றாயிருப்பினும், — அறிவுடையார் கொள்ளார் = அறிவுடையார் அதனை ஒண்மையாகக் கொள்ளார். எ-று.

ஒண்மை = அறிவுடைமை. அது நன்றாதல், ஆயிற்றாயினும் சிர்மே லெழுத்துப்போல்வதோர் விழுக்காடாகலின், நிலைபெற்ற நூலறிவுடை யார் அதனை மதியாரென்பதாம். (௪)

விளக்கம் :- கல்லாத ஒருவனுடைய அறிவுடைமையானது எவ்வளவு மேலாகிய தகுதியுடையதாயினும், அதனைக் கல்வியறி வுடைய பெரியோர் அறிவுடைமையாக மதிக்கமாட்டார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது எவ்வெனின்? நீரின் மீது எழுதிய எழுத்தானது எவ்வாறு பயன்படாமற்போகுமோ, அதுபோல் கல்வியறிவில்லாத இவனுடைய சொற்களும் பயன்படாமற்போம். பயன்படாதொழியவே நிலைபெற்ற நூலறிவினையுடையவர் அதனை மதிப்பதற்கு இல்லை என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நூலறி வில்லா மனிதனொருவன், தன்னை மிகுதியாக மதித்துக் கொள் வதைக் காண்கின்றோம். அவ்வித மதிப்பு அவனுக்கு எவ்வித பய

...ந்தரும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

5



**405. கல்லா வொருவன் றகைமை தலைப்பெய்து**
**சொல்லாடச் சோர்வு படும்.**

(பரி.) இ-ள். கல்லா ஒருவன் தகைமை = நூல்களைக் கல்லாதவொருவன் யானறிவுடையேனெனத் தன்னை மதிக்கு மதிப்பு—தலைப்பெய்து சொல்லாடச் சோர்வு படும் = அவற்றைக்கற்றவன் கண்டு உரையாடக் கெடும், எ-று.

கற்றவனென்பது வருவிக்கப்பட்டது. யாதானுமோர் வார்த்தை சொல்லுதற்றானும், சொல்லியவழி இழுக்குப்படுதலின், அழிந்துவிடுமென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் கல்லாதாரதியற்கையறிவின் குற்றங் கூறப்பட்டது. (௫)

விளக்கம்.—நூல்களை கல்லாசிரிய னொருவனிடத்தே சென்று வருத்திக் கல்லாத ஒருவன் 'யான் மிக அறிவுடையவன்' என்று தன்னைத்தானே மதித்துக்கொள்ளும் மதிப்பானது நூல்களைக் கற்ற ஒருவன் அவனைக் கண்டு பேசுகின்றவரையில் இருக்குமே யன்றி அதற்குப் பிறகு நில்லாது ஒழிந்துபோகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோ வெனின்,' நூல்களைக் கற்றவன் ஒருவனிடத்தே கல்லாத ஒருவன் ஏதேனும் ஒன்றைப் பேசப் புகுவானாயின், பேசுந்தோறும் குற்றப் படுவானாதலால் அக்குற்றத்தால் மறுபடியும் பேசுவதற்கில்லாது வாயடங்கிப் போவானென்றும், அவனது இயற்கை யறிவானது யாதும் பயன்தராது அவமதிப்புக்கே இடமாகும் என்றும் கண்டோர் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "கல்வியறிவில்லா மாந்தரது இயற்கை யறிவானது யாதும் பயன் தராது என்றமையால், அவர் தமக்கும் பிறர்க்கும் பயன்படாது ஒழிந்துபோவர் என்பதுபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

**406. உளரென்னு மாத்திரைய ரல்லாற் பயவாக்**
**களரனையர் கல்லா தவர்.**

(பரி.) இ-ள். கல்லாதவர் = கல்லாதவர்—உளர் என்னும் மாத்திரை

வர் அல்லர்=காணப்படுதலான் இலரல்லர் உளரென்று சிலர் சொல்லுமள வினராதலன்றி—பயவாக் களர் அனையர்=தமக்கும் பிறர்க்கும் பயன் படாமையால் விளையாத களர்நிலத்தோடொப்பர். எ - று.



களர் தானும் பேணப்படாதிருந்து உயிர்கட்கும் உணவு முதலிய உதவாததுபோலத் தாமும் நன்குமதிக்கப்படாதிருந்து பிறர்க்கும் அறிவு முதலிய உதவாரென்பதாம். இதனால் கல்லாதாரது பயன்படாமை கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—படியாதவர்கள் இவ்வுலகத்து மக்களாக உள்ளார்கள் என்று சிலர் சொல்லுவதற்கு உருவத்தோடு காணப்படுகிறார்களே யன்றி தமக்காவது பிறர்க்காவது பயன்படாமையினால், விளையாத களர் நிலத்துக்குச் சமானமாய் உள்ளார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், கல்வி பயிலாதார் இருந்தும் பிற உயிர்கட்கு யாதொரு பயன்படாமலும் தாமும் புகழடையாது ஒழிந்து போவர் என்பதைக் கூறவந்தவர் பயன்தராத களர் நிலம் ஒன்று உழவரால் நன்கு மதிக்கப்படாமலும், உழவு முதலிய முயற்சிகள் செய்யப்படாமலும் ஒழிக்கப்படுகின்றது போலும், அந்நிலம் தானும் தனக்கும் பிறர்க்கும் பயன்படாது வீணே கிடப்பது போலும் என்று சிறந்த உவமை வாயிலாக எடுத்துக் காட்டியதாயிற்று என்றனர். அது கேட்ட மாணுக்கர், "எத்துணையோ கல்வியறிவில்லா மக்களை அவரது உறுப்பு நலம் கண்டு பலர் விரும்புவதை நாங்கள் காண்கின்றோமே. அவ்விதமிருக்க எவ்வாறு அவர் பயன் படுவதில்லை என்று கூறுவது?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

407. நுண்மாண் நுழைபுல மில்லா னெழினலம்
மண்மாண் புனைபாவை யற்று.

(பரி.) இ-ள். நுண் மாண் நுழை புலம் இல்லான் எழில் நலம்=

நுண்ணிதாய் மாட்சிமைப்பட்டுப் பல நூல்களிலுஞ் சென்ற அறிவு இல்லாதவனுடைய எழுச்சியும் அழகும்— மண் மாண் புனை பாவை யற்று= சுதையான் மாட்சிமைப்படப் புனைந்த பாவையுடைய எழுச்சியும் அழகும் போலும். எ - று.

அறிவிற்கு மாட்சிமையாவது பொருள்களைக் கடிதிற்கொண்டதும் மறவாமையும் முதலாயின. பாவை—ஆகுபெயர். "உருவின்மிக்கதோ ருடம்பது



பெறுதலரிது" *ஆலைவன் எழிலைக்கரும் ஓர் பயனே பெறினும், நூலறிவில்வழிச் சிறப்பிலவென்பதாம். இதனான் அவர் வடிவழகாற் பயனின்மை கூறப்பட்டது. (எ)

விளக்கம் :—மிக நுட்பமுடையவனும் மாட்சிமைப்பட்ட பலவித நூல்களிலும் சென்று அடையவேண்டிய அறிவு நன்று இல்லாதவனுடைய மதிப்பும் அழகும் மண்ணால் சிற்பியினது கை வன்மையினால் செய்யப்பட்ட பாவை போன்றினது அழகினை ஒக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது எவ்வாறெனின்? பொருள்களை விரைவில் அறிதலும் அறிந்த பொருள்களை மறவாமையும் முதலாகிய அறிவினையுடையார் எவ்வளவு உருவத்தில் சிறந்தவர் அல்லாயினும் அவரை உலகத்தோர் பொன் போல் போற்றுவர் என்றும், அவ்விதம் அல்லாதார் உறுப்புகளால் சிறந்து எத்துணை மிக்க அழகுடையாராயினும் உலகத்தார் அவரை மதியார் என்றும் அறிஞரும் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அழகில் மிக்கவராயினும் கல்விபற்றில்லாரை உலகோர் மதியார் என்று அறிந்தோம். ஆயின், அக்கல்விபற்றில்லாதார் செல்வமுடையவராயின் அவரை மதிப்பரன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

408. நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

(பரி.) இ-ள். நல்லார்கண் பட்ட வறுமையின் இன்னாது—கற்றார் மாட்டு நின்ற வறுமையினும் இன்னாது—கல்லார்கண் பட்ட திரு—கல்லாதார்மாட்டு நின்ற செல்வம். எ-று.

இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. நுகர்ச்சியின்றி மாதிரத்தால் தாழ்விக்கப்படுதலும் உலகிற்குத் துன்பஞ்செய்தலும் இரண்டற்கும் பொதுவாயினும், திருக் கல்லாரைக்கெடுக்க, வறுமை நல்லாரைக்

* "கருவி மாமழை கனைபெயல் பொழிந்தென வழிநாள்
அருவி போற்றொடர்ந் தருதல் வரும்பிணி யழலுட்
கருவிற் காய்த்திய கட்டமைப் படிமையிற் பிழையா
துருவின் மிக்கதோர் உடம்பது பெறுதலும் அரிதே"
(சீவகசிந்தாமணி முத்தி இலம்பகம், 154.)



கெடாது நிற்றலான், வறுமையினும் திருவின்னாதென்றார். இதனும் அவர் திருவின் குற்றம் கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—படியாத ஒருவனிடத்து வழிவழியால் அடைந்த செல்வமானது கல்வி யறிவுடையார் இடத்து நிலை பெற்று நிற்கும் தரித்திரத்தைக் காட்டிலும் துன்பத்தை யுண்டாக்கும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அது எனெனின்? செல்வமுடையவனொருவன் கல்வியில்லாதவனாயிருப்பானாயின் அவனடைந்த செல்வமானது நிலையாதது என்று எண்ணும் அறிவு அவனுக்கில்லாது தன்னுடைய செல்வச் செருக்கால் பிறர்க்குத் துன்பத்தை விளைக்க உடன்படுதலும் அவ்வுடம்பாட்டால் பிறர் இவனைத் துன்புறுத்துதலும் ஆகிய கேட்டிற்கு ஆளாவான். ஆயின், கல்வியறிவுடைய ஒருவன் வறுமை யுடையவனாயினும், ஒருவருக்கும் தீங்கு செய்யாது நிற்பதால் பிறரும் இவனுக்குத் தீங்கு செய்யாது கல்வியறிவுடைமையின் காரணமாக ஏதேனும் உதவிகளையே செய்வார்கள். ஆதலால், கல்வியறிவு இல்லாத ஒருவனுடைய செல்வமானது அவனுக்கு மிக்கதோர் துன்பத்தைத் தருமேயல்லாது நற்பயன் தரும் என்று அறிவதற்கு இல்லை என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கல்வியறிவில்லாத ஒருவனது அழகும் செல்வமும் பயன்படா என்று அறிந்தோம். ஆயின், நற்குலத்தோற்ற முடை

பலராக இருப்பாராயின் அப்போதேனும் கல்வியறிவில்லாதார் மதிக்கப்பட மாட்டாரோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

409. மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு.

(பரி.) இ-ள். கல்லாதார் மேற்பிறந்தார் ஆயினும் = கல்லாதார் உயர்ந்த சாதிக்கட் பிறந்தாராயினும்—கீழ்ப்பிறந்தும் கற்றார் அனைத்துப்பாடு இலர் = தாழ்ந்த சாதிக்கட் பிறந்தவைத்தும் கற்றாரது பெருமையளவிற்றாய பெருமையிலர். எ-று.

உடலோடொழியுஞ் சாதியுயர்ச்சியினும் உயிரோடு செல்லுங் கல்வியுயர்ச்சி, சிறப்புடைத்தென்பதாம். இதனால் அவர் சாதியுயர்ச்சியாற் பயனின்மை கூறப்பட்டது. (௯)



விளக்கம்:—படியாதவர்கள் உயர்ந்த ஜாதியிலே பிறந்தார்களாகவிருந்தாலும் தாழ்ந்த ஜாதியில் பிறந்துள்ள கற்றவர்களுக்குச் சமானமாக மாட்டார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? "எக்குடி பிறப்பினும் யாவரே யாயினும் அக்குடியிற் கற்றோரை வருக என்பர்" என்றபடி உலகோர் எக்குலத்தவரே யாயினும் கல்வி யறிவுடையோராயின் அவரையே நன்கு மதிப்பரன்றி கல்வியறிவில்லாத ஒருவன் எவ்வளவு மேலாகிய குலத்தில் தோன்றினும் அவனை மதிப்பதில்லையாகும். அன்றியும், ஒருவனது கல்வியானது அவன் உயிரோடு சென்று பலபிறவிகளிலேயும் உதவுவதாகவுள்ளது. ஆனால், மேற்குலத்திற் தோன்றிய உடலோ அப்பிறப்பிலேயே அழிந்து போகின்றது. ஆதலால், கல்வியறிவுடைமை ஒன்றே பொருள் தருவது, ஏனைய குலமானது பயன் தாராதது என்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கல்வியறிவில்லாத ஒருவன் அழகு, செல்வம், மேற்குலம் ஆகிய யாவும் மதிக்கப்படா என்றமையால், கல்வியறிவில்லாதவனைக் கல்வியறிவுடையாரோடு ஒப்பக் காணுங்காலத்து உலகோர்

விதம் இளமையிற் கல்லாது ஒழிந்தவர் என் செய்வது? என்னலும், ஆசிரியர் கூறலானாயினர்.

---

## 42. அதிகாரம்.
## கேள்வி.

---

(பரி.) அஃதாவது கேட்கப்படும் நற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல். கற்றவழி அதனினாய அறிவை வலியுறுத்தலானும், கல்லாத வழியும் அதனை உண்டாக்குதலானும், இது கல்வி கல்லாமைகளின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது முன்னர் கற்கவேண்டிய நூல்களைக் கற்றல்வேண்டும் என்று கூறியபடி, கேட்கவேண்டிய நூல்களைப் படித்தறிந்தவர்களிடத்தே கேட்டல் வேண்டுமென்பது இதனுள் கூறப்படுகின்றது. இவ்வித கேள்வியானது கேட்கின்ற ஒருவன் கற்றவனாகவிருப்பானாயின் அவன்கற்ற கல்வியை மேன்மேலும் வளரச் செய்தலாலும், கல்லாதவனாயின் கல்வியை யுண்டாக்குதலாலும் இக்கேள்வி என்னும் அதிகாரம் கல்வி கல்லாமை என்னும்



இவ்விரண்டு அதிகாரங்களுக்குப் பின்னே வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கேள்வி என்பது கற்றவர் கல்லாதவர் ஆகிய இருவர்க்கும் வேண்டுவதாக உள்ளது என்று அறிகின்றோமாதலால். இக்கேள்வியானது மக்கள் உயிர்க்கு மிக்கதோர் தகுதியுடைய செல்வம்போல் உள்ளது போலும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

411. செல்வத்துட் செல்வஞ் செவிச்செல்வ மச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை. [வஞ்

(பரி.) இ-ள். செல்வத்துட்செல்வம் செவிச்செல்வம்—ஒருவற்குச் சிறப்புடைய செல்வமாவது செவியான்வருஞ் செல்வம்,—அச்செல்வம்

செல்வத்துள் எல்லாம் தலை = அச்செல்வம் பிறசெல்வங்களெல்லாவற்றினுந் தலை யாகலான், எ-று.

செவியான்வருஞ்செல்வம் - கேள்வியான் எல்லாப்பொருளையுமறிதல். பிற செல்வங்கள் பொருளான் வருவன. அவை நிலையா வாகலானும், துன்ப விளைவினவாகலானும், இது தலையாயிற்று. அவற்றை யொழித்து இதனையே செய்கவென்பது குறிப்பெச்சம். (க)

விளக்கம்:—ஒருவன் இவ்வுலகத்தில் அடையக்கூடிய செல்வங்களில் செல்வமென்று சொல்லப்படுவது கேள்வியால் வரும் செல்வம் என்றும், அக்கேள்விச் செல்வமானது ஏனைய செல்வங்களெல்லாவற்றினும் முதன்மையாகிய செல்வம் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? ஒருவன் எல்லாப் பொருள்களையும் அறிவதற்கான யோக்கியதைகளைக் கேள்வியானது பயக்கின்றதாதலாலும், ஏனைய செல்வங்கள் அவ்விதம் தருவதற்கு யோக்கியமில்லாமலிருப்பதாலும் செவிச்செல்வமே சிறந்த செல்வமாயிற்று. ஏனைய பொருளால் வரும் செல்வமோ நிலையாததாயும் துன்பம் விளைவிக்கக் கூடியதாயும் உள்ளதாதலால், அதனை யொழித்துக் கேள்வி என்னும் செல்வத்தையே தேடுதல் வேண்டும் என்பது பெற்றோரும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "காதால் வருஞ் செல்வம் தலை என்றீர். காதால கேட்பனவற்றை ஒருவன் கேட்டுக் கொண்டே யிருப்பின், ஏனைய புலன்களுக்கு இன்பம் வேண்டுவதில்லையோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

கேள்வி 41

412. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கு மீயப் படும்.

(பரி.) இ-ள். செவிக்கு உணவு இல்லாத போழ்து = செவிக்குணவாகிய கேள்வியில்லாதபொழுது — வயிற்றுக்கும் சிறிது ஈயப்படும் = வயிற்றுக்குஞ் சிறிதளவு இடப்படும். எ-று.

சுவையிருமையும் பிற்பயத்தலுமுடைய கேள்வியுள்ள பொழுது வேண்டப்படாமையின் 'இல்லாதபோழ்து' என்றும், பெரிதாயவழித் தேடற்றுன்பமே யன்றி நோயுஞ்செய்தலான் 'சிறிது' என்றும், அதுதானும் பின் இருந்து கேட்டற் பொருட்டாகலான் 'ஈயப்படும்' என்றுங் கூறினார். சுதல்

வயிற்றிழிவுதோன்ற நின்றது. இவையிரண்டு பாட்டாலும் கேள்வியது சிறப்புக் கூறப்பட்டது. (௨)

விளக்கம் :—செவிப்புலனுக்கு கேள்வியென்னும் உணவை யுணராதபோழ்தே வயிற்றிற்கும் சிறிது உணவு இடுதல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுவதால், ஒருவன் கற்றறிந்தாரிடத்து நூல்களைக் கேட்கின்ற காலத்து செவிப்புலனைத்தவிர ஏனைய புலன்கள் ஒன்றையும் விரும்பாவென்றும், பின்னும் பின்னும் இருந்து கேட்பதற்குத் தேகம் இடந்தா வேண்டுமாதலால் கேள்வியில்லாத காலத்து உண்ணப்படும் என்றும், அவ்வாறு உண்ணுங்காலத்து அளவு மிகுந்து உண்ணின் அது நோயினையும் காமத்தினையும் கொடுக்கும் என்பதை நோக்கிச் சிறிது உணவு இடப்படும் என்றும், வயிற்றைப் பேணுதல் உயிர் பொருட்டேயன்றி உடம்பின் பொருட்டன்று என்பது தோன்ற வயிற்றுக்கும் என்றும் கூறினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கேள்வியினை யுடையார் செல்வரில் செல்வர் என்றதால், இவர் செல்வம் எவ்வித தகுதியை யுடையதென்னும் என்பதையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

413. செவியுணவிற் கேள்வி யுடையா ரவியுணவி
 னான்றாரோ டொப்பர் நிலத்து.

(பரி.) இ-ள் செவியுணவிற் கேள்வி உடையார்=செவியுணவாகிய கேள்வியினையுடையார்,—நிலத்து அவியுணவின் ஆன்றாரோடு ஒப்பர்—



நிலத்தின் கண்ணாராயினும், அவியுணவினையுடைய தேவரோடொப்பர். எ-று.

செவியுணவு=செவியானுண்ணுமுணவு. அல்வழிக்கண்வந்த இன் சாரியையது னகரம் வலித்து நின்றது. அவியாகியவுணவு தேவர்க்கு வேள்வித்தீயிற்கொடுப்பன. அறிவானிறைந்தமையான் 'ஆன்றார்' என்றும், துன்பமறியாமையால் 'தேவரோடொப்பர்' என்றுங்கூறினார். இதனால் அதனையுடையாரது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

விளக்கம் :—செவிக்கு உணவாகிய நற் கேள்விகளை யுடையவர்கள் இப்பூமியில் வசிக்கும் மனிதரே யாயினும் மக்களால் வேள்வியில் கொடுக்கும் அவிர்ப்பாகமாகிய உணவினைப்பெறுகின்ற தேவர்களோடு ஒப்பானவர்களாக உள்ளார்கள் என்று இத்திருக்குறள், கூறுகின்றது. ஆதலால், நற்கேள்விகளில் நண்ணிய அறிவினைப் பெற்று அறிவு நிறைந்தவர்களாயுள்ளவர்கள் தேவ உலகத்துள்ளார்போல் எல்லாப் போகங்களையுந் துய்த்துத் துன்பமில்லாது மக்களால் உண்டாகும் புகழ், பொருள், பூசை ஆகிய நிலைகளால் துன்பமில்லாது இருப்பரென்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இதுகாறும் கற்றாரும் கல்லாதாரும் ஆகிய இருவரும் கேட்டற்குக் கேள்வியுரியது என்றீர். கற்ற ஒருவன் கேள்வியைக் கேட்டகாலத்து அக்கேள்வி அவனது கல்வியைப் பலப்படுத்தும் என்று அறிந்தோம். கல்லாதவர்களும் கேள்வியை முயன்றால், அது அவர்களுக்கு எவ்விதம் பயன் தரும் என்று அறிய ஆசைப்படுகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

414. கற்றில னாயினுங் கேட்க வஃதொருவற்
ஒற்கத்தி னூற்றாந் துணை.

(பரி.) இ-ள். கற்றிலன் ஆயினும் கேட்க=உறுதி நூல்களைத் தான் கற்றிலனாயினும், அவற்றின் பொருள்களைக் கற்றறிந்தார்சொல்லக் கேட்க;—அஃது ஒருவற்கு ஒற்கத்தின் ஊற்றாம் துணை=அக்கேள்வி ஒருவனுக்குத் தளர்ச்சி வந்துழிப் பற்றுக்கோடாந் துணையாகலான். எ-று.



உம்மை, கற்கவேண்டுமென்பது பட நின்றது. தளர்ச்சி=வறுமையானுதல் அறிவின்மையானுதல் இழுக்கப்பட்டுழி மனத்தளர்தல். அதனைக் கேள்வியினுய அறிவு நீக்குமாகலின், 'ஊற்றாந் துணை' என்றார். ஊன்றென்

விளக்கம் :- உயிர்க்கு உறுதியைத் தரும் நூல்களை யொருவன் படித்தில்லாவிட்டாலும் அந்நூல்களின் பொருள்களைப் படித்தறிந்தார் வாய்க் கேட்க வேண்டும் என்றும், அவ்விதம் கேட்கின்ற கேள்வியானது கேட்ட ஒருவனுக்கு ஏதேனும் இடுக்கண் வந்த காலத்தே தாங்குகின்ற துணையாக நிற்கும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, கல்லாத ஒருவனுக்கும் அவன் கேட்ட கேள்வியால் அறிவுமிகும் என்றும், ஆகவே அவனுக்கு வறுமைவந்த காலத்திலேயோ அறிவில்லாமையால் துன்பப்படுகின்ற காலத்திலேயோ அவன் கேட்ட கேள்வியினால் உண்டாகிய அறிவானது ஊன்றுகோல்போல் நின்று அவனுடைய வறுமைத் துன்பம் முதலியவற்றை நீக்குமென்றும் இதனால் பெறப்படுகின்றது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஏதோ படியாவிடினும் படித்தார் வாய்க்கேட்கும் கேள்வியானது ஊன்றுகோல்போல் இருக்கும் என்று கூறினீர். ஆகவே, படித்தவர் எவரேனும் அவர் வாய்ச்சொல் கேட்கலாமோ? அன்றி, படித்த அளவே நிற்பார் வாய்ச்சொல் கேட்பதோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

415. இழுக்க லுடையுழி யூற்றுக்கோ லற்றே
யொழுக்க முடையார்வாய்ச் சொல்.

*(பரி.) இ-ள். இழுக்கல் உடை உழி ஊற்றுக்கோல் அற்று — வழுக்குதலுடைய சேற்று நிலத்து இயங்குவார்க்கு ஊன்றுகோல்போல உதவும் — ஒழுக்கம் உடையார் வாய்ச் சொல் — [illegible] ஒழுக்கமுடையார் வாயிற் சொற்கள் எ-று.

அவாய் நிலையான் வந்த உவமையடையாற் பொருளடை வருவிக்கப் பட்டது. ஊற்றுகோல்போ லுதவுதல் தளர்ந்துழி அதனை நீக்குதல். கல்வியுடையரேனும் ஒழுக்கமில்லாதார் அறிவிலராகலின், அவர் வாய்ச் சொற் கேட்கப்படாதென்பது தோன்ற 'ஒழுக்கமுடையார் வாய்ச் சொல்'

வினை யுடையவர்கள் ஏதேனும் தாமதகுணத்தால் மயங்குவோராக இருப்பினும், நிறைந்த நூல்களை உணர்ந்த தன்மையாலும், ஏனையோரிடத்துக் கேட்ட கேள்விகளாலும் தாம் கொண்ட மயக்கம் நீங்கி அறிவிலாத சொற்களை ஒரு சிறிதளவும் கூறாது அறிவுடைய சொற்களையே கூறுவார்களென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நூற் கேள்விகளைத் தாம் நல்லாசிரியனிடத்துக் கற்றும் தம்மைப்போன்று அவ்விதம் கற்கும் மாணக்கரிடத்தே பயின்றும் நிரம்பிய நூலறிவினையுடையார் தாம் பிறர்க்குச் சொல்லுங் காலத்தில் யார்க்கும் உண்டாகின்ற தாமசகுண மயக்கம் அவர்க்கும் உண்டாக வருமாயினும் கேட்ட அந்நுண்ணிய அறிவானது உடனே அம்மயக்கத்தைத் தீர்க்கும் ஆதலால், நூற்கேள்வியில் வல்ல நூல்வல்லவர் எக்காலத்தும் பிழைப்பனவாகிய வேதனைபயக்கும் சொற்களைச் சொல்லமாட்டார் என்று உணர்ந்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர் “முன்னர், கல்லாதவர்களது கண்களைக் கண்ணல்லவென்றும், அவை புண்ணென்றும் இவ்வாசிரியர் கூறியதைக் கேட்டோம். இனிக் கேள்வியைக் கேளாதவர்களை இவ்வாசிரியர் என் என்று கூறுகின்றனர்?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

418. கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற்
றோட்கப் படாத செவி.

(பரி.) இ-ள். கேட்பினும் கேளாத் தகையவே=தம்புலமாய ஓசை மாத்திரத்தைக் கேட்குமாயினுஞ் செவிடாந் தன்மையவேயாம்—கேள்வியால் தோட்கப்படாத=செவி—கேள்வியாற்றுளைக்கப்படாத செவிகள். எ-று.

எகரம் தேற்றத்தின்கண் வந்தது. ஓசை மாத்திரத்தான் உறுதி பெய்தாமையிற் ‘கேளாத்தகைய’ என்றும், மனத்தின்கண் நற்பொருள் நுழைதற்கு வழியாக்கலிற் கேள்வியைக் கருவியாக்கியும் கூறினார். பழைய துளை துளையன்றென்பதாம். (அ)

விளக்கம்:—கேள்வியைக் கேளாத ஒருவனது காதுகள் எவ்வ

எவு நுட்பமாகிய ஓசையையும் கேட்கக்கூடிய தகுதியுடையனவாக இருக்குமாயினும், அவை செவிடான தன்மையின யுடையன



வே என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதனால், ஓசைமாத்திரம் கேட்கின்ற காதுகள் காதுகளல்லவென்றும், உறுதிப் பொருளைக்கேட்கக் கூடிய காதுகளே காதுகளென்றும், ஓசைமாத்திரம் கேட்கும் காதுகளில் உள்ள துளைகள் பயன் தாராமையால் துளைகளல்லவென்றும், நூற்கேள்விகளால் துளைக்கப்பட்ட துளைகளையுடைய காதுகளே துளையுடைய காதுகளென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இந்நுட்பமாகிய நூற்கேள்விகளைக் கேளாதவர் உலகத்து மக்களிடத்து எவ்விதம் நடந்துகொள்வர் என்பதை யறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**419. நுணங்கிய கேள்விய ரல்லார் வணங்கிய**
**வாயின ராத லரிது.**

(பரி.) இ-ள். நுணங்கிய கேள்வியர் அல்லார் = நுண்ணிதாகிய கேள்வியுடையரல்லாதார்—வணங்கிய வாயினர் ஆதல் அரிது = பணிந்த மொழியினை யுடையராதல் கூடாது. எ-று.

கேட்கப்படுகின்ற பொருளினது நுண்மை கேள்வி மேலேற்றப்பட்டது. வாய்—ஆகுபெயர். பணிந்தமொழி = பணிவைப் புலப்படுத்திய மொழி. கேளாதார் உணர்வின்மையாற் றம்மை வியந்து கூறுவரென்பதாம். 'அல்லால்' என்பதூஉம் பாடம். (க)

விளக்கம் :—நுண்ணிய நூற்கேள்விகள் இல்லாதவர் உலகத்து அறிவுடையவராய்ப் பணிவாகிய சொற்களைச் சொல்லார்களென்றும், அதனுடன் அறிவில்லாமையால் தம்மை மிகப்புகழ்ந்து பேசுவ ரென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நுண்ணியதாகிய நூற்கேள்வியையுடையோர்க்கே பணிவைத் தெரிவிக்கும் சொற்களுண்டாகுமென்றும், கேளாதார்க்குப் பணிந்த சொற்கள் வாரா என்றும், வாராததுடன் நுண்ணிய உணர்ச்சி யின்மையால் தம்

மைத்தாமே மிக அறிவுடையோர் என்று எண்ணிப் புகழ்ந்து கூறிக் கொள்வர் என்றும் அறிகின்றோம். ஆதலால், இவ்விதம் நற்கேள்வி இல்லாதார் தாங்கள் உலகத்து நடக்கின்ற முறையால் பலரால் இழிக்கக் கூடியவர்களாகவே இருப்பர் என்று காண்கின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் கல்லாதும் கேள்வி



யைக் கேளாதும் உள்ள மாந்தர்கள் உலகத்து இருப்பதைப்பற்றி இவ்வாசிரியர் என்ன கூறுகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

420. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்க
ளவியினும் வாழினு மென்.

(பரி.) இ-ள். செவியிற் சுவையுணரா வாய் உணர்வின் மாக்கள் = செவியானுகரப்படுஞ் சுவைகளை யுணராத வாயுணர்வினையுடைய மாந்தர். அவியினும் வாழினும் என் = சாவினும் வாழினும் உலகிற்கு வருவ தென்னை! எ-று.

செவியானுகரப்படுஞ் சுவைகளாவன சொற் சுவையும், பொருட் சுவையும்; அவற்றுட் சொற்சுவை, குணம் அலங்காரமென இருவகைத்து. பொருட்சுவை காமம் நகை கருணை வீரம் உருத்திரம் அச்சம் இழிப்பு வியப்பு சாந்தமென ஒன்பது வகைத்து. அவையெல்லாம் ஈண்டுரைப்பிற் பெருகும். வாயுணர்வென்பது இடைப்பதங்கெடாக்குநின்ற மூன்றாம் வேற்றுமைத் தொகை. அது வாயானுகரப்படுஞ் சுவைகளையுணரும் உணர்வெனவிரியும். அவை, கைப்பு கார்ப்பு புளிப்பு உவர்ப்பு துவர்ப்பு தித்திப்பென ஆறும். செத்தாலிழப்பதும் வாழ்ந்தாற் பெறுவதுமின்மையின் இரண்டும் ஒக்குமென்பதாம். வாயுணவினென்று பாடமோதுவாரு முளர். இவை மூன்று பாட்டானுங் கேளாத வழிப்படுங் குற்றங் கூறப்பட்டது. (௧0)

விளக்கம் :—இத்திருக்குறள், செவியால் உண்ணப்படும் சுவைகளையறியாது வாயினால் உண்ணப்படும் உணவுகளையே அறி

கின்ற மனிதர் இவ்வுலகத்தே இருந்தாலென்ன; இறந்தாலென்ன? இரண்டும் ஒன்றேயாகும் என்று கூறுகின்றது. அதாவது, செவியால் உண்ணப்படும் சுவைகளாகிய சொல்லில் உண்டாகும் சுவையும் பொருளில் உண்டாகின்ற சுவையும் என்று சொல்லப்படுகின்ற நவரசங்களுக்குத் சொல்லின் குணம் சொல்லின் அலங்காரம் என்ற இரண்டு விதத்தினையும் பொருளின் குணமாகிய காமம் என்னும் ஒருபொருளின்மீது விருப்பும் நகையென்னும் உவகை விஸ்தாரத் துத்தோன்றி நின்ற மகிழ்ச்சியும் கருணை என்னும் எவ்வுயிர்கள் மீதும் செல்கின்ற ஆசையும் வீரம் என்னும் தம்மோடு ஒட்டாத பகைவரை வெல்லுகின்ற வீரத்தன்மையும் உருத்திரம் என்னும்



கோபமும், அச்சம் என்னும் பயமும், இழிப்பு என்னும் இழிந்த தன்மையும், வியப்பு என்னும் ஆச்சரியமும், சாந்தம் என்னும் சாத்வீக குணமும் ஆகிய இவைகளை யெல்லாம் கேள்வியால் கேட்டு அறியாது, வாயினால் உண்ணப்படும் கைப்பு என்னும் கசப்பின் தகுதியையும், கார்ப்பு என்னும் காரத்தின் தன்மையினையும், புளிப்பு என்னும் புளியின் தன்மையையும், உவர்ப்பு என்னும் உவர்த்தல் தன்மையினையும், துவர்ப்பு என்னும் துவர்த்தல் தன்மையினையும், தித்திப்பு என்னும் இனிப்பின் தன்மையினையும் உடைய பதார்த்தங்களையே மிகுதியும் உண்டு வாழ்கின்ற மாக்களாகிய மக்கள் இருப்பதால் உலகத்துக்கு யாதொரு பயனுமில்லை என்றும், அவர்கள் இறப்பதாலும் யாதொரு இழத்தலுமில்லை என்றும் அறிகின்றோம் என்றனர். அன்றியும், கல்வியும் கேள்வியும் இல்லாத இம்மக்கள் இருப்பதினும் இறப்பதே தகுதி என்றும், அவ்விதம் இறப்பதால் இறக்கின்ற இவர்களது உணவு முதலியவைகள் ஏனையோர்க்குப் பயன்படும் என்றும் குறிப்பாலறிகின்றோம் என்றனர்.' அது கேட்ட மாணாக்கர், "கல்வி கேள்விகளால் உண்டாகும் உணர்வுடைமையாகிய செயற்கையறிவு ஈதென அறிந்தோம். இனி இவ்வறிவோடு ஒருவனுக்கு இயற்கையறிவும் இருத்தல் வேண்டுமன்றோ? அதனையுங் கூறல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 43. அதிகாரம்.

## அறிவுடைமை.

---

(பரி.) அஃதாவது கல்வி கேள்விகளானாய அறிவோடு உண்மை யறிவுடையனாதல். அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது, கல்வி கேள்வி ஆகிய இவ்விரண்டு தன்மைகளால் வருகின்ற செயற்கை அறிவோடு இயற்கை யறிவாகிய உண்மையறிவும் உடையனாய் ஒருவன் இருத்தல் வேண்டும் என்று இவ்வறிவுடைமை என்னும் அதிகாரத்தைக் கல்வி கேள்வி என்னும் இரண்டு அதிகாரங்களுக்குப் பின் வைத்த முறைமையும் இதனாலேயே அறிதல் ஆகும் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "கற் கேள்விகளால் வருகின்ற அறிவோடு உண்மை யறிவென்பது ஒரு



வனது கல்வியின் பயன் போதும்! அவ்வித உண்மையறிவு ஒருவனுக்கு என்ன உபகாரத்தைச் செய்யும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

421. அறிவற்றங் காக்குங் கருவி செறுவார்க்கு
உள்ளழிக்க லாகா அரண்.

(பரி.) இ-ள். அறிவு அற்றம் காக்கும் கருவி = அரசர்க்கு அறிவென்பது இறுதி வாராமற் காக்குங் கருவியாம்,—செறுவார்க்கு அழிக்கலாகா உள் அரணும் = அதுவேயுமன்றிப் பகைவர்க்கு அழிக்கலாகாத உள்ளரணு மாம். எ-று.

காத்தல்=முன்னறிந்து பரிகரித்தல். உள்ளரண்=உள்ளாயவரண்: உள்புக்கழிக்லாகா அரணென்றவாறாம். இதனால் அறிவினது சிறப்புக் கூறப்பட்டது. (க)

விளக்கம்:- அறிவென்று கூறுவது ஒருவனுக்கு இறுதிவாராது

காக்கின்ற கருவியாகவுள்ளது என்றும், கருவியாகவிருப்பதுடன் பகைவர் அவனை யழிக்கக் கூடாத உள்ளரண்போலும் இருக்கிற தென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, இயற்கை யறிவுடையா னொருவன் தனக்குவரும் இடையூறுகளை முன்னறிந்து தன்னைக் காத்துக் கொள்வதற்குக் காரணமாக விருப்பதுடன் பகைவர் உட்புகுந்து தன்னைக் கெடுக்காவண்ணம் அரண்போலு மிருக்கின்றது என்று அறிவினது சிறப்பினையுணர்த்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "இயற்கையறிவுடையா னொருவன் தன்னைக் காத்துக்கொள்வதற்கு அவ்வறிவால் என்ன செய்கின்றான்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

422. சென்ற விடத்தாற் செலவிடா தீதொரீஇ
நன்றின்பா லுய்ப்ப தறிவு.

(பரி.) இ-ள். சென்ற இடத்தால் செலவிடா=மனத்தை அது சென்ற புலத்தின்கட் செல்லவிடாது—தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பது அறிவு= அப்புலத்தின் நன்மை தீமைகளையாராய்ந்து தீயதனினீக்கி நல்லதன்கட் செலுத்துவது அறிவு. எ-று.



வினைக்கேற்ற செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றமெனப் புலம் ஐந்தாயினும், ஒருகாலத்து ஒன்றின்கணல்லது செல்லாமையின், 'இடத்தால்' என்றார். விடாதென்பது கடைக் குறைந்து நின்றது. குதிரையை வழிமறித்து செலுத்தும் வாதுவன்போல வேறுசெல் மனத்தைப் புலமறித்து செலுத்துவது 'அறிவு' என்றார்; அஃது உயிர்க்குணமாகலின். (உ)

விளக்கம்:—அறிவு என்பது மனத்தை அது சென்ற இடமெல்லாம் செல்லவிடாமல் நன்மை தீமைகளை யாராய்ந்து தீயவழி செல்லாது நல்ல வழியினிடத்தே செல்ல விடுவதாக உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, குதிரையை நட்

டும் வாதிவன் என்னும் குதிரைத்தலைவன் தான் குதிரையை யோட்டுகின்றகாலத்துச் செல்லுகின்ற நிலத்தினைத்தெரிந்து சேறு உளை முதலிய இடங்களில் அதைச் செல்லவிடாது நல்ல நிலத்தி லேயே செல்லவிடுவதுபோல், அறிவுடையொருவனும் தன் மனத்தைச் சுவை யொளி யூறு ஓசை நாற்றம் என்கின்ற ஐம்புலன்க ளிடத்தும் செல்லவிடுங்கால் நன்னெறியாக நிற்கும்படிச் செல்லவிடு வது அறிவால் காக்கும் காவலாகும் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "இவ்விதம் உண்மையறிவுடையவன் ஒருவன் நன் னெறிக்கண்ணே அறிவினைச் செலுத்தப் புகுங்காலத்து எல் லோருடைய வாய்வரும் சொல்லையுங் கேட்டு நடத்தல்வேண் டுமோ? அன்றித் தனக்கு உயர்ந்தார் சொல்லும் வார்த்தையின் வண்ணமே அறிவைச் செலுத்துதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

### 423. எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினு மப்பொருண்
### மெய்ப்பொருள் காண்ப தறிவு.

(பரி.) இ-ள். எப்பொருள் யார்யார் வாய்க் கேட்பினும்=யாதொரு பொருளை யாவர் யாவர் சொல்லக் கேட்பினும், -அப்பொருள் மெய்ப் பொருள் காண்பது அறிவு=அப்பொருளின் மெய்யாய பயனைக் காணவல் லது அறிவு. எ-று.

குணங்கள் மூன்றும் மாறி மாறி வருதல் யாவர்க்கு முண்மையின், உயர்ந்த பொருள் இழிந்தார் வாயினும், இழிந்த பொருள் உயர்ந்தார் வாயி



னும், உறுதிப்பொருள் பகைவர் வாயினும், கெடுபொருள் நட்டார்வாயி னும் ஒரோவழிக் கேட்கப்படுதலான், 'எப்பொருள் யார் யார் வாய்க்கேட் பினும்' என்றார். அடுக்குப் பன்மைபற்றி வந்தது. வாயென்பது அவர் அப்பொருள்கட் பயிலாமை யுணர நின்றது. மெய்யாதல்=நிலைபெறுதல். சொல்வாரியல்பு நோக்காது அப்பொருளின் பயனை நோக்கிக் கொள்ளுதல் ஒழிதல் செய்வதறி வென்பதாம். (௩)

விளக்கம்:— எவ்வெப்பொருளை எவரெவர் சொல்லக் கேட்பி னும், சொல்லிய அப்பொருள்களில் உள்ள உண்மைப் பொருளின் பயனைக்காணும் வல்லமையுடைமையே அறிவு என்று இத்திருக்

குறள் கூறுகின்றது. எனெனின்? சாத்விகம், ராஜசம், தாமசம் என்கின்ற மூன்று குணங்களும் எவ்வித தகுதியுடையார்க்கும் மாறி மாறி வரும் இயற்கையாகவுள்ளனவாதலால், உறுதிப் பொருளைக் கேட்கின்றகாலத்து உறவினரென்றும் பகைவரென்றும் உயர்ந்தாரென்றும் இழிந்தாரென்றும் கொள்ளுதலாகாது. எனெனின்? குணவசத்தால் ஓர் காலத்து இழிந்தார் வாயிலும் உயர்ந்த பொருள்வருதலும், உயர்ந்தார் வாயில் இழிந்தபொருள் வருதலும், உறவினர் வாயில் கெடுபொருள் வருதலும், பகைவர் வாயில் உறுதிப் பொருள் வருதலும் உண்மையாதலால், அறிவுடையொருவன் சொல்லின் பொருளையுணர்ந்து எவர் வாயினும் வரும் சொற்களையுங் கேட்டல் வேண்டுமேயன்றி மனிதப்பிரிவை எண்ணிக்கேட்டலாகாது என்று அறிகின்றோம். அதாவது, சொல்வாருடைய இயல்பை நோக்காமல் சொல்லிய சொற்களின் பொருள்களையும் அவற்றின் பயனையுமே நோக்கிக் கொள்ளவேண்டுவனவற்றைக் கொள்ளுதலும் தள்ளவேண்டுவனவற்றைத் தள்ளுதலும் அறிவுடைமையாகும் என்றனர். அது கேட்ட மாணாக்கர், “அறிவுடையொருவன் தான் பிறர்க்குச் சொல்லுங்காலத்து எவ்விதம் சொல்லுதல் வேண்டும்? பிறர்வாயிற் கேட்குங் காலத்து எவ்விதங் கேட்டல்வேண்டும்?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

424. எண்பொருள வாகச் செலச்சொல்லித் தான்பிறர்
நுண்பொருள் காண்ப தறிவு. [வாய்

(பரி.) இ-ள். தான் எண் பொருளவாகச் செலச் சொல்லி=தான் சொல்லுஞ் சொற்களை அரிய பொருளவாயினும் கேட்பார்க்கு எளிய பொரு



ளவாமாறு மனங்கொளச் சொல்லி—பிறர்வாய் நுண் பொருள் காண்பது அறிவு=பிறர்வாய்க் கேட்குஞ் சொற்களின் நுண்ணிய பொருள் காணலரிதாயினும் அதனைக் காணவல்லது அறிவு. எ-று.

உடையவன்றொழில் அறிவின்மேலேற்றப்பட்டது. சொல்லுவன வழுவின்றி இனிது விளங்கச்சொல்லுக வென்பார் சொன்மேல் வைத்தும், கேட்பன வழுவினும் இனிது விளங்காவாயினும் பயனைக் கொள்

டமொழிக வென்பார் பொருண்மேல் வைத்துங் கூறினர். (௪)

விளக்கம்:—ஒருவன், தான் பிறர்க்குச் சொல்லுங்காலத்துச் சொல்லும் சொற்களிலுள்ள பொருள்கள் மிக அரிய பொருள்களா யிருக்கினும் அப்பொருள்களைக் கேட்பவர்க்கு எளியபொருளாக அவர்கள் மனங்கொள்ளும்படிச் சொல்லுதலும், தான் பிறர்சொல்லக் கேட்கின்றகாலத்து அவரிடத்து உள்ள சொற்களின் பொருள்கள் மிக நுண்ணியனவாய்த் தெரிந்து கொள்ளுவதற்கு அரியனவாக இருந்தாலும் அவற்றைத் தெரிந்துகொள்ள வல்லதும் அறிவு என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், ஒருவன் தான் சொல்ல எண்ணிய சொற்களைக் குற்றமில்லாமல் நன்றாக விளங்கும்படிச் சொல்லவேண்டுமென்றும், தான் கேட்கின்ற காலத்து எத்துணை விளங்காத சொற்களால் பிறர் கூறினாலும் அவற்றிலுள்ள குற்றம் நீக்கி குணம் ஒன்றையே கொள்ளுதல் வேண்டும் என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அறிவுடைபொருவன் உலகத்தாரிடத்து எவ்விதம் ஒழுகுதல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

425. உலகந் தழீஇய தொட்ப மலர்தலுங்
கூம்பலு மில்ல தறிவு.

(பரி.) இ-ள். உலகம் தழீஇயது ஒட்பம்—உலகத்தை நட்பாக்குவது ஒருவனுக்கு ஒட்பமாம்—மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு—அந்நட்பின்கண் முன்மலர்தலும் பின் கூம்புதலுமின்றி ஒரு நிலையனாவது அறிவாம். எ - று.

தழீஇயது இலதென்பன அஃறிணைத்தொழின்மேனின்றன. உலகமென்பது ஈண்டுயர்ந்தோரை. அவரோடு கயப்பூப்போல வேறுபடாது கோட்டுப்பூப்போல ஒருநிலையே நட்பாயின் எல்லா இன்பமுமெய்துமாகலின்,



அதனை அறிவென்றார்*. காரியங்கள் காரணங்களாக உபசரிக்கப்பட்டன. இதனைச் செல்வத்தின் மலர்தலும் நல்குரவிற் கூம்பலுமில்லதென்று உரைப்பாருமுளர். (௫)

விளக்கம்:—அறிவுடைபொருவன் உலகத்தில் உள்ளாரைத் தனக்கு நட்பாக்கிக் கொள்வது அறிவுடைமையாகுமென்றும், அவ்

விதம் நட்புச் செய்யுங்காலத்து முன்னர் மிகுதியும் நட்புச் செய்தலும் பின்னர் சிறிது சிறிதாக அற்றுப்போதலும் இல்லாமல் இருத்தல் வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நட்பைச் செய்வானொருவன் அறிவுடையனாக இருப்பானாயின் எக்காலத்தும் ஒருநிலையனாக இருத்தல் வேண்டுமென்றும், குளத்தில் உள்ள தாமரை முதலிய பூக்கள் சூரியனைக் கண்டகாலத்து மலர்தலும் அவன் மறைந்தகாலத்து மூடிக்கொள்வதும் போல் ஒருவனிடத்தே செல்வம் உள்ளகாலத்து அவனோடு நட்புக்கொண்டு இன்பந்துய்த்தலும அவன் வறிஞனாயகாலத்து அவனை விடுதலும் இல்லாதிருத்தல் வேண்டுமென்றும், ஆயின் அவன் கொம்புகளில் பூத்த பூக்கள் ஒருநிலையாக பூத்தவண்ணமாகவே இருப்பதுபோல் இருத்தல் வேண்டுமென்றும், அவ்விதமிருப்பான் நிலையாகிய இன்பத்தையடைவதற்கு ஏது ஆவானென்றும், அதுவே அறிவுடைமை என்றும் அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஒருவன் அறிவுடையனாவானாயின் அவனறிவிற்குத் தக்கவனாக உலகத்து ஒழுகுதல் வேண்டுமோ? அன்றி உலகம் எவ்விதம் ஒழுகுகின்றதோ அவ்விதம ஒழுகுதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

426. எவ்வ துறைவ துலக முலகத்தோ
டவ்வ துறைவ தறிவு.

(பரி.) இ-ள். உலகம் எவ்வது உறைவது=உலகம் யாதொருவாற்றா லொழுகுவதாயிற்று,—உலகத்தோடு அவ்வது உறைவது அறிவு=அவ்வுலகத்தோடு மேவித் தானும் அவ்வாற்றானொழுகுவது அரசனுக்கறிவு. எ-று.

* "கோட்டுப் பூப்போல மலர்ந்து பிற்கூம்பாது
வேட்டதே வேட்டதா நட்பாட்சி—தோட்ட
கயப்பூப்போன் முன்மலர்ந்து பிற்கூம்புவாரை
நயப்பாரு நட்பாரு மில்" (நாலடியார், நட்பாராய்தல்.)

உலகத்தையெல்லாம் யானியமித்தலான் என்னை நியமிப்பாரில்லையெனக் கருதித் தானினைத்தவாறே ஒழுகிற் பாவமும் பழியுமாமாகலான், அவ்வாறொழுகுதல் அறிவன்றென விலக்கியவாறாயிற்று. இவையைந்து பாட்டாலும் அதனிலக்கணங் கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—ஒருவனுக்கு அறிவு என்று சொல்லப்படுவது உலகத்திலுள்ளார் எவ்விதம் உலகத்தைப் பொருந்தி நடந்து கொண்டிருக்கின்றார்களோ அவ்விதம் நடந்து கொள்ளுதல் என்பதாம், அதை விட்டுத் தன் அறிவின் மிகுதியால் தான் எதைச் செய்யினும் கேட்பாரில்லை என்று தான் எண்ணியவாறே செய்வானாயின் பாவமும் பழியும் உண்டாகுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், உலகம் பண்டைக்காலம் முதல் நடந்துவந்த செயலிலேயே தானும் நடக்கவேண்டுமென்றும், அவ்விதம் நடப்பது நீதியையும் அறத்தையும் தக்க புகழையும் புண்ணியத்தையும் உண்டாக்கும் என்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித அறிவுடையார் தங்களுக்கு வரும் நன்மை தீமைகளை முன்னமே அறிந்து கொள்ளுவர் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

427. அறிவுடையா ராவ தறிவா ரறிவிலா
ரஃதறி கல்லா தவர்.

(பரி.) இ-ள். அறிவுடையார் ஆவது அறிவார் = அறிவுடையாராவார் வரக்கடவதனை முன்னறியவல்லார்;— அறிவிலார் அஃது அறிகல்லாதவர் = அறிவிலாராவார் அதனை முன்னறியமாட்டாதார். எ - று.

முன்னறிதல் = முன்னேயெண்ணியறிதல். அஃதறிகல்லாமையாவது வந்துழியறிதல். இனி ஆவதறிவாரென்பதற்குத் தமக்கு நன்மையறிவாரென் றுரைப்பாரு முளர். (௭)

விளக்கம்:—நீங்கள் மேல் வினவிய வினாவிற்கு இத்திருக்குறள் விடையாகவுள்ளது. அதாவது அறிவுடையவரென்பவர் தமக்குவரக் கடவனவாயுள்ள நன்மை தீமைகளை முன்னமேயறிய வல்லரென் றும், அறிவில்லாதவர்கள் அவ்வித வரக்கடவனவாகிய விஷயங்களை யறிந்துகொள்ளமாட்டாதவர்கள் என்றும் இத்திருக்குறள் கூறுகின்

று. ஆதலால், அறிவுடையொருவன் முன்னமே ஒவ்வொன்றையும் எண்ணி எண்ணி அறிந்துகொள்ளுவானென்றும், அறிவில்லாத ஒருவன் வந்த பிறகு அறிந்து அதனாலாகின்ற பயன்களை யடைவானென்றும் அறிந்து கொள்ளுகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் முன்னமே அறிந்துகொள்ளும் அறிவுடைமை ஒருவனுக்கு இருக்குமாயினும் உலகத்தார் அஞ்சுதல் அஞ்சாமை எவை என்றும் அறிதல் வேண்டுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

428. அஞ்சுவ தஞ்சாமை பேதைமை யஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்.

(பரி.) இ-ள். அஞ்சுவது அஞ்சாமை பேதைமை = அஞ்சப்படுவதனை அஞ்சாமை பேதைமையாம்;—அஞ்சுவது அஞ்சல் அறிவார்தொழில் = அவ்வஞ்சப்படுவதனை அஞ்சுதல் அறிவார் தொழிலாம். எ-று.

பாவமும் பழியுங் கேடும் முதலாக அஞ்சப்படுவன பலவாயினும், சாதிபற்றி 'அஞ்சுவது' என்றார். அஞ்சாமை = எண்ணாது செய்துநிற்றல். அஞ்சுதல் = எண்ணித் தவிர்தல். அது காரியமன்றென்று இகழப்படாதென்பார் 'அறிவார்தொழில்' என்றார். அஞ்சாமை இறைமாட்சியாகச் சொல்லப்பட்டமையின், ஈண்டஞ்சவேண்டுமிடம் கூறியவாறு. இவை யிரண்டுபாட்டானும் அதனையுடையாரிலக்கணம் கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—அறிவுடையொருவனது தொழில் அஞ்சவேண்டுவதற்கு அஞ்சுவதென்றும், அஞ்சக்கூடாததற்கு அஞ்சாது இருத்தல் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? பயப்படவேண்டுவதற்கு ஒருவன் பயப்படாது தன்னுடைய தகுதியை அதிகமாக மதித்துத் தீக்காரியங்களைச் செய்வானாயின் அவை நிறைவேறாது போவதுடன் பாவத்தையும் பழியையும் ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும் என்றும், அஞ்சவேண்டுவதற்கு அஞ்சிச் செய்வானாயின் உலகத்தாரால் இகழப்படாது புகழ்கொண்டு எடுத்த காரியங்களை

முடிப்பானென்றும், அவனே அறிவுடையவனென்றும் இதனால் அறிந்தோம். இவ்வதிகாரத்தினுள் கூறுகின்ற விஷயங்கள் அரசனுக்கே சிறப்பாகக் கூறினும் பொதுவாகவே யாவர்க்கும் உரியனவாதலால் இவ்வறிவுடைமை யாவர்க்கும் கூறுவது என்பதையும் அறிந்



தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பின்னர் வருவதை எண்ணி முன்னதாகவே தெரிந்துகொள்ளும் மாட்சிமையுடையார்க்கு உலகத்து எவ்வித நன்மையுண்டாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

429. எதிரதாக் காக்கு மறிவினார்க் கில்லை
அதிர வருவதோர் நோய்.

(ப-ரை.) இ-ள். 'எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு = வரக்கடவதாகிய வதனை முன்னறிந்து காக்கவல்ல அறிவினையுடையார்க்கு — அதிர வருவது ஓர் நோய் இல்லை = அவர் நடுங்க வருவதொரு துன்பமுமில்லை. எ-று.

நோயென வருகின்றமையின், வாளா 'எதிரது' என்றார். இதனாற் காக்கவல்லாரது நலம் உணர்த்தப் பட்டது. காத்தல் = அதன் காரணத்தை விலக்குதல். அவர்க்குத் துன்பமின்மை இதனாற் கூறப்பட்டது. (௯)

விளக்கம்:—எவனொருவன் தனக்கு வரவேண்டியதாகிய நன்மை தீமைகளை முன்னமே அறிந்து காத்துக்கொள்ளும் வல்லமையுடையவனாக இருக்கின்றானோ அவ்வித அறிவினையுடையவனுக்கு அவன் நடுங்கி பயப்படும்படியாகிய துன்பமொன்றும் வருவதில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், முன்னமே எண்ணிச் செய்கின்ற ஒருவனுக்கு வருகின்ற துன்பங்களை விலக்கக் கூடிய காலமுண்டாகின்றதாதலால் அதையும் விலக்கிக்கொள்ளக் கூடிய தகுதியுடையவனாகின்றானென்றும், அத்தகுதியால் அவனுக்கு யாதொரு தீமையும் வருதற்கு இடம் இல்லை என்றும் உணர்கின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித அறிவுடையார்க்கு உலகத்து எவ்வித தகுதியுண்டாகும்?" என்று கேட்டலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

430. அறிவுடையா ரெல்லா முடையா ரறிவிலா

ரென் னுடைய ரே னு மிலர்.

(பரி.) இ-ள். அறிவுடையார் எல்லாம் . டையார் = அறிவுடையார் பிறிதொன்று மிலராயினும் எல்லாமுடையராவர். அறிவிலார் என் உடையரேனும் இலர் = அறிவிலாதார் எல்லாமுடையாராயினும் ஒன்றுமிலராவர்.

8



செல்வங்களெல்லாம் அறிவாற்படைக்கவும் காக்கவும்படுதலின், அஃதுடையாரை, 'எல்லாமுடையார்' என்றும், அவையெல்லாம் முன்னே யமைந்து கிடப்பினும் அழியாமற் காத்தற்குந் தெய்வத்தானழிந்துழிப் படைத்தற்குங் கருவியுடையரன்மையின் அஃதில்லாதாரை 'என்னுடைய ரேனுமிலர்' என்றுங் கூறினர். என்னுமென்புழி உம்மை விகாரத்தாற் றொக்கது. இதனான் அவரதுடைமையும் எளியாரதின்மையும் கூறப் பட்டன. (௰)

விளக்கம்:— அறிவுடையவர்கள் யாதொரு பொருளுமில்லாத வறிஞராக விருப்பினும் தம்முடைய அறிவுடைமையால் எல்லாப் பொருளையும் உடையவர் ஆவரென்றும், அறிவில்லாதார் எல்லாப் பொருளையும் உடையவராயினும் ஒன்றுமில்லாதவராகவே இருப்பரென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனின்? உலகத்து மக்களால் படைக்கப்பட்டும் காக்கப்பட்டும் உள்ள செல்வங்களெல்லாம் அறிவுடைமையால் வருகின்றனவாதலால் எத்துணை வறிஞராயினும் அறிவுடையோர் செல்வரென்றும், எவ்வளவு செல்வங்களிருக்கினும் அவற்றைக்காக்கும் அறிவில்லாதார் அழிந்துவிடுவர் என்றும் கண்டோம். ஆகவே, உலகத்து அறிவுடைமை என்பது மிகச் சிறந்த கருவியும் அரணும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித அறிவுடையார் குணங்கொண்டு குற்றம் ஒழிப்பர் என்று முன்னே கேட்டோம். அக்குற்றங்கள் யாவை என்றும், அவற்றைக் கடிய வேண்டுவது எவ்விதமென்றும் அறிய ஆசைப்படுகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 44. அதிகாரம்.

---

(பரி.) அஃதாவது காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம், மானம், உவகை, மதமெனப்பட்ட குற்றங்களாறினையும் அரசன் தன்கணிகழாமற் கடிதல். இவற்றை வடநூலார் பகைவர்க்கமென்ப. இவை குற்றமென்றறிதலும் கடிதலும் அறிவுடையார்க்கல்லது கூடாமையின், அதன்பின் வைக்கப்பட்டது.



விளக்கம்:—அதாவது, காமம் என்னுங் குற்றமும், கோபம் என்னுங் குற்றமும், லோபம் என்னுங் குற்றமும், மானம் என்னுங் குற்றமும், மகிழ்ச்சி என்னுங் குற்றமும், செருக்கு என்னுங் குற்றமும் ஆகிய குற்றங்கள் ஆறினையும் ஒருவன் தன்னிடத்தே உண்டாகாதபடி ஒழித்தல். இவ்வாறினையும் வடநூலார் பகைவர்க்கம் என்று சொல்லுவார்கள். குற்றங்களாகிய ஆறினையும் குற்றங்களென்றறிதலும் அவற்றை யொழித்தலும் அறிவுடையவர்களுக்கே கூடுமன்றி அறிவுடையவரல்லாதவர்களுக்குக் கூடாமையால், இவ்வதிகாரம் அறிவுடைமை என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வைக்கப்பட்டுள்ளது என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அறிவுடைமையுடைய ஒருவன் குற்றங்களைக் கடிதலே முதன்மை என்று அறிந்தோம். இனிக் கடிய வேண்டுவனவாகிய குற்றங்களையும் கூறல் வேண்டும்" என்னவும், ஆசிரியர் கூறலாயினர்.

431. செருக்குஞ் சினமுஞ் சிறுமையு மில்லார்
பெருக்கம் பெருமித நீர்த்து.

(பரி.) இ-ள். செருக்கும் சினமும் சிறுமையும் இல்லார் பெருக்கம் = மதமும் வெகுளியும் காமமுமாகிய குற்றங்களில்லாத அரசரது செல்வம் - பெருமித நீர்த்து = மேம்பாட்டு நீர்மையினையுடைத்து. எ-று.

மதம் = செல்வக் களிப்பு. சிறியோர் செயலாகலின், அளவிறந்த காமஞ் சிறுமை யெனப்பட்டது. இவை நீங்கியவன செய்வித்தலான், இவற்றைக்

கடிந்தார் செல்வம் நல்வழிப்பாயும் நிலைபெறுமுடைமையின், மதிப்புடைத்தென்பதாம். மிகுதிபற்றி இவை மூன்றும் கூறப்பட்டன. (க)

விளக்கம்:—செல்வச் செருக்கும், அளவிறந்த கோபமும், சிற்றறிவோர்க்குரியதாகிய காமமும் ஆகிய மூன்று குற்றங்களும் இல்லாத அரசருடைய செல்வமானது நல்வழி யடைவதும் நிலைபேறுடையதும் ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், செல்வச் செருக்கால் பிறரை மதியாது நிற்பின் அவனடைந்த செல்வமானது நிலைபெற்று ஓங்கி வளருமென்றும், சினத்தையொரு பொருளாகக் கொண்டு நிற்கின்றவன் அழிந்து போவது திண்ணமாதலால், அவ்விதம் அழிதற்குக் காரணமாகிய



சினத்தை யொருவன் தனது செல்வச் செருக்கால் மேற்கொண்டு பிறரைத் துன்புறுத்துவானாயின் அதனால் செல்வத்திற்குக் கேடு வருமென்றும், அச்சினத்தை அறவே ஒழித்துவிடின் செல்வம் நீடித்து நிற்குமென்றும், தன் காதலியல்லாத ஏனைய மாதர்களிடத்துக் காமந்துய்க்க எண்ணி அளவிறந்த காமத்தை யொருவன் கொள்ளுவானாயின் அதனால் செல்வத்திற்குக் கேடு வருமேயன்றி நன்மை வாராதாதலால் அவ்வித சிறுமையைத் தரும் காமத்தினை யொருவன் கடிவானாயின் அவனுக்குச் செல்வமானது மேன்மேல் வளருமென்றும் கண்டோம் என்றனர். அன்றியும், இக்குற்றங்கள் மூன்றும ஏனைய மூன்று குற்றங்களினும் மிகுதிபற்றி நிற்பனவாதலால் இம்மூன்றினையும் முதற்றிருக்குறளிலேயே கூறினர். இதனால், தீயவல்லனவாகிய குற்றங்களைக் கடிந்தார் செல்வமானது நல்வழிப் படுமென்றும, நிலைநிற்குமென்றும், நல்லோரால் மதிக்கப்படுமென்றும் கண்டோம என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மூன்று குற்றங்களின் இயல்பினை யறிந்தோம். இனி ஏனைய வற்றையும் கூறல் வேண்டும்" என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்.

432. இவறலு மாண்பிறந்த மானமு மாணா
வுவகையு மேத மிறைக்கு.

(பரி.) இ-ள். இவறலும் - செல்வழிப் பொருள்கொடாமையும் - மாண்பு இறந்த மானமும் - நன்மையின் நீங்கிய மானமும், — மாணா உவகையும் — அளவிறந்த உவகையும் — இறைக்கு ஏதம் = அரசனுக்குக் குற்றம், எ - று.

மாட்சியான மானத்து நீக்குதற்கு 'மாண்பிறந்த மானம்' என்றார். அஃதாவது " அந்தணர் சான்றோர் அருந்தவத்தோர் தம்முன்னோர், தந்தை தாயென்றிவரை "* வணங்காமையும், முடிக்கப்படாதாயினும் கருதியது முடித்தே விடுதலும் முதலாயின. அளவிறந்த உவகையாவது கழிகண்ணோட்டம். பிறருஞ் சினனே காமங் கழிகண்ணோட்டமென்றிவற்றைப் புறந் தெரிதினிர்க்கு வழியடையாகுந் தீதென்றார். † இவ்விரண்டு பாட்டானும் குற்றங்களாவன இவை யென்பது கூறப்பட்டது. (உ)

* புறப்பொருள் வெண்பாமாலை, படாண்படலம், 88.
† பதிற்றுப்பத்து, 22.



விளக்கம் :—கொடுக்கவேண்டிய இடத்துப் பொருள் கொடாது உலோபஞ் செய்தலும், வணங்க வேண்டிய இடத்து வணங்குவதற்கு மனங் கொள்ளாது பெருமிதங்கொண்டு இருத்தலும், அளவிற்கடங்காத மகிழ்ச்சிகொள்ளுதலும் அரசனுக்குக் குற்றம் ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. என்னெனின்? அறத்தின் வழியாகச் செலவிடவேண்டிய காலத்தும் பொருளின் மீது உள்ள பற்றுதலால் பொருளைக் கொடாதிருப்பானாயின் அப்பொருள் மேன்மேல் அளவற்ற தீய வழிகளில் சென்று செலவிடப்பட்டு ஒழிந்து போகுமாதலால் உலோபத்தன்மை குற்றங் கடியப்படவேண்டுமென்றும், வணங்கவேண்டியவராகிய துறவிகள், சால்பிற்கே தகுதியுடையோர், அருமையாகிய தவத்தைச் செய்பவர், தம முன்னோர், தாய், தந்தை என்ற இருமுதுகுரவர் ஆகிய இவர்களை எத்துணைப் பெரியனாயினும் வணங்கியே ஆதல் வேண்டுமே யன்றிச் செல்வச் செருக்கால் வணங்காது நிற்பானாயின் அப்பெரியோரது கோபத்திற்கும் சாபத்திற்கும் பாத்திரனாகி இருமையையும் இழக்க நேருமாதலால் வணங்கவேண்டியோர்களை வணங்க வேண்டுமென்றும், பின்னர் அளவிறந்த மகிழ்ச்சியானது நன்மை

தீமை அறியாது அறிவைக் கெடுத்துத் தீய வழியில் புகவிடுமாத லால் அதனை முற்றும் ஒழித்தல் வேண்டும் என்றும் கண்டோம். இவ்வளவிறந்த மகிழ்ச்சியானது பெரியோர்கள் குற்றமாக முடியு மென்பதை விராடபுரத்து அரசன் செயலால் காணுதல் கூடும். அது என்னையோவெனின்? பேடியாகவிருந்த அருச்சுனன் விரா டன் மகனாகிய உத்தரகுமாரன் என்னும் இளைய புதல்வனை ஸா ரதிகளைக் கொண்டு யுத்தகளத்துச் சென்ற காலத்து அங்கு உள்ள துரியனது சைன்னியங்களாகிய வீரர்களையெல்லாம் கண்ட உத்தர குமாரன் மிகுதியும் நடுங்கி ஓடோடினனாதலால், அதனைக் கண்ட அருச்சுனன் அவனுக்குவேண்டிய உறுதிமொழிகளைக் கூறி அவ னைத் தனக்குச் சாரதியாக அமைத்துக்கொண்டு, துரியன் சைன்னி யங்களையெல்லாம் வென்று, பிடித்துச் சென்ற மாடுகளையெல்லாந் திருப்பிக்கொண்டு ஜெயசீலனாக வந்ததைக் கண்ட ஏவலாளர்கள் விராடனிடத்துச் சென்று கூறவும், கேட்டவனாகிய விராடன் தன் மகன் உத்தர குமாரன் சைன்னியங்களை வென்று ஜெயத்தை யடைந்து வருகின்றான் என்று எண்ணி மிகுதியும் அளவிறந்த



உவகைகொண்ட காலத்து அவனோடு இருந்த கங்கபட்டர் என்னுந் தருமர், ஜெயமானது உத்தர குமாரனால் வந்திருத்தல் ஆகாது உடன் சென்ற பேடியினால் கிடைத்திருத்தல்கூடும் என்னவும், விராடன் மிகுதியும் கோபங்கொண்டு அரசன் மகனாகிய உத்தரன் அடையாத ஜெயத்தைப் பேடி யொருவனோ யுத்தஞ்செய்து அடைந்து இருப்பன், இது மதியின்மையாகும் என்று கூறித் தன் கையிலிருந்த பாச்சிகை என்னும் கருவியால் நெற்றியில் இடித்தா னென்றும், அதனால் கங்கபட்டனென்னுந் தருமனுக்கு உதிரம் பெருகிற்றென்றும், இவையெல்லாங்கண்ட அருச்சுனன் முதலிய தம்பியர்கள் விராடனுக்கு ஊறு செய்ய எண்ணினர்களென்றும், பிறகு தருமனது கட்டளையால் கோபந்தணிந்தார்களென்றும், விராடன் தன் அளவிறந்த மகிழ்ச்சி என்னும் குற்றத்திற்காக வருந்தித் தருமனைப் பொறுக்க வேண்டுமென்று கேட்டுக்கொண்டா

னென்றும் பாரதக் கதையிற் பார்க்கக்காணலாம். ஆதலால், குற்றங்கள் ஆறும் இவை என்று இரண்டு திருக்குறள்களாலும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "குற்றங்கடிய வேண்டுமென்பது அறிந்ததோர் விஷயமேயாகும். ஆயின் ஏதேனும் ஒரு சிறு குற்றம் ஒருவனிடத்து வந்து விடுமாயின் அதனை நல்லறிவுடையோர் எவ்விதம் கொள்வர்?" என்று கேட்டலும், ஆசிரியர் கூறலாயினர்.

433. தினைத்துணையாங் குற்றம் வரினும் பனைத்துணை
கொள்வர் பழிநாணு வார். [யாக்

(பரி.) இ-ள் பழி நாணுவார் = பழியை அஞ்சுவார் — தினைத்துணையாம் குற்றம் வரினும் பனைத்துணையாக் கொள்வர் = தங்கட்டினையளவாம் குற்றம் வந்தாயினும் அதனை அவ்வளவாகவன்றிப் பனையளவாகக் கொள்வர். எ-று.

குற்றம் — சாதிப்பெயர். தமக்கேலாமையிற் சிறிதென்றிகழாது பெரிதாகக் கொண்டு வருந்திப் பின்னும் அது வாராமற் காப்பரென்பதாம். (௩)

விளக்கம் :— உலகத்துப் புகழினை விரும்பிப் பழிக்கு அஞ்சுகின்ற பெரியோர் தம்மிடத்தே தினையென்று சொல்லும் தானியத்தின் சிறிய அளவினையுடைய ஓர் சிறிய குற்றம் வந்தாயினும்,



வந்ததாகிய அச்சிறிய குற்றத்தை அச்சிறிய அளவாகவே கொள்ளாது மிகப் பெரியதோர் குற்றமாகக்கொண்டு அதற்காக மிகுதியும் வருந்தி, வருந்தியதோடு நில்லாது பின்னரும் அவ்வித சிறியதோர் குற்றமும் தம்மிடத்தே வாராவண்ணம் காத்துக்கொள்வர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், சிறியதோர் குற்றத்தையும் பழிக்கு அஞ்சுகின்றவர்கள் செய்யவிரும்பார் என்பது பொருளாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் குற்றத்தைக் காவாவிடின் அதனால் என்னகேடு சேரும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

434. குற்றமே காக்க பொருளாகக் குற்றமே

அற்றந் தரூஉம் பகை.

(பரி.) இ-ள். அற்றம் தரூஉம் பகை குற்றமே = தனக்கிறுதி பயக்கும் பகை குற்றமே,—குற்றமே பொருளாகக் காக்க = ஆகலான், அக்குற்றம் தன்கண் வாராமையே பயனாகக்கொண்டு காக்கவேண்டும். எ-று.

இவைபற்றியல்லது பகைவர் அற்றந்தாராமையின் இவையே பகையாவனவென்னும் உடனாவார் மதம் பற்றிக் 'குற்றமேயற்றந் தரூஉம் பகை' என்றும், இவற்றின்மையே குணங்களுண்மையாகக் கொண்டென்பார் 'பொருளாக' என்றுங் கூறினார். குற்றமே காக்கவென்பது "அரும்பண்பினாற் றீமைகாக்க" என்பதுபோல நின்றது. (௪)

விளக்கம் :—ஒருவனுக்கு இறுதியினை யுண்டுபண்ணும் பகையென்பது குற்றமேயாகுமென்றும், ஆதலால் அவ்வித இறுதியை உண்டுபண்ணும் குற்றத்தைத் தன்னிடத்தே வாராவண்ணம் செய்தல் வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், குற்றத்தைச் செய்யுங் காலத்துப் பகைவர் பழி கூறித் தம் பகையைத் தீர்த்துக் கொள்ளுவதற்குக் குற்றமுடையானை யொழிக்க முயல்வர் என்றும், அவ்விதம் பகைவர் பழிப்பில் அகப்பட்டு உலகோர் நம்புமிதம் செய்யாது தன்னுடைய குணங்களால் அக்குற்றங்களைக் கடியவேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இக்குற்றங் கடிவதற்கு ஒருவன் எது செய்தல் வேண்டும்? அதை எக்காலத்துச் செய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



435. வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை யெரிமுன்னர்
வைத்தூறு போலக் கெடும்.

(பரி.) இ-ள். வருமுன்னர்க் காவாதான் வாழ்க்கை = குற்றம் வரக்கடவதாகின்ற முற்காலத்திலே அதனைக் காவாத அரசன் வாழ்க்கை,—எரிமுன்னர் வைத்தூறுபோலக் கெடும் = அது வந்தால் எரிமுகத்து நின்ற வைக்குவை போல அழிந்துவிடும். எ-று.

குற்றமென்பது அதிகாரத்தான் வந்தது. முன்னரென்றதனிற்றது

பகுதிப்பொருள் விகுதி. வருமென்னும் பெயரெச்சம் முன்னரென்னுங் காலப்பெயர் கொண்டது; அதனாற் காக்கலாங் காலம் பெறப்பட்டது. குற்றஞ் சிறிதாயினும் அதனாற் பெரியசெல்வம் அழிந்தேவிடுமென்பது உவமையாற் பெற்றாம். (ரு)

விளக்கம்:—அரசனொருவன் தன்னிடத்தே குற்றம் வருவதாகக் காண்பானாயின் அதற்கு முன்னமே வாரா வண்ணம் அக்குற்றத்தைக் காத்துக் கொள்ளல் வேண்டுமென்றும், அவ்விதம் காத்துக் கொள்ளாவிடில் குற்றம் தன்னிடத்து வந்தபோது தீயினிடத்தே அகப்பட்ட வைக்கோல் கட்டுமானது எவ்விதம் அழிந்து போகுமோ அவ்விதம் அவனுடைய வாழ்க்கையானது அழிந்து போகுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், சிறியதோர் குற்றத்தால் ஒருவனுடைய பெரியதோர் செல்வமானது அழிந்துவிடுமென்பதற்குச் சிறிய நெருப்பாயினும் பெரியதோர் வைக்கோல் போரினையும் அழிக்கும் என்று உவமை காண்பித்ததாயிற்று. ஆதலால், வருமுன்னமே குற்றத்தைக் காப்போன் வாழ்க்கை எவ்வளவு சிறியதாயினும் வளர்ந்து மேன்மையடையுமென்றும், அவ்விதம் காவாதவனது வாழ்வானது எவ்வளவு மேன்மையுடையதாயினும் அழிந்தே போய்விடுமென்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரசன் ஒருவன் தன்னிடத்தேயுள்ள குற்றத்தை மாத்திரம் நீக்கமுயலுதல் வேண்டுமோ? அன்றி, ஏனையோர் குற்றத்தையும் நீக்க முயலல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

436. தன்குற்ற நீக்கிப் பிறர்குற்றங் காண்கிற்பி
னென்குற்ற மாகு மிறைக்கு.

(பரி.) இ-ள். தன்குற்றம் நீக்கிப் பிறர் குற்றம் காண்கிற்பின் = முன்னர்த்தன் குற்றத்தைக் கண்டு கடிந்து பின்னைப் பிறர் குற்றங் காணவல்ல



னாயின்,— இறைக்கு ஆகும் குற்றம் என் - அரசனுக்கு ஆகக்கடவ குற்றம் யாது! எ-று.

அரசனுக்குத் தன்குற்றங் கடியாவழியே பிறர்குற்றங் கடிதல் குற்ற

மாவது கடிந்தவழி முறைசெய்தலாமென்பார், 'என்குற்றமாகும்' என்றார்: எனவே, தன்குற்றங் கடிந்தவனே முறைசெய்தற் குரியவனென்பதாயிற்று. இவை நான்குபாட்டானும் அக்குற்றங் கடிதற்பாடு பொதுவகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப. (௬)

விளக்கம் :— அரசனொருவன் தன் குற்றத்தை இது என்று முன்னர் தெரிந்து அக்குற்றத்தை யொழித்து அதன் பிறகு தன் கீழ்ப்பட்ட மற்றவர்களது குற்றங்கள் இவை என்று காண வல்லமை யுடையவனா யிருப்பானாயின், அவ்வித அரசனுக்கு உண்டாகக் கூடிய குற்றம் எது உள்ளது என்று இத்திருக்குறள் வினவுகின்றது. இதனால், அரசன் முதலில் தன் குற்றத்தைத் தொலைத்துவிட வேண்டுமென்றும், தொலைத்த அளவே தன் கீழ்ப்பட்ட மற்றவர்கள் குற்றத்தைக்கண்டு அவர்களை குற்றஞ் செய்யாவண்ணம் தண்டித்து அரசனது முறைமையைச் செய்தல் வேண்டுமென்றும், அவ்வித அரசனே ஆளுகைக்கு உரியவனென்றும் கண்டோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர்: "குற்றங்கள் இவை என்றும், அவை செய்யாது ஒழியாவனைத்து உடையதுணம் இதுவென்றும், அதனால் அரசனது செங்கோன்மையும் அறிந்தோம். ஆகவே குற்றஞ்செய்யாதவனது செல்வம் வளருமென்று கண்டோம். அவ்விதம் குற்றத்தைக் காவாதவனது செல்வம் எதுவாகுமென்று சிறப்புவகையாற் கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

437. செயற்பால செய்யா திவறியான் செல்வ
முயற்பால தன்றிக் கெடும்.

(பரி.) இ-ள். செயற்பால செய்யாது இவறியான் செல்வம்=பொருளாற்றனக்குச் செய்துகொள்ளப்படுமவற்றைச் செய்துகொள்ளாது அதன்கட் பற்றுள்ளஞ் செய்தானது செல்வம்—உயற்பாலதன்றிக் கெடும்=பின் உளதாம் பான்மைத்தன்றி வறிதே கெடும். எ-று.

செயற்பாலவாவன:—அறம் பொருளின்பங்கள். பொருளாற் பொருள் செய்தலாவது:—பெருக்குதல்; அது "பொன்னினாகும் பொருபடை யப்





படை, தன்னி னாகுந் தரணி தரணியிற், பின்னை யாகும் பெரும்பொரு ளப்பொருள், துன்னுங் காலைத் துன்னாதன வில்லையே"* என்பதனானறிக.

அறஞ்செய்யாமையாலும் பொருள்பெருக்காமையாலும் 'உயற்பாலதன்றி' என்றும், இன்பப் பயன் கொள்ளாமையிற் 'கெடும்' என்றும் கூறினர். உயற்பாலதின்றியென்று பாடமோதுவாருமுளர். (எ)

விளக்கம்:—ஒருவன் தனக்கு உள்ள பொருள்களைக் கொண்டு தனக்காகச் செய்துகொள்ள வேண்டுவனவற்றைச் செய்யாதிருப்பதுடன் அப்பொருளின்மீது ஆசைகொண்டு லோபத்தனமாயிருப்பானாயின் அவ்வித லோபியினுடைய செல்வம் உள்ளதுபோல் காணப்பட்டுப் பின் ஒன்றற்கும் பயன்படாது அழிந்து போகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஒருவன் தனக்குச் செய்துகொள்ள வேண்டுவன அறம் பொருள் இன்பங்களாகும். பொருளைக் கொண்டு நல்லன செய்தல், பிறர்க்கு உதவுதல் முதலிய அறங்களையும், பொருளைக் கொண்டு பொருள் பெருக்குதல் ஆகிய பொருள் செயல்வகைகளையும் செய்யாதிருப்பதுடன் அப்பொருளாலாகிய இன்பப் பயனையும் லோபியொருவன் அடையாது விடுகின்றானாதலால், அவ்வித பொருள் அவனுக்கு உதவுதலுமின்றிப் பிறர்க்கும் பயன்படாது சிறிது சிறிதாகத் தேய்ந்துபோம் என்பது பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "மேற்கூறிய குற்றம் ஆறனுள் பெரியனவற்றை எடுத்துக் கூறல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

438. பற்றுள்ள மென்னு மிவறன்மை யெற்றுள்ளு
மெண்ணப் படுவதொன் றன்று.

(பரி.) இ-ள். பற்றுள்ளம் என்னும் இவறன்மை=பொருளை விடத்தகுமிடத்து விடாது பற்றுதலைச் செய்யுமுள்ளமாகிய உலோபத்தினது தன்மை—எற்றுள்ளும் எண்ணப்படுவது ஒன்று அன்று=குற்றத்தன்மைகளெல்லாவற்றுள்ளும் வைத்தெண்ணப்படுவதொன்றன்று; மிக்கது. எ-று.

இவறலது தன்மையாவது:—குணங்களெல்லாம் ஒருங்குளவாயினும் அவற்றைக் கீழ்ப்படுத்துத் தான் மேற்படவல்லவியல்பு. ஒழித்தன அது மாட்டாமையின், 'எற்றுள்ளுமெண்ணப்படுவ தொன்றன்று' என்றார்.

* சிவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம், 35.

வேற்றன்றுமென்பது இடைக்குறைந்து நின்றது. இவையிரண்டு பாட்டா லும் உலோபத்தின் தீமை கூறப்பட்டது. (அ)

விளக்கம் :—ஒருவன் தன்னுடைய பொருளைச் செலவழிக்க வேண்டிய இடத்தைச் செலவழியாது அதனிடத்தே ஆசையை வைக்கும் லோபகுணத்தினது இயற்கையானது ஏனைய குற்றங்கள் எல்லாவற்றினுள்ளும் ஒன்றாக வைத்து எண்ணப்படுவது அல்லாத வாறு, அக்குற்றங்கள் எல்லாவற்றினும் லோபம் என்னும் ஒரு குற்றமே மிகக் கொடியதாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? இந்த லோபமானது ஒருவனுக்கு உள்ள நற்குணங்கள் எல்லாவற்றையும் கீழ்ப்படியும்படி செய்து தான் மேற்பட்டு நிற்கின்ற தீமையாகிய குற்றமாகையாலும், ஏனைய குற்றங்கள் அவ்வித கொடுமையுடையனவல்ல வாகையாலும், இவ்வுலோபமென்னும் குற்றமே குற்றங்கள் எல்லாவற்றினும் பெரிய குற்றம் என்றறிந் தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், “இன்னும் இது நீங்க லாகிய குற்றங்களுள் கொடியனவற்றை விளக்கல் வேண்டும்” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

439. வியவற்க வெஞ்ஞான்றுந் தன்னை நயவற்க
நன்றி பயவா வினை.

(பரி.) இ-ள். எஞ்ஞான்றும் தன்னை வியவற்க—தான் இறப்ப வுயர்ந்த ஞான்றும் மதத்தால் தன்னை நன்குமதியாதொழிக ;—நன்றி பயவா வினை நயவற்க—தனக்கு நன்மை பயவா வினைகளை மனத்தால் விரும்பாதொழிக. எ-று.

தன்னை வியக்குழி இடமும் காலமும் வலியும் அறியப்படாமை யானும், அறனும் பொருளும் இகழப்படுதலானும், 'எஞ்ஞான்றும் வியவற்க' வென்றும், கருதியது முடித்தே விடுவலென்று அறம்பொருளின்பங்கள் பயவாவினைகளை நயப்பின் அவற்றாற் பாவமும் பழியும் கேடும் வருமாக லின், அவற்றை 'நயவற்க' வென்றுங் கூறினார். இதனான் மதமானங்களின் தீமை கூறப்பட்டது. (க)

விளக்கம் :—ஒருவன் செல்வத்தினாலே மிகுதியும் உயர்வா கிய நிலைமை அடைந்த காலத்திலும் தன்னை அதிகமாக எண்ணிக் கொள்ளுதல் கூடாதென்றும், தனக்கு நன்மைதராத செயல்களை

மானக்குறி விரும்பாது ஒழித்தல்வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? ஒருவன் தனக்குள்ள செல்வத்தை அதிகமாகக் கருதித் தன்னினும் மேம்பட்டாரில்லையாதலால் தன்னை வெல்வாரில்லை என்று எண்ணுவானாயின், பிறரது செல்வத்தையோ அவர்களிருக்கின்ற வெல்லக்கூடாத இடத்தையோ காலத்தையோ அவர்களுடைய வலிமையினையோ அறிவதற்கு அறிவைச் செலுத்தாது இராமைக்கு இடமாமென்றாம், அதனால் தன்னை அதிகமாக மதித்தலாலுண்டாகிய குற்றம் அவனுக்கு மிகுதியும் தீமைசெய்வது ஆகுமென்றும், மேலும், தன்னுலாகாத காரியமொன்றினை முடிப்பது தனக்குக் கூடாததாகவிருக்கும் தன்னுடைய மானம் என்னும் பெருமை மிகுதியால் அறம் பொருள் இன்பங்கள் மூன்றினையும் உண்டாக்காத தீச்செயல்களையேனும் செய்து முடிப்பேனென்று தொடங்குவானாயின், அதனால் இவனுக்குப் பாவமும் பழியும் கேடுமே வருமேயன்றி நன்மைவாராதாதலால் அம்மானம் என்பதையும் விரும்புதல் கூடாதென்றும் இதனால் கூறியதாயிற்று. ஆகவே, குற்றங்களுள் மதம் என்னுங் குற்றத்தைப்பற்றியும், மானம் என்னுங் குற்றத்தைப்பற்றியும் பிரித்துக் கூறியதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணக்கர்கள், "குற்றங்களுள் பெரியனவென்று எண்ணும் லோபம் மதம் மானம் என்னும் மூன்றனையும் அறிந்தோம். ஆயின், எல்லாவற்றிலும் மிகப் பெரியது என்னும் காமம் என்பதைப்பற்றி யறிய விரும்புகின்றோமாதலால், அதனையும் விளக்கல்வேண்டும்" என்னவும், ஆசிரியர் கூறலாயினர்.

440. காதல காத லறியாமை யுய்க்கிற்பி
னேதில வேதிலார் நூல்.

(பரி.) இ-ள். காதல காதல் அறியாமை உய்க்கிற்பின் = தான் காதலித்த பொருள்களை அவர் அக்காதலறியாமல் அநுபவிக்கவல்லனாயின்,— ஏதிலார் நூல் ஏதில = பகைவர் தன்னை வஞ்சித்தற்கென்னுமெண்ணம் பழுதாம். எ-று.

அறிந்தவழி அவை வாயிலாகப் புகுந்து வஞ்சிப்பாராகலின், அறியாம

மென்றும் கூறியதாயிற்று. ஏனெனின்? மிகப் பெரிய தகுதி வாய்க் தானாகிய அரசன் ஒருவன் காம நுகர்ச்சியின் பொருட்டுப் பரத்தையர் முதலியோர் இல்லத்திற்குச் செல்லுங்காலத்து யாதொரு காவலுமில்லாது தனித்துச் செல்லவேண்டுபவனுமிருக்கின்றான் ஆதலால், அவ்வாறு செல்லுங்காலத்து இவனது பகைவர் இவனை ஒதுக்கிடத்தே யிருந்து வஞ்சமாக அழிக்க நேருமாதலால், ஒருவரும் அறியாவண்ணம் காம நுகர்ச்சி நுகர்வானாயின், அதனால் கேடுவாராதென்று ஒழிக்கக்கூடாத காம இன்பத்திற்குப் புறனடை கூறியதாயிற்று என்றனர். அதுகேட்டமாணாக்கர், "மேற்கூறிய அளவாகவே குற்றங்கள் ஆறினையும் பொதுவாகவும் சிறப்பாகவும் அறிந்தனம்.



இவ்விதம் குற்றங்களைக் கடிவதற்கு மக்கள் ஓர் துணைகொண்டாலன்றி முடியாதன்றோ? ஆதலால், எவ்வித துணையைக் கொள்ளுதல் வேண்டும் என்பதைப்பற்றியும் அறிய ஆசைகொள்ளுகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 45 அதிகாரம்.

## பெரியாரைத் துணைக்கோடல்.

---

(பரி.) அஃதாவது மேலிருகுற்றமும் முறைமையிற் கடிதலிற் காவற் சாகாடுகைத்தற் குரியனாய அரசன் தீநெறிவிலக்கி நன்னெறிச் செலுத்தும் பேரறிவுடையாரைத் தனக்குத் துணையாகக்கோடல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும். பேரறிவுடையராவார் அரசர்க்கும் அங்கங்கட்கும் மானுடத் தெய்வக் குற்றங்கள் வாராமற் காத்தற்குரிய அமைச்சர், புரோகிதர்.

விளக்கம் :—அதாவது, அரசுரிமையைச் சரியாக முறைப்பட நடத்தவேண்டிய வொருவன் தீமையாகிய வழிகளை விலக்கித் தன்னை நன்னெறியில் செலுத்தும மேற்கூறிய ஆறு குற்றங்களையும் கடிந்த பெரியோரைத் துணைக் கொள்ளுதல் வேண்டும் என்பதே. அவ்விதங் கொள்ளுவானாயின் தானும் ஆறு குற்றங்களையுங் கடிந்து அரசின் முறைமையைச் சரியாக நடத்துதல்கூடும் என்பதால், பெரி

பாரைத் துணைக்கோடல் என்னும் இவ்வதிகாரம் குற்றங்கடிதல் என்பதன் பின் வைக்கப்பட்டுள்ளது. இதில் பெரியாராவார் அரசர்க்கும் அவனுடைய அங்கங்களாகிய படை முதலியவர்களுக்கும் யாதொரு துன்பமும் வாராவண்ணம் காப்பதற்குத் தக்கவராகிய அமைச்சர், புரோகிதர் என்பவர் ஆவர். இதனால் நீங்கள் மேல் வினவியபடி இன்ன தகுதியுடையோரைக் குற்றங்கடிதற்குத் துணைக்கொள்ளல் வேண்டும் என்பது பெற்றேம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "பெரியாரெனின் அமைச்சர் புரோகிதர் என்றீர். இவ்வமைச்சரும் புரோகிதரும் எவ்வித தகுதியால் பெரியராயினர். முன்னர் நீத்தார் பெருமையின்கண் செயற்கரிய செய்வார் பெரியார் என்று அறிந்தோம். இவர் செயற்கரிய செய்கின்ற



பெரியரோ? அன்றி எவ்விதத்தால் பெரியர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

441. அறனறிந்து மூத்த வறிவுடையார் கேண்மை
திறனறிந்து தேர்ந்து கொளல்.

(பரி.) இ-ள். அறன் அறிந்து மூத்த அறிவுடையார் கேண்மை= அறத்தினது நுண்மையையறிந்து தன்னின் மூத்த அறிவுடையாரது கேண்மையை—தேர்ந்து திறன் அறிந்து கொளல்=அரசன் அதனது அருமையை யோர்த்து, கொள்ளுந் திறமறிந்து கொள்க. எ-று.

அறநுண்மை நூலானேயன்றி உய்த்துணர்வானும் அறியவேண்டுதலின், 'அறனறிந்து' என்றார். மூத்தல்=அறிவானும், சீலத்தானும், காலத்தானும் முதிர்தல். அறிவுடையார்-நீதியையும் உலகியலையுமறிதலையுடையார். திறனறிதலாவது:-நன்குமதித்தல், உயரச்செய்தல், அவர்வழிநிற்றலென்பன முதலாக அவர் பிணிப்புண்ணுந் திறனறிந்து செய்தல். (க)

விளக்கம்:—அறம் என்னும் பகுதியின் நுட்பத்தையெல்லாம் அறிவதில் அரசன் தன்னைக் காட்டிலும் மிகுதியும் முதிர்ந்த அறிவுடையவர்களது சிநேகத்தை அவ்வறிவின் அருமையினை யுணர்ந்து கொள்ளுதல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அறத்தினது நுட்பம் அறத்திற்கூறும் நூல்களில் அறிவது

மாத்திரமல்லாமல் ஒருவன் நுணுகி நுணுகி உய்த்து உணர்தல் வேண்டுமாதலால் அவ்வித உணர்வினையுடையார் பெரியரென்றும், அதுவன்றியும் இயற்கையறிவாலும், ஒழுக்கத்தாலும், வயதாலும், முதிர்ந்திருத்தல் முதிர்ச்சியுடைமை யென்றும், உலகத்து நிகழ வேண்டிய நீதிகளையும் இயற்கைகளையும் அறிகின்றவர் அறிவுடையாரென்றும் அறிகின்றோமாதலால், இப்பெரியார் நீத்தாராகக் கூறிய பெரியோர் போன்ற மனத்தையடக்கும் பெரியரல்லராயினும் உலகியல் கடத்தும் பெரியராக வுள்ளாரென்றும், அவ்வித பெரியாரை அவர் திறனறிந்து அவரை நன்குமதித்து அவர்க்கு வேண்டுவனயாவும் செய்து அவர்க்குத் தன்னிடத்தே அன்பு சேரும்படிச்செய்து துணையாக்கிக் கொள்ளுதல்வேண்டும் என்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித அறிவுடையோர் அரசனுக்கு எவ்வித நன்மையை யுண்டுபண்ணுவர் என்பதையும் கூறல்வேண்டும்" என்றனர், ஆசிரியர் கூறலாயினர்.



442. உற்றநோய் நீக்கி யுறாஅமை முற்காக்கும்
பெற்றியார்ப் பேணிக் கொளல்.

(பரி.) இ-ள். உற்ற நோய் நீக்கி=தெய்வத்தாலும் மக்களாலும் தனக்குவந்த துன்பங்களை நீக்குமாறறிந்து நீக்கி—உறாமை முற்காக்கும் பெற்றியார்=பின் அப்பெற்றியன வாராவண்ணம் முன்னறிந்து காக்க வல்ல தன்மையினை யுடையாரை -பேணிக்கொளல்—அரசன் அவர் உவப்பன செய்து துணையாகக்கொள்க, எ-று.

தெய்வத்தான் வருந் துன்பங்களாவன:—மழையினின்மை மிகுதிகளாலும், சாற்றுத் தீப் பிணியென்றிவற்றாலும் வருவன. அவை தெய்வங்களையுந் தக்கோரையும் நோக்கிச்செய்யுஞ் சாந்திகளானீக்கப்படும். மக்களான்வருந் துன்பங்களாவன:—பகைவர், கள்வர், சுற்றத்தார், வினைசெய்வாரென்றிவர்களான வருவன. அவை சாம பேத தான தண்டங்களாகிய நால்வகையுபாயத்தான் மாற்றநீக்கப்படும். முற்காத்தலாவது:—தெய்வத்தான் வருவனவற்றை உற்பாதங்களானறிந்து, அச்சாந்திகளாற் காத்தலும்; மக்களான் வருவனவற்றை அவர் குணம். இங்கிதம், ஆகாரம், செயலென்பனவற்றானறிந்து அவ்வுபாயங்களுளொன்றாற் காத்தலுமாம்: ஆகவே, புரோகிதரையும் அமைச்சரையுங் கூறியவாறாயிற்று. இங்கிதம்=குறிப்பானிகழும் உறுப்பின்றொழில். ஆகாரம்=குறிப்பின்றி நிகழும் வேறுபாடு.

டைப்பனை என்றுமித்தன் முதலியன. இவையிரண்டுபாட்டானும் பெரியாரிலக்கணமும், அவரைத் துணையாகக் கோடல் வேண்டுமென்பதூஉம், சொல்லுமாறு கூறப்பட்டன. (உ)

விளக்கம் :—தெய்வத்தாலாகிலும் மக்களாலாகிலும் தனக்கு வந்தனவாகிய துன்பங்களையெல்லாம் நீக்கும்விதம் அறிந்துநீக்கியும், அவ்வித துன்பங்கள் பின்னர் வாராதவிதமாக முன்னரே அறிந்தும் காக்கின்ற வல்லமையாகிய தன்மையினையுடையவரை அரசன் தெரிந்து அவர்க்கு அவர் உவக்கின்ற விஷயங்களையெல்லாம்செய்து அவரைத் தனக்குத் துணையாகக் கொள்ளல்வேண்டும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மழை இல்லாமை, அதிகமாக மழை பெய்தல், காற்றடித்தல், தீப்பிடித்தல், நோய் வருதல் என்று கூறுகின்ற தெய்வத்தால் வரக்கூடிய துன்பங்களைக் கடவுளை நோக்கியும், தருக்தவாகிய முனிவர் முதலியோரைக்கொண்டு பூசைகளாலும் சாந்திகளாலும் செய்யவல்ல புரோகிதரையும், பகை



வர்களாலேயும், கள்வர்களாலேயும், பக்தர்களாலேயும், ஏவலாளர்களாலேயும் வரும் குற்றங்களைச் சாம பேத தான தண்டமென்கின்ற நான்கு விதமாகிய வுபாயங்களுள் எந்தெந்த குற்றத்தை எந்தெந்த உபாயத்தால் நீக்கல்வேண்டுமோ அவ்விதம் நீக்குகின்ற அமைச்சரையும் துணையோராகக் கொள்ளுதல்வேண்டும் என்று அறிந்தோம். இப்பெரியார் தெய்வத்தால் வருவனவற்றிற்கு முற்குறியாக அறிந்து சாந்தி செய்தல் என்றும், மக்களால் வருவதற்கு அம் மக்களது குணம், தயப்பு, ஆசாரம், செய்கை என்கின்ற நான்கனுள் அவரவர்க்கு ஏற்றனகொண்டு அவர்களால் துன்பம் வாராமல் காத்தல் என்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், “மேற்கூறிய இரண்டு திருக்குறள்களாலும் பெரியாரது தன்மையும், பெரியாரையரசன் துணையாகக்கொள்ளுதல் முக்கியமென்றும், அவ்வித பெரியாரைத் துணையாகக் கொள்ளுங்காலத்து அவர்க்கு வேண்டுவனவெல்லாம் செய்து கொள்ளுதல் வேண்டும் என்றும் அறிந்தோம். ஆயின், அவ்வித பெரியாரை அரசன் துணையாகக் கொள்ளுவானாயின், அரசன் அடைக்க பேறுகள் எல்லாவற்றினும் சிறந்தது ஆகுமோ?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

443. அரியவற்று ளெல்லா மரிதே பெரியாரைப்
பேணித் தமராக் கொளல்.

(பரி.) இ-ள். பெரியாரைப் பேணித் தமராக் கொளல்=அப்பெரியவர்களை அவர் உவப்பனவறிந்து செய்து தமக்குச் சிறந்தாராகக் கொள்ளுதல்—அரியவற்றுள் எல்லாம் அரிது=அரசர்க்கு அரிய பேறுகளெல்லாவற்றுள்ளும் அரிது. எ-று.

உலகத்தரியனவெல்லாம் பெறுதற்குரிய அரசர்க்கு இப்பேறு சிறந்ததென்றது, இதனால் அவையெல்லாம் உளவாதலான். (௩)

விளக்கம்:—அவ்வித பெரியவர்களை அவர்கள் எவற்றில் சந்தோஷிக்கின்றார்களோ அவற்றை யறிந்து அவர்களுக்குத் தக்க விதமாகச் செய்து தமக்குச் சிறந்ததுணையாகக் கொள்ளுதல் அரசனானவர்க்கு அடையக்கூடிய அருமையாகிய பேறுகளெல்லாவற்றுள்ளும் அருமையாகிய பேறாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், உலகத்தில் ஒருவன் அடையக்கூடிய பேறுகள்





எல்லாவற்றுள்ளும் சிறந்த பேறுகளை அடைய வேண்டுமாயின், அவையெல்லாம அடைவித்தற்கு உரியவராகிய பெரியாரைத் துணைக்கொள்ளுதல் வேண்டும் என்பது பெறும் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "பெரியாரைத் துணைக் கொள்ளின் அதைக் காட்டிலும வேறு துணை வேண்டுவதில்லையோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

444. தம்மிற் பெரியார் தமரா வொழுகுதல்
வன்மையு ளெல்லாந் தலை.

(பரி.) இ-ள். தம்மிற் பெரியார் தமரா ஒழுகுதல்=அறிவு முதலியவற்றால் தம்மின் மிக்கார் தமக்குச் சிறந்தாராகத் தாம் அவர்வழி நின்றொழுகுதல்—வன்மையுள் எல்லாம் தலை=அரசர்க்கு எல்லாவலியுடைமையினுந்தலை. எ-று.

பொருள், படை, அரண்களாகிய வலியினும் இத்துணைவலி சிறந்த

தென்றது, இவர் அவற்றானீக்கப்படாத தெய்வத்துன்ப முதலியனவும் நீக்குதற்கு உரியராகலின். (ச)

விளக்கம்:—மேற்கூறிய அறிவு முதலியவைகளால் தன்னைக் காட்டிலும் மிகுந்தாராகிய பெரியார் தமக்குச் சிறந்த துணைவராக இருக்க, அரசர் தாம் அப்பெரியாரது வழியில் நின்றொழுகுதல், அரசராயினோர் அடைய வேண்டிய வலிமைகள் எல்லாவற்றினும் சிறந்ததாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனின்? அரசனுக்கு உலகத்தைப் பொருளும், படையும், அரணும் அவன் ஆளுகைக்கு வலிமையுடையனவேயாயினும் அவைகளால் நீக்குதற்குக் கூடாத தெய்வத்தாலுண்டாகுந் துன்பம் முதலாயினவற்றை நீக்குதற்கு இவரே தகுதியுடையவர்களாக விருத்தலால், இப்பெரியாரது துணைவலியே சிறந்த வலியாயிற்று என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விரண்டு திருக்குறளால் புரோகிதராகிய பெரியாரது துணை வன்மை இவையென அறிந்தோம். இனி, அமைச்சரது துணையால் வருவதையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



**445.** சூழ்வார்கண் ணாக வொழுகலான் மன்னவன்
சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்.

(பரி.) இ-ள். சூழ்வார் கண்ணாக ஒழுகலான்=தன்பாரம் அமைச்சரைக் கண்ணாகக்கொண்டு நடத்தலான்,-மன்னவன் சூழ்வாரைச் சூழ்ந்து கொளல்=அரசன் அத்தன்மையராய அமைச்சரை ஆராய்ந்து தனக்குத் துணையாகக் கொள்க. எ-று.

இரண்டாவது விகாரகாரகத்தது. தானே சூழவல்லனாயினும் அளவிறந்த தொழில்களான் ஆகுலமெய்து மரசன்பாரம் அதுவே தொழிலாய அமைச்சரா னல்லது இனிது நடவாமைபற்றி, அவரைக் கண்ணாகக் கூறினர். ஆராய்தல் = அமைச்சியலுட் சொல்லப்படும் இலக்கணத்தினரென்பதனை யாராய்தல். இவை மூன்று பாட்டானும் பெரியாரைத் துணைக்கோடலின் சிறப்புக் கூறப்பட்டது. (ரு)

விளக்கம்:—அரசனானவன் தன்னுடைய ஆளுகையாகிய

பாரத்தினை யமைச்சரையே நன்னூலவைத்து அவருதவியால் நடத்த வேண்டியுள்ளதால், அவ்வரசன் அவ்வித கண்போன்ற தகுதியுடையாராகிய அமைச்சர்களை யாராய்ந்தறிந்து தனக்குத் துணையாகக் கொள்ளுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? அரசன் தானே எதையும் ஆராய்ந்து செய்ய வல்லவனாக இருந்தாலும், அவனிடாத தொழில்களினால் வருத்தமெய்தி எதிலேனும் சிறிது குறைவுபடுமாதலால், அவ்வித அரசனது பெரிய பாரத்தினைத் தாங்குகின்ற தொழிலையுடைய அமைச்சர்களைத் துணையாகக் கொண்டால் அன்றி அரசானது மக்கள் சந்தோஷிக்கும்படி நடவாது என்றும், அதை நடத்துகின்ற அமைச்சர்களைக் கண்போலக் கொண்டு அரசன் தன் முறையினை நடத்த வேண்டுமென்றும் சொற்றேம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், “இவ்வித பெரியாரைத் துணையாகக் கொள்பவனுக்கு வேறு வலிமை வேண்டுவதில்லை என்று கூறியதால், இவ்வித வலியுடையானை உலகத்து ஒருவரும் வெல்லுதல் கூடாது போலும்!” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

446. தக்கா ரினத்தனாய்த் தானொழுக வல்லானைச்
செற்றார் செயக்கிடந்த தில்.

(பரி.) இ-ள். *தக்கார் இனத்தனாய்த் தான் ஒழுக வல்லானை=தக்காராகிய இனத்தை யுடையனாய்த் தானுமறிந்தொழுக வல்லவரசனை—செற்றார் செயக்கிடந்தது இல்=பகைவர் செய்யக்கிடந்ததொரு துன்பமுமில்லை.*



*தக்கார்=அறவொழுக்கங்களாற் றகுதியுடையார். ஒழுகுதல்=அறிவிரிகளின் நெறிவழுவாமனடத்தல். வஞ்சித்தல், குடிகளைப்பிரித்தல், வேறு பகை விளைத்தலென்றிவற்றானும், வலியானும், பகைவர் செய்யுந் துன்பங்கள் பல நிறைத்தவாயினும், தானுமறிந்து அறிவார் சொல்லுங் கொண்டொழுகுவான்கண் அவற்றுளொன்றும் வாராதென்பார், ‘செற்றார் செயக்கிடந்ததில்’ என்றார்.* (௬)

விளக்கம்:—எவனொருவன் மேற்கூறிய இலக்கணங்களெல்லாம் அமைந்த தகுதியுடைய பெரியாரைத் தனக்கு இனம் என்று கருதி அவர் கூறுவன எவையோ அவைகளைத் தானும் உய்த்து

உணர்ந்து அவற்றின் வழி நடக்கவல்லானே, அவ்வித அரசனுக்கு அவனது பகைவர்கள் யாதொரு துன்பமும் செய்வதற்கு இல்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. எனெனின்? அறிவு ஒழுக்கங்களில் தகுதியுடையராய் உள்ளார்கள் அறம் நீதி என்பன இரண்டினுள்ளும் சிறந்தமை குற்றமடையா வண்ணம் போதிப்பாராதலால், அவ்வித தகுதியுடையாரைத் தன்னுடைய இனத்தவரென்று கருதி ஏற்றுக்கொள்ளுவதுடன் அவர் கூறுகின்றனவற்றையும் தானும் ஆராய்ந்து செய்வானாயின், அவனை வெல்லுபவர் உலகத்தில் இல்லை என்று அறிகின்றோம். அன்றியும், பகைவர்கள் தன்பால் பகை விளைக்குங் காலத்தில் தன்னை வஞ்சிக்க எண்ணுதலும், தன்னுடைய கட்டினைப் பிரித்து விடுதலும், வேறு இன்னுஞ்சில பகைவர்களை யுண்டாக்கி விடுதலும் ஆகிய காரியங்களைச் செய்வது பகைவர்க்கு இயல்பாதலால், அவ்வித பலதிறப்பட்ட துன்பங்களை யெல்லாம் தானுமறிந்து அறிந்தவர்கள் சொல்லுகின்ற சொற்களையுங் கொண்டு நடக்க எண்ணுவானாயின், அவ்வித அரசனுக்கு அவனது பகைவர் செய்யக்கூடிய துன்பம் ஒன்றுமில்லை என்பது பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் அரசன் தன்னொழுக்கத்தைச் சிறிதும் தவறு வண்ணம் நடக்கப் புத்திகூறுபவரைத் துணையாகப் பெற்றால், அவனைக் கெடுப்பார் ஒருவருமில்லை போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

447. இடிக்குந் துணையாரை யாள்வாரை யாரே
கெடுக்குந் தகைமை யவர்.

(பரி.) இ-ள். இடிக்கும் துணையாரை ஆள்வாரை = தீயன கண்டால் நெருக்கிச் சொல்லும் துணையாந்தன்மையுடையாரை இவர் நமக்குச்



சிறந்தாரென்று ஆள்வாரை—கெடுக்கும் தகைமையவர் யார் = கெடுக்கும் பெருமையுடைய பகைவர் உலகத்தியாவர்? எ-று.

தீயன = பாவங்களும் நீதியல்லனவும். துணையாந் தன்மையாவது:— தமக்கு அவாவின்மையும் அரசன்கண் அன்புடைமையுமாம். அத்தன்மையுடையார் நெறியின்நீங்க விடாமையின், அவரையாளுமரசர் ஒருவராலும்

கெடுக்கப்படாரென்பதாம். செருக்கிச் சொல்லுமவையிலேயவையென் றுரைப் பாருமுளர். இவையிரண்டு பாட்டானும் அதன் பயன் கூறப்பட்டது. (எ)

விளக்கம் :- அரசன் ஒருவனிடத்துப் பாவத்தையும் நீதியல்ல வற்றையும் உண்டாக்கும் ஏதேனும் தீய விஷயங்களைக் காண்கின்ற காலத்து, அவனை நெருங்கிச் சென்று அவனிடத்தேயுள்ள குற்றங் களைச் சொல்லக்கூடிய துணைவராக இருக்கும் தகுதியுடையாரை, 'இவர்தாம் நமக்குச் சிறந்த துணைவர்' என்று கொண்டு, உலகத் தையாளும் தகுதியுடைய அரசனாகிய அவனைக் கெடுக்கக்கூடிய பெருமையுடைய பகைவர்கள் இவ்வுலகத்திலில்லை என்று இத் திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அரசனுக்குத் துணையாக வருந் தகுதியுடையார் பாவத்தையும் பழியையும் விளைக்கும் தீய காரியங்களை அரசன் செய்யப்புகுந்தால், அவனுக்குச் சிறிதும் அஞ் சாது அவனை நெருங்கி புத்தி கூறவேண்டுமென்றும், அவ்விதம் புத்திகூறுபவர் துணையாக நிற்பதால் அவ்வித அரசனைக் கெடுப்ப தற்கு உலகத்து ஒருவராலும் முடியாதென்றும் கண்டோம் என்ற னர். அதுகேட்ட மாணாக்கர், "அரசனுக்குப் பகைவர் இருந்தால் தான் இவ்வித துணைவரைக் கொள்ளுதல் வேண்டுமேயன்றி இல் லாத காலத்து எதற்காகக் கொள்ளுதல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

448. இடிப்பாரை யில்லாத வேமரா மன்னன்
கெடுப்பா ரிலானுங் கெடும்.

(பரி.) இ-ள். இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்—கழறுதற்குரி யாரைத் தனக்குத் துணையாகக் கொள்ளாமையின் காவலற்ற அரசன்— கெடுப்பார் இலானும் கெடும்=பகையாய்க் கெடுப்பார் இல்லையாயினும் தானே கெடும். எ-று.



'இல்லாத', 'ஏமரா'வென்பன பெயரெச்சவடுக்கு. கெடுப்பார் உளராய வென்பது தோன்ற, 'இலானும்' என்றார். தானே கெடுதலாவது:—பாக னில்லாத யானைபோல நெறியல்லா நெறிச் சென்று கெடுதல். (அ)

விளக்கம் :—தனக்கு இடித்துப் புத்தி சொல்லக் கூடிய தகுதி

யுடைய பெரியோரைத் துணையாகக் கொள்ளாத அரசன் ஒருவனுக்குப் பகைவராயிருந்து கெடுக்க வல்லவர்கள் இல்லாதிருந்தாலும், அவனே கெட்டுப்போய்விடுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. எனெனின், பாகனில்லாத யானையொன்று வழியென்றும் குழியென்றுமறியாமல் வழியல்லா வழியில் நடந்து குழியில் வீழ்ந்து தன்னைப் பிறர் கையினிடத்தே ஒப்புவிப்பதுபோல, பெரியோர் துணையில்லாத அரசனும் தான் எண்ணுவதே சரி என்று எண்ணித் தகுதியில்லாக் காரியங்களைச் செய்து பாவத்தையும் பழியினையும் ஏற்று உலகோர் பகைகொண்டு கெட்டுப் போதல் திண்ணமாதலால், கெடுப்பாரில்லாவிடினும் தானே கெட்டுப் போவது உண்மையென்று அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "துணையில்லாத அரசனொருவன் தன் அரசுரிமையை நடத்துதற்குக் கூடாது என்பது அறிந்தோம். இதனை ஓர் உவமைவாயிலாக விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

449. முதலிலார்க் கூதிய மில்லை மதலையாஞ்
சார்பிலார்க் கில்லை நிலை.

(பரி.) இ-ள். முதல் இலார்க்கு ஊதியம் இல்லை—முதற்பொருளில்லாத வணிகர்க்கு அதனால் வரும் ஊதியமில்லையாம்;—மதலையாம் சார்பு இலார்க்கு நிலை இல்லை—அதுபோலத் தம்மைத் தாங்குவாரைத் துணையில்லாத அரசர்க்கு அதனான் வரும் நிலையில்லை. எ-று.

முதலைப்பெற்றே இலாபம் பெறவேண்டுமாறுபோலத் தாங்குவாரைப் பெற்றே நிலைபெற வேண்டுமென்பதாம். நிலை—அரசர் பாரத்தோடு சலியாது நிற்றல். (௯)

விளக்கம்:—முதற் பொருள் வைத்துத் தன்னுடைய வர்த்தகத்தைச் செய்யாத வர்த்தகன் ஒருவனுக்கு எவ்வாறு இலாபம் கிடைப்பதில்லையோ, அதுபோலத் தன்னைத் தாங்கிக் கூறவேண்டுவனவற்றைக் கூறி ஒழுகவேண்டிய வழியில் ஒழுகச் செய்யும் பெரி



யோரைத் துணையாகக்கொள்ளாத அரசனுக்கு அவன்தாங்கும் அர

சினை நிலைபாகத்தாங்க முடியாது என்று இக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனின்: வாணிகஞ் செய்வார் தாம்செய்யும் வாணிபத்தின் பொருட்டு வேண்டுவதாகிய முதற் பொருள் தம்முடையதாக இருந்து செய்வாராயின், அதனால் பெரியதோர் இலாபங்கிடைப்பதும், அவ்விதமில்லாது கடன் கொண்டு வர்த்தகத்தைச் செய்யப்புகுந்த காலத்து முதலுக்கு வட்டி கொடுத்தலும் முதலை உடையவன் வேண்டுங் காலத்துக் கொடுத்தலும் வேண்டியிருப்பதால், அவ்வித வர்த்தகம் நெடுங்காலம் நில்லாது என்றும், நிற்கினும் பெரிதும் பயன்தராது என்றும் காண்கின்றோமாதலால், அதுபோல் முதல்போன்ற பெரியாரது துணையைக் கொள்ளாத அரசனும் வழியல்லாவழியில் பொருளைச் செலவழித்தும் படை அரண் முதலியவைகளில் மிகுதியும் குறைவும் நிற்கச்செய்தும் போய்விடுமாதலால், அவ்வித அரசனது அரசு நெடும்பொழுதில்லாது நிலைகுலைந்து போகும் என்று காண்கின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித துணையிலா அரசன் ஒருகாலத்துக் கொண்டு ஏதோ ஊழ்வலியால் விட்டு விடுவானாயின், அதனால் இவ்வரசனுக்கு என்ன கேடும்?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

450. பல்லார் பகைகொளலிற் பத்தடுத்த தீமைத்தே
நல்லார் தொடர்கை விடல்.

(பரி.) இ-ள். பல்லார் பகை கொளலின் பத்து அடுத்த தீமைத்து = தான் தனியனாய்நின்று பலரோடும் பகைகொள்ளுதலிற் பதிற்று மடங்கு தீமையுடைத்து—நல்லார் தொடர் கைவிடல் = அரசன் பெரியாரோடு நட்பினைக் கொள்ளா தொழிதல். எ-று.

பலர் பகையாயக்கால் "மோதி முன்னொடு முட்பகை கண்டிடல்—பேதுசெய்து பிளந்திடல்*" என்பவை பல்லது ஒருங்கு வினையாக்குறித்துச்

---

* "நீதியா லறுத்த நந்நிதி யீட்டுதல்
வாதி யாய வரும்பகை காட்டுதல்
மோதி முன்னொடு முட்பகை கண்டிடல்
பேதுசெய்து பிளந்திடல் பெட்டதே"
(சீவகசிந்தாமணி, விமலையாரிலம்பகம், 32.

செய்தாரும் ஒருவாற்றானுய்தல் கூடும், நல்லார் தொடர்கைவிட்டால் ஒருவாற்றானு முய்தல் கூடாமையின், இது செய்தல் அதனினுந் தீதென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அது செய்யாதவழிப்படுங் குற்றம் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—அரசன் ஒருவன் பெரியாரது சிநேகத்தைக் கைக்கொள்ளாது ஒழிவானானால் அவனுக்குப் பலவித பகைவர்களிடத்தும் பகை கொண்டால் எவ்வளவு தீமைகளுண்டாகுமோ அத்தீமைகளுக்குப் பதின்மடங்கு அதிகமாகிய தீமைகளை யடைதல் நேரும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? அரசன் ஒருவன் தான் தனியனாயிருந்து பலரோடு பகைகொள்வானானால் அப்பகையானது அளவில்லாத் தீமையைத் தருவதாயினும் அத்தீமைகளும் ஒன்றின்பின் ஒன்றாக வருதல் கூடுமேயன்றிப் பெரியோரது நட்பைக் கொள்ளாது விடுவதால், தெய்வத்தால் வரும் குற்றத்தாலும் மக்களால் வருங் குற்றத்தாலும் வருகின்ற தீமைகளைப்போல் ஒரே காலத்து வருதல் கூடாமையாதலால், பெரியாரைக் கைவிடும் தீமை மிகப் பெரியதாகும் என்று கண்டோம். ஆதலால், பலர் பகைகொள்ளும் அரசனும் ஒருகால் பிழைத்தல்கூடும் என்றும், ஆயின், நல்லார் நட்பினைக் கைவிடுபவன் ஒருகாலத்தும் பிழைத்தல் ஆகாதென்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித பெரியாரைத் துணைக்கொண்டு நின்ற அரசன் ஒருவன் தன் இன்பப்பெருக்கிற்காக எளிய சிறியோரையும் துணைக்கொள்ளுதல் ஆகாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 46. அதிகாரம்.

## சிற்றினஞ் சேராமை.

---

(பரி.) அஃதாவது சிறியவினத்தைப்பொருந்தாமை. சிறியவினமாவது:—"நல்லதனலனும் தீயதன்றீமையுமில்லென்போரும்"†, விடரும், தூர்த்தரும், நடரு முள்ளிட்டகுழு. அதனைத்திரித்து இருமையும்

† புறநானூறு, 29.



கெடுக்குமியல்பிற்றாய அதனைப் பொருளிற் பெரியாரைத் துணைக்கோடல் பயனின்றென்ப துணர்த்தற்கு இஃததன்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது சிறிய இனத்தோடு கூடாது இருத்தல். சிறியஇனமாவது நல்லதனுடைய நன்மையினை இல்லையென்று சாதிப்போரும், தீயதனுடைய தீமையினை இல்லையென்று சாதிப்போரும், விடரும், தூர்த்தரும், நடரும் உள்ளிட்ட கூட்டமாம். இவ்விதம் அறிவினை மாறுபடுத்தி இம்மை, மறுமை ஆகிய இரண்டினையும் கெடுக்கும் இயல்பினையுடையதாய அச்சிற்றினத்தினை ஒருவன் கூடுவானாயின் மேல் பெரியாரைத் துணைக் கொண்டு நின்ற பயனை அடைவதற்கில்லை என்பதை உணர்த்துவதற்கே இச்சிற்றினஞ் சேராமை என்னுமதிகாரம் பெரியாரைத் துணைக்கோடல் என்னுமதிகாரத்துக்குப் பின் வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சிற்றினத்தோர் எதற்காக இருமையும் கெடக்கூடிய தகுதியை அடைகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

451. சிற்றின மஞ்சும் பெருமை சிறுமைதான்
சுற்றமாச் சூழ்ந்து விடும்.

(பரி.) இ-ள். பெருமை சிற்றினம் அஞ்சும்=பெரியோரியல்பு சிறிய இனத்தையஞ்சாநிற்கும்;—சிறுமைதான் சுற்றமாச் சூழ்ந்து விடும்=மற்றைச் சிறியோரியல்பு அது சேர்ந்த பொழுதே அதனைத் தனக்குச் சுற்றமாக வெண்ணித் துணியும். எ-று.

தத்தமறிவு திரியுமாறும் அதனாற்றமக்கு வருந்துன்பமும் நோக்கலின்,

அறிவுடையார் அஞ்சுவர்' என்றும், அறிவொற்றுமையாற் பிறிது சேர்க்கையின் அறிவிலாதார் தமக்குச் சுற்றமாகத் துணிவரென்றும் கூறினர். பொருளின்றெழில்கள் பண்பின்மேனின்றன. இதனாற் சிறியவினம் பெரியோர்க்காகாதென்பது கூறப்பட்டது. (௧)

விளக்கம் :—பெரியவர்களது இயற்கையானது சிறிய இனமென்னும் சிற்றறிவுடையாரைக் கூடுதற்கு மிகுதியும் அஞ்சுவதாயிருக்குமென்றும், அவர் நீங்கலாக உள்ள சிறியோரது இயற்கையானது அச்சிற்றினத்தைத் தமக்குத்தக்கக் கூட்டமென்று கருதி





அதைச் சேர்ந்துகொள்ளத் துணிந்துவிடும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆகவே, நன்மையைத் தீமையென்றும், தீமையை நன்மையென்றும், சிற்றின்பம் கருதிக் கூறுகின்ற காமுகர் முதலாகிய சிற்றினத்தாரோடு கூடுவோமாயின் அவ்வினத்திற்கு உரிய அறிவின் தன்மையால் நம்மறிவும் திரிந்து அதனால் இம்மை, மறுமை இரண்டினும் துன்பம் வரும் என்று அறிவார் ஆதலால், அறிவுடையாராகிய பெரியோர் சிற்றினத்தைச் சேர, பயப்படுவரென்றும், ஏனைச் சிற்றினத்தவரோ தம் அறிவும், வந்து சேருகின்ற இனத்தவர் அறிவும் ஒத்து நிற்பதால் அவரைப் பிரியாத் துணைவரென்று கட்டிக்கொள்ளுவர் என்றும் கண்டோம். ஆதலால், அவரவர் அறிவினுக்குத் தக்க அளவாக அவ்வவ் வினங்கள் சேருமென்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சிற்றறிவுடையோர் அவ்வித அறிவுடையோரைக் கூடும் காலத்து அவர் தன்மையர் ஆவர். ஏனைப் பெரியோர் சிற்றறிவினரைச் சேருவராயின் அவர் குணம் திரிவதற்கு எவ்விதம் ஏதுவாகும்? ஆதலால், பெரியோர் எதற்குச் சிற்றினத்தவரோடு சேருதற்கு அஞ்சுகின்றனர்?" என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்.

452. நிலத்தியல்பா னீர்திரிந் தற்றாகு மாந்தர்க்
கினத்தியல்ப தாகு மறிவு.

(பரி.) இ-ள். நிலத்து இயல்பான் நீர்திரிந்து அற்றாகும் = தான் சேர்ந்த நிலத்தினியல்பானேநீர் தன்றன்மை திரிந்து அந்நிலத்தின்றன்

மைத்தாம்;—மாந்தர்க்கு 'இனத்தியல்பு அறிவு (திரிந்து) ஆகும்=அது போல மாந்தர்க்குத் தாஞ்சேர்ந்த இனத்தினியல்பானே அறிவுந் தன் றன்மை திரிந்து அவ்வினத்தின் றன்மைத்தாம். எ-று.

எடுத்துக்காட்டுவமை. விசும்பின்கட்டன்றன்மைத்தாய நீர், நிலத்தோடு சேர்ந்தவழி நிறம் சுவை முதலிய பண்புகள் திரிந்தாற் போலத் தனிநிலைக்கட்டன் றன்மைத்தாயவறிவு, பிறவினத்தோடு சேர்ந்தவழிக் காட்சி முதலிய தொழில்கள் திரியுமென இதனால் அதனது காரணம் கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—நீரானது தான் எந்த நிலத்தினைச் சேருகின்றதோ அந்நிலத்தினது தன்மையினை அடைவதுபோல், மனிதர் தாம் எந்த



இனத்தைச் சேருகின்றனரோ அந்த இனத்தினது தன்மையினை அடைகின்றனர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் ஆகாயத்தினின்றும் இழிந்த காலத்து நீரானது யாதொரு நிறமும், சுவையுமில்லாமல் தன் தன்மையோடு கூடியிருந்தும், நிலத்தே வந்து சேர்ந்த காலத்து எந்த எந்த நிலத்தில் சேருகின்றதோ அந்த அந்த நிலத்தின் குணத்திற்குத் தக்க அளவாக நிறத்தினையும் சுவையினையும் கொள்ளுமாறுபோல, மிகப் பெரியோராயினும் சிற்றினத்தைச் சார்வாராயின் தம் இயல்பாகிய குணம் கெட்டுச் சார்ந்த இனத்தினது குணம் செயல் முதலியவைகளை அடைவார்கள் என்று காண்கின்றோம். ஆதலால், உவர் நிலத்தோடு சேர்ந்த நீர் உவர்ப்புத் தன்மையை அடைவதுபோல், நல்லறிவு கெடா வண்ணம் சிற்றினத்தைச் சேருதல் ஆகாதென்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "சிற்றினத்தவரோடு சேர்ந்தோர் தம்மனம் திரிந்து வேறு படுதல் உண்டென்று அறிந்தோம். அவ்வினத்தவரோடு கூடுவதால் உலகத்தவர் கூடுகின்றவனை என்னென்றுகருதுவர்?" என்று கேட்டதும், ஆசிரியர் கூறுவாராயினர்.

453. மனத்தானா மாந்தர்க் குணர்ச்சி யினத்தானா
மின்னா னெனப்படுஞ் சொல்.

(பரி.) இ-ள். மாந்தர்க்கு உணர்ச்சி மனத்தான் ஆம் - மாந்தர்க்குப் பொதுவுணர்வு தம் மனக்காரணமாகவுண்டாம்;—இன்னான் எனப்படும் சொல் இனத்தான் ஆம் - இவன் இத்தன்மையனென்று உலகத்தாரால் சொல்லப்படும் சொல் இனக்காரணமாகவுண்டாம். எ-று.

இயற்கையாய புலனுணர்வுமாத்திரத்திற்கு இனம் வேண்டாமையின் அதனை 'மனத்தானும்' என்றும், செயற்கையாய விசேடவுணர்வுபற்றி நல்லனென்றுந் தீயனென்றுங் கூறுஞ்சொற்கு இனம் வேண்டுதலின், அதனை 'இனத்தானும்' என்றும் கூறினர். உவமையளவை கொள்ளாது அந்நிலையும் மனத்தானுமென்பாரை நோக்கி இதனான் அது மறுத்துக் கூறப்பட்டது.(௩)

விளக்கம்:—மக்களுக்குப் பொதுவாகிய அறிவு அவரவரது மனதின் காரணமாக உண்டாகுமென்றும், ஆனால் 'இவன் இவ்வித தகுதியுடையான்' என்று உலகத்தாரால் சொல்லப்படும்



சொல்லிற்கு இனம் காரணமாகும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், ஒருவனது அறிவானது பொது சிறப்பு என்று இருவகைப்படுமென்றும், அவ்விதம் இருவகைப்பட்ட அறிவும் நல்வினைப்பயன் உடையது ஆயின் அவனுக்கு நல்ல உணர்வையே உண்டாக்குமென்றும், தீவினைப்பயன் உடையது ஆயின் தீய உணர்வையே உண்டாக்குமென்றும், நல்வினைப்பயனால் நல்ல உணர்வு அடைந்த ஒருவனும், தீய இனத்தவரைச் சேருவான் ஆயின் அவனை உலகோர் தீயனென்றே எண்ணுதற்கு உரியனாவன் என்றும் அறிகின்றோம். ஏனெனில்? அவன் சேர்ந்த இனமே அதற்குக் காரணமாகும். ஆதலால் நல்லறிவுடையான் ஒருவன் தீய இனத்தாரைச் சேர்தல் ஆகாது என்று கூறினர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவனுக்கு இயற்கையாகிய புலன் உணர்வு ஒன்றைக்கொண்டு தானே உலகத்தவர் அவனை மதித்தல்வேண்டும்? அதுவிட்டு அவன் கூடிய இனத்தை நோக்கி அவனை இன்னான் என்று மதித்தல் தகுதியுடையது ஆகுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

454. மனத்துள துபோலக் காட்டி யொருவற்

இனத்துள தாகு மறிவு.

(பரி.) இ-ள். அறிவு=அவ்விசேட வுணர்வு—ஒருவற்கு மனத்தது உளது போலக் காட்டி=ஒருவற்கு மனத்தின்கண்ணே யுளதாவதுபோலத் தன்னைப் புலப்படுத்தி—இனத்தது உளதாகும்=அவன் சேர்ந்த இனத்தின் கண்ணே யுளதாம். எ-று.

மெய்ம்மை நோக்காமுன் மனத்துளதுபோன்று காட்டியும் பின்னோக்கிய வழிப் பயின்றவினத்துளதாயுமிருத்தலின், 'காட்டி'யென இறந்த காலத்தாற் கூறினர். விசேடவுணர்வுதானும் மனத்தின்கண்ணே அன்றே யுளதாவ தென்பாரை நோக்கி, ஆண்டுப் புலப்படுத்தலேயுள்ளது அதற்கு மூலம் இனமென்பது இதனாற் கூறப்பட்டது. (ச)

விளக்கம்:—ஒருவனுக்கு விசேட உணர்வானது அவனது மனத்திலிடத்தே உண்டாவதுபோலக் காணப்பட்டு அவன் எவ்வினத்தைச் சேருகின்றானோ அவ்வினத்துக்குத்தக்க விதமாக



உண்டாகின்றது என்று இத்திருக்குறள் கூறுவதால், உண்மையை ஆராய்ந்து நோக்குங்கால் ஒருவனது அறிவு அவனது இயற்கையாகிய குணம் என்று உணரக்கிடக்கினும், அதை உற்றுநோக்குங்காற் அவ்வறிவானது தன் இயல்பையே உடையதாக இல்லாமல் தான் சேர்ந்த இனத்தின் கூட்டு உறவால் மாறுகின்றது என்று அறியக்கிடக்கின்றது. ஆதலால், பொது உணர்வு, விசேட உணர்வு என்கிற இரண்டினும், பொது உணர்வானது சேருகின்ற இனத்தை நோக்க விசேட உணர்வாகின்றதென்றும், அது சேர்ந்த இனத்திற்குத் தக்க அளவாகத் திரிகின்றதென்றும் அறிகின்றோம். ஆதலால், இனம் காணுமளவும் ஒருவனது உணர்வை இயற்கை உணர்வென்று அறியக்கிடக்கினும், அவன் சேருமினத்தைக் கண்ட பிறகு அவ்வினத்தால் வந்த வுணர்வென்றே மதித்தல்வேண்டும். இதனால் இயல்பாகவே நல்லறிவு உடையரேனும் சிற்றினத்தோடு சேருவாராயின் அவரது தகுதியையே அடைவர் என்று கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித சிற்றினத்

வரைச் சேர்வதால் சேருகின்றவர்க்கு எவ்வித நகுதியின்மை உண்டாகுமென்பதை அறிவித்தல்வேண்டும்" என்னவும், ஆசிரியர் கூறலாராயினர்.

455. மனத்தூய்மை செய்வினை தூய்மை யிரண்டு
மினந்தூய்மை தூவா வரும்.

(பரி.) இ-ள். மனம் தூய்மை செய்வினை தூய்மை இரண்டும் = அவ்விசேட வுணர்வு புலப்படுதற்கிடனாய மனத்தூயனாந்தன்மையும் செய்யும் வினை தூயனாந்தன்மையுமாகிய இரண்டும்; இனம் தூய்மை தூவா வரும் = ஒருவற்கு இனத்தூயனாந்தன்மை பற்றுக்கோடாக உளவாம். எ-று.

மனத்தூயனாதலாவது:—விசேடவுணர்வு புலப்படுமாறு இயற்கையாய அறியாமையினீங்குதல். செய்வினை தூயனாதலாவது:—மொழி மெய்களாற் செய்யும் நல்வினையுடையனாதல். தூவென்பது அப்பொருட்டாதல் "தூவறத் துறந்தாரை"* என்பதனானுமறிக. ஒருவன் இனத்தூயனாகவே அதனோடு பயிற்சி வயத்தான் மனத்தூயனும் அதன்கண் விசேடவுணர்வு புலப்

* கலித்தொகை, நெய்தற்கலி 6.



பட்டு அதனாற் சொல்லுஞ் செயலுந்தூயனுமென, இதனான் இனத்தன்மை யாது கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—ஒருவன் சேருகின்ற இனமானது தூய்மையாத் தன்மையுடைத்தாயின், அது காரணமாக அவனுடைய மனம் தூய்மையாயும் அவன் செய்யும் வினை தூய்மையாயும் ஆகும் என்று இத்திருக்குறள் கூறலதால், ஒருவன் நல்லினத்தையுச் சேர்ந்து நிற்பானாயின் அவனுக்கு இயற்கையாகவே அறியாமை உள்ளதாயின் அவ்வறியாமை நீங்கி, மனத்தூய்மை கொள்வனென்றும், அவ்விதம் மனத்தூய்மை கொள்வதுடன், வாக்கும், மெய்யும், செய்

கின்ற இரண்டு வினைகளும் நல்வினைப் பகுதியுடையனவாய் இருக்குமென்றும், அவ்விதமல்லாது ஒருவனது இயற்கை அறிவு நன்மையுடையதாக இருக்கினும் அவன் சிற்றினத்தைச் சேருவானாயின் இயல்பாகிய நல்லறிவும்கெட்டு, மனத்தூய்மை ஒழிவதுடன் வாக்கும், காயமும், செய்கின்ற வினைகளும் சிற்றினத்தின் பகுதியாகவே இருக்கும். ஆதலால், ஒருவன் சேருகின்ற இனத்திற்குத் தக்க அளவாக விசேடவுணர்வு புலப்படுமே அன்றித்தன் இயற்கையாகிய பொது உணர்வால் ஒன்றும் செய்வதற்கு இல்லையென்று கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், “மனத்தூயார் இவரென்றும், மனத்தூய்மை இல்லாத சிற்றினத்தைச் சேர்ந்தவர் இவரென்றும் எவ்வாறு அறிதல் கூடும்?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

456. மனந்தூயார்க் கெச்சநன் றாகு மினந்தூயார்க்
கில்லைநன் றாகா வினை.

(பரி.) இ-ள். மனம் தூயார்க்கு எச்சம் நன்றாகும்=மனந்தூயாரானார்க்கு மக்கட்பேறு நன்றாகும்;—இனம் தூயார்க்கு நன்று ஆகா வினை இல்லை—இனந்தூயாரானார்க்கு நன்றாகாத வினை யாதுமில்லை. எ-று.

காரியம் காரணத்தின் வேறுபடாமையின் ‘எச்சநன்றாகும்’ என்றும், நல்லினத்தோடெண்ணிச் செய்யப்படுதலின், எல்லாவினையு நல்லவாமென்றுங் கூறினர். (௬)



விளக்கம்:—மனத்தூய்மை உடையார்க்கு நன்மக்களைப் பெறுதல் உண்டாகுமென்றும், மனத்தூய்மை உடையதுடன் நல்லினத்தைச் சேர்வதால் அவர்க்கு முடியாத நல்வினை யாதொன்றுமில்லை என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், எழுபிறப்பும் தீயவை தீண்டாத நன்மக்களை ஒருவன் பெறுவானாயின் அப்பேற்றினைக் கண்ட இவன் மனத்திடத்தே சிறிதும் மாசில்லாத தூய்மை உண்டாமென்றும், அவன் எடுத்த காரியங்களெல்

லமும் சிறிதும் இடையூறு பெறாது முடியும் என்றும், இவன் நல்லி னத்தைச் சேர்ந்த பெரியோன் ஆதலால் இவனுக்கு எதுவும் தகுதி யுடையனவாகும் என்றும் கண்டோம். ஆதலால், இவ்வித நல்லினத் தைச் சேராது சிற்றினத்தைச் சேருவானாயின் மேற்கூறிய நன் மைகளை யெல்லாம் அடைவதற்கில்லாமல் போம் என்றுகூறினர். அதுகேட்ட மாணாக்கர் "மனத்தூயார்க்கும், இனத்தூயார்க்கும் நன்மக்கட்பேறும், நல்வினைமுடிவும் உண்டாகுமென்று கண் டோம். ஆயின், அவ்வித மனத்தூய்மை, இனத்தூய்மை என் பவை இவை, நீங்கலாகப் பிற இம்மைக்கு உரிய செல்வத்தையும் புகழையும் உண்டாக்கக் கூடுமோ?" என்னலும் ஆசிரியர் கூறலானா யினர்.

457. மனநல மன்னுயிர்க் காக்க மினநல
மெல்லாப் புகழுந் தரும்.

(பரி.) இ-ள். மன் உயிர்க்கு மனநலம் ஆக்கம் (தரும்)—நிலைபெற்ற வுயிர்கட்கு மனத்தது நன்மை செல்வத்தைக் கொடுக்கும்;—இனநலம் எல் லாப் புகழும் தரும்—இனத்தது நன்மை அதனோடு எல்லாப் புகழையும் கொடுக்கும். எ-று.

மன்னுயிரென்றது ஈண்டு உயர்திணைமேனின்றது. தருமென்னும் இடவழுவமைதிச்சொல் முன்னுங் கூட்டப்பட்டது. உம்மை இறந்தது தழீஇ ய எச்சவும்மை. மனநன்றாதலுளே அறமாகலின், அதனை 'ஆக்கந் தரும்' என்றும், புகழ்கொடுத்தற்குரிய நல்லோர்தாமே இனமாகலின், 'இன நலமெல்லாப் புகழுந்தரும்' என்றுங் கூறினார். மேல் மனநன்மை இன நன்மைபற்றி வருமென்பதனை உட்கொண்டு அஃதியல்பாகவேயுடையார்க்கு அவ்வின நன்மை வேண்டாவென்பாரை நோக்கி, அதுவேயன்றி அத்தன்



மைய பயன்றனையுந் தருமென அவர்க்கும் அதுவேண்டுமென்பது இவ் விரண்டு பாட்டானுங் கூறப்பட்டது. (எ)

விளக்கம் :—எக்காலத்தும் அழிதலில்லாது நிலைபெற்று நிற் கும் உயிர்களுக்கு மனத்தினுடைய நன்மையானது செல்வத்தைக்

கொடுக்குமென்றும், அம்மக்கள் சேருகின்ற இனத்தது நன்மை அச்செல்வத்தோடு எல்லாப் புகழையும் கொடுக்கும் என்றும் இத் திருக்குறள் கூறுவதால், இவ்வுலக வாழ்க்கையாகிய வழியைக் கடந்து செல்வதற்குத் துணைக்காரணமாகிய பொருளும் மனத் தூய்மை உடையார்க்கே உண்டாகுமென்றும், அவ்விதம் பொருள் என்னும் பொய்யா விளக்கமாகிய செல்வமானது நல்லினத்தைச் சேர்வதால் புகழ் என்னும் ஒளியைத் தருமென்றும் கண்டோம். இனி, இவ்விதம் மனத்தூய்மை, இனத்தூய்மை இல்லார்க்குச் செல்வமும், புகழும் உண்டாகா என்பதும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவன் மனத்தூய்மையுடையனாயின் அது ஒன்றே போதுமானதாக இருக்க, ஏன் இனத்தூய்மையும் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

458. மனநல நன்குடைய ராயினுஞ் சான்றோர்க்
கினநல மேமாப் புடைத்து.

(பரி.) இ-ள். மனநலம் நன்கு உடையராயினும்=மனநன்மையை முன்னை நல்வினையாற்றுமேயுடையராயினும்,—சான்றோர்க்கு இனநலம் ஏமாப்பு உடைத்து=அமைந்தார்க்கு இனநன்மை அதற்கு வலியாதலை யுடைத்து. எ-து.

நன்காவென்னும் மூன்றனுருபு விகாரத்தாற்றொக்கது. அந்நல்வினை புற வழியும் மனநலத்தை வளர்த்து வருதலின், அதற்கேமாப்புடைத்தாயிற்று. (அ)

விளக்கம்:—சான்றோராயினர் மனநன்மையின் முன்னை நல்வினைப் பயனால் தாமே இயல்பாக உடையரா யிருந்தாலும், அவர் நல்லினத்தையும் சாருவாராயின் அவ்வியல்பாக அமைந்த மனநன்மைக்கு வலிமை உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், முன்னை நல்வினைப் பயனால் பெரிதும் இயற்கை

அறிவுடையாராயின், இயற்கையாகவே அமைந்த அக்கல்லறிவும், நல்லினத்தவரோடு இடைவிடாது பழகுதலால் மேலும் மேலும் வளர்ந்து மனம், வாக்குகளாகிய இரண்டினுடைய பயன்களையும் பெறுவதற்கு யோக்கியமாகும் என்று அறிகின்றோம். இதனால் இயற்கை அறிவோடு சிற்றினமொழிந்த நல்லினத்தைச் சேர்வது சான்றோர்க்கு இன்றியமையாதது என்று கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இரண்டு திருக்குறள்களாலும் மனம் தூயார்க்கும், இனம் தூயார்க்கும் உண்டாகும் இம்மைப்பயன் இதுவென்று கண்டோம். இனி, இவற்றால் மறுமைப்பயனும் உண்டாகுமோ என்று அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

459. மனநலத்தி னாகு மறுமைமற் றஃது
மினநலத்தி னேமாப் புடைத்து.

(பரி.) இ-ள். மனநலத்தின் மறுமை ஆகும் = ஒருவற்கு மனநன்மையானே மறுமையின்பமுண்டாம்;—மற்றஃதும் இனநலத்தின் ஏமாப்பு உடைத்து = அதற்கு அச்சிறப்புத்தானும் இனநன்மையான் வலிபெறுதலையுடைத்து. எ-று.

'மனநலத்தினாகு மறுமை' யென்றது மறுமை பயப்பது மனநன்மை தானே பிறிதொன்றன்றென்னும் மதத்தையுடம்பட்டுக் கூறியவாறு. மற்று—வினைமாற்று. உம்மை—இறந்தது தழீஇய எச்சவும்மை. ஒரோவழித் தாமதகுணத்தான் மனநலந்திரியினும் நல்லினம் ஒப்பநிறுத்தி மறுமை பயப்பிக்குமென நிலைபெறச்செய்யுமாறு கூறப்பட்டது. இவை யெட்டுப் பாட்டானுஞ் சிற்றினஞ் சேராமையது சிறப்பு நல்லினஞ்சேர்தலாகிய எதிர்மறைமுகத்தாற் கூறியவாறறிக. (௯)

விளக்கம்:—ஒருவனுக்கு மனத்தூய்மையால் மறுமையென்பது உண்டாவது என்றும், இம்மறுமையின்பமாகிய சிறப்பும் சேருகின்ற இனத்தின் நன்மையால் மிகுதியும் வலிமை பெறுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், ஒருவனது மனத் தூய்மையும் மறுமை இன்பத்தைத் தரக்கூடியதாக இருப்பினும் மாறி மாறி வருகின்ற முக்குண இயல்பால் ஒர்கால் தன்மையழி

யாது தாமத குணத்தின் பாற்பட்டு அவன் மனத்தூய்மை மாறுபடுமென்றாம், ஆனால் அவன் நல்லினத்தைச் சேர்ந்திருப்பானாயின், சேர்ந்த நல்லினம் இவன் மனக்கருத்தைக் கண்டபோது அவனை அவ்வழிச் செலுத்தாது நன்மை போதித்து இயல்பாகவே நற்குணத்தினிடத்தேயே நிறுத்துமாதலால் நல்லினத்தைச் சேர்ந்தவர் தாம் நற்குணம் வாய்ந்த இனத்தவராகு தகுதியால் நன்மையினின்றும் நீங்காது இம்மை, மறுமைகளாகிய இரண்டின் பயனையும் அடைவதற்குத் தகுதியுடையவராவர் என்று கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இதுகாறும் சிற்றினம் சேராமையது சிறப்பினை நல்லினம் சேருதலாகிய எதிர்மறை முகத்தால் விளக்கிக் காட்டக் கண்டோம். இனி முடிந்தது முடித்தலாக நல்வினைத்தால் வரும் பயனும், தீவினைத்தால் வரும் தீமையும் விளக்க வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

460. நல்லினத்தி னூங்குந் துணையில்லை தீயினத்தி
னல்லற் படுப்பதூஉ மில்.

(பரி.) இ-ள். நல்லினத்தின் ஊங்கு துணையும் இல்லை=ஒருவற்கு நல்லினத்தின் மிக்க துணையுமில்லை;—தீயினத்தின் (ஊங்கு) அல்லற்படுப்பதூஉம் இல்=தீயவினத்தின் மிக்க பகையுமில்லை. எ-று.

ஐந்தனுருபுகள் உறழ்பொருளின்கண்வந்தன. ஊங்கென்பது பின்னும் கூட்டி உம்மை மாற்றியுரைக்கப்பட்டது. நல்லினம் அறியாமையினீக்கித் துயருறுமற் காத்தலின், அதனைத் 'துணை' என்றும், தீயினம் அறிவினீக்கித் துயருறுவித்தலின், அதனைப் 'பகை' என்றும் கூறினார். அல்லற்படுப்பதென்பது ஒருபெயர். இதனால் விதியெதிர்மறைகள் உடன் கூறப்பட்டன. (ல)

விளக்கம்:—ஒருவனுக்கு நல்ல இனத்தைச்சேருதலைக் காட்டிலும் பெரியதோர் துணையுமில்லை யென்றும், தீய இனத்தைச் சேருதலைக் காட்டிலும் மிக்கதோர் பகையுமில்லை யென்றும் இத் திருக்குறள் உரைகின்றது. ஆதலால், ஒருவன் நல்ல இனத்தைச் சேருவானாயின் குணவசத்தால் ஒருக்கால் வழி தவறிச் சென்றாலும், அவ்வினத்தவர் வழி தவறிச் செல்லாது இடித்துப் புத்தி



புகட்டி நன்னிலையில் நிறுத்தி இம்மை மறுமைகளாகிய பயன்களை அடையச் செய்வதால், அந்நல்லினத்தவரைக் காட்டிலும் ஒருவன் உயிருக்கு உறுதியாகிய துணையில்லையென்றும், தீய இனத்தைச் சேருபவன் தனது இயற்கையாகிய நல்லறிவும்கெட்டுச் சேர்ந்த இனத்தின் தருதியால், வழி தவறிச் சென்று குழியிலகப்படுகின்ற யானையைப்போல், பலர்க்கும் பகையாகி அடையவிருந்த இம்மை மறுமைப் பயன்களையும் இழக்கின்றான் ஆதலால், நல்லினமல்லாத தீய இனத்தைச் சேருதலைக்காட்டிலும் வேறு பகையில்லை என்றும் கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய பெரியாரைத் துணைக்கோடல், சிற்றினம் சேராமை என்னுமிரண்டும் எதற்காக வேண்டப்படுகின்றது?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 47. அதிகாரம்.
## தெரிந்து செயல்வகை.

---

(பரி.) அஃதாவது அரசன் தான்செய்யும் வினைகளையாராய்ந்து செய்யுந்திறம். அச்செயல் பெரியாரைத் துணைக்கோடல் பயனுடைத்தாயவழி அவரோடுஞ் செய்யப்படுவதாகலின், இது சிற்றினஞ்சேராமையின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது அரசன் ஒருவன் தான் செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்கின்ற வல்லமை. அவ்விதச் செயல் பெரியாரைத் துணைக்கோடல் என்கின்ற பயனுடைமையால் அவரோடும் சேர்ந்து செய்யப்படுதல். ஆதலால் இது சிற்றினஞ் செய்யும் தீமைகளுட் படாது நின்ற வழிச் செய்யவேண்டும் என்று அறிவித்தற்கு இத்தெரிந்து செயல் வகை என்னும் அதிகாரத்தைச் சிற்றினம் சேராமை என்பதற்குப் பிறகு கூறினர். என்றனர். அது கேட்ட மாணாக்கர் வினை, "செய்யுமிடத்து ஆராயும் திறம் எவ்விதமென்பதை விளக்கல் வேண்டும் என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



461. அழிவதூஉ மாவதூஉ மாகி வழிபயக்கு
மூதியமுஞ் சூழ்ந்து செயல்.

(பரி.) இ-ள். அழிவதூஉம்=வினைசெய்யுங்கால் அப்பொழுது அதனை வழிவதனையும்,—ஆவதூஉம்=அழிந்தாற் பின்னுவதனையும்,—ஆகி வழி பயக்கும் ஊதியமும்=ஆய் நின்று பிற்பொழுது தருமூதியத்தையும்,—சூழ்ந்து செயல்=சீர்தூக்கி உறுவதாயிற் செய்க. எ-று.

உறுவதாவது:—நிகழ்வின்கண் அழிவதனில் ஆவது மிக்கு எதிர்வினும் அது வளர்ந்து வருதல். அழிவின்மையின், எதிர்வின்கண் வருமாக்கத்தை 'ஊதியம்' என்றார்: எனவே அவ்வூதியம் பெறின் நிகழ்வின்கண் அழிவதும் ஆவதும் தம்முளொத்தாலும் ஒழிதற்பாற்றன்றென்பது பெற்றும். இரண்டு காலத்தும் பயனுடைமை தெரிந்து செய்கவென்பதாம். (க)

விளக்கம் :—ஒருவன் ஒருவினையைச் செய்யுமிடத்துச் செய்கின்ற காலத்தில் அதனால் எவ்வளவு பொருள் செலவழிக்கப்படுகின்றதென்றும், அவ்வாறு செலவழிக்கப்படுவதால் அவ்வினையினால் பின்னர் சம்பாதிக்கப்படுவது எவ்வளவென்றும் இவ்விதம் வந்ததாகிய பொருள் தரும் ஊதியத்தின் அளவையும் நன்றாக ஆராய்ந்து வினையைச் செய்க என்று இத்திருக்குறள் கூறுவதால், செலவழிப்பதற்குத் தக்க பொருளைக் காட்டிலும் வருகின்ற இலாபமானது அதிகப்பட்டிருக்க வேண்டுமென்றும், அதுவே

ஒருவன் வினை செய்வதால் உண்டாகும் ஊதியமென்றும், அவ்வித வினையைத் தெரிந்து செய்யவேண்டுமென்றும் கண்டோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "எதன் பொருட்டு இவ்வித வினையைச் செய்யுங்காலத்து நல்லினத்தோடு சேருதல் வேண்டும்? செய்பவன் ஒருவனே இருத்தல் அமையாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

462. தெரிந்த வினத்தொடு தேர்ந்தெண்ணிச் செய்
கரும்பொருள் யாதொன்று மில். [வார்க்

(பரி.) இ-ள். தெரிந்த இனத்தோடு தேர்ந்து எண்ணிச் செய்வார்க்கு=தாம் தெரிந்துகொண்ட இனத்துடனே செய்யத்தகும் வினையை ஆராய்ந்து பின் தாமேயுமெண்ணிச் செய்து முடிக்கவல்ல அரசர்க்கு—



அரும்பொருள் யாதொன்றும் இல்=எய்துதற்கரிய பொருள் யாதொன்று மில்லை. எ-று.

ஆராயப்படுவனவெல்லாம் ஆராய்ந்துபோந்த இனமென்றமையாம். 'செய்வார்க்கு' என்றதனால், வினையென்னுஞ் செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. வினையாவது:—மேற்சேறன்முதல் வேறலீறாய தொழில். பொருள் கட்கேதுவாய அதனிற்றவருமையின், அரியபொருள்களெல்லாம் எளிதினெய்துவரென்பதாம். இவையிரண்டுபாட்டானுஞ் செய்யத்தகும் வினையும் அது செய்யுமாறும் கூறப்பட்டன. (உ)

விளக்கம்:—ஒருவன், தான் நல்ல இனமென்று தெரிந்துகொண்ட இனத்துடனே செய்யத்தகும் என்று எண்ணியவினையினை ஆராய்ந்தும், பின்னர்த் தானேயும் எண்ணியும் செய்து முடிக்கவல்ல தகுதி யுடையவனாயின், அவ்வித தகுதியுடையானுக்கு அடையக்கூடாத பொருளில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், ஒருவன் எத்துணை அறிவுடையவனாயினும் தான் எண்ணிய வினையைச் செய்து முடிப்பதின்மேல் தன்னினும் அறிவுடைய புலவரிடத்துக் கூடித்தான் எடுத்த வினையினது தகுதியையும் அதனால்வரும் ஊதியத்தையும் ஆராய்ந்து செய்தல்

வேண்டுமென்றனர். அதுகேட்ட மணாக்கர், "ஒருவன் ஒரு காரியத்தைச் செய்ய, அக்காரியத்தால் ஊதியம் வாராது செலவழித்த பொருள் மாத்திரம் வருமாயின் அவ்வித வினையினையும் செய்தல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

463. ஆக்கங் கருதி முதலிழக்குஞ் செய்வினை
ஊக்கா ரறிவுடை யார்.

(பரி.) இ-ள். ஆக்கம் கருதி முதல் இழக்கும் செய்வினை = மேலெய்தக் கடவ ஊதியத்தினை நோக்கி முன்னெய்தி நின்ற முதறன்னையும் இழத்தற்கேதுவாய செய்வினையை—அறிவுடையார் ஊக்கார் = அறிவுடையார் மேற்கொள்ளார். எ-று.

கருதியென்னும் வினையெச்சம் இழக்குமென்னும் பெயரெச்சவினை கொண்டது. எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. ஆக்கமேயன்றி முதலையுமிழக்கும் வினைகளாவன:—வலியுங் காலமும் இடனுமறியாது பிறர்மண் கொள்வான் சென்று தம்மண்ணுமிழத்தல்போல்வன. முன்செய்து போந்த வினையாயினுமென்பதூஉம், 'செய்வினை' என்றார். (௩)



விளக்கம்:—ஒருவன் ஒரு வினையைச் செய்து பெரியதோர் ஊதியத்தை அடையலாம் என்று எண்ணித் தன்னிடத்திருந்த முதலையும் இழக்கவல்ல செய்தலைத் தொடங்குதல் அறிவுடையார் செயலாகாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அறிவுடையான் ஒருவன் தானே எண்ணியும், நக்கோரிடத்து எண்ணியும் செலவழித்த முதலுடன் ஊதியந்தரும் காரியத்தையே செய்வானென்று பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் தானும் தெளிந்த நல்லினத்தோடும் ஆராய்ந்து செய்யாவழி எது உண்டாகும் என்பதை அறிவிக்க வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

464. தெளிவி லதனைத் தொடங்கா ரிளிவென்னும்
ஏதப்பா டஞ்சு பவர்.

(பரி.) இ-ள். தெளிவு இலதனைத் தொடங்கார் = இனத்தோடும் தனித்தும் ஆராய்ந்து துணிதலில்லாத வினையைத் தொடங்கார் — இளிவு என்னும் ஏதப்பாடு அஞ்சுபவர் = தமக்கு இளிவரவென்னுங் குற்றமுண்டாதலை அஞ்சுவார். எ-று.

தொடங்கின் இடையின் மடங்கலாகாமையின், 'தொடங்கார்' என்றார். இளிவரவு = அவ்வினையாற் பின்னழிவெய்தியவழி அதன் மேலும் அறிவும் மானமுமிலவென்று உலகத்தாரிகழுமிகழ்ச்சி. அஃதுண்டாதல் ஒருதலையாகலின், தெளிவின்வழித் தொடங்குக வென்பதாம். (௪)

விளக்கம்:—ஒருவன் தனித்தும் இனத்தோடு இருந்தும் ஆராய்ந்து துணிதலில்லாத தொழிலைத் தொடங்குவானாயின், அவ்வித தொழிலால் குற்றம்வருமென்றும், அக்குற்றமானது பலரும் இகழுதற்குரிய குற்றமாகுமென்றும் ஆதலால் அறிவுடைய ஒருவன் ஆராயாது காரியத்தைச் செய்வானாயின் இகழ்ச்சியே உண்டாகுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. எனவே, வினை செய்ய எண்ணுகின்ற ஒருவன் அதனால் தான் யாதொரு ஊதியமும் பெறாவிடினும் பகைவரது இகழ்ச்சியைப் பெறாதிருப்பதற்குத் தானும் நல்லினத்தோடு ஆராய்ந்து செய்யவேண்டும் என்பதைக் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தெளியாது



தொடருந் தொழிலால் எதற்குப் பகைவரால் இகழ்ச்சி உண்டாகும்?" என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்.

465. வகையறச் சூழா தெழுதல் பகைவரைப்
பாத்திப் படுப்பதோ ராறு.

(பரி.) இ-ள். வகை அறச் சூழாது எழுதல் = சென்றால் நிகழுந் திறங்களையெல்லாம் முற்றவெண்ணாது சிலவெண்ணிய துணையானே அரசன் பகைவர்மேற் செல்லுதல் — பகைவரைப் பாத்திப்படுப்பது ஓராறு = அவரை வளரு நிலத்திலே நிலைபெறச் செய்வதொரு நெறியாம். எ-று.

அத்திறங்களாவன:—வலி, காலம், இடனென்றிவற்றால் தனக்கும் பகைவர்க்குமுளவாம் நிலைமைகளும், வினை தொடங்குமாறும், அதற்கு வருமிடையூறுகளும், அவற்றை நீக்குமாறும், வெல்லுமாறும், அதனாற் பெறும்

பயனும் முதலாயின. அவற்றுட் சில வெஞ்சினும் பகைவர்க்கு இடனாமாகலான், முற்றப்பெற வெண்ண வேண்டுமென்பதாம். இவை மூன்று பாட்டானும் ஒழியத்தகும் வினையும் ஒழியாவழிப்படுமிழுக்கும் கூறப்பட்டன. (௭)

விளக்கம் :—அரசன் ஒருவன், தான் பகைவர்மீது செல்லுங்கால் அவ்விடத்து உள்ள திறங்களை யெல்லாம் முழுவதும் ஆராயாது சிலவற்றையே ஆராய்ந்து பகை அரசன்மீது படையெடுத்துச் செல்வானாயின், அவ்வித படையெடுத்தலாய தொழில் நல்ல நிலத்தில் இட்ட விதைபோல் அப்பகைவரை வளர்வதற்கு விருத்திசெய்வது போலாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது எவ்விதமெனில்? பகைவர்மீது செல்லும் அரசன் ஒருவன், வலிமை, காலம், இடம் என்னுமிவைகள் தனக்கும் பகைவர்க்கும் எவ்வித முள்ளன என்னும் வேறுபாடுகளை உணர்ந்தும், அவ்விதம் உணர்ந்த வழி வினை தொடங்கும் விதத்தை அறிந்தும், வினை தொடங்குங்கால் அவ்வினைக்கு வரும் இடையூறுகளை உணர்ந்தும், அவ்வித இடையூறுகள் நேருமிடத்து அவற்றினை நீக்கும் உபாயத்தை அறிந்தும், நீக்கிய வழி வெல்லும் தன்மையினை உணர்ந்தும், அவ்வெற்றியால் வரும் பயனை அறிந்தும் ஆகிய இவைகளை யெல்லாம் முழுவதும் எண்ணாது, ஏதேனும் சிலவற்றைத் தனக்கு உறுதியாக எண்ணித் தொழிலைத் தொடங்கு



வானாயின், தான் எடுத்த தொழில் அழிவதுடன் பகைவரால் வெல்லப்பட்டுத் தான் அழிந்து போவான். ஆதலால், இவன் தொடங்கும் காரியம் பகைவரை அழியாது வளரச் செய்வதாயிற்று. ஆதலால், முற்றுமெண்ணியே ஒரு வினையைத் தொடங்கல் வேண்டும் என்பது பெற்றோமென்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ்விதம் ஆராய்ந்து வினைகளை செய்வதாயின் பெரிதும் காலமிழத்தல் நேருமன்றோ? ஆதலால், எது செய்தல் வேண்டும்? எது செய்யாதிருத்தல் வேண்டும் என்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

466. செய்தக்க வல்ல செயக்கெடும் செய்தக்க
செய்யாமை யானுங் கெடும்.

(பரி.) இ-ள். *செய்தக்க அல்ல செயக் கெடும்*—அரசன் தன் வினைகளுட் செய்யத்தக்கனவல்லவற்றைச் செய்தலாற்கெடும்;—*செய்தக்க செய்யாமையானும் கெடும்*—இனி அதுவேயன்றிச் செய்யத் தக்கனவற்றைச் செய்யாமைதன்னானுங்கெடும். எ-று.

*செய்யத்தக்கனவல்லவாவன*:—பெரிய முயற்சியினவும், செய்தாற் பயனில்லனவும், அது சிறிதாயினவும், ஐயமாயினவும், பின்துயர் விளைப்பனவுமென இவை. *செய்யத்தக்கனவாவன*:—அவற்றின் மறுதலையாயின. இச்செய்தல் செய்யாமைகளான் அறிவு ஆண்மை பெருமையென்னும் மூன்றையாற்றலுட் பொருள் படையென இருவகைத்தாய பெருமை சுருங்கிப் பகைவர்க்கு எளியனுமாகலான், இரண்டுங் கேட்டிற்கேதுவாயின. இதனாற் செய்வன செய்து ஒழிவனவொழிகவென இருவகையனவும் உடன் கூறப்பட்டன. (௬)

விளக்கம்:—அரசன் ஒருவன் தான் எண்ணிய வினைகளுள் செய்யத்தக்கன அல்லவற்றைச் செய்வானாயின் அவை கெடுமென்றும், தன்னால் செய்யக்கூடிய காரியங்களை எண்ணிச் செய்யாது விடுவானாயின் அவற்றால் கேடுவருமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பெரிய முயற்சியோடுகூடிச் செய்வதும் செய்தும் பயனில்லாமற் போவதும், முயற்சிக்குத் தக்க பயனில்லாது சிறிய பயன் கிடைப்பதும், அச்சிறிய பயன் தானும் முற்றும் கிட்டாதுபோவதும், அச்சிறிய பயனை அநுபவிக்குங்கால் துன்



பத்தை விளைப்பதும் ஆகிய தொழில்களெல்லாம் செய்யத்தகாத காரியங்களென்றும், சிறு முயற்சியால் பயன் அடைவதும், அதனால் பயன் பெரிதாயிருப்பதும், சந்தேகமில்லாது பயன் கொள்வதும், என்றும் நீங்காத இன்பத்தை விளைப்பதும் ஆகிய தொழில்கள் செய்யத் தக்கனவென்றும் கண்டோம். இனிச் செய்தலும் செய்யாமையும் ஆகிய இரண்டனுள் செய்யக் கூடியனவற்றைச் செய்யாமையானும், செய்யக்கூடாதனவற்றைச் செய்தலானும் ஒருவனது அறிவு, ஆண்மை, பெருமை என்னும் மூன்றினுடைய

பலங்களாகிய, பொருள் படை இரண்டையும் அடைவதற் கில்லாமலும், அப்பொருள், படை என்னும் இரண்டு விதமாகிய பெருமையால் பகைவரை எளியராக்கித் தான் பயன் கொள்ளாமலும் போகின்றதனால் கேடுவருமென்றும், ஆகவே செய்ய வேண்டுவனவற்றைச் செய்தும், ஒழியவேண்டுவன வற்றை ஒழித்தும் நிற்பதே தெரிந்துசெயல்வகை என்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், " அவ்விதம் செய்யத்தக்க கருமமொன்றே ஒருவனுக்குத் தோன்றுமாயின், அவன் யாதொரு உபாயமுமில்லாமல் அக்கருமத்தைத் தொடங்கிவிடுதல் கூடுமோ?" என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்.

467. எண்ணித் துணிக கருமந் துணிந்தபி
னெண் ணுவ மென்ப திழுக்கு.

(பரி.) இ-ள். கருமம் எண்ணித் துணிக=செய்யத்தக்க கருமமும் முடிக்கு முபாயத்தை யெண்ணித் தொடங்குக,—துணிந்தபின் எண்ணுவம் என்பது இழுக்கு=தொடங்கிவைத்துப் பின்னெண்ணக் கடவேமென் றொழிதல் குற்றமாதலான். எ-று.

துணிவுபற்றி நிகழ்தலின், துணிவெனப்பட்டது. சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. உபாயமென்பது அவாய்நிலையான் வந்தது. அது கொடுத்தல், இன்சொற்சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தலென நால் வகைப்படும். இவற்றை வடநூலார் தான சாம பேத தண்டமென்ப. அவற்றுள் முன்னைய விரண்டும் ஐவகைய, ஏனைய மூவகைய; அவ்வகை யெல்லாம் கண்டுரைப்பிற் பெருகும். இவ்வுபாயமெல்லா மெண்ணாது தொடங்கின் அவ்வினை மாற்றாரால் விலக்கப்பட்டு முடியாமையானும், இடையினொழிதல் ஆகாமையானும், அரசன் நகையுறுதலின், அவ்வெண்ணா

13



மையை 'இழுக்கு' என்றார். செய்வனவற்றையும் உபாயமறிந்தே தொடங்குக வென்பதாம். (எ)

விளக்கம்:—ஒருவன் தான் செய்யத்தகுந்த கருமத்தையும் அதை முடிக்கும் உபாயத்தையும் எண்ணியே தொடங்கவேண்டுமென்றும், தொடங்கிவைத்துப் பின்னர் எண்ணுவோம் என்று

லைப்பது குற்றமாக முடியுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனில்? மூவித ஆற்றலும் இருவித பெருமையும் உடையவனாக இருப்பினும் நால்வித உபாயங்களையும் அறிந்தே செய்தல் வேண்டுமென்றும், அத்தகைய நால்வித உபாயங்களாவன கொடுத்தல், இனிய சொற் சொல்லல், பிரித்தல், தண்டித்தல் என்று பாகுபடுமென்றும், கொடுத்தலென்பது பெரியதோர் பொருளைக் கொடுத்துத் தன் வசப்படுத்துதலென்றும், கொடுத்த பொருளை மறுபடியும் கேளாமல் விட்டுவிடுவதால் பொருள்வாங்கியோரைத் தன் வசப்படுத்துதலென்றும், பொருள் கொடுக்கவேண்டியவர்க்கு வேண்டிய அளவு பொருள் கொடுத்து வசப்படுத்துத லென்றும், தன் பொருள் அல்லாது அயலவன் பொருளைக்கொண்டு ஒருவனுக்குக் கொடுப்பித்து அதனால் அவனை வசப்படுத்துதலென்றும், தனக்கு வரவேண்டிய ஆறிலொரு கடமையை அரசன் வாங்காமல் விட்டு அதனால் ஒருவனை வசப்படுத்துதலென்றும் ஆகிய ஐந்து விதமுடையதென்றும், தன்னால் வணக்கப்படுபவனை வணங்கியும், தன்னால் புகழப்படக் கூடியவனைப் புகழ்ந்தும், தன்னால் எதிர்கொள்ளக்கூடியவனை எதிர்சென்று அழைத்து உபசரித்தும், தன்னோடு நட்புகொண்டானிடத்துத் தன் நட்பின் மிகுதியை எடுத்துக்கூறியும், தன்னோடு உறவாயினானிடத்துத் தனக்கும் அவனுக்குமுள்ள உறவின் மிகுதியை எடுத்துச்சொல்லியும் நிற்பதாகிய இவ்வைந்தும் இன்சொற் சொல்லல் என்றும், பகைவரை வஞ்சித்தல், பகைவர்களோடு கூடியவர்களைப் பிரித்தல், தன்பகைவர்க்கு வேறு பகைவரை உண்டாக்கல் ஆகிய மூன்றும் பிரித்தல் என்றும், தன்பகைவர்க்குத் துன்பம் செய்தல், தன்பகைவரது பொருளைக் கொள்ளுதல், தன்பகைவரைக் கொல்லல் ஆகிய மூன்றும் தண்டித்தல் என்றும், ஆகிய நால்வித உபாயங்களை எண்ணாது செய்து ஒருவன் தனது ஆற்றலை



இழப்பானாயின், செய்யத்தக்க கருமத்தையும் செய்தவன் ஆகான் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அறிவு, ஆண்மை, பெருமை என்கின்ற மூவகைவல்லமையும், பொருள், படை என்னும் இருவித பெருமையும் மேற்கூறிய உபாயங்களை

எண்ணாத ஒருவன் செய்வானாயின் அவனெடுத்த காரியம் அவனுடைய வல்லமையால் முடிவுபெறுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

468. ஆற்றின் வருந்தா வருத்தம் பலர்நின்று
போற்றினும் பொத்துப் படும்.

(பரி.) இ-ள். ஆற்றின் வருந்தா வருத்தம் – முடியும் உபாயத்தாற் செய்யாத முயற்சி—பலர் நின்று போற்றினும் பொத்துப்படும் = துணைவர் பலர் நின்று புரைபடாமற் காப்பினும் புரைபடும். எ-று.

முடியுமுபாயத்தான் முயறலாவது:—கொடுத்தலைப் பொருண்மையாளன்கண்ணும்; இன்சொல்லைச் செப்பமுடையான், மடியாளன், முன்னே பிறரோடு பொருது தோற்றவனென இவர்கண்ணும்; வேறுபடுத்தலைத் துணைப்படையாளன், தன் பகுதியோடு பொருந்தாதானென இவர்கண்ணும்; ஒறுத்தலை இவற்றின் வாராதவழி இவர்கண்ணுந் தேறப்படாத நீர்மக்கள்கண்ணுஞ் செய்து, வெல்லுமாற்றான் முயறல். புரைபடுதல் = கருதிய தன்மையன்றிக் கருதாத நீர்மைபடுதல். உபாயத்தது சிறப்புக் கூறியவாறு. (அ)

விளக்கம்:—ஒருவன் தான் எடுத்த காரியம் முடிவதற்குவேண்டிய உபாயத்தோடு முயற்சி செய்யாவிடின் அவ்வெடுத்த காரியமானது எடுத்த அவனுக்குப் பலர் துணைவராக இருந்து குற்றப்படாது காப்பினும், குற்றத்தினுள்ளேயே அழிந்துவிடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், பொருள் விருப்பமுடையான் ஒருவனுக்குக் கொடுத்தலும், கடுஞ்சொல்லுடையான், முயற்சியில்லாத சோம்பலுடையான், முன்னர் ஒருமுறை பகைவர்களோடு யுத்தம் செய்து அதனால் தோற்றவன் ஆகிய இவர்களிடத்தே இன் சொல்லைச் சொல்லுதலும், பலவகையான துணைப்படையாளனாக நிற்போனிடத்தும், தன் பகுதியோடு பொருந்தாது நிற்போனிடத்தும் பிரித்தலையும், தன் வழிவாராத மக்களிடத்தும



கீழ்மக்களிடத்தும் தண்டித்தலைச் செய்தலும் ஆகிய இந்நான்கு வித உபாயங்களையும் செய்யாது ஒருவன் தன் தொழிலை ஆரம்பிப்பானாயின், அவன் எடுத்த தொழிலுக்கு எத்தனை வீரர்கள் துணை

யாக நின்று குற்றம் வாராமல் காக்கினும் முடிவுபெறாது அழிந்து போம் என்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "இவ்விதம சதுர்வித உபாயங்களையும் செய்யாது ஒருவன் தொடங்கிய காரியம் நன்மையைத்தாராது தீமையையே பயக்கும் என்று அறிந்தோம். அன்றியும், மேல் வகுத்துக் கூறிய உபாயத்தினது சிறப்பினையும் உணர்ந்தோம். இனி, இவ்வுபாயங்களைச் செய்யுங் காலத்து எவ்வித தகுதியுடையாரிடத்துச் செய்தல் வேண்டும் என்பதையும் விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

469. நன்றாற்ற லுள்ளுந் தவறுண் டவரவர்
பண்பறிந் தாற்றாக் கடை.

(பரி.) இ-ள். நன்று ஆற்றலுள்ளும் தவறு உண்டு=வேற்றுவேந்தர் மாட்டு நன்றானவுபாயஞ்செய்தற்கண்ணும் குற்றமுண்டாம்,—அவரவர் பண்பு அறிந்து ஆற்றாக்கடை=அவரவர்குணங்களை யாராய்ந்தறிந்து அவற்றிற்கேற்பச் செய்யாவிடின். எ-று.

நன்றானவுபாயமாவது:—கொடுத்தலும் இன்சொற்சொல்லுதலுமாம். அவை யாவர்கண்ணும் இனியவாதற்சிறப்புடைமையின், உம்மை சிறப்பும்மை. அவற்றை அவரவர் பண்பறிந்தாற்றாமையாவது:—அவற்றிற்கு உரியரல்லாதார்கண்ணே செய்தல். தவறு=அவ்வினை முடியாமை. (௯)

விளக்கம் :—அவ்வவ்வரசர்களது குணங்களை ஆராய்ந்தறிந்து அவரவர் தகுதிக்கேற்ற விஷயங்களைச் செய்யாவிடின் வேற்று வேந்தரிடத்து நன்மையாகிய உபாயங்களைச் செய்யினும் குற்ற முண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும் யாவரிடத்தும் இனிமை யுண்டாக்கும் சிறப்புடையவாதலின் அவைகளை அவற்றிற்கு உரியரல்லாதார் இடத்துச் சென்று அவர் குணமறியாது செய்வாராயின், தகுதியில்லாத அவர் அவற்றை நன்மையாக எண்ணாது செய்த ஒருவனுக்குத் தீமையையே செய்துவிடுவர். ஆதலால், உபாயங்களைச் செய்யுங்காலத்து இடமறிந்து செய்தல் வேண்

டும் என்பது பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் உபாயங்களைச் செய்யும் காலத்து, கருமத்தைச் செய்ய எண்ணிய ஒருவன் தன்னிலைக் கேற்பச் செய்தல் வேண்டுமோ? அன்றி, எவ்விதம் செய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

470. எள்ளாத வெண்ணிச் செயல்வேண்டுந் தம்மொடு
கொள்ளாத கொள்ளா துலகு.

(பரி.) இ-ள். தம்மொடு கொள்ளாத உலகு கொள்ளாது—அரசர் வினைமுடித்தற்பொருட்டுத் தந்நிலைமையோடு பொருந்தாத உபாயங்களைச் செய்வாராயின் உலகர் தம்மையிகழாநிற்கும்; எள்ளாத எண்ணிச் செயல் வேண்டும்—ஆகலான் அஃது இகழாவுபாயங்களை நாடிச் செய்க. எ-று.

தம்மென்பது ஆகுபெயர். தந்நிலைமையொடு பொருந்தாத உபாயங்களைச் செய்தலாவது:—தாம் வலியராய்வைத்து மெலியார்க்குரிய கொடுத்தன் முதலிய மூன்றனைச்செய்தலும், மெலியராயவழி வலியார்க்குரிய ஒறுத்தலைச்செய்தலுமாம். இவையிரண்டும் அறிவிலார் செய்வனவாகலின், 'உலகங்கொள்ளாது' என்றார். அஃதெள்ளாதன செய்தலாவது:—அவற்றைத்தம் வன்மை மென்மைகட்கேற்பச் செய்தல். மேல் இடவகையானுரிமை கூறிய உபாயங்கட்கு வினைமுதல்வகையான் உரிமை கூறியவாறு. இவை நான்கு பாட்டானுஞ் செயவனவற்றிற்கு உபாயமும் அதனதுரிமையும் கூறப்பட்டன. (௰)

விளக்கம்:—அரசர்கள் தாம் எண்ணிய தொழிலை முடிக்கக் கருதித் தம் நிலைக்கு மாறாகிய உபாயங்களைச்செய்யப் புகுவாராயின், அவ்விதம் செய்பவரை உலகமானது இகழ்ந்து பேசும் என்றும், ஆதலால் உலகத்தார் தம்மை இகழாதபடி உபாயங்களைச் செய்து வினைதொடங்கல் வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. தம நிலைக்குத் தக்க உபாயங்களாவன, தம்முடைய வல்லமை அறிந்து கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும், வேறு பிரித்தலும், அவ்வல்லமைக்குத் தக்க அளவாக மெலியாரைத் தண்டித்தலும் ஆகும். இவை செய்யாது தாம் பொருளில்லாதிருக்கவும் பொருளுடையார் போன்று மெலியார்க்குக் கொடுத்தலும், இன்சொற் சொல்லக் கூடாதவர்க்கு இன்சொற் சொல

றுதலும், வேறுபிரிக்கக் கூடாதவர்களை வேறுபிரித்தலும், தாம் பலமற்றவர்களாகவே இருக்கத் தம்மைப் பலமுடையாராய்க் கருதித் தம்மினும் பலமுடையாரைத் தண்டிக்கக் கருதுதலும் சிறந்த உபாயங்களாகாது பலரால் இழித்துக் கூறுவதற்கு இடன் ஆவதுடன், எண்ணிய கருமங்களும் முடியாவாதலால், உபாயங்களைச் செய்து கருமங்களை முடிக்க எண்ணும் காலத்து அவ்வுபாயங்களையும் இடமறிந்து செய்தல் வேண்டும் என்று அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணுக்கர், "தெரிந்து செயல்வகை என்பது எடுத்த காரியங்களை நால்வித உபாயங்களோடு தெரிந்து செய்தல் என்று அறிந்தோம். இனி, எண்ணிய கருமத்தைச் செய்து முடிக்கும் தகுதியையுடைய அரசன் செய்ய வேண்டுவன எவை என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் இயம்புவாராயினர்.

---

## 48. அதிகாரம்.

## வலியறிதல்.

---

(பரி.) இ-ள். அஃதாவது அவ்வுபாயங்களுள் ஒறுத்தல் குறித்தவரசன் நால்வகை வலியையும் அளந்தறிதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது மேற்கூறிய நான்கு உபாயங்களுள், நான்காவது உபாயமாகிய தண்டித்தலை எண்ணிய அரசன் அவ்வித தண்டித்தற்கு உரியதாகிய நான்குவித வலிமையையும் அளந்து அறிதலென்பதாம். இவ்வலியறிதலைத் தெரிந்தே செய்தல் வேண்டுமாதலால், தெரிந்து செயல்வகைக்குப் பின்னர் இவ்வதிகாரம் வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "நான்குவித வலியாவன எவையென்று விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

471. வினைவலியுந் தன்வலியு மாற்றான் வலியுந்
துணைவலியுந் தூக்கிச் செயல்.

(பரி.) இ-ள். வினை வலியும்=தான் செய்யக்கருதிய வினைவலியை

யும்,—தன்வலியும் = அதனைச் செய்து முடிக்கும் தன்வலியையும்,—மாற



முன் வலியும் = அதனை விலக்கலுறும் மாற்றான்வலியையும்,—துணை வலியும் = இருவர்க்குந் துணையாவார் வலியையும்—தூக்கிச் செயல் — சீர்தூக்கித் தன்வலிமிகுமாயின் அவ்வினையைச்செய்க. எ-று

இந்நால்வகைவலியுள் வினைவலி அரண்முற்றலும் கோடலும் முதலிய தொழிலானும், ஏனைய மூவகையும் ஆற்றலானும் கூறுபடுத்துத் தூக்கப்படும். தன்வலி மிகவின்கட் செய்கவென்ற விதியால், தோற்றல் ஒருதலையாய குறைவின்கண்ணும் வேறல் ஐயமாய ஒப்பின்கண்ணும் ஒழிகவென்பது பெற்றாம். (க)

விளக்கம்:—அரசன் ஒருவன் தான் செய்ய எண்ணிய தொழிலின் வலிமையையும், அதனைச் செய்து முடிக்கும் தன்னுடைய வலிமையையும், அது நிகழாது தடுக்கும் பகைவனது வலிமையையும், பிறகு தனக்குத் துணையாக நிற்பவரது வல்லமையையும், பகைவர்க்குத் துணையாக நிற்பவரது வல்லமையையும் ஆகிய வினைவலி, தன்வலி, பகைவலி, துணைவலி என்கின்ற நான்கினையும் சீர்தூக்கிச் செய்தல்வேண்டும். என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அவ்விதம் சீர்தூக்கலாவது, ஓர் கருமத்தை முடிக்க எண்ணிய அரசன் ஒருவன் தன்னுடைய வல்லமையும், தன் துணைவரது வல்லமையும், பகைவனது வலிமைக்கும், அவன் துணைவரது வலிமைக்கும் மேற்பட்டிருக்குமாயின் வினை தொடங்கல் வேண்டுமென்பது. அவ்விதமல்லாது செய்வானாயின் அது இழிவைத்தருமாதலால் தேர்ந்து செய்தல் வேண்டுமென்பதாயிற்று. ஏனெனில்? எக்காலத்தும் ஒருவன் தான் எண்ணிய கருமத்தைச் செய்ய ஆரம்பிக்குங்கால் தோல்வியென்பதை நிச்சயமாகக் கொண்டும், வெல்லுத லென்பதைச் சந்தேகமாகக் கொண்டும் செய்து முடித்தல் வேண்டும். அவ்விதம் செய்யாது எப்போதும் தன்வலியையே உறுதியாகக் கருதிச் செய்வானாயின், அவ்விதமாப்பால் தக்கதோர் உபாயங்களைச் செய்யாது அழிவடைவான் என்றனர். அதுகேட்ட

மாணுக்கர், "வினைவலி என்பது எது என்பதையும், அதற்குத் துணை வலி எது என்பதையும் அறியவிரும்புகின்றேம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



472. ஒல்வ தறிவ தறிந்ததன் கட்டங்கிச்
செல்வார்க்குச் செல்லாத தில்.

(பரி.) இ-ள். ஒல்வது அறிவது அறிந்து—தமக்கியலும் வினையையும் அதற்கறிய வேண்டுவதாய வலியையும் அறிந்து—அதன்கண் தங்கிச் செல்வார்க்கு—எப்பொழுதும் மனமொழிமெய்களை அதன்கண்வைத்துப் பகைமேற்செல்லும் அரசர்க்கு—செல்லாதது இல்—முடியாதபொருளில்லை. எ-று.

ஒல்வதெனவே வினைவலி முதலாய மூன்றுமடங்குதலின், ஈண்டறிவதென்றது துணைவலியேயாயிற்று. எல்லாப்பொருளுமொருங்கு வரென்பதாம். இவையிரண்டுபாட்டானும் வலியின்பகுதியும் அஃதறிந்து மேற்செல்வாரெய்தும் பயனும் கூறப்பட்டன. (உ)

விளக்கம்:—அரசர் தம் தகுதிக்குத் தக்க தொழிலையும், அத்தொழிலுக்கு அறியவேண்டுவதாகிய வல்லமையையும் தெரிந்து, அத்தொழிலின்கண் எப்பொழுதும் தம் மனோவாக்குக் காயங்களைச் செலுத்திப் பகைவர்மீது செல்வாராயின், அவ்விதம் செல்லுகின்ற அரசர்க்கு முடியாத கருமம் ஒன்றுமில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆகலால், எடுத்த கருமத்தை முடிக்கவேண்டுமாயின் தாம் எடுத்த கருமத்தையும், இயல்பையும், தமக்குத் துணையாக வருகின்ற துணைவரது வல்லமையையும் முதலறிந்து செய்தல் வேண்டும் என்பது பெற்றேம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "வினைவலியும், துணைவலியும மேற்கூறிய திருக்குறளால் அறிந்தோம். ஆயின் தன்வலி என்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

473. உடைத்தம் வலியறியா ருக்கத்தி னூக்கி
யிடைக்கண் முரிந்தார் பலர்.

(பரி.) இ-ள். உடைத் தம் வலி அறியார்—கருத்தாவாதலையுடைய

தம் வலியினளவறியாதே—ஊக்கத்தின் ஊக்கி=மனவெழுச்சியாற்றம்மின் வலியாரோடு வினைசெய்தலைத் தொடங்கி—இடைக்கண் முரிந்தார் பலர் =அவர் அடர்த்தலான் அது செய்து முடிக்கப்பெறாது இடையே கெட்ட வரசர் உலகத்துப் பலர். எ-று.



உடையவென்பது அவாய்நின்றமையின், செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. முவகையாற்றலுள்ளுஞ் சிறப்புடைய அறிவுடையார் சிலராதலின், 'முரிந்தார் பலர்' என்றார். அதனால் தம்வலியறிந்தே தொடங்குகவென்பது எஞ்சிநின்றது. (௩)

விளக்கம்:—அரசன் ஒருவன் எடுத்த கருமத்தின் தன்வலுவை தன் வலியை அறியாது தனக்கு உள்ள ஊக்கமிகுதியால் தன்னிலும் வலியானை மெலியானென்றெண்ணி அவன் மீது போர்புரியத் தொடங்குவானாயின், வலியானாகிய பகைவன் அவனை வென்றுவிடுவான் ஆதலால் அவ்விதம் வெற்றியால் தன்வலியறியாது செய்த அரசன் எடுத்த கருமமும் முடியாமல் கருமந்தொடங்கிய அவனும் கெட்டுப் போவான்' என்றும், அவ்விதம் ஆகினோர் உலகத்துப் பலர் உளர் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? அறிவு, ஆண்மை, பெருமை ஆகிய மூவிதவல்லமையும் பொருந்தினோர் சிலசாகவும், அவையுள்ளும் அறிவு என்பது மிகச் சிலர்க்கே உரியது ஆதலால் அறிவற்ற பலர் தம் வலிமையறியாமலே தொழிலைச் செய்ய எண்ணி நடுவே கெட்டுப்போவது திண்ணமென்றும், அவ்விதம் கெடாவழி முடிக்கவேண்டுமாயின் தம் வலி அறிந்தே முடித்தல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் எதற்காக அரசர்க்குப் பகையுண்டாகின்றது என்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

474. அமைந்தாங் கொழுகா னளவறியான் றன்னை
வியந்தான் விரைந்து கெடும்.

(பரி.) இ-ள். ஆங்கு அமைந்து ஒழுகான்=அயல்வேந்தரோடு பொருந்தி யொழுகுவதுஞ் செய்யாது—அளவு அறியான்=தன்வலியை யறிவதுஞ்செய்யாது—தன்னை வியந்தான்=தன்னை வியந்து அவரோடு பகைத்தவரசன்—விரைந்து கெடும்=விரையக்கெடும். எ-று.

காரியத்தைக் காரணமாக உபசரித்து, 'வியந்தான்' என்றார். விரைய வென்பது திரிந்து நின்றது. நட்பாயொழுகுதல், வலியறிந்து பகைத்த லென்றுமிரண்டனுள் ஒன்றன்றே அயல்வேந்தரோடு செயற்பாலது, இவையன்றித் தான் மெலியனும் வைத்து அவரோடு பகைகொண்டானுக்கு ஒருபோதும் நிலையின்மையின், 'விரைந்து கெடும்' என்றார். இவையிரண்டுபாட்டானும் தன்வலியறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது.(ச)

14



விளக்கம்:—அரசன் ஒருவன் அயலரசரோடு நட்பாயிருந்து பழகாமலும், தன்னுடைய வல்லமை இதுவென்று அறியாமலும், தன்னையே அதிகமாக எண்ணி அவ்வயலரசர்களைப்பகைப்பானாயின், அவன் அதிசீக்கிரமாகக் கெட்டுப்போவானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் முதலில் ஒருவன் உலகத்துப் புகழோடு வாழவேண்டுமாயின், தன்னோடு ஒத்தாரிடத்து நட்பாயிருத்தல் வேண்டுமென்றும், அவ்விதமிருக்க விருப்பமில்லையாயின் ஏனையோரிடத்துப் பகைகொள்வதற்குமுன் தன்னுடைய வல்லமையை அறிந்து பகைத்தல் வேண்டும் என்றும், இவை சிறிது மறியாது தான் மெலியனாகவே இருந்து மிகவலியாராகிய மக்களிடத்துப் பகைகொள்வானாயின், அவரது சிறந்த வலிமையால் இவன் அழிக்கப்பட்டுக் கெட்டுப்போவது திண்ணமாதலால் அவ்விதம் செய்தலாகாது என்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இரண்டு செய்யுளால் தன்வலி அறியானுக்கு வரும் குற்றமிதுவென்று அறிந்தோம். இனிப் பகைவலியும், துணைவலியும் இவையென அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறவாராயினர்.

475. பீலிபெய் சாகாடு மச்சிறு மப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

(பரி.) இ-ள். பீலி பெய் சாகாடும் அச்சு இறும்=பீலியேற்றிய சகடமும் அச்சுமுறியும்,—அப்பண்டம் சாலமிகுத்துப் பெயின்=அப்பீலியை அது பொறுக்குமளவன்றி மிகுத்தேற்றின். எ-று.

உம்மை சாகாட்டது வலிச்சிறப்போன்றிப் பீலியது நொய்மைச்

சிறப்புத் தோன்ற நின்றது. இறுமென்றுஞ்சினைவினை முதன்மேனின் றது. எளியரென்று பலரோடு பகைகொள்வான் தான் வலியனேயாயினும் அவர் தொக்கவழி வலியழியுமென்னும் பொருடோன்ற நின்றமையின், இது பிறிதுமொழிதலென்னு மலங்காரம்: இதனை நுவலாநுவற்சியென் பாரும் ஒட்டென்பாருமுளர். ஒருவன் தொகுவார் பலரோடு பகைகொள் ளற்க வென்றமையின், இதனான் மாற்றான் வலியும் அவன்றுணை வலியும் அறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—மயில் பீலியாயினும் வண்டி பொறுக்கும் அள விற்கு அதிகமாக ஏற்றிச் செலுத்தப்படின், அவ்வண்டியின் அச்



சாணது முறிந்துபோகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மயில் இறகானது மிக அற்பமாகிய பளுவையுடையதாயி னும் அதையும் அளவிற்கு மிஞ்சி ஏற்றி வண்டியைச் செலுத்து வோமாயின் செலுத்துகின்ற வண்டிக்கு அப்பாரம் மிகுதியாக நிற்குமாதலால் அவ்வண்டி முறிந்துபோவது திண்ணமென்பது போல, அரசன் ஒருவன் தான் வலியவனாகவிருந்து மெலியவனாக விருக்கின்ற ஓர் பகைவன்மீது போர் செய்யச் சென்றானாயினும் அம்மெலிய பகைவனது துணைவர் பலராக இருப்பாராயின் அவரெல் லாம் ஒன்று சேர்ந்து இவ்வலிய அரசனை அழித்துவிடுவர் என்பது போந்த பொருளாயிற்று. ஆதலால், மாற்றான் வலி ஒன்றையே கருதாது அவன் துணை வலிமையும் அறிந்தே செய்தல் வேண்டு மென்றும், அவ்வாறு செய்யாவிடில் எண்ணிய கருமம் முடியா தென்றும், முடியாததுடன் தானும் அழிந்துபோக நேருமென் றும் கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஊக்கமிகுதி யுடையார் எது தொடங்கினும் ஆகுமென்று பலர்வாய்க் கேட்கின் றோம். அவ்விதம் ஊக்கம் மிகுதிகொண்ட அரசன் ஒருவனுக்கு வலியறிதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

476. நுனிக்கொம்ப ரேறினா ரஃதிறந் தூக்கி
னுயிர்க்கிறுதி யாகி விடும்.

(பரி.) இ-ள். கொம்பர் நுனி ஏறினர் அஃது இறந்து ஊக்கின் = ஒருமரக் கோட்டினது நுனிக்கண்ணே யேறினார் தம் ஊக்கத்தால் அவ்வளவினைக் கடந்து மேலுமேற ஊக்குவாராயின்,—உயிர்க்கு இறுதியாகிவிடும் = அவ்வூக்கம் அவருயிர்க்கு இறுதியாய் முடியும். எ-று.

நுனிக்கொம்பரென்பது கடைக்கணென்பதுபோலப் பின்முன்னாகத் தொக்க ஆறாம்வேற்றுமைத்தொகை. பன்மை அறிவின்மைபற்றி இழிந்தார்மேல் வந்தது. இறுதிக்கேதுவாவதனை இறுதி யென்றார். பகைமேற் செல்வானொருவன் தன்னாற் செல்லலாமளவுஞ் சென்று நின்றான் பின் அவ்வளவினில்லாது மனவெழுச்சியான் மேலுஞ் செல்லுமாயின், அவ்வெழுச்சி வினைமுடிவிற் கேதுவாகாது அவனுயிர் முடிவிற்கேதுவாமென்னும் பொருடோன்ற நின்றமையின், இதுவும் மேலையலங்காரம். அளவறிந்து நிற்றல் வேண்டு மென்றமையின், இதனுள் வினைவலியறியாவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. (௬)



விளக்கம் :—இவ்வுலகத்து மக்கள் தம் ஊக்க மிகுதியால் தாம் செய்யும் வினைக்கு வேண்டிய வலியை அறியாது செய்வாராயின், அது அவரது உயிர்க்கே இறுதியாக முடியுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. எவ்வாறெனின்? ஒருவன் ஓர் மரத்தினது நுனியின் மீது ஏறி நின்ற பிறகும் பின்னும் ஏறிச்செல்வேனென்று ஊக்குவானாயின், அது எவ்விதம் முடியாததாகி அவன் கீழ் விழுந்து இறக்க நேருமோ அதுபோல் இதுவும் ஆகும் என்று உவமைகாட்டியதாயிற்று. அது என்னையோவெனில்? அரசன் ஒருவன் தன் பகைமீது செல்லக்கூடிய அளவுசென்று நின்ற பிறகும் சென்ற அளவில் நில்லாது தனது மன ஊக்கத்தால் மேலும் செல்லுவானாயின், அவ்வூக்கமானது அவனெடுத்த காரியம் முடிவதற்கு இல்லாது அவனது உயிர் முடிவதற்கு ஏதுவாகும் என்று தோன்றுவதால், எக்காரியத்தையும் தன் அளவினையும் வினை அளவினையும் அறிந்தே செய்தல் வேண்டுமென்பது பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், “இத்திருக்குறளால் வினைவலி அறியாவழி

உண்டாகும் குற்றம் ஈதென அறிந்தோம். இனி, ஒருவன் பொருள் வலி அறிந்து எதையும் செய்தல் வேண்டுமோ என்பதையும் விளக்கல்வேண்டும்" என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்.

477. ஆற்றி னளவறிந் தீக வதுபொருள்
போற்றி வழங்கு நெறி.

(பரி.) இ-ள். ஆற்றின் அளவு அறிந்து ஈக= ஈயுநெறியானே தமக்குள்ள பொருளின் எல்லையையறிந்து அறஞ்செய்க;—அது பொருள் போற்றி வழங்கும் நெறி= அவ்வளவு ஈதல் பொருளைப் பேணிக்கொண் டொழுகும் நெறியாம். எ-று.

ஈயுநெறி மேல் இறைமாட்சியுள் "வகுத்தலும் வல்லதரசு" * என்புழி உரைத்தாம். எல்லைக்கேற்பஈதலாவது:—ஒன்றனை நான்கு கூறாக்கி, அவற்றுள் இரண்டனைத் தன்செலவாக்கி, ஒன்றனை மேல் இடர் வந்துழி அது நீக்குதற்பொருட்டு வைப்பாக்கி, நின்றவொன்றனையீதல்: பிறரும் "வருவாயுட் கால் வழங்கி வாழ்தல்" என்றார் †. பேணிக்கொண்

* 385-ம் குறளுரையிற் காண்க.

†"வருவாயுட் கால்வழங்கி வாழ்தல் செருவாய்ப்பச்
செய்தவை நாடாச் சிறப்புடைமை—பெய்தப்

பலவாடி நல்லவை கற்றலிம் மூன்றும்
நலமாட்சி நல்லவர் கோள்." —திரிகடுகம், 21.



டொழுகுதல்=ஒருவரோடு நட்பிலாத அதனைத் தம்மோடு நட்புண்டாக்கிக் கொண்டொழுகுதல். முதலிற்செலவு சுருங்கிற் பொருள் ஒருகாலும் நீங்காதென்பதாம். (எ)

விளக்கம்:— ஒருவன் தன் பொருள் அளவு ஈதென்றறிந்து அதற்குத் தக்க விதமாகக் கொடுக்கவேண்டிய வழியில் கொடுத்தலைச் செய்தல் வேண்டுமென்றும், அவ்விதம் கொடுத்தலே பொருளைக் காப்பாற்றி நிற்கும் நெறியென்றும் இத்திருக்குறள் கூறுகின்

றது. அதாவது, அளவிற்கேற்பக் கொடுத்தலாவது, ஒருவன் தன்னுடைய வருவாயின் எல்லையை இதுவென்றறிந்து அவ்வளவை நான்குபங்காக்கி அந்நான்கு பங்கினுள் இரண்டைத் தன் செலவாக்கியும், ஒரு பாகத்தை ஆபத்துக்கு உதவுமாறு நிலைத்த பொக்கிஷமாக்கியும், நின்ற கால்பாகத்தினைப் பிறர்க்குக் கொடுத்தலுமாம். இவ்வாறு செய்கின்ற முறையே பொருள் வழங்கும் முறையென்றும், பொருளைப் போற்றி வாழும் நெறி யென்றும் கண்டோ மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவன் தனக்கு வருகின்ற பொருள் சிறிய அளவாயிருக்கினும், அக்காலத்தும் மேற்கூறிய அளவினைத் தான் செய்தல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

478. ஆகா றளவிட்டி தாயினுங் கேடில்லை
போகா றகலாக் கடை.

(பரி.) இ-ள். ஆகு ஆறு அளவு இட்டிதாயினும் கேடு இல்லை = அரசர்க்குப் பொருள் வருகின்ற நெறியளவு சிறிதாயிற்றாயினும் அதனாற் கேடில்லையாம்,—போகு ஆறு அகலாக்கடை = போகின்ற நெறியளவு அகலிற்பெருகாதாயின். எ-று.

இட்டிதெனவும் அகலாதெனவும் வந்த பண்பின்மொழிகள் பொருண்மேனின்றன. பொருளென்பது அதிகாரத்தான் வருவித்து, அளவென்பது பின்னுங்கூட்டி யுரைக்கப்பட்டன. முதலுஞ் செலவுந் தம்மு ளொப்பினுங் கேடில்லை யென்பதாம். (அ)

விளக்கம்:—செலவு செய்கின்ற காலத்து வருகின்ற வருவாயின் அளவிற்கு மேலாகச் செலவு செய்யாவழி இல்லையாயின்,



அரசர்க்குப் பொருள் வருகின்ற வழியின் அளவு சிறிதாயிருந்தாலும் அதனாலே யாதொரு கெடுதியுமில்லையென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மேற்கூறிய ஒருபங்கு சேர்த்துவைத்தல் இல்லையாயினும் வருகின்ற வருவாய்க்குத் தக்க அளவாகச் செல

வழித்தால் போதுமென்று கூறுவதாயிற்று. எவ்வெனின்? சேமித்து வைப்பதில்லையாயினும் கடன் வாங்கிச் செலவழியாது இருப்பது மிக்கோர் சிறப்புடையதாதலால் கடன் வாங்காது வருவாயினைச் செலவழிக்கின்ற மக்களுக்கு எப்போதும் கேடு இல்லை என்பது பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் வருவாய்க்குமேல் செலவழிக்க முயல்வானாயின், அதனால் அவன் வாழ்க்கை எதுவாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

479. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல
 இல்லாகித் தோன்றாக் கெடும்.

(பரி.) இ-ள். அளவு அறிந்து வாழாதான் வாழ்க்கை= தனக்குள்ள பொருளினெல்லையையறிந்து அதற்கேற்ப வாழமாட்டாதான் வாழ்க்கை ஏன்—உளபோல இல்லாகித் தோன்றாக்கெடும்= உள்ளனபோலத்தோன்றி மெய்ம்மையான் இல்லையாய்ப் பின்பு அத்தோற்றமுமின்றிக் கெட்டுவிடும். எ-று.

அவ்வெல்லைக்கேற்ப வாழ்தலாவது: —அதனிற் சுருக்கக் கூடாதாயின் ஒப்பவாயினும் ஈத்துந் துய்த்தும் வாழ்தல். தொடக்கத்திற் கேடு வெளிப்படாமையின், 'உளபோலத் தோன்றி' என்றார். முதலிற்செலவு மிக்கால் வருமேதங் கூறியவாறு. (௯)

விளக்கம் :—ஒருவன் தனக்கு உள்ள பொருளின் அளவை அறிந்து அதற்குத் தக்க அளவாகத் தன் வாழ்க்கையைச் செலுத்தாவிடில் அவ்வித வாழ்க்கையானது பலர் பார்க்கும் காலத்து இருப்பதுபோல் தோன்றி உண்மையாகவே இல்லாததாகிப் பின்னர் முதலிலிருப்பதாகக் காணப்பட்ட தோற்றமுமில்லாமல் கெட்டுப் போய்விடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது எவ்வாறெனில்? ஒருவன் தனக்கு வருகின்ற வருவாயில் மிகுந்து வைக்க முடியாவிடினும், செலவைச் சுருக்க முடியாவிடினும், வருகின்ற வருவாயைப் பிறர்க்குக் கொடுத்தும், தானும் உண்டு வாழவேண்டி



இருக்க, அவ்விதம் செய்யாது வருவாய்க்கு மேற்பட்ட பொருளைக்

கடன் முதலிய கொண்டு செலவழித்துப் பலர் பார்க்க டம்பமாக நடித்து உள்ளே ஒன்றுமில்லாமல் கடன் கொடுத்தவர்களால் அலைக்கப்பட்டுச் சிலநாள் வாழ்ந்து பின்னர் எவற்றையுமிழப்பது காலி பளவாகப் பார்க்கின்றோமாதலால், வருவாய்க்குத் தக்க அளவாகச் செலவழிப்பவனே உலகத்து உயிர் வாழ்பவனென்றும், ஏனையோர் ஒளிகுறைந்து ஒழிந்து போதற்கு உரியவரென்றும் கண்டோர். இதனை "ஆனமுதலில் அதிகம் செலவானால், மானமழிந்து மதிகெட்டுப்–போனதிசை, எல்லார்க்குங் கள்ளனாய் ஏழ்பிறப்பும் தீயனாய், நல்லார்க்கும் பொல்லனாம் நாடு" என்னும் செய்யுளால் அறிகின்றோம். அது கேட்ட மாணாக்கர், "ஒருவன் விரும்பிய செலவினைச் செய்யப் புகுவானாயின், அது கேடுதரும் என்பது உணர்ந்தோம். ஆயின், ஒப்புரவு என்னும் சிறந்ததோர் செலவினை ஒருவன் செய்யுங்காலத்து அவ்வித அறத்தினைத் தன்னை விற்றாயினும் செய்தல் வேண்டுமென்பதை ஒப்புரவறிதலில் உணர்ந்தோம். ஆதலால், அவ்வித காரியத்தைச் செய்யுங் காலத்தும் ஒருவன் தனக்குள்ள அளவினை எண்ணிப் பார்த்தலும் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**480. உளவரை தூக்காத ஒப்புர வாண்மை**
**வளவரை வல்லைக் கெடும்.**

(பரி.) இ-ள். உளவரை தூக்காத ஒப்புரவு ஆண்மை = தனக்குள்ள அளவு தூக்காமைக்கு ஏதுவாய ஒப்புரவாண்மையால்—வளவரை வல்லைக் கெடும் = ஒருவன் செல்வத்தினெல்லை விரையக்கெடும். எ-று.

ஒப்புரவேயாயினும் மிகலாகா தென்றமையான், இதுவுமது. இவை நான்குபாட்டானும் மூவகையாற்றலுட் பெருமையின் பகுதியாய பொருள் வலியறிதல் சிறப்புநோக்கி வகுத்துக் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—ஒருவன் தனக்கு உள்ள செல்வத்தின் அளவை அளந்தறியாது ஒப்புரவு என்னும் மிகப்பெரிய அறத்தைச் செய்வானாயின் அவனுக்கு உள்ள செல்வமானது விரைவில் அழிந்து போம் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதனால் உலகத்து உள்ளார்க்கு ஊருணி நீர் நிறைந்ததுபோல் ஒருவன் ஒப்புரவு

டையனுயிருக்கினும், தன் வருவாயின் அளவிற்கு மேற்பட்டு அதைச் செய்வானுயின், அதனால் தானும் பிறரும் பயன் அடையாமல் அழிந்துபோதற்காகுமே அன்றி எண்ணிய கருமம் கைகூடாததாக முடியும். ஆதலால் மூன்று ஆற்றலுள் பெருமையின் பகுதியாயப் பொருள் வலியறிதலே மேற்கூறிய நான்குபாட்டானும் அறிவித்தாயிற்று என்றனர். அதுகேட்ட மாணுக்கர், " வலியறிதலென்பதை உணர்ந்தோம். இனிக் காலமறிதலென்பதையும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 49. அதிகாரம்.
## காலமறிதல்.

---

(பரி.) இ-ன். அஃதாவது வலியான் மிகுதியுடையனுப் பகைமேற் சேறலுற்ற அரசன் அச்செலவிற்கேற்ற காலத்தினையறிதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம் :—அதாவது அறிவு, ஆண்மை, பெருமை ஆகிய மூன்று ஆற்றலும்கொண்ட அரசன் ஒருவன் தன் பகைமேல் செல்ல எண்ணுவானுயின் அச்செலவுக்கு ஏற்ற காலம் இதுவென அறிதல். வலிமை மிக்க அரசன் ஒருவனே பகைவர்மேல் போர்த் தொடங்கத் தக்கவனுதலால், இக்காலமறிதல் வலியறிதலுக்குப் பின் வைக்கப்பட்டு உள்ளது என்று ஆசிரியர் கூறினர். அது கேட்ட மாணுக்கர், "போர்ச் செய்யத் தொடங்குவானுக்குக் காலமென்பது எற்றிற்கு ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

481. பகல்வெல்லுங் கூகையைக் காக்கை யிகல்
வேந்தர்க்கு வேண்டும் பொழுது. [வெல்லும்

(பரி.) இ-ள். கூகையைக் காக்கை பகல் வெல்லும்=தன்னின் வலிதாய கூகையைக் காக்கை பகற்பொழுதின்கண் வெல்லாநிற்கும்,—இகல் வெல்லும் வேந்தர்க்குப் பொழுது வேண்டும்= அதுபோல, பகைவரையிகலை வெல்லக் கருதுமரசர்க்கு அதற்கேற்ற காலம் இன்றியமையாது. எ-று.

எடுத்துக்காட்டுவமை; காலமல்லாவழி வலியாற் பயனில்லையென்பது விளக்கிநின்றது. இனிக் காலமாவது:—வெம்மையும் குளிர்ச்சியும் தம்மு

ஒத்து நோய் செய்யாது தண்ணீரும் உணவும் முதலியவுடைத்தாய்த் தானை வருந்தாது செல்லுமியல்பினதாம். இதனால் காலத்தது சிறப்புக் கூறப்பட்டது. (௧)

விளக்கம் :—தன்னைக் காட்டிலும் வலியதாகிய ஆந்தையைக் காக்கையானது பகற் பொழுதில் வெல்லுமென்றும், அதுபோல் பகைவர்களுடைய பகைமையைத் தீர்த்துக்கொள்ள எண்ணிய அரசர்க்கு அதற்குத் தக்க காலமென்பது முக்கியமாக உள்ளது என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, காக்கையை நோக்க ஆந்தையானது வலிமையுடையதாக இருக்கினும் அதன் கண்ணொளி செல்லாத பகற்பொழுதில் அது வெளிவருமாயின் அதன் பகையாகிய காக்கை வெகு சுலபமாக அதனைக் குத்திக் கொன்றுவிடும் என்று கூறுவதால், காலமல்லாத காலத்தில் பகை அரசர் மீது போர் தொடங்கச்சென்ற அரசன் எத்தனை வலிமையுடையவனாயினும் பயனில்லையென்றும், ஆதலால் போர் செய்யத் தொடங்கும் அரசன் வெம்மை, குளிர்ச்சி என்றுமிரண்டும் ஒத்து நோய் செய்யாமலும் தண்ணீர், உணவு முதலியவை பொருட்டுப் படைகள் வருந்தாமலும் இருக்கும் காலமுணர்ந்து செல்லல் வேண்டும் என்பது பெற்றோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் காலத்தைக் கருதிச் செய்யும் தொழிலானது இடையூறின்றி யாது முடியும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

482. பருவத்தோ டொட்ட வொழுக றிருவினைத்
தீராமை யார்க்குங் கயிறு.

(பரி.) இ-ள். பருவத்தோடு ஒட்ட ஒழுகல் = அரசன் காலத்தோடு பொருந்த வினைசெய்தொழுகுதல் — திருவினைத் தீராமை ஆர்க்கும் கயிறு = ஒருவர்கண்ணும் நில்லாது நீங்குஞ் செல்வத்தைத் தன்கணீங்காமற் பிணிக்குங்கயிறாம். எ-று.

காலத்தோடு பொருந்துதல் = காலந்தப்பாமற் செய்தல். தீராமையென்

றதனும், தீர்தன்மாலைபதென்பது பெற்றும். வினை வாய்த்து வருதலான், அதனினுஞ் செல்வம் என்றுமொன்றும் நீங்காதென்பதாம். (உ)

விளக்கம்:—அரசன் ஒருவன் காலத்திற்குத் தக்க அளவாகத் தான் எண்ணிய தொழிலைச் செய்ய முயலுவானாயின், பாரிடத்தும்





நிலைத்து நில்லாது உருண்டுவருகின்ற செல்வத்தினைத் தன்னிடத்தே நிலைத்து நிற்கச்செய்யும் ஓர் கட்டும் கயிறுக்குச் சமானமாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், காலம் தப்பாமல் தொழிலைச் செய்வதால் எடுத்த தொழில் முடிவதுடன் தன்னிடத்தே உள்ள செல்வமும் எக்காலத்தும் நீங்காது நிலை பெற்று நிற்கும் என்று உணர்த்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "காலம் கருதிச் செய்யும் வினை எத்துணை அரியதாக இருந்தாலும் முடிந்துவிடும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

483. அருவினை யென்ப வுளவோ கருவியாற்
கால மறிந்து செயின்.

(பரி.) இ-ள். அருவினை என்ப உளவோ = அரசரால் செய்தற்கரிய வினைகளென்று சொல்லப்படுவன உளவோ,—கருவியான் காலம் அறிந்து செயின் = அவற்றை முடித்தற்காங்கருவிகளுடனே செய்தற்காங்காலம் அறிந்து செய்வாராயின். எ-று.

கருவிகளாவன:—மூவகையாற்றலும் நால்வகையுபாயங்களுமாம். அவை உளவாய வழியும் காலம்வேண்டுமென்பதறிவித்தற்கு, 'கருவியான்' என்றார். எல்லாவினையும் எளிதின் முடியுமென்பதாம். (௩)

விளக்கம்:—அரசன் ஒருவன தொழில்களை முடித்தற்கு வேண்டிய கருவிகளுடனே செய்வதற்காகும் காலத்தினையும் உணர்ந்து செய்வானாயின், அவனால் செய்வதற்குமுடியாத தொழில்கள் உலகத்து இல்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் அறிவு, ஆண்மை, பெருமை என்கின்ற மூவித வல்லமையை

யும், சாம, தான, பேத, தண்டமென்கின்ற நால்வித உபாயத்தினையும் ஒருவன் பெற்றிருக்கானாயினும காலமென்பதையும் அறிந்தே ஒரு தொழிலைச் செய்தல் வேண்டுமென்றும், அவ்விதம் செய்வானுக்கு எளிதில் எத்தொழிலும் முடியுமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் காலமும் கருவியும் அறிந்து செய்வானுக்கு எவ்வித பெரியதோர் தகுதியுண்டாகும்?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.



484. ஞாலங் கருதினுங் கைகூடுங் காலங்
கருதி யிடத்தாற் செயின்.

(பரி.) இ-ள். ஞாலம் கருதினும் கைகூடும்=ஒருவன் ஞாலமுழுதும் தானே யாளக் கருதினானாயினும் அஃது அவன்கையகத்ததாம்,—காலம் கருதி இடத்தான் செயின்=அதற்குச் செய்யும் வினையைக் காலமறிந்து இடத்தோடு பொருந்தச் செய்வனாயின். எ-று.

இடத்தானென்பதற்கு மேற்கருவியானென்பதற்கு உரைத்தாங்கு உரைக்க. கைகூடாதனவும் கைகூடுமென்பதாம். இவை மூன்றுபாட்டானும் காலமறிதற் பயன் கூறப்பட்டது. (௪)

விளக்கம்:—அரசன் ஒருவன் தான் காலத்தையும் கருவியையும் அறிந்து செய்வதுடன் தகுந்த இடத்தையும் அறிந்து ஒரு தொழிலைச் செய்பவனாக இருப்பானாயின், அவன் இவ்வுலக முழுவதும தான் ஒருவனே ஆளக் கருதினானாயினும அவனுக்கு அது கைகூடும என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னேயோ வெனில்? ஒருவன் தனது வலியும, உபாயம், இடம், காலம் என்பனவற்றை எண்ணி ஒரு கருமத்தைச் செய்வானாயின், அக்கருமம் முதலிலேயே அவனுக்கு நன்கு கூடிவிடும். பிறர்க்குக் கைகூடாத

விஷயங்களும் அவனுக்குக் கைகூடிவிடும் என்பதால் உலகம் முழுவதும் ஆளுதல் கூடும் என்று காலமறிதலின் பயனை மிகுத்துக் கூறினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் காலமென்பது கைகூடாவிடின் அறிவுடையார் தாமெடுத்த காரியத்தைத் தொடங்காது விடுவர்போலும்!" என்னலும், ஆசிரியர் விளம்புவாராயினர்.

485. காலங் கருதி யிருப்பர் கலங்காது
ஞாலங் கருது பவர்.

(பரி.) இ-ள். கலங்காது ஞாலங் கருதுபவர்=தப்பாது ஞாலமெல்லாங் கொள்ளக் கருதுமரசர்—காலம் கருதி இருப்பர்—தம்வலி மிகுமாயினும் அது கருதாது அதற்கேற்ற காலத்தையே கருதி அதுவருந்துணையும் பகைமேற் செல்லார். எ-று.

தப்பாமை=கருதியவழியே கொள்ளுதல். வலிமிகுதி காலங்கருதி வென்றதனும் பெற்றும். அது கருதாது செல்லின் இருவகைப் பெருமை



யுந் தேய்ந்து வருத்தமுறுமாகலின், 'இருப்பர்' என்றார். இருத்தலாவது=நட்பாக்கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், பிரித்தல், கூட்டலென்னும் அறுவகைக்குணங்களுள் மேற்செலவிற்கு மாறுவது. இதனாற் காலம் வாராவழிச் செய்வது கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—தாம் எண்ணிய கருமம் முடியவேண்டித் தொழிலைத் தொடங்கும் அரசர், தம் வலிமை எவ்வளவு மிகுதியாக இருக்கினும் அவ்வலிமை மிகுதியைக்கருதாது, தொடங்கிய கருமத்துக்கேற்ற காலத்தினை எண்ணி அக்காலம் வரும் வரையிற் பகைவர் மீது செல்லும் தொழில் முதலியவற்றைச் செய்யமாட்டார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஞாலம் முழுவதையும் தான் அடைய எண்ணியபடியே கொள்ளும் கருதியுடைய அரசன் ஒருவன் தன் வலிமையையும், பெருமையையும் எண்ணிக் காலமறியாது பகைவர்மீது செல்வானாயின், அவனுக்கு உள்ள பொருள், படை என்னும் இரண்டும் கெட்டு எடுத்த காரியமும் கைகூடாது

தலால், தக்க காலம் வரும் வரையிற் போர்செய்யத் தொடங்கான் என்றறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் காலம் வரும் வரையிற் காத்திருந்த அரசனது காரியம் பின்னர் மிகுதியும் வலிமை யடையும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

486. ஊக்க முடையா னொடுக்கம் பொருதகர்
தாக்கற்குப் பேருந் தகைத்து.

(பரி.) இ-ள். ஊக்கம் உடையான் ஒடுக்கம்=வலிமிகுதியுடைய அரசன் பகைமேற் செல்லாது காலம் பார்த்திருக்கின்ற இருப்பு—பொரு தகர் தாக்கற்குப் பேரும் தகைத்து=பொருகின்ற தகர் தன் பகைகெடப் பாய்தற் பொருட்டுப் பின்னே கால்வாங்குந் தன்மைத்து. எ-று.

உவமைக்கேற்பச் சென்றதனும், பொருளினும் வெற்றியெய்தற் பொருட்டென்பது கொள்க. இதனால் அவ்விருப்பின் சிறப்புக் கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—மிகுந்த வல்லமையுடைய அரசன் ஒருவன் தன் பகைவன்மீது செல்வதற்குக் காலத்தைப் பார்த்திருக்கின்ற ஒரு



தருணமானது போர்செய்கின்ற ஆடு ஒன்று தன்பகை ஆட்டை மோதி அதைத் தள்ளுவதற்குக் கால்வாங்கிப் பின்னே செல்வதுபோல் உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, இரண்டு ஆடுகள் சண்டையிடும் காலத்து எந்த ஆடு அதிகமாகப் பின் சென்றுப் பிறகு முன்வந்து மோதுகின்றதோ அவ்வாட்டிற்கு வெற்றி உண்டாவது திண்ணமென்று காட்சியளவையாகக் காண்கின்றோமாதலால், அவ்வுவமையை ஈண்டு நம் தெய்வப் புலவர் எடுத்துக் காட்டி எத்துணைத் தூரம் அரசன் ஒருவன் காத்திருந்து காலமென்னும் கருவியைக் கைக்கொண்டு காரியத்தைச் செய்கின்றானோ அவனுக்குத் தப்பாது வெற்றி கிடைக்குமென்றும், அக்காலத்தின் தன்மையை அறியாதார்க்கு அவனது இருப்பானது தோல்வியாகக் காணப்படினும் அவ்வுண்மை அறிவார் அவனைப் புகழ்ந்தே பேசுவரென்றும் அறிந்தோமென்றனர். அது

கேட்ட மாணுக்கர், "இவ்விதம் காலம் கருதிப் பின்னடைபவர் தமக்குப் பகைவர் ஏதேனும் தகுதியல்லாத காரியத்தைச் செய்வாராயின், அவர்மீது கோபத்தை அப்போது கொள்ளாது காலம் வரும்வரையும் தாமதித்து நிற்கவேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

### 487. பொள்ளென வாங்கே புறம்வேரார் காலம்பார்த்
### துள்வேர்ப்ப ரொள்ளி யவர்.

(பரி.) இ-ள். ஒள்ளியவர்=அறிவுடையவரசர்—ஆங்கே பொள்ளெனப் புறம்வேரார்=பகைவர் மிகைசெய்த பொழுதே அவரறியப்புறத்து வெகுளார்,—காலம் பார்த்து உள் வேர்ப்பர்=தாம் அவரை வெல்லுதற்கேற்ற காலத்தினைப்பார்த்து அது வருந்துணையும் உள்ளே வெகுள்வர். எ-று.

பொள்ளெனவென்பது குறிப்புமொழி. வேரார் வேர்ப்பரெனக் காரணத்தைக் காரியமாகவுபசரித்தார். அறிய வெகுண்வழித் தம்மைக் காப்பராகலிற், 'புறம்வேரார்' என்றும், வெகுளியொழிந்துழிப் பின்னும் மிகை செய்யாமலடக்குதல் கூடாமையின், 'உள்வேர்ப்பர்' என்றுங் கூறினார். (எ)

விளக்கம்:—அறிவுடைய அரசரானவர் தம் பகைவர் தமக்கு ஏதேனும் தகுதியல்லாத காரியத்தைச் செய்வாராயினும், செய்த



அக்காலத்தேயே அப்பகைவர் அறியும்படியாகக் கோபித்துக் கொள்ள மாட்டார்களென்றும், அப்பகைவரைத் தாம் வெல்லுவதற்குத் தக்க காலத்தினை உணர்ந்து அக்காலம்வரும் வரையும் உள்ளேயே வெகுண்டு இருப்பரென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பகைவர் மிகை செய்த காலத்திலேயே அவர் அறியும்படிக் கோபிக்கப் புகுந்தால் அக்கோபத்தை உணர்ந்த பகை அரசர் அக்கோபத்தால் தமக்கு ஒரு கேடும் வாராவண்ணம் தம்மைக் காத்துக்கொள்ளும் வழியைத் தேடிக்கொள்வாராகலானும், அன்றியும் அறிவுடைய வரசர் தம் மனத்துக்குள் வெகுளி கொள்ளாவிடில் தமக்கு மிகை செய்தவருக்குப் பதில் செய்யாது போய்விடுதற்குக் காரணமாக இருக்குமாகலானும் உள்ளேயே

வெகுளியைக் கொண்டிருப்பாரென்றும் அறிகின்றோம். ஆதலால், ஒருவன் தனக்குத் தகுதியல்லாத காரியத்தைச் செய்த காலத்தும் அவன்மீது கோபிப்பதற்குக் காலம் பார்த்துக் கோபித்தல் வேண்டும் என்று அறிகின்றோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் காலம் காலம் என்று கூறுவதால் பகை அரசரிடத்துக் கோபிப்பதற்கும் இல்லாதிருக்கின்ற இவன் அவ்வரசரைக் காணுங் காலத்து எவ்விதம் நடந்துகொள்ளுதல் வேண்டும்?" என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்.

488. செறுநரைக் காணிற் சுமக்க இறுவரை
காணிற் கிழக்காந் தலை.

(பரி.) இ-ள். செறுநரைக் காணின் சுமக்க = தாம் வெல்லக் கருதிய அரசர் பகைவருக்கு இறுதிக்காலம் வருந்துணையும் அவரைக் கண்டாற் பணிக;—இறுவரை காணின் தலை கிழக்காம் = பணியவே அக்காலம் வந்து தம்வழி அவர் தலைவின்றி பிறவர். எ-று.

பகைமையொழியும் வகை மிகவுந் தாழ்கவென்பார், 'சுமக்க' என்றும், தம்மைத்தாழவே அவர் தம்மைக் காத்தலிகழ்வாராகலிற் றப்பாமற் கெடுவரென்பார் அவர் தலைகீழாமென்றுங் கூறினார். தலைமேற்கொண்டதொரு பொருளைத் தள்ளுங்கால் அது தன்றலைகீழாக வீழுமாகலின், அவ்வுவமை பெறப்பட்டது. இவையிரண்டுபாட்டானும் இருக்கும்வழிப் பகைமை தோன்றாமலிருக்கவென்பது கூறப்பட்டது. (அ)



விளக்கம்:—ஒருவன் தான் வெல்லக் கருதிய பகைவர்க்கு இறுதிக் காலம் வருமளவும் அப்பகைவரைக் கண்டால் பணிதல் வேண்டுமென்றும், அவ்விதம் பணியவே அவர் கெடுங்காலம் வருமிடத்து யாதொரு தடையுமில்லாது கெட்டுப் போவரென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? தான் தாழ்ந்திருக்கின்ற காலத்து 'இவன் நமக்கு அஞ்சி வணங்குகின்றான்; ஆதலால் நமக்கு யாதொரு இடையூறும் இவனால் வருவதற்கில்லை' என்று பகைவர் தம்மைக் காக்கத் தொடங்காமல் இருப்பார்களென்றும், அவ்விதம்

பகைவர் தம்மைக் காத்தலை இகழ்ந்திருந்த காலத்துக் கெடுவது தப்பாதென்றார், அவ்விதம் கெடுவதும் ஒருவன் தலைமேல் கொண்ட பொருளைத் தள்ளுமிடத்து அப்பொருள் மேலிருந்து தலைகீழாகக் கீழே விழுவதுபோல், அழிக்கப்படுகின்ற காலத்துத் தலைகீழாகக் கெடுவர் எனவும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இரண்டு பாட்டாலும் காலம் வரும் வரையும் பகைமையைக் காட்டாமல் இருக்க வேண்டும் என்பதை அறிந்தோம். இனிக் காலம் கிடைத்த காலத்து என் செய்தல் வேண்டும் என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

489. எய்தற் கரிய தியைந்தக்கா லந்நிலையே
செய்தற் கரிய செயல்.

(பரி.) இ-ள் எய்தற்கு அரியது இயைந்தக்கால் = பகைவரை வெல்லக் கருதும் அரசர் தம்மால் எய்துதற்கரிய காலம் வந்து கூடியக்கால்,—அந்நிலையே செய்தற்கு அரிய செயல் = அது கழிவதற்கு முன்பே அது கூடாவழித் தம்மாற் செய்தற்கரிய வினைகளைச் செய்க. எ-று.

ஆற்றல் முதலியவற்றாற் செய்துகொள்ளப்படாமையின் 'எய்தற்கரியது' என்றும், அது தானே வந்தியைதல் அரிதாகலின், 'இயைந்தக்கால்' என்றும், இயைந்தவழிப் பின்னில்லாதொழிதலின், 'அந்நிலையே' என்றும், அது பெறுவழிச் செய்யப்படாமையிற் 'செய்தற்கரிய' என்றும் கூறினார். இதனாற் காலம் வந்துழி விரைந்து செய்கவென்பது கூறப்பட்டது. (௯)

விளக்கம்:—பகைவரை வெல்ல எண்ணிய அரசன் ஒருவன் தன்னால் செய்து முடிக்கக்கூடிய காலம் நேருமாயின், நேர்ந்த அந்த



சமயத்திலேயே வேண்டிய காரியங்களைச் செய்து எண்ணிய கருமத்தை முடிக்கவேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? காலம் வந்தகூடிய காலத்தே செய்யக் கூடிய வேலைகளை அக்காலம் ஒழிந்த பிறகு செய்வது கூடாமையாதலால்,

அரிய வினைகளை முடிப்பதற்குக் காலமே துணைக்காரணமென்றும், அது கிடைத்த அக்காலத்தேயே செய்துவிட வேண்டுமென்றும், காலத்தால் ஆகக்கூடிய தொழில் ஒருவன் ஆற்றலால் முடியாதென்றும், அவ்வித பெரிய தகுதியுடைய காலம் தானே வந்து அடைந்தாலன்றி ஒருவன் தேடும் காலத்து வாராதென்றும், அவ்விதம் வந்த காலத்தை உடனே உபயோகப்படுத்திக் கொள்ளாவிடில் அக்காலம் நில்லாது போய்விடுமென்றும், ஆகவே அது நில்லாது ஓடுவதற்கு முன் வேண்டியதைச் செய்துவிடல் வேண்டுமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் காலம்கிடைத்தபோது எண்ணிய கருமத்தை விரைந்துசெய்தல் வேண்டுமென்று கண்டோம். ஆயின், காலம் வரும்வரையும் பகைமை தோன்றாமல் காத்திருப்பதற்கும் வந்தவழி விரைந்து செய்வதற்கும் ஓர் உவமை வாயிலாக விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

490. கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
குத்தொக்க சீர்த்த விடத்து.

(பரி.) இ-ள். கூம்பும் பருவத்துக் கொக்கு ஒக்க = வினைமேற் செல்லாதிருக்கும் காலத்துக் கொக்கிருக்குமாறுபோல இருக்க;—மற்றுச் சீர்த்த இடத்து அதன் குத்து ஒக்க = மற்றைச் செய்யுங் காலம் வாய்த்தவழி அது செய்து முடிக்குமாறுபோலத் தப்பாமற் செய்துமுடிக்க. எ-று.

மீன்கோடற்கிருக்குமவழி அது அச்செய்தற்றன்மையும் முன்னறிந்து தப்பாமற்பொருட்டு உயிரில்லது போன்றிருக்குமாகலானும், எய்தியவழிப் பின் தப்புவதற்கு முன்பே விரைந்து குத்துமாகலானும், இருப்பிற்குஞ் செயலிற்குங் கொக்கு உவமையாயிற்று. கொக்கொக்கவென்றாரேனும் அது கூம்புமாறுபோலக் 'கூம்புக' என்றும், குத்தொக்க வென்றாரேனும் அது குத்துமாறுபோலக் 'குத்துக' என்று முரைக்கப்படும், இது தொழிலுவமமாகலின். உவமைமுகத்தால் இருப்பிற்குஞ் செயலிற்கும் இலக்கணம் கூறியவாறாயிற்று. (௰)

விளக்கம்:—ஒருவன் காலத்தை நோக்கித் தான் எடுத்த காரியத்தின்மீது செல்லா திருக்கும்போது கொக்கு இருப்பதுபோல இருக்கவேண்டு மென்றும், மற்று அக்காலம் வாய்த்த இடத்தே அக்கொக்கானது தன் காரியத்தைச் செய்து முடிப்பதுபோலத் தான் எடுத்த காரியத்தைச் செய்துமுடிக்க வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனுள் கொக்கு ஒன்று தான் எண்ணிய மீன் ஒன்று வருந்துணையும் தான் அம்மீனிற்காகக் காத்திருப்பதை மீன்கள் அறியாவண்ணம் உயிரில்லாத பறவைபோன்று நடித்துக் காட்டுமென்றும், பின் எண்ணிய மீன் வந்தகாலத்து அம்மீனானது தப்பித்து ஓடுவதற்கு முன்னே விரைந்து குத்துமென்றும், ஆதலால் காலத்தைக் கருதுமொருவன் தன் பகைவர் முன்னே யாதொரு செயலும் அற்றவன்போல நடித்துக் காட்டல் வேண்டுமென்றும், தனக்குக் காலம்வந்த இடத்தே கொக்கானது விரைந்து குத்துவதுபோல ஒரே அடியாக அவர்களை ஒழித்து விடல் வேண்டுமென்றும் அறிந்தோம். கொக்கினை உவமையாக எடுத்தது இதுமாத்திர மல்லாது ஔவையாரும் எடுத்து உள்ளாரென்பதைப் பின் வரும் செய்யுளால் அறியக்கூடும் என்றனர்.

"அடக்க முடையவர் அறிவிலரென்றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டாம்—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி யிருக்குமாம் கொக்கு."

அதுகேட்ட மாணுக்கர், "காலம், வலி, இடம், என்கிற மூன்றினுள் வலியறிதலையும் காலமறிதலையும் அறிந்தோம். இனி இடனறிதலென்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் இயம்புவாராயினர்.

---

## 50. அதிகாரம்.

## இடனறிதல்.

---

(பரி.) அஃதாவது வலியும் காலமுமறிந்து பகைமேற் செல்வான் தான் வெல்லுதற்கேற்ற நிலத்தினையறிதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அரசனது வெல்லுதற்கேற்ற வலிமையினையும், காலத்தினையும் அறிந்து பகைவர்மீது செல்ல எண்ணிய ஒருவன் தான் வெல்வதற்கேற்ற நிலத்தினை அறிந்து செல்லல்வேண்டு மென்பதாம். அதனாலே காலமறிதலென்பதற்குப் பிறகு இடனறிதலென்னும் இவ்வதிகாரம் வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பகைவரை வெல்லுவதற்கு இடன் என்பது எவ்விதமிருத்தல் வேண்டுமென்பதையும், அது பெற்றால் தான் எவ்விதம் தொடங்கல் வேண்டுமென்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

491. தொடங்கற்க வெவ்வினையு மெள்ளற்க முற்று
மிடங்கண்ட பின்னல் லது.

(பரி.) இ-ள். முற்றும் இடம் கண்டபின்னல்லது=பகைவரை முற்றுதற்காவதோரிடம் பெற்றபின்னல்லது—எவ்வினையும் தொடங்கற்க=அவர் மாட்டு யாதொரு வினையையுந் தொடங்காதொழிக,—எள்ளற்க=அவரைச் சிறியரென்றிகழாதொழிக. எ-று.

முற்றுதல்=வளைத்தல். அதற்காமிடமாவது:— வாயில்களாலும் நூழைகளாலும் அவர் புகலொடு போக்கொழியும்வகை அரணினைச் சூழ்ந்து ஒன்றற்கொன்று துணையாய்த் தம்முள் நலிவிலாத பலபடையிருப்பிற்கும் மதிலும் அகழும்முதலிய அரண்செய்யப்பட்ட அரசிருப்பிற்கு மேற்ற நிலக்கிடக்கையும் நீருமுடையது. அது பெற்றால் இரண்டுஞ் செய்கவென்பதாம். (க)

விளக்கம்:—ஒருவன் தன் பகைவரை வளைத்துக் கொள்வதற்குத் தக்க இடம் பெறுவதற்கு முன்னர் எவ்வித தொழிலையும் ஆரம்பித்தல் கூடாதென்றும், அவ்வித பகைவரை 'இவர் நம்முன்னர் மிகச்சிறியர்' என்று இகழ்வதை ஒழித்துவிடல் வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? பகைவர்மீது செல்லுங்காலத்து அவரை வளைக்குமிடமானது அவர் செல்லக்

கூடிய பெரியதோர் வழிகளும், சிறியதோர் நுழைகளும் ஒன்றும் சென்று தன்னையப் அவர் வந்து புகாவண்ணமும், அவர் வந்த விடத்துத் திரும்பிப்போய் விடாவண்ணமும் இருப்பதுடன் தம் படைகள் துன்பமின்றி இருப்பதற்கு உரிய பெரியதோர் மதில்



களும், அம்மதில்களைச் சுற்றிய அகழிகளும், அவ்வகழிகளுக்கு அப்புறப்பட்டதாகிய நிலங்களும் ஆகிய அரண்களைக் கொண்டதா யிருத்தல் வேண்டுமென்பதாயிற்று. ஆதலால், நீர் அரண், நிலரண், காட்டரண், மலை அரண் ஆகிய அரண்கள் நான்கும், மதில் களும், நலிதலில்லாத படைகளும் ஒருவனுக்கு இருக்குமாயின், அப்போது தான் செய்ய எண்ணிய தொழிலை ஒருவன் தொடங் கலாமென்றும், எவ்வளவு வலியற்றவராயினும் பகைவர் இகழ்தல் கூடாதென்றும் அறிகின்றோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரசர் தமக்குச் சமானமானவரிடத்துப் பகைகொண்ட விடத்து மேற்கூறிய யாவும் வேண்டப் பட்டனவேயாம். மிகப் பலமுடை யான் ஒருவனுக்கு இவ்வித அரண் முதலியவை எற்றிற்கு?" என் னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

492. முரண்சேர்ந்த மொய்ம்பி னவர்க்கு மரண்சேர்ந்தா
மாக்கம் பலவுந் தரும்.

(பரி.) இ-ள். முரண்சேர்ந்த மொய்ம்பினவர்க்கும்=மாறுபாட்டோடு கூடிய வலியினையுடையார்க்கும்—அரண் சேர்ந்து ஆம் ஆக்கம் பலவுந்தரும் =அரணைச்சேர்ந்தாலுண்டாகும் பலபயன்களையும் கொடுக்கும். எ-று.

மாறுபாடாவது:—ஞாலம் பொதுவெனப் பொறாதசர்மனத்தின்கணி கழ்வதாகவாறும், வலியுடைமை கூறியவதனாலும், இது பகைமேற் சென்றவரசர் மேற்றாயிற்று. உம்மை சிறப்பும்மை. அரண்சேராதாராக்கமு முண்மையின், எண்டாக்கம் விசேடிக்கப்பட்டது. ஆக்கமென்றது அதற் கேதுவாய முற்றினை. அது கொடுக்கும் பயன்களாவன:—பகைவர்தமக்கு எளியின்மையும், தாம் நிலைபெற்று நின்று அவரை நலிதலும் முதலா

யின. (உ)

விளக்கம்:—எவராலும் அழிக்கக்கூடாத பெரியதோர் வலிமையை உடையவராயினும் அவரும் பகைமேல் செல்லுகின்றகாலத்து மேற்கூறியனவாகிய அரண்களைத் துணையாகக் கொண்டு தம் தொழிலைச் செய்வாராயின், மிக்கதோர் பயனை அடைதல் கூடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அரண் இல்லாமலே வலிமை கொண்ட அரசர்க்குத் தாம் எண்ணிய தொழிலைச் செய்வதே முடிக்கத்தக்க செயல் உண்டாகாது. அரணோடு நின்று தம்தொழி



லைச் செய்வார்க்குப் பகைவரால் நேரக்கூடிய துன்பங்களைத் தடுத்தலும், தாம் நிலைபெற்று நிற்றலும் அவ்விதம் நின்றவிடத்துத் தம்மை எதிர்த்த பகைவரைத் துன்புறுத்தலும் ஆகிய துணைகளை அரண் உண்டாக்கும். ஆகையால், அரணோடு நின்ற அரசர் தாம் எண்ணிய தொழிலை முடிப்பதற்கு அரணால் பயன் அடைவர் என்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் இடனறியாது தொழிலைச் செய்யப்புகின் அதனால் ஏது ஆகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

493. ஆற்றாரு மாற்றி யடுப விடனறிந்து
போற்றார்கட் போற்றிச் செயின்.

•(பரி.) இ-ள். ஆற்றாரும் ஆற்றி அடுப = வலியரல்லாதாரும் வலியராய் வெல்வர்,—இடன் அறிந்து போற்றிப் போற்றார்கண் செயின் = அதற் கேற்ற விடத்தினையறிந்து தம்மைக் காத்துப் பகைவர்மாட்டு வினைசெய்வாராயின். எ-று.

வினையென்பதூஉம் தம்மையென்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. காத்தல் = பகைவரான் நலிவு வாராமல் அரணாலும் படையாலும் காத்தல். இவ்வாற்றான் வினைசெய்வாராயின் மேற்சொல்லிய வலியின்றியும் வெல்வ ரென்பதாம். (௩)

விளக்கம்:—அரசராவார் தாம் தொடங்கிய தொழிலுக்கு ஏற்க இடத்தினை அறிந்து தம்மைக்காத்துக்கொண்டு பகைவர் மீது போரைச் செய்வாராயின், வல்லமை இல்லாதவராயினும் வல்லமையுடைய

ளைப் வெல்லுதல் கூடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஒருவனுக்கு மேற்கூறிய வலியென்பது இல்லாமலிருந்தாலும் தான் போர் செய்ய எண்ணிய இடன்மாத்திரம் காவ்சிந்த அரணோடும் கூடியிருப்பதாயின் அவ்வரண் வலிமையால் வலியுள்ளவர்களையும் வெல்லுதல் கூடும் என்று இதனால் அறிகின்றோம். ஆதலால், இடனறிதலென்பது தொழிலைச் செய்பவர்க்கு முக்கியமென்று அறிக் தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "மிக்க வலியுடைய பகை அரசரை இவ்விடனறிதலால் எவ்விதம் வெல்லுதல் கூடும்? இவர் வலி எவ்விதம் தொலைதல் கூடும்?" என்னலும், ஆசிரியர் கூற லாராயினர்.



494. எண்ணியா ரெண்ண மிழப்ப ரிடனறிந்து
துன்னியார் துன்னிச் செயின்.

(பரி.) இ-ள். இடன் அறிந்து துன்னியார்—தாம் வினைசெய்தற் கேற்ற விடத்தினையறிந்துசென்ற வரசர்—துன்னிச் செயின்—அரணைப் பொருந்தி நின்று அதனைச் செய்வாராயின்,—எண்ணியார் எண்ணம் இழப்பர்—அவரை வெல்வதாக வெண்ணியிருந்த பகைவர் அவ்வெண்ணத்தினை யிழப்பர். எ-று.

அரணென்பது அவாய்நிலையான் வந்தது. எண்ணமென்றது எண்ணப்பட்ட தம்வெற்றியை. அதனை 'இழப்பர்' என்றார், அவர் வினை செய்யாமற் றம்மைக்காத்தமையின். இதனால் அவர் பகைவர் தோற்பரென்பதாயிற்று. இவை ஈன்குபாட்டானும் பகைவரரணின் புறத்திருப்பார் அதற்காமிடமறிதல் கூறப்பட்டது. (௪)

விளக்கம்:—தாம் எண்ணிய தொழிலைச் செய்வதற்குத் தக்க இடத்தினைத் தெரிந்து சென்ற அரசர் மேற்கூறிய அரண்களைப் பொருந்தி அத்தொழிலைச் செய்வாராயின், அவரை வெல்வதாக எண்ணி அவர்மீது பகை கொண்டிருந்த பகைவர் அவ்வெண்ணம் கைகூடாது தோல்வி அடைவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் வலியையும், காலத்தையும் அறிவதோடு இடத்தையு மறிந்து தம்மைக் காத்துக் கொள்ளுகின்ற அரசர்கள் தம்பகை

வரால் அழிக்கப்படாது அவரை வெல்வரென்றும், பகைவர் தோற்பரென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் பகைவரை அழிக்கக் கூடிய இடமறிந்து சென்றால் அல்லாமல் வெல்லுவதற்காகாது என்பதறிந்தோம். இதை ஓர் அநுபவஞானமாக எங்களுக்குக் காட்டல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

495. நெடும்புனலுள் வெல்லு முதலை யடும்புனலி
னீங்கி னதனைப் பிற.

(பரி.) இ-ள். முதலை நெடும்புனலுள் (பிற) வெல்லும் = முதலை ஆழமுடைய நீரின்கணாயிற் பிறவற்றையெல்லாந் தான் வெல்லாநிற்கும்;— புனலின் நீங்கின் அதனைப் பிற அடும் = அப்புனலினின்று நீங்குமாயின் அதனைப் பிறவெல்லாம் வெல்லாநிற்கும். எ-று.



எனவே, எல்லாருந் தந்நிலத்து வலியரென்பது கூறப்பட்டது. பிற வென்பது முன்னும் கூட்டப்பட்டது. நிலைப்படா நீரின்கட் பிறவெல்லாம் நிற்றலாற்றாமையின் அவையெல்லாம் முதலைக்கெளியவாம் அது பெயர்ந்து தற்குரிய நிலத்தின்கண் அந்நிலையாற்றாமையின் அஃதவற்றிற்கெல்லா மெளிதாமென்றது, மேற்செல்லும் அரசர் பகைவர் நிற்றலாற்றாவிட னறிந்து செல்வாராயின் அவர் தமக்கெளியராவரன்றித் தாம் நிற்கலாற்றா விடத்துச் செல்வாராயின் அவர்க்கெளியராவரென்னும் பொருள்தோன்ற நின்றமையின், இது பிறிது மொழிதலென்னுமலங்காரம். அவரை அவர் நிற்றலாற்றாவிடத்துச் சென்று வெல்க வென்பதாம். (௫)

விளக்கம்:—முதலை ஒன்று ஆழமுடைய நீரில் வசிக்கின்ற காலத்துத் தன்னிடத்தே வந்த எல்லாவற்றையும் தான்வென்று விடுமென்றும், அவ்வாழ்ந்த நீரை நீங்கி அப்புறப்பட்டு நிற்குமாயின் யாவற்றையும் வென்ற அம்முதலையைப் பிற உயிர்களெல்லாம் வென்றுவிடுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், எவரும் தம் நிலத்து உள்ளகாலத்து வலியரென்று இதனால் அறிகின்றோம். நிலைப்படாத நீரில் முதலை வசிக்கும் காலத்துப் பிற

உயிர்களெல்லாம் அவ்வாழ்ந்த ஜலத்துச்சென்று நிற்றற்கு அருமையாதலால் அவைகளையெல்லாம் முதலை வென்றுவிடுமென்றும், முதலையானது ஜலத்தில் நில்லாது நிலத்தின்கண் வந்தகாலத்தே நிலத்திலேயே வசிக்கும் ஏனைய உயிர்கள் அம்முதலையைச் சுலபமாக வென்றுவிடுமென்றும் கூறிய இவ்வுவமையால், அரசர் தம் பகைவர்மீது போர்செய்யச் சென்றகாலத்து அப்பகைவர் நிற்றற்குக் கூடாத இடத்தைத் தேடி அவரை மோதுவாராயின் அப்பகைவர் தோற்றுப் போவர் என்பதை இதனால் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், " இவ்விதம் கூறிய உவமையால் மிகுதியும் மகிழ்ந்தோம். இன்னும் ஏதேனும் உவமைகள் உளவாயினும் கூறுதல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

496. கடலோடா கால்வ னெடுந்தேர் கடலோடு
நாவாயு மோடா நிலத்து.

(பரி.) இ-ள். கால் வல் நெடுந்தேர் கடல் ஓடா = நிலத்தின்கண்ணே காலவலிய நெடிய தேர்கள் கடலின்கண்ணே ஓடமாட்டா,—கடல் ஓடும் நாவாயும் நிலத்து ஓடா = இனி அக்கடலின்கண்ணே ஓடும் நாவாய்களும் நிலத்தின்கண்ணே ஓடமாட்டா. எ-று.



கடலோடாவென்ற மறுதலையடையான் நிலத்தோடு மென்பது வருவிக்கப்பட்டது. கால்வனெடுந்தேரென்பது ஓடுதற்கேற்ற காலும் பெருமையுமுடையவாயினுமென்பதுபட நின்றது. மேற்சென்றார் பகைவரிடங்களை யறிந்து அவற்றிற்கேற்ற கருவிகளான் வினைசெய்கவென்பது தோன்ற நின்றமையின், இதுவும்மேலை யலங்காரமாயிற்று. (௬)

விளக்கம் :—நிலத்தினிடத்தே உருளும் வலிய கால்களை உடைய பெரிய தேர்கள் கடலிடத்தே ஓடமாட்டா வென்றும், கடலிடத்தே ஓடும் நாவாய் முதலியனவை நிலத்து ஓடா வென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் எதெது எந்தெந்த

இடத்திற்கு உரியதோ அந்தந்த இடத்தில் செயல் பெற்று நிற்குமென்றும், ஆதலால் பகைவரை வெல்லவேண்டிய அரசர் தாம் நிலைக்கக்கூடிய இடத்தையும் பகைவர் நிலைத்தற்கில்லாத இடத்தையும் அறிந்து போர் செய்தல்வேண்டுமென்றும் இதனால் பெற்றோம். சக்கரங்கள் முதலியவை வலிமையுடைய தேராக இருந்தாலும் அது ஜலத்தில்செல்லும் தகுதி வாய்க்கப்பெறாதிருப்பதையும், ஜலத்தில் செல்லக்கூடிய ஓடம் முதலியவைகள் நீரின்றி நிலத்தில் செல்லக்கூடாதிருப்பதையும் உவமித்துக் காட்டியதால், அவரவர் நிலம் அவரவர்க்கே பெருமை தரும் என்பதை இதனால் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஓடம் வண்டியில் வண்டி ஓடத்தில்" என்னும் முதுமொழியும் இங்கு ஞாபகத்திற்கு வருகின்றது. இனி, இடம் ஒன்று இருக்குமாயின் வேறு துணை ஒன்றும் வேண்டாவோ என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் விளம்புவாராயினர்.

**497. அஞ்சாமை யல்லாற் றுணைவேண்டா வெஞ்சாமை
யெண்ணி யிடத்தாற் செயின்.**

(பரி.) இ-ள். எஞ்சாமை எண்ணி இடத்தான் செயின் = பகையிடத்து வினைசெய்யுந் திறங்களையெல்லாம் ஒழியாதெண்ணி அவற்றை அரசர் இடத்தொடு பொருந்தச் செய்வாராயின், — அஞ்சாமை அல்லால்



துணை வேண்டா = அச்செயற்குத் தம் திண்மையல்லது பிறிதொரு துணை வேண்டுவதில்லை, எ-று.

திண்ணியராய் நின்று செய்து முடித்தலே வேண்டுவதல்லது 'துணை வேண்டா' வென்றார், அவ்வினை தவறுதற்கேதுவின்மையின். இவை மூன்று பாட்டானும் வினைசெய்தற்காமிடனறிதல் கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—அரசர் பகைவரிடத்துப் போர் செய்யப்புகுங் காலத்து அதற்கு வேண்டிய திறங்கள் யாவற்றையும் ஒன்று விடாது ஆராய்ந்தும் அதற்குத் தக்க இடனையறிந்தும் அவற்றிற் கேற்ப வினை செய்வார்களாயின், அவ்வித செயல்களுக்கு அவ்வரச ரது வலிமை யொன்றே போதும் என்றும், வேறு துணை ஒன்றும் வேண்டுவதில்லை' என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தம் வலி, மாற்றான் வலி, துணை வலி, என்ற மூவகைவலிமையினுள் இட மறிந்து செய்கின்ற மக்கட்குத் தாம் எண்ணிய காரியம் முடிப்பதற்குத் தம்வலி யொன்றே போதுமானதென்றும், துணை வலி யென்பதே வேண்டாமென்றும் கூறுவதால், ஒரு தொழிலைச் செய்து முடிப்பார்க்கு இட மறிதலே சிறந்ததென்று காண்கின் றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அவ்விதமாயின் இவ் விதம் இடமறியாத தகுதியுடைய ஒருவன் பெரிய பலமுடையவனா யிருப்பின் சிறிய பகைவனையும் அழித்தல் கூடாதோ?" என்ன லும், ஆசிரியர் கூறுவாராயினர்.

498. சிறுபடையான் செல்லிடஞ் சேரி னுறுபடையா
னூக்க மழிந்து விடும்.

(பரி.) இ-ள். உறுபடையான் = பெரும்படையுடையவரசன் — சிறு படையான் செல் இடம் சேரின் = வென்றிச்சிறுபடையுடையானை யழித்தல் கருதி அவன் புகலைச் சென்று சாருமாயின்,—ஊக்கம் அழிந்து விடும் = அவனுற் றன்பெருமை யழியும். எ-து.

செல்லிடம் = அவனுக்குச் செல்லுமிடம். அழிந்துவிடுமென்பது எழுந் திருக்குமென்றாற்போல ஒருசொல். ஊக்கத்தினழிவு உடையான்மேலேற் றப்பட்டது. தன் படைப்பெருமை நோக்கி இடனோக்காது செல்லுமேல், அஃது அப்படைக் கொருங்குசென்று வினைசெயலாகாமையானும் பயிற்சி யின்மையானும் அப்பெருமையாற் பயனின்றித் தானழிந்துவிடுமென்ப தாம். (அ)

விளக்கம்:—அரசன் ஒருவன் பெரும்படையை உடையவனு யினும் சிறு படையை உடைய ஒருவனை அழிக்க எண்ணி அவன் உள்ள இடத்தைச் சேருவானுயின், அச்சிறிய பகைவனுல் தன்னு டைய பெருமை அழிந்துபோம் என்று இத்திருக்குறள் கூறுகின் றது. அதாவது சிறிய பகைவனுயினும் அவனுக்கு அமைந்தநா யுள்ள இடத்தே பெரும்படையாளன் தன்படை முதலிய வலி மையை நோக்கி இடமென்பதைச் சிறிதும் நோக்காது செல்லுவா னுயின், தான் எப்புல முடையவனுயினும் அந்நிலத்தில் தனக்கும் தன் படைகளுக்கும் பழக்கமில்லாமையால் அழிந்துபோய் விடு வது திண்ணமென்று அறிந்ததாயிற்று. ஆதலால், எத்துணை ஆற் றல் உடையவராயினும் இடனறிந்து செல்லாவிடில் எண்ணிய கரு மம் முடியாததுடன் அழிவினையும் எய்துவர் என்பது பெற்றோ மென்றனர். அது கேட்ட மாணுக்கர், "இதனுல் எவரையும் அவர் உள்ள இடத்துச் சென்று தாக்குவதால் பயனில்லை என்று அறிந் தோம். ஆயினும் அவ்விதச் சிறுபடை உடையான் எவ்விதம் பெரும் படை உடையானை வெற்றியடைதல்கூடும் என்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

## 499. சிறைநல னுஞ் சீரு மிலரெனினு மாந்த ருறைநிலத்தோ டொட்ட லரிது.

(பரி.) இ-ள். சிறை நலனும் சீரும் இலர் எனினும்=அரணழித்தற் கருமையும் பெருமையாகிய வாற்றலுமுடையரல்லராயினும்,—மாந்தர் உறை நிலத்தோடு ஒட்டல் அரிது=வினைக்குரிய மாந்தரை அவருறை கின்ற நிலத்தின்கட் சென்று தாக்குதலரிது. எ-று.

நிலத்தோடென்பது வேற்றுமை மயக்கம். ஆண்மையுடையாரைச் சிறுமைநோக்கி இருப்பின்கட் சென்று தாக்கின் அவர் அதுவிட்டுப்போதற் றுணிவினரன்றிச் சாதற்றுணிவினராவர்; ஆகவே, அவர்க்குப் பெரும் படை யுடைய மென்பதாம். (க)

விளக்கம்:—தம்பகைவாது அரண் முதலாகியவைகளை அழித் தற்குரிய வலிமையும் பெருமையும் உடையவர்களா யிருப்பினும் அப்பகைவர் வசிக்கின்ற இடத்திற் சென்று அவரைத் தாக்கு தல் முடியாததாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால், தம்முயிர்

இழப்பினும் தம் ஆண்மை கெடாவண்ணம் காக்கும் ஆண்மையுடையாரை அவர் தம்மினும் சிறியரென்றெண்ணி அவர் இருக்குமிடம் சென்று தாக்குகின்ற காலத்தே, அவர் தம் ஆண்மை கெடாவண்ணம் தம்மிடத்திலேயே நின்று உயிர்போம் துணையும் போராடுவாராதலால், வேற்று நிலத்திலிருந்து சென்ற பெரிய அரசரது பெரும்படை அச்சிறுபடை யுடையானுக்குத் தோற்றுவிடுமென்பதும், அதனால் வலிமையுடைய அரசர் சிறுபடையுடையானால் அழிக்கப்படுவார் என்பதும் மேல் வினவிய வினாவிற்கு விடையாயிற்று என்று கூறினர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் இடமில்லாத இடத்துச் சென்றால் எத்துணைப் பெரியரும் அழிந்து போவர் என்பதை ஓர் உவமையினால் விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

500. காலாழ் களரி னரியடுங் கண்ணஞ்சா
வேலாண் முகத்த களிறு.

(பரி.) இ-ள். கண் அஞ்சா வேலாள் முகத்த களிறு = பாகர்க்கடங்காவாய் வேலாட்களைக் கோத்த கோட்டவுமாய களிறுகளை—கால் ஆழ் களரின் நரி அடும் = அவை காலாழு மியல்பிற்றாய சேற்றுநிலத்துப்பட்டுழி நரி கொல்லும். எ-று.

முகம்—ஆகுபெயர். ஆண்மையும் பெருமையுமுடையாரும் தமக்கேலா நிலத்துச் செல்லின் அவற்றாற் பயனின்றி மிகவுமெளியராய் அழிவ ரென்பது தோன்ற நின்றமையின், இதுவும் அவ்வலங்காரம். வேலாழ் முகத்தவென்று பாடமோதுவாருமுளர்: வேற்படை குளித்த முகத்தவாயின் அதுவும் எளிபடுதற்கேதுவாய் முடிதலின், அது பாடமன்மையறிக. இவை மூன்று பாட்டானும் பகைவரைச் சார்தலாகாவிடனும் சார்ந்துழிப் படுமிழுக்கும் கூறப்பட்டன. (௰)

விளக்கம்:—தம்மைச் செலுத்துகின்ற பாகர்களுக்கு அடங்காதனவும் படைக்களத்திலே யுத்தத்திற்கு வந்த வேலுடைய வீரர்களைக் கோத்த கொம்புகளை உடையனவுமாகிய யானைகளை, அவைகளுடைய கால்கள் புதையக்கூடிய சேற்று நிலத்தில் கண்டால், மிக எளிய பலமுடைய நரியும் கொன்றுவிடும் என்று இத்திருக்

குறள் கூறுகின்றது. ஆதலால், 'தன்னூருக்கு யானை; அயலூருக்



குப் பூனை' என்னும் முதுமொழியும் இதனால் வழங்கப்படுகின்றது. அதாவது, யானை ஒன்று கால் புதையக்கூடிய சேற்றில் சென்று விடுமாயின் அதனது தேகப் பளுவால் சேற்றில் புதைவதற்கே இடமாகுமே அன்றி அச்சேற்றைவிட்டு வெளியே வருவதற்கு இல்லாமையால், அச் சேற்றில் நிற்கக்கூடிய தகுதியுடைய சிறு நரியும் அப்பெரியதோர் யானையைக் கடித்துக் கொன்றுவிடும். ஆகவே, பெரிய படையை யுடையானும் தனக்குப் பொருந்தாத இடத்தில் சென்ற காலத்தே அதினின்றும் பெயர்ந்து வருவதற்கு முடியாதுபோம் ஆனதால் மாய்ந்துபோவனென்று இத்திருக்குற ளால் நன்குக அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விடனறிதல் என்னு மதிகாரத்தால் பகைவர் உள்ள இடத்தே செல்லுதல் ஆகாதென்றும், அவ்விதம் சென்றால் உண்டாகும் துன் பத்தினையும் அறிந்தோம். இனி, அரசன் ஒருவனுக்குத் துணைவலி யாகவுள்ள அமைச்சர் முதலாயினோரை எவ்வாறு தெரிந்துகொள் ளுதல் வேண்டும் என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 51. அதிகாரம்.

## தெரிந்துதெளிதல்.

---

(பரி.) இ-ள். அஃதாவது அமைச்சர் முதலாயினாரைப் பிறப்புக் குணம் அறிவென்பனவற்றையுஞ் செயலையும் காட்டி கருதது ஆமெமென் னும் அவைகளானாராய்ந்து தெளிதல். வலிமுதன் மூன்றுமறிந்து பகை மேற் செல்வானுக்குத் தானை வினையுற்றச் செய்தற்பொருட்டும் அறை போகாமற் பொருட்டும் இது வேண்டுதலின், அவற்றின்பின் வைக்கப் பட்டது.

விளக்கம்:—அரசன் ஒருவன் தனக்கு அமைய வேண்டிய அமைச்சர் முதலியவரை அவர்களது பிறப்பு, குணம், அறிவு, என்பவைகளையும் அவர்களது செயல்களையும் காட்சி, அநுமானம், ஆகமம் என்னும் மூன்று அளவைகளாலும் ஆராய்ந்து



தெளிதல். மேற்கூறிய வலியறிதல், காலமறிதல், இடமறிதல் ஆகிய மூன்றினையும் அறிந்து பகைவர்மீது போருக்குச் செல்வானுக்கு அவனுடைய படை வீரர்கள் தம் தம் தொழிலைப் பொருந்திச் செய்வதற்கும், அறை போகாமல் இருப்பதற்கும் இத்தெரிந்து தெளிதல் வேண்டுதலால், அவ்வதிகாரங்கள் மூன்றிற்குப் பின் இவ்வதிகாரம் வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவனை ஆராய்ந்து தெளிதல் வேண்டும் என்பதை அறிகின்றோம். எவ்விதம் ஆராய்தல் வேண்டுமென்றும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

501. அறம்பொரு ளின்ப முயிரச்ச நான்கின்
திறந்தெரிந்து தேறப் படும்.

(பரி.) இ-ள். அறம் பொருள் இன்பம் உயிரச்சம் = அரசனாற்றெளியப் படுவானொருவன், அறமும் பொருளும் இன்பமும் உயிர்ப்பொருட்டான் வரும் அச்சமுமென்னும்—நான்கின் திறம் தெரிந்து தேறப்படும்—உபதை நான்கின்றிறத்தான் மனவியல்பாராய்ந்தால் பின்பு தெளியப்படும். எ-று.

அவற்றுள், அறவுபதையாவது:—புரோகிதனையும் அறவோரையும் விட்டு, அவரால் இவ்வரசன் அறவோனன்மையின் இவனைப் போக்கி அறனுமுரிமையு முடையானொருவனை வைத்தற்கெண்ணினம் இதுதான் யாவர்க்கு மியைந்தது நின் கருத்தென்னையெனச் சூளுறவோடு சொல்லுவித்தல். பொருளுபதையாவது:—சேனைத் தலைவனையும் அவனோடியைந் தாரையும் விட்டு, அவரான் இவ்வரசன் இவறன்மாலையனாகலின் இவனைப் போக்கிக் கொடையு முரிமையு முடையானொருவனை வைத்தற்கெண்ணினம் இதுதான் யாவர்க்கு மியைந்தது நின்கருத்தென்னையெனச் சூளுற வோடு சொல்லுவித்தல். இன்பவுபதையாவது:—தொன்று தொட்டு உரிமை யோடு பயின்றுவரு முதுமகளை விட்டு, அவளால் உரிமையுள் இன்னுள் நின்னைக்கண்டு வருத்தமுற்றுக் கூட்டுவிக்க வேண்டுமென்று என்னை விடுத்தாள் அவளைக் கூடுவையாயின் நினக்குப் பேரின்பமே

வன்றிப் பெரும்பொருளும் கைகூடுமெனக் குறளையோடு சொல்லுவித்தல். அச்சவுபதையாவது :—ஒரு நிமித்தத்தின் மேலிட்டு ஓரமைச்சனால் ஏனையோரை அவனில்லின்கணழைப்பித்து, இவர் *அறை போயினாரென்னரசற் குச் சூழ்ந்திலினரென்று தான் காவல் செய்து, ஒருவனால் இவ்வரசன் நம்

* அறைபோதல்=கீழறுத்தல் அதாவது, அரசனறியாவண்ணம் பலர் கூடி சதியாலோசனை செய்தல்.



மைக் கொல்வான் சூழ்கின்றமையின் அதனை நாம் முற்படச்செய்து நமக் கினியவரசனொருவனை வைத்தல் எல்லார்க்கு மியைந்தது நின்கருத் தென்னையெனக் குறளையோடு சொல்லுவித்தல். இந்நான்கினுந்திரிபில னுயவழி எதிர்காலத்தும் திரிபிலனெனக் கருத்தளவையாற் றெளியப்படு மென்பதாம். இவ்வடநூற்பொருண்மையை யுட்கொண்டு இவரோதிய தறியாது பிறரெல்லாம் இதனை உயிரெச்சமெனப் பாடந்திரித்துத் தத்தமக் குத் தோன்றியவாறே யுரைத்தார். (௧)

விளக்கம்:—அரசனால் தெளியவேண்டிய ஒருவன் அறம் பொருள், இன்பம், உயிர்பொருட்டால் வரும் அச்சம் என்னும் சோதனைகளால் அவன் மனவியல்பினை ஆராய்ந்தபடி அவனைப் பின்னர் தெளியப்படும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. எவ் விதமெனின்? அறத்தால் சோதிப்பதாவது அறங்கூறும் அற வோரையும் நன்மை தீமை கூறும் புரோகிதரையும் தெளியப்பட வேண்டுவோனிடத்து அனுப்பி ‘இவ்வரசன் நூல்களில் கூறிய படி அறத்தைச் செய்பவனாக இலன்; அதற்குமாறானவைகளைச் செய்கின்றான். ஆதலால் இப்போது உள்ள இவ்வரசனைப் போக்கி அறத்தின் வழி நடப்பவனும், குடிகளிடத்தில் உரிமையும் உடையவனுமாகிய வேறு ஒரு அரசனை வைப்பதற்கு எண்ணியுள் ளோம்; இக்கருத்தினை யாவரும் சம்மதிக்கின்றனர்; இவ்விதமாறு பாட்டில் உன்னுடைய கருத்து யாது?" என்று வஞ்சகத்தோடு சொல்லுவித்து அக்கருத்துக்கு அவன் உடன்படுவானாயின் அவன் அரசனிடத்திருக்க யோக்கியதையுடையனல்லனென்று தள்ளியும், அக்கருத்துக் கிசையாது இப்போது உள்ள அரசனையிகச் சிறக்

தான் என்று உரிமை பாராட்டுவானாயின் அரசன் அமைப்புக்கு உரியனென்று வைத்துக்கொள்ளுதலும் ஆகும். இனிப் பொருளால் சோதிப்பதாவது சேனைக்குத் தலைவனாக உள்ளவனையும் அவனோடு சேர்ந்தாரையும் அனுப்பி இவ்வரசன் பொருளிடத்துப் பற்று உடையவனும் பாருக்கும் கொடாத லோபியா யிருப்பதால், இவனை அரசினின்றும் நீக்கிக் கொடையாளியாய்க் குடிகளிடத்தில் உரிமை யுடையவனும் உள்ள வேறொரு அரசனை வைப்பதற்கு எண்ணி யுள்ளோம்; இவ்வெண்ணம் உனக்கு எவ்விதம் உள்ளது?" என்று வஞ்சகத்தோடு சொல்லுவித்து அதற்கு அவன் சம்மதிப் பானாயின் அவ்வித தகுதியுடையானைக் கொள்ளாது நீக்கியும்,



அவ்வாறன்றி அக்கருத்தைத் தழுவாது 'இவ்வரசன் மிகப்பெருங் கொடையாளன்; இவனே இருத்தல் வேண்டும்' என்று கூறு வானாயின் அவனை அரசன் தன்னிடத்தே வைத்துக்கொள்ளுதல் ஆகும். இனி இன்ப சோதனையாவது மிகப் பழமையாக அரசன் மனைவியர் முதலியவர்களிடத்துப் பழகி வருபவளாகிய தவம்புரியும் வயது சென்ற ஓர் முதுமகளை அனுப்பி அவளால் இவ்வரசனுக்கு உரிமையுள்ளவளாகிய, பெண் ஒருத்தி உன்னைப்பார்த்து எவ்வித மேனும் தன்னை உன்னிடத்துக்கூட்டுவிக்கவேண்டும் என்று என்னை அனுப்பினள் அப்பெரியதகுதியுடையாளை நீ சேருவையாயின் உனக்கு அதனால் பெரியதோர் இன்பம் கிடைப்பதுமல்லாமல் பெரும் பொருளும் உனக்குக் கிடைக்கும் என்று வஞ்சகமாக சொல்லுவித் தல். அவ்வஞ்சகத்திற்கு உடன்படுவானாயின் அவனைக் கொள்ளாது உடன்படாது அறம் கூறுவானாயின் அவனைக்கொண்டு நிற்றலும், ஆகும். அச்சத்தால் சோதிப்பதாவது ஏதோ ஒரு காரணத்தை முன்னிட்டு அமைச்சன் ஒருவனால் வலியுள்ள மற்றவர்களையெல் லாம் அவன் வீட்டின் கண் அழைப்பித்து, இப்போது வந்தவர்களா கிய இவர் எல்லாம், கூடியிருப்பது அரசனுக்கு விரோதமாய் காரியங் களைச் செய்வதற்கு என்று கூறுவதுடன் இவ்வரசனாவான் வலி யுள்ள ஒருவனைக்கொண்டு நம்மையெல்லாம் கொல்லும்படி

ஆராய்ந்து நிற்பதால் அவன் அவ்விதம் நம்மைக் கொல்வதற்கு முன் நாம் அவனைக்கொன்று நமக்கு இனிய அரசன் ஒருவனை வைத்தல் வேண்டும். இவ்வெண்ணமே இங்கு கூடியுள்ள யாவர்க்கும் உள்ளது. ஆதலால் இவ்வெண்ணத்திற்கு உன் கருத்து எதுவாக உள்ளது? என்று வஞ்சகத்தோடு சொல்லுவித்தல், இக்கருத்துக்கிசைந்து நிற்பானாயின் அவனைக் கொள்ளாதும், இசையாது அறம் கூறு வானாயின் அவனைக்கொண்டு நிற்றலும் ஆகும் ஆதலால் இவ்விதம் நான்கு உபாயங்களையும் செய்து ஒருவனை ஆராய்ந்து தன் வீட்டுத் உத்தியோகத்திற்கு வைத்துக்கொள்ளுதலே தெரிந்து தெளிதலாகும். ஏனெனில் இவ்வித நான்கு சூழ்ச்சிகளாலும் மனம் திரியாதவன் மற்று எக்காலத்தும் மனம் திரியான் என்பது கருதி யே என்றனர். அதுகேட்ட மாணுக்கர் அறவோய்! நான்கு சோதனைகளால் அறிவது இது வென அறிந்தோம். ஆனால் முன்னர் பிறப்பு, குணம், அறிவு, என்பனவற்றையும் தெரிந்து தெளிய



வேண்டும் என்று கூறியதால் அவற்றையும் விளக்கல் வேண்டும் என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

502. குடிப்பிறந்து குற்றத்தி னீங்கி வடுப்பரியு
நாணுடையான் கட்டே தெளிவு.

(பரி.) இ-ள். குடிப் பிறந்து=உயர்ந்த குடியிற்பிறந்து—குற்றத்தின் நீங்கி=குற்றங்களினின்று நீங்கி—வடுப் பரியும் நாணுடையான் கட்டே தெளிவு=நமக்கு வடுவரும் கொலென்றஞ்சாநிற்கும் நாணுடையவன் கண்ணதே அரசனது தெளிவு. எ-று.

குற்றங்களாவன மேலரசனுக்குச் சொல்லியவகையாறும் மடி, மறப்பு, பிழைப்பென்றிவை முதலாயவுமாம். நாண்=இழிதொழில்களின் மனஞ்செல்லாமை. இவை பெரும்பான்மையும் தக்கோர்வாய்க் கேட்டலா லிய ஆகமவளவையாற்றெரிவன. இந்நான்கு முடையவனையே தெளிக வென்பதாம். (உ)

விளக்கம்:—உலகம் தோன்றிய காலமுதல் உயர் குடி, என்று பலரால் எண்ணப்படுகின்ற குடியில் பிறந்து குற்றங்கள் எல்லா வற்றிலும் நீங்கியவனும் தனக்கு ஏதேனும் நீங்காப்பழி வரு

மோ என்று அஞ்சி அதற்காக நாணமடையக் கூடிய அறிவுடையவனும் உள்ள ஒருவனையே அரசன் அறிந்து தெளிதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன், நற்குடித் தோற்றமுடையவனும் காமம், வெகுளி, உலோபம், மானம், மதம், உவகை என்னும் குற்றங்களும், சோம்பலும், மறப்பும், இழி தொழில்களும் இல்லாதவனுமாய் உள்ள ஒருவனையே தெரிந்தெடுத்தல் வேண்டும் என்று இதனால் பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் யாதொரு குற்றமுமில்லாமல் மக்களில் பலர் இருப்பர் போலும்," என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

503. அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா
லின்மை யரிதே வெளிறு.

(பரி.) இ-ள். அரிய கற்று ஆசு அற்றார் கண்ணும் = கற்றற்கரிய நூல்களைக் கற்று மேற்சொல்லிய குற்றங்களற்றார் மாட்டும்—தெரியுங்கால் வெளிறு இன்மை அரிது = நுண்ணிதாக ஆராயுமிடத்து வெண்மையில்லாமை அரிது. எ-று.



வெண்மை = அறியாமை; இஃது இவர்மாட்டுளதாவது மறைந்து நிலையாமையான் ஒரோவழியாகலின், 'தெரியுங்கால்' என்றார். காட்சியளவையாற் றெரிந்தால் அதுவுமில்லாதாரே தெளியப்படுவரென்பது குறிப்பெச்சம். இவ்வளவைகளான் இக்குணமுங் குற்றமுந்தெரிந்து குணமுடையாரைத் தெளிகவென்பது இவை மூன்றுபாட்டானும் கூறப்பட்டது. (௩)

விளக்கம் :—கற்பதற்கு அரியனவாகிய நூல்களையெல்லாம் கற்று மேற்கூறிய எல்லாக் குற்றங்களும் நீங்கியவரென்று உள்ளவரிடத்தும், வெகு நுட்பமாக ஆராயப் புகுந்தால், ஏதோ ஓர் அறியாமையானது புலப்படும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, எவ்வளவு கல்வி அறிவும் தூய்மையும் உடையவராயினும் அவரிடத்தே நுணுகி நுணுகிச்சென்று அவர் குணங்களை ஆராயப் புகுந்தால், ஏதோ ஓர் சிறிய குற்றம் இருக்கவே காண்போம் என்று அறிகின்றோமாதலால், நீங்கள் மேல் வினவிய படி குணமே உடையார் பலர் என்று கூறுவது முடியாததாகும்

என்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ்விதம் பரிட்த்தும் ஓர் குற்றம் இருக்குமென்னின், எவ்விதமாக அரசன் ஒருவன் தன்னுடைய தொழில்களுக்கு ஆள்களை அமைத்தல் கூடும் ?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

504. குணநாடிக் குற்றமு நாடி யவற்றுண்
மிகைநாடி மிக்க கொளல்.

(பரி.) இ-ள். குணம் நாடி=குணங்குற்றங்களுள் ஒன்றேயுடையார் உலகத்தின்மையின் ஒருவன் குணங்களையாராய்ந்து,—குற்றமும் நாடி=ஏனைக் குற்றங்களையுமாராய்ந்து,—அவற்றுள் மிகைநாடி=பின் அவ்விரு பகுதியுள்ளும் மிக்கவற்றையாராய்ந்து,—மிக்க கொளல்=அவனை அம்மிக்கவற்றானே பற்றுக' எ-று.

மிகையுடையவற்றை 'மிகை' என்றார். அவையாவன:—தலைமையானும் பன்மையானும் உயர்ந்தன. அவற்றானறிதலாவது:—குணமிக்கதாயின் நிறைகுறியனென்றும், குற்றமிக்கதாயின் அல்லனென்றுமறிதல். குணமே யுடையார் உலகத்தரியராகலின், இவ்வகை யாவரையுந் தெளிகவென்பது இதனாற் கூறப்பட்டது. (௪)



விளக்கம் :—குணம் குற்றங்களாகிய இரண்டினுள் ஒன்றினையே உடையார் உலகத்து இல்லாமையால், ஒருவனது குணங்களையும் குற்றங்களையும் ஆராய்ந்து அவ்விரண்டினுள் மிகுதியாக உள்ளது எது என்றறிந்து குணம் மிகுந்திருக்குமாயின் கொண்டும், குற்றம் மிகுந்திருக்குமாயின் கொள்ளாதும் நிற்றல்வேண்டுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது குணங்களையே ஒருவன் மிகுதியும் உடையானாகி ஏதோ ஓர் அறியாமையுடையவனாயிருப்பானாயின், அவ்வறியாமையின் பொருட்டு அவனைக் கொள்ளாது விடாது குணங்களின் மிகுதிபற்றிக் கொள்ளுதல் வேண்டுமென்றும், ஒருவன் குற்றங்களையே பல உடையானாகி ஓர் சிறந்தகுணமுடைய

வனுப் இருப்பானுயின், அக்குணம் ஒன்றினையே நோக்கிக் கொள்ளாது, குற்றங்களின் மிகுதிபற்றி ஒழித்தல் வேண்டுமென்றும் அறிகின்றோம். ஏனெனில்? குற்றமே இல்லாது குணமேயுடையார் உலகத்திருப்பது அருமையாதலால், இவ்விதமே அரசன் தனக்கு வேண்டியவரை அறிந்து தெளிதல் வேண்டும் என்பது பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "பிறப்பு, குணம், அறிவு என்பனவற்றை ஆராய்ந்து அறிதலென்பதை அறிந்தோம். இனிச் செயலென்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

505. பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங்
கருமமே கட்டளைக் கல்.

(பரி.) இ-ள். பெருமைக்கும் ஏனைச்சிறுமைக்கும் கட்டளைக்கல்=பிறப்புக் குணம் அறிவென்பனவற்றான் மக்களெய்தும் பெருமைக்கும் மற்றைச் சிறுமைக்கும் உரைகல்லாவது—தத்தம் கருமமே = தாந்தாஞ்செய்யும் கருமமே, பிறிதில்லை, எ-று.

இஃதேகதேச வுருவகம். மக்களது பெருமையுஞ் சிறுமையுந் தப்பாமலறிவதற்குப் பிறகருவிகளுமுளவாயினும், முடிந்த கருவி செயலென்பது தேற்றேகாரத்தாற்பெற்றாம். இதனாற் குணக் குற்றங்கள் நாடற்குக் கருவி கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—மக்களுடைய பெருமையும், சிறுமையும் தவறாது அறிவதற்கு அவரது பிறப்பு, குணம், முதலியவைகளேயாயினும்,



அவரது செயலே அதை அறிவதற்கு முக்கிய கருவியாக உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? பொற்கொல்லன் ஒருவன் தன்னிடத்தே கிடைத்த பொன்னின் தகுதியை உரைகல் கொண்டு பார்ப்பதுபோல், மக்களது பெருமையையும் சிறுமையையும் அறிவதற்கு உரைகல்லாக இருப்பது அவர் செய்யும் செய்கையே என்று முடிந்த பொருளாயிற்று. ஆகவே, ஒருவன் குணமுடையான் குற்றமுடையான் என்று ஆராய்வதற்கு அவனுடைய செயலே கருவியாக உள்ளது. என்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஒருவன் குடிப்பிறப்பை அறிந்து தெளிய வேண்டும் என்று முன்னர் கூறினமையால், நற்குடிப் பிறந்தான்

என்று அறிவதற்கு என் செய்தல் வேண்டும் ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

506. அற்ருரைத் தேறுத லோம்புக மற்றவர்
பற்றிலர் நாணர் பழி.

(பரி.) இ-ள். அற்ருரைத் தேறுதல் ஓம்புக=சுற்றமில்லாரைத் தெளிதலை யொழிக ;—அவர் மற்றப் பற்று இலர்=அவர் உலகத்தோடு தொடர்பிலர்,—பழிநாணர்=ஆகலாற் பழிக்கஞ்சார். எ-று.

பற்றிலரென்பதனுல் சுற்றமென்பது வருவிக்கப்பட்டது. உலகத்தார் பழிப்பன வொழிதற்கும் புகழ்வன செய்தற்குமேதுவாகிய உலகவுடை யியைப்பு சுற்றமில்லாதார்க்கு இன்மையின், அவர் தெளியப்படாரென்பதாம். (சு)

விளக்கம் :—சுற்றமில்லாதவர் உலகத்தவரிடம் சம்பந்தமில்லாதவரென்றும், அதனுல் பழிகளைச் செய்ய அஞ்சாரென்றும், ஆதலால், அவர்களை ஒருவன் தன் வினைக்குத் தெரிதலை ஒழித்தல் வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோ வெனின் ? உலகத்து மக்கள் நற்குடித் தோற்றம் உடையவரா யிருப்பின், அக்குடிக்கு உரியாராகிய பலர் அவருக்குப்பந்துக்களாக இருப்பார்களென்றும், அவ்விதம் சுற்றத்தவரோடு கூடியிருக் கின்ற குடிப்பிறந்தார் தம் சுற்றத்தவர்க்குப் பயந்து உலகத்தாரால் பழிக்கப்படுவனவாகிய காரியங்களைச் செய்யமாட்டார் ஆதலால், அவ்வித தகுதி உடையாரே அரசனும் தெளியப்பட வேண்டியவ



ரென்றும், அவ்விதமில்லாது யாதொரு சுற்றமுமில்லாமலும், யாரிடத்தும் தொடர்பு இல்லாமலும் இருப்பவர்கள் பழிக்கு அஞ்சமாட்டார்களாதலால், அவ்வித தகுதியுடையாரைக் கொள்ளுதல் ஆகாதென்றும் அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணக்கர், "அரசன் ஒருவன் தனக்கு ஒருவன்மீதுள்ள அன்பினுல் அவனுடைய தகுதி நோக்காது அவனைத் தன்னுடைய வினைக்கு வைத்

தக்கொள்ளுதலாகாதோ ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**507.** காதன்மை கந்தா வறிவறியார்த் தேறுதல்
பேதைமை யெல்லாந் தரும்.

(பரி) இ-ள். காதன்மை கந்தா அறிவு அறியார்த் தேறுதல்—அன்புடைமை பற்றுக்கோடாகத் தமக்கறியவேண்டுவன அறியாதாரைத் தெளிதல்—பேதைமை எல்லாம் தரும்—அரசனுக்கு எல்லாவறியாமையையுங் கொடுக்கும். எ-று.

தன்னொடு அவரிடைநின்ற அன்புபற்றி அரசன் அறிவிலார்மேல் வினையை வைப்பின், அஃது அவரறிவின்மையாற் கெடும்; கெட்டால் அவர்கணதேயன்றி வினைக்குரியாரை அறியாமை, மேல்வினையறியாமை முதலாக அவனுக்கு அறியாமை பலவுமுளவாமென்பதாம். (எ)

விளக்கம்:—அரசன் தனக்கு ஒருவன்மீதுள்ள அன்பினால் அரசர்க்குச் செய்யவேண்டிய கடமைகளை அறியாதானைத் தனக்கு உரியவனாகத் தெளிவானாயின், அவ்வரசனுக்கு அவ்வித தேர்ச்சியால் எல்லா அறியாமைகளும் உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவன்மீது தனக்கு உள்ள அன்பின் மிகுதியால் அவனது குணத்தினையும் குற்றத்தினையும் ஆராயாது அவனிடத்தே அரசனானவன் தன் வினையை வைப்பானாயின், அத்தொழிலானது அவனது அறியாமையால் முடியாது கெட்டுப் போய்விடும். அவ்விதம் தொழிலானனுடைய அறியாமையால் தொழில் கெட்டுப்போவதால், அரசன் தக்கவரல்லாரை வைத்தானென்கின்ற அறியாமையும், அவ்விதம் செய்ததால் மேல் வினைவதறியாத அறியாமையும், ஆகிய பல அறியாமைகளும் அரசனுக்கு உண்டு என்று உலகத்தாரால் பழிக்க நேருமாதலால், அரசனானவன் 'தனக்கு உள்ள அன்பின் காரணத்



தால் வினைக்கு உரியரல்லாதாரைத் தெளிதல் கூடாதென்று இதனால் அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணக்கர், "இவ்விதம்

அரசன் அன்பு காரணமாக யாரையும் தொழிலில் வைத்தலாகாது என்பது அறிந்தோம். புதியவனாக வந்த ஒருவனை ஆராயாது அரசன் தொழிலில் வைப்பானாயின், அது என்ன ஆகும்?" என்னவும், ஆசிரியர் கூறலாயினர்.

508. தேரான் பிறனைத் தெளிந்தான் வழிமுறை
தீரா விடும்பை தரும்.

(பரி.) இ-ள் பிறனைத் தேரான் தெளிந்தான்=தன்னோடியைபுடைய னல்லாதானைப் பிறப்புமுதலியவற்றானும் செயலானும் ஆராயாது தெளிந்த அரசனுக்கு—வழிமுறை தீரா இடும்பை தரும்=அத்தெளிவு தன்வழி முறையினும் நீங்காத துன்பத்தைக் கொடுக்கும். எ-று.

இயைபு=தன் குடியோடு தொடர்ந்தமரபு. இதனானே அதுவும் வேண்டுமென்பது பெற்றாம். தெளிதல்=அவன்கண்ணே வினையை வைத்தல். அவ்வினை கெடுதலால் தன் குலத்துப் பிறந்தாரும் பகைவர் கைப்பட்டுச் சீரழப் படுவரென்பதாம். கண்ணுருபு விகாரத்தாற் றொக்கது. (அ)

விளக்கம்:—அரசன் தன்னோடு சம்பந்தமில்லாத ஒருவனைப் பிறப்பு, குணம், அறிவு செயல் என்பனவற்றை ஆராயாது ஓர் தொழிலில் அவனுக்கு நியமிப்பானாயின், அவ்வித நியமிப்பு நியமித்த அவ்வரசனுக்கு மாத்திரமல்லாது அவ்வரசனது சந்ததியார்க்கும் நீங்காத துன்பத்தைத் தரும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? தன் குடியோடு சிறிதும் கொளுதலில்லாத மரபினை உடையனல்லாதும் நற்குடிப்பிறப்பு, நற்குணம், நல்லறிவு நற்செயல் முதலியனவைகளை உடையனல்லாதும் ஆகிய ஒருவனை அரசன் ஆராயாது தான் எடுத்த தொழிலுக்கு உரியவனாக வைத்து விடுவானாயின், அவ்வித அறியாமையால் அவன் கெடுவதுடன் அவன் வழி வந்தாரையும் குலத்தாரையும் பகைவரிடத்தே அகப்படும்படிச் செய்து மிகத் தாழ்ந்த நிலைமையில் செல்லும்படியும் செய்யும் என்றறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஆராயாது யாரையும் தேர்தல் கூடாது என்று அறிந்தோம். தேர்ந்த பிறகு ஒருவ

னிடத்து அரசன் ஐயுறுதல் எதுவாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

509. தேறற்க யாரையுந் தேராது தேர்ந்தபிற்
றேறுக தேறும் பொருள்.

(பரி.) இ-ள். யாரையும் தேராது தேறற்க = யாவரையும் ஆராயாது தெளியாதொழிக;—தேர்ந்தபின் தேறும் பொருள் தேறுக = ஆராய்ந்த பின் தெளியும் பொருட்களை ஐயுறாதொழிக. எ-று.

தேறற்கவென்ற பொதுமையான் ஒருவினைக்கண்ணும் தெளியலாகா தென்பது பெற்றும். ஈண்டுத் தேறுகவென்றது தாற்பரியத்தால் ஐயுறவி னது விலக்கின்மேனின்றது. தேறும்பொருளென்றது அவரவாற்றற் கேற்றவினைகளை. பொருள்—ஆகுபெயர். (௯)

விளக்கம்:—மேற்சொல்லிய அளவாக எவரையும் ஆராயாமல் தெளிதல் கூடாதென்றும், அவ்விதம் ஆராய்ந்து தெளிந்தபிறகு ஒருவனிடத்து எத்தொழிலை வைப்பதற்கும் ஐயப்படுதல் கூடாதென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவனை அறியாததற்குமுன் அவனை ஒரு தொழிலின்கண்ணும் வைத்தலாகாதென்றும், அவனவனுடைய வல்லமையை அறிந்து நோக்கி, தொழிலை வைத்த பிறகு அவனிடத்தே சந்தேகம் கொள்ளுதல் ஆகாதென்றும், அவ்விதம் சந்தேகம் கொண்டால் எடுத்தகாரியம் முடியாதென்றும் அறிஞரேமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் தேராது தெளிதலும், தெளிந்ததில் ஐயுறவு கொள்ளுதலும் அரசனுக்கு எதுவாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

510. தேரான் றெளிவுந் தெளிந்தான்க ணையுறவுந்
தீரா விடும்பை தரும்.

(பரி.) இ-ள். தேரான் தெளிவும் = அரசன் ஒருவனை யாராயாது தெளிதலும்—தெளிந்தான்கண் ஐயுறவும் = ஆராய்ந்து தெளிந்தவன்மாட்டு ஐயப்படுதலும் இவ்விரண்டும்—தீரா இடும்பை தரும் = அவனுக்கு நீங்காத

துன்பத்தைக் கொடுக்கும். எ-று.

வினை வைத்தபின் ஒரு தலை சாலுதலைவைத்த ஐயுறவாயின், அதனை அவனறிந்து இனி இது நில்லாதென்னுங்கருத்தால் அவ்வினையை கெடுத்



து விடும், அதுவேயன்றிப் பகைவரால் எளிதிற் பிரிக்கவும்படும், ஆகலாற் தெளிந்தான்கண் ஐயுறவுமாகாதாயிற்று. தெளிவிற்கெல்லை கூறியவாறு. இவையிரண்டுபாட்டானும், தெளியப்படாதார். இவரென்பதூஉம், அவரைத் தெளிந்தாற்படுமிழுக்கும், தெளிவிற்கெல்லையும் கூறப்பட்டன. (௰)

விளக்கம்:—அரசனானவன் ஒருவனை மேற்சொல்லிய அளவைகளால் ஆராயாது அவனிடத்தே ஓர் வினை வைத்தலும் அவ்விதம் வைத்தபிறகு அவனிடத்தே சந்தேகப்படுதலும் ஆகிய குணங்களை உடையவனாக இருப்பானாயின், அவ்வரசனுக்கு அவ்வித அறியாமையானது நீங்காத துன்பத்தை உண்டாக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோவெனில்? அரசன் ஒருவன் ஒருவனிடத்தே ஒரு தொழிற் பாரத்தைச் சுமத்தியபிறகு அவன் தக்கவனோ அல்லனோ என்று சந்தேகிப்பானாயின், தொழிலைச்செய்யநின்றவன் நம்மீது அரசன் சந்தேகிக்கின்றான், சந்தேகம் கொண்டமையின் அரசன் நம்மை நெடுநாள் இத்தொழிலில் வையான்' என்று எண்ணினவனாகி அவனுக்குக் கொடுத்த காரியத்தை ஊக்கத்தோடு செய்யாதவனாகி அக்காரியத்தைக் கெடுத்துவிடுதல்கூடும். அதுவல்லாமலும், 'அரசன் உன்மீது சந்தேகிக்கின்றான்; ஆதலால் அவனோடு நீ இருப்பது பயனில்லை' என்று பகைவர் அவனைப் பிரித்தலுங்கூடும். ஆகையால், ஒருமுறை ஒருவனைத் தொழிலுக்கு நியமித்த பிறகு அவனைச் சந்தேகிக்க எல்லாத் தீமையும் உண்டாகும் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஐய! தெரிந்து தெளிதல் என்னும் இவ்வதிகாரத்தால் தெளியவேண்டியவர் இவரென்றும் தெளியப்படாதார் இவரென்றும், தெளியப்படாரைத் தெளிந்து நிற்பதால் உண்டாகும் குற்றம் இதுவென்றும், தெளிந்தாரிடத்து ஐயுறவு கொள்ளுதலால் உண்டாகும் குற்றமிதுவென்றும் அறிந்தோம். இனி, அவ்விதம் தெளியப்பட்டவர்களுக்கு அரசன் வினைவைத்து ஆளும் விதத்தையும் கூறுதல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 52. அதிகாரம்.

## தெரிந்துவினையாடல்.

---

(பரி.) அஃதாவது அத்தெளியப்பட்டாரை அவர் செய்யவல்ல வினைகளை யறிந்து அவற்றின்கண்ணே யாளுந்திறம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.



விளக்கம்:—அதாவது மேற்கூறிய வண்ணம் தெளியப்பட்டவர்களை அவர்கள் செய்யக்கூடிய தொழில்களை அவர்க்கு வைத்து அவற்றை ஆளும் திறம். தெளிந்த பிறகு அக்காரியம் நிகழவேண்டுமாதலால் தெரிந்து தெளிதல் என்பதற்குப் பிறகு தெரிந்து வினையாடலென்னும் இவ்வதிகாரம் வைக்கப்பட்டுள்ளது என்றனர். அது கேட்ட மாணாக்கர், "தெளிந்தவனை எவ்விதம் ஆளப்படும் என்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

511. நன்மையுந் தீமையு நாடி நலம்புரிந்த
தன்மையா னாளப் படும்.

(பரி.) இ-ள். நன்மையும் தீமையும் நாடி = அரசன் முதற்கண் ஒரு வினையைத் தன்கண்வைத்தால், அதன்கணாவனவும் ஆகாதனவுமாய செயல்களை யாராய்ந்தறிந்து—நலம் புரிந்த தன்மையான் = அவற்றுள் ஆவனவற்றையே விரும்பிய இயல்பினையுடையான்—ஆளப்படும் = பின் அவனாற் சிறந்த வினைகளிலே யாளப்படும். எ-று.

தன்னையுரிமையறிதற்பொருட்டு அகம்புறங்கட்கு இயைவதோர் வினையை அரசன்றன்கண்வைத்தவழி அதன்கண் ஆஞ்செயல்களையே செய்தவன் பின்னும் அவ்வியல்பினனாதல்பற்றி அதற்காய வினைக்கண்ணே யாளப்படுமென்பதாயிற்று. புரிந்தவென்ற இறந்தகாலத்தான், முன்னுரிமையறிதற்பொருட்டு வைத்த வினையாதல் பெறும். (க)

விளக்கம் :—அரசன் முதலில் தன்னிடத்தே ஒரு தொழிலைச் சமத்தினால் அத்தொழிலிடத்தே அரசனுக்கு ஆவன இவையென்றும், ஆகாதன இவையென்றும் ஆராய்ந்து அறிந்து அவ்விரண்டினுள் ஆவனவற்றையே விரும்பிச்செய்யும் இயற்கையுடையானை மேலும் மேலும் சிறந்த தொழில்களில் நியமிக்கப்படும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தொழிலுக்கு நியமிக்கப்பட்டவன் உரிமையை அறியும் வண்ணம் ரகசியமானதும், ரகசியமல்லாததும் ஆகிய இரண்டிற்கும்பொதுவாகிய ஓர் தொழிலில் ஒருவனை அரசன் முதலில் நியமித்து பின்புகாலத்து, நியமிக்கப்பட்டவன் தன்னிடத்தே ஒப்புவித்த தொழிலில் ஆவனவற்றைச் செய்வானாயின், அதை அறிந்த அரசன்



‘இவன் இக்காரியத்தில் இவ்வளவு நன்மையைச் செய்து முடித்தான்; இனி இவ்விதமே எத்தொழிலைக் கொடுக்கினும் செய்து முடிப்பான்’ என்கின்ற நம்பிக்கையால் ரகசியமான தொழில்களையும் அவனிடத்து ஒப்புவிப்பான் என்று அறிந்தோம். அன்றியும், அரசன்மேற்கூறியபடி ஒருவனை எவ்வளவு தெரிந்து தெளிந்தாலும் அவனிடத்து முதலிலேயே ரகசியமாய்ச் செய்யவேண்டிய காரியங்களை ஒப்புவித்தல் கூடாதென்பதும் பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், “அரசனது தொழிலைச் செய்பவன் தனக்கு ஒப்புவித்த தொழில்களை எவ்வித தகுதியால் செய்யின், அவன் வினைக்கு உரியவனாவான்?” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

512. வாரி பெருக்கி வளம்படுத் துற்றவை
யாராய்வான் செய்க வினை.

(பரி.) இ-ள். வாரி பெருக்கி=பொருள்வருவாயில்களை விரியச் செய்து—வளம் படுத்து=அப்பொருளாற் செல்வங்களை வளர்த்து—உற்ற

வை ஆராய்வான்=அவ்வாயில்கட்கும் பொருட்குஞ் செல்வங்கட்குமுற்ற இடையூறுகளை எப்போதுமாராய்ந்து நீக்கவல்லவன்—வினை செய்க= அரசனுக்கு வினை செய்க. எ-று.

வாயில்களாவன:—மேல் இறைமாட்சியுள் "இயற்றலும்" என்புழி யுரைத்தனவும், உழவு, பசுக்காவல், வாணிகமென்னும் வார்த்தையுமாம்.* செல்வங்களாவன:—ஆண்டைப் பொருளுமின்பமுமாக உரைக்கப்பட்டன. இடையூறுகளாவன:—அரசன், வினைசெய்வார், சுற்றத்தார், பகைவர், கள்வரென்றிவரான் வரு நலிவுகள். (உ)

* வார்த்தை=விருத்தி, தொழில்.

விளக்கம்:—பொருள்வரும் வழிகளை விரியும்படிச் செய்தல், வந்தாகிய பொருளைக் கொண்டு செல்வங்களை வளர்த்தல், மேற்கூறிய பொருள்வரும் வழிகளுக்கும், வந்தாகிய பொருளுக்கும், மற்றுமுள்ள செல்வங்களுக்கும் சேர்ந்த துன்பங்களை நிலைதோறும் ஆராய்ந்து நீக்குதல் ஆகிய இவைகளைச் செய்யவல்லவன் எவனோ அவனே அரசனுக்கு வினைசெய்தல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேல் இறைமாட்



சியில் 385-வது திருக்குறளில் கூறியபடி பொருள்களை உளவாக்கலும், வந்தபொருளைச் சேர்த்தலும், சேர்த்தபொருளைக் காத்தலும், காத்தபொருளை அறம், பொருள், இன்பங்களின் பொருட்டாகச் செலவழித்தலும் ஆகிய காரியங்களைச் செய்தல் வேண்டுமாதலால், வினை செய்பவன் பொருள்களை வளர்க்கவேண்டுமாயின் மேற்சொல்லியபடி உழவுசெய்தலும், பசுக்காத்தலும், வாணிபம் செய்தலும் ஆகிய பொருள்வரும் வழிகளை விருத்திசெய்தல் வேண்டுமென்றும், அவ்விதம் விருத்திசெய்த தொழில்களால் வந்த பொருள்களுக்கு வேற்றரசனாலும், தன்னரசனது ஏவலாளர்களாலும், சுற்றத்தவராலும், பகைவர்களாலும், கள்வர்களாலும் துன்பம் வருமாயின் அத்துன்பத்தினை நீக்கிக் காத்தல் வேண்டும் என்றும், அவனே வினை செய்தற்கு உரியவன் என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித வினை செய்வான் எவ்வித தகுதியுடையனாயிருத்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

513. அன்பறிவு தேற்ற மவாவின்மை யிந்நான்கு
நன்குடையான் கட்டே தெளிவு.

(பரி.) இ-ள். அன்பு = அரசன்மாட்டன்பும் — அறிவு = அவனுக்கா வன வறியுமறிவும் — தேற்றம் = அவைசெய்தற்கட் கலங்காமையும் — அவாவின்மை = அவற்றாற் பொருள் கையுற்றவழி அதன்மேலவாவின்மையு மாகிய — இந்நான்கும் நன்கு உடையான்கட்டே தெளிவு = இந்நான்கு குணங்களையும் நிலைபெறவுடையான் மேலதே வினையை விட்டிருக்குந் தெளிவு. எ-று.

இந்நான்கு நன்குடைமை இவன் செய்கின்ற வினைக்கண் யாதுமோராய வேண்டுவதில்லையென்று அரசன் றெளிதற்கேதுவாகலின், அவனை அதன் பிறப்பிடனாக்கிக் கூறினார். இவை மூன்று பாட்டானும் ஆடற்குரியான திலக்கணங் கூறப்பட்டது. (௩)

விளக்கம்:—அரசனிடத்தே அன்பும், அரசனுக்கு ஆக்க வேண்டுவனவற்றை அறியும் அறிவும், அவ்விதம் அறிந்து செய்யுங் காலத்து அதில் கலங்காமையும், வினைசெய்து முடிந்தகாலத்தே அத்தொழில்களால் பொருள் கிடைக்குமாயின் அப்பொருள்கள்





மீது தனக்கு ஆசையில்லாமையும் ஆகிய இந்நான்கினையும் மிகுதியும் உடையானிடத்துத் தொழிலைவிட்டிருப்பதே தெரிந்துவினையாடல் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசனுக்கு வினை செய்வான் ஒருவன் அறிவுடையவனாய் இருத்தல் வேண்டுமென்றும், அவ்வறிவுடைமை மாத்திரம் அல்லாமல் அரசனைத் தன்னுயிர் போல் பார்க்கும் அன்புடையவனாகவும் இருக்க வேண்டுமென்றும், அன்புடைமையோடு அரசன் விரும்புவன எவை என்றும் அறிய வேண்டுமென்றும், அவ்வரசன் விரும்பிய தொழிலைச் செய்யுங் காலத்து மனக்கலக்கமில்லாமல் செய்தல் வேண்டுமென்றும், அவ்விதம் செய்துமுடிந்த முயற்சிகளால் பொருள் கிடைக்குமாயின் 'அப்பொருள் அரசனுக்கே உரியது, நாம் அதில் சிறிதும் ஆவல் கொள்ளுதலாகாது' என்கின்ற அவாவின்மையை எக்காலத்தும் நிலையாக உடையவனாக இருத்தல் வேண்டும் என்றும், அவ்வித

தகுதியுடையவனே அரசன் தொழிலைச் செய்வதற்கு யோக்கியனு வான் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ்விதமெல்லாம் ஆராய்ந்தும் வினைசெய்ய ஏற்றுக்கொண்டவர் பிறிது மாறுபடுவரோ? ஒரே நிலையில் நிற்பரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

514. எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகை
வேறாகு மாந்தர் பலர். [யான்

(பரி.) இ-ள். எனைவகையான் தேறியக்கண்ணும்=எல்லாவகையா னுமாராய்ந்து தெளிந்து வினை வைத்தபின்னும்—வினைவகையான் வேறு கும் மாந்தர் பலர்=அவ்வினையினியல்பானே வேறுபடுமாந்தர் உலகத்துப் பலர். எ-று.

சுட்டியவகாரன் போல அரசவின்பத்தினை வெஃகி விகாரப்படுதல் லது அதனைக் குற்றமென்றொழிந்து தம்மியல்பினிற்பார் அரியராகலின், 'வேறாகுமாந்தர் பலர்' என்றார். வினை வைப்பதற்குமுன் எல்லாக்குணங் களுமுடையராய் வைத்தபின் விகாரப்படுவோரை இடையாயதொருவினை யை வைத்தறிந்து ஒழிக்கவென்பதாம். இதனான் ஒருவகையானொழிக்கப் படுவார் இவரென்பது கூறப்பட்டது. (௪)



விளக்கம்:—எல்லா விதத்தாலும் ஆராய்ந்து தெளிந்து ஒரு வனுக்கு வேண்டும் தொழிலை வைத்தபிறகும், கொடுத்ததொழி லின் இயல்பாலே உலகத்துப் பலர் வேறுபடும் செயலை உடையவர்க ளாக உள்ளார்களென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என் னேயோவெனில்? அரசன் தமக்கு ஓர் உத்தியோகத்தினை வைத்த பிறகு அவ்வுத்தியோகத்தினது பெருமையால் பலர் தம்மைமறந்த வராயும், குடிகளைத் துன்பப்படுத்துபவராயும், கடுமாறல் அரசனு க்குரிய உரிமையையே நோக்கித்து அரசுபுரியும் இன்பத்தினையும் தாமே விரும்பி அரசனையும் கொன்று நாட்டையும ஆள் பண்

இவ்வாசையும் உலகத்து உண்டு ஆதலால், இவ்விதம் எவ்வளவு ஆராய்ந்து வைக்கப்படினும், அவாவின் கொடுமையால் தம் நிலை உணராது கெடுகின்ற மக்கள் பலர் உலகத்து உண்டென்று அறிகின்றோம். அதற்கு உதாரணமாக சீவகசிந்தாமணி என்னும் பெருங்காப்பியத்துள் கூறப்படுகின்ற "சச்சந்தன்" என்னும் அரசனுக்கு "கட்டியங்காரன்" என்னும் மந்திரி இருந்து செய்ததுபோல என்று உரை ஆசிரியர் கூறுகின்றனர். கட்டியங்காரன் கதையாவது:—இப்பரதகண்டத்தில் ஏமாங்கதநாட்டில், ராஜமாபுரம் என்னும் இடத்தில் குருகுலத்திலே தோன்றி "சச்சந்தன்" என்னும் அரசன் ஒருவன் இருந்தான் என்றும், அவனுக்கு விஜயை என்னும் மனைவி பொழுதோடு வாய்ந்தாளென்றும், அவ்விதம் கிடைத்த மனைவியிடத்து ஆசைமிகுதியால் அவளோடு எக்காலமும் சுகித்திருக்க எண்ணி நிமித்திகன் முதலிய நல்ல மந்திரிகளது உறுதி மொழியைக் கொள்ளாது 'நீ இந்நாட்டைக் காத்துவருதல் வேண்டும்' என்று தன் அரசைக் கட்டியங்காரனிடத்து ஒப்புவித்துத் தன்னுடைய அழகிய மனைவியுடன் தான் எண்ணியபடி சுகித்திருந்தானென்றும், அதுகண்ட கட்டியங்காரன் அரசனைக்கொன்று தானே நாடு முழுமையும் ஆள எண்ணி அந்தப்புரத்திருக்கும் அரசனைச் சேனைகளோடு சென்று ஒளிந்துகொண்டு இருந்து கொன்றுவிட்டானென்றும், அவ்விதம் கொல்வதற்குமுன் அவன் மனைவி விஜயை ஓர் மயில் பொறிமேல் ஏறி ஆகாயவழியே சென்று ஓர் சுடுகாட்டில் இறங்கித் தான் கருக்கொண்டிருந்த குமாரனைப் பெற்று இறந்தாளென்றும், அவ்விதம் பிறந்து சுடுகாட்டில் இருந்த குழந்தையை, இறந்த தன் குழந்தையைப் புதைப்பதற்கு



வந்த கந்துக்கடன் என்னும் வணிகன்கண்டு, 'இக்குழந்தை யாருமற்று இருப்பதால் எடுத்துச்சென்று வளர்ப்பேன்' என்று அக்குழந்தையை வளர்த்தானென்றும், அக்குழந்தை சீவகனென்னும் பெயரோடு பலவித சிறப்புடன் வளர்ந்து எட்டு மனைவியர்களை மணந்துகொண்டு பின்னர் பெரும் சயினியத்தோடு சென்று கட்டியங்காரனைக் கொன்று தன்னரசுபெற்று ஆண்டான் என்றும் கூற

வதேயாம். ஆதலால், கட்டியங்காரன் என்னும் அமைச்சன் சச்சந்தன் என்னும் அரசனுக்கு மந்திரியாக இருந்தமையாலேயே அவனைத் தகுந்தவனென்று சச்சந்தன் எண்ணித் தன் அரசை ஒப்புவித்ததால் அவனுக்கு அவ்வரசிடத்து உண்டான ஆசை மிகுதியால் அரசனைக் கொன்றான் என்றும், எவ்வளவு தகுந்தவராய் முதலில் காணப்படினும் ஆவல்மிகுதியால் தம் நிலை மாறிப்போவது மனிதர்க்கு இயற்கை என்றும், அவ்விதம் மாறிப்போவாரை உயர்வும் தாழ்வும் இல்லாது நடுவாக நின்ற தொழிலில் விடுத்து ஒதுக்கிவிடுதல் வேண்டும் என்றும் இதனால் அறிந்தோம். இதனையே வடமலை வெண்பாவினுள்ளும்,

"சச்சந்தனை யழித்துக் கொண்டான் றனியமைச்சன்
வைச்ச வரசை வடமலையே—நிச்சம்
எனைவகையாற் றேறியக் கண்ணும் வினைவகையால்
வேறாகு மாந்தர் பலர்."

என்று கூறப்பட்டுள்ளது என்றனர். அதற்கு மாணாக்கர், "ஒருவன் அரசனிடத்து அன்பு அதிகம் உடையவனாய் இருந்து ஆற்றலில்லாதவனாய் இருப்பானாயின், அவனை அரசன் தன் தொழிலுக்கு அமைத்துக்கொள்ளுதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

515. அறிந்தாற்றிச் செய்கிற்பாற் கல்லால் வினைதான்
சிறந்தானென் றேவற்பாற் றன்று.

(பரி.) இ-ள். அறிந்து ஆற்றிச் செய்கிற்பார்க்கு அல்லால்=செய்யுமுபாயங்களையறிந்து செயலானும் இடையூறுகளானும் வருந்துன்பங்களைப் பொறுத்து முடிவுசெய்யவல்லாரையல்லது—வினைதான் சிறந்தான் என்றேவற்பாற்றன்று=வினைதான் இவன் நம்மாட்டு அன்புடையனென்று பிறனொருவனை ஏவுமியல்புடைத்தன்று. எ-று.

செய்விற்பாற்கென்பது வேற்றுமைமயக்கம். அறிவாற்றல்களானல்லது அன்பான் முடியாதென இதனுல் வினையினியல்பு கூறப்பட்டது. (இ)

விளக்கம் :—செய்யும் உபாயங்களை எல்லாம் அறிந்து வினையைச் செய்யுங்காலத்து அச்செயலால் துன்பம் வருமாயினும் இடையூறு வருமாயினும் பொறுத்துக்கொண்டு தான் எடுத்த தொழிலை முடிவுசெய்பவன் எவனே அவனே வினைக்கு உரியவனென்று கொள்ளுதல் வேண்டுமே அன்றி, 'இவன் நம்மிடத்து அன்பு உடையவன்' என்று கருதி அவனை ஒரு தொழிலில் ஏவுவது வினையைச் செய்யும் இயல்பு அன்று என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அரசன் தனக்கு வேண்டியவன் என்று அவ்வன்புடைமை ஒன்றையே கருதி அறிவும் ஆற்றலும் இல்லாதவனிடத்து ஒரு தொழிலைக் கொடுப்பானாயின், அவனிடத்து விடுத்த தொழில் அவனுல் முடியப்பெருது கெட்டுப்போம் என்று அறிக தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "இதனுல் ஒருவனிடத்து வினை வைப்பதற்கு முன் எல்லாவிதமும் ஆராய்தல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

516. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தோ
டெய்த வுணர்ந்து செயல்.

(பரி.) இ-ள். செய்வானை நாடி = முதற்கண்ணே செய்வான திலக்கணத்தை யாராய்ந்து,—வினை நாடி = பின் செய்யப்படும் வினையின தியல்பை யாராய்ந்து,—காலத்தோடு எய்த உணர்ந்து செயல் = பின் அவனையும் அதனையுங் காலத்தோடு படுத்துப் பொருந்தவறிந்து அவனை அதன்கண் ஆடலைச் செய்க. எ-று.

செய்வானதிலக்கணமும் வினையினியல்பும் மேலே கூறப்பட்டன. காலத்தோடெய்தவுணர்தலாவது:—இக்காலத்து இவ்விலக்கணமுடையான் செய்யின் இவ்வியல்பிற்றுயவினை முடியுமென்று கூட்டியுணர்தல். (௯)

விளக்கம் :—ஒரு வினையைச் செய்வதற்கு ஏற்பட்டான் ஒருவன் தன்மை இதுவென்று முதலில் ஆராய்ந்தும், பின்னர் அவனிடத்து ஒப்புவிக்கும் தொழிலின் தன்மையை ஆராய்ந்தும், பின்பு செய்பவனையும் செய்ய எண்ணிய தொழிலையும் ஆகிய இரண்

டினையும் செய்ய எண்ணிய காலத்தோடு சேர்த்து அக்காலத்துக்குப் பொருந்திய அளவாக அறிந்தும், அதன் பிறகே தொழில் செய்வானை அத்தொழிலின்கண் ஏவுதல் வேண்டும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, செய்பவனுடைய இலக்கணத்தையும், செய்ய வெண்ணிய வினையினது இயற்கையையும் ஒன்றாக ஆராய்ந்து காலமும் கருதிச் செய்ய வேண்டுமாதலால், இக்காலத்தில் இவ்வித தன்மையுடையான் வினையைச் செய்வானாயின் இவ்வித கருதியாகிய வினை முடிதல் கூடும் என்று அறிந்து செய்தலே தெரிந்து வினையாடல் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இன்னும் தெரிந்து வினையாடலின் இலக்கணத்தை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

517. இதனை யிதனா லிவன்முடிக்கு மென்றாய்ந்
அதனை யவன்கண் விடல்.

(பரி.) இ-ள். இதனை இதனால் இவன் முடிக்கும் என்று ஆய்ந்து = இவ்வினையை இக்கருவியால் இவன் முடிக்கவல்லனெனக் கூறுபடுத் தாராய்ந்து,- அதனை அவன்கண் விடல் = மூன்றுந் தம்முளியைந்தவழி அவ்வினையை அவன்கண்ணே விடுக. எ-று.

கருவி = துணைவரும், பொருளும் முதலாயின. வினைமுதலும் கருவியும் வினையுந்தம்முளியைதலாவது:—ஓரொன்றோடு ஏனையவிரண்டிற்கும் பொருத்த முண்டாதல். விடுதல் = அதற்கு அவனையுரியனாக்குதல். (எ)

விளக்கம் :—இத்தொழிலை இவ்வித கருவியால் இவன் முடிப்பதற்கு வல்லவனாக உள்ளான் என்று கூறுபடுத்தி மிகுதியும் ஆராய்ந்து தொழிலும், கருவியும், முடிக்கும் ஆற்றலும் ஆகிய மூன்

றும் ஒருவனுக்குப் பொருந்தியிருக்குமாயின், அரசன் தான் எண்ணிய தொழிலை அவனிடத்தே விடுத்தல் வேண்டும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவனுக்குத் துணைவரும் பொருளும் முதலான கருவிகள் இல்லையாயின் எடுத்த காரியம் முடியாது ஆதலால், தொழிலைச் செய்ய இசைந்தவனுக்குத் துணைவரை முதலில் நோக்கல் வேண்டும் என்றும், பின்னர் பொருள் நிலையை நோக்குதல் வேண்டுமென்றும், பின்னர்க் கருவியாகிய துணையும்



பொருளும் இருப்பினும் செய்வான் ஒருவன் வினையை விடாது முடிக்கும் ஆற்றல் உடையவனாக இருத்தல் வேண்டுமென்றும், கருவியும் ஆற்றலும் இருக்கினும் வினையானது செய்து முடியா வினையாய் இருக்குமாயின் அவ்வினையைத் தொடங்குதல் ஆகாது ஆதலால், செய்பவனும், கருவியும், தொழிலும் ஆகிய மூன்றும் ஒத்திருப்பின் அக்காலத்து ஒருவனிடத்து வினையை ஏவுதல்வேண்டும் என்பது பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் அரசன் ஒருவன் தன் வினைக்குத் தக்கவன் என்று ஒருவனைக் கொண்ட பிறகு அவனை எவ்விதம் நடத்தல்வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

548. வினைக்குரிமை நாடிய பின்றை யவனை
யதற்குரிய னாகச் செயல்.

(பரி.) இ-ள். வினைக்கு உரிமை நாடிய பின்றை=ஒருவனை அரசன் தன் வினைசெய்தற் குரியனாகவாராய்ந்து துணிந்தால்,—அவனை அதற்கு உரியனாகச் செயல்=பின்னவனை அதற்குரியனுமாறு உயரச்செய்க. எ-று.

உயரச்செய்தலாவது:—அதனைத் தானே செய்துமுடிக்குமாற்றலுடையனாக்குதல். அது செய்யாக்காலுங் கெடுமென்பது கருத்து. (௮)

விளக்கம்:—அரசன் தன்னுடைய தொழிலைச் செய்வதற்கு

ஒருவனை ஆராய்ந்து துணிந்தபிறகு பின்பு அவனை அத்தொழிலுக்கு உரியவனாகச் செய்தலுடன் அவனை அத்தொழிலைத் தானே செய்துமுடிக்கும் ஆற்றல் உடையவன் ஆகவும் செய்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவனை ஒரு தொழில் செய்வதற்கு அதிகாரியாக ஆக்கியபின்பு, அத்தொழிலை முற்றும் செய்து முடிப்பதற்கு வேண்டிய உதவிகளை எல்லாம் அவனுக்குச் செய்வதுடன் சேனையோடு மற்றையோர் எல்லாம் அவன் சொல்வழி நின்று வினைமுடிப்பதற்கு வேண்டுவன உதவும் படிக்கும் செய்தல் வேண்டுமென்றும், அவ்விதமல்லாது அவனைத் தாழ்வு படுத்துவனாயின் எடுத்த தொழிலானது முடியாமற் கெட்டுப்போம் என்றும் பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "இவ்விதம் தலைமையாக நின்று தொழில் செய்யும் ஒருவனை அரசன் முற்



றும் நம்புதல் வேண்டுமென்றோ?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

519. வினைக்கண் வினையுடையான் கேண்மைவே றாக
நினைப்பானை நீங்குந் திரு.

(பரி.) இ-ள். வினைக்கண் வினை உடையான் கேண்மை=எப்பொழுதுந் தன் வினையின்கண்ணே முயறலையுடையான் அவ்வுரிமையாற்றனக்குக் கேளாயொழுகின்ற தன்மையை—வேறாக நினைப்பானைத் திரு நீங்கும்=அது பொறாதார்சொற்கேட்டு அரசன் மாறுபடக் கருதுமாயின், திருமகள் அவனைவிட்டு நீங்கும். எ-று.

கேளாயொழுகின்ற தன்மையாவது:—தான் பிறனாய் நில்லாது கேளிர் செய்யுமுரிமையெல்லாஞ் செய்தொழுகுதல். அவனை அவமதிப்பாகக் கொண்டு செறக்கருதுமாயிற் பின்னொருவருமுட்பட்டு முயல்வாரில்லையாம்; ஆகவே, தன்செல்வங்கெடுமென்பது கருத்து. இந்நான்குபாட்டானும் ஆடற்குரியானையாளுந்திறங் கூறப்பட்டது. (௯)

விளக்கம்:—அரசனது தொழிலைச் செய்ய ஏற்றுக்கொண்டு அத்தொழிலைச் செய்வதிலேயே எக்காலத்தும் முயற்சியுடையான்

ஆக உள்ள ஒருவன் தனக்கு அத்தொழிலின் உரிமையால் அரச
னிடத்துச் சுற்றத்தவன்போல் ஒழுகுவானென்றும், அவ்விதம் ஒழு
குகின்ற தன்மையை அறிந்து அழுக்காறுடையவர்கள் தமக்குள்ள
பொறாமையின் மிகுதியால் ஏதேனும் உண்மையல்லாதவைகளைச்
சொல்லுங்காலத்து அச்சொற்களைக்கேட்டு அரசனானவன் தன் சுற்
றத்தவன்போல் ஒழுகி நின்று தன் தொழிலைச் செய்யும் நல்லவனை
மாறுபாடாக எண்ணுவானாகில் அவ்வித அரசனை திருமகள்விட்டு
நீங்குவள் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தொழி
லைச்செய்யும் நல்லவனானவன் அரசனிடத்தே அன்னியன்போல் இல்
லாமல் அரசனுடைய சுற்றத்தவர் செய்யும் உரிமையை யெல்லாம்
தான் மேற்கொண்டு செய்துவருவதுகண்ட பொறாமையுடையவர்
கள் மாறுபட்ட விஷயங்களையெல்லாம் சொல்லுவரேல், அவ்விஷயங்
களைக் கேட்டு மாறுபட்ட மனத்தனாய் அரசன் தொழிற் றலைவனைக்
கோபிப்பானாகில், அத்தலைவன் நீங்குவான் என்றும், அவன் நீங்
குவதுடன் மற்றைய நற்குணத்தோரும் 'இவ்வரசன் கோள் சொல்



வோர்க்கு இடந்தருபவனாக இருப்பதால், இவனிடத்துத் தொழில்
செய்வதாகாது' என்று எண்ணி அவன் தொழிலை ஏற்றுக்கொள்ள
மாட்டார்கள் என்றும், அவ்விதம் ஏற்றுக்கொள்ளாது யாவரும்
நீங்கிவிடில் தொழில் செய்வார் இல்லாமையால் வருவாய் குறைந்து
விடும் என்றும், அவ்விதம் குறைவதால் பழைமையாகிய செல்வங்
களும் போய்விடும் என்றும், ஆகலால் திருமகள் நீங்குவாள் என்
றும் அறிந்தோ மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், " இவ்விதம்
சந்தேகம் கொண்டு ஆராயாவிடின் தொழிற்றலைவன் தன்னிச்சை
போலன்றோ நடப்பான்?" என்று கேட்டலும், ஆசிரியர் கூறுவா
ராயினர்.

520. நாடோறு நாடுக மன்னன் வினைசெய்வான்
கோடாமை கோடா துலகு.

(பரி.) இ-ள். வினை செய்வான் கோடாமை உலகு கோடாது=வினை
செய்வான் கோடாதொழிய உலகம் கோடாது;—மன்னன் நாடோறும்
நாடுக=ஆதலான் அரசன் அவன் செயலை நாடோறும் ஆராய்க. எ-று.

அஃதொன்றனையுமாராயவே அதன்வழித்தாய உலகமெல்லா மாராய்ந் தானும், அதனால் அவனுரிமை அழியாமற் றன்னுள்ளே யாராய்ந்து போதுக வென்பதாம். இதனால் ஆண்டவழிச் செய்வது கூறப்பட்டது. (௰)

விளக்கம் :-—வினையை ஏற்றுக்கொண்டு செய்கின்ற தலைவன் கோணுதல் அடையாது தன் தொழிலைச் செய்வானாயின் அது கண்ட ஏனைய மக்களும் கோணுதல் அடையாரென்றும், ஆதலால் அரசனானவன் தொழிலை ஏற்றுக்கொண்டு செய்யும் தலைவனது செயலை நாள்தோறும் ஆராய்தல் வேண்டுமென்றும் இத்திருக் குறள் கூறுகின்றது. அதாவது, அரசனானவன் வினைக்குத் தலைவ னாக உள்ள ஒருவனை ஆராய்ந்து பார்த்து அவன் செய்யும் தொழில் கள் சிறிதும் தவறில்லாமல் நீதி வழியாக உள்ளன என்று காண் பானாயின் அத்தலைவன் வழியே ஏனைய மக்களும் நிற்றல்வேண்டு மாதலால் உலகம் நீதியோடு நிற்கும் என்றும், அவ்விதம் நீதியோடு செய்கின்ற தலைவனை அவன் அறியும்படி ஆராயாது தனக்குத் தானே சென்று உண்மையைத் தெரிந்து கொள்ளுதல் வேண்டு





மென்றும், அவ்விதம் தானே சென்று உண்மை அறிவதே தெரிந்து வினையாடுதலென்றும், பிறர் சொற் கொள்ளுவதால் கைகூடாதென் றும் இதனால் அறிகின்றோம். முதலாக உள்ள ஒருவன் கோணு வானாயின் முழுவதும் கோணுமென்று நம் முன்னறிஞர் 'முதற்கோணை முற்றும் கோணும்' என்னும் முதுமொழியை நமக்குச் சான்றாகக் கூறியுள்ளனர் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இதுகாறும் வினையாடல் என்பது இதுவென அறிந்தோம்; இனி அரசன் தன் சுற்றத்தவரிடத்து எவ்விதமிருத்தல் வேண்டும் என்பதை அறிய ஆசைப்படுகின்றோம்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 53. அதிகாரம்.

## சுற்றந்தழால்.

---

(பரி.) அஃதாவது அரசன் தன்கிளைஞரைத் தன்னினீக்காமல் அணைத்தல். வினை செய்வாரைக் கூறி ஏனைச்சுற்றங் கூறுகின்றாராகலின், இது தெரிந்து வினையாடலின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது அரசன் தன்னுடைய சுற்றத்தவரைத் தன்னைவிட்டு நீக்காமல் தழுவிக் கொள்ளுதல். வினை செய்பவர்களைப் பற்றிக் கூறிய அதிகாரத்துக்குப் பிறகு சுற்றந்தழுவும் அதிகாரத்தை வைத்தது வினையாளர்க்குப் பிறகு சுற்றத்தவரை நோக்குதல் வேண்டும் என்பதைக் கருதியே என்று ஆசிரியர் கூறினர். அது கேட்ட மாணக்கர், "அரசனும் சுற்றத்தவரைத் தழுவுதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

521. பற்றற்ற கண்ணும் பழைமைபா ராட்டுதல்
சுற்றத்தார் கண்ணே யுள.

(பரி.) இ-ள். பற்று அற்ற கண்ணும் பழைமை பாராட்டுதல்=ஒருவன் செல்வத்தை இழந்து வறியனாயவழியும் விடாது தம்மோடு அவனிடைப் பழைமையை எடுத்துக்கொண்டாடு மியல்புகள்—சுற்றத்தார்கண்ணே உள=சுற்றத்தார்மாட்டே உளவாவன. எ-று.

சிறப்பும்மை வறியனாயவழிப் பாராட்டப்படாமை விளக்கி நின்றது.



பழைமை=பற்றுள்ளக்காலத்துத் தமக்குச்செய்த உபகாரம். பிறரெல்லாம் அவன் பற்றற்றபொழுதே தாமும் அவனோடு பற்றறுவாராகலின், ஏகாரம் தேற்றத்தின்கண் வந்தது. இதனாற் சுற்றத்தது சிறப்புக்கூறப்பட்டது. (க)

விளக்கம்:—ஒருவனுக்கு இருந்த செல்வமானது ஒழிந்து வறியனான காலத்தில் அவனைவிட்டுவிடாது தம்மோடு அவனுக்கு இருந்த பழைமையெல்லாம் எடுத்துக் கொண்டாடும் இயற்கையானது சுற்றத்தார்களுக்கு உண்டாகும் நற்குணங்களாம் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உலகத்தில் மக்கள் தம் சுற்றத்தவர் செல்வத்தோடு கூடியிருக்கின்ற காலத்து அவர்களைத் தழுவி அவர்களிடத்து உறவு கொண்டாடுவது மிக வியல்பாத

லால், அவ்வித மல்லாது செல்வம் அற்றகாலத்தும் அவர்கள் தமக்குச் செய்த பழைமையாகிய உபகாரங்களை எல்லாம் எண்ணி அவரோடு பற்றறுது தழுவிக் கொள்வார்களாயின் அதுவே சுற்றத்துக்கு அழகென்றும், தழுவுதலென்றும் அறிக்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் பழைமைபாராட்டுதலினுள் சுற்றம் ஒருவனுக்குக் கிடைக்குமானால், அதனால் அவன் அடையும் பேறு என்ன ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

522. விருப்பறாச் சுற்ற மியையி னருப்பறா
வாக்கம் பலவுந் தரும்.

(பரி.) இ-ள். விருப்பு அறாச் சுற்றம் இயையின் = அன்பறாத சுற்றம் ஒருவற்கெய்துமாயின்,—அருப்பு அறா ஆக்கம் பலவும் தரும் = அஃது அவற்குக் கிளைத்தலறாத செல்வங்கள் பலவற்றையுங் கொடுக்கும். எ-று.

உட்பகையின்மைக்குதற்கு 'விருப்பறாச்சுற்றம்' என்றும், தானேவளர்க்குமொருதலையாய செல்வத்தினீக்குதற்கு 'அருப்பறாவாக்கம்' என்றும், விசேடித்தார். தொடைநோக்கி விகாரமாயிற்று. இயையினென்பது அதனருமை விளக்கி நின்றது. ஆக்கமென்பது ஆகுபெயர், பலவுமென்றது அங்கங்களாறனையுநோக்கி. பலர்கூடி வளர்த்தலின், அவை மேன்மேற் கிளைக்கு மென்பது கருத்து. (உ)

விளக்கம் :—அன்பினின்றும் நீங்காத சுற்றத்தவர் ஒருவனுக்குக் கிடைப்பார்களாயின் அவ்வித சுற்றத்தவரால் அவனுக்கு மேலும் மேலும் கிளைக்கும் பல செல்வங்கள் உண்டாகும் என்று



இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உட்பகையில்லாது உள்ள சுற்றத்தவர்களை அன்புடைய சுற்றத்தவர்களென்றும், அவ்வித சுற்றத்தவர்கள் இருப்பாராயின் அவர்கள் உள்ள காலத்து யாதொரு துன்பமும் இல்லாது செல்வங்கள் கிளைக்குமென்றும், அச்செல்வங்களாவன படை, குடி, கூழ், அமைச்சு, அரண், நட்பு என்னும் ஆறு அங்கங்களும் இடையூறு அடையாது வளர்வனவே என்றும் பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் சுற்றத்தவர் இல்லாவிடில் செல்வம் ஏது வாகும் ?" என்று கேட்டலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

523. அளவளா வில்லாதான் வாழ்க்கை குளவளாக்

கோடின்றி நீர்நிறைந் தற்று.

(பரி.) இ-ள். அளவளாவு இல்லாதான் வாழ்க்கை = அச்சுற்றத்தோடு நெஞ்சுகலத்தலில்லாதவன் வாழ்க்கை — குளவளாக் கோடு இன்றி நீர் நிறைந்தற்று = குளப்பரப்புக் கரையின்றி நீர் நிறைந்தாற்போலும் எ-று.

சுற்றத்தோடென்பது அதிகாரத்தான் வந்தது. நெஞ்சுகலப்புத் தன்னளவும் அதனளவு முசாவுதலான் வருவதாகலின், அளவளாவென்பது ஆகுபெயர். வாழ்க்கை யென்றதூஉம் அதற்கேதுவாய செல்வங்களை. நிறைதலென்னும் இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின் மேனின்றது. சுற்றமில்லாதான் செல்வங்கள் தாங்குவாரின்மையிற் புறத்துப் போமென்பதாம். (௩)

விளக்கம்:—சுற்றத்தவரோடு நெஞ்சுகலத்தல் இல்லாதவனது வாழ்க்கையானது கரையில்லாத குளம் ஒன்று நீர் நிறைந்ததுபோல் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. சுற்றத்தவரோடு நெஞ்சு கலத்தலாவது, தனக்கு உள்ள அளவினையும் அச்சுற்றத்தவர்க்கு உள்ள அளவினையும் மனமுவந்து விசாரிப்பதால் உண்டாகும் அன்பின் மிகுதியேயாம். அவ்விதம் கூறுவதால் மனத்தோடு கலவாது வாக்களவாக ஒருவரை ஒருவர் உசாவித் தழுவிக்கொள்வது அளவளாவு என்னும் இலக்கணத்திற்குப் பொருந்ாது என்று கண்டோம். இவ்விதம் நெஞ்சு கலந்து கட்டிணைக் கொள்ளும் இயற்கை இல்லாத அரசன் ஒருவன் இருப்பானாயின் அவன் செல்வமானது தாங்குவார் இல்லாமையால் தொழிலாளர், கள்வர், பகைவர் முதலிய



வர்களால் கொள்ளை கொள்ளப்படும் என்று அறிவிக்கவேண்டுவார் கரையில்லாத குளமானது நீர் நிறைந்து விடுமாயின் அணையில்லாமையால் அந் நீரானது வெளியேபோய்விடுவதுபோல் என்று உவமித்துக்காட்டினர். இதனால் சுற்றத்தவரைத் தழுவுதலால் ஒருவனுக்குக் கிடைத்த செல்வமானது நீங்காது நிற்பதுடன் பிறரால் அபகரித்தற்கும் இல்லாமல் நிலைக்கும் என்பது அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய மூன்று திருக்குறளாலும் சுற்றத்தவர் தன்மையும், சுற்றமிருப்பவர்க்குச்

செல்வம் இனிப்பதும், சுற்றமில்லாதவர்கள் செல்வம் கெட்டுப் போவதும் ஆகிய தன்மைகளை அறிந்தோம். இனிச் சுற்றத்தவர் சூழ ஒருவன் வாழ்வான் ஆயின் அவன் வாழ்க்கை என்னும்?" என்றும், ஆசிரியர் கூறுவாராயினர்.

524. சுற்றத்தாற் சுற்றப் படவொழுகல் செல்வந்தான்
பெற்றத்தாற் பெற்ற பயன்.

(பரி.) இ-ள். செல்வம் பெற்றத்தான் பெற்ற பயன்=செல்வம் பெற்றவதனால் ஒருவன் பெற்ற பயனாவது—சுற்றத்தான் தான் சுற்றப்பட ஒழுகல்=தன் சுற்றத்தால் தான் சூழப்படும்வகை அதனைத் தழீஇ யொழுகுதல். எ-று.

பெற்றவென்பதனுள் அகரமும் அதனுனென்பதனுள் அன்சாரியையும் தொடைநோக்கி விகாரத்தாற் றொக்கன. இவ்வொழுக்குப் பகையின்றி அரசாடற் கேதுவாகலின், இதனைச் செல்வத்திற்குப் பயனென்றார் இவை மூன்று பாட்டானும் சுற்றந்தழால் செல்வத்திற்கேதுவும் அரணும் பயனுமாமென்பது கூறப்பட்டது. (௪)

விளக்கம் :—அரசன் ஒருவன் செல்வத்தைப் பெறுவானாயின் அச்செல்வம் பெற்றதன் பயன் தன் சுற்றத்தவரால் தான் சூழப் படும் விதமாக அச்சுற்றத்தவரைத் தழுவிக்கொண்டு ஒழுகுதலே ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் இவ்விதம் சுற்றத்தவரைத் தழுவிக்கொண்டு அரசன் ஒருவன் இருப்பானாயின், அவன் ஆளுகையில் யாதொரு பகையும் இல்லாமல் வாழ்தல் கூடுமென்றும், அவ்விதம் வாழ்வதால் அவன் அடைந்த செல்வங்களெல்லாம் அவனுக்குப் பயன்தந்து நிற்குமென்றும் அறிகின்றோம்



என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சுற்றத்தவரோடு நெஞ்சு கலந்து பேசுவதினாலேயே அவர்கள் மகிழ்ச்சியடைவரோ? அல்லது அரசன் ஒருவன் சுற்றத்தவரால் இனிப்பதும், காப்பதும் ஆகிய பொருளைச் சுற்றத்தவர்க்குக் கொடுத்தலால் அன்பு உண்டாகுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

525. கொடுத்தலு மின்சொலு மாற்றி னடுக்கிய
சுற்றத்தாற் சுற்றப் படும்.

(பரி.) இ-ள். கொடுத்தலும் இன்சொலும் ஆற்றின்=ஒருவன் சுற்றத்திற்கு வேண்டுவன கொடுத்தலையும் இன்சொற்சொல்லுதலையும் வல்லனாயின்,—அடுக்கிய சுற்றத்தான் சுற்றப்படும்=தம்மிற்றொடர்ந்த பலவகைச் சுற்றத்தானே சூழப்படும். எ-று.

இரண்டும் அளவறிந் தாற்றுத லரிதென்பதுதோன்ற, 'ஆற்றின்' என்றார். தம்மிற்றொடர்தலாவது:—சுற்றத்தது சுற்றமும் அதனது சுற்றமுமாய் அவற்றாற் பிணிப்புண்டு வருதல். இவ்வுபாயங்களை வடநூலார் தானமுஞ் சாமமு மென்ப. (௫)

விளக்கம்:—ஒருவன் தன்னுடைய சுற்றத்திற்கு அவர்கள் வேண்டுவன எல்லாவற்றையும் கொடுத்தலையும், இனிய சொற்கள் சொல்லுதலையும் ஆகிய வல்லமை யுடையவனாக இருப்பானாயின், அவன் ஒன்றோடொன்று தொடர்ந்த பலவகைச் சுற்றத்தவர்களால் சூழப்பட்டிருப்பான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் ஒருவன் தன்னுடைய சுற்றத்தவரது அளவு இது என்று ஒவ்வொருவரையும் அறிந்து அவரவர் வேண்டுவன கொடுத்தல் மிக அருமையாதலால் அவ்விதம் கொடுக்கும் ஆற்றலும், கொடுத்தல் மாத்திரம் அல்லாமல், அதனினும் அருமையாகிய இனிய சொற்களைக் கூறுமாற்றலும் ஆகிய இவ்விரண்டு ஆற்றலையும் உடையானாயின் அவனைச் சுற்றத்தவர்கள் பலவித தொடர்ச்சியாக வந்து சூழ்வார்கள் என்றும், அது எவ்விதமோவெனில்? தனக்கு நேராகச் சுற்றத்தவர்களாக இருப்பவர்களும், அச்சுற்றத்தவர்களுக்குச் சுற்றத்தவர்களாயிருப்பவர்களும், அவர்க்குச் சுற்றத்தவரும் ஆகிய ஒருவருக்கொருவர் இவனது கொடையாலும், இன் சொற்களாலும் வந்து சேருவதாலேயே என்றும் அறிந்தோம் என்றனர்.



அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் இன்சொல்லும், கொடையும்

ஒருவனுக்கு இருக்கவேண்டுமாயின் அவனுக்குக் கோபம் என்பதே கூடாததாகுமன்றோ ?" என்று கேட்டனர், ஆசிரியர் கூறலாராயினர்.

526. பெருங்கொடையான் பேணான் வெகுளி யவனின்
மருங்குடையார் மாநிலத் தில்.

(பரி.) இ-ள். பெருங்கொடையான் வெகுளி பேணான்=ஒருவன் மிக்க கொடையை யுடையவனுமாய் வெகுளியை விரும்பானுமாயின், — அவனின் மருங்கு உடையார் மாநிலத்து இல்=அவன்போலக் கிளையுடையார் இவ்வுலகத்தில்லை. எ-று.

மிக்ககொடை=ஒன்றானும் வறுமையெய்தாமற் கொடுத்தல். விரும்பாமை=இஃதரசற்கு வேண்டுவதொன்றென்று அளவிறந்து செய்யாமை. (௬)

விளக்கம்:—ஒருவன் மிகுந்த கொடையாளியுமாய்க் கோபமென்பதை விரும்பாதவனுமாய் இருப்பானாயின் அவனைப்போலச் சுற்றத்தை உடையவர் இவ்வுலகத்து இரார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவரும் வறுமை எய்தாமல் வேண்டுவன கொடுக்கின்ற மிகக் கொடையாளியாயினும் கோபமுடையவனாக இருப்பானாயின் அவனைப் பலர் அணுகாரென்றும், ஆகையால் அரசன் தன் செங்கோலை நடத்துவதற்குக் கோபம் இருக்கவேண்டுமாயினும் அளவிறந்து கோபித்துக் கொள்ளுதல் கூடாதென்றும், இவ்விதம் கோபியாது இருப்பவனைப் பலரும் சுற்றத்தவர்களாகச் சூழ்வாரென்றும் பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சுற்றத்தவர்சூழ இருப்பதால் அரசனுக்கு உண்டாகும் வளர்ச்சி என்ன?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

527. காக்கை கரவா கரைந்துண்ணு மாக்கமு
மன்ன நீ ரார்க்கே யுள.

(பரி.) இ-ள். காக்கை கரவா கரைந்து உண்ணும்=காக்கைகள் தமக்கிரையாயின கண்டவழி மறையாது இனத்தையழைத்து அதனோடுகூட வுண்ணா நிற்கும்;—ஆக்கமும் அன்ன நீரார்க்கே உள=சுற்றத்தாலெய்தும் ஆக்கங்களும் அப்பெற்றித்தாய இயல்பினையுடையார்க்கே உளவாவன. எ-று.

*அவ்வாக்கங்களாவன:—பகையின்மையும், பெருஞ் செல்வமுடைமையும் முதலாயின. எச்சவும்மையான் அறனுமின்பமுமேயன்றிப் பொருளு மெய்துமென்பது பெறுதும். அப்பெற்றித்தாய வியல்பென்றது தாம் நுகர்வனவெல்லாம் அவரும் நுகருமாறு வைத்தல்.* (எ)

விளக்கம்:—*காக்கைகளானது தமக்கு ஏதேனும் இரையானவற்றைக் கண்டவிடத்து ஏனைய காக்கைகளுக்கு அதை மறையாது இனமாகிய அக்காக்கைகளையும் உடனழைத்து உண்ணுமாறு போலச் சுற்றத்தவர்களால் அடையக்கூடிய பயனை அடையவேண்டுபவர் தம்மினத்தோடு சூழ்ந்து உண்ணுதல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, காக்கை இரைகண்ட இடத்தே தன்னினமாகிய காக்கைகள் அறியாத இடத்தும் தானே வலிந்து கூவித் தன்னினத்தைப் பெருக்கிக் கொள்வதுபோல், அரசன் ஒருவனும் தன்னினத்தவரை வலிந்து கூவி, வேண்டுவன கொடுத்து, இன் சொற் கூறி, வெகுளியும் இல்லாது இருப்பானாயின் சுற்றத்தவரும் பலராகச் சூழ்வாரென்றும், அவ்விதம் சூழ்தலால் பகைவர்கள் அஞ்சி இவனை அணுகாது இருப்பரென்றும், பகைவர் அணுகாமையால் செல்வம் பெருகுமென்றும், ஆகவே அறத்தைச் செய்தல் கூடுமென்றும், இன்பத்தை அடைதல் கூடுமென்றும், அறமும் இன்பமும் அடைவது மாத்திரமல்லாமல் பொருளை மிகப் பெருக்குதல் கூடுமென்றும் அறிகின்றோம். ஆதலால், தான் உண்பனவெல்லாம் தன் சுற்றத்தவரும் உண்ணும்படி நினைக்கின்ற அரசன் ஒருவன் அறம், பொருள், இன்பம் ஆகிய மூன்றையும் அடைவான் என உணர்ந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஏதோ முன்னர் அவரவர் அளவறிந்து கொடுத்தல் என்று கூறினீர்; யாவர்க்கும் ஒருவிதமாகக் கொடுத்தல் கூடாதோ? அதனிலும் அளவறிதல்வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.*

528. பொதுநோக்கான் வேந்தன் வரிசையா நோக்கி
னதுநோக்கி வாழ்வார் பலர்.

(பரி.) இ-ள். பொது நோக்கான் வேந்தன் வரிசையா நோக்கின் = எல்லாரையும் ஒரு தன்மையராக நோக்காது அரசன் தத்தந் தகுதிக்கேற்ப



நோக்குமாயின், — அது நோக்கி வாழ்வார் பலர் = அச்சிறப்பு நோக்கி அவனைவிடாது வாழுஞ் சுற்றத்தார் பலர். எ-று.

உயர்ந்தார் நீங்குதனோக்கிப் பொதுநோக்கை விலக்கி, எல்லாரும் விடாதொழிதனோக்கி வரிசைநோக்கை விதித்தார். இக்கூறுபாட்டானுஞ் சுற்றந்தழுவுமுபாயங் கூறப்பட்டது. (அ)

விளக்கம் :— அரசன் ஒருவன் தன் சுற்றத்தவர் யாவரையும் ஒரு தன்மையராகக் கருதாமல் அவரவர் தகுதிக்குத் தகுந்த அளவாகக்கருதி அவர்க்கு ஆவன செய்வானாயின் பொதுத் தன்மை நோக்காது சிறப்பு நோக்கி நடத்தும் அவ்வரசனை விடாது சுற்றத்தவர் பலர் சூழ்ந்து வாழ்வாரென்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? அரசன் எல்லோரையும் பொதுவாகப் பார்ப்பானாயின், சுற்றத்தவரில் உயர்ந்த தகுதியில் இருப்பவன் 'தாழ்ந்த நிலையில் இருப்பவன் ஒருவனையும் என்னையும் அரசன் ஒன்றாக நடத்தினான் ஆதலால், என் பெருமை குறைகின்றது; இனி இவ்விடத்தில் இருத்தலாகாது' என்று விலகிப்போவான். அவ்விதம் உயர்ந்த நிலையிலிருப்பவரெல்லாம் ஒவ்வொருவராக விலகிப்போவாராயின், அரசனைப் பலரும் சுற்றத்தவர்களாகச் சூழ்தற்கு இல்லாமல் வறிஞர்களாலேயே சூழவேண்டிவரும். அவ்விதம் செய்வது சுற்றம் தழுவும் உபாயம் அல்லவென்றும், சுற்றம் தழுவும் உபாயமாவது அவரவர் தகுதிக்கேற்ப நடந்து வருதலென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் உபாயங்களோடு தழுவினாலும் ஏதோ ஒரு காரணத்தால் சுற்றத்தவர்கள் பிரிந்து செல்வாராயின் மறுபடியும் அச்சுற்றத்தவர் வந்து பொருந்துதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

520. தமராகித் தற்றுறந்தார் சுற்ற மமராமைக்

காரணமின்றி வரும்.

(பரி.) இ-ள். தமராகித் தற்றுறந்தார் சுற்றம்=முன் தமராய் வைத்துத் தன்னோடு அமராது யாதானுமொரு காரணத்தால் தன்னைப் பிரிந்து போயவர் பின்னும் வந்து சுற்றமாதல்—அமராமைக் காரணம் இன்றி வரும்=அவ்வமராமைக் காரணம் தன்மாட்டில்லையாகத் தானே புகுதரும். எ-று.





'அமராமைக்காரணமின்றி' என்றதனான், முன் அஃதுண்டாய்த் துறத்தல் பெறும். அஃதாவது:—அரசன்றனெறிகேடொழுகல், வெறுப்பன செய்தலென்றிவை முதலியவற்றான் வருவது. ஆக்கம் வருவிக்கப்பட்டது. இயற்கையாகவே அன்புடையராய சுற்றத்தார்க்குச் செயற்கையான் வந்த நீக்கம் அதனையொழிய ஒழியும், ஒழிந்தால் அவர்க்கன்புசெய்துகொள்ள வேண்டா, பழையவியல்பாய் நிற்குமென்பார், 'வரும்' என்றார். (௯)

விளக்கம்:—முன்னோர் முறை சுற்றத்தவராக இருந்தவர் ஏதோ ஒரு காரணத்தால் தன்னோடு பொருந்தாது தன்னைப் பிரிந்துபோயிருப்பாராயின், அவ்வித சுற்றத்தவர் பின்னும் தனக்குச் சுற்றத்தவர் ஆகவேண்டி முன் அவர்கள் தன்னிடம் பொருந்தாததற்குக் காரணமாகவிருந்ததைத் தன்னிடத்து நீக்குவதாகச் செய்துகொள்ளுவனுயின், அச்சுற்றத்தவர் மறுபடியும் தாமே வந்து கூடுவார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் ஒருவன் தான் செல்லவேண்டிய நெறியைக் கடந்து தீயவழியில் நடந்தலாலும், யாவரும் வெறுக்கக்கூடிய வெறுப்பனவாகிய செயல்களைச் செய்தலாலும் சுற்றத்தவர் நீங்குவரென்றும், பின்னர் அவ்வரசனே நன்னெறி ஒழுகி விரும்புவனவற்றைச் செய்வானுயின் முன்னர் அவர்கள் நீங்கிய காரணம் ஒழிதலால் இயல்பாகவே சுற்றத்தவர்க்கு உள்ள அன்பின் மிகுதியால் பழைய இயற்கையோடு அவனை விரும்பி அவனோடு ஒரு முறை பிரிந்தவர்போல் இல்லாமல் அவனைத் தழுவி நிற்பார் என்றும் அறிகிறோம். ஆதலால், அரசன்

ஓர் கால் ஊழ்வலியால் நெறிகடந்து நடந்து வெறுப்பனவற்றைச் செய்தாலும், பின்னர் நெறி நின்று விரும்புவனவற்றைச் செய்யின் சுற்றத்தவர் அவனைச் சூழ்ந்து அவன் வேண்டிய பயன்களை அடையச் செய்வார்கள் என்று பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "காரணம் கருதிப் பிரிந்து போகின்ற சுற்றத்தவர் தன்மை இதுவென்று அறிந்தோம். இனிக் காரணம் கருதாது போகும் சுற்றத்தவன் எவனென்றும், சுற்றத்தவன் ஒருவன் ஒருமுறை பிரிந்து சென்று மறுபடியும் வந்து கூடுவானாயின் அவனிடத்து அரசன் நடந்துகொள்ளவேண்டிய தகுதி ஏதுவென்றும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

சுற்றந்தழால் 168

530. உழைப்பிரிந்து காரணத்தின் வந்தானை வேந்த
னிழைத்திருந் தெண்ணிக் கொளல்.

(பரி.) இ-ள். உழைப் பிரிந்து காரணத்தின் வந்தானை = காரணமின்றித் தன்னிடத்து நின்றும் பிரிந்துபோய்ப் பின் காரணத்தான் வந்த சுற்றத்தானை—வேந்தன் இழைத்து இருந்து எண்ணிக் கொளல் = அரசன் அக்காரணத்தைச் செய்துவைத்து ஆராய்ந்து தழீஇக்கொள்க. எ-று.

வாளா 'உழைப்பிரிந்து' என்றமையின், பிரிதற்குக் காரணமின்மை பெற்றாம். வருதற்காரணத்தினைச் செய்யாதவழிப் பின்னும் பிரிந்துபோய்ப் பகையோடு கூடுமாகலின் 'இழைத்திருந்து' என்றும், அன்பின்றிப் போய்ப் பின்னுங் காரணத்தான் வந்தமையின் 'எண்ணிக்கொளல்' என்றுங் கூறினார். பிரிந்து போய சுற்றத்தாருள் தீமைசெய்யப்போய் அதனையொழிய வருவாரும் அது செய்யாமற்போய்ப் பின் நன்மை செய்ய வருவாரும் தழுவப்படுமாகலின், தழுவுமாறு முறையே இவ்விரண்டுபாட்டானுங் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—சுற்றத்தவன் ஒருவன் யாதொரு காரணமுமில்லாமல் அரசன் ஒருவனிடத்திருந்து பிரிந்து போய்ப் பின்பு ஏதோ ஒரு காரணம் கருதித் தன்னிடத்து வருவானாயின், அரசனானவன் அச்சுற்றத்தவன் எக்காரணத்தைக் கருதி தன்னிடத்து வந்தானோ அக்காரணத்தைச் செய்துவைத்து அவனை ஆராய்ந்து தழுவிக் கொள்ளுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, யாதொரு காரணமும் கருதாது எவனாயினும் ஒரு சுற்றத்த

வன் தன்னைப் பிரிந்துபோய்ப் பின்னர் தனக்கு ஏதேனும் ஒரு நன்மை கருதித் தன்னிடத்து வருவானாயின், அவனுக்கு ஆவன செய்து வைத்தாலொழிய அவன் மறுபடியும் தன்னோடு கூடான் ஆதலால், அவனுக்கு ஆவன செய்யவேண்டுமென்றும், அவ்வாறு செய்யாவிடில் தன்னைவிட்டுப் பிரிந்துபோய்ப் பகை அரசரோடு சேர்ந்து தனக்குத் தீங்கு செய்ய அவன் முயலுவானென்றும், இவ்விதம் ஆவனசெய்வதுடன் எக்காரணத்தால் இப்போது தன்னை வந்து கூடினான் என்பதை ஆராய்தல் வேண்டுமென்றும், அவ்வித ஆராய்ச்சியால் இவன்போன்று பிரிந்துபோன சுற்றத்தவரோடு சேர்ந்து தனக்குத் தீமை செய்யச் சென்று, பின் அத்தீமை செய்வதற்கு இல்லாது தன்னிடத்து வருபவனோ என்றும், அன்றி ஒரு



காரணமுமில்லாமற் போய்த் தனக்கு நன்மை செய்ய வருபவனோ என்றும் ஆராய்வதுடன் பகை செய்யச் சென்றவனையும் தழுவிக் கொள்ளுதல் வேண்டுமென்றும், பகையில்லாத நன்மை செய்தவனையும் அவன் நன்மைக்காகத் தழுவிக்கொள்ளுதல் வேண்டும் என்றும் அறிந்தோம். ஆதலால், அரசன் தன் சுற்றத்தை இவ்விதம் சூழ்தல் வேண்டும் என்று இவ்வதிகாரத்தால் கூறியதாயிற்று என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் சுற்றத்தவரோடு சூழ இருந்த அரசன் ஒருவன் எக்காலத்தும் அவர்க்கு ஆவன செய்தற்கும், இனியவை கூறற்கும், தழுவிக்கொள்ளற்கும் மறதியென்பது ஒன்று இல்லாது இருத்தல் வேண்டும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 54. அதிகாரம்.
## பொச்சாவாமை.

---

(பரி.) அஃதாவது உருவும் திருவும் ஆற்றலும் முதலாயவற்றான் மகிழ்ந்து தற்காத்தலினும் பகைமுடித்தன்முதலிய காரியங்களினும் சோர்தலைச்செய்யாமை. மேற்சொல்லிய சுற்றந்தாராற் பயனுண்டாவது இச்சோர்வில்வழியாக

யின், இது சுற்றந்தழாலின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது ஒருவன் உருவத்தாலும், செல்வத்தாலும், வல்லமையாலும் தன்னை அதிகமாக நினைந்து அம்மகிழ்ச்சியால் தன்னைக் காத்துக் கொள்ளுதலிலும் பகைவர் முதலியவர்களை அழித்தலாகிய காரியங்களிலும் சோர்ந்து விடாதிருத்தல். மேற்கூறிய சுற்றத்தவர்களால் பயனடைய வேண்டுமாயின், இவ்விதம் சோர்வாகிய மறவி இல்லாத காலத்தேதான் அது கிட்டும் ஆதலால், இப்பொச்சாவாமை என்னும் அதிகாரம் சுற்றந்தழாலின் பின் வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அதை கேட்ட மாணுக்கர், "ஒருவனுக்கு மகிழ்ச்சியால் மறப்பு வருமாயின் அதுவும் ஒருதீதோ ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

531. இறந்த வெகுளியிற் றீதே சிறந்த
வுவகை மகிழ்ச்சியிற் சோர்வு.

(பரி.) இ-ள். சிறந்த உவகை மகிழ்ச்சியிற் சோர்வு=மிக்கவுவகைக்



களிப்பான் வரும் மறவி—இறந்த வெகுளியிற் றீது=அரசனுக்கு அளவிறந்த வெகுளியினுந் தீது. எ-று.

மிக்கவுவகை=பெருஞ்செல்வம், பேரின்பம், பெருமிதமென்றிவற்றான் வருவது. அளவு=பகைவரையடர்த்தற்கும் கொடியோரை யொறுத்தற்கும் வேண்டுவது. இறந்தவெகுளி ஒரோவழிப் பகைவரையுங்கொல்லும், இஃதன்னதன்றித் தன்னையே கோறலின், அதனினுந் தீதாயிற்று. (க)

விளக்கம்:—அரசன் ஒருவனுக்கு மிகுந்த மகிழ்ச்சியால் வருகின்ற மறப்பானது அவனுக்கு அளவிறந்த கோபத்தால் வரும்தீமையினும் அதிக தீமையாக உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பகைவரை வெல்வதற்கும், கொடியவரைத் தண்டிப்பதற்கும் வேண்டுவதாகிய அளவுக்கு உட்பட்ட கோபமானது அளவு கடந்து செய்யப்பட்டால் அது அவனுக்கு எத்துணைக்

கொடிய தீமையை உண்டுபண்ணுமோ அவ்விதமே ஒருவனுடைய பெருஞ் செல்வம், மிகுந்த இன்பம், தன்னை யறியாது வரும் தருக்கு, ஆகிய இவை யெல்லாம் மிகுந்த மகிழ்ச்சியைத் தந்து அவ்வளவிறந்த மகிழ்ச்சியால் தன்னைக் காத்துக் கொள்ளுதலில் மறப்பை யுண்டாக்கி அதிக தீமையை அடையச் செய்யும். அன்றியும், அளவிறந்த கோபமானது பகைவரையும், கொடியவரையும் காரணமின்றிக் கொன்று பழியொன்றையே விளைக்கும். இம் மறப்போ பகைவரால் தன்னைக் கொல்லுவிக்கும். அதனுல் மிகுந்த வெகுளியினும் மறப்புக் கொடியதாயிற்று என்றனர். அது கேட்ட மாணக்கர், "இவ்விதம் மறவி தன்னையே கொல்லும் என்பது அறிந்தோம். ஆயினும் இம்மறவியால் இம்மைப்பயன் மறுமைப் பயன்களை அடைதற்கில்லையோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

582. பொச்சாப்புக் கொல்லும் புகழை யறிவினை
நிச்ச நிரப்புக்கொன் றாங்கு.

(பரி.) இ-ள். புகழைப் பொச்சாப்புக் கொல்லும்=ஒருவன் புகழினை அவன் மறவிகெடுக்கும்,—அறிவினை நிச்சநிரப்புக் கொன்றாங்கு=அறிவினை நிச்சநிரப்புக் கெடுக்குமாறுபோல. எ-று.



நிச்சநிரப்பு=நாடோறும் இரவான் வருந்தித் தன்வயிறு நிறைத்தல். அஃது அறிவுடையான்கணுண்டாயின் அவற்கு இளிவரவானும் பாவத்தானும் எண்ணற்பாட்டினை விளைத்து அவனன்குமதிப்பினையழிக்கும்; அது போல மறவியும் புகழுடையான்கணுண்டாயின் அவற்குத் தற்காவாமையானும் காரியக்கேட்டானும் எண்ணற்பாட்டினை விளைத்து அவனன்குமதிப்பினை அழிக்குமென்பதாயிற்று. இவையிரண்டுபாட்டானும் பொச்சாப்பினது குற்றம் கூறப்பட்டது. உ)

விளக்கம்:—ஒருவனுடைய தரித்திரமானது அவனுடைய அறிவினை எவ்விதம் கெடுக்குமோ அதுபோல அவன் புகழினை அவன் மறப்புக் கெடுக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது.

அதாவது, நாள்தோறும் பிச்சையெடுப்பதால் வருத்தமடைந்து தன் வயிற்றினை நிரைத்து வருவான் ஒருவன் அறிவுடையவனாக இருப்பினும், அவ்வித அறிவுடையான் பிச்சையெடுக்கின்ற காரணம் பற்றி இழித்துக் கூறப்படுகின்றானாதலால் பாவத்தினால் அவனுடைய நன்கு மதிப்பினை இழக்க நேருகின்றது. அதுபோல் ஒருவனுடைய மறப்பும் அவன் புகழை அடையக்கூடியவனாயிருந்தும் அவன் தன்னைக் காத்துக் கொள்ளாமையால் நேரிடும் காரியக் கேட்டால் அவனுக்கு இழிவை உண்டாக்கி, அவனுக்கு உள்ள நல்ல மதிப்பினையும் அழிக்குமென்பது பெற்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இரண்டு திருக்குறளாலும் மறப்பினது குற்றமும், அதனால் இம்மைப்பயனாகிய புகழை அடைவதில்லையென்பதும் அறிந்தோம். இவ்விதம் மறப்பினால் புகழ் அடைவதில்லை என்பதை எந்நூலாரும் ஒத்துக் கொள்வரோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

533. பொச்சாப்பார்க் கில்லை புகழ்மை யதுவுலகத்
தெப்பானூ லோர்க்குந் துணிவு.

(பரி.) இ-ள். பொச்சாப்பார்க்கும் புகழ்மை இல்லை=பொச்சாந் தொழுகுவார்க்குப் புகழுடைமையில்லை;—அது உலகத்து எப்பால் நூலோர்க்கும் துணிவு=அவ்வின்மை இந்நூலுடையார்க்கே யன்றி உலகத்து பல்வகைப்பட்ட நூலுடையார்க்கும் ஒப்ப முடிந்தது. எ-று.

அரசர்க்கேயன்றி அறமுதலிய நான்கினும் முயல்வார் யாவர்க்கும்



அவை கைகூடாமையிற் புகழில்லையென்பது தோன்ற, 'எப்பானூலோர்க்குந் துணிவு' என்றார். (௩)

விளக்கம்:—மறப்பினை மேற்கொண்டு மகிழ்ச்சியால் உலகத்து உழல்கின்ற மக்கட்கு எக்காலத்தும் புகழுடைமை இல்லை என்பது இந்நூல் உடையாராகிய திருவள்ளுவர்க்கு மாத்திரம் அல்லாமல் உலகத்து எவ்விதப்பட்ட நூலுடையாருக்கும் சம்மதமாகவே உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது,

அரசர்க்கு உரிய நூலில் மாத்திரமல்லாமல் அறம், பொருள், இன்பம், வீடு ஆகிய நான்கு நூலினும், 'முயற்சி செய்பவர் யாவருக்கும் மறப்பினால் அக்காங்கும் கைகூடாது அதனால் புகழ் இல்லாமற் போய்விடும்' என்று கூறுகின்றன என்பது தோன்ற எந்நூலார்க்கும் துணிபு என்றனர். ஆதலால், மறப்பு இருக்குமாயின் எக்காரியமும் கைகூடாது அதனால் அடையவேண்டிய பயனாகிய புகழை அடைவதற்கு இல்லாமற்போம் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பெரிய செல்வத்தை உடையார்க்கும் மறப்புப் பயனைக் கொடுக்காதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

534. அச்ச முடையார்க் கரணில்லை யாங்கில்லை
பொச்சாப் புடையார்க்கு நன்கு.

(பரி) இ-ள். அரண் அச்சம் உடையார்க்கு இல்லை=காடு மலை முதலிய அரண்களுள்ளே நிற்பினும், மனத்தின்கணச்சமுடையார்க்கு அவற்றாற்பயனில்லை;—அங்கு நன்கு பொச்சாப்பு உடையார்க்கு இல்லை=அதுபோலச் செல்வமெல்லாமுடையாராயினும், மனத்தின்கண் மறவியையுடையார்க்கு அவற்றாற் பயனில்லை. எ-று.

நன்மைக்கேதுவாகலின், 'நன்கு' என்றார். அச்சமுடையார் நின்ற அரணழியுமாறுபோல மறவியுடையாருடைய செல்வங்களும் அழியுமென்பதாயிற்று. (௪)

விளக்கம்:—ஒருவன் நீரரண், நிலவரண், காட்டரண், மலையரண்களாகிய காவலில் நின்றான் ஆயினும், அவன் மனத்தினிடத்தே மிக்க பயமுடையவனாக இருப்பானாயின் அக்காவல்களால்



அவனுக்கு எவ்விதம் பயனில்லாமல் போமோ, அவ்விதமே எல்லாச் செல்வங்கள் உடையவராயினும், மனத்தின்கண்ணே மறப்பினையுடையாருக்கு அச்செல்வங்களால் பயனில்லாமற் போம் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆகலால், மனத்தில் அச்சமுடையவர் தமக்கு எவ்வித அரண் இருந்தும் தம்மைக் காத்துக் கொள்ளுதலில்லாது அழிவரோ, அதுபோல மிகச் செல்வமுடையாரும் தம்

மைக் காத்துக்கொள்ளுதற் கில்லாத மறப்பினால் அச்செல்வங்களை யெல்லாம் இழப்பர் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "மறப்பினால் அரசன் ஒருவன் தன்னைக் காப்பதற்கு வேண்டிய காரியங்களை முறையாகச் செய்யானாயின் என்னும்?" என்னலும், ஆசிரியர் கூறலுறாயினர்.

535. முன்னுறக் காவா திழுக்கியான் றன்பிழை
பின்னூ றிரங்கி விடும்.

(பரி.) இ-ள். முன்னுறக் காவாது இழுக்கியான் = தன்னாற் காக்கப்படுந் துன்பங்களை அவை வருதற்குமுன்னே அறிந்து காவாது மறந்திருந்தான்—பின் ஊறு தன்பிழை இரங்கிவிடும் = பின்வந்துற்றபொழுது காக்கலாகாமையின் அப்பிழைப்பினை நினைந்திரங்கிவிடும். எ-று.

காக்கப்படுந் துன்பங்களாவன:-சோர்வுபார்த்துப் பகைவர் செய்வன. ஊற்றின்கண் என்புழி உருபுஞ்சாரியையும் உடன்தொக்கன. உற்றபொழுதுக் காக்கலாகாமையின், 'இரங்கிவிடும்' என்றார். இவை மூன்று பாட்டானும் பொச்சாப்புடையார்க்கு வருமேதம் கூறப்பட்டது. (5)

விளக்கம்:—ஒருவன் தான் காத்துக்கொள்ளவேண்டிய துன்பங்களை அத்துன்பங்கள் வருவதற்கு முன்னரே தெரிந்து காத்துக் கொள்ளாது மறந்திருப்பானாயின், பின்னர் அத்துன்பங்கள் வந்த காலத்து அவைகளைக் காப்பதற்கு அப்போது ஆகாமையால் தான் முன்னர்க்காவாது விட்டதனை எண்ணி அதற்காகத்துன்பப்படுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் முன்னரே காவாவிடின் இவனது மறப்பினையே எதிர்பார்த்திருக்கும் பகைவர் காலமறிந்து இவனைத் தாக்குவர். அக்காலத்து இவன் எல்லாவித ஆற்றலும் உடையவனாக இருக்கினும், அப்போது படைகள் முதலியவை ஆயத்தமாக இல்லாமையால், தன்னையும் தனது நாட்டையும்



காத்துக் கொள்வதற்கில்லாது அழிவான். அழிகின்ற காலத்து 'இவ்வித அழிவு நம் சோர்வினால் வந்ததன்றோ?' என்று மிகுதியும்

வருத்துவான் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "மறவியை உடையார்க்கு வரும் குற்றம் இத்தகையது என்று அறிந்தோம். இம்மறதி ஒன்று இல்லாவிடின் மிக்க நன்மை விளையும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

## 536. இழுக்காமை யார்மாட்டு மென்றும் வழுக்காமை
## வாயி னதுவொப்ப தில்.

(பரி.) இ-ள். இழுக்காமை யார்மாட்டும் என்றும் வழுக்காமை வாயின் =அரசர்க்கு மறவாமைக்குணம் யாவர்மாட்டும் எக்காலத்தும் ஒழிவின்றி வாய்க்குமாயின்,—அது ஒப்பது இல்=அதனை யொக்கும் நன்மை பிறிதில்லை, எ-று.

வினைசெய்வார் சுற்றத்தாரென்னும் தம்பாலார்கண்ணும் ஒப்பவேண்டுதலின் 'யார்மாட்டும்' என்றும், தாம் பெருகியஞான்றும் சுருங்கிய ஞான்றும் ஒப்பவேண்டுதலின் 'என்றும்' என்றும், எல்லாக் காரியங்களினும் ஒப்பவேண்டுதலின் 'வழுக்காமை' என்றும் கூறினார். வாயினென்பது முதனிலைத்தொழிற் பெயரடியாகவந்த வினையெச்சம். வாய்த்தல்= சேர்தல். (௬)

விளக்கம் :—அரசர்களுக்கு மறவாமை என்கின்ற குணம் எவரிடத்தும் எக்காலத்தும் நீங்காமல் உண்டாகுமாயின், அதனைக் காட்டிலும் நன்மையானது அவ்வரசர்க்கு வேறு ஒன்றில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? தம்மிடத்து வினை செய்பவரும், சுற்றத்தவரும் ஆகிய எல்லோரிடத்தும் மறப்பென்பதே இல்லாதிருக்கவேண்டுமென்றும், தாம் அளவிறந்த செல்வத்தால் பெருகியகாலத்தும், வறுமையால் சுருங்கிய காலத்தும், எக்காலத்தும் சமானமாய் மறதி இல்லாதிருத்தல் வேண்டுமென்றும், எந்தக் காரியங்களிலும் மறதி இல்லாது செய்ய வேண்டுவனவற்றைச் செய்ய வேண்டுமென்றும், இவ்விதம் எல்லோரிடத்தும், எக்காலத்தும், எவ்வினையையும் நீக்கமில்லாது செய்வது அருமையாதலால் வாய்க்கி னென்றும், அவ்விதம் வாய்க்குமாகில் அவர்க்கு எல்லா நன்மைகளையும் மறப்பில்லாமை உண்டாக்கி விடுமென்றும், எல்லா

நன்மைகளையும் உண்டாக்கும் இம்மறப்பின்மை ஒன்றே சிறந்த நன்மையென்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இம்மறப்பு அத்தனைச் சிறந்ததாயின் அதனால் ஆகாத காரியம் ஒன்றுமில்லைபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

537. அரியவென் றாகாத வில்லைபொச் சாவாக்
கருவியாற் போற்றிச் செயின்.

(பரி.) இ-ள். அரிய என்று ஆகாத இல்லை=இவை செய்தற்கரியன வென்று சொல்லப்பட்டு ஒருவற்கு முடியாத காரியங்களில்லை,—பொச்சாவாக் கருவியான் போற்றிச்செயின்=மறவாத மனத்தானே எண்ணிச் செய்யப்பெறின். எ-று.

பொச்சாவாத என்பதனிறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. அந்தக்கரணமாகலிற் 'கருவி' என்றார். இடைவிடாத நினைவும் தப்பாத சூழ்ச்சியுமுடையார்க்கு எல்லாம் எளிதின் முடியுமென்பதாம். இவை இரண்டு பாட்டானும் பொச்சாவாமையது சிறப்புக் கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—மறவாத மனத்துடனே எண்ணிக் காரியங்களைச் செய்வான் ஒருவனுக்கு 'இவைமிக அரியகாரியங்கள்' என்று எண்ணிச் செய்யக்கூடாதன ஒன்றும் இல்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மறப்பு என்பதே இல்லாதார்க்கு இடைவிடாத நினைப்பும் தவறாத உபாயங்களும் உண்டாகுமென்றும், அவற்றால் எவ்வித அரிய காரியமும் எளிதில் முடியுமென்றும் கண்டோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மறப்பில்லாமையால் எக்காரியமும் எளிதில் முடியுமென்று மறப்பின்மையின் சிறப்பினை அறிந்தோம். ஆயின் மறப்பில்லாது செய்யவேண்டுவன இவை என்பதை அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

538. புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டுஞ் செய்யா
திகழ்ந்தார்க் கெழுமையு மில்.

(பரி.) இ-ள். புகழ்ந்தவை போற்றிச் செயல்வேண்டும்=நீதிநூலுடையார் இவை அரசர்க்குரியனவென்று உயர்த்துக்கூறிய செயல்களைக் கடைப்பிடித்துச் செய்க,—செய்யாது இகழ்ந்தார்க்கு எழுமையும் இல்=அங்ங



னஞ் செய்யாது மறந்தவர்க்கு எழுமையினும் நன்மையில்லையாகலான். எ-று.

அச்செயல்களாவன :—மூவகையாற்றலும், நால்வகையுபாயமும், ஐவகைத் தொழிலும், அறுவகைக் குணமும் முதலாய செயல்கள். சாதி தருமமாகிய இவற்றின் வழிஇயோர்க்கு உள்ளது நிரயத்துன்பமேயாகலின், 'எழுமையுமில்' என்றார். எழுமை—ஆகுபெயர். இதனாற் பொச்சாவாது செய்யவேண்டுவன கூறப்பட்டன. (அ)

விளக்கம் :—நீதி நூல் ஆசிரியர்கள் எவையெவை அரசர் செய்ய வேண்டிய கடமைகளென்று உயர்த்திச்சொன்னார்களோ அவைகளை எல்லாம் விடாது அரசர் செய்தல் வேண்டும் என்றும், அவ்விதம் அச்செயல்களைச் செய்யாது ஒழிந்தார்க்கு எழு பிறப்பிலேயும் நன்மை யுண்டாகாது என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது; அறிவு, ஆண்மை, பெருமை ஆகிய மூவகையாற்றலும்; கொடுத்தல், இன் சொற்சொல்லல், வேறு படுத்தல், தண்டித்தல் ஆகிய நான்குவித உபாயங்களும்; மேற்செல்லல், அரண் முற்றல், கொன்னுதல், போரிடல், வெல்லல் என்பனவாகிய ஐவகைத் தொழில்களும்; நட்பாக்கல், பகையாக்கல், மேற் செல்லல், இருத்தல், பிரித்தல், கூட்டல் என்பனவாகிய அறுவகைக் குணங்களும் ஆகிய இவைகளை யெல்லாம் அரசன் கடைப் பிடித்துச் செய்தல் வேண்டுமென்றும், அவ்வாறு செய்யாது அளவிறந்த உவகையால் மறப்பினை மேற்கொண்டிருப்பானாயின், அவன் இம்மைப் பயனை இழப்பதுடன் அரசநீதியைச் சரியாகச் செய்யாதுபோவானாகை யால் மறுமைப் பயனையுமிழந்து நரகத்துன்பத்திலுன் அழுந்துவான் என்றும், அவனுக்கு எழுபிறப்பினும் நன்மை உண்டாகாது என்றும் அறிக்தோம். ஏனெனின் ? அரசன் குடிகளைக் காத்து ஆக வேண்டுவன செய்யாவிடின் அதனால் வரும் குற்றம் அவனை மாத்

நாசம் அணுகுவதன்றி, அவன் கீழ்ப்பட்ட குடிகள் யாவரையும் அழித்து, இம்மை மறுமைப் பயன்களையும் இழக்கவிடச்செய்கின்ற தாதலால் இவ்வித மறப்பென்னும் குற்றத்திற்கு ஆளாகிய ஒருவனுக்கு எழு பிறப்பினும் நன்மை உண்டாவதில்லை என்பது திண்ணமே என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "மறவாது அரசன் செய்யவேண்டுவன இவையென்றும், செய்



யாத காலத்து அடையும் தீமை இதுவென்றும் அறிந்தோம். ஆயினும், இம்மறவாமையால் வரும் மகிழ்ச்சியை அறிவித்தல் வேண்டும்" என்றலும், ஆசிரியர் கூறலாயினர்.

539. இகழ்ச்சியிற் கெட்டாரை யுள்ளுக தாந்தம்
மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து.

(பரி.) இ-ள். தம் மகிழ்ச்சியின் தாம் மைந்து உறும் போழ்து=அரசர் தம்மகிழ்ச்சிக்கட்டாம் வலியுறும்பொழுது,—இகழ்ச்சியின் கெட்டாரை உள்ளுக=முற்காலத்து அதனுய சோர்வாற் கெட்டவர்களை நினைக்க. எ-று.

காரணங்களோடு அவர்க்குளதாய உரிமையை மகிழ்ச்சிமேலேற்றித் 'தம் மகிழ்ச்சியின்' என்றும், இகழ்ச்சியுங் கேடும் உடன்றோன்றுமாகலின் 'மகிழ்ச்சியின் மைந்துறும் போழ்து' என்றுங் கூறினர். கெட்டாரை உள்ளவே, தாமும் அவ்வாறே கெடுதுமென்று அதன்கண் மைந்துறாரென்பது கருத்து. 'உன்னுக' என்று பாடமோதுவாருமுளர். (௯)

விளக்கம்:—அரசரானவர் தாம் அடைந்த பல உரிமைகளால் தம்மை அதிகமாக நினைத்து மகிழ்கின்ற காலத்து இவ்விதம் முற்காலத்து மகிழ்ச்சியினில் நிலைத்து அம்மகிழ்ச்சியால் தாம் செய்ய வேண்டுவனவற்றைச் செய்யாது மறந்து கேடு அடைந்தவர்களை நினைத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுவதால் அரசரானவர் தமக்குப் பெரியதோர் தகுதியும் செல்வமும் கிடைக்கு

மாயின் அக்காலத்து அத்தகுதியாலும் செல்வத்தாலும் மிகுதியும் மகிழ்ச்சியை யடைந்து தாம் செய்யவேண்டுவனவற்றைச் செய்யாது மறந்து கெட்டவர் அடைவது இன்மையாதலால் அவ்விதம் மறப்பும் அதனாற்கேடும் உண்டாகாதிருக்கவேண்டும் என்று எண்ணுகின்ற நல்லறிவினையுடைய அரசர் தம்போன்று மகிழ்ச்சியினால் முற்காலத்துச் செய்யவேண்டுவனவற்றைச் செய்யாது மறந்து கெட்டவர் அடைந்த அரசர்களது சரிதையைக் கற்றும் கேட்டும் மறப்பு என்பதைத் தாம் கொள்ளாது இருக்க முயலவேண்டும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "எத்துணை மகிழ்ச்சியடையினும் மறப்பு என்பது கூடாது என்பது அறிந்தோம். ஆயின், ஒருவன் மறவாமை என்பதையே தனக்கு



எல்லாம் தருவது என்று எண்ணி அம்மறவாமையை மேற்கொண்டு வாழுமின், அவன் எதையும் அடைதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

540 உள்ளிய தெய்த லெளிதுமன் மற்றுந்தா
னுள்ளிய துள்ளப் பெறின்.

(பரி.) இ-ள். தான் உள்ளியது எய்துதல் எளிது மன் = அரசனுக்குத் தானெய்த நினைத்த பொருளை அந்நினைத்த பெற்றியே எய்தல் எளிதாம்,—மற்றும் உள்ளியது உள்ளப்பெறின் = பின்னும் அதனையே நினைக்கக் கூடுமாயின். எ-று.

அது கூடாதென்பது ஒழிந்து நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. அதனையே நினைத்தலாவது:— மறவியின்றி அதன்கண்ணே முயறல். இவை யிரண்டுபாட்டானும் பொச்சாவாமைக்கு உபாயம் கூறப்பட்டது. (ய)

விளக்கம்:—அரசன் ஒருவன் தான் அடைய எண்ணிய பொருளை நினைத்த வண்ணமாகவே இருக்கப்பெறுவானாயின் அவன் அடைய எண்ணிய பொருளை எண்ணிய வண்ணமே அடைதல் எளிதாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால், ஒருவன் ஒரு பொருளை அடைதல் வேண்டுமென்று ஆசைக்கொண்டால் ஒரு முறை அப்பொருளைப் பற்றி நினைத்து விட்டு மறுபடியும் நினையாது மறந்துவிடுவானாயின் அவனுக்கு அப்பொருள் கைகூடாது என்றும், அதனால் எவனொருவன் தான் எண்ணிய பொருளை அடைவதற்கு எக்காலத்தும் அதையே நினைந்து நிற்கின்றானோ அவ்வித தகுதியுடையானே அவன் எண்ணிய பொருள் எவ்வித மேன்மையுடையதாயினும் எளிதாக அடைந்துவிடுதல் கூடும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இரண்டு திருக்குறள்களாலும் முறையே மகிழ்ச்சியினால் மறப்பு என்பதைக் கொள்ளா திருப்பதற்கும் எண்ணிய பொருளை அடைவதற்கும் உபாயங்கள் இவை என்று அறிந்தோம். இனி, இவ்விதம் மறவாமையைக்கொண்ட அரசன் ஒருவன் நடத்தும் அரசின் முறைமை என்று இறைமாட்சியினுள் பத்தாவது திருக்குறளில் கூறியசெங்கோல் என்பதையும் விளக்கல் வேண்டும்" என்று கேட்டலும், ஆசிரியர் கூறலாயினர்.

---



## 55. அதிகாரம்.

## செங்கோன்மை.

---

(பரி) இ-ள். அஃதாவது அரசனாற் செய்யப்படும்முறையினது தன்மை. அம்முறை ஒருபாற்கோடாது செவ்வியகோல்போறலிற் செங்கோலெனப் பட்டது. வடநூலாரும் தண்டமென்றார். அது சோர்வில்லாத அரசனாற் செயற்பால தாகலின், இது பொச்சாவாமையின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, அரசன் ஆளுகையில் செய்யப்படும் முறை. அவ்வித முறை ஒரு பக்கத்தில் சாய்ந்து கோணுதலை அடையாது நேராகக் காணப்படும் கோல்போல் இருத்தலால் செங்கோல் என்று கூறப்பட்டது. இவ்வித செங்கோல் மறதியில்லாத அரசன் ஒருவனால் செய்யவேண்டுவது ஆதலால் மறதியைக் கூறும் பொச்சாவாமை யென்னும் அதிகாரத்துக்குப் பின்னர் இவ்வதிகாரத்தைக் கூறினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒரு பால் கோடுதல் என்பது என்னை?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

541. ஓர்ந்துகண் ணோடா திறைபுரிந் தியார்மாட்டுந்
தேர்ந்துசெய் வஃதே முறை.

(பரி.) இ-ள். ஓர்ந்து=தன்கீழ் வாழ்வார் குற்றஞ்செய்தால் அக்குற்றத்தை நாடி—யார்மாட்டும் கண்ணோடாது=யாவர்மாட்டுங் கண்ணோடாது—இறை புரிந்து=நடுவுநிலைமையைப் பொருந்தி—தேர்ந்து=அக்குற்றத்திற்குச் சொல்லிய தண்டத்தை நூலோரோடு மாராய்ந்து—செய்வஃதே முறை=அவ்வளவிற்குச் செய்வதே முறையாம். எ-று.

நடுவுநிற்றல் இறைக்கியல்பாகலின் அதனை 'இறை' என்றும், உயிரினுஞ் சிறந்தார்கண்ணுமென்பார் 'யார்மாட்டும்' என்றுங் கூறினர். இறைமை இறையெனவும், செய்வது செய்வஃதெனவும் நின்றன. இதனாற் செங்கோன்மையிலக்கணங் கூறப்பட்டது. (க)

விளக்கம்:—அரசனானவன் தன் கீழ்ப்பட்ட குடிகள் குற்றஞ் செய்வாராயின் அக்குற்றம் எதுவென்று ஆராய்ந்தும் அவ்விதம் ஆராயும் கால் எவரிடத்தும் பக்ஷபாதமில்லாத நடுவுநிலைமையுடன்



நின்றும், செய்த குற்றத்திற்கு நூல்களில் சொல்லி உள்ள தண்டனை இதுவென்று நூல்வல்லவரோடு ஆராய்ந்தும், அவ்வித தண்டனையை ஏறுதலும், குறைதலும் இல்லாது சொல்லிய அளவாகவே செய்வது முறையென்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? அரசனானவன் இயல்பாகவே நடுநிற்றலால் இறைவன்

என்ற தலைமைப் பெயரைக் கொண்டதோடு தனக்கு உயிரினும் சிறந்தாராய் இருக்கினும் அவரிடத்தும் குற்றம் கண்டவிடத்து பக்ஷபாதமில்லாது தண்டிப்பதே முறையாதலால் இவ்விதம் செய்கின்ற அரசனது கோலே கோணுதலையடையாத செங்கோல் எனச் செங்கோலின் இலக்கணம் கூறியதாயிற்று என்று கூறினர். அது கேட்ட மாணாக்கர், "உலகத்து மக்களெல்லாம் அரசன் செங்கோல் நோக்கிவாழ வேண்டும் போலும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

542. வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன்
கோனோக்கி வாழுங் குடி.

(பரி.) இ-ள். உலகு எல்லாம் வான் நோக்கி வாழும்=உலகத்துயிரெல்லாம் மழையுளதாயின் உளவாகாநிற்குமேயெனினும்,—குடி மன்னவன் கோல்நோக்கி வாழும்=குடிகள் அரசன் செங்கோலுளதாயின் உளவாகா நிற்கும். எ-று.

நோக்கிவாழ்தல்=இன்றியமையாமை வானினாயவுணவை 'வான்' என்றும், கோலினாய மெத்தைக் 'கோல்' என்றும் கூறினர். அவ்வேமமில்வழி உணவுளதாயினுங் குடிகட்கு அரசனாற் பயனில்லை யென்பதாம். (உ)

விளக்கம்:—உலகத்திலுள்ள உயிர்களெல்லாம் மழை ஒன்றினால் வாழ்வது உண்மையாயினும், குடிகள் அரசன் செங்கோலோடு இருப்பானாயின் வாழ்தல்கூடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உலகத்திலுள்ள உயிர்கள் மழையின் தகுதியால் உணவினைக்கொண்டு பிழைப்பதும், அவ்வுணவில்லாது இறப்பதும் இயல்பாக இருக்கினும், மழையிருந்து உணவுகிடைத்த காலத்தும் அரசனது ஆணை பக்ஷபாதத்தோடு இருக்குமாயின் உணவால் பயன்துய்த்து வாழ்தல் கூடாதென்றும் அவனது செங்கோலே வாழ்வதற்கு இடமாகுமென்றும் செங்கோலின் தகுதி



யைக் கூறியதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரசனது செங்கோல் குடிகள் வாழ்வதற்குக் காவலாக உள்ளது என்

பது அறிந்தோம். ஆயின், அது செங்கோலாக இல்லாவிடில் எவ்விதம் குடிகள் வாழ்வதற்கு இல்லாமற்போகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**543.** அந்தணர் நூற்கு மறத்திற்கு மாதியாய்
நின்றது மன்னவன் கோல்.

(பரி.) இ-ள். *அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய் நின்றது*= அந்தணர்க்குரித்தாய வேதத்திற்கும் அதனுட் சொல்லப்பட்ட அறத்திற்கும் காரணமாய் நிலைபெற்றது—*மன்னவன் கோல்*= அரசனாற் செலுத்தப்படுகின்ற செங்கோல். எ-று.

அரசர் வணிகரென்னுமேனையோர்க்கு முரித்தாயினும், தலைமைபற்றி 'அந்தணர் நூல்' என்றார். "மாதவர் நோன்பு மடவார் கற்பும்—காவலன் காவ" லன்றித் தன்காவலான் ஆகலின், ஈண்டறமென்றது அவை யொழிந்தவற்றை வேதமும் அறனும் அநாதியாயினுஞ் செங்கோலின் வழி நடவாவாகலின், அதனை அவற்றிற்கு 'ஆதி' என்றும், அப்பெற்றியே தனக்காதியாவது பிறிதில்லையென்பார் 'நின்றது' என்றுங் கூறினார். இவையிரண்டு பாட்டானுஞ் செங்கோலது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

விளக்கம் :—அரசனால் செலுத்தப்படுகின்ற செங்கோல் அந்தணர்க்கு உரியதாகிய வேதமென்னும் நூலிற்கும் அந்நூலுள் சொல்லப்பட்ட அறத்திற்கும் காரணமாய் நிலைபெற்று நிற்கின்றது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அந்தணர் என்று முதல் வருணத்தாரைக் கூறி நின்றமையால் ஏனைய வணிகர் முதலான வருணத்தவரது தொழிலுக்கும் காரணமாய் நிற்பது அரசனுடைய செங்கோலென்றும், வேதமானது அநாதியாக இறைவனது திருவாக்கு என்று நூல்கள் கூறுமாயினும் அரசனது ஆணை சரியாக நடவாவிடின் அதனை ஓதுதலும், ஓதுவித்தலும், ஆகிய செயல்களைச் செய்வதும் கூடாதென்றும், அவ்விதமே ஏனைய வருணத்தோர்க்கும் அவரவர் தொழில் நடவாதென்றும் அறிகிறோம். அன்றியும் இதனையே மணிமேகலை இருபத்திரண்டாவது சிறை செய்த காதையின் "மாதவர் நோன்பு மடவார் கற்பும்—காவலன் காவலின்

றேனில் இன்றால்" என்று கூறியதாலும் அறிதல் கூடும் என்று ஆசிரியர் கூறினர். மாணாக்கர், "மணிமேகலையின் கதை யாது?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர். மணிமேகலை என்பாள் காவிரிப் பூம் பட்டினத்தில் மாதவி என்ற கணிகைக்கும் கோவலனென்னும் ஒரு வணிகனுக்கும் பிறந்தவள். கோவலன் என்பான் தன் மனைவி கண்ணகியோடு மதுரைமா நகரம் சென்று அங்கு அரசனது அறியாமையால் வெட்டுண்டமையைக் கேட்ட மாதவி என்னும் காதல் கணிகை தவம் பூண்டாளாதலால், அவள் மகள் மணிமேகலையும் தவம் பூண்டு ஓர் மலர் வனம் புகுந்து அறவண அடிகளுக்கு இடுவதற்கு மலர் கொய்யச் சென்றனள். அந்த மணிமேகலையை விரும்பியிருந்த உதயகுமரன் என்னும் அந்நாட்டு அரசன் மகன் அவள் மீது காதல்கொண்டு அவளிருந்த இடத்தே சென்று அவளைத் தேர்மீது ஏற்றிச் செல்ல எண்ணி அவ்விதமே சென்றான். சென்றகாலத்து மணிமேகலையானவள் தன்னோடு இருந்த சுதமதி என்னும் பெண்மணியின் சூழ்ச்சியின்படி அங்கு இருந்த பளிக்கறையுள் புகுந்து தாளிட்டு இருந்தனள். வந்தவனாகிய உதயகுமரன் மணிமேகலையைக் காணாது சுதமதியை வினவலும் அவள் அவ்வுதய குமரனுக்கு அறத்தைப் போதித்தனள். அதுகேட்டவனாகிய உதயகுமரன் பளிக்கறையினுள்ளே இருந்த மணிமேகலையைக் கண்டு அப்பளிக்கறையினுள் செல்லுவதற்கு நினைந்து அதனுடைய வாயில் காணப்படாமையால் அப்பளிக்கறைச் சுவரைக் கையால் தடவிக்கொண்டு வந்து மறுபடியும் சுதமதியை நோக்கி 'மணிமேகலையின் தன்மை எது?' என்று கேட்டனன். அதற்குச் சுதமதி 'மணிமேகலை தவவொழுக்கமுடையவள்; குற்றஞ் செய்தாரைச் சபிக்கும் வல்லமையுடையவள்; சிறிதும் காமவிகாரம் என்பது இல்லாதவள்; ஆதலால் நீ யவளை விரும்புதல் தகுதியன்று' என்று புத்தி கூறினாள். அதுகேட்ட உதயகுமரன், 'அவள் எத்தன்மையளாயினும் ஆகட்டும்; எவ்விதமேனும் எனக்கு உரியவளாகக் கடமைப் பட்டிருக்கின்றாள்' என்று கூறிச் சென்றனன். இவை எல்லாம் அறிந்த மணிமேகலை 'நாம் இவ்வடிவத்தோடு திரிந்துகொண்டிருப்

போமாயின் நம்மை உதயகுமரன் விட்டு நீங்கான்; நம்மை எவ்வித மேனும் கைப்பற்றிக் கொள்ள முயற்சி செய்வான்; ஆதலால் நாம் காயசண்டிகை என்னும் தவப் பெண்ணின் வடிவத்தைக் கொள்ளு

33



தல் நன்மை' என்று எண்ணினளாய் அவள் வடிவு கொண்டு அமுத சுரபி என்னும் ஓர் பாத்திரத்தைக் கையிற்கொண்டு சிறைச்சாலையி னுள் புகுந்து அங்கு தண்டிக்கப்பட்டிருந்த சிறையாளர்களுக்கெல் லாம் பசி நீக்கிச் சிறைச்சாலையை அறச்சாலையாக்கி இருந்தனள். இதெல்லாம் கேட்ட உதயகுமரன் 'இவளை எவ்விதமேனும் கைப்பற் றித் தேரில் ஏற்றி அவள் கற்ற வித்தைகளையும் அவள் சொல்லும் இனிமையாகிய மறுமொழிகளையும் கேட்பேன்' என்று தன்னுள் ளே எண்ணிக்கொண்டே சென்று அவளிருக்கும் உலகஅறவியில் ஏறினன். இவன் இவ்விதம் இருக்கக் காயசண்டிகைக்குத் தலைவனா கிய காஞ்சன் என்னும் வித்யாதரன் அவள் சாபம் நீங்கித் தன்னிட த்து இன்னும் வரவில்லையே என்று அவளைத் தேடிக் காவிரிப்பூம் பட்டினத்தில் இறங்கி அங்குப் பல இடங்களில் தேடித் திரிந்து தன் காதலி காயசண்டிகையினுடைய வேடத்தைப் பூண்டுப் பலர்க்கும் உணவளித்து அலசு நபசிகளை மாற்றிக்கொண்டிருக்கும் பெண்ணினை மணிமேகலை என்று அறியாது காயசண்டிகை என்றே நிச்சயித்து அவளருகிற்சென்று 'நீ எந்தியபாத்திரம் ஒன்றுயிருந்தும் பலர்க்கும் அன்னமிடுகின்றாய்; இதென்னை?' என்றுவினவலும், அதற்கு அவள் யாதும் மறுமொழி கொடாது தன்மீது காதல்கொண்டு வந்த உதய குமரனிடத்தே சென்று செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை, இளமை நிலையாமை ஆகிய தருமங்களைப் போதித்து நின்றனள். இதுகண்ட வித்யாதரன் கோபங்கொண்டு 'நமது மனைவியாகிய இவள் இவ்வினைஞன்மீது காதல் கொண்டவள்; அதனை நாம் அறியா வண்ணம் இவனுக்கு அறவழியைப் போதிக்கின்றாள்; எவ்வித மேனும் இவ்விளக்குமரன் இன்று இரவு இவளிடத்தே வருவன்; அக்காலத்து இவனை வெட்டி வீழ்த்துவோம்' என்று எண்ணின வனாய் ஓரிடத்து ஒளிந்து இருந்தான். காயசண்டிகை வேடம்

பூண்ட மணிமேகலை சொல்லிய விஷயங்களைக் கேட்ட உதயகுமரன் 'இவள் மணிமேகலையே யாகும்; வேடத்தால் நம்மை மயக்குகின்ருள்; ஆகலால் இவளை இன்றிரவு இங்கு வந்து அடைவோம்' என்று எண்ணிச் சென்ருன். சென்றவனுகிய உதயகுமரன் அன்றிரவுதான் எண்ணியபடியே மணிமேகலையினிடம் வரவும், அவன் வருகையை எதிர்பார்த்திருந்த காயசண்டிகையின் கணவனுகிய வித்யாதரன் தன்னுடைய வாளால் அவன்தோளை வீசிக்கொன்ருன். பிறகு உதய



குமரன் இறந்தான் என்று கேட்ட அரசன் 'அறநெறியில் விலகி மறவழியிற் சென்ற எனது குமாரன் தேகத்தைச் செய்யவேண்டுவன செய்துவிடுங்கள்,' என்று கூறி, மணிமேகலையைச் சிறைசெய்யும்படிக் கட்டளையிட்டான். இவ்விதமிருக்கவும் உதய குமரன் தாய், தன் குமரன் இறப்பதற்குக் காரணமாய் இருந்த மணிமேகலையை நாம் எவ்விதமேனும் துன்பப்படுத்திக் கொல்லு தல் வேண்டும் என்று எண்ணி அரசனிடம் சென்று 'மணிமேகலை குற்றமற்றவள்; அவளைச் சிறைச் சாலையினின்றும் விடுவித்தல் வேண்டும்' என்றுகூறினள். அதுகேட்ட அரசன், 'நீ அவ்விதம் எண்ணுவாயாகில் உன் விருப்பப்படியே செய்தல் கூடும்' என்றனன். அரசன் மனைவியும் அவளைச் சிறையினின்றும் மீட்டுத் தன்னுடைய அரண்மனையில் வைத்து அவளைப் பலவிதமாகவும் துன்பப்படுத்தி உயிரையும் போக்க எண்ணியகாலத்து அதனை அறிந்த மணிமேகலை தன்தவ வலியால் பிழைத்து இருந்தாள். அவள் தவவலியை அறிந்த அரசன் மனைவி அவளை வணங்கி அவன் செல்லவேண்டிய இடத் திற்குச்செல்லும்படி ஏவினள். மணிமேகலையும் தன்விருப்பப்படியே தவம் பூண்டாளாய் தவத்தவரிடம் சென்று தவம் கோடாது அற வழியில் நின்ருள் என்பதே மணிமேகலையின் கதையாகும்.

544. குடிதழீஇக் கோலோச்சு மாநில மன்ன
னடிதழீஇ நிற்கு முலகு.

(பரி.) இ-ள். குடிதழீஇக் கோல் ஓச்சும் மாநிலமன்னன் அடி = தன் குடிகளையுமணைத்துச் செங்கோலையுஞ் செலுத்தும் பெருநிலவேந்தனடி

யை—தழீஇ நிற்கும் உலகு=பொருந்தி விடார் உலகத்தார். எ-று.

அணைத்தல்=இன்சொற் சொல்லுதலும், தளர்ந்துழி வேண்டுவன கொடுத்தலும் முதலாயின. இவ்விரண்டனையும் வழுவாமற்செய்வான் நில முழுதுமாளுமாகலின் அவனை 'மாநிலமன்னன்' என்றும், அவன் மாட்டி யாவரும் நீங்கா அன்பினராவராகலின் 'அடிதழீஇ நிற்குமுலகு' என்றும் கூறினர். (ச)

விளக்கம்:—தன் குடிகளை அணைத்துக்கொண்டு செங் கோல் முறைமையும், முறையாகச் செலுத்தும் பெரிய பூமிக்கு அரசனாக உள்ள ஒருவனது காலினை பிணையாகப்



பற்றிக்கொண்டு அவனை விடாது அவன்பின் செல்வர் உலகத் தவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அர சன் ஒருவன் தன் குடிகள் குறையிரந்த காலத்து அவர்களுக்கு இனிய சொல்லைச் சொல்லியும், அவர்கள் வறுமையுற்ற காலத்து வேண்டுவனவாகிய பொருளைக் கொடுத்தும் செங்கோலைச் செலுத் துவானாயின் அவ்வித அரசனை மக்கள் தங்களுக்கு உயிரென எண்ணி அவன் நாட்டில் வாழ்வர். அவ்விதம் வாழும் காலத்து அவன் நாடானது வெகுதூரம் பரந்து அவனைச் சக்கரவர்த்தி யென்னும் பெயருக் குரியவன் ஆக்கும் என்று செங்கோலின் சிறப்பினை உணர்த்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "செங் கோல் செலுத்தும் அரசன் நாடானது மிகவளமுடையதாக இருக் கவேண்டுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறலுற்றனர்.

545. இயல்புளிக் கோலோச்சு மன்னவ னாட்ட
பெயலும் விளையுளுந் தொக்கு.

(பரி.) இ-ள். பெயலும் விளையுளும் தொக்கு=பருவமழையும் குன் றாத விளைவும் ஒருங்கு கூடி—இயல்புளிக் கோல் ஓச்சும் மன்னவன் நாட்ட=நூல்கள் சொல்லிய இயல்பாற் செங்கோலைச் செலுத்துமரசனது நாட்டின்கண்ணவாம். எ-று.

உளியென்பது மூன்றுவதன் பொருள்படவதோரிடைச் சொல், வானும் நிலனுஞ் சோரத் தொழிற்பட்டு வளஞ்சுரக்கு மென்பதாம். (ரு)

விளக்கம் :—அரசனுக்குக் கூறிய நூல்களில் சொல்லியபடி அரசன் தன் செங்கோலைச் செலுத்துவானாயின் அவ்வித அரசனுடைய நாட்டில் பருவத்து மழையும் அம்மழையாலாகிய விளைவும் ஒன்று சேர்ந்து வளம்தரும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அறத்தின் வழியே அரசன் நடப்பானாயின், 'அரசன் எவ்வழி—குடிகள் அவ்வழி, நீர்வழி மிதவை—சான்வழிக்காசு' என்றபடி மக்களும் அறநெறி விலகாது நடப்பாராதலால் அதனை உணர்ந்த அறக்கடலாகிய அந்தணன் உயிர்களின்மீது உள்ள அருளால் பருவமழையினை பெய்யச் செய்து சிறிதும் குறையாத பெரியதோர் வளத்துக்குக் காரணமாகிய விளைவுகளை உண்டுபண்ணி உயிர்கள் யாவையும் ஓம்புவன் என்பது கண்டோம். என்னை?



தந்தை ஒருவன் தன் வழி நின்ற மக்களைக் காணும் காலத்து அவர்க்கு வேண்டுவன செய்தும், தன் வழி நில்லாத மக்களுக்குத் தண்டனையை விதித்தும் நிற்பதுபோல், இறைவனும் தான் விதித்த விதியில் நின்று அறநெறியைக் கைக்கொள்ளும் அரசனுக்கும் அவன் கீழ்ப்பட்ட குடிகளுக்கும் அவர்கள் பிழைக்கும்படி உலகத்துக்கு அமுதமென்று சொல்லும் மழையை அனுப்புவனென்றும், அல்லாவிடில் மழை பெய்யாமற் செய்து குடிகளை வருத்துவன் என்றும் கண்டோம். இதனை விவேகசிந்தாமணி என்னும் நூலிற் கூறிய பின்வரும் செய்யுள்களே உங்களுக்கு விளக்கும் அவையாவன :—

" வேத மோதிய வேதியர்க் கோர்மழை
நீதி மன்னர் நெறியினுக் கோர்மழை
காதல் மங்கையர் கற்பினுக் கோர்மழை
மாத மூன்று மழையெனப் பெய்யுமே."

" அரிசி விற்றிடும் அந்தணர்க் கோர்மழை
வரிசை தப்பிய மன்னவர்க் கோர்மழை

புருடனைக் கொன்ற பூவையர்க் கோர்மழை
வருட மூன்று மழையெனத் தூறமே." என்பனவாம்.

ஆதலால், அரசனது கோல் செங்கோன்மையாக இருக்குமாயின் உலகம் உய்வதற்கு முதற்காரணமாகிய மழையும் தவறாது பெய்யுமென்றும், அம்மழையால் விளைவன விளைந்து உயிர்கள் பிழைக்குமென்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "செங்கோன்மைதானே பாவும் தருவது?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

546. வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉங் கோடா தெனின்.

(பரி.) இ-ள். மன்னவன் வென்றி தருவது வேல் அன்று, கோல் = மன்னவனுக்குப் போரின்கண் வென்றியைக் கொடுப்பது அவ்வேலன்று, கோல், — அதூஉம் கோடாது எனின் = அஃதும் அப்பெற்றித்தாவது தான் கோடாதாயின், எ-று.



கோல் செவ்விதாயவழியே வேல் வாய்ப்பதென்பார் 'வேலன்று' என்றார்: "மாண்ட—வறனெறி முதற்றே யரசின் கொற்றம்"* என்றார் பிறரும். கோடாதெனின் என்பது பாடமாயின், கருவியின்றொழில் வினைமுதன் மேனின்றதாகவுரைக்க. (௬)

விளக்கம் :—அரசன் ஒருவனுக்குப் பகைவரோடு போராடும் காலத்து வெற்றியைக் கொடுப்பது அவன் கையிற்றாங்கிய வேல் அன்று என்றும், அவ்வெற்றியைக் கொடுப்பது அவனுடைய செங்கோலே என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? அவனது செங்கோல் செங்கோலாக இருக்குமாயின் அதுவெற்றி தரும் என்றமையால், நீங்கள் நினைவியபடி செங்கோல் ஒன்றே பகைவரை வெல்வதற்கு உரிய மாட்சியாகும். அது என்னைபோ வெனின்? அரசன் செங்கோலனாயிருப்பானாயின் அவன் மீது

பகைவர் வந்தகாலத்து அவன் கீழ்ப்பட்ட குடிகள் ஒவ்வொருவரும் போர் வீரராகி அரசனுக்கு ஜெயம் வருமென்னும் கருத்துடன் தம்முயிரைப் பொருளாக மதியாது உயிர்போம் அளவும் புறமுது கிடாது போராடுவர். அவ்விதம் போராடுவதால் பகைவர் தோற் றுப் புறமுதுகிடுவர். ஆகவே, செங்கோன்மையுடைய இவ்வரசனுக்கு வெற்றியாகும். ஆதலால், மன்னவன் ஒருவனுக்கு அவனது தேக வலி, படைவலி ஆகிய இவைகள் மாத்திரம் போதாவென்றும், செங்கோன்மையால் ஆகிய வலிவேண்டும் என்றும் பெற்றோம் என்றனர். அதுகேட்டமாணுக்கர், "அரசன் ஒருவனைக் காப்பது அவன் செங்கோன்மைபோலும்!" என்னலும், ஆசிரியர் கூற லாராயினர்.

547. இறைகாக்கும் வையக மெல்லா மவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.

(பரி.) இ-ள். வையகம் எல்லாம் இறை காக்கும்=வையகத்தையெல் லாம் அரசன் காக்கும்;—அவனை முறை காக்கும்=அவன்றன்னை அவனது செங்கோலே காக்கும்;—முட்டாச் செயின்=அதனை முட்ட வந்தவழியும் முட்டாமற் செலுத்துவனாயின். எ-று.

* புறநானூறு—55.



முட்டாமற் செலுத்தியவாறு மனுவை முறைசெய்தான் கண்ணும் தன் கை குறைத்தான் கண்ணும் காண்க. முட்டாதென்பதன் இறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. இவை நான்கு பாட்டானும் அதனைச் செலுத்தினு னெய்தும் பயன் கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—அரசன் ஒருவன் வையகம் முழுவதும் அவன் காத்தல் கூடுமென்றும் தனது செங்கோலைச் சிறிதும் தவறாது செலுத்தி வருவானாயின், அவனுடைய செங்கோலே அவனைக் காக் கும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன்

ஒருவன் தன்னுடைய அரசாட்சியை நடு நிலையாக நின்று செலுத்துவானாயின் அவ்வித நடுநிலையானது அவ்வரசனுக்குக் காவலாகும். அவ்வித காவல்கொண்ட அரசன் ஒரு குடைக் கீழ் உலகம் முழுவதும் ஆளுதல் கூடும். ஏனெனில்? நடு நிலை தவறவேண்டிய இடத்தும் தவறாது செய்வானாயின், அதைக் கண்ட உலகம் 'இவ்வரசன் யாவரிடத்தும் நடுநிலை யுடையான்; இவன் தெய்வத்திற்குச் சமானன்; இவன் பொருட்டே நாம் உயிர் வாழ்கின்றோம், என்று எண்ணி அவ்வரசனைக் காப்பார். இவ்வித நடுநிலையுடையான் அரச உரிமையைத் தன் மகனைத் தேர்க்காலிலிட்ட மனுநீதி கண்ட சோழனிடத்தும் தன் கையினை வெட்டிய பொற்கையான் மாறன் என்கின்ற பாண்டியனிடத்தும் காணுதல் கூடும் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் நடுநிலை செய்த அரசராகிய அவரது கதையினை விளக்கல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர். மக்காள்! ஒரு காலத்து மனுநீதிகண்ட சோழன் என்றோர் அரசன் இருந்தான். அவ்வரசன் மகன் ஒருவன் ஓர் நாள் ஓர் தேரின்மீது ஏறித் திருவாரூர் என்னும் ஊரின் வீதி வழியே தன்னுடைய தேரை அதிவிரைவாகச் செலுத்திய காலத்து ஓர் பசுங்கன்று அத்தேர்ச் சக்கரத்தில் அகப்பட்டு இறந்தது. அதனைக்கண்ட அக்கன்றின் தாய் விரைந்து ஓடி அரசனது வாயிலில் கட்டியிருந்த மணியை அசைத்தது. அம் மணியின் ஓசையைக் கேட்ட அரசன் 'இன்று என்னை? ஓர்நாளும் அடியாத மணி இன்று அடித்தது' என்று விரைந்து ஓடி காவலாளரை நோக்கி, 'இம்மணியை அடித்தார் யார்' என்று கேட்டலும்' அவர்கள் 'இதோ



நிற்கும் இப்பசுவே அவ்விதம் செய்தது' என்றனர். அது கேட்ட மன்னன் ஏவலாளரைக் கூவி 'இப்பசுவிற்கு என்ன நேர்ந்தது?' என்று வினவலும், நடந்த செய்தியை அறிந்த பணியாளர் 'அரசே! நின்மகன் தேர் ஓட்டியகாலத்து இப்பசுவின் கன்றை சிதைத்தான்; அதுவே இப்பசுவிற்கு நேர்ந்த துன்பம்' என்றனர். அது கேட்ட அரசன் மிகவும் வருந்தினவனாய் அமைச்சர்களைக் கூவி, 'ஓ! அமைச்சர்களே! என் அரசாட்சியில் இவ்விதம் நேர்ந்ததே மிக விந்தையாகும்; இவ்விதம் செய்த என் மைந்தனை யான் என் செய்தல்

வேண்டும்?' என்னலும், அவ்வமைச்சர்கள் சிலர் பிராயச்சித்தங்களை அரசனுக்குச் சொல்லினர். அதுகேட்ட அரசன், 'பிராயச்சித்தங்களோ கன்றையிழந்த பசுவிற்கு வருத்தத்தை நீக்குவன; பதிலுக்குப் பதில் செய்தல் வேண்டும்; அதுவே முறையாகும்; ஆதலால், நீங்கள் விரைந்து சென்று என் மகனைத் தேர்க்காலில் இட்டுச் சிதையுங்கள்,' என்று ஆணை தந்தான். அவ்வாணையை மறுப்பதற்கு அஞ்சினன் ஆகிய மந்திரிதானே தேர்க்காலின் கீழ் அகப்பட்டு தன்னை இறக்கச் செய்து கொண்டனன். இவ்விதம் தன் மகனைச் சிதைப்பதற்கு அஞ்சித்தானே தேர்க்காலில் அகப்பட்டு இறந்தான் தன்னுடைய அமைச்சன் என்று கேள்விப்பட்ட அரசன், 'இனி முறையாக இதனைச் செய்யவேண்டுமாயின் நானே சென்று செய்தல் வேண்டும் என்று துணிந்து சென்று தன் மகனை நிலத்தில் கிடத்தி அவன்மீது தேரினைச்செலுத்த பரிகளைத் தூண்டினன். அக்குதிரைகள் விரைந்துசென்று அரசன் மகன்மீது ஓட எத்தனித்தபோது எங்குமுள்ள இறைவன் இவ்வரசனது செங்கோன்மையின் முறைமையை உலகத்தார் அறியச் செய்ததோர் திருவிளையாட்டு ஆதலால், இறந்த பசுங்கன்றும், மந்திரியும், அரசன் மகனும் உறங்கி எழுந்தவர்போல் எழுந்திருக்கும்படித் திருவருள்புரிந்தனன். அதுகண்ட யாவரும் மகிழ்ந்தனர் என்பது ஆகும். இதனைப் பெரிய புராணம் மனுநீதிகண்ட சோழன் சரிதத்தும், சிலப்பதிகாரம் வழக்குரை காதையின் உள்ளும் காணுதல் கூடும்.

இனிக் கையினைக் குறைத்து நின்ற பாண்டியன் கதையாவது:—பாண்டிய நாட்டில் அரசு புரிந்து வந்த பாண்டியன்



ஒருவன் தனது நாட்டில் யாவும் சரியாக நடக்கின்றனவா என்று பார்க்கும் வண்ணம் இரவில் தானே தனியாகச் சென்று நகரைச் சுற்றிப் பார்ப்பது வழக்கம்; அவ்விதம் செய்து வருகின்ற காலத்தே ஓர்நாள் நடுராத்திரியில் ஓர் அந்தணன் வீட்டில் சிறிது சந்தடி கேட்டது? அது என்னவென்று அரசன் அவ்வீட்டு வாயிலின் அருகே

சென்று உற்றுக்கேட்ட காலத்து, அவ்வந்தணன் தன் மனைவி யிடத்தே தீர்த்தயாத்திரைக்குச் செல்லுவதாகச் சொல்லியதும், அதுகேட்ட அவன்மனைவி 'நீ இவ்விதம் என்னைவிட்டுத் தீர்த்தயாத்தி ரைக்குச் செல்லுவாயாயின் என்னைக் காப்பார் யார்?' என்று கேட் டனள். அதற்கு அந்தணன் 'நான் உன்னைத் தனித்து இருக்கச் செய்து சென்றேன் ஆயினும், இவ்வூர் அரசன் நடுநிலையுடையன் ஆத லால் உன்னைக் காப்பான்,' என்று கூறினன். இவற்றையெல்லாம் வாயிற் புறத்தேநின்று கேட்டவனாகிய அரசன் தன்னுடைய அரண்மனைக்குச் சென்றுவிட்டனன். மறுநாள் விடியற்காலையில் அரசன் தனது ஏவலாளர் மூலமாய் அவ்வந்தணன் தீர்த்த யாத் திரை சென்றனன் என்று தெரிந்து கொண்டு, தினந்தோறும் தன் ஏவலாளரால் அவ்வந்தணன் வீட்டுக்கு வேண்டுவன கொடுத்து வந்ததுடன் தானும் ஒவ்வொரு நாள் இரவும் யாரும் அறியாவண் ணம் தனித்துச் சென்று அவ்வீட்டின் புறத்திண்ணையில் படுத்து உறங்கி அவ்வீட்டைக் காத்துவந்தான். இவ்விதம் நடந்துவந்த காலத்தில் தீர்த்த யாத்திரை சென்ற அந்தணன் ஒரு நாள் திரும் பித் தன் வீடுவந்து சேர்ந்து தன் மனைவியினிடத்தே பேசிக்கொண் டிருந்தனன். அந்நாளிரவு வழக்கம்போல் சென்ற அரசன் அவ் வீட்டினில் யாரோ ஓர் ஆண்மகன் பேசுவதாகக் கேட்டு வாயிற் கதவைத் தட்டினன். அதுகேட்ட அந்தணன், 'யார்தட்டுவது' என்று உரத்த சத்தத்துடன் பதில் சொல்லியதால், 'இவ்வித உரத்த சத்தத்தோடு பேசுபவன் இவ்வீட்டுத் தலைவன் ஆகவே இருத்தல் வேண்டும்' என்று தீர்மானித்தவனும், 'வேறெவரும் இல்லை; நான் இவ்வூர்க் காவலாளன்; திருடர்கள் அதிகமாய் இருக் கின்றார்கள்; ஜாக்கிரதையாக இருத்தல்வேண்டும் என்று எச்சரிக் கை செய்வதற்குத் தட்டினேன்' எனக்கூறி அரசன் அன்று அங்கு நித்திரை செய்யாது தனது அரண்மனைக்குச் சென்று உறங்கினன். பிறகு அரசன் விடியற்காலத்து எழுந்து தன் அரசாட்சி மண்டபத்

24

யைத் அடைந்து தன்னுடைய மந்திரி முதலியவர்கள் நடுவிலிருந்து கொண்டு பின்வரும் விதம் வினவல் ஆயினன். அதாவது, 'ஓ! எனது மந்திரியர்களே! ஒருவன் நடுராத்திரியில் ஒருவன் வீடு சென்று அவன் மனைவியும் அவனுமாக உள்ளகாலத்தில் யாதொரு காரணமு மில்லாமல் கதவைத் தட்டுவானாயின், அவனுக்கு எவ்வித தண்டனை இழைப்பது?' என்பதேயாம். அதுகேட்ட அவையத்தோர், 'அரசே! அவ்விதம் தீங்கிழைத்தவனுடைய கையினைக் குறைத்தலே தகுதி' என்றனர். அதுகேட்ட அரசன், 'அவ்வித தீங்கினை இழைத்த கை இதுவே ஆகும்' என்று, தன்னுடைய கையைத் தன் கை வாளினால் வெட்டி வீழ்த்தினன். அதுகண்ட அவையத்தோர் மிகுதியும் நடுக்கினராய் அவன் கைக்கு ஓர் பொற் கை செய்து கொடுத்து அழகு பெறச்செய்தனர். அன்றுமுதல் அவனுக்கு பொற் கையான்மாறன் என்று பெயர் வழங்கி வருகின்றது. இதனைச் சிலப்பதிகாரம் கட்டுரை காதையிலும், திருவிளையாடல் புராணத்திலும் காணுதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் முறை செய்யாத மன்னவனது தன்மை எதுவாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

548. எண்பதத்தா னோரா முறைசெய்யா மன்னவன்
றண்பதத்தாற் றானே கெடும்.

(பரி.) இ-ள். எண்பதத்தான் ஓரா முறை செய்யா மன்னவன் = முறை வேண்டினார்க்கு எளிய செவ்வியையுடையனும் அவர் சொல்லியவற்றை நூலோர் பலரோடு மாராய்ந்து நின்ற வுண்மைக் கொப்ப முறை செய்யாத வரசன் — தண்பதத்தான் தானே கெடும் = தாழ்ந்த பதத்திலே நின்று தானே கெடும். எ-று.

எண்பதத்தானென்னும் முற்றுவினையெச்சமும், ஓராவென்னும் வினையெச்சமும், செய்யாவென்னும் பெயரெச்ச வெதிர்மறையும் செய்தல்வினை கொண்டன. தாழ்ந்தபதம் = பாவமும் பழியு மெய்திநிற்கும் நிலை. "அல்லவை செய்தார்க் கறங்கூற்றம்" ஆகலின், பகையின்றியும் 'கெடும்' என்றார். இதனுள் முறைசெய்யாதானது கேடு கூறப்பட்டது. (அ)

விளக்கம் :—முறை வேண்டினார் தாம் வேண்டும் காலத்து

எளிதில் பார்க்கக்கூடிய தகுதி யுடையனும், அவர் சொல்லுகின்ற



வற்றை நூல் வல்லவர் பலரோடும் ஆழ்ந்து ஆராய்ந்தும் அவ்வாறு கண்ட உண்மைக் கொப்ப முறையினைச் செய்தும், அரசாளாத அரசன் ஒருவன் தாழ்ந்த பதத்தை அடைந்தவனாய் இருந்து தானே கெட்டுவிடுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, குடிகள் தமக்கு நேர்ந்த குறையை அரசனிடத்தே சொல்லிக் கொள்ள வருங்காலத்து அவர்கள் எப்போதும் பார்க்கும் நிலை யுடையனு மிருந்து, கண்டகாலத்தே இனியமுகத்தை யுடையனும் இனிய சொற்களைக் கூறித் தன்னிடத்தே சொல்லிக் கொண்டவற்றைத் தானும் நூல் வல்லவரும் ஒன்றிருந்து வினவிடைகளால் ஆராய்ந்து அவ்வாறு தெளிந்த உண்மைக்குத் தக்க அளவாக நீதி பரிபாலனம் செய்யாவிடின், அவ்வித அரசனிடத்துக் குடிகள் அன்பு வையாது, மனம் உடைந்து அவனைப் பழித்து நிற்பார்கள். ஆகவே, அப்பழியையும், பாவத்தையும் மேற்கொண்டு, ஒருவரா லும் நன்கு மதிக்கப்படாது, பொருள் வருவாயும் கெட்டு, நாட் டையு மிழந்து, தானும் இறப்பான் என்பது போந்த பொருள் ஆயிற்று என்றனர். அது கேட்ட மாணாக்கர், 'இவ்விதம் ஒரு வரைக் காக்கின்ற காலத்து மற்றொருவருக்குத் தண்டனை நேரு மன்றோ? அவ்விதம் தண்டிக்கின்ற காலத்து உலகத்தார் அரசனை விரும்புவரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

549. குடிபுறங் காத்தோம்பிக் குற்றங் கடிதல்
வடுவன்று வேந்தன் றொழில்.

(பரி.) இ-ள். குடி புறங்காத்து ஓம்பிக் குற்றம் கடிதல்=குடிகளைப் பிறர் நலியாமற் காத்துத் தானும் நலியாது பேணி, அவர் மாட்டுக்குற்ற நிகழின் அதனை யொறுப்பானொழித்தல்—வேந்தன் வடு அன்று தொழில்= வேந்தனுக்குப் பழியன்று, தொழிலாகலான். எ-று.

அன்பஞ் செய்தல், பொருட் கோடல், கோறலென வொறுப்பு மூன்று;

அவற்றுள் நன்மைச் செய்தவனை முன்னையவென்பது குற்றங்கடிதலென் பதனும் பெற்றும். தன்கீழ் வாழ்வாரை பொறுத்தல் அறனன்மையின் வழு வாமென்பதனை யாசமித்து, அஃதாகாது அரசனுக்கு அவனை அக்குற் றத்தினின்றித் தூயராக்குதலுஞ் சரிதருமமென்றார். (க)



விளக்கம் :—அரசன் ஒருவன் தன் குடிகளைப் பிறர் வருத்தா வண்ணம் காத்துத் தானும் அவர் வருந்தா வண்ணம் பாதுகாத்து நிற்கின்ற காலத்தே அக்குடிகளிடத்தே குற்றம் உண்டாகுமானால் அதனைத் தண்டனையால் நீக்குதல் அவ்வரசனுக்குப் பழியாகாது அவன் தொழிலாகவே இருக்கும் என்று இத்திருக்குறள் கூறுவதால், அரசன் குடிகளைக்காத்தும், குடிகளிடத்துக் குற்றம் நிகழுமாயின், அவரை ஒறுத்தும் நிற்பது முறையென்று கண்டோம். இவ்விதம் தண்டிக்கின்ற காலத்து அவர்கள் செய்த குற்றத்திற்குத் தக்க அளவாகப் பொருளை அபராதமாகக் கொள்ளுதலும், துன்பத்திற்கு ஈடுபடுத்தலும், கொல்லுதலும், ஆக மூன்று விதமாகத் தண்டித்தலும் கூடுமென்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் அரசன் குற்றம் செய்தவரைத் தண்டித்து, நன்மை செய்தாரைக் காத்தல் எவ்வித தகுதியுடையதாய் இருக்குமென்பதை ஓர் உவமை வாயிலாக விளக்கல் வேண்டும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

550. கொலையிற் கொடியாரை வேந்தொறுத்தல் பைங்கூழ்
களைகட் டதனொடு நேர். [கூழ்

(பரி.) இ-ள். வேந்து கொடியாரைக் கொலையின் ஒறுத்தல் = அரசன் கொடியவர்களைக் கொலையானொறுத்துத் தக்கோரைக் காத்தல்—பைங்கூழ் களை கட்டதனொடு நேர் = உழவன் களையைக் களைந்து பைங்கூழைக் காத்த தனொடொக்கும். எ-று.

கொடியவரென்றது தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், குறைகொள்வார், பிறனில் விழைவாரென்றிவர்

முதலாயினோரை. இவரை வடநூலார் ஆததாயிகளென்ப. இப்பெற்றியாரைக் கண்ணோடிக் கொல்லாவழிப் புற்களைக்கு அஞ்சாநின்ற பைங்கூழ்போன்று நலிவுபலவெய்தி உலகு இடர்ப்படுமாகலின், கோறலும் அரசற்குச் சாதிதருமமென்பதாயிற்று. இவையிரண்டுபாட்டானுஞ் செங்கோல் செலுத்தும் வெண்குடை வேந்தற்குத் தீயார்மாட்டு முறைசெய்தலும் ஒழியற்பாலவல்லவென்பது கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—அரசன் ஒருவன் தீக் கொளுத்துபவர், நஞ்சு இடுபவர், ஆயுதங்களைக் கொலை செய்பவர், பிறர் பொருளைத் திருடு



பவர், வழிச் சென்ற காலத்தே அடித்துப் பறிக்கின்றவர், மனையில் உள்ளவர் பொருளைச் சூறைபாடுபவர், அயலான் மனைவியை விரும்புபவர் என்ற கொடியோராகிய ஆததாயிகளைக் கொலையினால் கொன்று, இவ்விதமெல்லாம் செய்யாது வாழும் ஒழுக்கமுடைய நற்குணரைக் காத்து அரசாளுவது உழவன் ஒருவன் பயிருக்குச் சேதம் விளைக்க முளைத்ததாகிய களைகளைப் பிடுங்கிப் பயிரைக் காப்பதுபோல் ஆகுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அரசன் மேற்சொல்லியவண்ணம் தண்டனைகளைச் செய்யுங்காலத்து அவனைக் கொல்லுதலும் அவனது சாதி தருமம் ஆயிற்று என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் செங்கோன்மையினின்றும் நீங்குகின்ற அரசனது கோலினை ஆசிரியர் என்னென்று கூறுகின்றனர்? அதனை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 56. அதிகாரம்.

## கொடுங்கோன்மை.

---

(பரி.) இ-ள். அஃதாவது அம்முறையினது கோடுதற்றன்மை. ஈண்டும் உவமையின் பெயர் பொருண்மேலாயிற்று. செங்கோன்மைக்கு மாறாக

வின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, மேற் சொல்லிய செங்கோன்மையி னின்றும் கோணுதலையுடைய தன்மை. செங்கோன்மைக்குமாறாக உள்ளது கொடுங்கோன்மை ஆதலால், அது இங்கு வைக்கப் பட்டு உள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கொடுங் கோன்மை உடைய அரசன் எவ்விதமாக எண்ணப்படுவன்?" என்று கேட்டதும், ஆசிரியர் கூறுவாராயினர்.

551. கொலைமேற்கொண் டாரிற் கொடிதே யலைமேற்
டல்லவை செய்தொழுகும் வேந்து. [கொண்

(பரி.) இ-ள். கொலை மேற்கொண்டாரிற் கொடிது=பகைமைபற் றிக் கொல்லுதற்றொழிலைத் தம்மேற்கொண்டொழுகுவாரினும் கொடி



யன்—அலை மேற்கொண்டு அல்லவை செய்து ஒழுகும் வேந்து=பொருள் வெஃகிக் குடிகளையலைத்தற்றொழிலைத் தன்மேற்கொண்டு முறையல்லவற் றைச் செய்தொழுகும் வேந்தன். எ-று.

அவர் செய்வது ஒருபொழுதைத் துன்பம், இவன் செய்வது எப் பொழுதுந் துன்பமாமென்பதுபற்றி, அவரினும் கொடியனென்றார். பான் மயக் குறழ்ச்சி. வேந்தென்பது உயர்திணைப்பொருட்கண்வந்த அஃறிணைச் சொல். அலை கொலையினும் கொடிதென்பதாயிற்று (க)

விளக்கம்:—அரசன் ஒருவன் பொருள் ஒன்றினைப் பெரிதாக எண்ணி அதனை விரும்பிக் குடிகளைத் துன்புறுத்தும் தொழிலைத் தனக்கு உரிமையாகக் கொண்டு நெறியல்லாதவற்றைச் செய்யப் புகுவானாயின், அவன் பகைமை பற்றிக் கொலைத் தொழில் பூண்டு உயிர்வாழ்வானைக் காட்டிலும் கொடியவனாக உலகத்தாரால் எண் ணப்படுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? பகைகொண்டு ஒருவன் மற்றொருவனைக் கொல்லுதல் அவ்

வொரு காலத்தே செய்து முடிக்கும் துன்பமாக முடிகின்றது. ஆயின் அரசனோ இடைவிடாது பொருள் வேண்டும் காலத் தெல்லாம் துன்பம் செய்பவனாக உள்ளான். ஆதலால் அக்கொலைஞரினும் இக்கொடிய அரசன் மிகக் கொடியனாக ஆகின்றான் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அரசன் குடிகளிடத்தே பொருள் விரும்பி அவரை ஒறுத்தல் எவ்விதம் இருக்கும்? அதனை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

552. வேலொடு நின்றா னிடுவென் றதுபோலுங்
கோலொடு நின்றா னிரவு.

(பரி.) இ-ள். வேலொடு நின்றான் = ஆறலைக்குமிடத்துத் தனியே வேல் கொண்டு நின்ற கள்வன் — இடு என்றது போலும் = ஆறுசெல்வானை நின்கைப்பொருளைத் தா வென்று வேண்டுதலோ டொக்கும் — கோலொடு நின்றான் இரவு = ஒறுத்தற்றொழிலோடு நின்றவரசன் குடிகளைப் பொருள் வேண்டுதல். எ-று.

'வேலொடு நின்றான்' என்றதனாற் பிறரொடு நில்லாமையும், 'இரவு' என்றதனால் இறைப்பொருளன்மையும், பெற்றாம். தாராக்கால் ஒறுப்ப னென்னும் குறிப்பினனாகலின், இரவாயிற்றேனும் கொடுங்கோன்மையா



யிற்று. இவையிரண்டுபாட்டானும் கொடுங்கோன்மையது குற்றம் கூறப் பட்டது. (உ)

விளக்கம் :—அரசன் ஒருவன் தான் அரசன் என்கிற உரிமையோடு குடிகளிடத்தே பொருளை விரும்பி அவர்களை வருத்திப் பொருள் வாங்குதல் வழியில் போகின்றவர்களைத் துன்புறுத்திப் பொருள் வாங்கும் வண்ணம் வேலோடு நின்ற வேடுவன் ஒருவன் செல்பவர்களைக் காணும் காலத்துப் பொருளைக்கொடு என்று பயமுறுத்தி வாங்குவதுபோலாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் தன் அரசுரிமை யென்னும் கொடுங்கோன்மையை மேற்கொண்டு யாசித்தல் போல் பயமுறுத்திப் பொருள் வாங்குவது வேடுவன் ஒருவன் வழிப்பறித்தலைக் காரணமாகக் கொண்டு வழியில் தனியே நின்று செல்கின்றவர்களை 'உம்

யிடத்தே உள்ள பொருளைக் கொடாவிடின், உம்மை வேலால் கொலைசெய்து விடுவேன்' என்று கூறுவதுபோல் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் முறை செய்யாத அரசனுடைய நாடு எதுவாகும்?" என்னலும், ஆசிரியர் கூறலுறுவாராயினர்.

553. நாடொறு நாடி முறைசெய்யா மன்னவ
னாடொறு நாடு கெடும்.

(பரி.) இ-ள். நாடோறும் நாடி முறை செய்யா மன்னவன் = தன்னாட்டு நிகழும் தீமைகளை நாடோறு மாராய்ந்து அதற்கேற்ற முறைமையைச் செய்யாதவரசன் — நாடோறும் நாடு கெடும் = நாடோறும் நாடிழக்கும். எ-று.

அரசனுக்கு நாடு உறுப்பாகலின், அதன்வினை அவன்மேனின்றது. இழத்தல் = பயனெய்தாமை. மன்னவனது நாடோறுங் கெடுமென்றுரைப்பாருமுளர். (௩)

விளக்கம்:—அரசன் ஒருவன் தன் நாட்டில் உண்டாகும் தீமைகளை எல்லாம் தினந்தோறும் ஆராய்ந்து அத் தீமைக்குத் தக்க அளவாக முறையாகிய தண்டனைகளைச் செய்யாது விடுவானாயின், அதனால் நாடானது அவனைவிட்டு நீங்கும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், தீமைகளைக் களைந்து தீவினை



யாளரைத் தண்டியாவிடினும் எளிய குடிகளைக் காக்காவிடினும் தன் நாட்டில் உள்ள குடிகள் அவனிடத்தே வெறுப்படைந்து அவனுக்கு எதிராகப் பகை அரசரோடு சேர்ந்து நாட்டை இழக்கச் செய்வர் என்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரசன் ஒருவன் கோல் கோணிச்செய்வானாயின் நாடொன்றினைத்தான் இழப்பன்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலுறுவாராயினர்.

554. கூழுங் குடியு மொருங்கிழக்குங் கோல்கோடிச்
சூழாது செய்யு மரசு.

(பரி.) இ-ள். சூழாது கோல் கோடிச் செய்யும் அரசு=மேல் விளைவ தெண்ணாது முறைதப்பச் செய்யுமரசன்—கூழும் குடியும் ஒருங்கு இழக்கும்=அச்செயலான் முன்னீட்டிய பொருளையும் பின்னீட்டுதற்கேதுவாகிய குடிகளையுஞ் சேரவிழக்கும். எ-று.

கோடலென்பது திரிந்து நின்றது. முன்னீட்டிய பொருள் இழத்தற் கேது வருகின்ற பாட்டாற் கூறுப. (௪)

விளக்கம்:—அரசன் ஒருவன் பின்னர் விளைவதை நினையாது முறைதப்பிச் செய்வானாயின் அவ்விதச் செய்கையால் முன்னர் சேர்த்துள்ள பொருள்களையும், பின்னர் பொருள் சேர்ப்பதற்குக் காரணமாகிய குடிகளையும் ஒருங்கே இழந்து விடுவான் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது கொடுங்கோலனாக நின்று அரசுபுரிவானாயின் தன் மூதாதையர் முதலியோர் சேர்த்த பொருள்களையும் வீண்வழியில் அழிப்பதுடன், இனிச் சேரவேண்டிய பொருள்களுக்கும் மனம் உவந்து கொடுக்கும் குடிகளையும் கொடாவழிச் செய்வதற்குக் காரணமுமாவான். ஆதலால் பொருளால் ஆகிய பயனையும் அரசன் இழப்பான் என்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரசன் எவ்விதம் பொருளை இழப்பன். பொருள் எவ்வாறு கெடும்?" என்னலும்! ஆசிரியர் கூறுவாராயினர்.

555. அல்லற்பட் டாற்றா தழுதகண் ணீரன்றே
செல்வத்தைத் தேய்க்கும் படை.

(பரி.) இ-ள். அல்லற்பட்டு ஆற்றாது அழுத கண்ணீர் அன்றே= அரசன் முறை செய்யாமையாற் குடிகள் துன்பமுற்று அதனைப் பொறுக்க



மாட்டாது அழுத கண்ணீரன்றே—செல்வத்தைத் தேய்க்கும் படை= அவன் செல்வத்தைக் குறைக்கும் கருவி. எ-று.

அழுதகண்ணீர்=அழுதலான் வந்த கண்ணீர். செல்வமாகிய மரத்தை வெள்ளுமையின், இஃதேகதேசவுருவகம். அல்லற்படுத்திய பாவத்தது தொழில் அதற்கேதுவாகிய கண்ணீர்மேனின்றது. அக்கண்ணீரிற்

கொடிது பிறிதின்மையின், செல்வம் கடிதிற்றேயுமென்பது கருத்து. (௫)

விளக்கம்:—அரசன் ஒருவன் தனக்கு வகுத்த முறையினால் நல்லவர்களைப் பரிபாலித்துத் தீயவர்களைத் தண்டியாவிடின் அதனால் நேருகின்ற குறையால் அவன் கீழ் வாழும் குடிகள் துன்பத்தை அடைந்து அதனைப் பொறுக்கமாட்டாமல் அழுத கண்ணீரானது அவ்வரசனது செல்வம் என்னும் மரத்தைச் சிறிது சிறிதாகத் தேய்த்து விடுகின்ற கருவியாகிய அரத்தைப்போல் உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அரசன் முறைசெய்யாது கொடுங்கோலனாக நிற்பானாயின், அவனது செல்வமானது அழிவுபடும். இதனை "ஏழை அழுத கண்ணீர் கூரிய வாளிற் கொக்கும்" என்னும் முதுமொழியாலும் அறிதல் கூடுமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் குடிகளையும், செல்வத்தையும் இழக்கின்ற அரசன் ஒருவனுக்குப் புகழும் உண்டாகாது போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

556. மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை யஃதின்றேல்
மன்னுவா மன்னர்க் கொளி. [நேரிசை வெண்பா → printed: [நேன்

(பரி.) இ-ள். மன்னர்க்கு மன்னுதல் செங்கோன்மை = அரசர்க்குப் புகழ்உடம்பு நிலைபெறுதல் செங்கோன்மையானாம்;—அஃது இன்றேல் மன்னர்க்கு ஒளி மன்னாவாம் = அச்செங்கோன்மையில்லையாயின், அவர்க்கு அப்புகழ்உடம்பு உளவாகா. எ-று.

விகாரத்தாற்றொக்க மூன்றனுருபு விரித்து ஆக்கம் வருவித்துரைக்கப்பட்டது. மன்னுதற்கேது புகழாதல் "இந்நிலத்து மன்னுதல் வேண்டி னிசைநடுக"* என்பதனானறிக. மன்னாமை = ஒருகாலு நிலையாமை. பழிக்கப்பட்டால் ஒளி மன்னாவாம், ஆகவே, தாமுமன்னாரென்பதாயிற்று. வென்றி, கொடை முதலிய வேறுகாரணங்களாற் புகழ் பகுதிப்படுதலின், பன்மையாற் கூறினார். அவையெல்லாம் செங்கோன்மையில்வழி இலவாமென்

* நான்மணிக்கடிகை.





பதாம். இவையிரண்டு பாட்டானுங் கொடுங்கோலனுழியுள் எய்துங் குற்றங் கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—அரசர்க்குப் புகழ் வருதலும், அது நிலைபாக நிற்றலும் செங்கோன்மையினால் ஆகுமென்றும், அச்செங்கோன்மை இல்லாதவிடத்து அவ்வரசர்க்கு அப்புகழ் உண்டாகாது என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது எங்ஙனமோவெனின்? ஒருவன் அறத்துக்கு ஏதுவாகிய காரியங்களைச் செய்தாலவற்றால் புகழ் நிலைக்குமென்றும், அதற்கு எதிராகிய பழியை உண்டாக்கக் கூடிய பாவத்தைச் செய்வானாயின் புகழ் நிலைபெறாதென்றும், வெற்றி, கொடை, முதலியவைகளும் செங்கோலனாக இல்லாவிடின் நிலைபாவாதலால் அரசன் எக்காலத்தும் கொடுங்கோலனாக இருத்தல் கூடாது என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரசன் அருளில்லாதவனாக இருப்பானாயின் அவன் கீழ்ப்பட்ட குடிகள் எவ்விதமான துன்பத்தை அடைதல் வேண்டும் என்பதனை ஓர் உவமையால் விளக்கல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

557. துளியின்மை ஞாலத்திற் கெற்றற்றே வேந்த
னளியின்மை வாழு முயிர்க்கு.

(பரி.) இ-ள். துளியின்மை ஞாலத்திற்கு எற்று=மழையில்லாமை வையத்து வாழுமுயிர்கட்கு எவ்வகைத் துன்பம் பயக்கும்,—அற்றே வேந்தன் அளியின்மை வாழும் உயிர்க்கு=அவ்வகைத்துன்பம் பயக்கும் அரசன்றண்ணளியில்லாமை அவன்கீழ்வாழுங் குடிகட்கு. எ-று.

சிறப்புப்பற்றித் துளியென்பது மழைமேனின்றது; உயிரென்பது குடிகண்மேனின்றது. மேல் "வானோக்கிவாழும்"* என்றதனை எதிர்மறை முகத்தாற் கூறியவாறு. (எ)

விளக்கம்:—உலகத்துவாழும் உயிர்கள் மழையில்லாவிடின் எவ்வித துன்பங்களை அனுபவிக்குமோ அவ்வித துன்பங்களைக் கிருபையில்லாத அரசன் கீழ்வாழும் குடிகள் அனுபவிப்பார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மழையில்லாவிடின் ஓரறிவுயிராகிய புல்லும் ஐயறிவையுடைய சிறந்த மக்களும் துன்ப

* 542-வது குறளைப்பார்க்க.

மடைவதுடன் தேவர்களுக்குப் பூசையும், விழவும் எவ்வாறு நடவா மற் போமோ அவ்விதமே மழைக்குச் சமானமாகிய அருள் என்பது தலைவனுகிய அரசனுக்கு இல்லாவிடின் யாவும் கெட்டுப்போம் என்று அறிக்தோம் அன்றியும். மேல் செங்கோன்மையிலுள் "வான் நோக்கிவாழும்" என்று கூறிய திருக்குறளுக்கு எதிர்மறையாகக் கொடுங்கோன்மையிலுள் "துளியின்மை" என்னும் இத்திருக்குறளைக் கூறுகின்றனர் என்னலும், மாணக்கர், "இவ்விதம் முறை செய்யா அரசனது குடிகள் அடையுந் துன்பத்தை இன்னும் விளக்கல் வேண்டும்" என்று இரந்து கேட்க, ஆசிரியர் கூறலாயினர்.

558. இன்மையி னின்னா துடைமை முறைசெய்யா
மன்னவன் கோற்கீழ்ப் படின்.

(பரி.) இ-ள். முறை செய்யா மன்னவன் கோற்கீழ்ப் படின் = முறை செய்யாத அரசனது கொடுங்கோலின்கீழ் வாழின்,—இன்மையின் உடைமை இன்னாது = யாவர்க்கும் பொருளில்லாமையினும் உடைமை யின்னாது. எ-று.

தனக்குரிய பொருளோடு அமையாது மேலும் வெஃகுவோனது காட்டுக்கொடுங்கோல யாப்புண்டல் முதலிய வருவது பொருளுடையார்க்கே யாகலின் அவ்வுடைமை இன்மையினு மின்னாதாயிற்று. இவையிரண்டு பாட்டானும் அவனாட்டு வாழ்வார்க்கு வருங்குற்றம் கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—மேற்கூறிய முறையின் வண்ணம் செய்யாத அரசனுடைய கொடுங்கோலின்கீழ் வாழுகின்றவர்களுக்கு உண்டாகும்

வறுமையினும் பொருள் உடைமையே மிகத் துன்பத்தைத் தருவ
தாக இருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்
னேயோவெனின்? குடிகள் வறுமையுடையவர்களாயின் கொடுங்கோல்
மன்னன் பொருள்பற்றி அவர்களை நெருக்கான் ஆதலால் அவ்
வறிய குடிகளுக்குத் துன்பம் அதிகம் உண்டாகாதென்றும், ஆனால்
செல்வம் உடையவர்களாக இருப்பின் அரசன் பொருள்பற்றி அவர்
களை நெருக்குவதும், கொட்டடியில் கால், கை முதலியவைகளைப்
பிணித்துத் துன்புறுத்தி வாங்குவதும் ஆகிய செயல்கள் நிகழுமாத
லாலும், அவ்வித துன்பங்கள் அடைவதற்குச் செல்வமே காரண
மாதலாலும், கொடுங்கோன் மன்னன்வாழும் நாட்டில் உள்ள குடிக



ளுக்குச் செல்வத்தைப் பெற்றிருப்பதைப் பார்க்கினும் வறுமையே
நன்மை யுடையதென்றும் அறிந்தோமென்றனர். அது கேட்ட
மாணக்கர், "கொடுங்கோன் மன்னன் நாட்டில் மழை உண்டா
குமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

559. முறைகோடி மன்னவன் செய்யி னுறைகோடி
ஒல்லாது வானம் பெயல்.

(பரி.) இ-ள். மன்னவன் முறை கோடிச் செய்யின்=மன்னவன்
தான்செய்யும் பொருளை முறை தப்பச் செய்யுமாயின்,—உறை கோடி வா
னம் பெயல் ஒல்லாது=அவனாட்டு பருவமழை இன்றும்வகை மேகம்
பொழிதலைச் செய்யாது. எ-று.

இரண்டிடத்தும் கோடவென்பன திரிந்தன. உறை கோடு
வாவது:—பெய்யும் காலத்துப் பெய்யாமை. அதற்கேது வருகின்ற பாட்
டாற் கூறப. (௯)

விளக்கம்:—அரசனானவன் தன்னுடைய முறையில் தவறிச்
செய்வானாயின் அவனுடைய நாட்டில் பருவ மழையும் இல்
லாமல் போகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது,
அரசன் கோணினால் மழையும் கோணிப் பெய்யவேண்டிய காலத்

துப் பெய்யாது கெடுக்கும் என்று அறிகோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் கொடுங்கோன்மையுடைய அரசன் நாட்டில் மழையும் பெய்யாதென்று அறிகோம். ஆகவே, மழை பெய்யாவிடின் உலகத்து எதுவும் நடவாதன்றோ?" என்னலும், ஆசிரியர் உடன்படலாயினர்.

560. ஆபயன் குன்று மறுதொழிலோர் நூன்மறப்பர்
காவலன் காவா னெனின்.

(பரி.) இ-ள். காவலன் காவான் எனின்=காத்தற்குரியவரசன் உயிர்களைக் காவானாயின்—ஆ பயன் குன்றும்=அறனில்லாத அவனுட்டுப் பசுக்களும் பால்குன்றும்,—அறுதொழிலோர் நூல் மறப்பர்=அந்தணரும் நூல்களை மறப்பர். எ-று.

ஆபயன்=ஆவாற்கொள்ளும் பயன். அறுதொழிலாவன:--ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றலென இவை. பசுக்கள் பால் குன்றியவழி அவியின்மையானும், அது கொடுத்தற்குரியார் மந்திரங்கப



மெல்லாம் ஓதாமையானும், வேள்வி நடவாதாம்; ஆகவே; வானம்பெய்யாதென்பதாயிற்று. இவையிரண்டுபாட்டானும் அவனுட்டின்கண் நிகழுங் குற்றம் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—தம் கீழ்ப்பட்ட குடிகளை எல்லாம் காத்து வாழ வேண்டிய அரசன் ஒருவன் முறைப்படி காக்காவிடில் அறனில்லாது பாவத்தைச் செய்கின்ற அவ்வரசனது நாட்டில் பசுக்களும் பாலைச் சரியாகக் கறவாது போகுமென்றும், அதுவன்றியும் ஓதல், ஓதுவித்தல், வேட்டல், வேட்பித்தல், ஈதல், ஏற்றல் என்னும் அறு தொழில்களுக்கு உரியராகிய அந்தணர்களும் அறநூல்களை ஓதாது மறந்துவிடுவர் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னை போவெனில்? மேற்கூறியபடி மழை பெய்தாலன்றோ பசுக்கள் புல்லினை மேய்ந்து பாலினைச் சுரக்கும். பால் சுரவாவிடின் ஓதுதலும், வேட்டலும் எவ்விதம் நடக்கும்? நடவா என்று அறிகோம். ஆதலால், கோல் கோணுதலையுடைய அரசனது நாட்டில் எல்லாவித

துன்பங்களையும் அடைதல் வேண்டுமென்றும், அரசனும் துன்பம் அடைவான் என்றும், நாடு காடாக இராது காடாகமுடியுமென்றும் கண்டோம் என்றனர். அன்றியும் இதனை, "கொடுங்கோன் மன்னன் வாழும் நாட்டில், கடும் புலி வாழும் காடு நன்றே" என்னும் முதுமொழியாலும் அறிதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "அரசன் கொடுங்கோலனுயிருத்தல் கூடாது என்பது உணர்ந்தோம். இவ்விதம் கொடுங்கோலனுய் அரசன் உள்ள காலத்துக் குடிகள் அஞ்சக்கூடிய காரியங்களை அவன் செய்வான் அன்ருே? அவ்விதம் செய்தல் கூடாது என்பதைப்பற்றி நம் நாயனுர் யாது கூறுகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 57. அதிகாரம்.
## வெருவந்தசெய்யாமை.

---

(பரி.) அஃதாவது குடிகளஞ்சுவதும் பகுதியஞ்சுவதும் தானஞ்சுவது மாய தொழில்களைச் செய்யாமை. அவை செய்தல் கொடுங்கோன்மைப்பாற் படுதலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.



விளக்கம் :—அதாவது குடிகள் பயப்படக்கூடியதும், மந்திரி முதலியவர்கள் பயப்படக்கூடியதும், தான் பயப்படக்கூடியதும் ஆகிய தொழில்களைச் செய்யாதிருத்தல். அவ்வித செயல்கள் செய்தல் கொடுங்கோன்மையான் ஆதலால் கொடுங்கோன்மை என்னும் அதிகாரத்துக்குப் பிறகு இது வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "குடிகள் அஞ்சும் தொழில் எதுவென முதலில் அறிய விரும்புகின்ருேம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

561. தக்காங்கு நாடித் தலைச்செல்லா வண்ணத்தா
லொத்தாங் கொறுப்பது வேந்து.

(பரி.) இ-ள். தக்காங்கு நாடி = ஒருவன் தன்னின்மெலியார்மேற் சென்ற வழி அதனை நடுவாக நின்றாராய்ந்து—தலைச்செல்லாவண்ணத்தால் ஒத்தாங்கு ஒறுப்பது வேந்து = பின்னும் அது செய்யாமற்பொருட்டு அவனை அக்குற்றத்திற்கொப்ப ஒறுப்பானே அரசனாவான். எ-று.

தக்காங்கு ஒத்தாங்கென்பன ஒருசொல். தகுதியென்பது நடுவு நிலைமையாதல் "தகுதி யெனவொன்று நன்றே"* என்பதனானுமறிக. இதனானே தக்காங்கு நாடாமையும், பிறிதோர்காரணம்பற்றி மிகவொறுத்தலும், குடிகளஞ்சும் வினையாதல் பெற்றாம். (க)

விளக்கம் :—அரசனென்று சொல்லப்படுவான் தன் கீழ்ப்பட்ட குடிகளில் எவனேனும் ஒருவன் தன்னின் மெலியார்மேல் சென்று துன்புறுத்திய இடத்து அவ்வித செயலை நடுநிலைமையாக நின்று விசாரித்துக் குற்றத்தைச் செய்தவன் பின்னும் மற்றொரு முறை குற்றம் செய்யாவண்ணம் அவன் செய்த குற்றத்திற்குத் தக்க அளவாக தண்டித்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் தகுதியோடு நின்று விசாரித்துக் குற்றம்செய்தவனைத் தண்டியாது விடுதலும், அன்றி குற்றம்செய்தவனைச் செய்த குற்றத்திற்குத் தக்க அளவாக தண்டியாது இன்னும் ஏதேனும் ஒரு காரணம்பற்றிப் பெரியதோர் தண்டனையைச் செய்தலும் ஆகிய அவ்வித செயல்களைக் கண்ட குடிகள் 'இவ்வரசன் நடுநிலையோடு ஆராய்கின்றான் இல்லை; செய்தகுற்றத்திற்குத் தக்க அளவாகத் தண்டியாது பெரியதோர் தண்டனையைச் செய்கின்றான்'

* திருக்குறள் 111.



என்று அஞ்சுவார்கள் ஆதலால், இத்திருக்குறள் குடிகள் அஞ்சும் தொழிலைச் சொல்லியதாயிற்று என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இன்னும் குடிகள் அஞ்சுவதற்கு உரிய தொழில்கள் எவையேனும் உளவோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

562. கடிதோச்சி மெல்ல வெறிக நெடிதாக்க

நீங்காமை வேண்டு பவர்.

(பரி.) இ-ள். கடிது ஓச்சி=அவ்வொறுத்தல் தொடங்குங் கால் அளவிறப்பச் செய்வார்போற்றொடங்கி,—மெல்ல எறிக=செய்யுங் கால் அளவிறவாமற் செய்க—ஆக்கம் நெடிது நீங்காமை வேண்டுபவர்= ஆக்கந் தங்கண் நெடுங்காலம் நிற்றலை வேண்டுவோர், எ-று.

கடிதோச்சல் குற்றஞ்செய்வார் அதனை யஞ்சுதற்பொருட்டும், மெல்ல வெறிதல் யாவரும் வெருவாமைப்பொருட்டுமாம். தொடங்கின வளவிற் குறைதல்பற்றி மென்மை கூறப்பட்டது. ஓச்சுதல், எறிதலென்பன இரண்டும் உவமைபற்றி வந்தன. இவையிரண்டுபாட்டானும் குடிகள் வெருவந்த செய்யாமையதியல்பு கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—மேற்கூறியவண்ணம் அரசனானவன் ஒருவன் செய்த குற்றத்திற்குத் தக்க அளவாகத் தண்டிக்கத் தொடங்கும் காலத்து மிக அதிகமாகத் தண்டிப்பான்போல் தொடங்கித் தண்டிக்குங் காலத்து மிக அதிகமாக இல்லாது தொடங்கிய அளவிற்குக் குறைவாகச் செய்வானாயின், அவ்வித தொழில் அவனுக்கு உள்ள செல்வம் முதலிய ஆற்றல்களை அவனிடத்து நீடித்து நிற்கச் செய்யும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோ வெனின்? குற்றம் செய்த ஒருவன், மேலும்மேலும் குற்றம் செய்யாமற் பொருட்டு மிகப் பெரியதோர் தண்டனையை விதிப்பான் போல் தொடங்கிப் பின்னர்த் தொடங்கிய அளவே செய்யாது குறைத்துச் செய்வானாயின், அச்செயலைக் கண்ட குடிகள் 'இவ்வரசன் குற்றத்திற்கு அளவாகத் தண்டிக்கப் புகினும் உயிர்கள் மீதுள்ள இரக்கத்தால் அவ்விதம் தண்டித்தல் இல்லை. ஆதலால் இவனிடத்து நாம் அன்புடன் இருத்தல் வேண்டும்' என்று எண்ணுவரென்றும், அவ்வெண்ணத்தால் அவனுக்கு எல்லாச் செல்வங்களும்



வளர்ந்து நீடூழி நிற்குமென்றும், அவ்விதமல்லாது மாறுபடச் செய்வானாயின் அரசன் காருண்யமற்றவன் என்று குடிகள் அஞ்சுவரென்றும் கண்டோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "குடிகள் அஞ்சுதலை அரசன் செய்வானாயின் அவன் செல்வந்தான் கெட்டு விடும்போலும்; வேறு ஒன்றும் நிகழ்தல் இல்லையோ?" என்னலும்,

ஆசிரியர் கூறலாயினர்.

563. வெருவந்த செய்தொழுகும் வெங்கோல னாயி
னொருவந்த மொல்லைக் கெடும்.

(பரி.) இ-ள். வெருவந்த செய்து ஒழுகும் வெங்கோலன் ஆயின் = குடிகள் வெருவிய செயல்களைச் செய்து நடக்கும் வெங்கோலனாயின்,— ஒருவந்தம் ஒல்லைக் கெடும் = அரசன் ஒருதலையாகக் கடிதிற்கெடும். எ-று.

வெங்கோலனென்பது ஈண்டு வினைப்பெயராய் நின்றது. ஒருவந்தம், ஒருதலை, ஏகாந்தமென்பன ஒருபொருட்கிளவி. அச்செயல்களும் கேடுக ளும் முன்னர்க் கூறப்படும். (௩)

விளக்கம்:—குடிகள் அஞ்சக்கூடிய செயல்களைச் செய்து ஒழுகும் கொடுங்கோலனாக அரசன் இருப்பானாயின், அவ்வித அரசன் நிச்சயமாகவே கெட்டுவிடுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. குடிகள் அஞ்சக்கூடிய செயல்களை அரசன் செய்வதால், அவனுக்கும் அவனுடைய செல்வத்திற்கும் கெடுதல் நேரும் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "குடிகள் அஞ்சத்தக்க செயல்களைச் செய்வதால் செல்வம் குறைதல் கூடும். ஆயினும் அரசன் கெடுவது எவ்விதம்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

564. இறைகடிய னென்றுரைக்கு மின்னாச்சொல் [வேந்த
னுறைகடுகி யொல்லைக் கெடும்.

(பரி.) இ-ள். இறை கடியன் என்று உரைக்கும் இன்னாச்சொல் வேந்தன் = குடிகளால் நம்மிறைவன் கடியனென்று சொல்லப்படும் இன்னாச் சொல்லையுடைய வேந்தன் — உறை கடுகி ஒல்லைக்கெடும் = ஆயுளுங் குறைந்து செல்வமும் கடிதினிழக்கும். எ-று.



நெஞ்சு சோர்ந்து சொல்லுதலான், இன்னாமை பயப்பதாய சொல்லை 'இன்னாச்சொல்' என்றும். உறையென்பது முதனிலைத் தொழிற்பெயர். அஃது ஈண்டாகுபெயராய் உறைதலைச்செய்யும் நாண்மேனின்றது. அது குறைதலாவது:—அச்சொல்லில்லாதார்க்கு உள்ளதிற் சுருங்குதல். (௪)

விளக்கம்:—அரசனானவன் தன் கீழ்வாழ்கின்ற குடிகளால் 'இவ்வரசன் மிகக் கொடியவன்' என்று சொல்லப்படும் துன்பம் பயப்ப தாகிய சொற்களைப் பெறுவானாயின், அவனது ஆயுளும் குறைந்து அவனது செல்வமும் விரைவில் அழிந்துபோம் என்று இத்திருக் குறள் கூறுகின்றது. அதாவது குடிகள் மனம் வருந்தி 'இவ்வரசன் கொடியவன்' என்று ஒன்று கூடிச் சொல்வார்களானால், அச்சொற்க ளே அரசனது வாழ்நாளாகிய ஆயுளைக் குறைக்கும் கூர்மையுடைய கருவியாகி அவனுடைய ஆயுளையும் குறைத்து அவனது செல்வத் தையும் போக்கிவிடும் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அரசன் கொடியவன் என்று சொல்லும்படிச் செய்யும் செயல்கள் எவை என்று அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரி யர் கூறுவாராயினர்.

565. அருஞ்செவ்வி யின்னா முகத்தான் பெருஞ்செல்
பேஎய்கண் டன்ன துடைத்து. [வம்

(பரி.) இ-ள். அருஞ்செவ்வி இன்னாமுகத்தான் பெருஞ்செல்வம்= தன்னைக் காணவேண்டுவார்க்குக் காலமரியனாய்க் கண்டால் இன்னாத முகத் தினையுமுடையானது பெரிய செல்வம்—பேய் கண்டன்னது உடைத்து= பேயாற் காணப்பட்டாற்போல்வதொரு குற்றமுடைத்து. எ-று.

எனவே, இவை யிரண்டும் வெருவந்த செய்தலாயின. இவை செய் வானைச் சார்வாரின்மையின், அவனது செல்வம் தனக்கும் பிறர்க்கும் பயன்படாதென்பதுபற்றிப் 'பேஎய்கண்டன்னதுடைத்து' என்றார். காணு தல்=தன்வயமாக்குதல். (௫)

விளக்கம்:—அரசனானவன் தன்னைக் காணவந்தாரை நீண்ட நேரக் காலம் காத்திருக்கச்செய்து பிறகு காணும்படிச் செய்தலும் அவ்விதம் காணுகின்றகாலத்தும் இனியமுகத்தோடு இல்லாது கோ பித்தமுகத்தோடு இருத்தலும் காண்பன் ஆயின், அவ்வித செய





லுடைய அரசனது பெரியதோர் செல்வம், பேயை ஒருவன்

கண்டால் எவ்வித குற்றமுடையதாகுமோ, அவ்வித குற்றமுடையதாக இருக்கும் என்றுஇத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, காணவேண்டிய காலத்துக்காணுதலும், கண்டகாலத்தும் கடுகடுத்த முகத்தோடும் இருக்கின்ற அரசனை யாரும் அணுகுதல் இல்லாமையால், அவனுடைய செல்வமானது, பேய் ஒன்றின் கையில் அகப்பட்ட செல்வத்தைப் பேயானது தன் வசமாக்கித் தானும் உபயோகித்துக் கொள்ளாமலும், பிறர்க்கும் ஈயாமலும் காத்திருப்பதுபோல், அவனும் உபயோகப்படுத்தப் படாமலும், பிறர்க்கும் கொடுக்கப்படாமலும் பயனற்று நிற்கும் என்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "பேய்கொண்ட செல்வம்போல் பயனற்று நிற்குமே அன்றி ஒழிந்துபோவதில்லைபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

566. கடுஞ்சொல்லன் கண்ணில னாயி னெடுஞ்செல்வ
நீடின்றி யாங்கே கெடும்.

(பரி.) இ-ள். கடுஞ்சொல்லன் கண் இலன் ஆயின்=அரசன் கடிய சொல்லையுமுடையனாய்க் கண்ணோட்டமு மிலனுமாயின்,-நெடுஞ் செல்வம் நீடு இன்றி ஆங்கே கெடும்=அவனது பெரியசெல்வம் நீடுதலின்றி அப்பொழுதே கெடும். எ-று.

"வேட்டங் கடுஞ்சொன் மிகுதண்டஞ் சூதுபொரு—ளீட்டங்கட் காமமோடேழு" எனப்பட்ட விதனங்களுட் கடுஞ்சொல்லையும் மிகுதண்டத்தையும் இவர் இவ்வெருவந்த செய்தலுளடக்கினர். கண் — ஆகுபெயர். இவை செய்தபொழுதே கெடுந்தன்மைத்தன்றாயினு மென்பார், 'நெடுஞ் செல்வம்' என்றார். நீடுதல்=நீட்டித்தல். (௬)

விளக்கம்:—அரசனானவன் கடுஞ்சொல்லைக் கூறுவதுடன் தாக்ஷிண்யமில்லாதவனும் இருப்பானாயின், அவ்வித அரசனுடைய பெரிய செல்வமானது நிலைத்தல் இல்லாது அப்பொழுதே கெட்டு விடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் செய்யும் குற்றங்களுள் வேட்டையாடுதலும், கடுஞ்சொல் சொல்லுதலும், அதிக தண்டனை செய்தலும், சூதாடலும், நியாயமின்றிப்

பெண்டிரைச் சேர்த்தலும், கட்குடித்தலும், காமமிகுதியால் பிறர்மனை நயத்தல் முதலாகிய செயல்களைச் செய்தலும், ஆகிய ஏழும் பெரிய குற்றங்கள் ஆதலால், இத்திருக்குறளில் கொடிய சொல்லையும், அளவு கடந்த தண்டனையையும் குடிகள் அஞ்சுதற்கேற்ற செயல்கள் ஆக்கியதுடன் அரசனது செல்வம்போதற்குக் காரணமும் ஆக்கினர் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரசனது செல்வம் போதற்கு உரிய தொழில் இதுவென்று கண்டோம். ஆயின், அரசன் "கெடுதற்கு உரியதொழில்கள் எவை யென்று அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

567. கடுமொழியுங் கையிகந்த தண்டமும் வேந்த
னடுமுரண் டேய்க்கு மரம்.

(பரி.) இ-ள். கடுமொழியும் கையிகந்த தண்டமும் = கடிய சொல்லும் குற்றத்தின் மிக்க தண்டமும் — வேந்தன் அடுமுரண் தேய்க்கும் அரம் = அரசனது பகை வெல்லுதற்கேற்ற மாறுபாடாகிய இரும்பினைத் தேய்க்கும் அரமாம் எ-று.

கடுமொழியாற் றானையும் கையிகந்த தண்டத்தாற் றேசமுங் கெட்டு முரண் சுருங்கி வருதலின் அவற்றை அரமாக்கி, நிலையினதாயினுந் தேயு மென்றற்கு அம்முரணை இரும்பாக்கினார். ஏகதேசவுருவகம். அரமென்பதனைத் தனித்தனி கூட்டுக. இவையிரண்டு பாட்டானும், செவ்வியின்மை, இன்னாமுகமுடைமை, கண்ணோட்டமின்மை, கடுஞ்சொற்சொல்லல், கையிகந்த தண்டமென்றிவைகள் குடிகளஞ்சும் வினையென்பதூஉம், இவை செய்தான் ஆயுளும் அம்முரணுஞ் செல்வமு மிழக்குமென்பதூஉம் கூறப்பட்டன. (எ)

விளக்கம்:—அரசன் கூறும் கடினமாகிய சொற்களும் செய்த குற்றத்திற்கு அதிகமாகிய தண்டனையும் அவ்வரசனது பகைவரை வெல்வதற்குத் தகுதியாகிய வலிய இரும்பினை ஒக்கும் பலத்தினைத் தேய்க்கும் அரம்போல் ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது.

எனெனில்? அரசன் கடுமொழி கூறுவானாயின், அவன் சேனைகள் அவனை விட்டு விலகிப்போம். குற்றத்திற்கு அதிகமாகிய தண்டனையைச் செய்வானாயின், அவன் தேசத்திலுள்ள குடிகள் கெட்டு உதவிசெய்வார் இல்லாமற்போகநேரும். இவ்விதம் சேனையும்



தேசத்தவரும் இவனைச் சாராமையால் வலிமை குறைந்து பகைவரை வெல்லுதற்கு இல்லாது அரசன் கெட்டுப்போவான். அது எவ்விதமெனின்? மிக்க வலிமையையுடைய இரும்பாயினும், அரத்தைக் கொண்டு ராவினால் சிறிது, சிறிதாகத் தேய்ந்து எவ்வாறு முடிவில் ஒன்றுமில்லாமல் போகின்றதோ, அவ்விதமே இவ்வரசனும் ஒன்றுமில்லாமல் கெட்டுப்போவான் என்று அறிந்தோம். ஆகவே இதுவரையும் அரசன் குடிகளைக் காலத்தில் காணாமையும், இனிய முகம் காண்பியாமையும், தாக்ஷண்யமில்லாமையும், கடுஞ்சொற் சொல்லுதலும், அளவிற்கு மிஞ்சிய தண்டனையும் ஆகிய இவைகள் குடிகள் அஞ்சும் தொழில்களென்றும், இவ்வித தொழில்களைச் செய்த அரசன் தனதுடைய ஆயுளும், வலிமையும், செல்வமும் ஆகிய இவைகளை இழக்க நேரும் என்றும் கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "குடிகள் அஞ்சும் தொழில் இவ்விதம் என்று அறிந்தோம் இனி அமைச்சர் அஞ்சும் தொழில் எதுவென விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

568. இனத்தாற்றி யெண்ணாத வேந்தன் சினத்தாற்றிச்
சீறிற் சிறுகுந் திரு.

(பரி.) இ-ள். இனத்து ஆற்றி எண்ணாத வேந்தன்=காரியத்தைப் பற்றி வந்த வெண்ணத்தை அமைச்சர்மேல்வைத்து அவரோடு தானுமெண்ணிச் செய்யாத வரசன்—சினத்து ஆற்றிச் சீறின்=அப்பிழைப்பாற் றன் காரியந் தப்பியவழித் தன்னைச் சினமாகிய குற்றத்தின்கண்ணே செலுத்தி அவரை வெகுளுமாயின்,—திருச் சிறுகும்=அவன்செல்வம் நாடோ

தஞ் சுருங்கும். எ-று.

அரசபாரம் பொறுத்தற்குத் தக்க வொப்புமையான் அமைச்சரை 'இனம்' என்றும், தான் பின் பிழைப்பாதலறிந்து அமையாது அதனை அவர் மேலேற்றி வெகுளின் அவர் வெரீஇ நீங்குவர்; நீங்கவே, அப்பிழைப்புத் தீருமாறும் அப்பார மினிதாற்றுமாறும் இல்லையென்பது நோக்கித் 'திருச் சிறுகும்' என்றும் கூறினார். இதனாற் பகுதியஞ்சும் வினையும் அது செய்தா னெய்துங் குற்றமும் கூறப்பட்டன. (அ)



விளக்கம் :—ஒரு காரியத்தைப்பற்றி வந்த எண்ணத்தினைத் தன்னுடைய மந்திரிகள் மேல் வைத்து அம்மந்திரிகளோடு தானும் அக்காரியத்தை எண்ணிச் செய்யாத அரசன் அவ்விதம் எண்ணிச் செய்யாத தவறினால் தான் எடுத்த காரியம் தவறிப்போகுமாயின் அவ்விதம் தவறியதற்குத் தான் கோபத்தைக் கொண்டு குற்றமற்ற அவ்வமைச்சரைக் கோபிப்பானாயின் அவ்வித அரசனது செல்வம் நாள்தோறும் சுருங்கிவிடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தன்பாரம் பொறுக்கும் அமைச்சர்களுடன் தான் எண்ணிய காரியத்தைக் கலந்து விசாரியாமலே தானே காரியத்தைச் செய்வதும், அவ்விதம் செய்யும் காலத்து அக்காரியம் சரியாக நடவாது கெட்டுப்போமாயின் அதனை அமைச்சர்கள்மீது வைத்து கோபிப்பதும் செய்வானாயின் அவ்வமைச்சர் இவ்வரசன் தகுதி யற்றவன் என்று நீங்கிவிடுவரென்றும், அவ்விதம் அமைச்சர் நீங்கு வதனால், காரியத்தில் வந்த பழுதைத் தீர்த்தலும், அரச பாரத்தைச் சரியாகத் தாங்கி அரசைச் சரியாக நடத்துதலும் இல்லாமற்போம். ஆதலால், அவனுக்கு இருந்த செல்வமானது சுருங்கிவிடும் என்று கண்டவுடன் அமைச்சர் அஞ்சும்படி செய்யும் தொழில் இதுவென்றும் கண்டோ மென்றனர். அது கேட்ட மாணாக்கர், "அமைச்சன் அஞ்சும் வினை இதுவென்று அறிந்தோம். இனி அரசன் அஞ்சும் வினை எதுவென்று அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

569. செருவந்த போழ்திற் சிறைசெய்யா வேந்தன்
வெருவந்து வெய்து கெடும்.

(பரி.) இ-ள். சிறை செய்யா வேந்தன் = செரு வருதற்குமுன்னே தனக்குப் புகலாவதோரரண் செய்துகொள்ளாதவரசன்—செருவந்த போழ் தின் வெருவந்து வெய்து கெடும் = அது வந்தகாலத்து ஏமமின்மையான் வெருவிக் கடிதிற்கெடும். எ-று.

பகைவரைவெருவிச் சேர்ந்தார் நீங்குதலிற் றமியனாய்த் தானும்வெருவி அப்பகைவயத்தனாமென்பதாம். இதனால் தானஞ்சும் வினையும் அது செய் தானெய்தும் பயனும் கூறப்பட்டன. (௯)



விளக்கம் :—யுத்தம் வருவதற்கு முன்னே தன்னைக் காப்ப தற்கு உரியதாகிய காவலென்னும் அரணைச் செய்துகொள்ளாத அரசன் ஒருவன் யுத்தம் வந்தகாலத்துத் தன்னைக் காத்துக் கொள் ளும் காவல் இல்லாமல் போகுமாதலால் அதனால் பயந்து விரை வில் கெட்டுப்போவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதா வது, நாமும் யுத்தவீரர்களும் தங்குவதற்கு உரியனவாக அரண் களை யுத்தகாலத்திற்கு முன்னரே அரசன் தெரிந்து அமைத்துக் கொள்ளாவிடின் அவ்விதம் அமையாத குற்றத்தால் யுத்தம் வந்த போது தன்னோடு குடியிருந்த யுத்த வீரர்கள் 'நமக்கு ஏமம் இல்லை ஆதலால் நாம் இறந்து விடுவோம்' என்று எண்ணினராய் இவனைத் தனித்துவிட்டுப் பிரிந்துபோவரென்றும், அவ்விதம் பிரிவதால் பகை வர் இவனைச் சுலபமாகத் தம் வசப்படுத்திக் கொள்வாரென்றும் அறிவதுடன், அரசன் அஞ்சும் தொழில் இது வென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "குடிகள் அஞ் சும் பகுதியும், அமைச்சர் அஞ்சும் பகுதியும், அரசன் அஞ்சும் பகு தியும் இவையென வெருவந்த செய்யாமை என்னும் இவ்வதிகாரத் தால் அறிந்தோம். இனி, கொடுங்கோலன் சேரும் தீங்குகள்

இவ்வெருவந்த செய்தலுள் இன்னும் ஏதேனும் உள்ளதோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

570. கல்லார்ப் பிணிக்குங் கடுங்கோ லதுவல்ல
தில்லை நிலக்குப் பொறை.

(பரி.) இ-ள். கடுங்கோல் கல்லார்ப் பிணிக்கும் = கடுங்கோலனாகிய அரசன் நீதிநூல் முதலிய கல்லாதாரைத் தனக்குப் பகுதியாகக் கூட்டாநிற்கும்;—அதுவல்லது நிலக்குப் பொறை இல்லை = அக்கூட்டமல்லது நிலத்திற்கு மிகையாய பாரம் பிறிதில்லை. எ-று.

'கடுங்கோல்' என்பது கண்ணற மிக்க தண்டத்தின்மேற்றன்றி அதனைச் செய்வான்மேற்றாயிற்று. அவன் அது செய்தற்கிசைவாரையல்லது கூட்டாமையிற் 'கல்லார்ப்பிணிக்கும்' என்றும், ஏனையவற்றையெல்லாம் பொறுக்கின்ற நிலத்திற்குப் 'நிலத்திற்குப் பொறை அதுவல்லதில்லை' என்றும் கூறினார். 'நிலக்கு' என்பது செய்யுள்விகாரம். இதனால் வெருவந்த செய்தலின் குற்றம் கூறப்பட்டது. (10)



விளக்கம்:—கொடுங்கோலனாகிய அரசன் தனக்கு மந்திரிகளாக நீதிநூல் முதலியவற்றைப் படியாதாரை இனமாகக் கொள்வானாயின் அவ்வித கூட்டம் அல்லாமற் பூமிக்கு அதிகமாகிய சுமை வேறு ஒன்றுமில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் கொடுங்கோலனாக அவனது குணத்திற்கு ஏற்க அளவுகடந்த தண்டனையைச் செய்வதற்கு நீதிநூல் கல்லாத மக்களைத் தனக்கு அமைச்சராக வைத்துக்கொள்வானேயன்றி கல்வியுடையாரை அமைச்சராக வைத்துக்கொள்ளமாட்டான். ஆதலால், அவ்வித அமைச்சர் கூட்டமானது எல்லாவற்றையும் பொறுக்கின்ற இப்பூமிக்குப் பொறுக்க முடியாத பாரமாக இருக்குமென்று அறிந்தோம். அன்றியும், அரசன் செய்கின்ற வெருவந்த செயல்களுள் இது பெரியதோர் குற்றம் ஆதலால், இதனை முடிந்தது முடித்தலாகக் கூறினர் என்று அறிந்தோம்" என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அரசனது குற்றம் இதுவென அறிந்தோம். இனி அவன்

செய்யவேண்டிய குணங்களையும் கூறவேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

---

## 58. அதிகாரம்.
## கண்ணோட்டம்.

---

(பரி.) அஃதாவது தன்னொடு பயின்றாரைக் கண்டால் அவர் கூறியவை மறுக்கமாட்டாமை. இஃது அவர்மேற் கண்சென்றவழி நிகழ்வதாகலின், அப்பெயர்த்தாயிற்று. மேல் வெருவந்தசெய்யாமையுட் கூறியவதனையே சிறப்புப்பற்றி விரித்துக்கூறுகின்றமையின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது, அரசன் தன்னோடு பழகியவரைக் கண்டால் அவர் சொல்லுகின்ற விஷயங்களை மறுக்கமாட்டாது அவர்க்கிணங்கச்செய்தல். இவ்வித செயல் அப்பழகியவர்மீது கண் சென்றவிடத்து உண்டாவது ஒன்று ஆதலால் "கண்ணோட்டம்" என்னும் பெயர் கொண்டதாயிற்று. மேல் அதிகாரத்துள் குடிகள் முதலியோர் அஞ்சுதலைச் செய்தல் ஆகாது என்று கூறினர்.



அவ்விதம் செய்யாது இருப்பதற்குக் கண்ணோட்டம் என்னும் தாக்ஷிண்யமானது இன்றியமையாதது ஆதலால் அதனை இங்கு கூறுகின்றனர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கண்ணோட்டம் என்பது ஒன்று உள்ளதுபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

571. கண்ணோட்ட மென்னுங் கழிபெருங் காரிகை
உண்மையா னுண்டிவ் வுலகு.

(பரி.) இ-ள். கண்ணோட்டம் என்னும் கழி பெருங்காரிகை உண்மையான்=கண்ணோட்டமென்று சொல்லப்படுகின்ற சிறப்புடையவழகு அரசர் மாட்டு உண்டாகலான்,—இவ்வுலகு உண்டு=இவ்வுலக முண்டாகாநின்றது. எ-று.

'கழிபெருங்காரிகை' என்புழி ஒருபொருட்பன்மொழி இவ்வியாழ

கது சிறப்புணர்கின்றது. இவ்வழகு அதற்குறுப்பாகலின், உண்மையானே நிலைபெறும் கூறினர். இன்மை வெருவந்தசெய்தலாகலின் அவர் நாட்டு வாழ்வார் புலியையடைந்த புல்வாயினம் போன்று ஏமஞ்சாராமை பற்றி, 'இவ்வுலகுண்டு' என்றார். (க)

விளக்கம் :—கண்ணோட்டம் என்று சொல்லப்படுகின்ற சிறப்புடைய அழகு ஒன்று அரசனிடத்து இருப்பதனாலேயே இவ்வுலகம் உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னே போலெனில்? அரசன் மேற்கூறிய வெருவந்தசெயல்களைச் செய்வானாயின், புலியைக் கண்ட மான்கூட்டங்களைப்போல் குடிகள் அவனைவிட்டு விலகிப் போவார்களென்றும், அவ்விதம் விலகுவதால் உலகில் நடக்கவேண்டிய செயல்கள் சரியாக நடவாவென்றும், தாக்ஷண்யத்தோடு நிற்கின்ற அரசனது மேம்பட்டகுடிகள் அவனையே அறனாக எண்ணி அன்புடைமையோடு வாழ்வர் ஆதலால் உலக இயல் நன்றாக நடைபெறுமென்றும் கண்ணோட்டம் என்னும் குணத்தின் பகுதியைக் கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கண்ணோட்டம் இல்லாத அரசன் உலகத்தாரால் எவ்விதம் எண்ணப்படுவான்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

572. கண்ணோட்டத் துள்ள துலகியல் அஃதிலா
ருண்மை நிலக்குப் பொறை.

(பரி.) இ-ள். உலகியல் கண்ணோட்டத்து உள்ளது = உலகநடை கண்ணோட்டத்தின்கண்ணே நிகழ்வது;—அஃது இலார் உண்மை நிலக்குப்



பொறை = ஆதலான், அக்கண்ணோட்டமில்லாதார் உளராதல் இந்நிலத்திற்குப் பாரமாதற்கே, பிறிதொன்றற்கன்று. எ-று.

உலகநடையாவது :—ஒப்புரவுசெய்தல், புறந்தருதல், பிழைத்தன பொறுத்த லென்றிவை முதலாயின. அவை நிகழாமையால் தமக்கும் பிறர்க்கும் பயன்படாரென்பதுபற்றி, 'நிலக்குப்பொறை' என்றார். ஆதற்கென்பது சொல்லெச்சம். இவையிரண்டு பாட்டானும் கண்ணோட்டத்தது சிறப்புக் கூறப்பட்டது. (உ)

விளக்கம் :—இவ்வுலகத்தில் நடக்கவேண்டிய செயல்களெல்லாம் கண்ணோட்டமென்னும் தாக்ஷண்யத்தினாலேயே நடக்க

வேண்டி உள்ளது என்றும், அவ்வித தாக்ஷிண்யம் இல்லாதவர்கள் இவ்வுலகத்திலிருப்பது இப்பூமிக்குப் பாரமேயன்றி வேறு ஒரு நன்மையும் செய்வதற்கன்று என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உலகத்து மக்களுக்குச் செய்யவேண்டுவனவாகிய ஒப்புரவு செய்தல், உயிர்களைக் காப்பாற்றல், தவறு செய்தலைப் பொறுத்துக்கொள்ளுதல் முதலாகிய காரியங்களை அரசன் ஒருவன் செய்தாலன்றி உலகம் நடவாதென்றும், அவ்விதம் செய்யாதவன், தனக்கும் பிறர்க்கும் பயன்படாது ஒழிகின்றான் ஆதலால் அவன் தேகமானது நிலத்திற்குச் சுமையாக உள்ளதென்றும் கூறுகின்றனர் என்று அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "கண்ணோட்டம் இல்லாதவன் பூமியில் இருத்தல் வேண்டாம்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

573. பண்ணென்னாம் பாடற் கியைபின்றேற் கண்
கண்ணோட்ட மில்லாத கண். [ணென்னாங்

(பரி.) இ-ள். பண் என்னாம் பாடற்கு இயைபு இன்றேல்=பண் என்னபயத்ததாம் பாடற்றொழிலோடு பொருத்தமின்றாயின்!—கண் என்னாம் கண்ணோட்டம் இல்லாத கண்=அதுபோலக் கண் என்னபயத்ததாம் கண்ணோட்டமில்லாதவிடத்து! எ-று.

பண் கண்ணென்பன சாதிப்பெயர். பண்களாவன:—பாலையாழ் முதலிய நூற்றுமூன்று. பாடற்றொழில்களாவன :—யாழின்கண் வார்தல்

27



முதலியவெட்டும், பண்ணல் முதலியவெட்டும், மிடற்றின்கண் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலமென்னுமைந்தும், பெருவண்ணம், இடைவண்ணம், வனப்புவண்ண முதலிய வண்ணங்களெழுபத்தாறுமாம். இவற்றோடியையாதவழிப் பண்ணாற்பயனில்லாதவாறுபோலக் கண்ணோட்டத்தோடியையாதவழிக் கண்ணாற்பயனில்லையென்பதாம். கண் சென்றவழி நிகழ்தல்பற்றி அதனை யிடமாக்கினார். இறுதிக்கட்கண்ணென்பதனைக் "கண்ணகல் ஞாலம்" (திரிகடுகம் 1.) என்புழிப்போலக் கொள்க. (க)

விளக்கம்:—வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடை என்னும் இசைக்கரணங்களோடும் பண்ணல், பரிவட்டனை, ஆராய்தல், தைவரல், செலவு, விளையாட்டு, கையூழ், குறும்போக்கு என்னும் கலைத்தொழில்கள் எட்டோடும் கூடிய பாடல் தொழிலோடு பொருத்தமில்லாத பண் ஒன்றினால் எவ்வாறு பாடுகின்ற பாடல் பயன்படாதோ அதுபோலத் தாக்ஷிண்யமில்லாத கண்ணானது ஒருவன் முகத்திலிருந்தும் பயன்படாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பண்ணும் பாடலும் ஒன்றுக்கு ஒன்று இயைபில்லாத பாட்டை ஒருவன் பாடுவானாயின், அப்பாட்டானது அவனுக்கும் பிறர்க்கும் எவ்வாறு பயன்படாமற்போமோ அதுபோல் பார்க்கின்ற கண் இருந்தும் தாக்ஷிண்யத்தோடு தன்னோடு சேர்ந்தவர்களைப் பாராவிடின் அது பயன்படாமற்போம் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் தாக்ஷிண்யமில்லாத கண்கள் முகத்திலிருந்தும் பயன்படாவோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

574. உளபோல் முகத்தெவன் செய்யு மளவினாற்
கண்ணோட்ட மில்லாத கண்.

(பரி.) இ-ள். முகத்து உளபோல் எவன் செய்யும்=கண்டார்க்கு முகத்தின்கண் உளபோற்றோன்றலல்லது வேறென்ன பயனைச் செய்யும்—அளவினான் கண்ணோட்டம் இல்லாத கண்=அளவிறவாத கண்ணோடுதலை யுடையவல்லாத கண்கள். எ-று.



தோன்றலல்லதென்னுஞ் சொற்கள் அவாய்நிலையான் வந்தன. கழி கண்ணோட்டத்தினீக்குதற்கு, 'அளவினான்' என்றார். ஒருபயனையுஞ் செய்யாவென்பது குறிப்பெச்சம். (௪)

விளக்கம் :—அளவோடுகூடிய தாக்ஷிண்யமுடைய கண்களாக ஒருவன் கண்கள் இல்லாவிடின், அக்கண்கள் அவனைப் பார்ப்பவர்களுக்கு அவன் முகத்திலிடத்தே உள்ளனபோல் தோன்றுவது அல்லாமல் வேறு ஒருபயனையும் தருவதில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், பார்ப்பவர்க்கு அழகினைச் செய்ய அக்கண்கள் இருப்பனவே அன்றி அக்கண்களால் ஆகிய தாக்ஷிண்யமென்னும் பயனை அவை தாவில்லை ஆதலால், அக்கண்கள் இருந்தும் பயனற்றனவாம் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தாக்ஷிண்யமற்ற கண்ணினை அறிவுடையோர் என்னென்று கருதுகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

575. கண்ணிற் கணிகலங் கண்ணோட்ட மஃதின்றேற்
புண்ணென் றுணரப் படும்.

(பரி.) இ-ள். கண்ணிற்கு அணி கலம் கண்ணோட்டம்=ஒருவன் கண்ணிற்கு அணியுங்கலமாவது கண்ணோட்டம்—அஃது இன்றேல் புண் என்று உணரப்படும்=அக்கலமில்லையாயின் அஃதறிவுடையாராற் புண்ணென்றறியப்படும். எ-று.

வேறணிகலமின்மையிற் 'கண்ணிற்கணிகலம்' என்றும், கண்ணுப்த் தோன்றிலும் நோய்களாலும் புலன்பற்றலாலுந் துயர்விளைத்தலுக்கிப் 'புண்ணென்றுணரப்படும்' என்றுங் கூறினார். இவை மூன்று பாட்டாலும் ஓடாது நின்ற கண்ணின் குற்றங் கூறப்பட்டது. (௫)

விளக்கம் :—மேல் நீங்கள் வினவியவண்ணம் ஒருவன் கண்களுக்கு அவன் அணியவேண்டிய ஆபாரணமாவது தாக்ஷிண்யம் என்றும் ஆபாரணமென்றும், அத்தாக்ஷிண்யமென்னும் ஆபாரணத்தைப் பூணாத கண்கள் கண்களாகக் கருதப்படாமல் நோய் முதலி பலவை கொண்டு புலன்களில் சென்று துயர்விளைக்கும் தன்மையால் புண்களென்றே உணரப்படும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், தாக்ஷிண்யமற்ற கண்கள் நல்லோரால் கண்களாகக் கருதப்படாமல் புண்களாகவே கருதப்படுகின்றன என்று



அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம்

புண்களாக எண்ணப்படினும் அக்கண்கள் அசைகின்றனவே? புண்களாயின் அசையாவே?" என்றும், ஆசிரியர் கூறுவாராயினர்.

576. மண்ணோ டியைந்த மரத்தனையர் கண்ணோ
டியைந்துகண் ணோடா தவர்.

(பரி.) இ-ள். கண்ணோடு இயைந்து கண்ணோடாதவர் = ஓடுதற்குரிய கண்ணோடு பொருந்தியிருந்து அஃதோடாதவர் — மண்ணோடு இயைந்த மரத்து அனையர் = இயங்கா நின்றாராயினும் மண்ணோடு பொருந்தி நிற்கின்ற மரத்தினை யொப்பர். எ-று.

ஓடாதவரென்புழிச் சினைவினை முதன்மேனின்றது. மரமுங் கண்ணோடியைந்து கண்ணோடாமையின், இது தொழிலுவமம். இதனைச் சுதைமண்ணோடு கூடிய மரப்பாவை யென்றுரைப்பாருமுளர். அஃதுரையன்மை காணப்படுங்கண்ணன்றி அதனுள் மறைந்து நிற்கின்ற ஒருசாருள்வீட்டாற் கூறினமையானும், "மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்— றிரக்கண்டாய்" என்பதனானுமறிக. (௬)

விளக்கம்:—செல்லவேண்டிய அளவு ஓடுதற்கு உரிய கண்களைப் பெற்றிருந்தும், அவ்விடம் செல்லுதற்கு உரிய அளவு தாக்ஷிண்யத்தோடு அக்கண்கள் இல்லாவிடின் அக்கண்களைக்கொண்டு நடத்தல் முதலிய தொழில்களைச் செய்கின்றாராயினும் அவர்களை மண்ணில் முளைத்து நிற்கின்ற மரத்துக்குச் சமானமானவர்கள் என்று உலகோர் எண்ணுகின்றனர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது.. ஆதலால், மரமென்று உவமித்தமையால் மரத்திலுள்ள கணுக்களாகிய கண்கள் அம்மரத்திற்குக் கண்கள்போல் காணப்படினும் அதனால் அம்மரம் பயன்படாததுபோலத் தாக்ஷிண்யமற்ற கண்களை உடையவனும் அக்கண்களால் யாதொரு பயனையும் அடைவதற்கு இல்லை என்றும், இதனை "வரக்கண்டு மன்னுள்ளவர் காணுதே வல்லியா நெஞ்சே மரக்கண்ணோ மண்ணாள்வார் கண்ணென்—றிரக்கண்டாய் வாளுமுலை வெல்கொடியாள் வன்புனலீர் நாடற்கென்றோளுமுலை தோன்றத் தொழுது." (முத்தொள்

ளாயினும் செய்பவராயும்) அறிக்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கண்ணோட்டமென்னும் தாக்ஷண்யமில்லாதவன் கண் கள் ஒருவன் முகத்து இருப்பனவாகக் கருதப்படுமோ? அல் லவோ?" என்னாலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

577. கண்ணோட்ட மில்லவர் கண்ணிலர் கண் ணுடை
கண்ணோட்ட மின்மையு மில். [யார்

(பரி.) இ-ள். கண்ணோட்டம் இல்லவர் கண் இலர்=கண்ணோட்ட மில்லாதவர் கண்ணுடையருமல்லர்;—கண் உடையார் கண்ணோட்டம் இன் மையும் இல்=கண்ணுடையவர் கண்ணோட்டமிலாதலு மில்லை. எ-று.

கண்ணுடையராயிற் காட்சிக்கண்ணே அஃதோடுமென்பதுபற்றிக் 'கண்ணோட்டமில்லவர் கண்ணிலர்' எனக் கூறிப் பின் அதனை யெதிர் மறைமுகத்தான் விளக்கினார். உம்மை இறந்ததுதழீஇய வெச்சவும்மை. இவையிரண்டு பாட்டானும் கண்ணோடாதாரதிழிபு கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—தாக்ஷண்யமில்லாதவர்கள் கண்ணுடையர் அல்ல ரென்றும், உண்மையாகக் கண் உடையார் என்று உலகத்தோராற் கூறப்படுபவர் தாக்ஷண்யமில்லாமல் இருப்பதில்லை என்றும் இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பார்ப்பதற்குக் கண்கள் ஒடு கின்றனவாயினும், ஏனையோர் மீதில் அருள்பெற்று ஓடாது நிற் பதால் அவ்விதமுடையோரைக் கண்ணில்லாக் குருடரென்றும், பிறர்மீது அருள்கொண்டு ஓடுகின்ற கண்களை உடையாரைக் கண் ணுடையவரென்றும் கூறுகின்றனர் என்று அறிக்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தாக்ஷண்யமுடைய கண்களே கண்கள் என்று அறிக்தோம். ஆயின், அத்தாக்ஷண்யமானது அளவோடு இருத்தல்வேண்டும் என்று மேற்கூறினீர். அது என்னை?", என் னாலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

578. கருமஞ் சிதையாமற் கண்ணோட வல்லார்க்
குரிமை யுடைத்திவ் வுலகு.

(பரி.) இ-ள். கருமஞ் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு=முறை

செய்தலாகிய தந்தொழிலழியாமற் கண்ணோட வல்ல வேந்தர்க்கு—



உரிமை உடைத்து இவ்வுலகு—உரித்தாந்தன்மையுடைத்து இவ்வுலகம். எ-று.

தம்மொடு பயின்றார் பிறரைப்பிழைக்கண்செய்தவழி அவரைக் கண்ணோடி பொறுதார்க்கு முறை சிதைதல் மேல் "ஓர்ந்துகண்ணோடாது" (திருக் குறள்,—541.) என்ற முறையிலக்கணத்தானும் பெற்றும். முறை சிதைய வரும்வழிச் கண்ணோடாமையும் வாராவழிக் கண்ணோடலும் ஒருவற்கியல் பாதலருமையிற் 'கண்ணோட வல்லார்க்கு' என்றும் அவ்வியல்புடையார்க்கு உலகமுழுதும் நெடுங்காலஞ் சேறலின் 'உரிமையுடைத்து' என்றும் கூறி னார். இதனாற் கண்ணோமொரு கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—அரசன் ஒருவன் முறை செய்தலாகிய தன்னு டைய தொழில் சிறிதும் கெடாவண்ணம் தாக்ஷிண்யத்தைச் செய்வானாயின், அவ்வித அரசனுக்கு இவ்வுலகம் உரியதாக உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அர சன் நடுநிலையாக நின்று கட்பினர், பகைவர், நொதுமலர் என்று எண்ணாது குற்றம் செய்தவர்களைத் தண்டித்தும் குணம் செய்தவர் களைப் பரிபாலித்தும் வரவேண்டும் ஆதலால், அவ்விதம் செய்யாது தாக்ஷிண்யம் கருதி ஒருவனுக்கு அளவு கடந்த நன்மைகளைச் செய்துவிடினும், குற்றத்திற்காகத் தண்டியாவிடினும் உலகோர் 'இவன் நடுநிலை யற்றவன்' என்று அவனை விட்டு நீங்குவர். அவ்வித மல்லாது தாக்ஷிண்யம் உடையவன் ஆயினும் எவ்விடத்தில் தாக்ஷிண்யம் செலுத்தல் வேண்டுமோ அவ்விடத்தில் செலுத்த வேண்டும் என்றும், அவ்விதம் செலுத்துகின்ற காலத்தும் அளவு கடவாது இருத்தல் வேண்டுமென்றும், அவ்விதமிருந்தால் தான் அரசஉரிமை நடைபெறுமென்றும், அவனையும் உலகோர் விரும் புவரென்றும் தாக்ஷிண்யம் செலுத்துகின்ற அளவினைக் கூறினர் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "அரசன்

ஒருவன் பொறையுடையனு யிருத்தல்வேண்டும் என்று அறிந்து உன்னோம். அவ்விதம் பொறுக்கின்ற காலத்துக் கண்ணேட்டம் எவ்விதம் இருத்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாரா யினர்.



579. ஒறுத்தாற்றும் பண்பினூர் கண்ணுங்கண் ணேடிப்
பொறுத்தாற்றும் பண்பே தலை.

(பரி.) இ-ள். ஒறுத்தாற்றும் பண்பினூர்கண்ணும்=தம்மையொறுக்கு மியல்புடையாரிடத்தும்—கண்ணேடிப் பொறுத்தாற்றும் பண்பே தலை= கண்ணேட்டமுடையாராய்க் குற்றத்தைப் பொறுக்குமியல்பே அரசர்க்குத் தலையாயவியல்பாவது. எ-று.

'பண்பினூர்' என்றதனுல் அவர்பயிற்சி பெற்றும். ஒறுத்தாற்றும் பொறுத்தாற்று மென்பன கண்டொருசொன்னீர. (க)

விளக்கம்:—அரசன் ஒருவன் தன்னை எக்காலத்தும் துன் புறுத்துகின்றவனிடத்தும் தாக்ஷண்யத்தால் அவன் குற்றத்தைப் பொறுத்து நிற்பதே முதன்மையாகிய குணம் என்று இத்திருக் குறள் கூறுகின்றது. ஆதலால், தன்னைத் துன்புறுத்துகின்றவர்களைத் துன்புறுத்தாது பொறுத்துக்கொள்வது கண்ணேட்டமென்னும் தாக்ஷண்யத்தின் பயனென்றும், அவ்வித தாக்ஷண்யத்தை உடையவனே முதன்மையாகிய குணமுடையவனென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "பொறுக்கின்ற குணமும் தாக்ஷண்யத்தால் உண்டாகின்றது என்று கண்டோம். ஆயின், அரசன் ஒருவன் தான் தாக்ஷண்யம் செலுத்தவேண்டியவர்களிடத்தும் அவர்களோடு உள்ள பயிற்சியால் எவ்வளவு குற்றத்தைச் செய்தாலும் பொறுத்துக்கொள்ள வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

580. பெயக்கண்டு நஞ்சுண் டமைவர் நயத்தக்க
நாகரிகம் வேண்டு பவர்.

(பரி.) இ-ள். நஞ்சு பெயக் கண்டும் உண்டு அமைவர்=பயின்றூர்

தமக்கு நஞ்சிடக்கண்டுவைத்தும் கண் மறுக்கமாட்டாமையின் அதனை யுண்டு பின்னுமவரோடு மேவுவர்—நயத்தக்க நாகரிகம் வேண்டுபவர்= யாவராலும் விரும்பத்தக்க கண்ணோட்டத்தினை வேண்டுமவர். எ-று.

நாகரிகமென்பது கண்ணோட்டமாதல் "முந்தை யிருந்து நட் டோர் கொடுப்பின்—நஞ்சு முண்பர் நனிநா கரிகர்" (நற்றிணை, 355.) என்



பதனுமறிக. அரசர் அவைபொருது கண்ணோடற்பாலது தம்மாட்டுக் குற்றஞ்செய்தாழி யென்பது இவ்விரண்டு பாட்டானும் கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—தம்மோடு பழகியவர் தமக்கு விஷத்தையே கலந்து உண்ணச்செய்தாலும் அவ்விதம் செய்கின்றாரென்று தெரிந்தும் அவரோடு பழகிய தாக்ஷிண்யத்தால் அவர் கொடுத்த நஞ்சையும் வேண்டாமென்று மறுக்காது அதனை அமுதம்போல் உண்டு விடுவதுடன் அதன் பிறகும் அவரோடு உள்ள பழக்கமிகுதி யால் பொருந்தி நிற்பர் என்றும், அதற்குக்காரணம் உலகத்து உள்ள எவராலும் விரும்பக்கூடிய தாக்ஷிண்யத்தையே அவர்கள் விரும்புவதாலேயே என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் நஞ்சு உண்டு நிற்பது தாம் சாதற்கு இடமாகும் என்று அறிந்தும் அவரிடத்தே உள்ள அருளின் மிகுதியால் 'நஞ் சிட்டவர்' என்று கூறுதலும், தாம் இறப்பதை எண்ணுதலும், அதனை உண்பதோடு பின்னும் அவரோடு பழகுவர் என்றமையால், ஒருவன் பழகிய பழக்கமும் அதனால் உண்டாகும் தாக்ஷிண்யமும் அத் தாக்ஷிண்யத்தால் உண்டாகும் செயல்களும் இவை என்று அறிவ துடன் தாக்ஷிண்யத்தையே பெரிதென்று எண்ணுகின்றவர்க்கு எக்காலத்தும் நாசமில்லை என்றும் கண்டோம். ஆதலால், இத் திருக்குறள் தாக்ஷிண்யத்தின் சிறப்பை முற்றும் அறிவித்தது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கண்ணோட்டம் என்ப தன் தகுதி யாவும் அறிந்தோம். இனி, அரசன் செய்ய வேண்டுவன எவை என்றும் அறிதல்வேண்டும்" என்னவும், ஆசிரி யர் கூறுவாராயினர்.

---

## 59. அதிகாரம்.

## ஒற்றாடல்.

(பரி.) அஃதாவது பகை, நொதுமல், நட்பென்னும் மூன்று திறத்தார் மாட்டும் நிகழ்ந்தனவறிதற்கு ஒற்றரையாளுதல். மேற் சொல்லிய இலக்கணத்தையுடைய அரசனுக்குத் தன்னாடு செறுத்தற்கண்ணும் பிறர்நாடு கோடற்கண்ணும் வேண்டுவன கூறுகின்றாராகலின், அவ்விருவகைக்கும் இன்றியமையாத இது முன் வைக்கப்பட்டது.



விளக்கம் :—அதாவது, பகைவர், நட்பினர், இவ்விரண்டுமல்லாத நொதுமலர் ஆகிய மூன்று திறத்தவர்களிடத்தும் உண்டாகிய விஷயங்களை அறிந்து ஆளுவதற்கு ஒற்றரைவைத்து ஆளும் முறைமையென்பதாம். செங்கோலுடைய அரசன் ஒருவனுக்குத் தன் நாட்டினை ஆளும் காலத்துள நன்மை தீமைகளை அறியவேண்டுவதற்கும், பிறர்நாட்டைக் கொள்வதற்குச் செல்லும் காலத்து நடப்பன யாவும் தெரிந்துகொள்ள வேண்டியதற்கும், இவ்வொற்றர் வேண்டியுள்ளாராதலால் அவ்வித ஒற்றரை வைத்தாளும் தன்மையினை இங்கு முன் கூறப்பட்டு உள்ளது என்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஒற்று என்பது மன்னவனுக்கு எவ்வித சிறப்புடையது?" என்னலும், ஆசிரியர் கூறவாராயினர்.

581. ஒற்று முறைசான்ற நூலு மிவையிரண்டுந்
தெற்றென்க மன்னவன் கண்.

(பரி.) இ-ள். ஒற்றும் உரை சான்ற நூலும் இவை இரண்டும்=ஒற்றும் புகழமைந்த நீதிநூலுமாகிய இவையிரண்டனையும்—மன்னவன் கண் தெற்றென்க=அரசன் தன்னிரண்டு கண்ணுமாகத் தெளிக. எ-று.

ஒற்றுத் தன்கண் செல்லமாட்டாத பரப்பெல்லாஞ்சென்றுகண்டு ஆண்டு நிகழ்ந்தனவெல்லா முணர்த்தலானும், நூல் அந்நிகழ்ந்தவற்றிற்குத் தன்னு

ணர்வு செல்லமாட்டாத வினைகளையெல்லாஞ் சொல்லியுணர்த்தலாலும், இவ்விரண்டினையுமே தனக்குளக்கண்ணும் ஞானக்கண்ணுமாகத் தெளிந்து கொண்டொழுக வென்பதாம். ஒற்றினை 'ஒற்று' என்றார், வேந்தனை வேந்தென்றாற் போல. 'தெற்றென்க' என்பது தெற்றெனென்பது முதனிலையாக வந்த வியங்கோள். அது தெற்றெனவென்றுஞ் செயவெனெச் சத்தானறிக. இதனால் ஒற்றினது சிறப்புக் கூறப்பட்டது. (க)

விளக்கம்:—அரசன் ஒருவனுக்கு ஒற்று என்பதும், புகழ் அமைந்த நீதி நூலென்பதும் ஆகிய இவ்விரண்டும் இரண்டு கண்களாகத் தெளியப்படுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனில்? அரசன் ஒருவனது கண் எல்லாவிடங்களிலுஞ் சென்று விஷயங்களை அறிதற்குக் கூடாமையாய் உள்ளதாதலால் இவ்வொற்று என்னும் உற்றதைக் கூறும் ஏவலாளரே அவ்விடங்களிலெல்லாம் சென்று அங்கு நடக்கும் விஷ





யங்களை எல்லாம் அறிந்து தெரிவிக்கின்றார்களாதலால், அவ்விதம் ஒற்று அரசனுக்கு ஊனக்கண் போன்று உள்ளது என்றும், அவ்விதம் நிகழ்ந்தவற்றை ஒற்றர் சொல்லக்கேட்ட அரசன் தன் உணர்வு செல்லக்கூடாத காரியங்களை எல்லாம் நூலின் வழியே சென்று தீர்மானித்துக் கொள்வதால் அதனை ஞானக்கண் போன்று கொள்ளவேண்டும் என்றும் கூறியதாயிற்று. ஆதலால், ஒற்றினது சிறப்பை அரசனுக்கு உள்ள ஊனக்கண்ணிற்கு மேற்பட்ட தகுதியை உடைய ஓர் ஊனக்கண்ணாகவும், உணர்வு செல்லாத இடங்களை எல்லாம் முடித்துக் காட்டுகின்ற நூலினை ஞானக்கண்ணாகவும் இதனால் கண்டோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஒற்றினது சிறப்பு இதுவென்று அறிந்தோம். இனி ஒற்றரை அரசன் வைத்துக்கொள்வது இன்றியமையாதது போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

582. எல்லார்க்கு மெல்லா நிகழ்பவை யெஞ்ஞான்றும்

வல்லறிதல் வேந்தன் றொழில்.

(பரி.) இ-ள். எல்லார்க்கும் நிகழ்பவை எல்லாம் எஞ்ஞான்றும் வல் அறிதல் = எல்லார்கண்ணும் நிகழ்வனவெல்லாவற்றையும் நாடோறும் ஒற்றான் விரைந்தறிதல்—வேந்தன் தொழில் = அரசனுக்குரிய தொழில். எ-று.

'எல்லார்க்கும்' என்றது மூன்று திறத்தாரையும். நான்காவது ஏழாவதன் பொருட்கண் வந்தது. 'நிகழ்வனவெல்லாம், என்றது நல்லவுந்தீயவுமாய சொற்களையுஞ் செயல்களையும். அவை நிகழ்ந்தபொழுதே அவற்றிற்குத் தக்க அளியாதல் தெறலாதல் செய்யவேண்டுதலின் 'வல்லறிதல்' என்றும், அவ்விருதொழிற்கும் அறிதல் காரணமாகலின் அதனையே உபசார வழக்கால் 'தொழில்' என்றும் கூறினார். ஒற்றானென்பது அதிகாரத்தான் வந்தது. இதனால் ஒற்றினது பயன் கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—பகைவர், நொதுமலர், நட்பினராகிய மூவரிடத்தும் உண்டாகின்ற விஷயங்களை எல்லாம் தினந்தோறும் அரசன் ஒற்றினால் அதிசீக்கிரமாகத் தெரிந்துகொள்வது அவனுக்குக் கூறிய தொழில் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தன் நாட்டில் நிகழும் நல்லவும் தீயவுமாகிய சொற்களைத் தெரிந்துகொள்



ளுதலும், செயல்களைத் தெரிந்துகொள்ளுதலும் அரசனுக்குக் கடமையாயின், அவை உண்டான பொழுதே நல்ல விஷயங்களுக்கு வேண்டுவனவாகிய அருளைச் செலுத்தி அத்தகுதியுடையோரைக் காத்தலும், அதுவன்றித் தீய விஷயங்களுக்குத் தண்டித்தலைச் செய்து அத்தீயவர்களை அடக்கலும் அரசனது செங்கோன்மையாகிய தொழில் ஆதலால், அரசனாகன் செல்லாத இடங்களிலெல்லாம் தாமே சென்று பார்த்து உள்ளவை உணர்த்தும் ஒற்றரை அரசனுடைய கண் என்பதில் யாதும் ஐயமில்லையாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் ஒற்றினால் நடந்தவற்றை அறிந்து கொள்ளக்கூடாத அரசனுக்கு எவ்வித பயன் உண்டாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

583 ஒற்றினா னொற்றிப் பொருடெரியா மன்னவன்

கொற்றங் கொளக்கிடந்த தில்.

(பரி.) இ-ள். ஒற்றினான் ஒற்றிப் பொருள் தெரியா மன்னவன்=ஒற்றினானே எல்லார்கண்ணும் நிகழ்ந்தவற்றை ஒற்றுவித்து அவற்றானெய்தும் பயனையாராயாதவரசன்—கொற்றம் கொளக் கிடந்தது இல்=வென்றி யடையக்கிடந்தது வேறொரு நெறியில்லை. எ-று.

அந்நிகழ்ச்சியையும் பயனும் அறியாது பகைக்கெளியனாதல் பிறிதிற்றீராமையின், 'கொற்றங்கொளக்கிடந்ததில்' என்றார். இதற்குக் கொளக் கிடந்ததொரு வென்றியில்லையென்றுரைப்பினுமமையும். இதனால் அத்தொழில் செய்யாதவழி வருங்குற்றம் கூறப்பட்டது. (௩)

விளக்கம் :—ஒற்றர்களைக்கொண்டு மேற்கூறிய மூவராகிய எல்லாரிடத்தும் உண்டாகின்ற நன்மை, தீமைகளை அறியாத அரசன் ஒருவனுக்கு வெற்றியை அடையக்கூடிய வேறு ஒரு வழியும் இல்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? எதனையும் இடங்கள் தோறும் சென்று பிறர் அறியாமல் கண்டும், கேட்டும், நன்மை தீமைகளைச் சொல்லுகின்ற ஒற்றரைக்கொண்டு அரசன் தெரிந்து கொள்ளாது, அவனது பகைவர் அவனைக் கெடுக்க யோசிக்கினும், அதற்கு வேண்டிய சூழ்ச்சிகளை எல்லாம் வந்து சொல்லுதற்குத் தக்கோர் இல்லாமையால் பகைவர்களுக்கு எளியவனாகி அவர்களை வெல்வதற்கு இல்லாமல் அவர்களால் வெல்லப்பட்டுக்



குற்றமடைவான் என்று கண்டோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அரசன் ஒற்றரைக் கொண்டு தன் தொழிலாகிய அரசு உரிமையை நடத்தாததால் வரும் குற்றம் இது வென்று அறிந்தோம். இனி மூன்று திறத்தவர்களுள் எவரெவரை எவ்வெவ் விதம் ஆராய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

584. வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங்
கனைவரையு மாராய்வ தொற்று.

(பரி.) இ-ள். தம் வினை செய்வார் சுற்றம் வேண்டாதார் என்ற அனைவரையும் ஆராய்வது=தன்காரியஞ் செய்வார், சுற்றத்தார், பகைவரென்று சொல்லப்பட்ட அனைவரையும் சொற்செயல்களா லாராய்வானே—ஒற்று= ஒற்றனாவான். எ-று.

தம்மென்றது அரசனொடுபடுத்தி. அவனுக்குக் காரியஞ்செய்வார் செய்வனவும், சுற்றத்தார் தன்னிடத்தும் நாட்டிடத்துஞ் செய்வனவும், பகைவர் தன்னொற்றமாராய்தலும் மேற்றேறப்படுதலும் முன்னிட்டுத் தன்னிடத்துச் செய்வனவுமறிந்து, அவற்றிற்கேற்றன செய்யவேண்டுதலின், இம்மூவகையாரையும் எஞ்சாமலாராயவேண்டுமென்பார், 'அனைவரையுமாராய்வ தொற்று' என்றார். (௪)

விளக்கம்:—ஒற்றனென்று சொல்லப்படுவோன் அரசனுக்கு உரியவாகிய அரசனது காரியங்களைச் செய்பவரையும், அவனது சுற்றத்தவரையும், அவனது பகைவர்களையும் ஆகிய இவர்களை எல்லாம் அவரவர் கூறும் சொற்களாலும், செயல்களாலும் எக்காலத்தும் சிறிதும் குறையாது ஆராய்பவனாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசனுக்குவேண்டுவனவற்றைச்செய்யும் காரியஸ்தர்களும், தன் சுற்றத்தவராகவே இருந்துகொண்டு தனக்கும் நாட்டிற்கும் நன்மை தீமைகளைச் செய்யும் சுற்றத்தவரையும், அரசனது சமயம் அறிந்து அவனுக்குச் செய்யக்கூடிய தீமைகளை முன்னமே ஆராய்ந்து செய்யும் பகைவர்களையும் ஒற்றனானவன் ஆராய்ந்து சொல்லாவிடின், அவ்வொற்றனால் யாதும் பயனில்லையாய் போம். ஆதலால், அவற்றை எல்லாம் ஆராய்ந்து சொல்வதே ஒற்றனது தொழிலென அறிகிறோம் என்றனர். அதுகேட்ட



மாணாக்கர், "ஒற்றனானவன் எவ்வித வன்மையோடு இருத்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

585. கடாஅ வுருவொடு கண்ணஞ்சா தியாண்டு
முகாஅமை வல்லதே யொற்று.

(பரி.) இ-ள். கடா உருவொடு=ஒற்றப்பட்டார் கண்டால் ஐயுறாத வடிவோடு பொருந்தி—கண் அஞ்சாது=அவர் ஐயுற்றறியலுற்றுச் செயிர்த்து நோக்கிய அவர்கண்ணிற்கஞ்சாது நின்று—யாண்டும் உகாமை வல்லதே ஒற்று=நான்குபாயமுஞ் செய்தாலும் மனத்துக்கொண்டவற்றை உமிழாமை வல்லவனே ஒற்றனாவான், எ-று.

'கடா' என்பது கடுக்குமென்னும் பெயரெச்சத்தெதிர்மறை. ஐயுறாத வடிவாவன:—பார்ப்பார், வணிகர் முதலாயினோர் வடிவு. (௫)

விளக்கம்:—எவன் ஒருவன் ஒற்றப்பட்டவர் தன்னைக்கண்ட காலத்தும் அவர்கள் சந்தேகியாவண்ணம் பார்ப்பனர் வணிகர் முதலியோரது வடிவைப்போல் மாறுவேடம் பூண்டு இருந்தும், ஓர்கால் அவ்வொற்றப்பட்டவர்கள் அம்மாறு வேடம் பூண்ட ஒற்றனைச் சந்தேகித்து இவனை இன்னானென்று அறிய முயற்சித்து உண்மை அறிந்து கொண்டு இவனைக் கோபித்துப் பார்க்க நேரின், அவ்விதம் பார்க்கின்ற அவர்கண்ணிற்குச் சிறிதும் பயப்படாது அவர் எதிரில் நின்றும் அவ்விதம் நின்ற காலத்தே அவ்வொற்றப்பட்டவர்கள் இவனது உண்மை அறியவேண்டி, சாமம், தானம், பேதம், தண்டங்களாகிய நான்கு உபாயங்களைச்செய்து இவனைத் துன்பப்படுத்திய காலத்தும் தான் இன்னானென்று அறிவியாதவனும், தான் எண்ணிவந்த எண்ணங்களைச் சொல்லாதவனும் இருக்கின்றானோ அவ்வித வல்லமையுடையவனே ஒற்றனென்று இத்திருக்குறள் கூறுகின்றது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒற்றனது தகுதி இவ்விதம் இருத்தல் வேண்டும் என்று அறிந்ததுடன் மாறுவேடம் பூண்கின்ற வகையவர்களாகிய பார்ப்பார், வணிகர் ஆகிய இவர்களது வடிவைக் கொள்ளுதல் எங்கும் செல்லுதற்குச் சுலபமான உபாயம் என்றும் இத்திருக்குறளால் அறிந்தோம். இவையன்றியும் ஒற்றன் எவ்வித



வடிவு தாங்குதல் நன்மையாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

586. துறந்தார் படிவத்த ராகி யிறந்தாராய்ந்
தென்செயினுஞ் சோர்வில தொற்று.

(பரி.) இ-ள். துறந்தார் படிவத்தர் ஆகி இறந்து ஆராய்ந்து=முற்றத் துறந்தாராயும் விரதவொழுக்கினராயும் உட்புகுதற்கரிய விடங்களெல்லாம் உட்புக்கு ஆராயவேண்டுவன வாராய்ந்தறிந்து—என் செயினும் சோர்வு இலது ஒற்று=ஆண்டையார் ஐயுற்றுப்பிடித்து எல்லாத்துன்பமுஞ்செய்து கேட்டாலும் தன்னை வெளிப்படுத்தாதவனே ஒற்றனாவான். எ-று.

விரதவொழுக்கம்=தீர்த்தயாத்திரை முதலாயின. செயினுமென்பது அறவோரென்று செய்யாரின்மை விளக்கி நின்றது. மேல் நால்வகையுபாயத்தினுஞ் சோர்வின்மை சொல்லிவைத்து ஈண்டுத் தண்டத்தைப் பிரித்துக் கூறியது அதனது பொறுத்தற்கருமைச்சிறப்பு நோக்கி. இதனுட் படிவமென்றதனை வேடமாக்கித் துறந்தார் வேடத்தாராகி யென்றுரைப்பாருமுளர். (௬)

விளக்கம் :—முற்றத்துறந்த முனிவராயும், விரத ஒழுக்கத்தை மேற்கொண்ட தவசிகளாயும் மாறுவேடம்பூண்டு, மற்றவர்கள் உட்புகுதற்குக்கூடாத இடங்களிலெல்லாம் புகுந்து, தான் ஆராயச் சென்ற காரியங்களையெல்லாம் நன்றாக ஆராய்ந்து அறிந்து, அவ்விதம் ஆராயுங்கால் எவரேனும் சந்தேகப்பட்டுத் தன்னைப் பிடித்துக்கொண்டு உண்மை அறியவேண்டி எவ்வித துன்பங்களைச் செய்தாலும் தான்கொண்ட எண்ணத்தைச் சொல்லாதும், தன்னை இன்னுனென்று வெளிப்படுத்தாதும் நிற்கின்ற வல்லமையுடையவனே ஒற்றனாவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒற்றனுவான் மேற்கூறிய பார்ப்பனர், வணிகர் ஆகிய இருதிறத்தவரும் செல்லக்கூடாத இடங்களிலும் செல்லக்கூடிய துறவி வடிவத்தையும், தீர்த்தயாத்திரைமுதலியன மேற்கொண்ட விரதிகளது வடிவத்தையும் கொண்டு செல்வானுயின், பிறர் சந்தேகிப்பதற்கு இடமாகாமல் இருக்கும் ஆதலால், அவ்வித வடிவத்தைப் பூண்டு செல்வது ஒற்றனுக்கு உரியதென்றும், அவ்விதம் செல்வதால்

சந்தேகமான து சிந்தித்தில் உண்டாகாதென்றும், சந்தேகம் உண்டாயினும் வேடத்தின்பொலிவால் அவனைப் பிறர் கண்டியாசென்றும், அவ்விதம் அழ்வலியால் இவனுக்கு என்காலதாயிய பொறுக்கமுடியாத தண்டத்தைச் செய்யினும் அப்போதும் தன்னை வெளிப்படுத்தாதவனாக இருத்தல் வேண்டும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்டமாணுக்கர், "ஒற்றன் கொள்ள வேண்டிய சிறந்த மாறுவேடத்தினையும், அவனது கலங்கா நிலைமையின் தன்மையையும் அறிந்தோம். இனி அவ்வித வேடம் பூண்டு ஆராயச் சென்ற ஒற்றன் சென்ற இடத்தே எதை எவ்விதம் செய்தல் வேண்டும் என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

587. மறைந்தவை கேட்கவற் றாகி யறிந்தவை
 யையப்பா டில்லதே யொற்று.

(பரி.) இ-ள். மறைந்தவை கேட்க வற்று ஆகி = ஒற்றப்பட்டார் மறையச்செய்த செயல்களை அவர்க்குள்ளாயினாரால் கேட்க வல்லனும்—அறிந்தவை ஐயப்பாடு இல்லதே ஒற்று = கேட்டறிந்த செயல்களிற் பின் ஐயப்படாது துணியவல்லவனே ஒற்றனாவான். எ-று.

மறைந்தவை சொல்லுவாரையறிந்து, அவரையிராமற்சென்றெட்டித் தாமே சொல்லும்வகை அதற்கேற்ற சொல்லாக செயலாக முன்னே வினைந்து, அத்தொடர்பாற் கேட்குங்காலும் உறுதார்போன்று நின்று கேட்க வேண்டுதலிற் 'கேட்கவற்றாகி' என்றும், கேட்டறிந்தவற்றைத் தானே யுற்றுவந்து சொல்லின் அரசனும் அவற்றிற்கேற்ற வினை செய்யலாகாமையின் 'ஐயப்பாடில்லதே' என்றும் கூறினர். இவை நான்கு பாட்டானும் ஒற்றின திலக்கணம் கூறப்பட்டது. (எ)

விளக்கம் :—ஒற்றப்பட்டவர்கள் மறைவாகச் செய்கின்ற காரியங்களை அவரோடு சேர்ந்து உள்ளவர்களால் கேட்டு அறியக் கூடியவல்லமை யுடையவனும் அவ்விதம் கேட்டறிந்த செயல்களில் தான் கேட்டதே சரியென்று சந்தேகியாது பின் துணியவல்லவனே ஒற்றனென்று சொல்லப்படுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மறைவாக நடந்த விஷயங்களைத் தெரிந்து சொல்

விக்கொள்பவர்களோடு அவர் தன்னைச்சிறிதும் சந்தேகியாவிதமாக



அவரோடு கூடியிருந்து நடந்தவிஷயங்களை அவர்களே சொல்லும்படி அதற்குத் தகுந்த சொற்களைச் சொல்லியும் செயல்களைச் செய்தும் நிற்பதுடன், அவ்விதம் அவர் சொல்லுங்கால் அதில் தனக்கு ஒரு விருப்புமில்லாதவன்போல் கேட்டலும், அவ்விதம் கேட்டு, தெரிந்துகொண்ட விஷயங்களைத்தான் சிறிதும் சந்தேகமில்லாமல் உண்மையை உணர்ந்து கொண்டோம் என்று துணிந்து அரசனுக்கு அறிவிக்கும் காலத்தும் அவன் நன்கு உணர்ந்துகொள்ளும்படி விஷயங்களை உணர்த்துதலும் ஆகிய வல்லமைகளையுடையவனும் ஒற்றனிருத்தல்வேண்டும் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒற்றனது தொழில் இதுவென்று அறிந்தோம். அரசனானவன் ஓர் ஒற்றன்கூறிய விஷயங்களைக்கேட்டு அவையே மெய்யென்று துணிந்து அவற்றிற்கேற்ற செயல்களைச் செய்துவிடுதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

588. ஒற்றொற்றித் தந்த பொருளையு மற்றுமோ
ரொற்றினா லொற்றிக் கொளல்.

(பரி.) இ-ள். ஒற்ற ஒற்றித் தந்தபொருளையும்=ஓரொற்றன் ஒற்றி வந்தறிவித்தகாரியந் தன்னையும்—மற்றும் ஓரொற்றினால் ஒற்றிக்கொளல்= பிறனோரொற்றனானும் ஒற்றுவித்து ஒப்புமை கண்டுகொள்க. எ-று.

ஒற்றப்பட்டாரோடொத்துநின்று மாறுபடக்கூறலும் கூடுமாகலின், ஒருவன்மாற்றந் தேறப்படாதென்பதாம். (௮)

விளக்கம்:—ஒற்றன் ஒருவன் வல்லமையோடு ஒற்றிவந்து அறிவித்த காரியங்களை வேறு ஒரு ஒற்றனைக்கொண்டு அறிந்து வரும்படிச் செய்து, பிறகு, இரண்டும் ஒப்பாக உள்ளனவோ என்று காணுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில்? ஒற்றனானவன் கேள்விப்பட்ட விஷயங்கள் ஓர்கால்

உண்மையல்லாது இருத்தலும் கூடுமாதலால், அரசனானவன் வேறொரு ஒற்றனையும் விடுத்து அவ்விஷயத்தையே ஆராய்ந்து வரும்படிச் செய்து அவன் வந்து சொல்லும் சொற்கள் முன் கூறிய ஒற்றனது சொற்களோடு ஒத்து இருக்குமாயின், அப் போது ஒற்றிவந்தது உண்மை என்று கொள்ளுதல் வேண்டும்



என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ் விதம் இருவர் சொல் கேட்ட அரசன் தான் செய்யவேண்டுவன வற்றைச் செய்து விடுதல் கூடுமோ? அன்றி இன்னும் ஆராய்தல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

589 ஒற்றொற் றுணராமை யாள்க வுடன்மூவர்
சொற்றொக்க தேறப் படும்.

(பரி.) இ-ள். ஒற்று ஒற்று உணராமை ஆள்க = ஒற்றனையாளு மிடத்து ஒருவனை யொருவனறியாமலாள்க;—உடன் மூவர் சொல் தொக்க தேறப்படும் = அங்ஙனமாண்ட வொற்றர்மூவரை ஒருபொருண்மேல் வேறு வேறு விட்டால் அம்மூவர் சொல்லும் பயனொத்தனவாயின், அது மெய் யென்று தெளியப்படும். எ-று.

ஆளியென்பது வருவிக்கப்பட்டது. ஒருவனை யொருவனறியிற் றம் முளியைந்து ஒப்பக்கூறுவாராகலின் 'உணராமையாள்க' என்றும், மூவர்க்கு செஞ்சொற்றலைப்படுதலும் பட்டால் நீடுநிற்றலுங் கூடாமையின் 'தேறப் படும்' என்றுங் கூறினர். இதனனே அஃதொத்திலவாயிற் பின்னுமாராய்க வென்பதூஉம் பெற்றாம். (௯)

விளக்கம்:—அரசனானவன் ஒற்றனைக்கொண்டு விஷயங்களைத் தெரிந்துகொள்ளுகின்ற காலத்து ஒருவன் மற்ற ஒருவனைச்சேர்ந்து தெரிந்து கொள்ளாவண்ணம் ஆளுதல் வேண்டுமென்றும், அவ் விதம் ஆளும் காலத்து ஒரே காரியத்தின்மீது மூவரைத் தனித்தனி யாக விட்டு அவர் ஆராய்ந்துவந்து சொல்லிய சொற்களைக் கேட்டு அவை ஒத்திருக்குமாயின் அது உண்மையென்று அறிந்து கொள் ளுதல் வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெ னின்? ஒருவரை ஒருவர் அறிவாராயின் அவர் ஒன்றுசேர்ந்து

தம்மைப்பார்க்கின்படி உண்மையை ஆராயாமலே சொல்லிக்கொள் ளுதல் கூடுமென்றும், அன்றியும் இவ்விதம் ஒருவரை ஒருவன் அறிந்து கொள்ளுதலினும் இருவராக இல்லாது மூவராக இருக் கின் மூவரும் நெஞ்சு ஒற்றுமைப் படுதல் கூடாதாகையாலும். அவ்விதம் ஒற்றுமைப்பட்டு ஒரே விதமாகச் சொல்லப் புகுந்தாலும் அச்சூழ்ச்சி வெளிவந்துவிடும் ஆதலாலும், மூவரைவிட்டு ஆராய்ந் தலே அரசனுக்கு ஒற்றை ஆளுதல் என்னும் சிறப்புக்கொண்டுகிற்





கும் என்று அறிந்தோம் என்றனர். அதை கேட்ட மாணுக்கர், "இவ் விதம் ஒற்றர்கள் முயற்சிகொண்டு அரசனுக்கு உரியனவற்றைச் சொல்லும் காலத்து உண்மை சொன்ன ஒற்றர்களுக்கு அரசன் எவ்வித நன்மைகளைச் செய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

590. சிறப்பறிய வொற்றின்கட் செய்யற்க செய்யிற்
புறப்படுத்தா னாகு மறை.

(பரி.) இ-ள். ஒற்றின்கண் சிறப்பு அறியச் செய்யற்க=மறைந்தவை யறிந்து கூறிய ஒற்றின்கட் செய்யுஞ்சிறப்பினை அரசன் பிறரறியச் செய்யா தொழிக;—செய்யின் மறை புறப்படுத்தான் ஆகும்=செய்தானாயின் தன் னகத்தடக்கப்படும் மறையைத் தானே புறத்திட்டானாம். எ-று.

மறையாவது:—அவனொற்றுமையாதலும், அவன் கூறியதுமாம். சிறப் புப் பெற்றவன் யாவனென்றும் இது பெறுதற்குக் காரணம் யாதென் றும் வினவுவாரும் இறப்பாரும் அயலாராகலின், 'புறப்படுத்தானாகும்' என்றார். இவை மூன்று பாட்டானும் ஒற்றரை யாளுமாறும், அவரானி கழ்ந்தனவறியுமாறும், அறிந்தாற் சிறப்புச் செய்யுமாறுங் கூறப்பட்டன. (௰)

விளக்கம்:—மேற்கூறிய வண்ணம் மறைந்திருந்து அறிய வேண்டுவனவற்றை அறிந்து உண்மை கூறிய ஒற்றனுக்கு அரச னானவன் பிறர் அறியாமல் சிறப்பாகிய வரிசைகளைக் கொடுத்தல் வேண்டுமென்றும், அவ்வாறு செய்யாது பிறர் அறியும்படி வெரு

மதிகளைக் கொடுப்பானாயின் தன் மனத்தில் வைத்துக்கொண்டு சாதிக்கவேண்டிய ரகசியமாகிய காரியங்களைத் தானே யாவர்க்கும் வெளிப்படுத்தி விட்டதுபோலாகும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவனைத் தனக்கு மறைந்து கேட்கும் தூதனென்னும் ஒற்றனாகக் கொண்டு அவன் ஒற்றிக்கேட்டு வந்து சொல்லிய விஷயங்களுக்காக அரசனானவன் பலர் அறியப் பரிசு கொடுப்பானாயின், அதனைப் பிறர் பார்க்கும் காலத்து, 'எதனால் இப்பரிசினை இவன் அரசனிடத்துப் பெற்றான்; இப்பரிசினைப் பெறுவதற்கு இவன் அரசனிடத்து எவ்வித தொழில்பூண்டு இருந்தான்' என்று ஆராய்ப்புகுந்து உண்மை இதுவென்று உணர்வாராயின் அரசன் மறைவாகச் செய்ய எண்ணிய காரியமானது முடியாது. ஆதலால்



தன்னுடைய ரகசியத்தைத் தானே வெளிப்படுத்தினவனாய் எடுத்த காரியத்தையும் செய்வதற்கு இல்லாமற்போய் விடுவான். ஆதலால் அரசன் ஒற்றனுக்குப் பரிசு அளிக்கும் காலத்து ரகசியமாகக் கொடுத்தல் வேண்டும் என்று அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்வதிகாரத்தால் அரசன் ஒற்றரை ஆளும் விதமும், அவர் கூறியவைவற்றை அறிந்த வண்ணமே அவர்க்குச் சிறப்பாகிய வெகுமதிகளைச் செய்யும் விதமும் இவையென்று அறிந்தோம். இனி அவ்விதம் ஒற்றரால் மறைவாகிய விஷயங்களை அறிந்து கொண்ட அரசன் அதன் பிறகு செய்யவேண்டுவது எது என்று கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 60. அதிகாரம்.

## ஊக்கமுடைமை.

---

(பரி.) அஃதாவது மனம் மெலிதலின்றி வினைசெய்தற்கட் கிளர்ச்சியுடைத்தாதல். ஒற்றான் நிகழ்ந்தனவறிந்து அவற்றிற்கேற்ற வினைசெய்

வனுக்கு இஃதின்றியமையாமையின், ஒற்றாடலின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது மனம் சோர்வடையாது ஓர் தொழிலைச் செய்யுமிடத்துக் கிளர்ச்சி கொண்டுசெய்து நிகழ்ந்த காரியங்களை ஒற்றால் அறிந்துகொண்ட அரசன் ஒருவனுக்கு இவ்வித ஊக்கமுடைமையென்பது இருத்தல்வேண்டுமாதலால் ஒற்றாடல் என்னும் அதிகாரத்துக்குப் பிறகு இது வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "வினைசெய்கின்ற அரசனுக்கு ஊக்கமுடைமை என்பது ஒன்று வேண்டுமோ? அது இருக்குமாயின் அவ்வரசனுக்கு எவ்வித பயன் உண்டாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

591. உடைய ரெனப்படுவ தூக்கமஃ தில்லா
ருடைய துடையரோ மற்று.

(பரி.) இ-ள். உடையர் எனப்படுவது ஊக்கம்=ஒருவரை உடையரென்று சொல்லச் சிறந்தது ஊக்கம்;—அஃது இல்லார் மற்று உடையது



உடையரோ=அவ்வூக்கமில்லாதார் வேறுடையதானாலும்உடையராவரோ, ஆகார். எ-று.

வேறுடையரென்றது முன்னெய்தியின்ற பொருளை. உம்மை விகாரத்தாற்றொக்கது. காக்குமாற்றலிலராகலின், அதுவுமிழப்ப ரென்பதாம். (க)

விளக்கம்:—ஒருவரை உடையவர் என்று சொல்லச் சிறப்பாக நிற்பது ஊக்கமுடைமை யென்றும், அவ்வித ஊக்கமில்லாதார் வேறு எதை உடையவராக இருந்தாலும் உடையவர் ஆகார் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனில்? ஊக்கமுடையவரே எல்லாச் செல்வங்களையும் அடையக்கூடியவரென்றும், ஊக்கமில்லாதார் ஒரு பொருளையும் தாமே தேடுவதற்கு இல்லாது இதற்கு முன்னர் தம் முன்னோர் தேடித் தனக்கென்று வைத்த பொருளையும் காக்கும் வல்லமை இல்லாதாராய் இழப்ப

றென்றும் இதனால் அறியலாயிற்று. ஆதலால், ஊக்கமுடையவரே உடையர் என்று உலகத்தாரால் மதிக்கப்படுவர் என்று அறிக்தோ மென்றனர். அது கேட்ட மாணாக்கர், "பெரும் பொருளுடையான் ஒருவனுக்கும் ஊக்கம் வேண்டுமோ? பொருளில்லாதார் அன்றோ ஊக்கம் கொண்டு பொருள்தேடி உடையரென்னும் பெயரைப் பெறுதல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

592. உள்ள முடைமை யுடைமை பொருளுடைமை
நில்லாது நீங்கி விடும்.

(பரி.) இ-ள். உள்ளம் உடைமை உடைமை=ஊக்கமுடைமையே ஒருவனுக்கு நிலைநின்ற உடைமையாவது;—பொருள் உடைமை நில்லாது நீங்கிவிடும்=மற்றைப்பொருளுடைமை நிலையில்லாது நீங்கிப்போம். எ-று.

உள்ளம்-ஆகுபெயர். ஊக்கம் உள்ளத்துப் பண்பாகலின், அதற்கு நிலைபெற்றதும், பொருள் உடம்பினும் வேறாய் அழிதன்மாலைத்தாகலின் அதற்கு நிலை நில்லாமையுங் கூறினார். கூறவே, அஃது உடைமை யன்றென்பது பெறப்பட்டது. (உ)

விளக்கம் :—ஒருவனுக்கு நிலையாக நின்ற உடைமையாவது ஊக்கமுடைமையே என்றும், அவ்வித ஊக்கமில்லாது இருக்கும்



ஒருவனிடத்தே பொருள் உடைமையானது நிலையாக நில்லாது நீங்கிப்போய்விடும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஊக்கமில்லாத ஒருவனுக்கு அவன் தானே சம்பாதிக்கும் வல்லமை யில்லாமலிருப்பதுடன் அவனது மூதாதையரால் தேடி வைத்த பொருளையும் காப்பதற்கு அறியாது இழப்பன் என்றும், மேலும் பொருளாவது நிலையற்றதாய் அழிந்துபோகும் தன்மையது ஆதலால் அதை நம்பி ஒருவன் ஊக்கமில்லாது இருத்தல் கூடாதென்றும், பொருளில்லாவிடினும் இயற்கையாக உண்டாகின்ற தன்னில் வேறு அல்லாததாகிய ஊக்கமுடைமை என்பது மாத்திரம் இருக்குமாயின் நிலையுள்ள பொருளைத் தேடுதல் கூடும் என்றும் காண்கின்றோம் என்றனர். அதுகேட்டமாணாக்கர், "ஊக்கமுடையான் தன் கைப்பொருளை இழப்பதில்லையோ?" என்னலும்,

ஆசிரியர் கூறுவாராயினர்.

593. ஆக்க மிழந்தேமென் றல்லாவா ரூக்க
மொருவந்தங் கைத்துடை யார்.

(பரி.) இ-ள். ஆக்கம் இழந்தேம் என்று அல்லாவார் = இழந்தாராயினும் யாம் கைப்பொருளையிழந்தேமென்றலமரார்—ஒருவந்தம் ஊக்கம் கைத்து உடையார் = நிலைபெற்ற ஊக்கத்தைக் கைப்பொருளாக வுடையார் எ-று.

ஆக்கம்—ஆகுபெயர். ஒருவந்தமாயவூக்கமென்க. கைத்து = கையகத்தாயபொருள்; "கைத்துண்டாம் போழ்தே கரவா தறஞ் செய்ம்மின்" என்றார் பிறரும். அல்லாவாமைக்கேது வருகின்ற பாட்டாற் கூறுப. (௩)

விளக்கம்:—நிலையாக உள்ளதாகிய ஊக்கமென்பதனைத் தமக்குக் கைப்பொருளாக உடையவர்கள் தம் கையிலுள்ள பொருளை ஒருக்கால் இழந்தாராயினும் 'யாம் கையிலுள்ள பொருளை இழந்தோம்' என்று துன்பப்படார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் இயற்கையாக அமைந்து உள்ளதும், நிலை பெற்று நிற்பதும், தன் உடம்பினின்று வேறுபடாததும் ஆகிய ஊக்கமுடைமை என்பது மாத்திரம் ஒருவனுக்கு உள்ளதாயின் நிலையற்றதாய்த் தன்னின் வேறானதாய் உள்ள கைப்பொருளை ஓர்கால் இழப்பானாயின் அதற்காகச் சிறிதும் வருந்தானென்றும், ஏனெனின்?



இழந்த பொருளைத் தன்னுடைய ஊக்கமுடைமையால் சம்பாதித்துக்கொள்ளும் துணிவு இருப்பதினாலேயே என்றும் அறியப்படுகின்றது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஆயின், ஊக்கமுடையவர்க்குப் பொருள் ஒன்று சேருவது நிச்சயம்போலும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

594. ஆக்க மதர்வினாய்ச் செல்லு மசைவிலா
வூக்க முடையா னுழை.

(பரி.) இ-ள். அசைவு இலா ஊக்கம் உடையானுழை = அசைவில்லாத ஊக்கத்தையுடையான்மாட்டு—ஆக்கம் அதர் வினாய்ச் செல்லும் = பொருள் தானே வழிவினாவிக்கொண்டு செல்லும். எ-று.

அசைவின்மை=இடுக்கண் முதலியவற்றாற் றளராமை. வழிவினவிச் சென்று சார்வார்போலத் தானே சென்று சாருமென்பார், 'அதர்வினாய்ச் செல்லும்' என்றார். எய்துகின்ற பொருளினும் அதற்குக் காரணமாய ஊக்கஞ் சிறந்ததென்பது இவை நான்கு பாட்டானுங் கூறப்பட்டது. (௪)

விளக்கம்:—அசைவில்லாத ஊக்கமுடைய ஒருவனிடத்துப் பொருளானது அவன் இருக்குமிடம் தேடிப்போய்ச் சேரும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது எங்ஙனமெனின்? எவ்வளவு துன்பம் வரினும் அவற்றிற்கு எல்லாம் தளர்ச்சி அடையாது எடுத்த காரியத்தையே முடிக்க எண்ணி இரவு பகலாக உழைக்கின்றவன் எவனோ அவனுடைய வீட்டினைச் செல்வத்துக்கு அதிதேவதையாய் இருக்கின்ற திருமகளானவள் வழிவினவிச் சென்று அவனுடைய வீட்டிலேயே போய்ச் சேருவாள். ஆதலால் ஊக்கமுடையானுக்குப் பொருள்சேருவது நிச்சயமென்றும், இதற்கு முன்னிருந்த பொருள் ஊக்கம் கொண்டவனுக்கு அவனது ஊக்கத்திற்குமேல் சிறப்புடையது ஆகாதென்றும் அறிந்தோம் என்றனர். அன்றியும் இதனை "மெய்வருத்தம் பாரார் பசி நோக்கார் கண்டுஞ்சார், எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்— செவ்வி, அருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார், கருமமே கண்ணாயினார்" என்னும் நீதி நெறி விளக்கச் செய்யுளாலும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஊக்கமுடையான் ஒரு-



வனுக்கு எவ்வித முயற்சியும் உண்டுபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

596. வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
முள்ளத் தனைய துயர்வு.

(பரி.) இ-ள். வெள்ளத்து அனைய மலர் நீட்டம்=நின்ற நீரினளவின வாம் நீர்ப்பூக்களின் றாளினது நீளங்கள்;—மாந்தர்தம் உள்ளத்து அனையது

உயர்வு=அதுபோல் மக்கடம்மூக்கத்தனையினதாம் அவருயர்ச்சி. எ-று.

மலர்—ஆகுபெயர். நீர் மிக்கதுணையும் மலர்த்தாள் நீளுமென்பது பட, 'வெள்ளத்தனைய' என்றார். இவ்வுவமையாற்றலான் ஊக்கமிக்கதுணையும் மக்களுயர்வரென்பது பெறப்பட்டது. உயர்தல்=பொருள் படைகளான் மிகுதல். (௫)

விளக்கம்:—நீர்ப்பூக்களின் தாள்களுடைய நீளங்களானவை அவை தோன்றிய நீரின் அளவைப் பெற்று இருப்பதுபோல் மக்களுக்கும் அவருடைய ஊக்கமுடைமைக்குத் தக்க அளவாக உயர்ச்சி உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தாமரைமுதலிய நீர்ப்பூக்களுடைய கொடிகளின்தாள்கள் எவ்வளவு ஆழ்ந்த ஜலத்தில் அவை தோன்றினவோ அவ்வாழமுடைமைக்குத் தக்க அளவாக தாள்களென்னும் அத்தாமரைத் தண்டுகளும் நீண்டிருக்குமென்றும் அவ்விதமே ஊக்கமுடையவன் எவ்வளவு அதிகமாக ஊக்கங்கொண்டு முயல்கின்றானோ அவ்வளவு அதிகமாக உலகத்தில் தான் அடையக் கூடிய பொருள், படை, முதலிய செல்வங்களையும் அவ்வற்றாலாகிய புகழையும் அடைவானென்றும் கண்டோம் என்றனர். அதனை, "நீரளவே யாகுமாம் நீராம்பல், தான் கற்ற நூலளவே யாகுமாம் நுண்ணறிவு, மேலைத் தவத்தளவே யாகுமாம் தான்பெற்ற செல்வம், குலத்தளவே யாகுமாம் குணம்." என்னும் மூதுரைச் செய்யுளாலும் அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "புகழுடையான் ஒருவனுக்கு ஊக்கமுடைமை என்பது கை கூடுதல் கூடும், ஏனையோர் அவ் வூக்கமுடைமையை முயல்வது தகுதியாகுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



596 உள்ளுவ தெல்லா முயர்வுள்ளல் மற்றது
தள்ளினுந் தள்ளாமை நீர்த்து.

(பரி.) இ-ள். உள்ளுவது எல்லாம் உயர்வு உள்ளல்=அரசராயினார் கருதுவதெல்லாம் தம்முயர்ச்சியையே கருதுக;—அது தள்ளினும் தள்ளாமை நீர்த்து=அவ்வுயர்ச்சி பால்வகையாற் கூடிற்றில்லையாயினும், அக்கருத்துத் தள்ளாமை நீர்மையுடைத்து. எ-று.

உம்மை தள்ளாமை பெரும்பான்மையாதல் விளக்கிற்று. தள்ளிய வழியுந் தளராண்மையிற் றவறின்றி நல்லோரால் பழிக்கப்படாமையின், தள்ளாவியற்கைத் தென்பதாம். மேல் 'உள்ளத்தனைய துயர்வு' என்றதனையே வற்புறுத்தியவாறு. (௬)

விளக்கம்:—அரசாளவர்கள் எக்காலத்தும் தாம் எண்ணு கின்ற எண்ணமெல்லாம் தாம் உயர்வை அடையும் படியாகவே எண்ணுதல் வேண்டுமென்றும், அவ்வித எண்ணத்தால் தாம் ஊழ் வலியால் உயர்வை அடையா விடினும் அவ்வெண்ணமானது உல கத்தாரால் இகழக்கூடாத பெருமையுடையதாகவே இருக்கும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் எவரும் தாம் பல வித செல்வங்களால் மேம்பட்டுப் புகழை அடையவேண்டுமென்று எண்ணிப் பலகாலம் முயற்சிப்பாராயின் அம்முயற்சி கைகூடா விடி னும் அதைக்கண்ட உலகத்தவர் இவ்வரசன் இவனுக்குக் கைகூடாத எண்ணங்களை அவாவி இவ்வித தகுதியைச் செய்தனன். ஆதலால் இத்துணைப் பெரியதோர் பேரவல் இவனுக்குக் கூடாது என்று கூறுமென்றும் அவனுடைய ஊக்கமுடைமையைப் புகழ்ந்தே பேசுவ ரென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ் விதம் ஊக்கமுடையான் ஒருவன் ஓர்கால் ஊழ்வலியால் ஊக்க முடைமையைக்கொண்டு எண்ணிய எண்ணம் கைகூடாமையைப் பற்றி வருந்துவனோ? அல்லது வருந்தாமலிருப்பனோ?" என்ன லும், ஆசிரியர் கூறலாராயினர்.

597. சிதைவிடத் தொல்கா ருரவோர் புதையம்பிற்
பட்டுப்பா டூன்றுங் களிறு.

(பரி.) இ-ள். களிறு புதை அம்பின் பட்டுப் பாடு ஊன்றும்=களிறு புதையாகிய அம்பாற் புண்பட்டவிடத்துந் தளராது தன்பெருமையை



நிலைநிறுத்தும்;—உரவோர் சிதைவிடத்து ஒல்கார்=அதுபோல ஊக்க முடையார் தாங்கருதிய உயர்ச்சிக்குச் சிதைவு வந்த விடத்துந் தளராது தம் பெருமையை நிலைநிறுத்துவர். எ-று.

புதை=அம்புக்கட்டு : பன்மை கூறியவாறு. பட்டாலென்பது பட்டெனத் திரிந்துநின்றது. ஒல்காமை களிற்றுடனும், பாடூன்றுதல் உரவோருடனும், சென்றியைந்தன. தன்னிலைக்கழிவு துன்னியவழி முடிப்பரென்பதாம். இவை மூன்று பாட்டானும் ஊக்கமுடையாரது உயர்ச்சி கூறப்பட்டது. (எ)

விளக்கம் :—யானை ஒன்று யுத்தகளத்தில் தன்மீது வந்து பாய்கின்ற கூட்டமாகிய பாணங்களால் புண்பட்ட காலத்தும் அப்புண்ணிற்காகச் சிறிதும் தளர்ச்சி அடையாது தன்னுடைய பெருமையை நிலைநிறுத்தி யுத்தகளத்தில் நிற்பதுபோல், ஊக்கமுடையவரும் தாம் எண்ணிய எண்ணம் முடியாமல் அழிவு வந்தகாலத்தும் அதற்காக ஊக்கம் குறைந்து தளர்ச்சியை அடையாது தம் பெருமையையே நிலை நாட்டுவார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், யானையானது யுத்தகளத்துத் தன் பாகன் சொல்லிய அளவே திரிகின்ற காலத்துப் பகைவர்களால் எறியப்பட்ட பல அம்புகள் வந்து தன்னுடைய தேகத்தில் படிந்து அவற்றால் பல புண்களை அடையுமாயின் அப்புண்களால் உண்டாகின்ற வருத்தத்தைச் சிறிதும் கவனியாது தன்மீது ஏறியுள்ள தலைவனுக்கு வெற்றியை உண்டுபண்ணும்படி அசையாது நிற்பது போல், புகழ் ஒன்றையே பொருளாகக் கருதுகின்ற ஒருவனும் தான் கொண்ட எண்ணம் முடியாவிடினும் அதற்காகத் தளர்ந்து தன் ஊக்கத்தை விட்டுவிடாது தன் பெருமையையே நிலை நாட்டுவான் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் ஊக்கமுடையார் உலகத்து வளமுடையோர் என்று அழைக்கப் படுவர் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

598. உள்ள மிலாதவ ரெய்தா ருலகத்து
வள்ளிய மென்னுஞ் செருக்கு.

(பரி.) இ-ள். உள்ளம் இலாதவர் = ஊக்கமில்லாத அரசர்—உலகத்து வள்ளியம் என்னுஞ் செருக்கு எய்தார் = இவ்வுலகத்தாருள் யாம் வண்மையுடையேமென்று தம்மைத் தாமதித்தலைப் பெறார். எ-று.





ஊக்கமில்லையாகவே, முயற்சி, பொருள், கொடை, செருக்கு இவை

முறையே இல்லையாகலின், 'செருக்கெய்தார்' என்றார். கொடைவென்றி பிறவ வின்பம் தமக்கல்லது பிறர்க்குப் புலனாகாமையின் தன்மையாற் கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—ஊக்கமில்லாத அரசர்கள் இவ்வுலகத்து உள்ளவர்களில் 'யாம் வளமுடையோம்' என்று தம்மைத்தாமே எண்ணி மகிழ்வை அடையமாட்டார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஒருவனுக்கு ஊக்க மில்லையாயின் முயற்சி, பொருள், கொடை, மதிப்பு ஆகிய இவைகள்முறையே இல்லாமற் போகுமென்றும், அதனால் பிறர் நன்கு மதித்தற்கு, இல்லாமற் போகுமென்றும் கண்டோம். ஆதலால், ஊக்கமுடைமையே எல்லாச் செல்வங்களுக்கும் காரணமாக உள்ளது என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் ஊக்கமுடைய அரசன் சிற்றரசனாக இருந்து இவனினும் மிக்கவரசர் ஊக்கமுடையர் அல்லராயின் அவர் முன் இவனது ஊக்கத்தால் ஏது நிகழும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

599. பரியது கூர்ங்கோட்ட தாயினும் யானை
வெரூஉம் புலிதாக் குறின்

(பரி.) இ-ள். பரியது கூர்ங்கோட்டது ஆயினும்=எல்லா விலங்கினுந் தான் பெருடம்பினது அதுவேயுமன்றிக் கூரியகோட்டையு முடையதாயினும்,—யானை புலி தாக்குறின் வெரூஉம்— யானை தன்னைப் புலியெதிர்ப் படின் அதற்கஞ்சும், எ-று.

பெருடம்பான் வலிமிகுதி கூறப்பட்டது. புலியின்மிக்க மெய்வலியுங் கருவிச் சிறப்புமுடைத்தாயினும் யானை ஊக்கமின்மையான் அஃதுடைய அதற்கஞ்சுமென்று. இது, பகைவரின் மிக்க மெய்வலியுங் கருவிச் சிறப்பு முடையராயினும் அரசர் ஊக்கமிலராயின் அஃதுடையவரசர்க்கஞ்சுவ ரென்பது தோன்றநின்றமையின், பிறிது மொழிதல். (கூ)

விளக்கம்:—யானை ஒன்று எல்லா மிருகங்களினும் தான் பெரிய உடம்பினையும் கூர்மையாகிய கொம்பினையும் உடையதாக இருந்தும் தன்னை ஒரு புலி தாக்குமாயின் அப்புலிக்கு அஞ்சும்

என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, யானையானது மற்ற மிருகங்களைக் காட்டிலும் பெரியதோர் உடம்பினை உடையதும் அதுவன்றியும் தன்னை எதிர்த்தாரைத் தனக்கு உள்ள கூர்மையாகிய கொம்புகளால் குத்திக்கொல்லக்கூடியதாயும் இருந்தும் ஊக்கமில்லாமையால், ஊக்கமுடைய புலி ஒன்று உருவத்தால் சிறியதும், கொல்லும் கொம்புகளும் இல்லாதிருந்தும் அதனைக் கண்டகாலத்தே அஞ்சிப் பயப்படுவதுபோல், ஊக்கமில்லாத அரசன் ஒருவன்தான் ஊக்கமுடைய சிற்றரசரைக் காட்டிலும் மிக்க தேகவலிமையும், படை, செல்வம், முதலாகிய ஏனைய வலிமையும் பெற்றிருப்பானாயினும் சிற்றரசரைக் காணுகின்ற காலத்து மிகுதியும் அஞ்சுவான்என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "ஊக்கமில்லாதவன் மக்களாய்ப் பிறத்தலில் யாதும் பயனில்லைபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

600. உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.

(பரி.) இ-ள். ஒருவற்கு உரம் உள்ள வெறுக்கை = ஒருவற்குத் திண்ணிய அறிவாவது ஊக்கமிகுதி;—அஃது இல்லார் மரம் = அவ்வூக்கமிகுதியில்லாதார் மக்களாகார், மரங்களாவார்;—மக்களாதலே வேறு = சாதிமரங்களோடு இம்மரங்களிடை வேற்றுமைவடிவு மக்கள்வடிவே, பிறிதில்லை, எ-று.

உரமென்பது அறிவாதல் "உரனென்னுந் தோட்டியான்"* என்பதனானுமறிக. 'மரம்' என்பது, சாதியொருமை. மக்கட்குள்ள நல்லறிவும் காரிய முயற்சியுமின்மைபற்றி 'மரம்' என்றும், மரத்திற்குள்ள பயன்பாடின்மை பற்றி 'மக்களாதலே வேறு' என்றும் கூறினார். பயன் = பழமுதலியவும், தேவர் கோட்டம், இல்லம், தேர், நாவாய்கட்கு உறுப்பாதலும், முதலிய. இவை மூன்று பாட்டானும் ஊக்கமில்லாதாரிழிபு கூறப்பட்டது.

விளக்கம்:—ஒருவனுக்கு அசையாத அறிவாவது ஊக்கம் மிகுதியுடையனாதல் என்றும், அவ்வூக்கத்தை மிகுதியாக இல்லாதவர் மக்கட் பிறப்பினர் ஆகாரென்றும், உருவத்தால் மக்கட் பிறப்பின

ளாகக் காணப்படினும் மரங்களாகவே கருதப்படுவரென்றும், அல்லாது மரங்களாகக் கருதப்படினும் மரங்களுக்கு உடைய குணங்களை அடைவதற்கு இல்லை ஆதலால் இவர் அம்மரங்களு மாகார் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஊக்கமுடையவர்க்கு உள்ள நல்லறிவும் காரியத்தில் முயற்சியும் இல்லாமை பற்றி மரம் என்று கூறினர். ஆயினும் மரத்தால் உண்டாகும் பயனாகிய பழத்தை அடைதலும் மரத்தை வெட்டி உபயோகிக்கின்ற காலத்தே, கோயில், வீடு, தேர், படகு முதலிய பயனுடையவைகளைக் கட்டுவதற்குப் பொருப்பாக உள்ளதுபோல் இல்லாமையால் ஊக்கமில்லாத மனிதனை மரமென்று கூறாது மரங்களில் தாழ்ந்த உருவமுடையனென்று கருதுதல் வேண்டும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித ஊக்கமுடையார்க்கு சோம்புதலே கூடாதுபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 61. அதிகாரம்.

## மடியின்மை.

---

(பரி.) அஃதாவது கருதியன செய்யுங்காற் சோம்புதலில்லாமை. ஊக்கமுடையார்க்கு ஓரோவழிக் குணவயத்தான் மடி வருதனோக்கி, இஃது ஊக்கமுடைமையின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது ஒருவன் ஒன்றை எண்ணியவிடத்து எண்ணிய காரியத்தைச் செய்யுங்கால் சோம்புதல் இல்லாது செய்தல். ஊக்கமுடையவராய் உள்ளார்க்கு ஒருகால் முக்குண வசத்தால் சோம்பல் வருதல் நோக்கி அவ்விதமல்லாது இருத்தல் வேண்டுமென்று அறிவிப்பதற்கு இவ்வதிகாரம் ஊக்கமுடைமை

என்பதற்குப் பிறகு வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இச்சோம்பலானது எதனால் வருகின்றது? அது வரின் எதுவாகும்?" என்று கேட்டதும், ஆசிரியர் கூறலாயினர்.



601. குடியென்னுங் குன்றா விளக்க மடியென்னு
மாசூர மாய்ந்து கெடும்.

(பரி.) இ-ள். குடி என்னும் குன்று விளக்கம்=தான் பிறந்த குடியாகிய நந்தாவிளக்கு—மடி என்னும் மாசு ஊர மாய்ந்து கெடும்=ஒருவன் மடியாகிய இருளூடாக நந்திப்போம், எ-று.

உலகநடையுள்ளளவும் இடையறாது தன்னுட்பிறந்தாரை விளக்குதலிற் குடியைக் 'குன்றாவிளக்கம்' என்றும், தாமதகுணத்தான் வருதலின் மடியை 'மாசு' என்றும், அஃது வெளியிருள்போலாது அவ்விளக்கத்தைத் தானடர்த்து மாய்க்கும் வலியுடைமையின் 'மாசூரமாய்ந்துகெடும்' என்றும் கூறினார். கெடுதல்=பெயர் வழக்குமில்லையாதல். (க)

விளக்கம்:—ஒருவன் தான் பிறந்த குடியாகிய கெடாத விளக்கானது அவனது மடியாகிய இருளானது அதிகரிக்குமாயின் அதனால் கெட்டுப்போம் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனின்? ஒருவனது குடியானது உலகம் உள்ள வரையில் அவனுடைய நற்கருமங்களால் அவன் சந்ததியிற் பிறந்தார் எல்லோரையும் ஒளிபெற்று நிற்கச் செய்கின்றது ஆதலால், ஏனைய விளக்குகள்போல் சிறுபொழுதிருப்பதாக இல்லாது ஒரு ஊழிக்காலம் வரையில் ஒருவன் நற்குடி இருப்பது கெடாத விளக்குப்போல் என்றும், 'அவ்வித விளக்காகும் ஊக்கம் கொண்டுக் குடியை உயர்த்துவேன்' என்று இருந்த ஒருவனுக்குச் சோம்பலாகிய இருள் உண்டாயின் அவ்விருள், பெரியதோர் விளக்காகி நெடும்போதிருக்கும் குடிச்சிறப்பை மாய்த்துவிடும் என்றும் அறிந்தோம். ஏனெனில்? இச்சோம்புதலாகிய மாசானது தாமத

குணத்தால் வருவது ஒன்று ஆதலால், அக்குணத்தின் காரியமாகிய வினைமுயல், மைதுனம் முதலியவைகளும் ஒருவனுக்கு உண்டாகி அவனையும் அவன் குடிப்பெயரையும் விளங்கவொட்டாது அவன் காலத்திலேயே கெடுத்துவிடும் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் தன் குடியை உயர்த்த வேண்டுவோன் ஒருவன் மடி யென்னும் இம்மாசினை எதுவாகக் கருதுதல்வேண்டும்?" என்ன அம், ஆசிரியர் கூறலாராயினர்.



602. மடியை மடியா வொழுகல் குடியைக்
குடியாக வேண்டு பவர்.

(பரி.) இ-ள். குடியைக் குடியாக வேண்டுபவர்=தாம் பிறந்த குடியை மென்மேலுயரும் நற்குடியாக வேண்டுவோர்—மடியை மடியா ஒழுகல்= மடியை மடியாகவே கருதி முயற்சியோடொழுக. எ-று.

முயற்சியோடென்பது அவாய்நிலையான் வந்தது. நெருப்பிற் கொடியது பிறிதின்மைபற்றி நெருப்பை நெருப்பாகவே கருதகவென்றாற்போல மடியிற்றீயது பிறிதின்மைபற்றிப் பின்னும் அப்பெயர்தன்னானே கூறி ஞர். அன்னைக்கருதி யதனைக் கடிந்து முயன்றொழுகவே தாமுயர்வர்; உய ரவே, குடியுயருமென்பார், 'குடியைக் குடியாக வேண்டுபவர்' என்றார். அல்லது மொழுகாக்காற் குடியழியுமென்பது கருத்து. இனி 'மடியா' என்பதனை வினையெச்சமாக்கிக் கெடுத்தொழுகவென்று உரைப்பாரு முளர். (உ)

விளக்கம் :—தாம் புகுந்த குடியினை மேலும்மேலும் உயர்ந்த நற்குடியென்று பலரும் சொல்லவேண்டுபவர் சோம்பலைச் சோம்ப லென்றே எண்ணி முயற்சியுடன் ஒழுகுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இவ்வாசிரியர் 'மடியை மடியாக ஒழுகுதல் வேண்டும்' என்பதால், ஒருவனுக்கு நெருப்பைக் காட்டி நெருப்பாகவே எண்ணுதல்வேண்டும் என்று கூறுகின்ற காலத்தே 'இது நெருப்பு; இதன் தன்மை இதனை விட்டு விலகாது; இத னிடத்தே சென்றால் சென்ற பொருள்கள் அழிந்து விடும்' என்று புத்திபோதிப்பது போல், சோம்புதலென்பதைச் சோம்புதலாகவே

கருதுதல்வேண்டும் என்றும், அவ்வாறு கருதாவிடின் அச்சோம்புதலானது நாள்தோறும் சிறிது சிறிதாக அதிகரித்து ஞானத்தால் உண்டாகும் ஒளியாகும் ஊக்கமுடைமையைக் குறைத்துக் குடியைக் கெடச்செய்யுமாதலால், ஒருவன் தான் பிறந்த குடியைப் பலரும் அறிய உயரச்செய்ய வேண்டுமாயின் இம்மடியைக் கெடுத்தல் வேண்டுமென்றும் கூறுகின்றனர் என்றுஅறிகிறோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், “இவ்விதம் சோம்புதலையுடையான் ஒருவனது குடியின் உயர்ச்சி அவன் உள்ள காலத்தேயே கெடுமோ? அல்லது எப்போது கெடும்?” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



603. மடிமடிக் கொண்டொழுகும் பேதை பிறந்த
குடிமடியுந் தன்னினு முந்து.

(பரி.) இ-ள். மடி மடிக்கொண்டு ஒழுகும் பேதை பிறந்த குடி= விடத்தகுவதாய மடியைத் தன்னுள்ளே கொண்டொழுகும் அறிவிலா தான் பிறந்த குடி—தன்னினும் முந்து மடியும்= அவன்றன்னினும் முந்துறவழியும். எ-று.

அழிவு தருவதனை அகத்தே கொண்டொழுகுதலிற் ‘பேதை’ என்றும், அவனும் புறந்தரப்படுவதாகலிற் ‘குடி தன்னினுமுந்துற வழியும்’ என்றுங் கூறினார். ஆக்கத்திற் பிற்படினும் அழிவின் முற்படுமென்பதாம். (௩)

விளக்கம்:—யாரும் விடவேண்டியதாகிய சோம்புதலென்பதைத் தன்னிடத்தேகொண்டு அதன்வழி ஒழுகுகின்ற அறிவில்லாத ஒருவன் பிறந்த குடியானது அவன் அழிவதற்கு முன்னமேயே அழிந்துவிடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனின்? அழிவு தரக்கூடியதா யிருக்கின்ற சோம்புதலை ஒருவன் மனத்தே கொண்டு நடக்க முயல்வானாயின், அவனுக்கு இயற்கையாக உள்ள அறிவும் கெட்டு அவனால் காக்கப்படவேண்டிய குடியையும் காப்பதற்கு இல்லாமற்போம். ஆதலால் அவ்வித குடியானது அவன் உள்ள காலத்தேயே வழங்குவார் ஒருவருமில்லாமல் கெட்டுப்போம் என்று அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், “சோம்புதல் உடையான் ஒருவனுக்கு அவன் குடிப்

பெயர்தான் கெடுமோ? அன்றி இன்னும் ஏதேனும் உண்டாகுமோ?'' என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

604. குடிமடிந்து குற்றம் பெருகு மடிமடிந்து
மாண்ட வுஞற்றி லவர்க்கு.

(பரி.) இ-ள். மடி மடிந்து மாண்ட உஞற்று இலவர்க்கு=மடியின் கண்ணே வீழ்தலால் திருந்திய முயற்சி யிலராயினார்க்கு—குடி மடிந்து குற்றம் பெருகும்=குடியும் மடிந்து குற்றமும் பல்கும். எ-று.

மடிந்தெனத் திரிந்துநின்ற வினையெச்சம் இலவென்னுங் குறிப்பு வினைப்பெயர் கொண்டது. குற்றங்கள் முன்னர்க் கூறுப. இவை நான்கு பாட்டானும் மடியின்தீமை கூறப்பட்டது. (௪)



விளக்கம்:—சோம்புதலையே தமக்கு ஒழுக்கமாகக்கொண்டு அதன் வழி நடக்கின்ற திருத்தமுடைய முயற்சி என்பது இல்லாதவர்க்கு அவரது குடியும் மடிந்து பல குற்றங்களும் வந்து சேரும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், சோம்பலானது செல்வத்தைக் கெடுத்துப் பெயரையும் கெடுக்கும் அதுவன்றியும் பல குற்றங்களையும் கொண்டுவந்துவிடும் என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், “எவ்வித குற்றங்களைக்கொண்டு வந்து சோம்புதல் விடும்?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

605. நெடுநீர் மறவி மடிதுயி னான்குங்
கெடுநீரார் காமக் கலன்.

(பரி.) இ-ள். மடி நெடுநீர் மறவி துயில் நான்கும்=மடியும் விரைந்து செய்வதனை நீட்டித்துச் செய்யுமியல்பும் மறப்பும் துயிலுமாகிய இந்நான்கும்—கெடும் நீரார் காமக் கலன்=இறக்குமியல்பினையுடையார் விரும்பி யேறும் மரக்கலம். எ-று.

முன்னிற்கற்பாலதாய மடி செய்யுளுக்கு இடைநின்றது. கெடுமை யாகிய காலப்பண்பு அதன்கணிகழ்வதாய செயன்மேனின்றது. காலநீட்டத்தையுடைய செயல்முதல் மூன்றும் தாமதகுணத்திற்றோன்றி உடனி

கழ்வனவாகலின், மடியோடு ஒருங்கெண்ணப்பட்டன. இறக்குமியல்பு= காலுவத்தல். இவை தன்புறத்தார்க்கு இன்புறுத்துவபோன்று காட்டி அவர் விரும்பிக் கொண்டவழித் துன்பத்திடை வீழ்த்தலின், காலுவத்தார்க்கு ஆக்கம் பயப்பதுபோன்றுகாட்டி அவர் விரும்பி யேறியவழிக் கடலிடை வீழ்க்கும் கலத்தினை யொக்குமென்னும் உவமைக்குறிப்புக் காமக்கலனென்னுஞ் சொல்லாற் பெறப்பட்டது. இதற்கு விரும்பிப் பூணுமாபரணமென்றுரைப்பாருமுளர். (௫)

விளக்கம் :—சோம்பலும், விரைவாகச் செய்வதனைத் தாழ்த்திச் செய்யும் இயல்பும், மறப்பும், தூக்கமும் ஆகிய இந்நான்கும் இறக்கவேண்டிய இயற்கையினையுடையார் ஆசைப்பட்டு ஏறும் கப்பல்போலுள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தாமதகுணத்தால் உண்டாவன சோம்பலும், மறப்பும், செய்ய வேண்டிய காரியங்களை விரைந்து செய்யாது தாழ்த்திச் செய்கின்ற இயல்பும், தூக்கமும் என்று அறிவதுடன் இவ்வித குற்றம்



களை உடையவர்கள் கெடுவது திண்ணமென்றும், அது மரக்கலமேறிப் பொருள் சம்பாதித்து இன்பம் அடைவோமென்று கடலிடைச் சென்று ஊழ்வலியால் அக்கடலிடத்தே மரக்கலத்தோடு அழிந்துபோகின்றவர்கள்போல் என்றும், கடலிடை இறக்க வேண்டிய ஊழுடையார் எவ்விதம் பின்வருவன நோக்காது கப்பலேறிக் கடலிடை இறக்கின்றார்களோ, அதுபோல் சோம்பல் முதலாகிய குற்றங்கள் தமக்கு இன்பம் தருவனவாகும் என்று எண்ணி அவற்றையே ஒழுக்கமாகக் கொண்டு ஒழுகுபவர், கடலிடைச் சென்று முழுகிய கப்பல் கரைசேராததுபோல் அவர்களும் முழுவதும் தம் ஒழுக்கத்தை நடத்திக் குடியை மேல் உயர்த்துவதற்கு இல்லாது நடுவில் அழிந்து போவர் என்றும் காண்கிறோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர் "இவ்விதம் மடியுடையார் எளியராயின் அவர்களுக்கு இவ்வித தீங்கு நேருதல் கூடும். "மன்னர் மன்னனாகிய ஒருவனுக்கும் இவ்விதம் உண்டாகுமோ ?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

606. படியுடையார் பற்றமைந்தக் கண்ணு மடியுடையார்

மாண்பய னெய்த லரிது.

(ப-ரை.) இ-ள். படி உடையார் பற்று அமைந்தக்கண்ணும் = நிலமுழுது மாண்டாரது செல்வம் தானே வந்தெய்திய விடத்தும்—மடி உடையார் மாண் பயன் எய்தல் அரிது = மடியுடையார் அதனான் மாண்ட பயனை எய்துதலில்லை எ-று.

உம்மை யெய்தாமை விளக்கின்றது. மாண்பயன் = பேரின்பம். அச் செல்வம் அழியாமற்காக்கும் முயற்சியின்மையின் அழியும், அழியவே, தன் துன்பநீங்காதென்பதாம். இதற்கு நிலமுழுதுமுடையவேந்தர் திணையாதல் கூடியவிடத்துமென் றுரைப்பாருமுளர். (௬)

விளக்கம்:—இப்பூவுலகப் பரப்பு முழுவதும் ஆண்ட சக்கர வர்த்தியினது செல்வமெல்லாம் தானே வந்து அடைந்த இடத்தும் சோம்பலுடையார் அச்செல்வத்தால் யாதொரு மாட்சிமைப் பட்ட பயனையும் அடைவதுகூடாது என்று இத்திருக்குறள் கூறு கின்றது. இதனால் செல்வத்தால் அடையக்கூடியது இம்மைப் புகழும், மறுமைப் போகமும் ஆதலால் அவ்வித செல்வத்தைச்

12



சோம்பலால், காக்கும் முயற்சி இல்லாது ஒருவன் இருப்பானுயின் அது அளப்பதற்கு அரிய பெரிய செல்வமாயினும் இருந்த இடம் அறியாமல் அழிந்து போகுமென்றும், ஊக்கமுடையார் வறிஞ ராயினும் செல்வத்திற்கு உரிய பயனை எய்துதல் கூடுமென்றும் அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணக்கர் "இவ்வித சோம்புதலுடையார் பிறரால் எவ்விதம் நடத்தப்படுவர்?" என் னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

607. இடிபுரிந் தெள்ளுஞ்சொற் கேட்பர் மடிபுரிந்து
மாண்ட வுஞற்றி லவர்.

(ப-ரை.) இ-ள். மடி புரிந்து மாண்ட உஞற்று இலவர் = மடியை விரும் புதலான் மாண்ட முயற்சி யில்லாதார்—இடி புரிந்து எள்ளும் சொற்கேட்

பர்=நச்சட்டார் முன் கழறுதலே மிகச்செய்து அதனாற் பயன் காணாமையிற் பின் இகழ்ந்து சொல்லுஞ் சொல்லைக் கேட்பர் ; எ-று.

இடியென்னும் முதனிலைத்தொழிற்பெயரான் ; நட்டாரென்பது பெற்றும். அவரிகழ்ச்சி சொல்லவே, பிறரிகழ்ச்சி சொல்லாமையே முடிந்தது. அவற்றிற்கெல்லாம் மாறுசொல்லு மாற்றலின்மையின். 'கேட்பர்' என்றார்.

விளக்கம் :—சோம்புதலை விரும்பி நல்லமுயற்சிகளைச் செய்யாதவர்கள் தம்முடைய நண்பர்கள் முன்னும் மிகப்பேசியகாலத்தும் அந்நண்பர் அவர் பேச்சுக்கு உவந்து காது கொடாமையால் அவர் பேசிய பேச்சுகளால் அடைய எண்ணிய பயனையும் அடையாது போவதுடன், தம் பின்னரும் அந் நட்பினர்களே அவர்களை இகழ்ந்து பேசக் குற்றத்தையும் அடைவர் ; என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனில்? ஒருவன் தன்னுடைய தோழரென்று அவரிடத்தே பல பேசியகாலத்தே இவன் தாமசகுணமுடையான் இவன் எடுக்கும் காரியத்தைச் சரிவர நடத்தான் என்று அறிந்த அந்த நண்பர் இவன் சொல்வதைக் கேளாதிருப்பதுடன், அவர்கள் இவனை இகழ்ந்து பேசுவதற்கும் பதில் சொல்வதற்கு இல்லாது அவர் சொல்லும் இகழ்ச்சிச் சொற்களையெல்லாம் கேட்டுக்கொண்டே இருக்க வேண்டும், என்று அறிகின்றோமென்றனர். அதுகேட்ட மாணாக்



கர், "சோம்புடையானை நட்பினரே இவ்விதம் பழிப்பர் என்னின் பகைவர் யாது செய்வர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

608. மடிமை குடிமைக்கட் டங்கிற்றன் னொன்னார்க்
கடிமை புகுத்தி விடும்.

(ப-ரை.) இ-ள். மடிமை குடிமைக்கண் தங்கின்=மடியினது தன்மை குடிமையுடையான் கண்ணே தங்குமாயின்,—தன் ஒன்னார்க்கு அடிமை புகுத்திவிடும்=அஃதவனைத் தன்பகைவர்க்கு அடியனாந்தன்மையை யடைவித்துவிடும் ; எ-று.

மடியினதுதன்மை=காரியக்கேடு. குடிமை=குடி செய்தற்றன்மை.

அஃது அதனையுடையவன்மேற்றுதல், 'தன்னொன்னார்க்கு' என்றத னான் அறிக. அடியனுர்தன்மை=தாழ்ந்து நின்றேவல்கேட்டல். இவை நான்குபாட்டானும் மடிமைக்குற்றங்கள் கூறப்பட்டன. (௮)

விளக்கம்:—சோம்புதலின் தன்மை குடிப்பிறந்தான் ஒருவனிடத்தே இருக்குமாயின் அச்சோம்புதல் அவனை அவன் பகைவர்க்கும் அடிமையாக்கிவிடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மேற்கூறிய வண்ணம் தன் நட்டாரால் இகழப்படுவது மாத்திரம் அல்லாமல் தன் பகைவர்க்கும் அடிமையாகி அவர் சொல்லிய ஏவல்கேட்டுப் பணிந்து நடப்பர் என்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இப்படி சோம்பல் ஒன்று இல்லாவிடில் எவ்வித நன்மையும் அடைதல் கூடும்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

609. குடியாண்மை யுள்வந்த குற்ற மொருவன்
மடியாண்மை மாற்றக் கெடும்.

(ப-ரை.) இ-ள். ஒருவன் மடி ஆண்மை மாற்ற=ஒருவன் தன்மடியாளுந் தன்மையை யொழிக்கவே,—குடி ஆண்மையுள் வந்தகுற்றம்கெடும்=அவன்குடியுள்ளும் ஆண்மையுள்ளும் வந்த குற்றங்கள்கெடும்; எ-று.

மடியாளுந்தன்மை=மடியுடைமைக்கேதுவாய தாமதகுணம். குடியாண்மை யென்பது உம்மைத்தொகை. அவற்றின்கண் வந்த குற்றமென்



றது மடியானன்றி முன்னே பிறகாரணங்களான் நிகழ்ந்தவற்றை. அவையும் மடியாண்மையை மாற்றி முயற்சியுடையனாக நீங்குமென்பதாம். (௯)

விளக்கம்:—ஒருவன் தனக்கு உள்ள சோம்புதலை ஒழித்து விடுவானாயின் அவன் உயர்ச்சி அடைவதுடன் அவனது குடியின் கண்ணும், ஆண்மையினிடத்தும் ஏதேனும் குற்றங்கள் உண்டாய் இருப்பினும் அவ்விதம் மற்றக் காரணங்களால் உண்டாகிய அவற்றையும் இந்தச் சோம்புதலில்லாத தன்மை என்னும் காரணமானது

நீங்கி நன்மையையே உண்டாக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் ஏனைய குற்றங்களையும் இச்சோம்புதலில்லாமை என்னும் குணமானது நீக்கி நன்மை பயக்கும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சோம்புதல் இல்லாதவனுக்குச் செல்வங்களெல்லாம் வருதல் கூடும்போலும்!" என்னலும் ஆசிரியர் கூறுவாராயினர்.

610. மடியிலா மன்னவ னெய்து மடியளந்தான்
றாஅய தெல்லா மொருங்கு.

(ப-ரை.) இ-ள். அடி அளந்தான் தாயது எல்லாம்=தன்னடியளவானே எல்லாவுலகையு மளந்த இறைவன் கடந்த பரப்பு முழுதையும்—மடி இலாமன்னவன் ஒருங்கு எய்தும்=மடியிலாதவரசன் முறையானன்றி ஒருங்கே யெய்தும்; எ-று.

அடியளந்தானென்றது வாளா பெயராய் நின்றது. தாவியதென்பது இடைக்குறைந்து நின்றது. எப்பொழுதும் வினையின்கண்ணே முயறலின், இடையீடின்றி யெய்துமென்பதாம். இவை யிரண்டு பாட்டானும் மடியிலாதான் எய்தும் பயன் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—சோம்புதலில்லாத அரசன் ஒருவன் காப்புக் கடவுளாகிய விஷ்ணுமூர்த்தியால் அளக்கப்பட்ட இடம் முழுவதையும் அடைவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் சோம்புதலில்லாது எக்காலத்தும் தன் தொழிலிலேயே கண்ணாயிருப்பவன் ஒருவன் அம்முயற்சி மிகுதியால் ஒன்றின்பின் ஒன்றாக ஏனைய அரசர்களாலும் ஆளப்படும் நாடுகளையும் தன்னுடையவாக்கித் தான் மன்னர் மன்னனாய் வாழ்வானென்பது உணர்ந்தோம்.



ஆதலால் மடியில்லாதான் எல்லாப் பொருள்களையும் அடைதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவனுக்கு மடியின்மை கூடாது என்று அறிந்தோம். ஆயின் மடியின்மை ஒன்றே போதுமோ, முயற்சி என்பது ஒன்று வேண்டாவோ? என்று அறிய

வும் விரும்புகின்றோம்" என்னறும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 62. அதிகாரம்.
## ஆள்வினையுடைமை.

---

(ப-ரி.) அஃதாவது இடைவிடாத மெய்ம்முயற்சி யுடையனுதல். அஃது ஆளும் வினையெனக் காரியத்தாற் கூறப்பட்டது. மடிகெடுத்தாலும் வினை முயற்சியானன்றி யாளப்படாமையின், இது மடியின்மையின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது இடைவிடாத மெய்முயற்சியுடையவனுய் இருத்தல். ஓர்கால் சோம்புதலைக் கெடுக்கினும் எடுத்த வினையை முயற்சியால் அல்லது செய்யப்படாமையால் இவ்வாள் வினையுடைமை மடியின்மைக்குப் பிறகு வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அது கேட்ட மாணக்கர், "முயற்சி என்பது ஒன்றும் வேண்டும்போலும்! அதனையும் அறிய அவாவுகின்றோம்" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

**611.** அருமை யுடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்.

(ப-ரி.) இ-ள். அருமை உடைத்து என்று அசாவாமை வேண்டும்= தஞ்சிறுமை நோக்கி நாம் இவ்வினை முடித்தலருமையுடைத்தென்று கருதித் தளராதொழிக;—பெருமை முயற்சி தரும்= அது முடித்தற்கேற்ற பெருமையைத் தமக்கு முயற்சியுண்டாக்கும்; எ-று.

சிறுமைநோக்கி யென்பது பெருமை தருமென்றதனுலும், வினை முடித்த லென்பது அதிகாரத்தாலும், வருவிக்கப்பட்டன. விடாதுமுயலத் தாம் பெரியராவர்; ஆகவே, அரியனவும் எளிதின் முடியுமென்பதாம். (க)

விளக்கம்:—ஒருவன் தன்னுடைய தகுதியின்மையினை நோக்கி இவ்வித பெரியதோர் தொழிலை முடித்தல் கூடாது என்று எண்ணி, எண்ணிய கருமத்தை விட்டுவிடுதல் கூடாதென்றும், அக்கருமம் முடித்தற்கு ஏற்ற பெரியதோர் தகுதியை முயற்சி யன்பது உண்டாக்குமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின் ஒருவன் செல்வம் முதலியவற்றால் சிறியவனாக இருக்கினும் விடாது முயலுகின்ற முயற்சியுடைமை என்பது மாத்திரம் அவனுக்கு இருக்குமாயின் அச்சிறுமை நீங்கிப் பெரியவன் ஆவானென்றும், அவ்விதம் பெரியவனாகவே அவன் எடுத்த அரியதோர் காரியமும் எளிதில் முடியும் என்றும் அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "எடுத்ததொழில் எவ்விதப்பட்டதாயினும் முயற்சியுடையார்க்குக் கைகூடும்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

612. வினைக்கண் வினைகெட லோம்பல் வினைக்குறை
தீர்ந்தாரிற் றீர்ந்தன் றுலகு.

(ப-ரை.) இ-ள். வினைக்குறை தீர்ந்தாரின் உலகு தீர்ந்தன்று = வினையாகிய குறையைச் செய்யாது விட்டாரை உலகம் விட்டது;—வினைக்கண் வினைகெடல் ஓம்பல் = ஆதலால், செய்யப்படும் வினைக்கட்ட விர்ந்திருத்தலை யொழிக; எ-து.

குறை = இன்றியமையாப்பொருள், அது "பயக்குறை யில்லைத்தாம் வாழுநாளே" என்பதனானுமறிக. இதற்கு வினைசெய்யவேண்டுங் குறையை நீக்கினரினீங்கிற்றென்றுரைப்பாருமுளர். (உ)

விளக்கம்:—தாம் எடுத்த வினையாகிய இன்றியமையாத பொருளைச் செய்யாது விட்டவரை இவ்வுலகம் விட்டுவிட்டது என்றும், அதனால் செய்யவேண்டும் வினைகளை விட்டுவிட்டு இருத்தல் கூடாது என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் வினை செய்யாது விட்டவர்களை உலகம் விட்டது என்றமையால் முயற்சி இல்லாதார்க்கு இவ்வுலகம் யாதொரு பயனையும் தாராதென்றும், முயற்சியுடையார்க்கு எல்லாச் செல்வங்களையும் கைகூடச் செய்யுமென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "முயற்சி

யுடையான் எடுத்த எவ்விதகாரியமும் முடியுமென்றும், அதனு



லாகிய பயன்களை அடைதல் கூடுமென்றும் மேற்கூறிய இரண்டு திருக்குறள்களால் அறிந்தோம். இன்னும் முயற்சியுடையானுக்கு எவ்வெவ்விதமாய செயல்கள் கைகூடும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

613. தாளாண்மை யென்னுந் தகைமைக்கட் டங்கிற்றே
வேளாண்மை யென்னுஞ் செருக்கு.

(ப-ரை.) இ-ள். தாளாண்மை என்னும் தகைமைக்கண் தங்கிற்று= முயற்சி யென்று சொல்லப்படுகின்ற உயர்ந்த குணத்தின்கண்ணே நிலை பெற்றது—வேளாண்மை என்னும் செருக்கு=எல்லார்க்கு முபகாரஞ் செய்தலென்னும் மேம்பாடு. எ-று.

பொருள் கைகூடுதலான் உபகரித்தற்குரியார் முயற்சியுடையா ரென்பார் அவ்வக்குணங்கண்மேல் வைத்தும், அது பிறர்மாட்டில்லை யென்பார் தங்கிற்றேயென்றும் கூறினர். இவை மூன்று பாட்டானும் முயற்சியது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

விளக்கம் :—ஒருவன் எல்லார்க்கும் உபகாரம் செய்தல் என்னும் சிறப்புடைமையானது முயற்சியுடைமை என்று சொல்லப்படுகின்ற உயர்ந்த குணத்தினிடத்தே நிலைபெற்றதாக உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது எங்ஙனமெனின் முயற்சியுடையார்க்கே பொருள் கைகூடுமென்றும்,பொருள் உடையார்க்கே எல்லார்க்கும் உபகாரம் செய்யமுடியுமென்றும், அவ்வித உபகாரம் செய்தல் என்பது மிகச் சிறப்புடையதாயினும் பொருளில்லார்க்கு முடியாதாகையால் முயற்சிகொண்டு பொருள் சம்பாதிப்பவரிடத்தேயே இக்கொடை யென்னும் வேளாண்மையானது நிலைத்து நிற்கும என்றுங் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவனுக்கு முயற்சி இல்லாவிடினும் பலர்க்கும் உபகாரியாயிருக்கக்கூடிய எண்ணமிருக்குமாயின் அவன் முதிர்ந்த எண்ணத்தால் என் உபகாரத்தைச் செய்தலாகாது?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

614. தாளாண்மை யில்லாதான் வேளாண்மை பேடிகை

வாளாண்மை போலக் கெடும்.

(ப-ரை.) இ-ள். தாளாண்மை இல்லாதான் வேளாண்மை=முயற்சியில் லாதவன் உபகாரியாந்தன்மை—பேடி கை வாள் ஆண்மை போலக்



கெடும்=படைகண்டாலஞ்சும்பேடி அதனிடைத் தன்கையில் வாளின் ஆளு தற்றன்மை போல இல்லையாம். எ-று.

ஆளென்பது முதனிலைத்தொழிற்பெயர். பேடி வாளைப் பணிகோடற் கருத்துடையனாயினும் அது தன்னச்சத்தான் முடியாதவாறு போல முயற்சி யில்லாதான் பலர்க்கு முபகரித்தற் கருத்துடையனாயினும் அது தன் வறுமையான் முடியாதென்பதாம். வாளாண்மை யென்பதற்கு வாளாற் செய்யுமாண்மை யென்றுரைப்பாருமுளர். இதனான் அஃதில்லாதானது குற்றங் கூறப்பட்டது. (௪)

விளக்கம்:—முயற்சி யில்லாத ஒருவன் பிறர்க்கு உபகாரியாயிருக்க விரும்பும் தன்மையானது, படையைக் கண்டவுடன் பயப்படுகின்ற பேடியானவன் அப்படை நடுவே தன் கையில் வாள் ஒன்றை வைத்துக்கொண்டு அவ்வாளாலாகிய பயனை அடைவதற்கு இல்லாதது போலாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் முயற்சி இல்லாதான் பலர்க்கும் உபகாரம் செய்தல்வேண்டும் என்னும் கருத்து உடையவனாக இருக்கினும், அவனது முயற்சியின்மையால் பொருள் வருவதற்கு வழியில்லாத வறுமையோடு கூடி நிற்கின்ற அவன், உபகாரியாயிருத்தல் முடியாதென்றும், அவனுக்கு உதித்த எண்ணமானது நன்மையுடையதாயினும் பேடி ஒருவன் கையில் வாளைக்கொடுத்துப் படைக்களத்திற்கு அனுப்பினால் அவன் தனக்குள்ள அச்சமிகுதியால் எவ்வாறு பயந்து வாளாலாகிய பயனை அடையாது ஓடிவந்து விடுவானோ அது போல் முயற்சி இல்லாதான் எண்ணிய நல்ல எண்ணமும் கைகூடாதுபோம் என்பதும் பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "முயற்சியுடையான் ஒருவன் தான் எடுத்த தொழிலின் மீதே கண்ணாயிருப்பானாயின் அக்காலத்து அவன் பிறர்க்கும் பயன் படுவான் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

615. இன்பம் விழையான் வினைவிழைவான் றன்கே
துன்பந் துடைத்தூன்றுந் தூண். [விர்

(ப-ரீ.) இ-ள். இன்பம் விழையான் வினை விழைவான்=தனக்கின் பத்தை விரும்பாது வினைமுடித்தலையே விரும்புவான்—தன்கேளிர் துன்பம் துடைத்து ஊன்றும் தூண்=தன் கேளிராகிய பாரத்தின் றன் பத்தினை நீக்கி அதனைத் தாங்குந் தூணும். எ-று.



இஃதேகதேசவுருவகம். ஊன்றுமென்றது அப்பொருட்டாதல் "மதலை யாய் மற்றதன் வீழூன்றி யாங்கு" என்பதனானுமறிக. சுற்றத்தார் கட்டா ரது வறுமையுந்தீர்த்து அவர்க்கேமஞ்செய்யு மாற்றலை யுடையனுமெனவே, தன்னைக் கூறவேண்டாவாயிற்று. காரியத்தை விழையாது காரணத்தை விழைவான் எல்லாப்பயனு மெய்து மென்றதனால், காரணத்தைவிழையாது காரியத்தை விழைவான் யாது மெய்தானென்பது பெற்றாம். இதனால் அஃதுடையானது தன்மை கூறப்பட்டது. (௫)

விளக்கம் :—தன் சுகத்தை விரும்பாதானும், எடுத்த காரி யத்தையே முடித்தலை விரும்புகின்றவனும் உள்ள ஒருவன் தன்னு டைய சுற்றத்தவர் பாரமென்னும் துன்பத்தினை நீக்கி அச்சுற்றத் தவரைத் தாங்குகின்ற தூண்போலிருப்பான் என்று இத்திருக் குறள் கூறுகின்றது. இவ்வாறு கூறியதால் எவன் ஒருவன் தான் எடுத்த காரியத்தை இடைவிடாது முயலுகின்ற காலத்தே அத னால் தனக்கு உண்டாகும் துன்பத்தைக் கருதாது அக்காரியத்தின் முடிவையே எதிர்பார்த்துச் செய்கின்றானோ அவ்வித தகுதி யுடை யான் தான் வறுமை அடையாது இருப்பதுடன் தன்னுடைய சுற் றத்தவர் கட்பினர் என்பவரது வறுமையும் தீர்ப்பானென்றும் அவ் விதம் அவர்களுடைய வறுமையைத் தீர்த்து, வறுமையால் உண்டா கும் துன்பத்தையும் நீக்குகின்றான் ஆதலால் அவர்களது குடும்ப பாரமாகிய சுமையைத் தாங்குகின்ற தூண்போல் இருக்கின்றான் என்றும் உவமித்துக் கூறினர் என்றும் அறிகின்றோம். இதனை,

"சிதலை தினப்பட்ட வால மரத்தை
மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்குக்
குதலைமை தந்தைக் கட்டோன் றிற்றான்

புதல்வன் மறைப்பக் கெடும்."

என நாலடியாரில் கூறிய தாளாண்மை என்பதனாலும் அறிதல்கூடும் என்றனர். அதுகேட்ட மாணக்கர் "முயற்சி இருக்கின் செல்வம் அடைவர் என்பது பொருந்தும். ஆயின் முயற்சி இல்லாதார் எற்றுக்கு வறுமை அடைதல்வேண்டும்" என்னலும்; ஆசிரியர் கூறலாயினர்.

32



616. முயற்சி திருவினை யாக்கு முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.

(பரி.) இ-ள். முயற்சி திருவினை ஆக்கும்=அரசர்மாட்டுளதாயமுயற்சி அவரது செல்வத்தினை வளர்க்கும்;—முயற்று இன்மை இன்மை புகுத்தி விடும்=அஃதில்லாமை வறுமையை படைவித்துவிடும். எ-று.

செல்வம் அறுவகையங்கங்கள். வறுமை அவற்றுள் வறியராதல். அதினை படைவிக்கவே, பகைவரானழிவரென்பது கருத்து. (சு)

விளக்கம்:—அரசர்களிடத்து உள்ளதாகிய முயற்சி யுடைமை யானது அவ்வரசர்களுடைய செல்வத்தை வளர்க்குமென்றும் அவ்வித முயற்சி இல்லாமை வறுமையைக் கொண்டுவந்து விட்டுவிடும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் அரசன் ஒருவன் தனக்கு உரிமையாகிய படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் ஆகிய ஆறுவித செல்வங்களையும் அடைய வேண்டுமாயின் முயற்சி யோடு இருத்தல் வேண்டுமென்றும், அல்லாவிடில் வறுமையை அடைந்து பகைவரால் அழிக்கப்படுவன் என்றும் அறிக்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "சோம்பலில்லாதவன் ஒருவ னுக்குச் செல்வம் நிலைத்தலையும், சோம்பலுடையானுக்குச் செல்வம் நில்லாமையையும் எவ்வித உவமையால் கூறுகின்றனர்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

617. மடியுளாண் மாமுகடி யென்ப மடியிலான்
றாளுளா டாமரையி னாள்.

(பரி.) இ-ள். மாமுகடி மடி உளாள் = கரியசேட்டை ஒருவன் மடியின் கண்ணே யுறையும்;—தாமரையினாள் மடி இலான் தாள் உளாள் என்ப = திருமகள் மடியிலாதானது முயற்சிக் கண்ணேயுறையுமென்று சொல்லுவர் அறிந்தோர். எ-று.

பாவத்தின் கருமை அதன்பயனுய முகடிமேலேற்றப்பட்டது. மடியும் முயற்சியுமுடையார்மாட்டு நிலைமை அவை தம்மேல் வைத்துக் கூறினர். இவையிரண்டுபாட்டானும் அவ்விருமைக்குமேது கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—கரிய முகமுடைய மூதேவியானவள் சோம்புதல் உள்ளானது மடியினிடத்தே தங்குமென்றும் சோம்புதல்



இல்லாதானது அடியின் கண்ணே திருமகளானவள் உறைவாளென்றும் அறிந்தோர் சொல்லுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் சோம்புதல் வருமானால் செல்வநாயகியாகிய திருமகள் நீங்கப் பெற்றும் முயற்சி வருமானால் திருமகள் நிலைத்தும் நிற்பாளென்று காண்கின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "சிலர் எத்துணை முயற்சிகளைச் செய்யினும் அவர்கள் முயற்சி கைகூடவில்லை. அது என்ன?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

618. பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந்
தாள்வினை யின்மை பழி.

(பரி.) இ-ள். பொறி இன்மை யார்க்கும் பழியன்று = பயனைத் தருவதாய விதியில்லாமை ஒருவற்கும் பழியாகாது;—அறிவு அறிந்து ஆள்வினை இன்மை பழி = அறியவேண்டுமவற்றையறிந்து வினை செய்யாமையே பழியாவது. எ-று.

அறியவேண்டுவன வலி முதலாயின. தெய்வமில்லையாவழி ஆள்வினையுடைமையாற் பயனில்லையென்பாரை நோக்கி, உலகம் பழவினைபற்றிப் பழியாது சண்டைக் குற்றமுடைமைபற்றியே பழிப்பதென்றார். ஆதலால் விடாது முயல்கவென்பது குறிப்பெச்சம். (அ)

விளக்கம்:—பயனைக் கொடுப்பதாகிய ஊழானது ஒருவனுக்கு இல்லாமையைப்பற்றி, அவனை யாரும் பழியார்களென்றும் அறியவேண்டுவனவற்றை அறிந்து, செய்யவேண்டிய தொழிலை ஒருவன்

செய்யாதிருப்பானாயின் அப்போது தான் அது பழிப்புக்கு இடமாகுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆகையால் ஒருவன் விடாது முயற்சியை செய்தல் வேண்டுமென்றும் அவ்விதம் முயற்சியைச் செய்யுங்கால் அவன் எடுத்த காரியம் முடியாவிடினும் பார்ப்பவர்கள் இவன் முயற்சியைச் சரியாகச் செய்தான், ஆயின் முடிய வேண்டிய ஊழ் இல்லாமையால் முடியாமற் போயிற்று என்று வருந்துவார்களே அன்றிப் பழிக்கமாட்டார்களென்றும், சோம்புதலுடைய ஒருவனையே அவன் முயற்சி இல்லாமையைப்பற்றிப் பழிப்பர் என்றும் பெற்றோம்; என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் ஊழ் இல்லாத ஒருவனுக்கு முயற்சி பயன்தாராது



என்பது அறிந்திருந்தும் எதற்கு முயற்சியைச் செய்வதுவேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

619. தெய்வத்தா னாகா தெனினு முயற்சிதன்
மெய்வருத்தக் கூலி தரும்.

(ப-ரை.) இ-ள். தெய்வத்தான் ஆகாது எனினும்=முயன்ற வினை பால்வகையாற் கருதிய பயனைத் தாராதாயினும்,—முயற்சி தன் மெய் வருத்தக் கூலிதரும்=முயற்சி தனக்கிடமாய உடம்பு வருந்திய வருத்தத்தின் கூலியளவு தரும், பாழாகாது; எ-று.

தெய்வத்தானுவழித் தன்னளவின் மிக்க பயனைத் தருமென்பது உம்மையாற் பெற்றாம். இருவழியும் பாழாகலின்மையின் தெய்வநோக்கி யிராது முயல்கவென்பது கருத்து. (௯)

விளக்கம் :—ஒருவன் முயற்சி செய்து செய்த கருமமானது ஊழ்வலியால் எண்ணிய பயனைக் கொடாதாயினும செய்த முயற்சியின் அளவானது அம்முயற்சியின் பொருட்டு உடம்பு வருந்திய வருத்தத்திற்குத் தக்க அளவேனும் ஏதாவது சிறுபயனைத் தருமேயன்றிப் பாழாகாது என்று இத்திருக்குறல் கூறுகின்றது. ஆதலால் தெய்வம் நோக்கிச் செய்கின்ற கருமம் ஊழ்வலி என்றும் அவ் ஊழின் வலியானது அநுகூலமாக இருக்குமானால் தான் எண்ணிய அளவிற்கு மேலாகிய பயனையே கொடுத்துவிடுமென்றும், அவ்விதம் அல்லாவிடின் முயற்சிக்குத் தக்க அளவாகச் சிறு பயனேனும்

அடைதல் கூடுமென்றும், இருவழியும் பாழ்படாமையால் ஊழிருக்கின் தெய்வம் கொடுக்கும் என்று தெய்வத்தையே நோக்கி இராமல் முயற்சி செய்தல் வேண்டும் என்றும் பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "எவனேனும் இவ்வூழினைத் தடுத்துத் தான் எண்ணிய பயனை அடைவதற்கு ஆகாதோ" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

620. ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்
தாழா துஞற்று பவர்.

(ப-ரை.) இ-ள். ஊழையும் உப்பக்கம் காண்பர்=பயனை விலக்குவதாய ஊழினையும் புறக்காண்பர்—உலைவு இன்றித் தாழாது உஞற்றுபவர்=அவ் விலக்கிற் கிளையாது வினையைத் தாழ்வற முயல்வார்; எ-று.



தாழ்வறுதல்=சூழ்ச்சியினும், வலிமுதலியவறிதலினும், செயலினும் குற்றமறுதல். ஊழ் ஒருகாலாக இருகாலாகவல்லது விலக்கலாகாமையிற் பலகால் முயல்வார் பயனெய்துவரென்பார், 'உப்பக்கங்காண்பர்' என்றார். தெய்வத்தானிழுக்கண் வரினும் முயற்சி விடற்பால தன்றென்பது இவை மூன்று பாட்டானுங் கூறப்பட்டது. (ய)

விளக்கம் :—ஒருவன் எண்ணிய பயனை விலக்குகின்ற ஊழ் காண்பதையும், அதன்விலக்கிற்குச் சிறிதும் இளையாது தான் எடுத்த கருமத்தைச் சூழ்ச்சியினாலும், இடமறிதல், காலமறிதல், வலி அறிதல் ஆகிய செயற்களைச் செய்கின்ற காலத்துக் குற்றமில்லாமல் செய்து முடிக்கவல்ல முயற்சியாலும், விலக்குதல் கூடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின் ஊழின் வலியானது தன் வழியாக வாராவிடில் ஒருவன் எடுத்த காரியத்தை விலக்குகின்ற காலத்தே ஒருமுறை, இருமுறை விலக்குமென்றும் அவ்வாறு விலக்குகின்ற காலத்தே பயன் எய்தாவிடினும் தான் எடுத்த முயற்சியை விடாது செய்வானாயின் அம்முயற்சியே ஊழாகி இவன் செய்யும் கருமம் முடிவதோடு எண்ணிய பயனையும்

அடைதல் கூடும் என்றும், ஆதலால் பலதரம் முயல்பவர் முயற்சி யானது முன்னிருந்த ஊழை விலக்கி ஆகூழாகச் செய்து பயனை அளித்து விடும் என்றும் பெற்றோம். அன்றியும் தெய்வத்தால், எடுத்த காரியத்திற்கு இடுக்கண் வந்தாலும் எடுத்த முயற்சியை விடுதல் கூடாது என்று முடிந்தது முடித்தலாகக் கூறி முடித்தனர் என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "தெய்வத்தால் எடுத்த காரியம் நிறைவேறு விடினும் முயற்சி செய்து அதனால் வரும் துன்பங்களுக்குப் பொறுத்துக் கொள்ளல் வேண்டும் என்று அறிகின்றோம். இவ்விதம் துன்பம் வந்த காலத்து வருந்தாது இருப்பதற்கு உபாயம் எது?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

---



## 63. அதிகாரம்.

## இடுக்கணழியாமை.

---

(பரி.) அஃதாவது வினையின்கண் முயல்வான், தெய்வத்தானும், பொருளின்மையானும், மெய்வருத்தத்தானும் தனக்கிடுக்கண் வந்தவழி, அதற்கு மனம் கலங்காமை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம் :—அதாவது ஒரு தொழிலின் கண்ணே முயற்சி செய்வான் தெய்வத்தாலாவது பொருளில்லாமையாலாவது உடம்பிறகு வரும் வருத்தத்தாலாவது தனக்குத் துன்பம் வருமானால் அத்துன்பத்திற்கு மனம் கலங்காதிருத்தல். முயற்சியுடையான் ஒருவனுக்கு இது வேண்டுமாதலால் இதனை இங்குக் கூறலாயினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் துன்பம் வருங்காலத்து மனங்கலங்காதிருத்தல் எவ்விதம்? அதற்கென்ன உபாயம் என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

621. இடுக்கண் வருங்கா னகுக வதனை
யடுத்தூர்வ தஃதொப்ப தில்.

(ப-ரி.) இ-ள். இடுக்கண் வருங்கால் நகுக = ஒருவன் வினையாற்றனக் கிடுக்கண் வருமிடத்து அதற்கழியாது உண்மகிழ்க;—அதனை அடுத்து ஊர்வது அஃது ஒப்பது இல் = அவ்விடுக்கணை மேன்மேலடரவல்லது அம்மகிழ்ச்சி போல்வது பிறிதில்லையாகலான்; எ-று.

வினை இனிது முடிக்குழி நிகழற்பாலதாய மகிழ்ச்சியை அதற்கிடையே இடுக்கண் வருவழிச் செய்யவே, அவன் அழிவின்றி மனவெழுச்சியான் அதனைத்தள்ளி அக்குறை முடிக்குமாற்றலுடையனுமாகலின், 'அதனை யடுத்தூர்வதஃதொப்பதில்' என்றார். (க)

விளக்கம்:—ஒருவன் தான் ஓர் காரியத்தைச் செய்யுமிடத்துத் தனக்குத் துன்பம் வருமாயின் அத்துன்பத்திற்கு வருந்தாது மனத்தில் மகிழ்ச்சியை அடைதல் வேண்டும். தனக்கு வந்த துன்பத்தைத் தன்னைச் சிறிதும் நெருங்க ஒட்டாது மேலும்மேலும் ஒழிக்க வல்லது அம்மகிழ்ச்சியைக் காட்டிலும் வேறொன்றில்லை என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் ஒருவன் தான் எடுத்த



காரியம் நன்றாக முடியுமாயின் அவன் அடைவது மகிழ்ச்சியாம். அம்மகிழ்ச்சியினையே இடையூறு வந்தகாலத்தும் கொள்வானாயின் தனக்கு வந்த துன்பத்தை ஒழித்து மேலும் மேலும் மனவெழுச்சியோடு கூடிய ஊக்கமுடையவனாய்த் தான் எடுத்த காரியத்தை விடாது முடித்து நிற்பன். ஆதலால் துன்பம் வருங்காலத்து வருந்துதல் ஆகாது என்று இதனால் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "ஏதோ, ஒன்று, இரண்டு துன்பங்கள் வருமாயின் காரியத்தைச் செய்பவன் கலங்காதிருத்தல்கூடும். அளவிறந்து வருமாயின் என் செய்வது" என்னலும் ஆசிரியர் கூறுவாராயினர்.

622. வெள்ளத் தனைய விடும்பை யறிவுடையா
னுள்ளத்தி னுள்ளக் கெடும்.

(ப-ரி.) இ-ள். வெள்ளத்து அனைய இடும்பை = வெள்ளம்போலக்

கரையிலவாய இடும்பைகளெல்லாம்,—அறிவுடையான் உள்ளத்தின் உள்ளக் கெடும்=அறிவுடையவன் தன்னுள்ளத்தான் ஒன்றனை நினைக்க, அத் துணையானே கெடும்; எ-று.

இடும்பையாவது உள்ளத்து ஓர்கோட்பாடேயன்றிப் பிறிதில்லையென்பதூஉம் அது மாறுபடக்கொள்ள நீங்குமென்பதூஉம் அறிதல்வேண்டுதலின், 'அறிவுடையான்' என்றும், அவ்வுபாயத்தன்மை தோன்ற 'உள்ளத்தினுள்ள' என்றுங் கூறினார். இவையிரண்டு பாட்டானும் ஊழினானாய இடுக்கணால் அழியாமைக்கு உபாயங் கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—பெருகுகின்ற வெள்ளம்போலக் கரையில்லாது வருகின்ற துன்பங்களை யெல்லாம் அறிவுடையான் ஒருவன் தன் மனத்தினிடத்தே அதனைத் துன்பமென்று எண்ணாது மகிழ்வானாயின் அம்மகிழ்ச்சியாகவே நினைவு தோன்றுவதுடன் அத்துன்பங்களெல்லாம் ஒன்றும் தன்னை வந்து அடையாமல் போம் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின் துன்பமென்பது மனத்து ஒருவன் கொள்ளும் கொள்கையே அன்றி வேறு ஒன்றுமில்லையென்றும் அத்துன்பத்தை ஒருவன் இன்பமாக எண்ணுகின்ற அறிவுடையவனாக இருப்பானாயின் அவ்வறிவுடைமையானது எல்



லாத் துன்பங்களும் தன்னிடத்தே வாராவண்ணம் செய்துவிடுமென்றும், இவ்வித உபாயமானது உண்மையறிந்த அறிவுடையார்க்கே முடியுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "மேல் இரண்டு செய்யுள்களாலும் ஊழினால் வந்த துன்பங்களுக்கு அழியாதிருக்கும் உபாயத்தை அறிந்தோம். ஆயின் ஒரு தொழிலைச் செய்யுங்காலத்து வந்த துன்பத்திற்கு அறிவுடையோர் என் செய்வர்?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

623. இடும்பைக் கிடும்பை படுப்ப ரிடும்பைக்
கிடும்பை படாஅ தவர்.

(ப-ரை.) இ-ள். இடும்பைக்கு இடும்பை படாதவர்=வினைசெய்யுங்கால் அதற்கிடையே வந்த துன்பத்திற்கு வருந்தாதவர்—இடும்பைக்கு இடும்பை படுப்பர்=அத் துன்பந்தனக்குத் தாந் துன்பம் விளைப்பர். எ-று.

வருந்தல்=இளைத்து விடாதிருத்தல். மனத்திட்பமுடையாராய் விடாது முயலவே வினை முற்றுப்பெற்றுப் பயன்படும்; படவே, எல்லா விடும்பையுமிலவாமாகலின், 'இடும்பைக்கிடும்பை படுப்பர்' என்றார். வருகின்றபாட்டிரண்டினும் இதற்கிவ்வாறே கொள்க. சொற்பொருட்பின் வருகில. (௩)

விளக்கம்:—ஓர் தொழிலைச் செய்யுங்காலத்து நடுவே வந்த துன்பத்திற்கு வருந்தாத தன்மையுடையவர் எவரோ அவர் அவ்வந்த துன்பத்திற்குத் தாம் துன்பத்தை உண்டுபண்ணுபவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஒருகாரியத்தைச் செய்யுங்காலத்து அதுமுடிவதற்கு முன்னே துன்பம் வருமாயின் அதற்காக வருந்தி மனம் இளைத்துக் காரியத்தை விட்டுவிடாமல் மனவலிமையுடன் விடாது முயற்சிசெய்து எடுத்த தொழில் முடிவதிலேயே கண்ணாக இருப்பாராயின் அக்காரியம் முடிந்து அதனாலாகிய பயனை அடைந்து யாதொரு துன்பமும் இல்லாது நிற்பர், என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்விதம் காரியத்தை எடுத்துக்கொண்டான் ஒருவன், எவ்விதம் முயற்சிகொண்டு காரியத்தை முடித்துப் பயன் அடைதல் வேண்டும் என்பதை ஒரு உவமைவாயிலால் விளக்கல் வேண்டும்" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்,



624. மடுத்தவா யெல்லாம் பகடன்னா னுற்ற
விடுக்க ணிடர்ப்பா டுடைத்து.

(பரி.) இ-ள். மடுத்தவாய் எல்லாம் பகடு அன்னான்=விலங்கிய விடங்களெல்லாவற்றினுஞ் சகடமீர்க்கும் பகடுபோல வினையை யெடுத்துக் கொண்டு உய்க்கவல்லானை—உற்ற இடுக்கண் இடர்ப்பாடு உடைத்து= வந்துற்ற இடுக்கண் தானே இடர்ப்படுதலை யுடைத்து, எ-று.

மடுத்தவாயெல்லாமென்பது பொதுப்பட நின்றமையின், சகடத்திற்கு அளற்று நிலமுதலியவாகவும்,வினைக்கு இடையூறுகளாகவும் கொள்க. பகடு மருங்கொற்றியும் மூக்கூன்றியும் தாடவழ்ந்தும் அரிதிலுய்க்குமாறு போலத் தன் மெய்வருத்த நோக்காது முயன்றுய்ப்பானென்பார், 'பகடன்

ளுன் என்றார். (௪)

விளக்கம்:—வண்டியிற் கட்டிய எருதுகள் எவ்வாறு தாம் செல்லுகின்ற இடங்கள்தோறும் இடத்திற்குத் தக்க அளவாக இழுத்துச் செல்லுகின்றதோ அதுபோல் தான் எடுத்துக்கொண்ட காரியத்தைச் செய்யவல்லான் ஒருவனை வந்து சேர்ந்த துன்பமானது அவனைத் துன்பப்படுத்தாமல் தானே துன்பப்பட்டு ஒழிந்து போம் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது வண்டியிற்கட்டிய எருதுகள் வண்டியை இழுக்கும் காலத்துச் சேற்று நிலம், மணல்நிலம், முதலிய வந்துவிடுமாயின் மருக்கு ஒற்றியும், மூக்கை ஊன்றியும், கால்களால் தவழ்ந்தும் எவ்விதம் மிக வருத்தத்துடன் வண்டியை இழுக்கின்றனவோ அதுபோல் மெய் வருத்தம் நோக்காது எவ்வெவ்வித துன்பம் வருகின்றதோ அவ்வவ்வித துன்பத்திற்குத் தக்க அளவாக முயன்று மெய்வருந்துவானாயின் அவனை அடைந்த துன்பமானது துன்பப்பட்டுப்போம் என்பது அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர் "துன்பமானது ஒருவனுக்கு ஒரு முறை வருமாயின் அது தீர்த்துக் கொள்ளல் கூடும். பலமுறை வருமாயின் என்செய்வது?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

625. அடுக்கி வரினு மழிவிலா னுற்ற
இடுக்க ணிடுக்கட் படும்.

(பரி.) இ-ள். அடுக்கி வரினும்=இடைவிடாது மேன்மேல் வந்தன





வாயினும்;—அழிவிலான் உற்ற இடுக்கண் இடுக்கட்படும்=தன்னுள்ளக் கோட்பாடு விடாதான் உற்ற இடுக்கண்டாம் இடுக்கணிலே பட்டுப்போம்.

ஒன்றே பலகால் வருதலும் வேறுபட்டன விராய்வருதலுமடங்க 'அடுக்கிவரினும்' என்றார். அழிவென்னுங்காரணப்பெயர் காரியத்தின் மேனின்றது. இவை மூன்று பாட்டானும் தெய்வத்தானுயதற்கழியாமை கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—மனத்தினிடத்தே வரும் துன்பங்களையெல்லாம்

மகிழ்ச்சியாகக் கொள்ளுகின்ற ஒருவன் எடுத்த காரியத்திற்கு இடையூறாய் வரும் துன்பங்கள் இடைவிடாது ஒன்றன்பின் ஒன்றாகப் பலவரினும் அத்துன்பங்களெல்லாம் இவனது முயற்சியின் முன் நில்லாது துன்பப்பட்டுப்போம் என்று இத்திருக்குறள் கூறு கின்றது. இதனால் ஊழும் ஒரு முறை, இரு முறை கெடுக்கவல்லதே அன்றி அதன்மேல் முயல்வதெல்லாம் ஆகூழாகவே முடியும் என்று ஆள்வினை யுடைமை என்னும் அதிகாரத்தினுள் "ஊழை யும் உப்பக்கம் காண்பர் உலைவின்றித் தாழா துஞற்றுபவர்" என் பதற்கு மேற்கோளாயிற்று. இதனால் விடாது முயலுபவர் ஆகூழ் இல்லாவிடினும் முயற்சியின் அளவாகப் பயனை அடைதல் கூடும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித துன்பத்திற்குக் கலங்காதவர் தமக்குப் பொருளில்லாமையின் பொ ருட்டு மனம் தளர்வரோ?" என்னலும் ஆசிரியர் கூறுவாராயினர்.

626. அற்றேமென் றல்லற் படுபவோ பெற்றேமென்
றோம்புத றேற்றா தவர்.

(பரி.) இ-ள். அற்றேம் என்று அல்லற்படுபவோ = வறுமைக்காலத்து யாம் வறியமாயினேமென்று மனத்தாற் றுயருழப்பரோ—பெற்றேம் என்று ஓம்புதல் தேற்றாதவர் = செல்வக்காலத்து இது பெற்றேமென்று இவறுதல் அறியாதார். எ-று.

'பெற்றவழி இவறாமை நோக்கி அற்றவழியும் அப்பகுதி விடாதாக லின்' அல்லற்பாடில்லையாயிற்று. இதனாற் பொருளின்மையானுவதற்கு அழியாமையும் அதற்குபாயமும் கூறப்பட்டன. (௬)

விளக்கம் :—தமக்குச் செல்வம் கிடைத்த காலத்து இச்செல் வத்தை நாம் அடைந்தோமென்று லோபத்தனத்தைச் செய்யா



தவர்கள் அச்செல்வத்தை இழந்து வறுமை அடைந்த காலத்துத் தாம் வறியராயினேம் என்று மனத்தில் துன்பத்தை அடைவரோ? என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது பொருள் வந்த காலத்து அப்பொருளின் மீது தம் மனத்தைச் செலுத்தி அதனி டத்தேயே பற்றுவைப்பவரே அதனை ஓர்கால் ஊழ்வலியால்

இழந்துவிட்டது அப்பொருள் போய்விட்டதே என்று ஆசை மிகுதியால் வருந்துவரே அன்றி "நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால் அல்லற்படுவது எவன்" என்னும் குறளின் பகுதியை அறிந்தவர்கள் பொருள் வந்தகாலத்தும் அதற்காகச் சிறிதும் மகிழாரென்றும் அது போங்காலத்தும் அப்போக்கிற்காக வருந்தாரென்றும் ஆயிற்று. இதனால் வறுமைவந்த காலத்தும் முயற்சியுடையார் வருந்தாது மகிழ்வார்கள் என அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சிலர் ஓர் துன்பம் வந்த காலத்தும் அதற்கு ஆற்றாது வருந்துகின்றனர். அவ்விதமிருக்க 'அடுக்கி வரும் துன்பங்களுக்கும் அறிவுடையோர் கலங்கார் என்று கூறுவது எவ்வுபாயங் கருதி" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

627. இலக்க முடம்பிடும்பைக் கென்று கலக்கத்தைக்
கையாறாக் கொள்ளாதா மேல்.

(பரி.) இ-ள். உடம்பு இடும்பைக்கு இலக்கம் என்று=நாற்கதியிலுமுள்ள வுடம்புகள் இடும்பையென்னும் வாளுக்கிலக்கென்று தெளிந்து;—கலக்கத்தைக் கையாறாக் கொள்ளாதாம் மேல்=தம்மேல் வந்த இடும்பையை இடும்பையாகக் கொள்ளார் அறிவுடையார். எ-று.

ஏகதேசவுருவகம். உடம்பு=சாதிப்பெயர். கலக்கமென்னும் காரியப் பெயர் காரணத்தின்மேனின்றது. கையாறென்பது ஒருசொல்: இதற்கு ஒழுக்கநெறியென்றுரைப்பாருமுளர். இயல்பாகக் கொள்வரென்பது குறிப்பெச்சம். (எ)

விளக்கம்:—நால்வகைப் பிறப்பினுள்ளும் வந்த உடம்புகள் இடும்பை என்னும் துன்பமாகிய வாளுக்கே குறியாக உள்ளது என்று ஆய்ந்து உணர்ந்து அறிந்த அறிவுடையோர், தமக்கு வந்த துன்பத்தையும் துன்பமாகக் கொள்ளார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஓர் உயிர் பிறப்பினை எடுப்பதே துன்ப



மென்றும் அவ்விதம் எடுத்த உடம்புகள் தேவர், மக்கள், நரகர், விலங்கு, புள் ஆகியபிறவிகளும் அண்டஜம், சுவேதஜம், உத்பிஜம், சராயுஜம், என்னும் நால்வகைத் தோற்றமுமாகிய யோனிவாய்ப்பட்டு வருகின்ற உருக்களைத் துன்பமென்னும் வாளால் அறுக்கப்பட்டு

ஒழிந்து போவனவே யன்றி வேறு இல்லை என்றும் பிறப்பின் தன்மையையும் பிறந்த உடல் ஒழியும் தன்மையையும் அறிந்து, மேலும் மேலும் தமக்கு வரும் துன்பங்களை இன்பங்களாகக் கொண்டு வருந்தாது இருப்பர் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ்விதம் நல் அறிவுடையோர் இன்ப துன்பங்கள் இரண்டையும் எவ்விதம் பாவிக்கின்றனர்." என்ன லும், ஆசிரியர் கூறுவாராயினர்.

628. இன்பம் விழையா னிடும்பை யியல்பென்பான்
துன்ப முறுத லிலன்.

(பரி.) இ-ள். இன்பம் விழையான் இடும்பை இயல்பு என்பான்= தன்னுடம்பிற்கு இன்பமாயவற்றை விரும்பாதே வினையாலிடும்பையெய்து தல் இயல்பென்று தெளிந்திருப்பான்—துன்பம் உறுதல் இலன்=தன் முயற்சியாற் றுன்பமுறான். எ-று.

இன்பத்தை விழையினும், இடும்பையை யியல்பென்னாது காக்கக்கரு தினும், துன்பம் விளைதலின்; இவ்விரண்டுஞ் செய்யாதானைத் 'துன்பமுறு தலிலன்' என்றார். (அ)

விளக்கம்:—தன்னுடைய உடம்பிற்கு இன்பமாயவை களை விரும்பாமல் தீவினையால் துன்பம் எய்துதல் இயல்பு என்று ஆய்ந்து உணர்ந்திருப்பான் ஒருவன், தான் முயற்சி செய்யும் காலத்து வரும் துன்பங்களுக்குத் துன்பத்தை அடையான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் ஆராய்ந்து உணர்ந்தவர் தம் உடம்பிற்கு இன்பத்தை விரும்பினாலும், அவ்வின்பத்தின் பொருட்டு சேரும் உழைப்பால் துன்பம் வருமென்றும், அல்லது துன்பம் வருங்காலத்துத் துன்பம் வருதல் இயற்கை என்று எண் ணுமல் அத்துன்பம் வாராவண்ணம் தடுக்க முயன்றாலும் அதுவும் துன்பமாக முடியுமென்றும் அறிவர் ஆதலால் இன்பத்தையும் விரும் பார், துன்பத்தையும் அறவார் என்று அறிந்தோம் என்றனர்.

அதுகேட்ட மாணுக்கர், "ஒருவனுக்கு வினைவலியால் இன்பம் வருமாயின் அதனை அவன் எவ்விதம் விரும்பாது இருப்பான். அவ்வின்பத்தை அனுபவியாமலே விட்டு விடுவனே?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

629. இன்பத்து ளின்பம் விழையாதான் றுன்பத்துட்
டுன்ப முறுத லிலன்.

(பரி.) இ-ள். இன்பத்துள் இன்பம் விழையாதான் = வினையாற்றனக்கின்பம் வந்தவழி அதனை யனுபவியாநின்றே மனத்தான் விரும்பாதான் — துன்பத்துள் துன்பம் உறுதல் இலன் = துன்பம் வந்தவழியும் அதனை யனுபவியாநின்றே மனத்தான் வருந்தான். எ-று.

துன்பம் = முயற்சியான் வருமிடுக்கண். இரண்டையும் ஒரு தன்மையாகக் கோடலின், பயன்களுமிலவாயின.

விளக்கம்:— நல்வினைப்பயனால் ஒருவனுக்கு இன்பம் வந்த காலத்தே அதனை அனுபவித்துக்கொண்டே தான் மனத்தால் அவ்வின்பத்தை விரும்பாதவனாய் நிற்பவன் எவனோ அவன் தீவினைப் பயனால் துன்பம் வந்த காலத்தும் அதனை அனுபவித்துக் கொண்டே மனத்தால் வருந்தானென்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் இன்பத்தையும் துன்பத்தையும் வினைகளின் பகுதி என்று உணர்ந்தபெரியோர் எது எது எவ்வெவ்விதம் வருகிறதோ அவ்வவ்விதம் அனுபவிக்க முயல்வரே அன்றி அதற்காக மகிழ்வதையோ, வருந்தலையோ செய்யமாட்டார்களென்றும், ஆகையால் அவர்கள் கொண்ட முயற்சிகளில் மனத்தடுமாற்றம் இல்லாமல் எடுத்த காரியங்கள் முடிவுபெறும் என்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் இன்பதுன்பங்களை ஒன்றாகக் கருதுவதால் எடுத்தகாரியங்களை முடிப்பாரென்று அறிந்தோம். அவ்விதம் காரியம் முடிக்குமாற்றலால் அவர் பகைவரையும் வெல்லுதலும் கூடும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

630. இன்னாமை யின்ப மெனக்கொளி னாகுந்தன்
ஒன்னார் விழையுஞ் சிறப்பு.

(பரி.) இ-ள். இன்னாமை இன்பம் எனக் கொளின் = ஒருவன் வினை

செய்யுமிடத்து முயற்சியான் வருந்துன்பத்தன்னையே தனக்கின்பமாகக் கற்பித்துக் கொள்வனாயின்,—தன் ஒன்னார் விழையும் சிறப்பு ஆகும்=அதனாற் றன்பகைவர் நன்குமதித்தற்கேதுவாய உயர்ச்சியுண்டாம். எ-று.

துன்பத்தானும் உயிர்க்கியல்பன்றிக் கணிகமாய் மனத்திடை நிகழ்வதோர் கோட்பாடாகலின், அதனை மாறுபடக்கொள்ளவே, அதற்கழிவின்றி மனமகிழ்ச்சியுடையனாய் அதனாற் றொடங்கியவினை முடித்தேவிடு மாற்றலுடையனுமென்பது கருத்து. இவை நான்குபாட்டானும் மெய்வருத்தத் தானுவதற்கு அழியாமையும் அதற்குபாயமுங் கூறப்பட்டன. (௰)

விளக்கம்:—ஒருவன் தான் எடுத்த காரியத்தைச் செய்கின்ற காலத்து அதற்காகச் செய்யும் முயற்சியால் வருந்துன்பத்தினையே தனக்கு இன்பமாக அவன் பாவித்துக் கொள்ளுவானாயின் அவ்வித பாவனையால் அவன் பகைவர் அவனை நன்கு மதித்தற்கு ஏதுவாகிய உயர்ச்சி அவனுக்கு உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனில் துன்பமென்பது உயிர்க்கு இயல்பாகவே உள்ளது ஒன்று அல்ல என்றும் அது மனத்தினிடத்தே உண்டாவதாகிய ஓர் கோட்பாடே என்றும் அறிந்து, அதனால் அவ்வித பகுதியைத் துன்பமென்று கொள்ளாது இன்பமாகக் கொள்ளின் அக்கொள்கையால் தான் சிறிதும் வருந்துதல் இல்லாமல் மிகுதியும் மனமகிழ்ச்சியுடையவனாகித் தான் எடுத்தகாரியத்தையும் முடித்தே விடக்கூடிய ஆற்றலும் உடையவன் ஆவானென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "காரியத்தை எடுத்துக் கொண்ட ஒருவன் தான் எடுத்துக்கொண்ட காரியத்தை

முடிப்பதற்கு உடம்பிற்கு வரும் துன்பத்தைத் துன்பமாகக்கொண்டு வருந்தாதிருத்தலும் அவ்விதம் வருந்தாமைக்கு உபாயமும் அதனால் காரியமுடிவும் இவையென்று அறிந்ததுடன் அரசன் கடமை இதுவென்பதையும் நன்றாக அறிந்துகொண்டோம். இனி அவ்வரசனுக்கு அமையும் அங்கங்கள் ஆறையும் அறிய விரும்புகின்றோம்." என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

(அரசியல் முற்றிற்று.)

# அங்கவியல்.

---

(பரி.) இனி முறையானே அரசியனடாத்துதற்கண் ஒன்றற்கொன்று துணையாய அங்கங்களாறனதியல்பு முப்பத்திரண்டதிகாரத்தாற் கூறுவானெடுத்துக்கொண்டு, அவையாறனுள்ளும் "காவற் சாகாடுகைத்தற்" கண் அவ்வரசற்கிணையாய அமைச்சனதியல்பு பத்ததிகாரத்தாற் கூறுவான்றொடங்கி முதற்கண் அமைச்சுக் கூறுகின்றார்.

விளக்கம்:—இனி அரசியலிற் கூறியவண்ணம் அரசன் தன் செங்கோலைச் செலுத்துவதற்கு, ஒன்றினுக்கு ஒன்று துணையாகிய அங்கங்கள் ஆறின் இயற்கையை முப்பத்திரண்டு அதிகாரங்களால் சொல்ல எடுத்துக்கொண்டு அவ்வங்கங்கள் ஆறனுள்ளும் அரசை நடத்தும் அரசனுக்குச் சமானமாகிய அமைச்சன் என்பானது இயல்பைப்பற்றிப் பத்து அதிகாரங்களால் சொல்ல ஆரம்பித்து அப்பத்தினுள்ளும் "அமைச்சு" என்னும் முதலினைத் தொடங்குகின்றனர்.

---

## 64. அதிகாரம்
## அமைச்சு.

---

(பரி.) அஃதாவது அமைச்சனது தன்மை: என்றது அவன்றன் குணங்களையுஞ் செயல்களையும்.

விளக்கம் :—அதாவது அமைச்சன் இருக்க வேண்டிய தன்

மை என்றது, அவனுடைய குணங்களும், செயல்களும் இருக்க வேண்டிய தன்மையைக் கூறுவது என்றனர். அதுகேட்ட மாணாக் கர், "முதலில் கூறும் அமைச்சனுடைய தன்மையை அறிய அவாவு கின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

631. கருவியுங் காலமுஞ் செய்கையுஞ் செய்யு
மருவினையு மாண்ட தமைச்சு.

(பரி.) இ-ள். கருவியும் = வினை செய்யுங்கால் அதற்கு வேண்டுங்கருவிக ளும்—காலமும் = அதற்கேற்ற காலமும்—செய்கையும் = அது செய்யுமா



றும்—செய்யும் அருவினையும் = அவ்வாற்றிற் செய்யப்படும் அரியவினை யாதலும்—மாண்டது அமைச்சு = வாய்ப்ப வெண்ண வல்லவனே அமைச்ச னாவான். எ-று.

கருவிகள் = தானையும் பொருளும். காலம் அது தொடங்குங் காலம். செய்கையெனவே, அது தொடங்குமுபாயமும், இடையூறு நீக்கி முடிவு போக்குமாறும் அடங்கின. சிறிய முயற்சியாற் பெரியபயன்றருவதென்பார், அருவினையென்றார். இவையைந்தினையும் வடநூலார் மந்திரத்திற்கங்க மென்ப. (க)

விளக்கம்:—அரசனது காரியத்தைச் செய்யுமிடத்து அதற்கு வேண்டுவனவாகிய சேனையும், பொருளும் ஆகிய கருவிகளையும், அக்காரியம் தொடங்குவதற்கு ஏற்றதாகிய காலத்திலும், அது தொடங்குவதற்கு ஏற்றதாகிய உபாயத்திலும், இடையூறு உண் டாகுமாயின் அவ்விடையூறுகளை நீக்கி முடிவாகும்வரையில் செய்யும் விதத்தினையும், வினையைத் தொடங்குங்கால் அவ்வினை யானது சிறிய முயற்சியோடு பெரிய பயனைத் தருவதாக இருக்கக் கூடிய வினையாயும் ஆகிய இவையெல்லாம் வாய்க்கும்படி எண்ணிச் செய்ய வல்லவனே அமைச்சனாவான் என்று இத்திருக் குறள் கூறுகின்றது. இதனால் மந்திரி என்பான் இவ்விதம் கருவி களையும், காலத்தையும், செய்யும் விதத்தையும், செய்கின்றவினையை யும் ஆகிய இவைகளை யெல்லாம் தனக்கு அங்கமாகக் கொண்டு நடத்தாவிடின் அவன் மந்திரி யென்னும் இலக்கணத்திற்குப்

பொருள்தானென்றும் அவையெல்லாம் தெரிந்து செய்பவனே மந்திரியாவானென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய அங்கங்கள் ஐந்தினையும் மந்திரிக்கு அங்கமென்று அறிந்தோம். இன்னும் அவன் செய்ய வேண்டுவனவற்றையும் சொல்லல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**632. வன்கண் குடிகாத்தல் கற்றறிதல் ஆள்வினையோ**
**டைந்துடன் மாண்ட தமைச்சு.**

(பரி.) இ-ள். வன்கண் = வினைசெய்தற்கண் அசைவின்மையும்—குடிகாத்தல் = குடிகளைக் காத்தலும்—கற்று அறிதல் = நீதிநூல்களைக் கற்றுச் செய்வன, தவிர்வன அறிதலும்—ஆள்வினை = முயற்சியும்—ஐந்துடன் மாண்டது அமைச்சு = மேற்சொல்லிய அவ்வங்கங்களோடுடனே திருந்தவுடையானே அமைச்சனாவான். எ-று.



என்றொடு நின்றது. அவ்வைந்தனைச் சுட்டி வருவிக்க இச்சாதன்களையும் மேற்கூறியவற்றோடு தொகுத்துக் கூறியது, அவையு மிவற்றோடு கூடியே மாட்சிமைப்பட வேண்டுதலானும், அவற்றிற்கு ஐந்தென்னுந் தொகை பெறுதற்கும். இனி இதனை எண்ணெண்ணியவற்றிற்கே தொகையாக்கிக் குடிகாத்தலென்பதனைக் குடிப்பிறப்பும் அதனையொழுக்கத்தாற் காத்தலுமெனப் பகுப்பாரும், கற்றறிதலென்பதனைக் கற்றலும் அறிதலுமெனப் பகுப்பாருமுளர். அவர் உடனென்பதனை முற்றும்மைப் பொருட்டாக்கியும், குடியென்பதனை ஆகுபெயராக்கியும் இடர்ப்படுப. (உ)

விளக்கம்:—மேற்கூறிய அங்கங்கள் ஐந்தினையும் திருந்தவுடையானாகிய அமைச்சனென்று சொல்லப்பட்டவன் தான் அரசன் காரியத்தைச் செய்யுங்காலத்து, சிறிதும் மனத்தளர்ச்சி இல்லாதவனாய்க் குடிகளைக்காத்தலும் நீதிநூல்களையெல்லாம் படித்துச் செய்ய வேண்டுவன இவை, ஒழிக்க வேண்டுவன இவை என்று அறிதலும், விடாமுயற்சியும் உடையவனாக வேண்டும் என்று இத்திருக்

குறள் கூறுகின்றது. இதனால் மந்திரியானவன் மேற்கூறிய ஐந்து இலக்கணங்களுள் இப்போது சொல்லும் நான்கு இலக்கணங்களைப் பொருந்தியவனாகி இருந்தாலன்றி மந்திரி யென்னும் பெயருக்குப் பொருந்தானென்றும், இவையெல்லாம் உடையானே மந்திரியாவானென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், " அவன் இலக்கணம் இதுவென்று அறிந்தோம். இன்னும் அம்மந்திரிக்கு வல்லமைகள் இருத்தல் வேண்டும் என்பதை அறிவித்தல் வேண்டும் " என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

633. பிரித்தலும் பேணிக் கொளலும் பிரிந்தார்ப்
பொருத்தலும் வல்ல தமைச்சு.

(பரி.) இ-ள். பிரித்தலும் = வினை வந்துழிப் பகைவர்க்குத் துணையாயினாரை அவரிற் பிரிக்கவேண்டிற் பிரித்தலும்—பேணிக்கொளலும் = தம் பாலாரை அவர் பிரியாமற் கொடை இன்சொற்களாற் பேணிக்கொள்ளுதலும்—பிரிந்தார்ப் பொருத்தலும் = முன்னே தம்மினும் தம்பாலாரினும் பிரிந்தாரை மீண்டும் பொருத்தவேண்டிற் பொருத்தலும்—வல்லது அமைச்சு = வல்லவனே அமைச்சனாவான். எ-று.

இவற்றால் அப்பொழுதை நிலைக்கேற்ற செயலறிதலும் அதனை அவரறியாமல் ஏற்றவுபாயத்தாற் கடைப்பிடித்தலும் அரியவாதலின், 'வல்





லது' என்றார். வடநூலார் இவற்றைப் பொருத்தலைச் சந்தியென்றும் பிரித்தலை விக்கிரகமென்றும் கூறுப. (௩)

விளக்கம் :—மந்திரியானவன் யுத்தம் வந்த காலத்துப் பகைவர்க்குத் துணையாயிருப்பாரைத் தெரிந்து, அப்பகைவரை விட்டு அவரைப் பிரிக்கவேண்டி இருக்கின் அத்துணையாயிருப்பவரைப் பிரித்து விடுதலும், தமக்குத் துணையாய் உள்ளவர்களைத் தம் அரசனைவிட்டுப் பிரியாமல் அத்துணைவர்களை இன் சொற்களால் பாதுகாத்துக் கொள்ளலும், முன்னே யாதொரு காரணத்தாலோ தம்மிடத்தே இருந்து நீங்கிப் போனவர்களை மறுபடியும் தம்மோடு

சேர்த்துக் கொள்ளவேண்டுமாயின் அவர்களைச் சேர்த்துக் கொள்ளலும் ஆகிய வல்லமையுடையவனும் இருத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மந்திரியானவன் பகைவரால் யுத்தம் நேர்ந்த காலத்தே பகைவர்க்கு உள்ள பலத்தைக் குறைப்பதற்கு அவர் துணையாய் உள்ளாரைப்பிரித்துவிடவேண்டிய சக்தியும், தம் பலம் அதிகரிக்கத் தம்மோடு உற்றவர்களைப் பிரியவொட்டாமல் வேண்டிய இன் சொற்கள் சொல்லியும், கொடுக்கவேண்டுவன கொடுத்தும், தம்மைவிட்டுப் பிரியவொட்டாமல் காப்பாற்றியும், பிரிந்துபோனவர்களைச் சேர்த்தும்,காரியத்தைச் செய்யும் அமைச்சனென்னும் இலக்கணத்திற்கு உரியவனாகவும் இருத்தல் வேண்டும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மந்திரிக்குரிய வல்லமைகள் இன்னும் உளவோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

684. தெரிதலுந் தேர்ந்து செயலு மொருதலையாச்
சொல்லலும் வல்ல தமைச்சு.

(பரி.) இ-ள். தெரிதலும்=ஒரு காரியச்செய்கை பலவாற்றாற் றோன்றின் அவற்றுள் ஆவதாராய்ந்தறிதலும்—தேர்ந்து செயலும்=அதுசெய்யுங்கால் வாய்க்குந்திறனாடிச்செய்தலும்—ஒருதலையாச் சொல்லலும்=சிலரைப் பிரித்தல் பொருத்தல் செயற்கண் அவர்க்கு இதுவே செயற்பாலதென்று துணிவு பிறக்கும் வகை சொல்லுதலும்—வல்லது அமைச்சு=வல்லவனே அமைச்சனாவான்.

தெரிதல் செயன்மேலதாயிற்று, வருகின்றது அதுவாகலின். (௪)



விளக்கம் :— மந்திரியாவான் தான் தொடங்கிய காரியத்தினது செயல் பலவாகக் காணப்படின் அவற்றுள்ளும் தனக்கு வேண்டுவது எது என்று ஆராய்ந்து அறிதலும், அவ்விதம் ஆராய்ந்து அறிந்து செய்யுமிடத்து அச்செயல் தனக்கு வாய்க்கும் திறமையை நாடிச் செய்தலும், அவ்விதம் செய்யுங்கால் சிலரைப் பிரித்து விடுதலும், வேண்டியவர்களைச் சேர்த்துக்கொள்ளுதலும் அவரவர்க்கு இது இதுவே செய்யவேண்டியதென்று அரசனுக்குத்

துணிவு பிறக்கும் வண்ணம் தான் துணிந்து சொல்லுதலும் ஆகிய வல்லமையுடையவனாய் இருத்தல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனில் எடுத்தகாரியத்தைச் செய்வதில் அக்காரிய மானது பலதிறப்பட்டுத் தோன்றினாலும் எவ்வித உபாயத்தைக் கொண்டு செய்யின் அது தனக்குவாய்க்கும் என்று அறிவதும், அறிவதுடன் அது முடியும்வண்ணம் திறமையுடன் செய்வதும், இவரிவர்க்கு இன்னது இன்னது கொடுத்தால் சமமோடு பொருந்துவார் என்று சொல்லுதலும ஆகிய பேரறிவினையுடையவனே மந்திரியாவன் என்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இம்மந்திரி யென்பான் ஒருவனே அரசனுக்கு உற்றதுணை போதும் !" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

635. அறனறிந்தா னமைந்த சொல்லானெஞ் ஞான்றுந்
திறனறிந்தான் றேர்ச்சித் துணை. [றுந்

(பரி.) இ-ள். அறன் அறிந்து ஆன்று அமைந்த சொல்லான்=அரசனுக் செயப்படும் அறங்களையறிந்து தனக்கேற்ற கல்வியானிறைந்து அமைந்த சொல்லை யுடையனாய்—எஞ்ஞான்றும் திறன் அறிந்தான்=எக்காலத்தும் வினை செய்யுந் திறங்களையறிந்தான்—தேர்ச்சித் துணை=அவர்க்குச் சூழ்ச்சித் துணையாம்.

தன்னரசன் சுருங்கியகாலத்தும் பெருகியகாலத்தும் இடைநிகரய காலத்து மென்பார் 'எஞ்ஞான்றும்' என்றார். சொல்லானென்பதனை ஒருவுருபின் பொருட்டாய ஆனுருபாக்கி யுரைப்பாருமுளர். இவையைந்து பாட்டானும் அமைச்சரது குணத்தன்மை கூறப்பட்டது. (௫)

விளக்கம் :— அரசன் ஆளுங்காலத்து அவனால் செய்ய வேண்டிய அறங்கள் இவை இவை என்று அறிதலுடன் மந்திரி



யாயிருக்கின்ற தனக்கேற்ற கல்வி நிறைந்த தன்மையோடு சொல்லும் வல்லமையும் உடையவனாய், தன் அரசன் பொருள், படை சுருங்கிய காலத்தும், பெருகிய காலத்தும், சுருக்கமும், பெருக்கமும் இல்லாது நடுவாக நின்ற காலத்தும், எக்காலத்தும் எடுத்துக் கொண்ட காரியத்தை ஆராய்ந்துசெய்யும் திறங்களை அறிந்தவனே

அரசனுக்கு ஆலோசித்துணைவன் ஆவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மந்திரியானவன், அரசன் செய்யவேண்டுவன இவை என்றும், தான்செய்யவேண்டுவன இவை என்றும் ஆராய்ந்து அறியக்கூடிய கல்வி அறிவுடையவனாயிருக்க வேண்டுமென்றும், கல்வி அறிவோடு சொல்வன்மையும் இருத்தல்வேண்டுமென்றும், அன்றியும் அரசன் செல்வங்களால் பெருகிய காலத்தும், சுருங்கிய காலத்தும், நடுவாக இருக்கின்ற காலத்தும், எந்த காலத்தும் அவனைவிட்டுப் பிரியாது மந்திராலோசனை சொல்பவனாக இருத்தல் வேண்டும் என்றும், அவனே மந்திரிக்கு உள்ள அழகினைப் பெற்றவனென்றும் அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் நுட்பமாகிய அறிவினையுடைய ஓர் மந்திரியைப்பெற்ற அரசனுக்கு இல்லாதது ஒன்றும் இல்லைபோலும் !" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

636. மதிநுட்ப நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை.

(பரி.) இ-ள். மதிநுட்பம் நூலோடு உடையார்க்கு=இயற்கையாகிய நுண்ணறிவைச் செயற்கையாகிய நூலறிவோடு உடையராய அமைச்சர்க்கு—அதிநுட்பம் முன் நிற்பவை யா உள=மிக்க நுட்பத்தையுடைய சூழ்ச்சிகளாய் முன்னிற்பன யாவையுள. எ-று.

மதிநுட்பமென்பது பின்மொழிநிலையல். அது தெய்வத்தால் வேண்டுதலின் முற்கூறப்பட்டது. நூலென்பதூஉம் அதிநுட்பமென்பதூஉம் ஆகுபெயர். அதியென்பது வடசொல்லுள் மிகுதிப்பொருளதோரிடைச்சொல் அது நிரித்து நுட்பமென்பதனொடு தொக்கது. முன்னிற்றல்=மாற்றார் சூழ்ச்சியாயின தஞ் சூழ்ச்சியால் அழியாது நிற்றல். இனி அதிநுட்ப மென்று பாடமோதி, அதனினுட்பம் யாவென்றுரைப்பாருமுளர். அவர் சூழ்ச்சிக்கிளைமாய் முன் சுட்டப்படுவதொன்றில்லாமையும், சுட்டுப்பெயர் ஐந்தாமுருபேற்றவழி அவ்வாறு நில்லாமையு மறிந்திலர். பகைவர் சூழ்வன



வற்றைத்தாமறிந்து அழித்து அவரறிந்தழியாதன தாஞ்சூழ்வதென்பது

கருத்து இதனால் அவரது சிறப்புக் கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—இயற்கையாகிய நுண் அறிவினைச் செயற்கையாகிய நூல் கற்றதால் வந்த அறிவுடன் உடையவர்களாகிய அமைச்சர்களுக்கு, மகா நுட்பமாகிய சூழ்ச்சிகளென்னும், ஆலோசனைகளால் முன் நிற்பன எவை உள்ளன் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இயற்கையாகிய அறிவென்பது ஒருவனுக்கு முன்வினைப்பயனால் வரவேண்டுவது ஒன்று ஆதலாலும் மந்திரியானவன் கல்வினைப் பயனால் அவ்வியற்கை அறிவைப் பெற்றிருத்தல் வேண்டுமென்றும், அவ்வித இயற்கை அறிவோடு அரசன் ஆளுகையை நடத்துவதற்கு நூல் அறிவென்னும், செயற்கை அறிவைப் பெற்று அச் செயற்கை அறிவின் நுட்பத்தால் ஆராய வேண்டுவனவற்றை ஆராய்ந்து செய்தல் வேண்டுமென்றும், இவ்விதம் இயற்கை, செயற்கை என்னும் இரண்டு அறிவினைப்பெற்று, பகைவர் செய்யும் வஞ்ச ஆலோசனைகளை யெல்லாம் ஆராயவல்லவனுயுள்ள மந்திரிக்கு முன் அவ் வஞ்சகங்களெல்லாம் ஒன்றும் இல்லாமல்போம் என்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர், “இவ்விதம் இயற்கையும், செயற்கையும் ஆகிய நூல் அறிவு கொண்டு உலகத்துச் செய்யவேண்டுவனயாவும் செய்தல் வேண்டும் என்று அறிந்தோம், ஆயின் ‘உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பல கற்றும் கல்லார் அறிவிலாதார்’ என்று ஒழுக்கத்தினுள் படித்தோம் அன்றோ! அதைப் பற்றி ஏதேனும் இம்மந்திரிக்குக் கூறியுள்ளதோ?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

687. செயற்கை யறிந்தக் கடைத்து முலகத்
இயற்கை யறிந்து செயல்.

(பரி.) இ-ள். செயற்கை அறிந்தக்கடைத்தும்=நூனெறியான் வினை செய்யுந்திறங்களை யறிந்த விடத்தும்,—உலகத்து இயற்கை அறிந்து செயல்=அப்பொழுது நடக்கின்ற உலகவியற்கையையறிந்து அதனோடு பொருந்தச் செய்க.

கடைத்துமென்புழித் து பகுதிப்பொருள் விகுதி. நூனெறியேயாயினும் உலகநெறியோடு பொருந்தாதன செய்யற்க, செய்யின் அது பழிக்குமென இயற்கையறிவாற் பயன் கூறியவாறு. (௭)

விளக்கம் :—மந்திரியானவன் தனக்கு வேண்டிய நூல்களைக் கற்று, அந்நூல்களில் சொல்லிய வழியே காரியங்களைச் செய்யும் திறங்களை யெல்லாம் அறிந்தவன் ஆயினும், அக்காலத்து நடக்கும் உலக இயற்கையும் அறிந்து அந்த இயற்கையோடு பொருந்தச் செய்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது உலக இயற்கையானது காலத்திற்குக் காலம் மாறுபடுமென்றும், நெடுங்காலத்திற்கு முன் எழுதிய நீதிகளானவை அக்காலத்திற்குப் பொருந்தாவென்றும், ஆதலால் காலம் மாறுதலுக்குத்தக்க அளவாக அரசனும், அவன் துணைவனாகிய மந்திரியும் செய்தல் வேண்டுமே அன்றி நூல் ஒன்றையே உறுதியாகக் கொண்டு அதன் வழி நடக்கப் புகுவாராயின் உலகத்தாரால் பழிக்கப்பட்டு உலகியல் அறிவில்லாதவர் என்று அவமானப்படுவாரென்றும், பொதுவாக நூல் அறிவு இருக்கினும் காலத்திற்கு ஏற்ற அளவாகச்செய்து அரசனுக்குப் புகழ்வரச் செய்பவனே துணைவனாகிய மந்திரியென்றும், என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், “ இவ்விதமெல்லாம் அறிந்து செய்வதற்கு அரசனும் வல்லவனாயிருந்ததுடன் மந்திரி சொல்வதைக் கேட்பவனுமாயிருத்தல் வேண்டுமன்றோ? அமைச்சனுக்கே யாவும் வேண்டுவனவோ ?” என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்.

638. அறிகொன் றறியா னெனினு முறுதி
யுழையிருந்தான் கூறல் கடன்.

(பரி.) இ-ள். அறிகொன்று அறியான் எனினும் = அறிந்துசொல்வாரது அறிவையுமழித்து அரசன் தானுமறியானேயாயினும்,—உறுதி கூறல் உழையிருந்தான் கடன் = அக்குற்ற நோக்கியொழியாது அவனுக்கு உறுதியாயின கூறுதல் அமைச்சனுக்கு முறைமை. எ-று.

அறிவென்பது முதனிலைத்தொழிற்பெயர். கோறல் = தான்கொள்ளாமை மேலும் இகழ்ந்துகூறுதல். உழையிருந்தானெனப் பெயர்கொடுத்தார். அமாத்தியரென்னும் வடமொழிப்பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின். உறுதி கூறுங்கால் அவனறிவெய்தற்குற்றத்தை உலகர் தன்

மேலேற்றமென்பார், 'கூறல்கடன்' என்றார். இவை பிரஸ்போட்டா னும் அவர் செயல் கூறப்பட்டது. (அ)



விளக்கம்:— அமைச்சன் ஒருவனுக்கு இருக்க வேண்டிய முறைமையாவது, உண்மையிதுவென்று உணர்ந்து சொல்லிய அவ்வுண்மையை அழித்தும், சொல்லிய அறிவையும் அழித்தும், அரசன் தானும் அறிந்துகொள்ள அறிவில்லாதவனாயிருக்கினும், அக்குற்றமுடைய அரசனை வெறுத்து ஒழித்து விடாது மேலும் மேலும் அவனுக்கு உறுதிதரும் விஷயங்களைக் கூறவேண்டும் என்பதே என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது மதியிலா அரசன் ஒருவன் தனக்கென்று உழைத்துவரும் உண்மை அறிவுடையோர் நல்ல விஷயங்களைச் சொல்லுங் காலத்து அவற்றை மேற் கொள்ளாமலும், கொள்ளாதிருப்பதுடன் சொல்லியவரையும் இகழ்ந்து கூறுவானாயினும், அக்காலத்தும், அருகிருந்து வேண்டுவனவற்றைச் செய்பவனென்னும், பெயரமைந்த அமாத்தியன் என்னும் அமைச்சன் உறுதியாயின விஷயங்களைச் சொல்லாவிடின், அவ் வரசன் துன்பம் அடையுங் காலத்து உலகோர் அரசன் குற்றமென்று கருதாது குற்றத்தை அமைச்சன்மீதே ஏற்றிப் பழிப்பார். ஆகலால் அரசன் செய்யும் அறிவிலாச் செயலுக்காக அவனைவிட்டு அகலாது அவனுக்கு வேண்டுவனவற்றைச் செய்தல் வேண்டும் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் குற்றத்தையும் குணமாகச் செய்யாத அமைச்சன் ஒருவன் அரசனுக்கு வாய்ப்பானாயின் அவ்வமைச்சன் எதுவாகக் கருதப்படுவான்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

639. பழுதெண்ணு மந்திரியிற் பக்கத்துட் டெவ்வோ
ரெழுபது கோடி யுறும்.

(பரி.) இ-ள். பக்கத்துள் பழுது எண்ணும் மந்திரியின் = பக்கத்திருந்து பிழைப்பவெண்ணும் அமைச்சனொருவனில் — ஓரெழுபதுகோடி தெவ் உறும் = அரசனுக்கு எதிர்நிற்பார் ஓரெழுபதுகோடி பகைவருமவர்.

எழுபது கோடியென்றதமிகப்பலவாய வெண்ணிற்கொன்று காட்டிய வாறு வெளிப்படைத்தலான் அவர் காக்கப்படுவேர், இவன் உட்பகையாய் நிற்றலாற் காக்கப்படானென்பது பற்றி, இவ்வாறு கூறினர். எழுபது கோடியுடக்கு கல்லரென்றுரைப்பாரும், எழுபது கூறு தலையென்று பாட மோதுவாருமுளர். (க)



விளக்கம் :—அரசனுக்குப் பக்கத்திலிருந்து காரியங்களைப் பிழைபடும்படிச் செய்யும் அமைச்சன் ஒருவன், அவ் வரசனுக்கு எதிராக நின்று அவனைத் தாக்கும் பகைவர் எழுபதுகோடி என்னிற் குச் சமானமாவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோவெனின், புறப்பகைவராகிய பகைவர் அளவற்றவர் அரசனுக்குத் தீங்கிழைக்க எண்ணினும் அவர் வெளிப்படையாக நின்று பகைமையைச் சாதித்தலால் அப்பகைமையினால் வரும் கேடுகளினின்றும் அரசன் தன்னைக் காத்துக்கொள்ளுதல் கூடு மென்றும், அவ்விதம் அல்லாது அமைச்சன் ஒருவன் உடனிருந்து எல்லாவற்றையும் அறிகின்றான் ஆதலால் அவன் செய்யும் தீங்கு ஒன்றினைத் தடுத்து அரசன் தன்னைக் காத்துக்கொள்ள முடியா தென்றும், உட்பகை ஒன்றிற்குப் புறப்பகை பலகோடியாயினும் சமானமில்லை யென்றும், அவ்வுட்பகையை முந்திக் காத்துக் கொள்ளல்வேண்டும் என்றுமறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இனி அமைச்சன் ஒருவன் பழுதெண்ணும் முறை மையைச் செய்தும் முடிக்குங்கால் முடிக்கும் ஆற்றலில்லாது செய் வானாயின் அவனை எவ்விதம் கூறல்வேண்டும்?" என்னலும், ஆசிரி யர் கூறலாயினர்.

640. முறைப்படச் சூழ்ந்து முடிவிலவே செய்வர்
திறப்பா டிலா அ தவர்.

(பரி.) இ-ள். முறைப்படச் சூழ்ந்தும் முடிவிலவேசெய்வர்=செய்யப் படும் வினைகளை முன் அடைவுபடவெண்ணி வைத்தும், செய்யுங் கால்அவை முடிவிலவாகவே செய்யாநிற்பர்—திறப்பாடு இலாதவர்=முடிக்

தற்கேற்ற கூறுபாடில்லாதார் ; (எ - று.)

அக்கூறுபாடாவன வந்த வந்த விடையூறுகட்கு ஏற்றவேற்ற பரிகார மறிந்து செய்தலும், தாழ்வின்றியாதலுமாம். பிழையாமலெண்ண அவ்வாராய் வைத்தும் செய்து முடிக்கமாட்டாருமுளரென்பதாம். இவையிரண்டு பாட்டானும் அமைச்சருள் விடப்படுவோரது குற்றம் கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—அமைச்சருள் சிலர் அரசனுக்காகச் செய்ய வேண்டிய காரியங்களை முன்னதாகவே முறைமுறையாக அடைவு



பட எண்ணிவகுத்து வைத்தும், அக்காரியங்களைச் செய்யுங்காலத்து முன் எண்ணியபடி முறையாகச் செய்யும் ஆற்றலிலராய் அக்கருமத்தைமுடியாமல் விட்டுவிடும் தகுதியுடையாரும் உளர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஏதேனும் இடையூறு வந்தகாலத்து வந்த இடையூறுகளுக்குத் தக்கனவாகிய பரிகாரங்களை அறிந்து செய்யவல்ல அறிவும், அது செய்யுங் காலத்து மனங்கலங்காமையுமாகிய கூறுபாடுகளில்லாத அமைச்சர் எவ்வளவு தான் நூல் அறிவு முதலிய கொண்டு செய்யவேண்டிய காரியங்களை முன்னரே எண்ணி இருந்தாராயினும் அக் காரியத்தை முடிக்கும் காலத்து முடிப்பதற்கு இல்லாமலே போவரென்று அறிந்தோம். ஆதலால் தீங்குநினைக்கின்ற அமைச்சனும், தீங்கு நினையாமலே எண்ணிய காரியத்தை எண்ணியவண்ணம் முடிக்கும் ஆற்றலில்லாத அமைச்சனும் ஆகிய இருவரும் அரசனது அமைச்சுத் தொழிலுக்கு உரியவர் ஆகாரென்றும், அவ்வித அமைச்சர் அரசன் சமூகத்தை விட்டு நீக்கப்படவேண்டுபவர் என்றும், கொள்ள வேண்டுபவர் சிறப்பையும், தள்ளவேண்டுபவர் குற்றங்களையும் கூறி, அமைச்சு என்னும் அதிகாரத்தை முடித்தனர் என்றனர். அது கேட்ட மாணுக்கர், " இவ்விதம் அமைச்சனது இலக்கணம் கண்டோம், இனி அமைச்சனுக்கு இருக்கவேண்டிய குணங்கள் பலவற்றையும் அறியவிரும்புகின்றோம்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

## 65. அதிகாரம்.
## சொல்வன்மை.

---

அஃதாவது தான் கருதிய வினை முடியுமாற்றால் அமைச்சிய லடத் தற் கேதுவாய சொற்களைச் சொல்ல வல்லனாதல். மேல் "ஒரு தலையாச் சொல்லலும் வல்ல" தென்றதனையே சிறப்புப்பற்றி விரித்துரைக்கின் றமையின், இஃது அமைச்சின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது அமைச்சனானவன் தான் எண்ணிய தொழிலை முடிக்கும் விதமாக அதற்கு ஏற்ற சொற்களும், சொல்லும் வல்லமையுமுடையவனாய் இருத்தல். மேல் அதிகாரத்தின் அமைச்

35



சனுக்குக் கூறிய இலக்கணத்துள் "தேர்ந்து செயலும் ஒருதலையாச் சொல்லலும் வல்லது அமைச்சு" என்ற திருக்குறளின்படி சொல் வன்மை என்னும் இவ்வதிகாரத்தை அமைச்சனுக்கு உரியவல் லமையுள் முதலாக எண்ணப்பட்டு இதனை இங்குக் கூறுகின்றனர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஐய? இச்சொல்வன்மை யாவர்க்கும் அமைவது அன்று. வெகுசிலர்க்கே அமைவது என்று கூறுகின்றனர். ஆதலால் இச்சொல்வன்மையின் திறமெலாம் அறிய ஆசைப்படுகின்றோம். கூறல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

641. நாநல மென்னு நலனுடைமை யந்நலம்
யாநலத் துள்ள தூஉ மன்று.

(ப-ரை.) இ-ள். நாநலம் என்னும் நலன் உடைமை = அமைச்சர்க்கு இன்றியமையாக் குணமாவது சான்றோரான் நாநலமென்று சிறப்பித்துச் சொல்லப்படும் நலத்தினையுடையராதல், — அந்நலம் யாநலத்து உள்ளதூஉம் அன்று. அந்நலம் பிறர்க்கும் பிறநலமெல்லாவற்றுள்ளும் அடங்குவதன்றி மிக்கதாகலான். எ-று.

தாவாதுளதாய நலமென விரியும். இந்நலம் உலகத்தைத் தம்வயத்த தாக்கும் அமைச்சர்க்கு வேறாகவேண்டுமென்னும் நீதிநூல் வழக்குப்பற்றி

'நாநலமென்னுநலன்' என்றும், பிறர்க்கும் இதுபோற்சிறந்தது பிறிதின் மையான் 'அந்நலம் யாநலத்துள்ளதூஉமன்று' என்றுங் கூறினர். பிரித் தல் பொருத்தல் முதலிய தொழிலில்லாதார்க்கும் இஃதின்றியமையாதாய பின் அத்தொழிலார்க்குக் கூறவேண்டுமோவென்பது கருத்து. (க)

விளக்கம் :— அமைச்சராயினார்க்கு இருந்தே ஆகவேண்டிய குணமாவது சான்றாண்மையுடைய பெரியோரால் நாக்கினால் உண்டாகும் நன்மை என்று வெகு சிறப்பாகச் சொல்லப்படும் நன்மையை உடையவராய் இருத்தல் என்றும் அவ்வித நாவினால் உண்

டாகும் நன்மையைக் காட்டிலும் வேறு நலம் சிறந்தது உலகத்து இல்லை யென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோ வெனின் நாக்கினால் உண்டாகும் நலமானது உலகத்தை ஒருவன் வசமாக்குவது ஒன்று ஆதலால் உலகத்தை ஆளும் அரசனது அமைச்சனுக் குள்ளான் ஒருவனுக்கு இந் நலமானது



இருந்தே ஆக வேண்டுமென்றும் கூறுகின்றனர். அன்றியும் பகைவர் துணைவரைப் பிரித்தலும், தமக்கு வேண்டிய துணைவரைக் கூட்டலும் ஆகிய தொழிலை மேற்கொள்ளாத ஏனைய மக்கட்கும் இந்நாநலம் வேண்டுவது ஒன்றாக இருத்தலால் அவ்வித பிரித்தலையும், கூட்டலையும் தனக்குக் கடனாகக் கொண்டுள்ள அமைச்சன் தொழில் இந்நாநலம் ஒன்றினால்தான் முடிதல் வேண்டும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இந்நாநலம்

இல்லாவிடில் அமைச்சனுக்கு எவ்வித தீங்கு வரும், இருக்குமா யின் எவ்வித நன்மை வரும்?" என்னலும், ஆசிரியர் கூறுவா ராயினர்.

642. ஆக்கமுங் கேடு மதனால் வருதலாற்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

(ப-ரை.) இ-ள். ஆக்கமுங் கேடும் அதனால் வருதலால் = தம்மரசற்கும் அங்கங்கட்கும் ஆக்கவழிவுகள் தஞ்சொல்லான் வருமாகலான், —சொல்லின்கண் சோர்வு காத்து ஓம்பல் = அப்பெற்றித்தாய சொல்லின்கட் சோர்தலை அமைச்சர் தங்கணிகழாமற் போற்றிக் காக்க. எ-று.

ஆக்கத்திற்கேதுவாய நற்சொல்லையும் கேட்டிற்கேதுவாய தீச்சொல்லையும் சொல்லாதவொப்புமைபற்றி, 'அதனால்' என்றார். செய்யுளாகலின், சுட்டுப்பெயர் முன்வந்தது. பிறர் சோர்வுபோலாது உயிர்கட்கெல்லாம் ஒருங்குவருதலால், 'காத்தோம்பல்' என்றார். இவையிரண்டொட்டானும் இஃது இவர்க்கின்றியமையாதென்பது கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—தம்முடைய அரசனுக்கும் ஏனைய அங்கங்களாகிய படைமுதலாகிய ஐந்து அங்கங்கட்கும் உயர்வு உண்டாவதும், அழிவு உண்டாவதும் தம்முடைய சொல்லால்வரும் ஆதலால் அவ்வித பெரியதகுதியுடைய சொல்லினிடத்தே சோர்வு உண்டாகாமையை அமைச்சரானவர் மிகுதியும் பயந்து, போற்றிக் காத்தல் வேண்டுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது உலகத்து மக்கள் சொல்வன்மையில்லாது ஏதேனும் ஓர் சொல்லைச் சொல்லி அதனிடத்தே சோர்வு உண்டாகுமாயின் அச் சோர்வின் பயனாக சோர்வுபட்ட ஒருவனும், அவனைச்சார்ந்த இனத்தவரும் நன்மை யிழந்து தீமையை அடைதல் கூடும். ஆயின் அமைச்சன் ஒருவன்



தான் சொல்லும் சொல்லில் சோர்வு படுவானாயின் அச்சோர்வின் பயனாக அவன் கெடுவது மாத்திரமல்லாமல் அரசனும் மேற்பட்ட குடிகள் அனைவரும் நன்மையை இழந்து தீமையை அடைவர் ஆதலால் அவ்வித மாய பொறுப்பினை வாய்ந்த அமைச்சனானவன் தான் ஒன்றைச்சொல்ல எண்ணியகாலத்து அது யாவர்க்கும் உயர்ச்சி

யைத் தரக்கூடியதாகிய சொற்களாக இருத்தல் வேண்டுமே அன்றி சிறிது மறப்பினும் சேர்ந்த சொற்களாயிருக்குமாயின் பெரியதோர்தீங்கு நிகழும். ஆதலால் அமைச்சனுக்கு இருக்கவேண்டிய குணங்களுள் சொல்வன்மை பெரியதாம் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித சொல்வன்மை யுடையான் ஒருவன் ஒன்றைச் சொல்லுங் காலத்து எவ்வித தகுதியோடு இருத்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

643. கேட்டார்ப் பிணிக்குந் தகையவாய்க் கேளாரும்
வேட்ப மொழிவதாஞ் சொல்.

(ப-ரை.) இ-ள். கேட்டார்ப் பிணிக்கும் தகை அவாய் = நட்பாயேற்றுக் கொண்டாரைப்பின் வேறுபடாமற் பிணிக்கும் குணங்களை அவாவி— கேளாரும் வேட்ப மொழிவது = மற்றைப் பகையாய் ஏற்றுக்கொள்ளாதாரும் பின் அப்பகைமையொழிந்து நட்பினை விரும்பும்வண்ணஞ் சொல்லப்படுவதே—சொல்லாம் = அமைச்சர்க்குச் சொல்லாவது. எ - று.

அக்குணங்களாவன வழுவின்மை, சுருங்குதல், விளங்குதல், இனிதாதல், விழுப்பயன்றருதலென்றிவை முதலாயின. அவற்றை யவாவுதலாவது சொல்லுவான் குறித்தனவேயன்றி வேறு நன்குணர்வுடையோர் கொள்வனவற்றின் மேலும் நோக்குடைத்தாதல். அவாவென்னுஞ் செய்தெனெச்சம் மொழிவதென்னுஞ் செயப்பாட்டு வினைகொண்டது. இனிக் கேட்டார் கேளாரென்பதற்கு நல்கேட்டார் கேளாதாரெனவும், வினவியார் வினவாதாரெனவுமுரைப்பாருமுளர். தகையவாவென்பதற்கு எல்லாருந் தகுதியை யுடையவாவென்றுரைத்தார்; அவர் அப்பன்மை மொழிவதென்னும் ஒருமையோடு இயையாமை நோக்கிற்றிலர். இதனாற் சொல்லினிலக் கணங்கூறப்பட்டது. (௩)

விளக்கம்:—அமைச்சர்க்குச் சொல்வன்மை என்று சொல்லப்படுவது தம்மை நட்பால் விரும்பிக் கொண்டாரை மறுபடியும் தம்மி



டத்தினின்றும் நீங்காவண்ணம் தம்மைத் தழுவிக்கொள்ளும் குணங்களை உடையதாய், தம்மிடத்துப்பகைமை விரும்பி நட்புகொள்ளா

தாரையும் தன்னிடத்தே உள்ள பகைமை நீங்கி "இவரிடத்தே நட்புகொள்ளல் வேண்டும்" என்று விருப்பம் வரும்வண்ணம் சொல்லப்படுதாய் இருத்தல் வேண்டுமென்று இத்திருக்குறள் கூறு கின்றது. அதாவது சொற்களைச் சொல்லுங்கால் தவறுபடாதிருத்தலும், சுருக்கமாகச் சொல்லுதலும், விளங்கும்படிச் செய்தலும், இனிமையுடையனவா யிருத்தலும், பெரும்பயன் தருதலும் ஆகிய குணங்களை உடையனவா யிருத்தல் வேண்டுமென்றும் அன்றியும், அச்சொற்களின் பயன்தான்சொல்லும் குறிப்பனவாகப் பொருளைத் தருவது மாத்திரமல்லாமல் நட்பமாகிய நூல் வல்லவர் உணர்வோடு ஒத்திருத்தலாய் இருத்தல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இத்திருக்குறளால் பொதுவாகவே சொல்லின்வன்மை இவ்விதமிருத்தல் வேண்டுமென்று அறிந்தோம். ஆயின் அமைச்சன் ஒருவன் யாரிடத்தும் தன் சொல்வன்மையைக் கொண்டு சொல்ல ஆரம்பிக்கக் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

644. திறனறிந்து சொல்லுக சொல்லை யறனும்
பொருளு மதனினூஉங் கில்.

(ப-ரை.) இ-ள். சொல்லைத் திறன் அறிந்து சொல்லுக=அப்பெற்றித்தாய சொல்லை அமைச்சர் தம்முடையவும் கேட்பாருடையவுமாய திறங்களை யறிந்து சொல்லுக,—அதனின் ஊங்கு அறனும் பொருளும் இல்=அவ்வாறு சொல்லுதற்கு மேற்பட்ட அறனும் பொருளுமில்லையாகலான்; எ-று.

அத்திறங்களாவன குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், செல்வம், உருவம், பருவமென்பனவற்றான் வருந்தகுதிவேறுபாடுகள். அவற்றை யறிந்து சொல்லுதலாவது அவற்றால் தமக்கும் அவர்க்குமுளவாய உற்றத்தாழ்வுகளை யறிந்து அவ்வம்மரபாற் சொல்லுதல். அஃது உலகத்தோடொட்டவொழுகலையும் இனிமையையும் பயத்தலின் அறனுமாயிற்று; தங்காரியமுடித்தலிற் பொருளுமாயிற்று. அறனும் பொருளுமெனக் காரணத்தைக் காரியமாக்கிக் கூறினார். (௪)

விளக்கம் —மேற்கூறியவண்ணம் இலக்கணம் வாய்க்கதாகிய சொல்லினை அமைச்சர் சொல்லுங்காலத்துத் தம்முடைய திறங்களை

யும், கேட்பாருடைய திறங்களையும் அறிந்து சொல்லுதல் வேண்டுமென்றும், அவ்விதம் அறிந்து சொல்வதினும் மேலாகிய அறமும், பொருளும் இல்லையென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதுவென்னையோ வெனில் ஒருவனிடத்தே சொல்லும்போது அவனுடைய குடிப்பிறப்பு, அவனுக்கு உள்ளகல்வி, அவன் ஒழுகுகின்ற ஒழுக்கம், அவனுக்கு உள்ள செல்வம், அவனுடைய உருவம், அவனுடைய வயது என்கின்ற அறுவித தகுதியையும் நன்றாக அறிந்தும் அவனுக்கும் தமக்கும் உள்ளனவாகிய ஏற்றத் தாழ்வுகளை எல்லாம் நன்றாக அறிந்து சொல்லுதல் வேண்டுமென்றும், இவ்வாறு தகுதியறிந்து சொல்லுதல் உலகத்தோடு ஒட்ட ஒழுகும் ஒழுக்கமாக இருக்குமென்றும், இனிமைபயத்தலால் அறச்செயலும் ஆகுமென்றும், தாம் எண்ணிய காரியம் முடிதலால் பொருள் செயலாயிற்றென்றும் ஆகதிறங்களை அறிந்து சொல்லும் சொல் வன்மை என்றுகண்டோ மென்றனர். அது கேட்ட மாணாக்கர், “இவ்வித தகுதிகளை எல்லாம் ஆராய்ந்து சொல்லும் சொல் அறமும், பொருளும் தருவதாயினும் இவன் சொல்லும்சொல் ஒன்றும் மற்றொருவரால் அழிக்கப்படுவதாக இருத்தல் கூடாதன்றோ?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

645. சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொ லச்சொல்லை
வெல்லுஞ்சொ லின்மை யறிந்து.

(ப-ரை.) இ-ள். சொல்லைப் பிறிது ஓர்சொல் வெல்லும்சொல் இன்மை அறிந்து=தாஞ்சொல்லக்கருதிய சொல்லைப் பிறிதோர் சொல்லால் வெல்ல வல்லதொருசொல் இல்லாமையறிந்து,—அச்சொல்லைச் சொல்லுக=பின் அச்சொல்லைச் சொல்லுக. எ-று.

பிறிதோர்சொல்=மாற்றாரது மறுதலைச்சொல். வெல்லுதல்=குணங்களான் மிகுதல். அதுவே வெல்லச்சொல்லுகவென்பதாம். இனிப் பிறிதோர்சொல் வெல்லுஞ் சொல்லெனச் செவ்வெண்ணாக்கி, ஒத்தசொல்லும் மிக்கசொல்லு முளவாகாமற் சொல்லுகவென்றுரைப்பாருமுளர். இது சொற்பொருட்பின் வருநிலை. (௫)

விளக்கம்:—அமைச்சனானவன் தான் ஏதேனும் ஒன்றைச் சொல்ல எண்ணி ஓர் சொல்லைச் சொல்லப் புகுவானாயின் இவன்



சொல்லிய சொல்லை மற்றொரு சொல்லால் வெல்லக் கூடாததாய் அறிந்து சொல்லுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒன்றைச் சொல்வதற்கு முன்னே நாம் சொல்லும் சொல் பகைவர்களது சொல்லால் வெல்லப்பட்டு ஒழிந்து போகாது பகைவரும் இவர் சொல்லிய சொல்லே குணங்களால் மிகுந்து உள்ளது. ஆதலால் இவர் சொல்லும் சொல்லைத் தடுத்தற் கில்லை இவர் வழியே நாம் நிற்றல் வேண்டும் என்று சொல்லும் படி ஆய்ந்து சொல்லல் வேண்டும் என்று அறிந்தோம். அன்றியும், இவர் சொல்லும் சொற்களுக்கு ஒப்பாகவேனும், உயர்வாகவேனும் வேறு சொற்கள் மாற்றார் ஆய்ந்து சொல்லாவண்ணமும் சொல்லு தல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்வித வல்லமையுடைய அமைச்சனானவன் தனக்கு ஒரு சிறிதும் ஒப்பில்லாத ஒருவன் ஏதேனும் சொல்லப் புகுந்தால் அதனையும் கேட்டல் வேண்டுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

646. வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோட
மாட்சியின் மாசற்றார் கோள். [ன்

(ப-ரை.) இ-ள். வேட்பத் தாம் சொல்லிப் பிறர் சொற்பயன் கோடல்= பிறர்க்குத் தாஞ்சொல்லுங்கால் அவர் பின்னுங்கேட்டலை விரும்புமாறு சொல்லி, அவர் தமக்குச் சொல்லுங்கால் அச்சொல்லின் பயனைக் கொண் டொழிதல்—மாட்சியின் மாசு அற்றார்கோள்=அமைச்சியலுட் குற்றமற்றா ரது துணிபு. எ-று.

பிறர்சொற்களுட் குற்றமுளவாயினும் அவை நோக்கிஇகழாரென்ப தாம். வல்லாரையிகழ்தல் வல்லுநர்க்குத் தகுதியன்மையின், இதுவு முடன் கூறினர். இவை மூன்று பாட்டானும் அதனைச் சொல்லுமாறு கூறப்பட்டது. (அ)

விளக்கம்:-அமைச்சுத் தொழிலில் சிறிதும் குற்ற மற்றவராய் உள்ளவர் செயலாவது தாம் ஏதேனும் மற்றவர்க்கு ஒன்றைச் சொன்னால் அச் சொல்லிய சொல்லை மற்றொரு முறை அவர் விரும்பிக் கேட்குமாறு சொல்லியும், கேட்டவர்களாகிய அவர்கள் தமக்கு ஏதேனும் ஒன்றைச் சொல்லு மிடத்து அச் சொல்லின் தகுதியை



நோக்காது பயனை மாத்திரம் கொண்டு நின்றும் இருத்தல் வேண்டுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது தாம் சொல்லைச் சொல்லுமிடத்து அச்சொல்லின் குணங்கள் யாவும் தகுதியுடையனவாக இருப்பனகண்டு இவ்வித சொல்லினை மற்றொரு முறை இப்பெரியாரிடத்துக் கேட்டல் கூடுமோ? என்று கேட்டார் அவாவி நிற்கும்படித் தாம் சொல்லுதலுடன் பிறர் தமக்கு ஏதேனும் சொல்லுமிடத்து அவர்கள் சொல்லும் சொற்களுள் எத்துணைக் குற்றங்கள் இருக்கினும் அக்குற்றங்களை நோக்காது அச் சொல்லில் உள்ள பயன் எதுவென்று கொள்ளுதல் வேண்டுமென்றும் அதுவே அமைச்சாது தகுதியென்றும் அறிக்தோம், ஆதலால் நீங்கள் மேல்விளவிய வண்ணம் அமைச்சர் வல்லவராயிருப்பாராயின் எனைபோரை இகழ்தல்கூடாது என்பது பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், “ இவ்வித பெரியதகுதி உடைய அமைச்சன் ஒருவனை மாறுபடுத்தி வேறு ஒருவரும் வெல்லுதல் ஆகாதுபோலும் ” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

647. சொலல்வல்லன் சோர்வில னஞ்சா னவனை
யிகல்வெல்லல் யார்க்கு மரிது.

(ப-ரை.) இ-ள். சொலல் வல்லன்=தானெண்ணிய காரியங்களைப் பிறர்க்கேற்பச் சொல்லுதல் வல்லனும்—சோர்வு இலன்=அவை மிடப்பலவாய வழி ஒன்றினுஞ் சோர்விலனும்—அஞ்சான்=அவைக்கஞ்சானுமினுன் யாவன்—அவனை இகல் வெல்லல் யார்க்கும் அரிது=அவனை மாறுபாட்டின்கண் வெல்லுதல் யாவர்க்கு மரிது. எ-று.

ஏற்பச்சொல்லுதல்=அவர்க்கு அவை காரியமல்லவாயினும் ஆமெனத்

துணியும் வகை சொல்லுதல். சோர்வு=சொல்லவேண்டுவதனை மறப்பா னொழிதல். இம்மூன்று குணமுமுடையானை மாற்றாராய்ப் பிரித்தல் பொருத்தல் செய்து வெல்வாரில்லை யென்பதாம். (எ)

விளக்கம்:—அமைச்சன் ஒருவன் தான் எண்ணிய காரியங் களைப் பிறர்க்குச் சொல்லுங்காலத்து அவர்கள் ஏற்றுக்கொள்ளும் வண்ணமாகச் சொல்லுதல் வல்லவனும், அவ்விதம் சொல்லும் சொற்கள் மிகப் பலவாயிருந்தாலும் அவற்றுள் ஒன்றையும் மறந்து விடாது சொல்லவல்லவனும் அவ்விதம் வன்மைகொண்டு சொல்



லுங்காலத்துத் தான்சொல்லும் சபைக்குப் பயப்படாதவனும் இருப்பானாயின் அவ்வித தகுதியுடைய அமைச்சனை வேறுபாட்டி னால் வென்றுவிடுதல் எவராலும் முடியாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோவெனில் தான் ஓர் சொல்லைச் சொல்லப் புகுந்தவிடத்து அச்சொல்லால் ஆகிய காரியம் கேட்பாரா கிய பிறர்க்குப் பொருந்தும் காரியமாக இராவிடினும் அக்காரியமும் தமக்கு ஆகும் காரியம் என்று அவர் துணிந்து தம்மைச்சேரும்விதம் சொல்லுதலும், அவ்விதம் சொல்லுங்கால் ஒன்றினையும் விடாது மறப்பென்பதே இல்லாமல் எல்லாவற்றையும் சொல்லுதல் வேண்டு மென்றும், இவ்விதம் சொல்வான் ஒருவனை மாற்றார் எவரும் இவ னோடு உள்ளாரைப் பிரித்தலும் இவனுக்கு எதிராகத் தமக்குத் துணைவரைச் சேர்த்தலும் முடியாமல் இவனை வெல்வதற்கு இல்லா மல்போம். ஏனெனின் உலகம் முழுவதும் இவன் சொல்லும் சொல்லே சொல். இதுவே அறம், பொருள், இன்பத்தைப் பயப் பது என்று கொள்வாராயின் மாற்றார் வெல்லுதல் கூடாது என்பது பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித சொல் வன்மையுடைய அமைச்சனிடத்து உலகம் எவ்விதம் நடந்துகொள் ளும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

648. விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்.

(பரி.) இ-ள். தொழில் நிரந்து இனிது சொல்லுதல் வல்லார்ப் பெறின்=சொல்லப்படுங்காரியங்களை நிரல்படக் கோத்து இனிதாகச்

சொல்லுதல் வல்லாரைப் பெறின்,—ஞாலம் விரைந்து கேட்கும்=உலகம் அவற்றை விரைந்தேற்றுக்கொள்ளும். எ-று.

தொழில்—சாதியொருமை. நிரல்படக் கோத்தல்=முன்சொல்வன வும் பின்சொல்வனவு மறிந்து அம்முறையே வைத்தல். இனிதாதல்= கேட்டார்க்கின்பம் பயத்தல். "சொல்லுதல்வல்லான் றாருமிலரு ளொருவன்" என்ற வடமொழிபற்றிப் 'பெறின்' என்றார். கண்டுக் கேட்டல்=ஏற்றுக்கோடல். இவை பிரண்டொட்டானும் அவ்வாற்றுற் சொல்லுதல் வல்லாரது சிறப்புக் கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—சொல்லப்படும் காரியங்களை வரிசையாகக் கோத்து இனிமையோடு சொல்லவல்லவரை இவ்வுலகம் பெறுமாயின் அவ்

36



வித காரியங்களை உலகமானது விரைந்து ஏற்றுக்கொள்ளும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, காரியங்களைச் சொல்லு மிடத்து முன் சொல்லவேண்டுவன இவை, பின்சொல்லவேண்டு வன இவை என்று மனத்தால் ஆய்ந்து அறிந்து, அறிந்தவண்ணமே சொல்லுங்காலத்து முறையாகச் சொல்லுதல் வேண்டும் என்றும் அவ்விதம் முறையாகச் சொல்லும் காலத்தும் கேட்பவர்க்கு இன் பம் கொடுக்கக்கூடியதாக இருத்தல் வேண்டுமென்றும் அறிந் தோம். ஏனெனில் கல்வி கேள்விகளில் வல்லவனாயிருப்பவன் ஒருவன், சொல்வதிலும் வல்லவனாய் இருப்பான் என்பது கூடாது. அதனாலேயே வடநூல் வல்லவர் கற்றவர்களிலும் சொல்லுதல் வல்ல வர் லக்ஷத்தில் ஒருவன் என்று கூறுகின்றனர். தமிழ் நூலாரும் "ஆர்ந்த சபை நூற்றொருவர் ஆயிரத்தொன்றாம் புலவர் வார்த்தை பதினாயிரத்து ஒருவர்." என்றும் கூறுகின்றார் ஆதலால் தான் அறிந்தவற்றைப் பிறர்க்கு வரிசைபட மறவாது சொல்லுகின் றவன் இருப்பானாயின் அவன் ஏவிய தொழிலைச் செய்வதற்கு உலகத்தார் அவனை விரைந்து சேர்வர். அதாவது அவன் சொல் வழியே நடப்பர் என்று அறிந்தோ மென்றனர். அதுகேட்ட

மாணாக்கர், "இவ்விதம் சொற்களைச் சொல்லுமிடத்து மிகச் சுருக்கமும் இனிமைபடவும் இருத்தல் வேண்டுமென்றோ! சிலர் ஓர் காரியத்தைச் சொல்லும் காலத்து விடாது மழைபொழிவது போல் நெடும்போது பேசுகின்றனரே. அது என்னை?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

**649. பலசொல்லக் காமுறுவர் மன்றமா சற்ற**
**சிலசொல்ல றேற்றா தவர்.**

(பரி.) இ-ள். மாசு அற்ற சில சொல்லல் தேற்றாதவர் = குற்றமற்றனவாய்ச் சிலவாய வார்த்தைகளை அவ்வாற்றாற் சொல்லுதலை யறியாதார் — பல சொல்லக் காமுறுவர் = பலவாய வார்த்தைகளைத் தொடுத்துச்சொல்ல விரும்புவர். எ-று.

குற்றம் = மேற்சொல்லிய குணங்கட்கு மாறாயினவாயின. இடைவிடாது பலசொல்லுதலையுஞ் சொல்வன்மையென்று விரும்புவாருமுளர். அவர் இவ்வாறு சொல்லமாட்டாதாரே, வல்லார் அது செய்யாரென வலியுறுப்பார், 'மன்ற' என்றார். (௯)



விளக்கம்:—குற்றங்களில்லாதவாய், உள்ள சில வார்த்தைகளை முறைபடச் சொல்லுதலை அறியாதவர்களே பலபல வார்த்தைகளைச் சேர்த்துச் சொல்ல ஆசைப்படுவார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது மேற்சொல்லிய அறுவித குணங்களையும் அறியாத மாந்தரே பலபேசுவோமாயின் சொல்வன்மையென்று உலகோர் விரும்புவரென்றெண்ணி பயன்தாராத சொற்களைச் சொல்லுவரே அன்றி, சொல்லின் பயனறிந்த பெரியோர் சில சொற்களால் சிறு பொழுதிலேயே தாம் சொல்ல எண்ணியவாவும் சொல்லிமுடிப்பர். அதுவே சொல்வன்மையாகும். அதனையே சுருங்கச் சொல்லல், விளங்க வைத்தல் என்னும் உத்திக்கு இயன்றதாகும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் தாம் கற்றுப் பிறர்க்குச் சொல்லும் வல்லமை இல்லாதாரைத் தெய்வப்புலவர் என்னென்று கூறுகின்றனர். அறிவித்தல்வேண்டும்" என்னலும் ஆசிரியர் கூறுவாராயினர்.

650. இணரூழ்த்து நாறா மலரனையர் கற்ற
துணர விரித்துரையா தார்.

(பரி.) இ-ள். கற்றது உணர விரித்து உரையாதார்=கற்றதனைத்த நூலைப் பிறரறியும்வண்ணம் விரித்துரைக்கமாட்டாதவர்—இணர் ஊழ்த்தும் நாறா மலர் அனையர்=கொத்தின்கண்ணே மலர்ந்திருந்தும், நாறாத பூவை யொப்பர். எ-று.

செவ்விபெற மலர்ந்திருந்தும் நாற்றமில்லாத பூச்சூடப்படாத வாறு போல நூலைக் கற்றிருந்துஞ் சொல்லமாட்டாதார் நன்குமதிக்கப் படாரென்றமையின், இது தொழிலுவமையாயிற்று. இவை யிரண்டுபாட் டானும் அது மாட்டாதாரதிழிபு கூறப்பட்டது. (50)

விளக்கம்:—தாம் படித்துவைத்த நூலினைப் பிறர் தெரிந்து கொள்ளும் வண்ணம் விரித்துச் சொல்லமாட்டாதவர் கொத்தினி டத்தே மலர்ந்திருந்தும் மணங்கொடாத பூவொன்றினையே ஒப்பா வார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோ வெனின், பார்ப்பவர் கண்களுக்கு அழகு தரும்படிப் பூக்களா னவை மலர்ந்திருந்தும் அப் பூக்கள் வாசனை இல்லாவிடின் அவற்றை எவரும் முடித்துக் கொள்ளாதது போல் நூல்களை எவ்வ



ளவு படித்திருக்கினும் அவற்றைச் சொல்லும் சொல்வன்மையில் லாவிடின் உலகோர் ஏற்றுக்கொள்ளமாட்டார். ஆதலால் சொல் வன்மை இல்லாதாரை உலகோர் மதியாரென்றும் அவர் கற்றல் அவருக்கும், பிறருக்கும் பயன்படா தென்றும் அறிந்தோம் என் றனர். அதுகேட்ட மாணாக்கர், " அமைச்சனது சொல்வன்மை யால் ஆகும் பயனையும் சொல் வல்லமை யில்லாமையால் உண்டா கும் குற்றத்தையும் அறிந்தோம். இனி அவன் செயலாலாகிய குணங்களை அறிய விரும்புகின்றோம் " என்னலும், ஆசிரியர் கூற லாயினர்.

---

## 66. அதிகாரம்.

# வினைத்தூய்மை.

அஃதாவது செயப்படும் வினைகள் பொருளேயன்றி அறமும் புகழும் பயந்து நல்லவாதல். சொல்லேயன்றிச் செயலும் நன்றாகவேண்டுமென்னின்றமையின், இது சொல்வன்மையின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது அமைச்சன் செய்யப்படும் தொழில்கள் பொருள் ஒன்றினைத் தருதலோடு அறத்தையும், புகழையும் கொடுத்து நன்மையுடையனவாய் இருத்தல். ஒருவன் தான் சொல்லும் சொல் மாத்திர மல்லாமல் அவன் செய்யும் செயல்களும் நன்மையாய் இருத்தல் வேண்டுமாகையால் இவ் வினைத் தூய்மை யென்பது சொல்வன்மை என்னுமதிகாரத்துக்குப் பின்வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணுக்கர் "செய்யும் செயலும் தூய்மை பெற்றிருத்தல் வேண்டும் என்பதின் இலக்கணத்தை அறிய விரும்புகின்றோம்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

651. துணைநல மாக்கந் தரூஉம் வினைநலம்
வேண்டிய வெல்லாந் தரும்.

(பரி.) இ-ள். துணை நலம் ஆக்கம் தரூஉம் = ஒருவனுக்குத் துணையது நன்மை செல்வமொன்றனையுங்கொடுக்கும் ;—வினை நலம் வேண்டிய எல்



லாம் தரும் = அவ்வளவன்றி வினையது நன்மை அவன் வேண்டியன யாவற்றையுங் கொடுக்கும். எ-று.

வேண்டியவெல்லாமென்றது இம்மைக்கண் அறம் பொருளின்பமுதலாயவற்றையும் மறுமைக்கட்டான் விரும்பிய பதங்களையும். இதனாற் காணப்படுந்துணைநன்மையினுங் கருதப்படும் வினைநன்மை சிறந்ததென வினைத்தூய்மையது சிறப்புக் கூறப்பட்டது. (க)

விளக்கம்:—ஒருவனுக்குக் கிடைத்த நல்லதுணையானது செல்

வம் ஒன்றினையே தருதல் கூடுமென்றும் ஆனால் ஒருவன் செய்யும் தொழிலின் நன்மையானது அப் பொருள் ஒன்று மாத்திர மல்லாமல் அவன் வேண்டுகின்ற எல்லாவற்றையும் கொடுக்கு மென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஒருவனுக்கு நல்ல துணைவர் வாய்ப்பாராயின், அத்துணைவரின் பலத்தால் எடுத்த காரியத்தை முயன்று செய்து அதன் பயனாகிய பொரு ளொன்றினையே பெறுதல் கூடுமென்றும், ஆயின் தான் செய் கின்ற காரியம் மிக நன்மையுடையதா யிருக்குமாயின் அந் நன்மை யினால் இம்மையிலடைய வேண்டிய அறம், பொருள், இன்பம் எல்லாவற்றையும் அடைவதோடு மறுமையிலேயும் அவன் எப் பதத்தை விரும்பினானோ அப்பதவியையும் அடைதல் கூடுமென் றும், ஆதலால், காணப்படுவதாகக் காணப்படும் துணையினது நன்மையைவிட மனத்தால் கருதப்படும் வினையினது நன்மை சிறந்ததென்று எண்ணப்படும். தொழில் நலமே சிறப் புடையது என்று அறிந்தோம் என்றனர் அதுகேட்ட மாணாக் கர், "இதனால் வினைத்தூய்மையானது இம்மை, மறுமையைத் தரும் என்று அறிந்தோம். அவ்வித வினைத்தூய்மையில்லாத காரி யத்தை அமைச்சன் எது கருதியும் செய்தல்கூடாது போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

652. என்று மொருவுதல் வேண்டும் புகழொடு
நன்றி பயவா வினை.

(பரி.) இ-ள். புகழொடு நன்றி பயவா வினை = தம்மரசனுக்கு இம் மைக்கட் புகழும் மறுமைக்கண் அறமும் பயவாத வினைகளை — என்றும் ஒருவுதல் வேண்டும் = அமைச்சர்க்கு எக்காலத்தும் ஒழிதல்வேண்டும். எ - று.



பெறுதல், சுருங்கல், இடைமிற்றலென்னும் நிலைவேறுபாடு காலத் தான் வருதலின், 'என்றும்' என்றார். வேண்டுமென்பது ஈண்டு இன்றி யமையாதென்னும் பொருட்டு. (உ.)

விளக்கம்:—அமைச்சரானவர் தம்முடைய அரசனுக்கு இம்மையில் அடையவேண்டிய புகழையும் மறுமையி லடையவேண்டிய அறத்தின் பயனையும் உண்டாக்காத தொழில்களை எக்காலத்தும் செய்யாதிருத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மேற்கூறிய அளவாக எவ்விதமேனும் பொருள் ஒன்றைச் சேர்த்துத் தம் மரசனுக்குப்பெருமையை உண்டுபண்ணுவதில் பயனில்லை என்றும், செய்கின்ற வினையின் தகுதியால் அரசனுக்கு இம்மையிலடைய வேண்டிய புகழை எக்காலத்தும் உண்டுபண்ணக் கூடியதாயும், செல்வம் பெருகுவது, சுருங்குவது, கடுவாக இருப்பது என்னும் எந்தக் காலத்திலும் வேறுபாடில்லாமையும், அறத்திற்கு மாறில்லாமையாய் அறத்தின்வழி நடத்தலும் ஆகிய செயல்களையே செய்தல் வேண்டுமென்றும், அவ்விதம் செய்வதே அமைச்சர் கடமை என்றும் அறிக்தோ மென்றனர். அதுகேட்ட மாணுக்கர், "பொருளொன்றிருக்கின் எல்லாம் கைகூடுத லாகாதோ? புகழ் என்பதுமொன்று வேண்டுமோ ?" என்னலும் ஆசிரியர் கூறுவாராயினர்.

653. ஓஒதல் வேண்டு மொளிமாழ்குஞ் செய்வினை
யாஅது மென்னு மவர்.

(பரி.) இ-ள். ஆதும் என்னுமவர்=மேலாகக்கடவேமென்று கருதுவார்—ஒளிமாழ்கும் வினை செய் ஓதல்வேண்டும்=தம்மொளிகெடுதற்குக் காரணமாய வினையைச் செய்தலைத் தவிர்க. எ-று.

ஓதல்வேண்டுமென்பது ஒரு சொன்னீர்மைத்து. ஓவுதலென்பது குறைந்து நின்றது; ஒளி தாமுளகாலத்து எல்லாராலும் நன்குமதிக்கப் படுதல். செய் யென்னும் முதனிலைத்தொழிற்பெயர் மாற்றப்பட்டது. அன்றிச் செய்வினையென வினைத்தொகையாக்கியவழிப் பொருளின்மை யறிக. ஒளி கெடவருவது ஆக்கமன் றென்பதாம். (௩)

விளக்கம்:—உலகத்து நாம் நன்மைப்பட வேண்டுமென்று எண்ணுபவரெவரோ, அவர் எக்காலத்தும் தம் ஒளி கெடுவதற்குக்

காரணமாயிருக்கும் தொழில்களைச் செய்யாதிருத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஒருவன் பொருளைத் தேடுங்கால் தான் உள்ள காலத்து அடைகின்ற நன்குமதிப்பினை அடையச் செய்யும் ஒளியினை இழப்பதற்கு ஆசைப்படாது நல்வழியில் பொருளைத்தேடுதல் வேண்டுமென்றும், பொருளொன்றைக் கருதி நன்கு மதிப்பை இழந்துகொள்ளுதல் கூடாதென்றும் அவ்விதம் நன்குமதிப்பினை இழந்து அடைகின்ற பொருளால், வரும் மேன்மை மேன்மையாகாதென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஒருவன் தனக்கு யாதொரு துன்பமும் இல்லாதகாலத்து அவ்விதம் நல்வழியிலேயே பொருளைச் சம்பாதித்தல் கூடும். ஆனால் மிகத்துன்பமாக உள்ளகாலத்து நன்மை நிலையினை எவ்வாறு பகுத்துணர்ந்து எவ்வாறு பொருள்தேடுவர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

654. இடுக்கட் படினு மிளிவந்த செய்யார்
நடுக்கற்ற காட்சி யவர்.

(பரி.) இ-ள். இடுக்கட்படினும் இளிவந்த செய்யார்=தாமிடுக்கணிலேபடவரினும், அது நீர்தற்பொருட்டு முன் செய்தார்க்கு இளி வந்த வினைகளைச் செய்யார்—நடுக்கு அற்ற காட்சியவர்=துளக்கமற்ற தெளிவினையுடையார். எ-று.

சிறிதுபோழ்திற் கழிவதாய இடுக்கணுக்கு எஞ்ஞான்றுங் கழியாத இழிவு எய்தற்பாலதன்றென்பதூஉம் அஃதெய்தினும் வருவது வருமென்பதூஉம் தெளிவாராகலால், 'செய்யார்' என்றார். (௪)

விளக்கம்:—மனக்கலக்குதலில்லாத தெளிவினையுடைய பெரியோர் தமக்கு எவ்வளவு துன்பம்வந்த காலத்தும் அத்துன்பத்தைத் தீர்த்துக்கொள்ளும் பொருட்டுத் தம் குடிக்கு இழிவாகிய பழிவரும் தொழில்களைச் செய்யமாட்டார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது ஒருவனுக்குத் துன்பம் வருமாயின் அத்துன்பத்தை இன்பமாகக் கருதுதல் வேண்டும் என்று முன் கூறிய அளவே

ருதுவானுயின் அவனுக்கு வந்த துன்பமானது அவனிடத்து கெடும்பொழுது இல்லாது சிறுபொழுதில் நீங்கி விடுதல் கூடும். அவ்விதம் சிறுபொழுதில் நீக்கக்கூடிய துன்பத்தின் பொருட்டு எக்



காலத்தும் தன் முன்னோர்க்கும், தனக்கும் தன் பின்வருபவர்க்கும் நீங்காத பழியை உண்டுபண்ணுதல் கூடாதென்றும், அவ்வாறு பழிக்கக் கூடிய தொழில்களைச் செய்து துன்பத்தைத் தொலைக்க எண்ணினாலும் ஊழ்வலியால் வருகின்ற பொருள் ஒன்றே வந்து நிருமென்றும், அறிந்த அறிவுடைய பெரியோர் எக்காலத்தும் பழிக்கப்படுவனவாகிய காரியங்களைச் செய்ய மாட்டார்களென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணக்கர் "அறிவுடையோர் செய்யார் என்றமையால் அறிவிலாராயிருந்து செய்பவர்க்குப் பின் வரும் துன்பம் எது?" என்னலும் ஆசிரியர் கூறுவாராயினர்.

655. எற்றென் றிரங்குவ செய்யற்க செய்வானேல்
மற்றன்ன செய்யாமை நன்று.

(பரி.) இ-ள். எற்று என்று இரங்குவ செய்யற்க=யான் செய்தது எத்தன்மைத்தென்று பின் றுனேயிரங்கும் வினைகளை ஒருகாலுஞ் செய்யாதொழிக ;—செய்வானேல் மற்று அன்ன செய்யாமை நன்று—அன்றி ஒருகால்மயக்கி அவற்றைச் செய்யுந் தன்மையனுயினுனுயின், பின்னிருந்து அவ்விரங்கல்களைச் செய்யாதொழிதல் நன்று. எ-று.

இரங்குவவென முன்வந்தமையிற் பின் அன்னவெனச் சுட்டியொழிந்தார். அவ்வினைகளது பன்மையான், இரக்கமும் பலவாயின. அச்செயற்குப் பின்னிருந்திரங்குவனுயின், அது நீரும் வாயிலறிந்திலனெனவும், திட்பமிலனெனவும், பயனில்லன செய்தின்றுனெனவும், தன்பழியைத் தானே தூற்றுகின்றுனெனவும், எல்லாருமிகழ்தலிற் பின்னிரங்காமை 'நன்று' என்றார். இதுவும், வினைத்தூயார் செயலாகலின், உடன் கூறப்பட்டது. பிற்றொடர்தற்குச் செய்வானுயின் அவைபோல்வனவுஞ் செய்யாமை நன்றெனப் பிறரெல்லாம் இயைபற வுரைத்தார். (௫)

விளக்கம்:—ஒருவன் தான் செய்த காரியம் எவ்வித தன்மை யுடையதென்று பின்தானே வருந்தக்கூடியதாகிய காரியங்களை எக்காலத்தும் செய்யாதிருத்தல் வேண்டுமென்றும், அவ்விதம் ஒருகால் மயங்கிச் செய்வானாயினும் செய்த காரியங்களால் தனக்கு நேரும் துன்பங்களுக்குப் பின்வருந்தாதிருத்தல் வேண்டுமென்றும் அதுவே நன்மை யுடையதென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின், ஊழ்வழியால் ஒருவன் தீயகாரியத்தைச் செய்து விடு



வானாயின் அது பின்னர் அதன் பயனை விளைக்குந்தோறும், துன்பம் மிகுமாதலால் அத்துன்பத்தை அனுபவிக்குங்காலத்து ஒன்றும் சொல்லாமல் அத்துன்பம் தீரும்வழியைத் தேடவேண்டுமேயன்றி, 'இவ்வித காரியம் செய்தேன், அதற்கு இவ்வித தீங்கு நேர்ந்தது,' என்று தனக்குத் தானே வருந்துதல் கூடாதென்றும், வருந்திக் கொண்டிருப்பானாயின் அவனைக் காண்கிற உலகோர் இவன்செய்த தீய காரியத்துக்கு உண்டாகும் துன்பத்தைத் தீர்த்துக்கொள்வதற்கு இவன் அறியாதவன், அன்றியும் மன உறுதி அற்றவன், பயனில்லாததனையே செய்கின்றான், தன்பழியைத் தானே தூற்றிக் கொள்கின்றான் என்று பலரால் பழிக்கவேண்டியே வருமாதலால் ஒருவன் தான் செய்த தீவினைக்கு இரங்காதிருப்பதுடன் அது தீர்வதற்கு உரியதாகிய நல்வினையும் செய்தல்வேண்டும். பின் அவனைத் துன்பம் தொடர்வதற்கு இல்லாமற்போகும் என்று அறிந்தோ மென்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஒருவன் ஏதேனும் சிறிய தோர் வறுமையை அடைவானாயின் அதனைப் பொறுத்துக்கொள் ளுதல் கூடும், ஆயின் பொறுக்க முடியாத வறுமையை அடைவா னாயின் அப்போதென் செய்வது?" என்னலும்; ஆசிரியர் கூறுவா ராயினர்.

656. ஈன்றாள் பசிகாண்பா னாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

(பரி.) இ-ள். ஈன்றாள் பசி காண்பான் ஆயினும் = தன்னைப் பயந்தா

ஈன்ற பசியை வறுமையாற் கண்டிருக்குந் தன்மையனாயினனெனினும்,— சான்றோர் பழிக்கும் வினை செய்யற்க = அது கட்டி அறிவுடையார் பழிக்கும் வினைகளை ஒருவன் செய்யாதொழிக ; எ-று.

இரந்த மூப்பினராய இருமுது குரவருங் கற்புடைமனைவியுங் குழவியும் பசியான் வருந்துமெல்லைக்கண் தீயனபலவுஞ் செய்தாயினும் புறந்தருகவென்னும் அறநூற்பொதுவிதி பொருணூல்வழி யொழுகுதலும் அரசர் தொழிற்குரியராதலும் நன்கு மதிக்கற்பாடுமுடைய அமைச்சர்க்கெய்தாமைபற்றி, இவ்வாறு கூறினர். இவையைந்து பாட்டானும் பாவமும் பழியும் பயக்கும் வினை செய்யற்க வென்பது கூறப்பட்டது. (௬)

விளக்கம் :—ஒருவன் தன்னைப் பெற்றெடுத்த தாயானவள் வறுமையினால் பசித்து வருந்தும் பெரியதோர் துன்பத்தைக்கண்டா





லும் அவ்வறுமை தீரும்வண்ணம் அறிவுடைய பெரியோரால பழித்துச் சொல்லக்கூடிய காரியங்களைச் செய்தல் கூடாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின்? தருமநூலில் பொது விதியாக, ஒருவன் தன்னுடைய மிகுந்த மூப்புடைய இருமுது குரவரென்னும் தாய், தந்தையரும், கற்பினையுடைய மனைவியரும், வருந்திப்பெற்ற குழந்தையும் பசியால் வருந்தக் காணுவானுயின் எவ்வகையு தீயகாரியங்களைச் செய்தாயினும், அவர்களைக் காப்பாற்றுதல் வேண்டுமென்று கூறுகின்றமையால் அவ்விதி இங்கு அரசன் தொழில் செய்யும் அமைச்சர்க்குப் பொருந்தாதென்றும், அறநூல் பொதுவிதி, பொருள்நூல் வழி ஒழுகி நன்கு மதிக்கப் படவேண்டிய அமைச்சர்களுக்கு ஆகாதென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர் "பாவமும், பழியும் உண்டாக்கும் தொழில்களைச் செய்தல் கூடாது என்பது அறிந்தோம். இவ்விதமெல்லாம் நோக்கின் நீங்காத வறுமையைத்தான் அடையவேண்டி வருமன்றோ அது நன்மையாகுமோ?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

657. பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர்
கழிநல் குரவே தலை.

(பரி.) இ-ள். பழிமலைந்து எய்திய ஆக்கத்தின் = சாலாதார் தீயவினைகளைச் செய்து அதனாற் பழியைத் தம்மேற்கொண்டு பெற்ற செல்வத்தின்— சான்றோர் கழி நல்குரவே தலை = அதுமேற்கொள்ளாத சான்றோரனுபவிக்கும் மிக்க நல்குரவே உயர்ந்தது; எ-று.

நிலையாத செல்வத்தின்பொருட்டு நிலையின பழியை மேற்கோடல் சால்புடைமையன்மையின், 'சான்றோர் கழிநல்குரவே தலை' என்றார். (எ)

விளக்கம்:—தீயதொழில்களைச்செய்து அதனால் பிறர் பழிக்கும் பழியைத் தம்மீதுகொண்டு சான்றாண்மை என்பது அறியாதார் அடைகின்ற செல்வத்தைக் காட்டிலும் அவ்விதம்வரும் செல்வத்தை எண்ணி அதனால் வரும் பழியை மேற்கொள்ளாத சான்றாண்மை யுடையவர் அநுபவிக்கும் பெரியதோர் தரித்திரமே மிக நன்மையுடையது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் ஒருக்ஷணமும் நில்லாது அழிந்துபோகக்கூடிய செல்வத்தின்



பொருட்டுத் தீயகாரியங்களைச் செய்து எக்காலத்தும் ஒழியாது நிற்கும் பழியைத் தேடிக்கொள்வது அறிவுடைமை அல்ல ஆதலால் அறிவுடைய பெரியோர் அவ்விதத் தீயகாரியங்களைச் செய்து வரும் பொருளைக் கருதாது புகழுண்டாக்கும் வறுமையையே அநுபவிக்க இசைவர் என்று கூறலாயிற்றென்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்விதம் தீயவழியால் வந்தபொருள் புகழைத் தராவிடினும் நன்மையேனும் பயக்குமோ?" என்னலும்; ஆசிரியர் கூறலாயினர்.

658. கடிந்த கடிந்தொரார் செய்தார்க் கவைதா
முடிந்தாலும் பீழை தரும்.

(பரி.) இ-ள். கடிந்த கடிந்து ஒரார் செய்தார்க்கு = நூலோர் கடிந்த வினைகளைத் தாமுங்கடிந்தொழியாது பொருணோக்கிச்செய்த அமைச்சர்க்கு— அவைதாம் முடிந்தாலும் பீழைதரும் = அவை தூயவன்மையின் முடியா, ஒரு

வாற்றான் முடியினும் பின் துன்பத்தையே கொடுக்கும், எ-று.

முடிதல் = கருதியபொருள் டருதல். பீழை தருதலாகிய பொருளின்றொ ழில் அதற்குக் காரணமாய வினைகண்மேலேற்றப்பட்டது. (அ)

விளக்கம்:—நல்லவர்கள் இவை கூடாதன என்று ஒதுக்கிய தொழில்களைத் தாமும் ஒதுக்கி ஒழுகாது, பொருளின் வருவாய் ஒன்றினையே எண்ணி அவ்வொழுக்கக்கூடிய வினைகளைச் செய்த அமைச்சர்க்கு அக்காரியங்கள் நன்மையல்லனவாதலால் முடிவுபெறா என்றும், ஒருவேளை முடிவு பெறினும் நற்பயன் தாராது பின் துன்பத்தினையே தரும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, இவை நல்லனவல்ல என்றறிந்தும் பொருள் கருதி அக்காரியங்களைச் செய்யப்புகின் காரியங்களின் பயனாகிய பொருளானது எண்ணியபடி வாராதென்றும், ஒருவேளை வந்தாலும் வந்த பொருளால் இன்பத்தை அடையாது துன்பத்தையே அடைதல்வேண்டும் என்றும், ஆதலால் நல்வினையே செய்தல் வேண்டும், பொருள் கருதித் தீவினையைச் செய்தல் கூடாது என்பதும் பெற்றேமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், 'இவ்விதம் பொருள் கைகூடிய காலத்தும் இன்பம் தாராது துன்



பத்தையே தரும் என்பது ஐயமாகவுள்ளது அதனை விளக்கல் வேண்டும்" என்றனம்; ஆசிரியர் கூறலாயினர்.

659. அழக்கொண்ட வெல்லா மழப்போ மிழப்பினும்
பிற்பயக்கு நற்பா லவை.

(பரி.) இ-ள். அழக் கொண்ட எல்லாம் அழப்போம் = ஒருவன் தீயவினைகளைச் செய்து பிறரிரங்கக் கொண்ட பொருளெல்லாம் இம்மையிலே அவன் இரங்கப்போகாநிற்கும்;—நற்பாலவை இழப்பினும் பிற்பயக்கும் = மற்றைத் தூயவினையான் வந்த பொருள்கள் முன்னிழந்தானாயினும் அவனுக்குப் பின்னர் வந்து பயன் கொடுக்கும். எ-று.

பின்னெனவே, மறுமையுமடங்கிற்று. பொருள்களான் அவற்றிற்குக் காரணமாய வினைகளதியல்பு கூறியவாறு. (௯)

விளக்கம்:—ஒருவன் ஒழிக்கவேண்டுவனவாகிய தீயதொழில் களையெல்லாம் பிறர் வருந்தும்படிச் செய்து அவரிடத்தே இருந்து அடைந்த பொருள்களெல்லாம் அவன் காலத்திலேயே அவன் வருந்தும்படிப் போய்விடுமென்றும், அவ்விதமல்லாது நற்கருமத் தால் வந்த பொருள்கள் ஓர்கால் ஊழ்வலியால் முதலில் இழக்க நேரினும், இழந்த அவனுக்கு அப்பொருள்கள் தானே வந்து அவன் எண்ணிய பயனைத் தரும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தீவினையால் வந்த பொருள் பிறரை அழும்படிச்செய்து கொண்ட பொருளாதலால் அவ்வித பொருள் நின்று பயனைத் தாராதுபோவதுடன் கொண்ட ஒருவனை அழும் படிச்செய்து அவன் அனுபவிப்பதற்குமில்லாமல் அவன் காலத்தி லேயே அழிந்துபோவதுடன் அவனுக்கும் அநேக துன்பங்களைக் கொண்டுவந்துவிடும் என்றும், அவ்விதமல்லாது நல்வினையால் வந்தபொருள் இம்மை, மறுமை இரண்டிற்கும் உதவுமென்றும், அது அடைந்த ஒருவனை விட்டு விலகாதென்றும், விலகினும் மற் றொரு வழியாக முயற்சியில்லாமலே தானேவந்து எண்ணிய பயன் களாகிய இம்மை, மறுமைப் பயன்களைத் தந்துவிடும் என்றுமறிந் தோம். ஆதலால் மேற்கூறியவண்ணம் தீயவழியில் பொருள்வாரா தென்றும், வந்தாலும் பயன் தாராது துன்பத்தைத் தந்து போய்



விடுமென்றும் இத்திருக்குறளால் அறிந்ததாயிற்றென்றனர். அது கேட்ட மாணாக்கர் "அமைச்சன் அரசனைக் காத்தல் பொருட்டுத் தீயவழியில் பொருள் சம்பாதித்து வைப்பானாயின் அப்பொருள் அவனைக் காவாது மறைந்து போவதை ஓர் உவமைவாயிலால் விளக் கிக் காட்டல் வேண்டும்" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

660. சலத்தாற் பொருள்செய்தே மார்த்தல் பசுமட்
கலத்துணீர் பெய்திரீஇ யற்று.

(பரி.) இ-ள். சலத்தால் பொருள் செய்து ஏமார்த்தல் = அமைச்சன் தீய வினைகளாற் பொருள்படைத்து அதனால் அரசனுக்கேமஞ்செய்தல் —

பசுமட்கலத்துள் நீர் பெய்து இரீஇயற்று=பசியமட்கலத்துள்ளே நீரைப் பெய்து அதற்கேமஞ் செய்ததனோ டொக்கும். எ-று.

முன் ஆக்கம் பயப்பனபோற்றோன்றிப் பின்னழிவே பயத்தலால், அவை சலமெனப்பட்டன. ஏமமார்த்தலென்பது ஏமார்த்தலென்றாயிற்று. ஏமத்தை யடையப்பண்ணுதலென்றவாறு. இருத்துதல்=நெடுங்காலமிருப்பச் செய்தல். அரசனும்பொருளும் சேரப்போமென்பதாம். பிறரெல்லாம் ஏமாத்தலென்று பாடமோதி, அதற்கு மகிழ்தலென்றும், இரீஇயற்றென்பதற்கு வைத்தார்போலு மென்றுமுரைத்தார்; அவர் அவை தன்வினையும் பிறிதின் வினையுமாய் உவமையிலக்கணத்தோடு மாறுகோடல் நோக்கிற்றிலர். இவை நான்குபாட்டானும் அதற்குக் காரணங் கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—அமைச்சனானவன் அரசனைக் காக்கும்வண்ணம் தீயகருமங்களால் பொருளினைத்தேடி அவனைக் காக்கமுயலுதல் பச்சை மண்ணாலாகிய (சுடப்படாத) பாண்டத்தினுள் நீரைப் பெய்து, அந்நீரானது போய்விடாதபடி காப்பாற்றியதுபோல் இருக்குமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பச்சை மட்பாண்டத்தில் வார்த்திய நீர் தான் நில்லாது போவதுடன், தானிருந்த இடமாகிய பாண்டத்தைக் கரையச் செய்து அதையும் கெடுத்துப்போவதுபோல், அரசன்பொருட்டுத் தீயவழியில் தேடிய பொருளானது ஓடும் ஜலத்தைப்போலிருந்து அதைக் காத்துப் பயன்கொள்ள எண்ணிய அரசனாகிய மட்கலத்தை ஒழித்துப் போய்விடும் என்று உவமையால் அறிந்தோம். ஆதலால் வினைத் தூய்மையாவது நற் கருமங்களைக்கொண்டு பொருளைச் சம்பாதித்



தல் என்றும், அப்பொருளே அறமும், புகழும் பயக்குமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்வித தூய்மை தங்கிய வினைகளைச்செய்யும் மந்திரி ஒருவனுக்கு இருக்கவேண்டிய திட்பமெது?" என்னலும் ; ஆசிரியர் கூறலாயினர்.

---

## 67. அதிகாரம்.

(பரி.) அஃதாவது அத்தூய வினை முடிப்பானுக்கு வேண்டுவதாய மனத்திண்மை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம் :—அதாவது மேற்கூறியவண்ணம் தூய்மை தங்கியவாகிய நற்கருமங்களை முடிக்கவேண்டிய மந்திரி ஒருவனுக்கு இருக்கவேண்டுவதாய மனவலிமை. அவ்வலிமை இல்லாவிடின் அத்தூயவினை முடியாது. ஆதலால், வினைத்தூய்மை என்னும் அதிகாரத்திற்குப் பிறகு வினைத்திட்பம் என்னும் அதிகாரத்தை வைத்துள்ளது என்று கூறினர். அதுகேட்ட மாணுக்கர் "மனந்தான் எதற்குங் காரணமென்றும், அது வலிமைபெற்றாலன்றி எதுவும் முடியாதென்றும் அறிவின்றோம். ஆதலால் அம்மனவலிமை என்பதை விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

661. வினைத்திட்ப மென்ப தொருவன் மனத்திட்ப
மற்றைய வெல்லாம் பிற.

(பரி.) இ-ள். வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்=வினை செய்தற்கட்டிண்மையென்று சொல்லப்படுவது அதனை முடித்தற்குரியானொருவன் மனத்தினது திண்மை;—மற்றைய எல்லாம் பிற=அஃதொழிந்தனவெல்லாம் அதற்குத் திண்மையென்று சொல்லப்படா; எ-று.

ஒழிந்தனவாவன; படை, அரண், நட்பு முதலியவற்றின் திண்மைகள் அவையும் அதற்கு வேண்டுவனவாய் இனமாகலின், 'மற்றைய' என்றும், வேண்டினும் அஃதில்வழிப் பயனிலவாகலின், 'பிற' என்றும் கூறினார். இதனால் வினைத்திட்பமாவது இன்னதென்பது கூறப்பட்டது. (க)

விளக்கம் :—அமைச்சன் ஒருவனுக்குத் தொழிலைச் செய்யுங் காலத்து வலிமையுடனிற்பது, அதனை முடிக்க எண்ணிய அவ்வமைச்சனது மனத்தின் வலிமையென்றும், அம்மனவலிமை யொழிந்த ஏனைய படைவலிமை, அரண்வலிமை, நட்புவலிமை ஆகிய வலிமைகள் இருந்தும் பயன்படா என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனின்? "படை, அரண், நட்பு என்கின்ற ஏனைய அங்கங்களெல்லாம் இருந்தும் மனவலியில்லாத ஒருவன் அவைகளைக் கையாடப்புகின் அச்ச மிகுதியால் அவற்றாலாகிய பயனை அடைவதற்கில்லாமல் துன்பம் அடையவேண்டி நேருமாதலால் ஏனைய வலிமையினும் மனவலிமையே சிறந்ததென்றும் அதுவே எடுத்த வினையை முடித்தற்கு வலியுடையதென்றும் கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர் "வினைத்திட்பம் என்பதற்குப் பொருள் இத்திருக்குறளாலறிந்தோம். மனவலி, ஒன்றுதானோ? இன்னும் ஏதேனும் வினைத்திட்பத்துக்கு வேண்டுமோ?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

662. ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
     னாறென்ப ராய்ந்தவர் கோள்.

(பரி.) இ-ள். ஆய்ந்தவர் கோள் = முன் நீதியாராய்ந்த அமைச்சரது துணிபு—ஊறு ஓரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின் ஆறு என்பர் = பழுதுபடும் வினைகளைச் செய்யாமையும் செய்யும்வினை தெய்வத்தாற்பழுது பட்டவழி அதற்குத் தளராமையுமாகிய இவ்விரண்டன் வழியென்பர் நூலோர். எ-று.

தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சப்பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப் பின் நீதிநூலுடையார் கூறியவாறு கூறுகின்றமையின், ஈண்டு வினைத்தூய்மையும் உடன்கூறினார். உறுதலுடையதனை முன் ஊறென்றமையின், 'உற்றபின்' என்றும், இவ்விரண்டின்கண்ணே பட்டதென்பார், 'இரண்டினாறு' என்றுங் கூறினார். ஊறொராரென்று பாடமோதுவாருமுளர்; அஃது ஒல்காமையென்னு மெண்ணோடும் இரண்டென்னுந் தொகையோடும் இயையாமை அவரறிந்திலர். (௨)

விளக்கம் :—முன்காலத்து நீதி இதுவென்று ஆராய்ந்தறிந்த

அமைச்சருடைய அணிவிளவது நடுவில் கெட்டுப்போகும் தொழில்



ன்னச் செய்யாதிருத்தலென்பதும், அவ்விதம் பழுதுபடாத வினையை ஆய்ந்து செய்யுங்காலத்து ஓர் கால் ஊழ்வலியால் பழுது அடைந்த இடத்தும் அக்கேட்டிற்குத் தளர்ச்சி அடையாதிருத்தல் வேண்டுமென்றும், இவ்விரண்டுமே எடுத்த வினையைத் திட்பமாக்கு வதற்கு வழியென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனுல் அமைச்சரது தன்மை இது என்றும், தேவர்களுக்கும், அசுரர்களுக் கும் மந்திரிகளாக இருந்த வியாழன், வெள்ளியும், அமைச்சர் செயல் இவையென்று வகுத்தவழியே, முன்வந்த நீதிநூல் வல் லவரும் உலகநீதியை வகுத்தனராதலால் அந்நீதிநூல்களுள் நல் வினையையே செய்ய ஆரம்பித்தல் வேண்டுமென்றும், அதுவே பழுதுபடாது முடியுமென்றும், ஓர்கால் பழுது படினும் ஊக்க முடைய அமைச்சன் ஒருவன் அதற்காக மனத்தளர்ச்சி அடைதல் கூடாதென்றும் கூறுவதாக அறிந்தோம் என்றனர். இதில் அமைச் சன், வினையில் திட்பமடைவதற்குக் கொள்ளும் வழிகளிரண்டினைக் கற்பித்ததாயிற்று என்றனர் அதுகேட்ட மாணுக்கர் "இவ்விதம் வினை செய்யுங்கால் அமைச்சன் தான் எடுத்த வினையைப் பிறர் அறி யச் செய்தல் கூடுமோ?" என்னலும் ; ஆசிரியர் கூறுவாராயினர்.

663. கடைக்கொட்கச் செய்தக்க தாண்மை யிடைக்
கொட்கி னெற்றா விழுமந் தரும்.

(பரி.) இ-ள். கடைக்கோட்கச் செயற்பாலது ஆண்மை = செய்யப்படும் வினையை முடிவின்கட் புலப்படும்வகை முன்னெல்லாம் மறைத்துச் செய் வதே திட்பமாவது ;—இடைக் கொட்கின் எற்றா விழுமம் தரும் = அங்ஙன மன்றி இடையே புலப்படுமாயின் அப்புலப்பாடு செய்வானுக்கு நீங்காத இழிம்பையைக் கொடுக்கும் ; எ-று.

மறைத்துச் செய்வதாவது அவ்வமைச்சு மெண்ணியவாறு பிறரறியாம

லும்; தானறிந்ததூஉம், தன்வினையிடம், வடிவு, செயல், சொற்களான் அவ ருய்த்துணராமலும் அடக்கிச் செய்தல். அத்திட்பம், ஆண்டன்மையான் வருதலின், ஆண்மையெனப்பட்டது. எற்ற விழுமமாவன:—பகைவர் முன் னறிந்து அவ்வினையை விலக்குதல், செய்வாரை விலக்குதல் செய்வாராகலின், அவற்றான் வருவன. விழுமம் சாதிப்பெயர். இவையிரண்டுபாட்டானும் அத னது பகுதி கூறப்பட்டது. (௩)



விளக்கம் :—அமைச்சன் ஒருவன் தான் எண்ணிச் செய்யும் தொழிலைச் செய்யுங்காலத்தே பிறர் அறியாமல் மறைத்து, அத் தொழில் முடிக்காலத்துப் பலரு மறியச்செய்தல் வேண்டுமென் றும், அதுவே வினைத்திட்பமென்றும், அவ்விதமல்லாது தொழில் செய்து கொண்டிருக்குங் காலத்தேயே பிறர் அறிவாராயின் அத னால் தொழிலைச்செய்ய எண்ணிய அமைச்சனுக்கு நீங்காத துன்பத்தைக் கொடுக்குமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? குடி, கூழ், நட்பு, அரண் படை ஆகிய ஐந்தும் தாம் எண் ணிய விதத்தைப் பிறர் அறியவொட்டாது செய்தலும், தான் அறிந்த விஷயங்களையும் தன்னுடைய இடம், உருவம், செயல், சொற்கள் ஆகிய இவைகளால் இவ்வங்கங்களும் பிறரும் ஆராய்ந் தறியாமல் அடக்கிக்கொண்டு எடுத்த தொழிலைச் செய்தலும் வேண்டுமென்றும், அவ்வித மனவலிமை ஆண்மையுடை யான் ஒருவனுக்கே வருமென்றும், அவ்விதம் செய்யாது நடுவில் அறியும்படிச் செய்தால் அரசனது பகைவர் இவன் செய்யுங் காரியத்தை அறிந்து அக்காரியம் முடியாவண்ணம் செய்து விடுவ ராதலால் நடுவில் அறியும்படிச் செய்தல் கூடாதென்றும் முடிவி லேயே அறியும்படிச் செய்தல் வேண்டுமென்றும், அதுவே வினைத் திட்பமென்றும் அறிந்தோ மென்றனர். அதைகேட்ட மாணுக்கர் "சிலர் தாங்கள் எண்ணிய காரியத்தைச் சுலபமாய்ச் செய்வதாகக் கூறுகின்றனர். அவர் கூறும்வண்ணம் செய்தல் ஆகாதோ?" என் னலும்; ஆசிரியர் கூறலாயினர்.

664. சொல்லுதல் யார்க்கு மெளிய வரியவாஞ்
சொல்லிய வண்ணஞ் செயல்.

(பரி.) இ-ள். சொல்லுதல் யார்க்கும் எளிய=யாம் இவ்வினையை இவ்வாற்றாற் செய்துமென விரல்படச் சொல்லுதல் யாவர்க்குமெளிய;—சொல்லியவண்ணம் செயல் அரியவாம்—அதனை அவ்வாற்றானே செய்தல் யாவர்க்கு மரியவாம். எ-று.

'சொல்லுதல்,' செயலென்பன சாதிப்பெயர். அரியவற்றை யெண்ணிச் சொல்லுதல் இடும்பையில்லாதார்க்குமியறலின், 'எளிய' என்றார். இதனால் அதனருமை கூறப்பட்டது.





விளக்கம்:—நாம் இத்தொழிலை இவ்விதமாகச் செய்துவிடக் கூடும் என்று வரிசைபடச் சொல்லிவிடுதல் மக்களுள் யாவர்க்கும் எளிமையாகுமென்றும், ஆனால் அத்தொழிலை அவர்கள் சொல்லிய வண்ணமே செய்துவிடுவது யாவர்க்கும் அருமையாகவே முடியுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரிய காரியங்களை இவ்விதம் செய்துவிடுவோமென்று எண்ணியபடியெல்லாம் சொல்லுதல் மனவலியில்லாதார்க்கும் முடியுமாதலால் சொல்வது எளிதென்றும், சொல்லிய வண்ணம் செய்வது எவர்க்கும் அருமையாதலால் செய்வது அருமையென்றும் அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணாக்கர் "இவ்விதம் எண்ணியவண்ணம் செய்யும் வினைத்திட்பமுள்ள அமைச்சன் ஒருவனை உலகோர் எவ்விதம் கருதுவர்?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

665. வீறெய்தி மாண்டார் வினைத்திட்பம் வேந்தங்க
ணூறெய்தி யுள்ளப் படும்.

(பரி.) இ-ள். வீறு எய்தி மாண்டார் வினைத்திட்பம்—எண்ணத்தாற் சிறப்பெய்திப் பிறவிலக்கணங்களாலும் மாட்சிமைப்பட்ட அமைச்சரது

வினைத்திட்பம்,—வேந்தன்கண் ஊறு எய்தி உள்ளப்படும் = வேந்தன் கண்ணே உறுதலையெய்தலான் எல்லாராலும் நன்குமதிக்கப்படும்; எ-று.

வேந்தன்கண் ஊறெய்தல் = எடுத்தவினை அதனான் முற்றப் பெற்றுச் செல்வமும், புகழும் அவன்கண்ணவாதல். எய்தலானென்பது திரிந்து நின்றது. உள்ளல் = மதிப்பான் மறவாமை. இதனால் அதன் சிறப்புக் கூறப்பட்டது. (௫)

விளக்கம் :—தாம் எண்ணிய எண்ணத்தால் சிறப்பினை யடைந்து மற்றைய இலக்கணங்களாலும் மேன்மை பொருந்திய அமைச்சர்களது வினைத்திட்பத்தால் அரசன் எடுத்த காரியம் யாவும் முற்றப்பெற்றுச் செல்வமும், புகழும் அவன் அடைவதால் அவ்வரசன் முதலாய குடிகளெல்லாம் அவ்வித அமைச்சரை நன்கு மதித்து, அவரை எக்காலத்தும் மறவாதிருப்பார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேற்கூறிய வண்ணம், எண்ணிய வண்ணம் முடிக்கும் அமைச்சரால் அரசன் அடையும் அழியாப்புகழும், பெரியதோர் செல்வமுங்கருதி



அவ்வமைச்சரை எக்காலத்தும் மறவாது உலகோர் நன்குமதிப்பர் என்பது பெற்றாமென்றனர். அதைகேட்ட மாணுக்கர் "இவ்விதம் எண்ணிய வண்ணம் செய்யவல்ல அமைச்சர்க்கு எண்ணிய கருமங்கள் யாவும் கைகூடும்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

666. எண்ணிய வெண்ணியாங் கெய்துப வெண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்

(பரி.) இ-ள். எண்ணிய எண்ணியாங்கு எய்துப = தாமெய்த எண்ணிய பொருள்களெல்லாவற்றையும் அவ்வெண்ணியவாறே எய்துவர்,—எண்ணியார் திண்ணியராகப் பெறின் = எண்ணியவர் அவற்றிற்கு வாயிலாகிய வினைக்கட் டிண்மையுடையராகப் பெறின்; எ-று.

எளிதினெய்துபவென்பார், 'எண்ணியாங்கெய்துப' என்றார். அவ

அவ்வாறல்லதென் றுமையிற் றிண்ணியராகவே வினைமுடியும், அது முடிய அவையாவையும் வசகூடுமென்பது கருத்து. இதனால் அஃதுடையாரெய்தும் பயன் கூறப்பட்டது. (௬)

விளக்கம் :—ஓர் காரியத்தை எண்ணி அவ்வெண்ணியவண்ணம் மனக்கலங்காத வலிமையுடையராய் அக்காரியத்தைச் செய்து முடிப்பாராயின் அவ்வித முடிவினால் எவ்வெவ்வித பயனை அடைய விரும்பினரோ அவ்வவ்விதம் அடைந்தே விடுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மதியுடைய மந்திரிகள் தாம் முடிக்கவல்ல காரியங்களை அன்றி, வேறு முடியாத காரியங்களை எண்ணாரென்றும், அவ்விதம் முடிக்கவல்ல காரியங்களை எண்ணியபடிச் செய்யுங்காலத்து மனங்கலங்காத திட்பமுடையவராதலால் அக்காரியத்தைச் செய்தே முடிப்பரென்றும், அவ்விதம் செய்து முடித்துவிடுவதால் அக்காரியத்தால் ஆகிய பயன்களையெல்லாம் அடைவது திண்ணமென்றும் அறிந்தோம். அதாவது வினைத்திட்ப முடையார்க்கு ஆகாத கருமமில்லையென்றும், அக்கருமங்களால் வரும் பயன்களாகிய பொருளை அடைவது சுலபமென்றும் கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்வித வல்லமையுடைய அமைச்சர் உலகத்தாரால் மதிக்கப்படுவர் என அறிந்தோம். ஆயின் உருவிற் சிறியராயிருப்பாராயின், அவ்வுருவத்



தின்பொருட்டு அவரது நற்செயலைக் கருதாது இகழ்வாரோ அல்லது புகழ்வாரோ?" என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்.

667. உருவுகண் டெள்ளாமை வேண்டு முருள்பெருந்
கச்சாணி யன்னா ருடைத்து. [தேர்க்

(பரி.) இ-ள். உருள் பெருந்தேர்க்கு அச்சு ஆணி அன்னார் உடைத்து= உருளாநின்ற பெரிய தேர்க்கு அச்சின்கண் ஆணிபோல வினைக்கட் டிண்ணியாரையுடைத்து உலகம்;—உருவு கண்டு எள்ளாமை வேண்டும்=

ஆதலால் அவரை வடிவின் சிறுமைநோக்கி இகழ்தலை யொழிக; எ-று.

சிறுமை, என்னாமைவேண்டு மென்பதனானும், உவமையானும் பெற்றாம். அச்சு=உருள்கோத்த மரம். ஆணி=உருள் கழலாது அதன் கடைக்கட் செருகுமது. அது வடிவாற் சிறிதாயிருந்தே பெரிய பாரத்தைக் கொண்டுய்க்குந் திட்பமுடைத்து, அதுபோல, வடிவாற்சிறியராயிருந்தே பெரிய வினைகளைக் கொண்டுய்க்குந் திட்பமுடைய அமைச்சரு முளர், அவரை அத்திட்பநோக்கி அறிந்துகொள்க வென்பதாம். இதனால் அவரையறியுமாறு கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—உருண்டு ஓடுகின்ற தேர் ஒன்றினுக்கு அதன் அச்சின்கண் ஆணிபோலத் தாம் எண்ணிய தொழிலைச் செய்துமுடிக்க வல்ல மனத்திட்ப முடையாராலேயே இவ்வுலகம் நிலைபெற்று வருகின்றது. ஆதலால் வினைத்திட்பமுடையாரை அவரது தேக வடிவின் சிறுமையைப் பார்த்து இகழ்தல் செய்யாது ஒழிதல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பெரிய தேர் ஒன்றுக்கு அச்சு என்கின்ற இரும்பின் கடைசியில் கோத்துள்ள சிறியதோர் இரும்பாணது அத்தேரின் சக்கரங்களை விழவொட்டாமல் செய்து, அத்தேர் பெரிய பாரத்தையும் தன்மேற்கொண்டு இழுக்கும் தகுதியைச் செய்கின்றதாதலால், அது போல வினைத்திட்பமுடையார் தாம் உருவிற் சிறியராயிருந்தாராயினும் அரசனுக்கு வேண்டுவனவாகிய பெரிய தொழில்களையெல்லாம் தன்மேற்கொண்டு செலுத்தும் வலிமையுடையவராய் இருப்பாராதலால் அவ்வலிமையை நோக்கி அவரைப் புகழ்வதைவிட்டு, அவர் உருவநோக்கி 'இவர் என்செய்வர்!' என்று இகழ்ந்து அதனால் அரும் குற்றத்தை அடைதல்கூடாது என்றறிந்தோம் என்றனர். அதுகேட்ட



மாணாக்கர் "மனத்திட்பமுடையாரை அவரது ஆற்றலால் அறிதல் வேண்டுமேயன்றி உருவத்தால் மதித்தல்கூடாது என்பது அறிந்தோம். ஆயின் ஒருவன் தான் எண்ணிய வினையைப் பொறுமையாகச் செய்தல்வேண்டுமோ? அல்லது எடுத்தவுடன் செய்துமுடித்தல் வேண்டுமோ?" என்னலும் ஆசிரியர் கூறுவாராயினர்.

668. கலங்காது கண்ட வினைக்கட் டுளங்காது

(பரி.) இ-ள். கலங்காது கண்ட வினைக்கண் = மனந்தெளிந்து செய்வதாகத் துணிந்த வினையின்கண், — துளங்காது தூக்கம் கடிந்து செயல் = பின்னசைவின்றி நீட்டித்தலையொழிந்து செய்க; எ-று.

கலங்கியவழி ஒழிவதும் செய்வதுபோற் றோன்றுமாகலின், தெளிந்து பலகாலாராய்ந்து தாஞ்செய்வதாக ஓர்த்த வினையைக் கலங்காது 'கண்ட வினை' என்றார். துளங்காமை = திட்பமுடைமை. (அ)

விளக்கம்:—ஒருவன் மனத்தினிடத்தே பலகால் ஆராய்ந்துச் செய்யக்கூடிய வினை என்று தீர்மானித்து அதைச் செய்துவிடுவோம் என்று துணிந்து அத்தொழிலைச் செய்யுங்காலத்துப் பின் மனத் தளர்ச்சியில்லாமலும், காலம் நீட்டித்தலில்லாமலும் செய்து விட வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஓர் காரியத்தைத் தொடங்கால் எண்ணிச் செய்தல்வேண்டும் என்ற நீதியை எண்ணி ஆராய்ந்துச் செய்கின்ற காலத்து மேலும், மேலும் அக்காரியத்தில் சந்தேகித்துக் காலந்தாழ்க்கச் செய்வானாயின் அக்காரியம் முடிவுபெறாது. ஆதலால் செய்ய எண்ணிய உடனே செய்தே முடித்தல் வேண்டும். காலம் தாழ்த்தல் கூடாது என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்விதம் வினையைத் தொடங்கிச் செய்யுங்காலத்து, செய்கின்ற ஒருவனுக்குத் துன்பங்கள் இடைவிடாது வருமாயின் என் செய்வது?" என்னலும்; ஆசிரியர் கூறலாயினர்.

669. துன்ப முறவரினுஞ் செய்க துணிவாற்றி
யின்பம் பயக்கும் வினை.

(பரி.) இ-ள். துன்பம் உற வரினும் = முதற்கண் மெய்ம்முயற்சியாற் றமக்குத் துன்பம் மிக வருமாயினும், — இன்பம் பயக்கும் வினை துணிவு ஆற்



றிச்செய்க = அது நோக்கித் தளராது முடிவின்கண் இன்பம் பயக்கும் வினையைத் திட்பமுடையாராய்ச் செய்க. எ-று.

துணிவு = கலங்காமை. அஃதுடையார்க்கல்லது கனிகமாய முயற்சித்

துன்பநோக்காது நிலையுதலுடைய பரிணுமவின்பத்தை நோக்கிச் செய்தல் கூடாமையின், 'துணிவாற்றிச்செய்க' என்றார். இவை யிரண்டுபாட்டானும் அவர் வினைசெய்யுமாறு கூறப்பட்டது. (௯)

விளக்கம் :—வினையைச் செய்பவன் தான் செய்யும் வினையில் முதலில் தேகமுயற்சியால் தனக்குத் துன்பம் வருவதாகக் காணப்படினும் அத்துன்பத்திற்காகத் தளர்ச்சி அடையாது அவ்வினை முடிந்த பிறகு தனக்கு உண்டாகும் இன்பம் ஒன்றையே கருதி மனங்கலங்காது எடுத்த காரியத்தைச் செய்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? ஓர் கணத்தில் தோன்றி மறைந்து போவதாகிய நிலைபற்ற துன்பத்தின் பொருட்டு நிலையாக உடைய பெரியதோரின்பத்தை இழத்தல் கூடாது; ஆதலால், அவ்வின்பத்தின்பொருட்டு எத்துணைத் துன்பம் வரினும் எடுத்த காரியத்தைக் கைவிடுதல் கூடாது என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர் "இவ்விதம் வினைத்திட்பமென்பது ஒன்றில்லாது ஏனைய பெருமை யெல்லாம் உடையாரை உலகம் மதியாதோ?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

670. எனைத்திட்ப மெய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டா துலகு.

(பரி.) இ-ள். வினைத்திட்பம் வேண்டாரை=வினைத்திட்பத்தை இது நமக்குச் சிறந்ததென்று கொள்ளாத அமைச்சரை,—எனைத்திட்பம் எய்தியக் கண்ணும்=ஒழிந்த திட்பங்களெல்லாமுடையராயவிடத்தும்,—வேண்டாது உலகு=நன்குமதியார் உயர்ந்தோர்; எ-று.

மனத்தின்கண் திட்பமில்லாதார்க்குப் படை, அரண், நட்பு முதலியவற்றின் திட்பங்களெல்லாம் உளவாயினும், வினை முடியாதாம், ஆகவே, அவையெல்லாம் கெடுமென்பதுபற்றி, 'உலகு வேண்டாது' என்றார். இதனால் வினைத்திட்பமில்லாதாரதிழிபு கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—அமைச்சுத் தொழிலை மேற்கொண்டு தம் தொழிலுக்கு,எடுத்த காரியத்தன் மனங்கலங்காதிருத்தல்.என்னும்,வினைத்திட்பமே சிறப்பு உடையது என்று, அவ்வினைத்திட்பத்தைக் கொள்

லாத அமைச்சர்களை அவரிடத்தே உள்ள மற்றைய உயர்ந்த குணங்களையெல்லாம் கருதி உயர்ந்தோர் மதியார் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது? அமைச்சர்க்குப் படை வலிமையும், அரண் வலிமையும், நட்பினர் வலிமையும் இவை களெல்லா மிருக்கினும் மனவலி இல்லாவிடில் மேற்கூறிய அங்கங் களெல்லாம் வினைமுடிவதற்கு ஆதாரங்களாக நில்லாவாதலால் இவ்வங்கங்களைக்கொண்டு அறிவுடையோர் வினைத்திட்பமில்லா அமைச்சரை விரும்பாரென்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்வினைத்திட்பமென்னும் அதிகாரத்தால் அமைச்சர் கள் மனவலிமையுடையராதலால் உள்ள சிறப்பினையும், மனவலிமை யில்லாமையால் அடையும் இழிவினையும் அறிந்தோம். இனி அவ் வினையை எவ்விதம் செய்தல் வேண்டுமென்னும் வகையையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 68. அதிகாரம்.

## வினைசெயல்வகை.

---

(பரி.) அஃதாவது அத்திட்பமுடையவமைச்சன் அவ்வினையைச் செய் யுந் திறம். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம் :—அதாவது அமைச்சனானவன் மனங்கலங்காத் தன்மையோடு தொழிலைச் செய்யுங்காலத்து அத்தொழிலைச் செய் யும் விதம். திட்பமுடையான் ஒருவனுக்கு இது அறிவித்தல் வேண்டுமாதலால் வினைத்திட்ப மென்னும் அதிகாரத்துக்குப் பிறகு இது வைக்கப்பட்டுள்ளது என்றனர். அது கேட்ட மாணாக் கர் "நாங்கள் அறிய விரும்புவதும் இதுவே ஆகலால் விளக்கல் வேண்டும்!" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

671. சூழ்ச்சி முடிவு துணிவெய்த லத்துணிவு
தாழ்ச்சியுட் டங்குத றீது.

(பரி.) இ-ள். சூழ்ச்சி முடிவு துணிவு எய்தல்-விசாரத்திற்கெல்லையாவது

விசாரிக்கின்றுன் இனி இது தப்பாதென்னுந் துணிவினைப் பெறுதல்;—அத்



துணிவு தாழ்ச்சியுள் தங்குதல் தீது = அவ்வாறு துணிவுபெற்ற வினையின் நீட்டிப்பின்கட்டங்குமாயின், அது குற்றமுடைத்து; எ-று.

சூழ்ச்சிமுடிவு துணிவெய்தலெனவே, துணிவெய்துமளவுஞ் சூழ வேண்டுமென்பது பெற்றும். பின்னர்த் துணிவு ஆகுபெயர். நீட்டிப்பு-செய்யுங் காலத்துச் செய்யாமை. அஃது அன்வழிக் காலக் கழிவாகலானும், பகைவர் அறிந்தழித்தலானும் முடியாமையின், அதனைத் 'தீது' என்றார். (க)

விளக்கம்:—அமைச்சனுவான் தான் செய்யுங்காரியத்தை விசாரித்து அறிவதற்கு அளவாவது நாம் இப்போது எடுத்த காரியம் இனித் தவருது முடியும் என்னும் துணிவினை அடைதலென்றும், அவ்விதம் துணிவினைப் பெற்றபிறகு அக்காரியத்தைக் காலம் தாழ்த்திச் செய்வானுயின் அக்காரியம் முடியாது குற்றப்படுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? அமைச்சனுனவன் தான் எண்ணிய கருமத்தைச்செய்வதற்குப் பொருத்தம் அளவு விசாரித்தறிந்து அது செய்யின் அக்காரியம் முடிவுபெறும்என்று துணிந்தபிறகுப்,காலம் தாழ்ப்பானுயின் பகைவர் இவனது செயலை அறிந்து இவனெடுத்த காரியத்தை முடியவொட்டாமல் உபாயங்களால் அழித்து விடுவாராதலால் எண்ணித் துணிந்த உடனே காலதாமதம் உண்டாதல் கூடாது என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர் "செய்யும் காரியங்களில் காலம் தாழ்க்க வேண்டிய காரியங்களில்லையோ!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

672. தூங்குக தூங்கிச் செயற்பால தூங்கற்க
தூங்காது செய்யும் வினை.

(பரி.) இ-ள். தூங்கிச் செயற்பால தூங்குக = நீட்டித்துச் செய்யும் பகுதியவாய வினைகளுள் நீட்டிக்க;—தூங்காது செய்யும் வினை தூங்கற்க = நீட்டியாது செய்யும் வினைகளுள் நீட்டியாதொழிக. எ-று.

இருவழியும் இறுதிக்கட்டொக்க எழாவது விரிக்கப்பட்டது. இருவகை வினைகளும் வலியானும் காலத்தானும் அறியப்படும். மாறிச்செய்யின், அவை

வாயாமென்பது கருத்து. மேற்றாக்காமையென்றார், தண்டத்தினைப் பகுத்துக் கூறினார். இவையிரண்டுபாட்டானும் பொதுவகையால் வினைசெய்யுந்திறம் கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—காலம் தாழ்த்துச் செய்யக்கூடிய தருதியையுடைய வினைகளைக் காலம் தாழ்த்தே செய்தல் வேண்டுமென்றும்,



அவ்விதமே காலம் தாழ்க்காது விரைந்து செய்யவேண்டிய காரியங்களைக் காலம் தாழ்க்காது விரைந்து செய்தல் வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அமைச்சனானவன் 'இது செய்தல் கூடும்' என்று துணிவு பிறந்த பிறகும் மேற்கூறியவண்ணம் இருவகை வினைகளையும் வலிமையானும், காலத்தானும் அறிந்து அவை வாய்க்குமாயின் விரைந்து செய்தல் வேண்டுமென்றும், வலிமையும், காலமும் பகைவரை வெல்லக்கூடிய அளவு வாய்க்காதாயின் வாய்க்கும் அளவுபொறுத்துச்செய்தல் வேண்டுமென்று மதித்தோமென்றனர். அது கேட்ட மாணக்கர் "பொதுவாக அமைச்சன் தன் வினையைச் செய்வதை அறிந்தோம். இனி சதுர்வித உபாயங்களுள் எவ்வுபாயத்தை முதலில் செய்தல் வேண்டும்?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

673. ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்
செல்லும்வாய் நோக்கிச் செயல். [காற்

(பரி.) இ-ள். ஒல்லும் வாய் எல்லாம் வினை நன்று=வினைசெய்யுங்கால் இயலுமிடத்தெல்லாம் போராற்செய்தல் நன்று;—ஒல்லாக்கால் செல்லும் வாய் நோக்கிச் செயல்=அஃதியலாவிடத்து ஏனை மூன்றுபாயத்துள்ளும் அது முடிவதோருபாயநோக்கிச் செய்க; எ-று.

இயலுமிடம்=பகையிற்றான்வலியனாயகாலம். அக்காலத்துத் தண்டமே என்று என்றார்; அஞ்சுவது அதற்கேயாகலின். இயலாவிடம்=ஒத்தகாலமும் மெலியகாலமும். அவ்விரண்டு காலத்துஞ் சாம பேத தானங்களுள் அது முடியுமுபாயத்தாற் செய்கவென்றார்; அவை ஒன்றற்கொன்று வேறுபாடுடைய வேனும் உடம்படுத்தற்பயத்தாற் றம்முளொக்குமாகலின். இதனுள் வலியான், ஒப்பான், மெலியானென நிலை மூவகைத்தென்பதூஉம், அவற்

தன் வலியது சிறப்பும், கூறப்பட்டன. (க)

விளக்கம்:-அமைச்சனுவான் பகைவரிடத்துத் தன் தொழிலைச் செய்யுமிடத்துத்தான் வலியானுயிருப்பானுயின் சதுர்வித உபாயங்களுள் நான்காவது உபாயமாகிய தண்டத்தால் செய்வது நன்றென்றும், அல்லது முடியாவிடில் ஒழிந்த மூன்றுபாயங்களுள் அந்தந்த தொழிலிற்கும், காலத்திற்கும் தக்க அளவாக ஒவ்வொன்றைக்கொண்டு செய்து முடித்தல்வேண்டும் என்றும் இத்திருக்குறள்

39



கூறுகின்றது. அதாவது பகைவனில்தான்வலிமையுடையவனுயிருப்பானுயின் அக்காலத்துப் பகைவரைப் போர்செய்து அடக்குகின்ற தண்டமென்னும் உபாயமே சிறந்ததென்றும், ஏனெனின்? பகைவர் அஞ்சுவது அத்தண்டத்திற்கே ஆகலானென்றும், இனி வலியும், காலமும் ஒத்தில்லாவிடத்து ஏனைய சாம தான பேதமாகிய மூன்று உபாயங்களுள் ஏதேனும் தான் எடுத்த கருமத்திற்குத் தக்கவிதமாகச்செய்துமுடித்துக் கொள்ளல் வேண்டுமென்றும் அறிக்தோம். அன்றியும் பகைவனைக் காட்டிலும் வலியவன், பகைவனுக்குச் சமானமானவன், பகைவனைவிட மெலியவன் என்கின்ற மூன்று திறத்தினருள் பகைவனைவிட வலியவனுயுள்ளவன் செய்யும் திறம் இது என்று கூறப்பட்டது என்றனர். அதுகேட்ட மாணக்கர் "அமைச்சனுனவன் ஏன் எக்காலத்தும் பகைவரை வெல்லும் திறனையே நாடுதல்வேண்டும்? உலகத்து யாவரும் உயிர் வாழ்தலே விரும்பத் தக்கதன்றோ." என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

674. வினைபகை யென்றிரண்டி னெச்ச நினையுங்கால்
தீயெச்சம் போலத் தெறும்.

(பரி.) இ-ள். வினை பகை என்ற இரண்டின் எச்சம்=செய்யத்தொடங்கிய வினையும் கனையத் தொடங்கிய பகையுமென்று சொல்லப்பட்ட இரண்டன தொழிலும்,—நினையுங்கால் தீயெச்சம்போலத் தெறும்=ஆராயுங்கால் தீயின தொழிலேபோலப் பின் வளர்ந்து கெடுக்கும்; எ-று.

இனி இக்குறை என்செய்வதென்று இகழ்ந்தொழியற்க, முடியச்செய்க வென்பதாம். பின் வளர்தலொப்புமைபற்றிப் பகையெச்சமும் உடன்

கூறினர். இதனால் வலியான் செய்யுந் திறம் கூறப்பட்டது. (௫)

விளக்கம் :—அமைச்சனானவன் தான் செய்யத் தொடங்கிய தொழிலையும், களையத் தொடங்கிய வினையினையும் ஆகிய இவ்விரண்டினையும் சரியாகச் செய்யாது இகழ்ச்சியால் விட்டுவிடுவானாயின், அவ்விரண்டின் முடிவும் ஆராயப் புகுந்தால் எரிந்து கொண்டிருந்த தீயானது அடங்கிப்போய்ச் சிறிதிருந்த காலத்தே அது தீங்கு செய்யாது என்று இகழ்ந்து அதனை விட்டுவிட்டுப் போனால் பின்னர் விட்ட சிறு தீயானது எவ்விதம் பெருகிக் கெடுக்கின்றதோ அது போல் பெருகிக் கெடுக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது.



அதாவது? வலியவனாயுள்ள அமைச்சன் ஒருவன் தான் தொடங்கிய காரியத்தைச் செய்யுமிடத்து, பெரிதும் செய்த பிறகு ஓர் சிறிதிருக்குமாயின் 'ஈதென்னை நம் வலிக்கு இது செய்வது ஓர் பெரிய காரியமோ?' என்று விட்டுவிடுவானாயின் அவ்விட்ட சிறு காரியமானது காலம் முதலிய வேறுபாட்டினால் பெரிதும் அதிகரித்துப் பின்னர் செய்வதற்கு முடியாமலே கெட்டுப் போகுமென்றும், அதுபோலவே பகைவரை அடக்கக்கூடிய தொழில்களை எல்லாம் செய்து அதுமுற்றும் முடிக்காது அப்பகைவர் சிறிது நிலைக்கும்படி விட்டுவிடின் அப்பகைவனானவன் காலவேறுபாட்டினால் இவனினும் வலியனாய் இவனை வென்றுவிடுதல் கூடுமென்றும் கூறுவார் தீயினை உவமை கூறினர். தீயானது முற்றும் அவிந்து போனது போல் காணப்பட்ட காலத்து அதனை அலக்ஷியம் செய்து விட்டுவிடின் பிறகு காற்று முதலிய உதவியால், அவிந்து போனதுபோலிருந்த தீயானது வளர்ச்சியை அடைந்து பக்கத்துள்ள பொருளையெல்லாம் எவ்வாறு அழித்து விடுகின்றதோ, அவ்விதம் வலியவனையும் மெலிய பகைவன் அழித்துவிடுவான் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்விதம் அமைச்சனானவன் வல்லமையுடையவனாக இருக்கினும் எதனையும் எண்ணிச் செய்தல் வேண்டுமன்றோ? அவ்விதம் எண்ணவேண்டுவன எவை? என்று அறிவித்தல் வேண்டும்" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

675. பொருள்கருவி காலம் வினையிடனொ டைந்து
மிருடீர வெண்ணிச் செயல்.

(பரி.) இ-ள். பொருள் கருவி காலம் வினை இடனொடு ஐந்தும்=வினை செய்யுமிடத்துப் பொருளுங் கருவியுங் காலமும் வினையும் இடனுமாகிய இவ் வைந்தனையும்—இருள் தீர எண்ணிச் செயல்=மயக்கமறவெண்ணிச் செய்க ; எ-று.

எண்ணொடு பிறவழியுங் கூட்டப்பட்டது. பொருள்=அழியும் பொருளும் ஆகும் பொருளும். கருவி=தன்றுணையும் மாற்றார்துணையும். காலம்=தனக்காங் காலமும் அவர்க்காங்காலமும். வினை=தான்வல்லவினையும அவர் வல்லவினையும். இடம்=தான் வெல்லுமிடமும் அவர் வெல்லுமிடமும். இவற்றைத் தான் வென்றியெய்தற் றிறத்திற் பிழையாமலெண்ணிச் செய்க வென்பதாம். (ரு)



விளக்கம் :—அமைச்சனானவன் தான் தன் பகைவன்மீது போரினைச் செய்யத் தொடங்கிய காலத்துத் தான் செலவழித்த பொருளையும், காரியம் முடிந்தபிறகு அதனால் தனக்கு வரும் பொருளையும், தனக்கு உள்ள படைவலிமையும், பகைவர்க்கு உள்ள படைவலிமையும் தனக்கு ஆகும் காலமும், பகைவர்க்கு ஆகும் காலமும், தான் செய்ய எண்ணிய போரில் தான் வல்லவனாயிருக்கின்ற தகுதியும், தன்பகைவன் வெல்லுவதற்கு உரிய தகுதியையும், தான் சென்று போரிட்டு வெல்லுவதற்கு ஏற்றதாகிய இடமும், தன் பகைவர் சேர்ந்து தன்னை வெல்லுவதற்கு எண்ணியுள்ள இடமும் ஆகிய இவ்வைந்தினையும் சிறிதும் மயக்கமில்லாது அறிந்து செய்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் தன்வலியும், மாற்றான் வலியும் அறிவதுடன் தான் வெல்லுவதற்காகச் செலவழித்த பொருள் மிகப்பெரியதாகி அதனால் அடையும் பயம் மிகச் சிறியதாயிருந்தாலும் தன்னுடைய படை வலிமை மாற்றான் படைக்கு தோற்றுப்போவதாயிருந்தாலும், தனக்கு உரிய நாள்களும் கோள்களும் தகுதியற்றனவா யிருந்தாலும்,

தான் தொடங்கிய வினைபகைவன் வலிமைக்குக் குறைவாக இருந்தாலும் சதுப்புநிலம் முதலாகிய நிலங்களல்லாத தக்கதோர் இடமொன்று வாய்க்காதாயினும் வெல்லுதல் கூடாது ஆதலால் இவ்வைந்து கருவியையும் நீர் எண்ணிப் பிழையாமல் செய்தலே அமைச்சனது வினைசெயல் வகை என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர் “அமைச்சனுவான் ஒருவன் தான் எண்ணிய கருமம் ஒன்றினைப் பிழைபடாமல் செய்துவிடுதல் வேண்டும் என்பது இதனுல் அறிந்தோம். அவ்விதம் செய்யுங்கால் ஓர் சிறு பயனை அடைவதாயிருக்கினும் பெரியதோர் முயற்சி செய்து அதனை முடித்துவிடல் வேண்டும் போலும்!” என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

676. முடிவு மிடையூறு முற்றியாங் கெய்தும்
படுபயனும் பார்த்துச் செயல்.

(பரி.) இ-ள், முடிவும்=வினைசெய்யுங்கால் அது முடிதற்குளதாம் முயற்சியும்—இடையூறும்=அதற்கு வருமிடையூறும்—முற்றியாங்கு எய்தும்



படுபயனும்=அது நீங்கி முடித்தாற் கெய்தும் பெரும்பயனும்—பார்த்துச் செயல்=சீர்தூக்கிச் செய்க; எ-று.

முடிவு=ஆகுபெயர். முயற்சியிடையூறுகளதனவிற் பயனளவு பெரிதாயிற் செய்கவென்பதாம். (௬)

விளக்கம்:—அமைச்சனானவன் ஓர் காரியத்தைச் செய்யுமிடத்து அது முடிவதற்குச் செய்யவேண்டிய முயற்சியினையும், அவ்விதம் முயற்சி செய்யும் காலத்து நடுவில் வரும் துன்பங்களையும், வந்தனவாகிய அவ்விடையூறுகள் நீங்கி எடுத்த காரியம் முடிவதால் தான் அடையும் பயனையும் ஆகிய இவைகளை எல்லாம் கணக்கிட்டுப் பார்த்து ஓர் காரியத்தைச் செய்தல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனுல், முயற்சியும் முயற்சியில் உண்டா

கும் துன்பங்களும் பெரியனவாகஇருந்து அடையும்பயன் சிறிதாக இருக்குமாயின் அவ்வித காரியத்தைச் செய்தல் கூடாதென்றும், முயற்சிக்கும் துன்பத்திற்கும்தக்க அளவாகப் பெரும்பயன்கிடைத் தாலே ஒரு காரியத்தைச் செய்தல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர் "இவ்விதம் அமைச்சனுவான் தன் காரியத்தை முற்றும் முடிக்கவல்ல அறிவுடையவனுயினும், அவன் எவ்வாது உபாயங்களையும் அறிதல் வேண்டாமோ?" என் னறும், ஆசிரியர் கூறலாராயினர்.

677. செய்வினை செய்வான் செயன்முறை யவ்வினை
யுள்ளறிவா னுள்ளங் கொளல்.

(பரி.) இ-ள். செய்வினை செய்வான் செயன்முறை=அவ்வாற்றாற் செய்யப்படும் வினையைத்தொடங்கினன் செய்புமுறையாவது—அவ்வினை உள் அறிவான் உள்ளம் கொளல்=அதனைமுன்பட்டினை யறிவான் கருத்தி னைத்தானறிதல்; எ-று.

அவ்வாறென்றது பொருள் முதலிய வெண்ணைமையும் முடிவு முதலிய நுக்கலையும். உள்ளறிவான்=முன்செய்து போந்தவன். அவன் கருத்து= அவன் செய்து போந்த உபாயம். அதனை யறியவே, தானும் அதனுற் செய்து பயனெய்து மென்பதாம். இவை மூன்றுபாட்டானும் ஒப்பான் செய் யுத் திறம் கூறப்பட்டது. (எ)



விளக்கம்:—அவ்விதம் பெரும்பயன் கருதிச் செய்யக்கூடிய தொழிலைச் செய்யத்தொடங்கிய அமைச்சன்ஒருவன்செய்யும்முறை மையாவது இதற்குமுன் இவ்வித தொழிலைச் செய்து போந்தவன் ஒருவனை ஆய்ந்து அவன் இவ்வித காரியங்களுக்குச் செய்ததாகிய உபாயத்தினை அறியவேண்டுவது என்று இத் திருக்குறள் கூறுகின் றது. இதனுல், மந்திரியாகிய ஒருவன் பயன் நோக்கிச் செய்யும் காரியத்துள் இவ்வித காரியத்தை இதற்குமுன் செய்து போந்த வனுகிய ஒருவனைக்கொண்டு இதை எவ்விதம்செய்வது என்றறிந்து

அவ்வழியே செய்து நிற்பானுயின், செய்யும் காரியத்தால் பயனை அடைவான் என்பது பெற்றோம். ஆதலால் தன்னை ஒத்த பகைவனிடத்து அமைச்சன் ஒருவன் செய்ய வேண்டிய தகுதிகள் இவை என்று அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணுக்கர் "ஓர் வினையைச் செய்யும் காலத்து அவ்வினையின் அநுபவமுடையான் ஒருவன் கருத்தறிந்து செய்வான், பெரும்பயன் அடைவானென்று அறிந்தோம். ஆயின் ஓர் காரியத்தை ஒருவன் தொடங்கி அக் காரியத்தின் பயன் ஒன்றையே கருதுதல் வேண்டுமோ? அன்றி அக்காரியத்தால் மற்றொரு காரியத்தையும் முடித்துக் கொள்ளுதல் வேண்டுமோ?" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

678. வினையான் வினையாக்கிக் கோட னனைகவுள்
யானையால் யானையாத் தற்று.

(பரி.) இ-ள். வினையான் வினை ஆக்கிக்கோடல்=செய்கின்றவினையாலே அன்னது பிறிதுமோர்வினையைமுடித்துக்கொள்க;-நனைகவுள் யானையால் யானை யாத்தற்று=அது மதத்தானனைந்த கபோலத்தினையுடைய யானையாலே அன்னது பிறிதுமோர் யானையைப் பிணித்ததனோடொக்கும்; எ-று.

பிணித்தற் கருமை தோன்ற நனைகவுளென்பது பின்னும் கூட்டப்பட்டது. தொடங்கிய வினையானே பிறிதுமோர் வினையை முடித்தற்குபாயமாமாறு எண்ணிச் செய்க; செய்யவே, அம்முறையான் எல்லாவினையும் எளிதின் முடியு மென்பதாம். (அ)

விளக்கம்:—யானையைப் பிடிப்பவர் மதங்கொண்ட யானை ஒன்றோடு மற்றோர் யானையைப் பிணிப்பதுபோல் ஒருவன் தான்

எண்ணிச் செய்த காரியம் ஒன்றினால் அவ்வித தகுதியுடைய மற்ற யோர் காரியத்தையும் முடித்துக்கொள்ளல் வேண்டும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது: யானையைக்கொண்டு மற் றோர் யானையைப் பிடிக்கின்ற உபாயத்தைப்போல், மெலிவகுக வுள்ள அமைச்சன் ஒருவன் தான் ஒரு காரியத்தை முடிக்கும் காலத்தும் தான் தொடங்கிய தொழிலாலேயே மற்றொரு காரியத் தையும் முடித்துக் கொள்ளுதல் வேண்டுமென்றும், அவ்விதம் ஒன்றைக் கொண்டு மற்றொன்றை முடிப்பதால் இவன் என்னும் எல்லாக் காரியங்களும் மிக எளிதாக முடிக்கிறேன் என்றும் அறிந் தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்விதம் வினைசெய் யும் அமைச்சன் ஒருவன் தான் தொடங்கிய வினையில், தனக்கு நட்பினராய் உள்ளவரையே முதலில் ஆதரித்தல் வேண்டுமோ அன்றி எது செய்தல் வேண்டும்?" என்னலும்; ஆசிரியர் கூறுவா ராயினர்.

679. நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே
ஒட்டாரை யொட்டிக் கொளல்.

(பரி.) இ-ள். நட்டார்க்கு நல்ல செயலின் விரைந்ததே=வினைசெய் வானாற் றன்னட்டார்க்கு இனியவற்றைச் செய்தலினும் விரைந்து செய்யப் படும்—ஒட்டாரை ஒட்டிக்கொளல்=தன் பகைவரோடு ஒட்டாரைத்தனக்கு நட்பாக்கிக் கோடல். எ-று.

அவ்வினை வாய்த்தற் பயத்தவாய இவ்விரண்டும் பகைவர்க்குத் தன் மெலிவு புலனாவதன் முன்னே செய்கவென்பார், 'விரைந்தது' என்றார். விரைந்து செய்யப்படுவதென்றவாறு. வினைசெய்யுந் திறமாகலிற் பகைவரோ டொட்டாராயிற்று. தன்னொட்டார் பிறருட்படாமல்மாற்றிவைத்தலெனினு மமையும். (க)

விளக்கம்:—போரினைத் தொடங்கிய அமைச்சன் ஒருவன் தனக்கு நட்பினராய் உள்ளார்க்கு இனிமை உண்டாக்கும் செயல்களைச் செய்வதற்குமுன் தன் பகைவரிடத்தே நட்புக் கொள் ளா திருக்கும் மக்களிடம் விரைந்து சென்று அவர்களை நட்பாக்கிக் கொள்ளல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதா வது, ஒரு தொழிலைச் செய்வான் தனக்கு வேண்டிய நட்பினரைத்

தழுவிக் கொள்ளுதல் மிக முக்கியமென்றும், ஆனால் அக் கட்சியினர் தன்னிடத்தே அடைய விரும்பிய உதவிகளை அவர்க்குச் செய்வதற்குமுன் தன் பகைவர்க்குப் பகைவராக உள்ளவரைத் தெரிந்துகொண்டு அவர்க்கு வேண்டுவன வெல்லாம் செய்து அவரைத் தம் கட்சியினராக்கி, தன்னுடைய துணைப்பலத்தை பெருக்கல் வேண்டுமாதலால் முதலில் பகைவரது பகைவரைத் தழுவிக்கொள்ளுதல் வேண்டுமென்றும் பின்னர் தனக்கு உள்ள கட்சியினரைத் தன்னை விட்டுப் பிரியாதிருப்பதற்கு வேண்டுவன செய்து அவர்களை மேலும் மேலும் உறவாக்கிக்கொள்ள வேண்டுமென்றும், இவ்விரண்டு காரியங்களும் பகைவர்களுக்குத் தன்னுடைய பல மில்லாமை தெரிவதற்குமுன் விரைந்து செய்தல் வேண்டுமென்றும், இவ்விதம் செய்வதே ஓர் தொழிலைச் செய்யும் வகையென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர் இவ்விதம் எடுத்த காரியங்களை முடிவு பெறும்படிச் செய்யவல்ல அமைச்சன் ஒருவன் தன்னின் வலியான் ஒருவன் தன்மீது எதிர்த்த காலத்தே தனக்கு அது கை கூடாததுபோல் தோன்றின் மெலியானாகிய இவன் என் செய்தல் வேண்டும் என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

680. உறைசிறியா ருண்ணடுங்க லஞ்சிக் குறைபெறிற்
கொள்வர் பெரியார்ப் பணிந்து.

(பரி.) இ-ள். உறை சிறியார்=உறையுமிடஞ் சிறியாராய அமைச்சர்;—உள் நடுங்கல் அஞ்சி=தம்மின் வலியார் எதிர்த்தவழித் தம்பகுதி நடுங்குதலையஞ்சி,—குறை பெறின் பெரியார்ப் பணிந்து கொள்வர்=அந்நிலைக்கு வேண்டுவதாய சந்து கூடுமாயின், அவரைத் தாழ்ந்து அதனை யேற்றுக் கொள்வர். எ-று.

இடம்=நாடும் அரணும். அவற்றது சிறுமை ஆள்வார் மேலேற்றப் பட்டது. மெலியாரோடு சந்திக்கு வலியார் இயைதல் அரிதாகலின், 'பெறின்' என்றார். அடியிலே மெலியாராயினர் தம்பகுதியு மஞ்சி நிற்கின் முதலொடுங் கெடுவாராகலின், அது வாராமற் சிறிது கொடுத்துஞ் சந்தியை பெற்றுக் கொள்க வென்பதாம். பணிதல் மானமுடையார்க்குங் கருத்தன்மையின், கொள்வர் என உலகியலாற் கூறினார். இவை மூன்று பாட்டானும் மெலியான் செய்யுந் திறங் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—அமைச்சானவர் தாம் குறுகின்ற இடம் ஆகிய நாடும், அந்நாட்டிற்கு அமைந்த அரசனும் மிகச் சிறியனாக



இருந்து தம்முடைய பகைவர் தம்மீது எதிர்த்த காலத்து தம்மினும் வலியராய அப்பகைவரது பெரும் சேனையால் தம் சேனை நடுக்கமடையுமாயின் அது கண்டு அவர், சேனை நடுக்குகின்றதை ஆதலால் சந்திசெய்து கொள்வோ மென்றெண்ணி சந்திக்கு உரியராகிய தூதுவரை அனுப்பின் மெலியராகிய அமைச்சர் அவ்விதசாதியினை மிகப்பணிந்து ஏற்றுக்கொள்வர் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பகைவரைக்காட்டிலும் தாம் மெலியவராக இருக்கின் வலிய பகைவர் இவரோடு சமாதானத்திற்கு வாரார்களென்றும், ஓர் வேளை கருணை மிகுதியால் சமாதானத்திற்கு அவரது அமைச்சர் முதலாயினோரை அனுப்புவாராயின் அச்சமாதானத்திற்கு வருகின்றவரைப் பணிந்து ஏற்றுக்கொள்ளுதல் வேண்டுமென்றும், ஏனெனின்? முன் உறுதியாக நின்ற தன்னுடைய சிறிய சைன்னியம் ஓர் வேளை மனத்தளர்ச்சி அடையுமாயின் வலிய பகை அரசர்முன் அடியோடு ஒழிந்து போகுமாதலால், அவ்விதம் சேரவிதம் வந்த தூதுவரைப் பணிந்து ஏற்றுக்கொள்ளுதல் வினை செய்யும் வகையென்றும், அவ்விதம்பணிந்து ஏற்றுக்கொள்வதுடன் சிறிதுபொருள் கொடுத்தேனும் சமாதானம் செய்து கொள்ளுதல் வினைசெய்யும் விதமென்றும் அவரே அமைச்சராவரென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "அமைச்சருள் மெலியரர் செய்யும் திறம் இவையென்று அறிந்தோம் இனி இவ்வமைச்சர் அவரது பகுதியாகிய தூது செல்வதில் எவ்வித தகுதியுடையரா யிருத்தல் வேண்டு மென்பதையும் அறிய விரும்புகின்றேம்" என்னலும்; ஆசிரியர் கூறலாயினர்.

---

## 69. அதிகாரம்.

### தூது.

---

அஃதாவது சந்தி விக்கிரகங்கட்கு வேற்று வேந்தரிடைச் செல்லாநின்ற தன்மை. அவ்விரண்டனையும் மேல் வினைசெயல்வகை யென்றமையின், இஃது அதன்பின் வைக்கப்பட்டது. தான் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவானெனத் தூது இருவகைப்படும். அவருள் முன்னோன் அமைச்சரோடொப்
40



பானாகலானும், பின்னோன் அவனிற் கால்கூறு குணம் குறைந்தோனாகலானும், இஃதமைச்சியலாயிற்று.

விளக்கம்:—அதாவது சமாதானப்படுத்துதலும், வேறுபடுத்துதலும் ஆகிய சேர்த்தல், பிரித்தல் என்னும் இரண்டு காரியங்களைக் குறித்து மற்ற அரசரிடத்துச் செல்லும் காலத்துச் செல்லுபவருடைய தன்மை. இவ்விதம் சமாதானம், வேறுபடுத்துதல் என்னு மிரண்டினையும் செய்வது முன்னர் வினை செயல்வகை என்றமையில் அவ்வினை செயல்வகை என்பதற்குப் பிறகு தூது என்னும் இதனை வைக்கப்பட்டுள்ளது. இத் தூதுவருள் தானே விஷயங்களைத் தன் அறிவால் பகுத்திட்டு ஒன்றன்பின் ஒன்றாகச்சொல்ல வல்லவனென்றும், சொல்லியதையே சொல்லவல்லவனென்றும் இருவிதப்படுவர். இவருள் முற்கூறியவன் அமைச்சனுக்குச் சமானமானவனென்றும், பின் கூறப்பட்டவன் முற்கூறப்பட்டவனில் கால் பங்கு குறைந்தவன் என்றும், ஆதலால் இத் தூதுவனையும் அமைச்சியலுள் கூறுவதாயிற்றென்றனர். அது கேட்ட மாணாக்கர் " இத்தூது என்பது மிகச் சிறந்தது என்று இராமாயணம், மஹாபாரதம் ஆகிய இரண்டிலுங் கேட்டிருக்கின்றோமாதலால், அதன் இலக்கணத்தை நம் தெய்வப்புலவர் திருவள்ளுவர் அருளியவிதத்தாலும் அறிய விரும்புகின்றோம் " என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

681. அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்
பண்புடைமை தூதுரைப்பான் பண்பு.

(பரி.) இ-ள். அன்பு உடைமை=தன் சுற்றத்தார் மாட்டு அன்புடையனாதலும்—ஆன்ற குடிப்பிறத்தல்=அமைச்சுப் பூண்டமைந்த குடியின்கட் பிறத்தலும்—வேந்து அவாம் பண்பு உடைமை=அரசர்சாதி விரும்பும் பண்புடையனாதலும்—தூது உரைப்பான் பண்பு=தூது வார்த்தை சொல்லுவானுக்கிலக்கணம்; எ-று.

முன்னையவிரண்டானும், முறையே சுற்றத்தார்க்கு நீங்குவாராமற் றான் பேணியொழுகலும், தன் முன்னோர் தூதியல் கேட்டறிதலும் பெற்றாம். வேந்தவாம் பண்புடைமை முன்னர் மன்னரைச் சேர்ந்தொழுகற்கட் பெறப்படும். அதனால் வேற்றரசரும் அவன் வயத்தராதல் பெறுதும். (க)



விளக்கம் :—தூதாகச் சென்று தான் சொல்லவேண்டிய வார்த்தைகளைச் சொல்லுவானுக்கு இருக்கவேண்டிய இலக்கணம் தன் சுற்றத்தவர்களிடத்தில் அன்புடையவனும், அமைச்சுத் தொழில் பூண்டு அதற்கு உரிய காரியத்தைச் செய்யுங் குடியினிடத்தே தோன்றியவனும், அரசர்களால் விரும்பும் குணமுடையவனுமிருத்தல் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தன் சுற்றத்தாரை அன்புடன் கொண்டு அவர்க்கு யாதொரு தீங்கும் வாராமல் தான் அவர்களைக் காப்பாற்றி நிற்க வேண்டுமென்றும், அவ்விதம் ஒழுகுவதால் இவ்வமைச்சுத்தொழில் பூண்டவனைச் சுற்றத்தவர் விரும்பி, இவன் குலத்தில் இதற்கு முன்னிருந்தார் அமைச்சுத் தொழில் பூண்டு தூது செல்லல் முதலிய காரியங்களைச் செய்த வன்மை யெல்லாம் கூறுவரென்றும், ஆதலால் இதற்குமுன் அமைச்சுத் தொழில் பூண்ட குலத்திற் பிறந்தவனையே மன்னர் அமைச்சனாகத் தேர்ந்தெடுத்தல் வேண்டுமென்றும், அவ்விதம் தேர்ந்தெடுத்தலால் அமைச்சன் வலிமையை நோக்கி வேற்றரசரும் இவ்வரசனிடத்துப் பகைகொள்ளாது நட்பினராயிருப்பரென்றும் பெற்றோமென்றனர். அது கேட்ட மாணக்கர் "அமைச்சர்க்கு இருக்கவேண்டிய தூதின் இலக்கணத்தைப் பொதுவாக அறிந்தோம். இன்னும் அவ்விருவகைப்பட்ட அமைச்சருக்கும் இருக்கவேண்டியபொதுஇலக்கணங்களை உணர்த்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயி

ஙர்.

682. அன்பறி வாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்
இன்றி யமையாத மூன்று. [பார்க்

(பரி.) இ-ள். அன்பு = தம்மரசன்மாட்டன்புடைமையும் — அறிவு = அவனுக்கு ஆவன அறியு மறிவுடைமையும் — ஆராய்ந்த சொல்வன்மை = அவற்றை வேற்றரசரிடைச் சொல்லுங்கால் ஆராய்ந்து சொல்லுதல் வன்மையுமென்று — தூது உரைப்பார்க்கு இன்றியமையாத மூன்று = தூதுரைக்க வுரியார்க்கு இன்றியமையாத குணங்கள் மூன்று; எ-று.

ஆராய்தல் = அவற்றிற் குடம்பாடுஞ் சொற்களைத் தெரிதல். இன்றியமையாத மூன்றெனவே, அமைச்சர்க்குச் சொல்லிய பிறகுணங்களும் வேண்டு



மென்பது பெற்றாம். இவை யிரண்டுபாட்டானும் இருவகையார்க்கும் பொது விலக்கணம் கூறப்பட்டது. (உ)

விளக்கம் :—தூது சென்று உரைக்க வல்லார்க்கு மிக முக்கியமாக இருக்கவேண்டிய குணங்கள் தம்முடைய அரசனிடத்து நீங்காத அன்புடைமையும் அவ்வரசனுக்கு, ஆக வேண்டுவனவற்றை அறிந்து செய்யும் அறிவுடைமையும் அவ்விதம் அறியவேதாடு தாம் அறிந்தவற்றை வேற்றரசரிடத்துச் சொல்லும்போது ஆராய்ந்து சொல்லுகின்ற வன்மையும் என்று மூன்று விதமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? அரசன் மாட்டு அன்பில்லாவிடின் அவனுக்கு இது இக்காலத்துச் செயயவேண்டுவ தென்று உய்த்து உணர்ந்து அறிவது கூடாது ஆதலால் முதலில் அன்புடையவனு யிருத்தல் வேண்டுமென்றும், அவ் வன்புடைமை கொண்ட வழியே அரசனுக்குச் செய்யவேண்டுவனவற்றைச் செய்வதற்கு அறிவு இல்லாவிடின் அவ்வன்புடைமை பயன் விளைக்காதாதலால் அறிவுடையோனாயிருத்தல் வேண்டுமென்றும், அறியவேண்டிய அறிவு இருக்கினும் வேற்றரசரிடத்துச் சென்று சொல்லுங்காலத்து எடுத்துச் சொல்லும் வல்லமை இல்லாவிடின் அன்புடைமையும், அறிவுடை

மையும் பயன்படாவாதலால் சொல்வன்மையுமிருத்தல் வேண்டும் என்றும் ஆகிய இம்மூன்று குணங்களும் இருந்தே ஆகவேண்டுவன என்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர் " இவ்விரண்டு திருக்குறளால் வகுத்துக் கூறுவான், கூறியது கூறுவான் என்னும் இரண்டு தூதருக்கும் பொது இலக்கணம் இவையென அறிந்தோம். இனி வகுத்துக் கூறுவானது சிறப்பு இலக்கணங்களை அறிய மிகுதியும் ஆசைப்படுகின்றோம் " என்னலும்; ஆசிரியர் கூறலாயினர்.

683. நூலாரு ணூல்வல்ல னாகுதல் வேலாருள்
வென்றி வினையுரைப்பான் பண்பு.

(பரி.) இ-ள். வேலாருள் வென்றி வினை உரைப்பான் பண்பு=வேலையுடைய வேற்றரசரிடைச் சென்று தன்னரசனுக்கு வென்றிதரும் வினையைச் சொல்லுவானுக்கு இலக்கணமாவது-நூலாருள் நூல் வல்லன் ஆகுதல்=நீதி நூலையுணர்ந்த அமைச்சரிடைத் தான் அந்நூலை வல்லனாதல்; எ-று.



கோறன்மாலையரென்பது தோன்ற, 'வேலார்' என்றும், தூதுவினையிரண்டுமடங்க, 'வென்றி வினை' என்றுங் கூறினர். வல்லனாதல் உணர்வுமாத்திரமுடையராய அவர் முன் வெருக்குமாற்ற லுடையனாதல். (௩)

விளக்கம் :—வேல் தாங்கிய வேற்றரசரிடத்துப்போய், தன் அரசனுக்கு வெற்றியை உண்டாக்கும் தொழிலைச் சொல்வானுக்கு இலக்கணமாயிருக்க வேண்டுவது நீதிநூல்களைக் கற்றறிந்த பல அமைச்சரினும் அதிகமாகத்தான் அந்நீதிநூல்களைக் கற்றறிந்து வல்லவனாயிருத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, வேலைத்தாங்கிய அரசனென்பதால் எக்காலத்தும் அரசனென்பான் தாக்ஷண்யமில்லாது மனத்தில் கோபத்தைக் கொண்டவனென்றும், அக்கோபத்தினால் தனக்கு நன்மையில்லாது தீமை வருகின்ற காரியத்தை ஒருவன் சொல்லப் புகுவானாயின் தூதுவனைக் கொல்லுதல் கூடாது என்ற நீதியையும் நோக்காது கொல்வானென்றும், அவ்விதம் கொலைத் தொழிலை மேற்கொண்ட அரசன்

ஒருவனிடத்துச் சொல்லுங் காலத்து வினைய அமைச்சர்போன்று உணர்த்தும் அறிவு மாத்திரம் உடைமை போதாதென்றும், தான் சொல்ல வேண்டிய காரியங்களை வகுத்துக் கூறும் ஆற்றல் உடையவனு மிருத்தல்வேண்டும் என்றும் அறிஞரும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "வகுத்துக் கூறுவான் ஆற்றலுள் வகுக்கும் ஆற்றலை அறிந்தோம். இனி ஏனைய குணங்களையும் எடுத்து உரைத்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

684. அறிவுரு வாராய்ந்த கல்வியிம் மூன்றன்
செறிவுடையான் செல்க வினைக்கு.

(பரி.) இ-ள். அறிவு=இயற்கையாகிய அறிவும்—உரு=கண்டார் விரும்புந் தோற்றப் பொலிவும்—ஆராய்ந்த கல்வி=பலரோடும் பலகாலு மாராயப்பட்ட கல்வியுமென—இம்மூன்றன் செறிவு உடையான்=நன்கு மதித்தற் கேதுவாய இம்மூன்றனது கூட்டத்தையுடையான்—வினைக்குச் செல்க=வேற்றுவேந்தரிடைத் தூதுவினைக்குச் செல்க; எ-று.

இம்மூன்றும் ஒருவன்பாற் கூடுதலரிதாகலின், 'செறிவுடையான்' என்றார். இவற்றுள் நன்குமதிப்புடையனாகவே, வினை இனிதுமுடியு மென்பது கருத்து. (௪)



விளக்கம்:-வேற்று வேந்தரிடத்தில் தூதாகச் செல்ல வேண்டுபவனுக்கு இயற்கை அறிவும், பார்ப்பவர் விரும்பக்கூடிய தேக அழகும், பல நூல் வல்லவரோடு பலகாலும் கற்று ஆராய்ந்த கல்வியும் ஆகிய இம்மூன்றும் ஒருங்கே இருத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? முன்னைய நல்வினையால் பெறும் இயல்பாகிய அறிவில்லாது செயற்கை அறிவாகிய கல்வி மூன்றுமாத்திரம் இருக்குமாயின் அத்தூதினைப் பயன்படாதென்றும், ஆதலால் இயற்கை அறிவும், கற்பதால் உண்டாகும் செயற்கை அறிவும், கண்டோர் விரும்பக்கூடிய தேகக் காந்தியும் ஆகிய இம்மூன்றுமிருக்குமாயின் தூதுவனாகச் சென்ற இவனை நன்கு மதிப்பாரென்றும், நன்கு மதிப்பு உண்டாதலுமன்றி சென்ற

காரியமும் இனிமையாக முடியுமென்றும் அறிந்தோம். ஆயின் மூன்று குணங்களும் ஒருங்கே வாய்ப்பது கூடாதென்றும், ஏனெனின் அறிவுடையனாகஇருந்தும் அழகுடையவனாக இல்லாமற்போதலும், அழகுடையவனாக இருந்தும் அறிவில்லாமல் போதலும் இயல்பாதலால் இம்மூன்றும் வாய்க்குமாயின் தூது செல்வதற்கு மிகுதியும் ஏற்றவனாவான் என்று கூறியதாக அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இத்திருக்குறளில் அறிவுடைமை முதலிற் கூறியதால் அறிவுடைமையால் தூதன் செய்யவேண்டுவனவற்றைச் சொல்லுதல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

685. தொகச்சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி
நன்றி பயப்பதாந் தூது.

(பரி.) இ-ள். தொகச் சொல்லி = வேற்றரசர்க்குப் பல காரியங்களைச் சொல்லும்வழிக் காரணவகையாற் றொகுத்துச்சொல்லியும்—தூவாத நீக்கி நகச் சொல்லி = இன்னாத காரியங்களைச் சொல்லும்வழி வெய்ய சொற்களை நீக்கி இனிய சொற்களான் மனமகிழச் சொல்லியும்—நன்றி பயப்பது தூதாம் = தன்னரசனுக்கு நன்மையைப் பயப்பவனே தூதனாவான். எ-று.

பலகாரியங்கட் குடம்படாதார் பரம்பரையான் அவற்றிற்குக் காரணமாய தொன்றைச் சொல்ல அதனால் அவை விளையுமாறாய்த்தனை வருமை யானுஞ் சுருக்கத்தானு முடம்படுவர்; இன்னாதவற்றிற் குடம்படாதார் தம் மனமகிழச் சொல்ல அவ்வின்னாமை காணாது உடம்படுவாராதலின், அவ்விரு



வாற்றானும் தன் காரியந் தவறாமல் முடிக்கவல்லானென்பதாம். என்னும் மைகள் விகாரத்தாற் றொக்கன. (௫)

விளக்கம்:—தூதனைச் செல்லுபவன் வேற்றரசர்களிடத்துப் பல காரியங்களைச் சொல்லுங் காலத்து அவைகளையெல்லாம் ஒன்று சேர்த்து சுருக்கிச் சொல்லலும், அவ்வரசர்க்கு இன்னாமையைப் பயப்பனவாகிய காரியங்களைச் சொல்லுமிடத்துக் கொடிய சொற்கள் அமை

யாமல் இனிய சொற்களை அமைத்துச் சொல்லுதலும், அதனும் தான் சென்ற காரியம் அவ்வரசர்க்குப் பிரதிகூலமானவையானவிருந் தாலும் சொல்லும் சொற்களைக் கொண்டு அவ்வரசர் தன் மனமகிழ்ந் துடன்படுதலும் ஆகிய நன்மைகளை உண்டுபண் ணுபவனுய் இருத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? தூதாகச் சென்றவன் வேற்றரசர்களிடத்தர் சொல்லும் காரியங்கள் பலவாக இருக்கின், அதனுல் அவ்வரசர் உடன்படாதலால் ஏதேனும் ஒன்றைக் காரணமாக உள்ளாத மாத்திரம் சொல்லின் அதன் விளைவு இன்னதென்று உய்த்து உணரும் தன்மை மிக அருமை யாதலால் அதனை ஒத்துக்கொள்ளுதல் கூடுமென்றும், அவ்வாறு ஒத்துக்கொண்டதால் தன்னரசனுக்கு நன்மை செய்த தாகுமென்றும், வேற்றரசர்க்குப் பிரதிகூலமாகிய காரியங்களை அவர்களுக்குச் சொல்லுங் காலத்தும் சொல்லுகின்ற சொற்கள் இனிமையுடையனவாய், மனம் மகிழக் கூடியனவாயிருக்குமாயின் அவ்வரசர் தமக்குத் துன்பங்களைத் தரக்கூடிய அக்காரியங்களையும் ஒத்துக்கொள்வர் அதனுல் தான் எண்ணிய காரியம் முடிவு பெறுவதுடன் தன்னரசனுக்கும் நன்மை செய்பவர் ஆதலால் என்றும் அறிவின்றேம் என்றனர். அது கேட்ட மாணுக்கர் "இவ்விதம் தூது செல்வான் எண்ணிய காரியம் முடிப்பதற்கு இன்னும் எவ்விதத் தகுதியுடையவனுயிருத்தல் வேண்டும்" என்னலும் : ஆசிரியர் கூறுவாராயினர்.

686. கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லிக் காலத்தாற்
தக்க தறிவதாந் தூது.

(பரி.) இ-ள். கற்று=நீதிநூல்களைக் கற்று—செலச் சொல்லி=தான் சென்ற கருமத்தைப் பகைவேந்தர் மனங்கொளச் சொல்லி—கண் அஞ்சான்=அவர் செயிர்த்து நோக்கின் அந்நோக்கிற் கஞ்சாது—காலத்தால் தக்



கது அறிவது தூதாம்=காலத்தோடு பொருந்த அது முடிக்கத்தக்க வுபாய மறிவானே தூதாவான், எ-று.

அவ்வுபாய மறிதற்பொருட்டு நீதிநூற்கல்வியும், அதனன்றிப் பிற

தோன்றுன் முடியுங்காலம் வரின் அவ்வாறு முடிக்கவேண்டுதலிற் காலத் தாற் றக்கதறிதலும் இலக்கணமாயின. (௬)

விளக்கம்:—தூதனாக இருக்கவேண்டியவன் நீதி நூல்களில் வல்லவனும், தான் எக்காரியத்திற்குச் சென்றானோ அக்காரியத் தைப் பகைவேந்தர்க்குச் சொல்லும் காலத்து அவர்கள் மனத்தில் பொருந்தும்படி சொல்லுபவனும், அவ்விதம் சொல்லும் காலத்து அப்பகையரசர் கோபித்துப் பார்ப்பாராயின் அப்பார்வைக்குப் பயப் படாதகாலத்தோடு பொருந்தும்படி, தான் எண்ணிச் சென்ற காரி யம் முடிக்கத்தகுந்த உபாயத்தினை அறிவானும் இருத்தல் வேண் டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? எக்காரியத் தையும் முடிப்பதற்கு உரிய உபாயங்களை அறிவதற்கு நீதிநூற்கல்வி இன்றியமையாததென்றும், அவ்விதமல்லாது புதிய ஒரு உபாயத் தால் முடியும் காலமானது வருமானால் அவ்வுபாயத்தால் முடிக்க வேண்டுமாதலால் எக் காலத்துக்கு எது தகுதியுடையது என்றறி தலும் வேண்டும் என்றும் அவனே தூதன் என்றும் அறிஞ ரேயும் என்றனர். அதைகேட்ட மாணாக்கர் "தூதனாகச் செல்பவன் எந்த இடத்தும் எதையும் தன்வன்மையால் சொல்லிவிடுதல் கூடுமோ" என்னலும்; ஆசிரியர் கூறுவாராயினர்.

687. கடனறிந்து காலங் கருதி யிடனறிந்
தெண்ணி யுரைப்பான் றலை.

(பரி.) இ-ள். கடன் அறிந்து=வேற்றரசரிடத்துத் தான் செய்முறை மை யறிந்து—காலம் கருதி=அவர் செவ்வி பார்த்து—இடன் அறிந்து= சென்ற கருமஞ் சொல்லுதற்கேற்ற இடமறிந்து—எண்ணி, சொல்லுமாற்றை முன்னே விசாரித்து—உரைப்பான் தலை=அவ்வாறு சொல்லுவான் தூத ரின் மிக்கான். எ-று.

செய்முறைமையாவது அவர் நிலையும் தன்னரசனிலையும் தன்னிலையும் நோக்கி அவற்றிற்கேற்பக் காணுமுறைமையும் சொல்லுமுறைமையும் முதலா யின. செவ்வி=தன் சொல்லை யேற்றுக்கொள்ளும் மனமகிழ்ச்சி. அது கால

வயத்ததாகலின், 'காலம்' என்றார். இடம்=தனக்குத் துணையாவாருடைய இடம். என்னுதல்=தான் அது சொல்லுமாறும் அதற்கு அவர் சொல்லு முத்தரமும் அதற்குப் பின்றான் சொல்லுவனவுமாக இவ்வாற்றான் மேன்மேற் றானே கற்பித்தல். வடநூலார் இவ்விருவகையாருடன் ஓலைகொடுத்து நிற்பாரையுங் கூட்டித் தூதரைத் தலை, இடை, கடையென்று வகுத்துக்கூறினாராகலின், அவர் மதமுந் தோன்றத் 'தலை' என்றார். ஏதென்பது அதிகாரத்தான் வந்தது. இவை யெல்லாவற்றானும் தான் வகுத்துக் கூறுவான் இலக்கணங் கூறப்பட்டது. (௭)

விளக்கம் :—மேல் விளங்கிய வண்ணம் தூதர்களில் சிறந்தவனென்று சொல்பவன் வேற்றரசர்களிடத்துச் செல்லும் காலத்து அவ்வரசர்களுடைய நிலைமையையும், தன் அரசனுடைய நிலைமையையும் தூதாகச் சென்ற தன் நிலைமையையும் சீர் தூக்கிப் பார்த்து அத்தகுதிக்கேற்ப வேற்றரசனைக் காணுகின்ற முறைமையையும் சொற்களைச் சொல்லும் முறைமையையும் அறிந்து, அதன்பின் அவ்வரசனது காலமெதுவென்று பார்த்துத் தான் எக்காரியத்தைக் கருதிச் சென்றானோ அக்காரியத்தைச் சொல்வதற்கு ஏற்ற இடத்தையும் தெரிந்து, சொல்ல எண்ணிய காரியத்தைத் தனக்குள் தான் மனத்தால் எண்ணிச், சொல்லச்சென்ற காரியத்தைச் சொல்லவேண்டுபவனும் இருத்தல் வேண்டுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? வேற்றரசர் காலம் பார்ப்பதாவது தான் சொல்லப்போகும் சொற்களை அப்போது ஏற்றுக்கொள்ளும் மனப்பாங்கு உள்ளதோ என்றும், அதற்குக் காலம் சரியாக உள்ளதோ வென்றும் பார்ப்பதுடன் தனக்கு ஏதேனும் துன்பம் நேருமாயின் தனக்குத் துணையாக வருபவர் உள்ள இடத்தையே தான் இடமாகக் கொள்ளுதல் வேண்டுமென்றும், பிறகு சொல்லுவதற்கு முன், தான் ஒன்று சொன்னால் மாற்றரசன் சொல்லுவது எதுவாக இருக்குமென்றும், அவ்விதம் மாற்றரசன் சொல்லுவதைக் கேட்ட பிறகு தான் பதில் சொல்லவேண்டுவது எதுவாக இருக்க வேண்டுமென்றும் ஆகிய இவைகளெல்லாம் அறிந்து சொல்லுபவனே முதல், இடை, கடை என்கின்ற மூன்றுவித தூதருள் தலையாகிய தூதனாவான் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "தான் வகுத்துக் கூறுவானாகிய தூதனுடைய இலக்

கணம் இவையென்று அறிந்தோம். இனிக்கூறியது கூறுவான் இலக்கணமும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

688. தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.

(பரி.) இ-ள். வழி உரைப்பான் பண்பு = தன்னரசன் வார்த்தையை அவன் சொல்லியவாறே வேற்றரசர்க்குச் சென்று சொல்லுவானிலக்கணமாவது— தூய்மை = பொருள் காமங்களாற் றூயனாதலும்— துணைமை = தனக்கு அவ்வமைச்சர் துணையார்தன்மையும்— துணிவுடைமை = துணிதலுடைமையும்— இம்மூன்றின் வாய்மை = இம்மூன்றோடு கூடிய மெய்ம்மையுமென விவை; எ-று.

பொருள் காமங்கள்பற்றி வேறுபடக் கூறாமைப்பொருட்டுத் தூய்மையும், தன்னரசனுக்கு உயர்ச்சிகூறியவழி எம்மினோர்க் கஃதியல்பெனக்கூற் அவர் வெகுளி நீக்குதற்பொருட்டுத் துணைமையும், இது சொல்லின் இஃதே தஞ்செய்வதென் றொழியாமைப் பொருட்டுத் துணிவுடைமையும், யாவரானுந் தேறப்படுதற்பொருட்டு மெய்ம்மையும் வேண்டப்பட்டன. இன் ஒடுவின் பொருட் கண் வந்தது. (அ)

விளக்கம்:— தன்னுடைய அரசன் சொல்லிய வார்த்தையை அவன் சொல்லிய விதமே வேற்றரசனிடத்துப் போய்ச் சொல்லுகின்ற தூதனுடைய இலக்கணமாவது பொருள் கருதியோ, காமங் கருதியோ மனமயங்காத பரிசுத்த முடையவனும், தனக்கு அவ் வேற்றரசாது அமைச்சர்கள் துணையாக இருக்கவேண்டிய தகுதியையும், காரியத்தைச் சொல்லுங் காலத்துத் துணிவுகொண்டு சொல்லும் தகுதியும் ஆகிய மூன்று குணங்களோடு பொய்மை கூறாத மெய்ம்மை உடையவனுமிருத்தல் வேண்டுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? தூதனுகச் செல்பவன் வேற்றரசனிடத்துப் பொருள் கொண்டு நிற்பவனும் அல்லது மங்கையர் மயக்கத்தில் சென்ற இடத்து அகப்பட்டுக் கொள்பவனும் இருப்பானாயின்

தன்னரசனுக்கு நன்மை செய்ய முடியாமல் வேற்றரசர் வலையில் அகப்பட்டுக் கொள்வான். ஆதலால் அவ்வித மனக்கலக்கம் இல்லாத



தூய்மை உடையவனாயிருத்தல் வேண்டுமென்றும், தன் அரசனுக்கு உள்ள உயர்வை யெல்லாம் வேற்றரசரிடத்துச் சொல்லுமிடத்து அவ்வரசர் 'உன் அரசனுக்கு இவ்வித ஏற்றம் சொல்லுதல் கூடாது' என்று கோபிக்கப் புகினும் அச்சமயமிலுள்ள மந்திரிகள், 'மந்திரிகளுக்கு இலக்கணம் தம்மரசனை உயர்த்திச் சொல்லும் இயற்கையே. ஆகலால் நீவிர் இத்தூதுவர் மீது கோபிப்பது தகுதியன்று' என்று அவ்வேற்றரசர் கோபத்தை நீக்கும் அமைச்சர் துணைமையைப் பெறுதல் வேண்டுமென்றும், அதுவன்றியும் தம்மரசர்க்கு ஆகவேண்டியவைகளைச் சொல்லுங்காலத்தும், இவ்விதம் நாம் சொல்லுவதால் இப்பகை அரசர் நம்மை ஏதேனும் துன்பம் செய்வாரோ என்று பயப்படுவானாயின் எண்ணிய காரியம் முடியாது ஆதலால் துணிந்து சொல்லுகின்ற தன்மையும், தூதனாகச் சென்றவன் வாய்மையுடையவனல்லன் என்று பலரால் பழிக்கப் படுவானாயின் அவன் சொல்லும் சொற்களை யாரும் ஏற்றுக்கொள்ளாராதலால் வாய்மை என்பதை எக்காலத்தும் அனுசரிப்பவனாகவே இருத்தல்வேண்டுமென்றும் கூறியது கூறுவானாகிய தூதனது தன்மையை அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "தூதாகச் செல்லுபவன் வேற்றரசரிடத்துத் தன்னைத் தப்பித்துக்கொள்ளும் வண்ணம் பணிவாகிய வார்த்தைகள் ஏதேனும் சொல்லித் தப்பித்துக் கொள்ளுதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

689. விடுமாற்றம் வேந்தர்க் குரைப்பான் வடுமாற்றம்
வாய்சோரா வன்க ணவன்.

(பரி.) இ-ள். விடு மாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் = தன்னரசன் சொல்லிவிட்ட வார்த்தையை வேற்றரசர்க்குச் சென்று சொல்லுகிறவன் — வடு மாற்றம் வாய்சோரா வன்கணவன் = தனக்கு வருமேதத்திற்கஞ்சி அவனுக்குத் தாழ்வான வார்த்தையை வாய்சோர்ந்தும் சொல்லாத திண்மையை யுடையான்; எ-று.

தாழ்வு சாதி தருமமன்மையின், 'உடு' என்றார். வாய் சோராவெனக் காரியங் காரணத்தா லடக்கப்பட்டது. (௯)

விளக்கம்:—தன் அரசன் தனக்குச் சொல்லி அனுப்பிய வார்த்தைகளை வேற்றரசர்களிடத்துப் போய்ச் சொல்லும் தன்மையுடை



யான் ஓர்கால் தான் சொல்லும் வார்த்தைகளால் தனக்கு ஏதேனும் குற்றம் வருமோ என்றெண்ணித் தன் அரசனுக்கும் தனக்கும் தாழ்வு உண்டாகாத வார்த்தைகளை மறந்தும், வாய் தப்பியும் சொல்லாத மனவலிமையுடையவனாயிருத்தல் வேண்டுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் தூதாகச் செல்கின்ற ஒருவன் மாற்றரசன் தான் சொல்லும் தூதால் தன்னை ஏதேனும் தண்டிப்பதாகத் தோன்றுமாயின் தன்னுடைய அமைச்சுரிமைக்குத் தக்க குலத்தின் கருதியானது கெடாவண்ணம் தனக்கு உரிய பெருமை தங்கிய வார்த்தைகளால் தன்னைக் காத்துக்கொள்ள வேண்டுமேயன்றி இழிந்த வார்த்தைகள் பேசி உயிர்காத்துக் கொள்ளுதல் கூடாது. அவ்வித மனவலியுடையானே தூதனாக இருக்கத்தக்கவன் என்று அறிக்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் " இவ்விதம் சொல்லும் மனவலிமையுடைய சொற்களால் ஏதேனும் தனக்குச் சிறிது குற்றம் வருமாயின் அதனால் தன்னைத் தாழ்வுபடுத்திக்கொள்ளுதல் கூடாததாகும் ஆயின் உயிரைப் போக்கக்கூடிய பெரிய துன்பம் வருமாயின் அப்போதும் தூதுவன் மனவலிமையோடு இருத்தல் வேண்டுமோ ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

690. இறுதி பயப்பினு மெஞ்சா திறைவற்
குறுதி பயப்பதாந் தூது.

(பரி.) இ-ள். இறுதி பயப்பினும் எஞ்சாது = அவ்வார்த்தைதன்னுயிர்க்கிறுதி தருமாயினும் அதற்கஞ்சி யொழியாது—இறைவற்கு உறுதிபயப்பது தூதாம் = தன்னரசன் சொல்லியவாறே அவனுக்கு மிகுதியை வேற்றரசர்க்குச் சொல்லுவானே தூதனாவான். எ-று.

இறுதிபயப்பினு மென்றதனால், வினைய பயத்தல் சொல்லவேண்டாவா யிற்று. இவை மூன்று பாட்டானும் கூறியது கூறுவான திலக்கணங் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:- தூதனுவான் தன் அரசன் தன்னிடத்துச் சொல்லி அனுப்பியவிதம் சொல்லப்புகுந்தால் அதனால் வேற்றரசன் இவன் உயிர்க்குத்தீங்கு இழைக்க நேருவதாயினும் அத்தீங்கிற்காகப் பயந்துவிடாது, தன் அரசன் தன்னிடத்துச் சொல்லியபடியே வேற்றரச



னிடத்துச் சொல்லுதல் வேண்டுமென்றும், அவ்விதம் துணிந்து சொல்லுபவனே தூதனுவான் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தூதன் தான் சாதி தருமமாகிய காரியத்தைச் செய்யுங்கால் எவ்வித உபாயங்களுக்கும் பகை அரசனிடத்து அஞ்சாது இருத்தல் வேண்டுமென்றும், இவன் உடலுக்கு எவ்வித துன்பத்தைச் செய்யினும் பொறுத்துக்கொண்டு சொல்லியவற்றை மறைக்காது சொல்லுதல் வேண்டுமென்றும், தான் இறந்து போவதாயினும் அஞ்சாது சொல்ல வேண்டுவனவற்றைச் சொல்லிவிடுதல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர் "இவ்வமைச்சருள் இருவகைத் தூதின் இலக்கணமும் நன்கு உணர்ந்தோம். இனி இவ்வமைச்சனுவான் அரசனிடத்து அவன் விரும்பும் வண்ணம் ஒழுகுதல் வேண்டுமன்றே? அவ்வொழுக்கம் இதுவென அறியவும் விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 70. அதிகாரம்.
## மன்னரைச் சேர்ந்தொழுகல்.

---

அஃதாவது அமைச்சர் அரசரைப் பொருந்தி யொழுகுமாறு. இது வேந்தவாம் பண்புடைமை என மேலே வேண்டப்பட்டமையின், அதின்

பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது அமைச்சராக அமைந்தவர் தம்மை அமைத்துக்கொண்ட அரசனிடத்துப் பொருந்தி ஒழுகும் ஒழுக்கம். இது மேல் "அன்புடைமை யான்ற குடிப்பிறத்தல் வேந்தவாம், பண்புடைமை தூதுரைப்பான் பண்பு" என்று கூறியவண்ணம் அரசனால் விரும்பப்பட்ட குணமுடையவனே தூதனும் இருக்க வேண்டியவன் என்று கூறினமையால் தூதின் இலக்கணத்திற்குப் பிறகு அரசனால் விரும்பப்படும் ஒழுக்கமாகிய இதனை வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "அவ்வொழுக்கத்தை விளக்கல் வேண்டும்," என்னலும், ஆசிரியர் கூறலாயினர்,



691. அகலா தணுகா திக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்.

(பரி.) இ-ள். இகல் வேந்தர்ச் சேர்ந்து ஒழுகுவார்=மாறுபடுதலை யுடைய அரசரைச் சேர்ந்தொழுகும் அமைச்சர்—அகலாது அணுகாது தீக் காய்வார் போல்க=அவரை மிக நீங்குவதும் மிகச் செறிவதுஞ் செய்யாது தீக்காய்வார் போல இடைநிலத்திலே நிற்க. எ-று.

கடிதின் வெகுளுந் தன்மையரென்பது தோன்ற, 'இகல்வேந்தர்' என்றார். மிகவகலிற் பயன் கொடாது மிகவணுகின் அழிவு பற்றித் தெறும் வேந்தர்க்கு, மிகவகலிற் குளிர் நீக்காது மிகவணுகிற் சுடுவதாய தீயோடொத்தாய தொழிலுவமம் பெறப்பட்டது. (க)

விளக்கம்:—எக்காலத்தும் வெகுளியையே மேற்கொண்டுள்ள அரசனிடத்து அமைச்சராய்ச் சேர்ந்து இருப்பவர் அவ்வரசனை மிகப் பிரிதலில்லாமலும், மிக நெருங்கியுமில்லாமலும் இருந்து தீயினிடத்தே குளிர் காய்வார்போல நடுவாக இருந்து தன் தொழிலைச் செய்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், குளிர் காய வேண்டிய ஒருவன் தீயினிடத்தே மிக நெருங்கினால் அந்தீயானது எவ்விதம் நெருங்கியவனைச் சுட்டுவிடுமோ, அதுபோல் விரைவிற் கோபிக்கின்ற அரசனிடத்து மிக நெருங்கி

அமைச்சன் நடப்பானுயின் ஓர்வேளை அதனுல் தீங்கு நேர்ந்தாலும் நேருமாதலால் மிகுதியும் நெருங்குதல் கூடாதென்றும், குளிர் காய்பவன் தீயினுக்குப் பயந்து வெகு தூரத்தில் நின்று குளிர் காய்ந்தால் தீயின் வெப்பமானது தன் மீது படாது ஆதலால் குளிரைப் போக்குவதற்கில்லாமல் போவது போல் 'அரசன் வெகுளியுடையான்' என்று பயந்து அவனை அணுகாவிடின் தான் கொண்ட அமைச்சுத் தொழில் நடவாது ஆதலால் வெகு தூரத்தில் அகன்றிருத்தல் கூடாதென்றும், உண்மையாகவே குளிர் காய எண்ணியவன் தனக்கும் தீயினுக்கும் சிறிது இடம் விட்டு குளிர் காய்வது போல் அமைச்சனும் அணியாக இருந்து தன் தொழிலைச் செய்தல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "அமைச்சனானவன் மன்னர்க்கு இரண்டாவதாக இருக்கின்றான் ஆதலால் அரசர்க்கு உரிய சிறப்புகளைத் தனக்கு உரிமை ஆக்



கிக்கொள்ள ஆசைப்படுதல் கூடுமோ?" என்னலும்; ஆசிரியர் கூறலாயினர்.

692. மன்னர் விழைய விழையாமை மன்னரான்
மன்னிய வாக்கந் தரும்.

(பரி.) இ-ள். மன்னர் விழைய விழையாமை = தம்மாற் சேரப்பட்ட மன்னர் விரும்புவனவற்றைத் தாம் விரும்பாதொழிதல் — மன்னரான் மன்னிய ஆக்கம் தரும் = அமைச்சர்க்கு அவரானே நிலைபெற்ற செல்வத்தைக் கொடுக்கும். எ-று.

ஈண்டு விழையவென்றது அவர்க்குச் சிறப்பாக உரியவற்றை. அவை நகரப்படுவன, ஒப்பனை, மேன்மையென்றிவை முதலாயின. இவற்றை ஒப்பிற் கஞ்சித் தாம் விழையாதொழியவே, அவ்வச்சநோக்கி யுவந்து அவர்தாமே எல்லாச் செல்வமும் நல்குவரென்பது கருத்து. எனவே, அவற்றை விரும்பிற் கேடுதருமென்பதாம். (உ)

விளக்கம்:—அமைச்சன் தன்னுடைய அரசன் விரும்பக்கூடிய சிறப்புடைமையெல்லாம் தான் விரும்பாது இருத்தல் வேண்டுமென்றும், அவ்விதமிருப்பானுயின் அவ்வரசரால் நிலையாகிய செல்

வத்தை யெல்லாம் அடைதல் கூடுமென்றும் இத்திருக்குறள் கூறு கின்றது. அச்சிறப்புடையவை அரசன் உண்பனவாகிய உணவு களும், உடுக்கையும், பெருமையும் முதலாயினவாம். இவ்வித உண் பன உடுப்பன, பெருமை என்பனவற்றை தன் அரசனுக்குச் சரி யாகத் தானிருத்தல் கூடாது என்றெண்ணி அமைச்சன் தன்னைத் தாழ்த்திக் கொள்வானே யானல் அவ்வித பணிவுடைமையையும், அச்சத்தையும் பார்ப்பவனுகிய அரசன் இவன் மிகத்தக்கோன் என்று எண்ணி அவ்வமைச்சனுக்கு வேண்டிய எல்லாவற்றையும் கொடுத்து விடுவானென்றும், அவ்வாறு அல்லாது அரசன் விரும்பு வனவற்றை அமைச்சன் விரும்புவானுயின் கேட்டினையே அடைவா னென்றும், ஆதலால் அமைச்சனுனவன் எக்காலத்தும் அரசனுக் குச் சமானமாய் இருக்கக் கருதுதல் கூடாதென்றும் அறிந்தோ மென்றனர். அதுகேட்ட மாணுக்கர் " இவ்விதம் பணிவுடையனுக நடந்துகொள்ள எண்ணிய அமைச்சன் அரசனிடத்து யாதொரு



குற்றமும் தான் செய்யாதிருத்தல் வேண்டும்போலும் " என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

693. போற்றி னரியவை போற்றல் கடுத்தபின்
தேற்றுதல் யார்க்கு மரிது.

(பரி) இ-ள். போற்றின் அரியவை போற்றல்=அமைச்சர் தம்மைக் காக்கக் கருதின் அரியபிழைகள் தங்கண் வாராமற் காக்க,—கடுத்தபின் தேற் றுதல் யார்க்கும் அரிது=அவற்றை வந்தனவாகக்கேட்டு அவ்வரசர் ஐயுற்றால் அவரைப் பின்றெளிவித்தல் யாவர்க்கு மரிதாகலான். எ-று.

அரிய பிழைகளாவன=அவரால் பொறுத்தற்கரிய அறைபோதல், உரிமையொடு மருவல், அரும்பொருள் வெளவலென் றிவை முதலாயின. அவற்றைக் காத்தலாவது=ஒருவன் சொல்லியக்கால், தகுமோ வென்றை புறுது நகாதென்றே அவர் துணியவொழுகல். ஒருவாற்றுற் றெளிவித்தா லும் கடன்கொண்டான் றேன்றப் பொருடோன்றுமாறுபோலக் கண்டுழி யெல்லாம் அவை நினைக்கப்படுதலின், 'யார்க்குமரிது' என்முர். இவை மூன்று பாட்டானும் அது பொதுவகையாற் கூறப்பட்டது. (௩)

விளக்கம்:—அமைச்சரானவர் தம்மைக் காத்துக் கொள்ள எண்ணுவாராயின் பொறுத்தற் கரிய பிழைகள் தம்மிடத்தே வாராவண்ணம் காத்துக் கொள்ளல் வேண்டுமென்றும், அவ்விதம் காத்துக் கொள்ளாது அமைச்சரிடத்தே பிழைகள் உண்டாயினவாக அரசர் கேள்விப்பட்டுச் சந்தேகிப்பாரானால் அவ்வரசரைப் பின்னர் அச்சந்தேகத்தினின்று நீக்குதல் எவராலும் முடியாது என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது அரசரால் பொறுத்தற்குக் கூடாதாகிய சதி செய்தல் அல்லது மிகச் சொந்தம் காண்பித்து அவரோடு பொருந்துதல் அல்லது ஆசைக்குரிய அருமையாகிய பொருள்களை அபகரித்தல் ஆகிய இவ்வித கொடிய பிழைகளைத் தம்மிடத்தே ஒருவன் சொல்லும் வண்ணம் செய்தல் கூடாதென்றும், அவ்விதம் அரசனுக்கு எவனேனும் சென்று சொல்லப் புகினும் அவ்விதம் நம் அமைச்சன் செய்யான் என்று எண்ணும் வண்ணம் தம்மைக் காத்துக்கொள்ளுதல் வேண்டுமென்றும், அவ்வாறு காக்காவிடின் எக்காரியத்தைச் செய்யினும் அக்காரியங்களெல்லாம் அரசனுக்குச் சந்தேகமாகக் காணப்படு



மென்றும், அவ்விதம் காணப்படுவது கடன் வாங்கிய ஒருவனைக் கடன் கொடுத்தவன் காணும் காலத்திலெல்லாம் அக்கடன் கொடுத்தவனுக்கு, கொடுத்த பொருள் தன் மனத்தில் வந்து தோன்றுவது போல் சந்தேகப்பட்டவனைக் காணும் காலத்தெல்லாம் அச்சந்தேகமே வந்து தோன்றுமாதலால், அவ்வித சந்தேகத்தைப் பின்னும் ஓர் முறை எவ்வித சக்தியுடையவர்களாலும் தீர்த்தல் முடியாதென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர் "இதுகாறும் அமைச்சன் ஒழுகவேண்டிய ஒழுக்கத்தைப் பொது வகையால் உணர்ந்தோம். இனி அச்சிறப்புவகையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

694. செவிச்சொல்லுஞ் சேர்ந்த நகையு மவித்தொழுக
லான்ற பெரியா ரகத்து.

(பரி.) இ-ள். ஆன்ற பெரியாரகத்து = அமைந்தவரசருகிருந்தால்,—

செவிச்சொல்லும் சேர்ந்த நகையும் அவித்து ஒழுகல்=அரசனை ஒருவன் செவிக்கட்சொல்லுதலையும் ஒருவன் முகநோக்கி நகுதலையுந் தவிர்த்தொழுகுக; எ-று.

சேர்தல்=பிறனொடு சேர்தல். செய்தொழுகின், தங்குற்றங் கண்டு செய்தனவாகக் கொள்வரென்பது கருத்து. (௪)

விளக்கம்:—அமைச்சனானவன் தன்னுடைய அரசன் அருகிலிருந்த காலத்து அவன் பார்க்கும்படித் தன்னுடைய காதில் ஒருவன் ஒன்று சொல்வதையும், தன்னுடைய முகம் நோக்கி ஒருவன் சிரித்தலையும் செய்யாதபடிக் காத்துக்கொள்ளல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் அரசன் பார்க்கும்படி அமைச்சன் காதில் ஒருவன் ஏதேனும் ஒன்றைச் சொல்லுவானாயினும், ஒருவன் அமைச்சனைப் பார்த்து அரசன் எதிரிலிருக்கும்போது சிரிப்பானாயினும், அச்சிரிப்பும் இரகசியமும் அவ்வரசனுக்குச் சிறிதும் சம்பந்தம் இல்லாதிருக்கினும் மேல் நிலையில் நிற்கும் அரசனானவன் இவ்விரண்டினையும் செய்தால் அரசன் ஏதோ தன்னிடம் குற்றம் கண்டு இவ்விதம் செய்கின்றார்கள் என்று சந்தேகிப்பான் ஆதலால் அவ்வித சந்தேகம் உண்டாகாவண்ணம் அமைச்சனானவன், தன்னைக் காத்துக்கொள்ளல் வேண்டும் என்றறிந்தோம் என்





றனர். அதுகேட்ட மாணாக்கர் "அமைச்சனிடத்து மற்றொருவன் ரகசிய வார்த்தைகளை அரசன் அறியப் பேசுதல் கூடாது என்று அறிந்தோம். ஆயின் மற்று யாரேனும் அரசனிடத்து மறைவாகிய ரகசியங்களைப் பேசினால் அப்போது அமைச்சனென்னும் உரிமையுடன் அவ் ரகசிய வார்த்தைகளை இவன் கேட்டல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

695. எப்பொருளு மோரார் தொடரார்மற் றப்பொருளை
விட்டக்காற் கேட்க மறை.

(பரி.) இ-ள். மறை=அரசனுக்குப் பிறரோடு மறை நிகழ்வுழி—எப்பொருளும் ஓரார்=யாதொரு பொருளையுஞ் செவிகொடுத்துக் கேளாது,—

தொட்டார்=அவனை முடுகி வினவுவதுஞ் செய்யாது,—அப்பொருளை விட்டக்கால் கேட்க=அம்மறைப்பொருளை அவன்றானே அடக்காது சொல்லியக்கால் கேட்க. எ-று.

ஓர்தற்கேற்கும் பொருளாயினு மென்பார், 'எப்பொருளும்' என்றார். மற்று=வினைமாற்றின்கண் வந்தது. (௫)

விளக்கம் :—அமைச்சனானவன், அரசனும் மற்றவரும் ரகசிய வார்த்தைகளைப் பேசுவார்களாயின், அவற்றுள் ஒன்றையேனும் தான் செவி கொடுத்துக் கேட்டல் கூடாதென்றும், அப்போது கேளாதிருப்பதுடன் பின்னரும் அரசனை அணுகி அவ்வித ரகசியத்தைக் கேட்டலும் கூடாதென்றும், ஓர் கால் அவ்வரசன் அவ்ரகசியத்தைத் தனக்குள் அடக்கிக்கொள்ளாது தானே விடுவானாயின் அப்போது அதனைக் கேட்டுக்கொள்ளல் வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அமைச்சனானவன் அரசன் எக்காலத்தும் தன்னை விரும்பி இருக்கவேண்டுமாயின் மேற்கூறிய வண்ணம் பிறரிடத்து அரசன் கான ரகசியம் பேசுதல் கூடாதென்றும், அவ்வளவோடு அல்லாமல் அரசன் மற்றவர்களோடு பேசும் ரகசிய வார்த்தைகளையும் அவனே சொன்னாலல்லது வலிந்து கேட்டல் கூடாதென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்விதம் சந்தேகப்படக்கூடிய விஷயங்களில் அரசனிடத்து ஒழுகவேண்டிய ஒழுக்கம் இதுவென்று அறிந்தோம். ஆனால் அமைச்சனென்னும் உரிமையில் அரசனிடத்துத் தான்



சொல்ல எண்ணிய விஷயங்கள் எவையேனும் எக்காலத்திலேனும் சொல்லுதல் கூடுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

696. குறிப்பறிந்து காலங் கருதி வெறுப்பில
வேண்டுப வேட்பச் சொலல்.

(பரி.) இ-ள். குறிப்பு அறிந்து=அரசனுக்குக் காரியஞ் சொல்லுங்கால் அப்பொழுது நிகழ்கின்ற அவன் குறிப்பினையறிந்து,—காலம் கருதி=சொல்லுதற்கேற்ற காலத்தையும் நோக்கி,—வெறுப்பு இல வேண்டுப வேட்பச் சொலல்=வெறுப்பிலவுமாய் வேண்டுவனவுமாய காரியங்களை அவன் மனம் விரும்பும்வகை சொல்லுக. எ-று.

குறிப்புக் காரியத்தின்கணன்றிக் காமவெகுளி யுள்ளிட்டவற்றி னிகழ் வழியும் அதற்கேலாக்காலத்துஞ் சொல்லுதல் பயனின்றாகலின், 'குறிப்பறிந்து காலங்கருதி' என்றும், அவனுடம்படாதன முடியபோகாமையின், 'வெறுப் பில' என்றும், பயனில்லவும் பயன்சுருங்கியவுஞ் செய்தல் வேண்டாமையின், 'வேண்டுப' என்றும், அவற்றை இனியவாய்ச் சுருங்கி விளங்கிய பொருள வாய சொற்களாற் சொல்லுகவென்பார் 'வேட்பச் சொலல்' என்றுங் கூறினார்.

விளக்கம்:—அமைச்சனானவன் அரசனிடத்துத் தான் சொல்ல எண்ணிய காரியங்களைச் சொல்லுங்கால் அப்பொழுது நடக்கின்ற அவன் குறிப்பினை அறிந்தும், சொல்லுதற்கேற்ற காலத்தைப் பார்த்தும், சொல்லுகின்ற காரியங்கள் வெறுப்பைத் தாராது விருப்பைத் தருவதும் ஆபவாய்க் கொண்டும் அவ்வித விரும்பத் தக்க காரியங்களையும் அரசன் மனம் விரும்பி மகிழும்வண்ணம் சொல் லுதலும் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதா வது? அரசனானவன் காம வெகுளி என்கின்ற இரண்டு குற்றங்க ளுள் மயங்கி இருந்த காலத்திலும் தான் சொல்லவேண்டிய விஷயங் களை அவன் ஏற்றுக்கொள்ளாத காலத்தும் சொல்லுவானாயின், சொல்லிய காரியத்தின் பயன் ஒன்றுமில்லாமல் போய் விடுமாத லால் குறிப்பறிந்தும், காலமறிந்தும் சொல்லுதல் வேண்டும் என்று கூறியதுடன் அவ்விதம் சொல்லுகின்ற காரியங்களும் அரசன் வெறுக்கக்கூடிய காரியமாயிருக்குமாயின், அக்காரியத்துக்கு அவன் உடன்படாது காரியம் முடிவு அடைவதற்கு ஏதுவில்லாமல் போகுமாதலால் காரியம் முடிவினை அடைய அரசன் விரும்பத்



தக்க காரியங்களையே சொல்லுதல் வேண்டுமென்றும், அவ்விதம் சொல்லும் காலத்தும் அவன் விரும்பிக் கேட்கும் வண்ணம் இனிமை யுடையனவாய், சுருங்கி விளங்கிய பொருள்களை யுடையனவாய் உள்ள சொற்களால் சொல்லுதல் வேண்டுமென்றும் அறிந்தோ மென்றனர். அது கேட்ட மாணுக்கர் "அமைச்சனானவன் அரசன் விரும்பியன கூறி வெறுப்பன ஒழிதல் வேண்டும் என்று அறிந்

தோம். ஆயின் அரசனே பயனில்லாதனவாகிய காரியங்களைக் கேட்பானாயின் அமைச்சன் தன் தொழிலாக அப் பயனில்லாக் காரியங்களையும் சொல்லுதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

697. வேட்பன சொல்லி வினையில வெஞ்ஞான்றுங்
கேட்பினுஞ் சொல்லா விடல்.

(பரி.) இ-ள். வேட்பன சொல்லி=பயன் பெரியனவுமாய் அரசன் விரும்புவனவுமாய காரியங்களை அவன் கேட்டிலனாயினுஞ் சொல்லி,—எஞ்ஞான்றும் வினை இல கேட்பினும் சொல்லாவிடல்=எஞ்ஞான்றும் பயனில வாயவற்றைத் தானே கேட்டானுஞ் சொல்லாது விடுக. எ-று.

வினையிலவெனவுங் கேட்பினுமெனவும் வந்த சொற்களான், அவற்றின் மறுதலைச் சொற்கள் வருவிக்கப்பட்டன. வினையான் வருதலின் 'வினை' என்றும், வறுமைக்காலமு மடங்க 'எஞ்ஞான்றும்' என்றுங் கூறினர். சொல்லுவனவுஞ் சொல்லாதனவும் வகுத்துக் கூறியவாறு. இவை நான்கு பாட்டானுஞ் சிறப்பு வகையாற் கூறப்பட்டது. (எ)

விளக்கம் :—அமைச்சனானவன் மிகப் பெரிய பயனைத் தருவதாயும் அரசன் விரும்பக் கூடியதாயும் உள்ள காரியங்களை அவ்வரசனே தன்னைக் கேளாவிடினும் அவனுக்கு வருந்திச் சொல்லுதல் வேண்டுமென்றும், பயன் கொடாத விஷயங்களை அரசனே வருந்திக் கேட்பினும் எக்காலத்தும் சொல்லாதிருத்தல் வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பயனடையக் கூடிய காரியத்தை அரசனது நன்மையைக் கருதி அவன் கேளாவிடினும் சொல்லுதல் வேண்டுமென்றும்; பயன்தரக்கூடா விஷயங்களைத் தனக்கு வறுமை வந்த காலத்தும், ஓர் பயன் கருதியும் சொல்லுதல் கூடாதென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர்



"அமைச்சன் அரசனுக்குச் சொல்ல வேண்டுவன இவை என்றும், சொல்லக்கூடாதென இவை என்றும் வகுத்துக் கூறியதை அறிந்தோம். அன்றியும் மன்னரைச் சேர்ந்து ஒழுகுகின்ற அமைச்சன்

ஒழுக்கத்தின் சிறப்பு வகையும் அறிந்து சொன்னோம். இனி அமைச்சனானவன் அரசனினும் வயதில் முதிர்ந்தவனாயும், இளைத்தவனாயும் இருப்பானாயின் அக்காலத்து அரசனுக்கு எதையும் எக்காலத்தும் அஞ்சாது வற்புறுத்திச் சொல்லுதல் கூடுமன்றோ ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

698. இளைய ரினமுறைய ரென்றிகழார் நின்ற
வொளியோ டொழுகப் படும்.

(பரி.) இ-ள். இளையர் இன முறையர் என்று இகழார்=இவர் எம்மின் இளைய ரென்றும் எமக்கின்ன முறையினையுடையரென்றும் அரசரை யவமதியாது,—நின்ற ஒளியோடு ஒழுகப்படும்=அவர்மாட்டு நின்ற வொளியோடு பொருந்த ஒழுகுதல் செய்யப்படும். எ-று.

ஒளி—உலகங்காத்தற்குத் தாமுலகங்காக்கின்ற அவர் கடவுட்டன்மை. அதனோடு பொருந்த வொழுகலாவது அவர் கடவுளரும் தாம் மக்களுமா யொழுகுதல். அவ்வொளியாற் போக்கப்பட்ட விளமையும் முறையும்பற்றி இகழ்வாராயின், தாமும் போக்கப்படுவரென்பது கருத்து. (அ)

விளக்கம் :—அமைச்சனானவன் இவ்வரசன் தன்னைக் காட்டிலும் இளையவன் அதுவன்றியும் தனக்கு இவ்வித முறையினையுடையவன், என்று அரசனை அவமதியாது அவ்வரசனுக்கு உள்ள புகழ் ஒன்றையே கருதி, அப்புகழுக்குத் தக்க அளவாக அவனிடத்து அமைந்து ஒழுகுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? அமைச்சன் ஒருவன் அப்போது ஆளும் அரசன் தந்தைக்கு அமைச்சனாக இருந்தவன் ஆயினும் 'நாம் இவன் தந்தையின் அமைச்சனாயிற்றே, இவன் நம் கண்முன்னர் பிறந்தவனாயிற்றே, இவன் நம்மால் வளர்க்கப்பட்டவனாயிற்றே' என்று அவனது இளமையைக் கருதுதல் கூடாதென்றும், அதுவன்றியும் 'இவ்வரசன் தனக்கு இன்ன உறவினன் என்றும், இவ்வரசனுக்கு என்னைக் காட்டிலும் பெரிய உறவினர் இல்லை என்றெண்ணியும் இகழ்ச்சியினால் அரசனை அவமதியாது "திரு உடை மன்னரைச் சேரின் திரு

மாலைக் கண்டேனே" என்றும், பெரியோர் வாக்கின்படி அரசனைத் தெய்வமாகக் கருதித் தெய்வத்தன்மை தங்கிய அவனுடைய புகழுக்கு ஏற்றவண்ணம் தான் பணிந்து நடக்க வேண்டுமென்றும் அறிந்தோம். அரசன் தெய்வத்தன்மை தங்கியவன் என்பதை சீவகசிந்தாமணி காமகளிலம்பகம், 219 செய்யுள்:—

"உறங்குமாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமா
லிறங்கு கண்ணிமை யார்விழித் தேயிருந்
தறங்கள் வெளவ வதன்புறங் காக்கலார்"

என்பதனாலும், அறிதல் கூடும் என்றனர். அது கேட்ட மாணாக்கர் "அரசனானவன் தனக்கு அமைந்த அமைச்சனை உயிர்போலக் கருதுவானாயின் அக்காலத்து அவ்வமைச்சன் தான் எண்ணியபடி எதனையும் செய்தல் கூடுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

699. கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத
துளக்கற்ற காட்சி யவர். [செய்யார்

(பரி.) இ-ள். கொளப்பட்டேம் என்று எண்ணிக் கொள்ளாத செய்யார் = அரசனால் யாம் நன்குமதிக்கப்பட்டேமென்று கருதி அவன் விரும்பாதவற்றைச் செய்யார்—துளக்கு அற்ற காட்சியவர் = நிலைபெற்ற அறிவினையுடையார். எ-று.

கொள்ளாதன செய்தழிவெய்துவார் கொளப்பாட்டிற்குப் பின்றம்மை வேறுபடுவாராகக் கருதுவாராகலின், முன்னையாராகவே கருதி யஞ்சியொழுகுவாரைத் 'துளக்கற்ற காட்சியவர்' என்றார். (௯)

விளக்கம்:—நிலை பெற்ற அறிவினையுடைய அமைச்சர் தாம் அரசனால் மிகுதியும் நன்கு மதிக்கப்பட்டோம் என்று தமக்குத் தாமே எண்ணிக்கொண்டு அரசன் விரும்பாத காரியத்தைச் செய்ய மாட்டார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? அறி

வுடைய அமைச்சன் ஒருவன் தன்னை அரசனுனவன் அமைச்சனுக அமைத்துக்கொண்டு தன்னுடைய சலுகைப்பாட்டின் தன்மையைக் கருதித் தன்னை நன்குமதித்த பிறகு தான் எண்ணிய விதமெல் லாம் செய்வானுயின் அவ்வித செயல் அரசனுக்கிருந்த நன்கு



மதிப்பினை ஒழித்து இவனுக்குக் கேடு உண்டாகும்படிச் செய்து விடும் ஆதலால் அறிவுடைய அமைச்சன் தன்னை முதலில் அரசன் எவ்விதம் நன்குமதிக்கும்படி அவன் விரும்பிய காரியங்களையே செய்து வந்தாலோ அவ்வித விரும்பும் காரியங்களையே செய்து வருதல் வேண்டும் என்று அறிஞர்களும் என்றனர். அதுகேட்ட மாணுக்கர் " அமைச்சனுவான் மிகப்பழமையனுக இருந்து ஏதேனும் குற்றத்தைச் செய்வானுயின் அப்பழமையை நோக்கி அரசன் அவனை மன்னித்துவிடுதல் கூடுமோ " என்னலும், ஆசிரியர் கூறுவாரா யினர்.

700. பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யுங்
கெழுதகைமை கேடு தரும்.

(பரி.) இ-ள். பழையம் எனக் கருதி பண்பு அல்ல செய்யும் கெழுதகைமை=அரசனுக்கு யாம் பழையமெனக் கருதித் தமக்கியல்பல்லாதவற்றைச் செய்யுமுரிமை—கேடு தரும்=அமைச்சர்க்குக் கேட்டினைப் பயக்கும். எ-று.

அவன் பொறாது செறும்பொழுதின் அப்பழைமை நோக்கிக் கண்ணோ டாது உயிரை வௌவுதலான், அவன் வேண்டாதன செய்தற் கேதுவாய 'கெழுதகைமை கேடுதரும்' என்றார். இவை மூன்றுபாட்டாலும் பொறுப்ப ரென்று அரசர் வெறுப்பன செய்யற்கவென்பது கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—அமைச்சனுனவன் தான் அரசனுக்குமிகப் பழைமையானவனென்று எண்ணித் தனக்கு இயல்பு அல்லாத விஷயங் களைச் செய்யும் பாத்தியதையைக் கொண்டால் அப்பாத்தியதையானது அவ்வமைச்சனுக்குக் கேடுதரும் செய்கையை உண்டாக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? அரசன் விரும்பக்கூடாத காரியத்தை அமைச்சனுனவன் தன்னுடைய பழைமையான பாத் தியதையைக் கருதிச் செய்யப் புகுவானுயின் அத்தகுதியல்லாத

காரியத்தை விரும்பாத அரசன் இவ்வமைச்சனது பழைமையை நோக்கி மன்னித்து விடமாட்டானென்றும், அவன் கோபிக்கும் காலத்துச் சிறிதும் தாக்ஷிண்யமில்லாது உயிரைக் கொள்ளை கொள்ளுவானென்றும், ஆதலால் எவ்வளவு பழைமையுடையவனுயினும், பக்தியுதையுடையவனுயினும் அமைச்சனானவன் அரசன் விரும்புவனவற்றையே செய்தல்வேண்டும் என்றும் அறிந்தோம் என்றனர்.



அதுகேட்ட மாணுக்கர் "அமைச்சன் அரசனிடத்து ஒழுகவேண்டிய ஒழுக்கங்கள் இவையென அறிந்தோம். இனி அரசனுக்கு வேண்டுவன இவையென்று அவன் வாக்கால் அறிந்து அமைச்சன் செய்தல் வேண்டுமோ? அன்றி எவ்வித குறிப்பால் அறிந்து செய்தல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 71. அதிகாரம்

---

## குறிப்பறிதல்.

(பரி.) அஃதாவது அரசர் கருதியவதனை அவர் கூறாமலறிதல். இது மன்னரைச் சேர்ந்தொழுகற்கு இன்றியமையாதாகலின், அதன்பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது நீங்கள் மேல்கிளவிய வண்ணம் அரசர் எண்ணிய காரியங்களை அவ்வரசர் சொல்லாமலே அமைச்சன் அறிதல். இவ்விதம் வாக்கால் கூறாமல் குறிப்பால் அறிந்து ஒழுகுதல் மன்னரைச் சேர்ந்து ஒழுகுகின்ற அமைச்சனுக்கு மிக முக்யமானதாதலால் இவ்வதிகாரத்தை மன்னரைச் சேர்ந்து ஒழுகுதல் என்னும் அதிகாரத்துக்குப் பிறகு வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணுக்கர் "இவ்விதம் குறிப்பறிந்து செய்கின்ற அறிவுடையர் உலகத்தார்க்கு எவ்வித பயனுடையவராய் இருப்பர்"

என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**701.** கூறாமை நோக்கிக் குறிப்பறிவா னெஞ்ஞான்று
மாறாநீர் வையக் கணி.

(பரி.) இ-ள். குறிப்புக் கூறாமை நோக்கி அறிவான் = அரசனுற் குறித்த கருமத்தை அவன் கூறவேண்டாவகை அவன் முகத்தானும் கண்ணானும் நோக்கி அறியுமமைச்சன் — எஞ்ஞான்றும் மாறா நீர் வையக்கு அணி = எஞ்ஞான்றும் வற்றாத நீரால் சூழப்பட்ட வையத்துள்ளார்க்கு ஓராபரணமாம்.

ஒப்புமுடையனும் எல்லார்க்கும் அழகுசெய்தலான், 'வையக்கணி' என்றார். குறிப்பும் வையமும் ஆகுபெயர். வையத்திற்கென்பது விகாரப்பட்டு நின்றது. (௧)



விளக்கம்:- அரசன் எண்ணிய கருமத்தை அவன் வாக்கால் கூறுமுன் அவன் முகத்தினாலும், கண் பார்வையாலும் குறிப்பால் அறிகின்ற அமைச்சனானவன் எந்தக் காலத்திலும் வற்றாத நீரால் சூழப்பட்ட நிலவுலகத்திலுள்ளார்க்கு ஆபரணமாவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் குறிப்பினை அறிந்து செய்யவல்ல அமைச்சன் இருப்பானாயின், அவ்வமைச்சன் உலகத்தார் யாவர்க்கும் எல்லாவித நன்மைகளையும் செய்யக் கூடுமாதலால், அவ்வித அமைச்சனை உலகத்தார், அணிந்தார்க்கு அழகினை உண்டுபண்ணுகிற ஆபரணம்போல விரும்பி ஏற்றுக்கொண்டு அவன் சொல் வழி நிற்பர் என்பது பொருளாயிற்று என்றனர். அது கேட்ட மாணாக்கர், "வாக்கால் கூறியும் உண்மை அறிவதற்கு இல்லாத மனிதர் பலரைக் காண்கின்றோம். வாக்கால் கூறாமலே குறிப்பால் அறிகின்றவன் அமைச்சனென்றால் அவனை ஆபரணமாகத்தான் கொள்ளுவரோ உலகோர்? இன்னும் எவ்விதமாகத்தான் மதிப்பர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**702.** ஐயப் படாஅ தகத்த துணர்வானைத்
தெய்வத்தோ டொப்பக் கொளல்.

(பரி.) இ-ள். அகத்தது ஐயப்படாது உணர்வானை = ஒருவன் மனத்தின்கண் நிகழ்வதனை ஐயப்படாது ஒருதலையாக உணரவல்லானை—தெய்வத்தோடு ஒப்பக் கொளல் = மகனேயாயினும், தெய்வத்தோடொப்ப நன்கு மதிக்க. எ-று.

உடம்பு முதலியவற்றான் ஒவ்வானாயினும் பிறர் நினைத்தது உணருந் தெய்வத்தன்மையுடைமையின், 'தெய்வத்தோடொப்ப' என்றார். (உ)

விளக்கம்:—யாதேனும் ஒருவர் மனதில் எண்ணுவதைச் சிறிதும் சந்தேகியாது 'இதுதான் இவர் எண்ணியது' என்று நிச்சயித்து அறியவல்லான் ஒருவன் அவன் பிறப்பால் மகனாக இருக்கினும் தெய்வத்துக்குச் சமானமாக உலகத்தாரால் நன்கு மதிக்கப் படுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தேவர்கள்போன்று கண் இமையாமலும், கால் நிலத்தில் தோயா





மலும், மாலை வாடாமலும் இல்லாவிடினும் மற்றையோர் எண்ணுகின்ற எண்ணத்தைத் தேவர்கள் அறிந்து அவர் வேண்டுவனவற்றைச் செய்து உபகரிப்பதுபோல் இவ்வமைச்சன் அரசர் முகக்குறிப்பினையும், கண் பார்வையினையும் பார்த்து, அவர்க்கு வேண்டுவனவற்றைச் செய்கிறான் ஆதலால், அவன் தெய்வத்துக்குச் சமானமானவனாக நன்கு மதிக்கப்பட்டு உலகத்தாரால் போற்றப்படுவான் என்று அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித தகுதியுடையாரை அரசனானவன் எவ்வித பொருள் கொடுத்தும் வைத்துக் கொள்ளல் வேண்டும் அன்றோ!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

708. குறிப்பிற் குறிப்புணர் வாரை உறுப்பினுள்
யாது கொடுத்துங் கொளல்.

(பரி.) இ-ள். குறிப்பின் குறிப்பு உணர்வாரை = தன்குறிப்பு நிகழுமாறறிந்து அதனாற் பிறர் குறிப்பறியுந்தன்மையாரை,—உறுப்பினுள் யாது

கொடுத்தும் கொளல் = அரசர் தம்முறுப்புக்களுள் அவர் வேண்டியதொன் றினைக் கொடுத்தாயினும், தமக்குத் துணையாகக் கொள்க. எ-று.

உள்ளநிகழ்ச்சி யாவர்க்குமொத்தலின், பிறர் குறிப்பறிதற்குத் தன் குறிப்புக் கருவியாயிற்று. உறுப்புக்களாவன:—பொருளும், நாடும், யானை குதிரைகளும் முதலிய புறத்துறுப்புக்கள் இதற்குப் பிறர் முகக்குறிப்பானே அவர் மனக்குறிப்புணர்வாரை யென்றுரைப்பாருமுளர். இவை மூன்றுபாட்டானும் குறிப்பறிவாரது சிறப்புக் கூறப்பட்டது. (௧)

விளக்கம் :—தம்முடைய குறிப்பு இவ்விதம் உள்ளது என்று குறிப்பாலறிந்து அக்குறிப்பினால் மற்றவருடைய குறிப்பினையும் அறியவல்லவரை அரசரானவர் தன் புறத்து உறுப்புக்களாகிய நாடு, யானை, குதிரை, தேர் முதலிய இவற்றுள் அவர் வேண்டுவன எவையாய் இருப்பினும் அவற்றினைக் கொடுத்து அவ்வித அமைச்சரைத் தமக்குத் துணையாகக் கொள்ளுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பிறருடைய குறிப்பறிவதற்கு அரசன் குறிப்பினை முதலில் உணரவேண்டுமென்றும், உணர்ந்த அளவகவே அக்குறிப்பினைக் கொண்டு பிறர் மனத்துத் தோன்றும் செயல்களைக் குறிப்பால் உணரல் வேண்டுமென்றும்,



அவ்விதம் அரசர் குறிப்பினையும், உலகோர் குறிப்பினையும் அறிபவன் அரசன் முன்னேற்றத்திற்கு வேண்டுவனவாகிய செயல்களை யெல்லாம் செய்யவல்லவன் ஆவானென்றும், அவ்வித தகுதியுடையானை எப்பொருள் கொடுத்தாயினும் அரசர் கொள்ளுதல் வேண்டும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், " இவ்விதம் குறிப்பால் உணரும் தகுதியுடையாரோடு ஏனைய மக்களையும் மக்களென்னும் தகுதியால் ஒன்றாக எண்ணுதல் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

704. குறித்தது கூறாமைக் கொள்வாரோ டேனை
யுறுப்போ ரனையரால் வேறு.

(பரி.) இ-ள். குறித்தது கூறாமைக் கொள்வாரோடு—ஒருவன் மனத்துக் கருதியவதனை அவன்கூறவேண்டாமல் அறியவல்லாரோடு—ஏனை உறுப்பு

ஏனையவர்=மற்றை மாட்டாதார் உறுப்பாலொருதன்மையராக வொப்பாராயினும்,—வேறு=அறிவான் வேறு. எ-று.

சொல்லாதாரென்பதூஉம், ஆயினுமென்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. சிறந்த வறிவின்மையின், விலங்கென்னுங் கருத்தான் 'வேறு' என்றார். (௪)

விளக்கம் :—ஒருவன் தன் மனத்து எண்ணிய ஒன்றினை அவன் சொல்லவேண்டாமலே குறிப்பால் அறியவல்லவரோடு அவ்விதக் குறிப்பால் அறிய முடியாத ஏனையோர் கண், கால் முதலிய உறுப்புக்களால் ஒத்திருக்கினும் சமானமாய் எண்ணப்படமாட்டார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அறிவுடையவரே பெரியார் ஆதலால் அறிவிற் சிறந்த அப்பெரியாரோடு அறிவிலாச் சிறியர் உருவத்தால் மனிதராகக் காணப்படினும் செயலால் விலங்கிற்கு உள்ள அறிவே உடையரென்றும், அதனால் மக்களாக மதிக்கப்படாமல் விலங்காகவே மதிக்கப்படுவர் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் குறிப்பால் உணர வல்லானே தெய்வத்துக்குச் சமானமாக மதிக்கப்படுவானென்றமையால் இவ்விதம் உணரவல்ல உறுப்பு ஓர் மகனுக்கு எதுவாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



705. குறிப்பிற் குறிப்புணரா வாயி னுறுப்பினு
ளென்ன பயத்தவோ கண்.

(பரி.) இ-ள். குறிப்பின் குறிப்பு உணராவாயின்=குறித்தது காண வல்ல தங்காட்சியாற் பிறர் குறிப்பினை யுணரமாட்டாவாயின்,—உறுப்பினுள் கண் என்ன பயத்தவோ=ஒருவனுறுப்புக்களுட் சிறந்த கண்கள் வேறென்னபயனைச் செய்வன! எ-று.

முதற்கட் குறிப்பு—ஆகுபெயர். குறிப்பறிதற்கட் டுணையாதற் சிறப்புப் பற்றி உயிருணர்வு கண்மே லேற்றப்பட்டது. அக்கண்களாற் பயனில்லையென்பதாம். இவை யிரண்டுபாட்டானுங் குறிப்பறியாரதிழிபு கூறப்பட்டது.

விளக்கம் :—ஒருவன் மனத்தில் எண்ணிய ஒன்றை அவன்

முகத்தால் அறியவல்ல காக்ஷி இல்லாதவனாக ஒருவன் இருப்பானானால், உறுப்புக்களில் சிறந்தனவாகிய கண்கள் அவனுக்கு வேறு என்ன பிரயோஜனத்தைச் செய்தல் கூடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அறிவின் முயற்சி கொண்டு யாவும் உணர்வதாயினும் அவ்வறிவும் கட்புலனிடமாகச் சென்று எதையும் காண்கிறது என்றும், அவ்விதம் காண்கின்ற காக்ஷியுள் குறிப்பறிவது என்னும் பிறர் எண்ணத்தை அவர் முகத்தளவானும், கண்ணளவானும் கொண்டு அறியக்கூடியன கண்களே என்றும், அவ்வித கண்களிருந்தும் குறிப்பினை அறியாவிடின் அக்கண்கள் பெற்ற பயனை அடைவதற்கு இல்லாமல் போகிறது என்றும், அக்கண்கள் மரக்கண்கள் போன்ற குருட்டுக் கண்கள் ஆயினவே அன்றி கண்களென்று மதிப்பதற்கில்லை என்றும் அறிகிறோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் மனத்தில் நினைப்பதை முகத்தில் அறிதல்வேண்டும் என்பதைநோக்கப் புதுமையாக உள்ளது மனம் நினைப்பதை முகம் எவ்வாறு அறியும்? அதை ஒரு உவமை வாயிலால் விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

706. அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்.

(பரி.) இ-ள். அடுத்தது காட்டும் பளிங்குபோல்=தன்னையடுத்த பொருளது நிறத்தைத் தானே கொண்டுகாட்டும் பளிங்குபோல—நெஞ்சம் கடுத்தது முகம் காட்டும்=ஒருவனெஞ்சத்து மிக்கதனை அவன்முகந் தானே கொண்டு காட்டும். எ-று.



அடுத்ததென்பது ஆகுபெயர். கடுத்ததென்பது கடியென்னு முரிச்சொலடியாய் வந்த தொழிற்பெயர். உவமை ஒருபொருள் பிறிதொருபொருளின் பண்பைக் கொண்டு தோற்றுதலாகிய தொழில்பற்றி வந்தது. (௬)

விளக்கம் :—தன்னைச் சமீபித்த பொருளினுடைய நிறம் முதலியவற்றைத் தானே தன்னுள் கொண்டு காட்டுகின்ற பளிங்குக் கண்ணாடிபோல், ஒருவன் நெஞ்சினிடத்து மிகுந்து தோன்றுவதை

அவன் முகமானது தானே கொண்டு காட்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, எவ்விதம் கண்ணாடி தன்னிடத்தே சென்ற பொருளினது உருவம், நிறமுதலியவைகளைத் தானே தன்னிடத்தே கொண்டு மறுபடியும் பார்ப்பவர்களுக்குத் திருப்பிக் காட்டுகின்றதோ, அதுபோல் மாசற்ற மனமாகிய படிகத்தின் காணப்படும் பொருள் எதுவாக உள்ளதோ அதனை முகமென்னும் கண்ணாடியானது தன்னுள் கொண்டு பார்ப்பவர்களுக்கு அப்போது மனத்தில்கொண்ட கொள்கையை அறிவிக்குமென்றும், அதைக் காட்டிலும் வேறு ஒன்றும் அத்துணைச் சுலபமாகக் காட்டவல்லதாக இல்லை என்றும் அறிந்தோம். அதனுடன் இவ்வுரையாசிரியர் குறிப்பறிதலைக் கூறுகின்ற முதற்றிருக்குறளில் ஒருவன் தான் எண்ணியவற்றை வாயால் கூறுமிடத்தும் அவன்முகமும், கண்ணும் நோக்கி அமைச்சன் அறிதல் வேண்டும் என்று கூறிய அதனால், ஈண்டு திருவள்ளுவர் முகத்தால் அறிவதை மூன்று திருக்குறளால் கூறினர். இனி, ஏனைய இரண்டு திருக்குறளாலும் முகத்தளவாக அறியும் குறிப்பினை உணர்வோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "உரையாசிரியர் பரிமேலழகர் பின்வரும் திருக்குறள்களுக்கு இணங்க, முன்னரே வகுத்து தம் உரையுள்கூறி நிற்பதைக் கண்டு மிகமகிழ்கின்றோம். ஏனைய திருக்குறள்களாலும் முகத்தின் தன்மையை விளக்க விரும்புகின்றோம்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

707. முகத்தின் முதுக்குறைந்த துண்டோ உவப்பினுங்
காயினுந் தான்முந் துறும்.

(பரி.) இ-ள். உவப்பினும் காயினும் தான் முந்துறும் = உயிர் ஒருவனை உவத்தலானும் காய்தலானுமுறின், தானறிந்து அவற்றின்கண் அதனின்



முற்பட்டு நிற்குமாகலான்;—முகத்தின் முதுக்குறைந்தது உண்டோ = முகம் போல அறிவுமிக்கது பிறிதுண்டோ இல்லை. எ-று.

உயிர்க்கே அறிவுள்ளது ஐம்பூதங்களானியன்ற முகத்திற்கில்லை யென்பாரை நோக்கி, உயிரது கருத்தறிந்து அஃதுவக்குழி மலர்ந்தும் காய்வுழிக் கருகியும் வருதலான், உண்டென மறுப்பார் போன்று, குறிப்பறிதற்குக் கருவி

கூறியவாறு. (எ)

விளக்கம் :—உயிரானது ஒருவனைப் பார்த்து மகிழ்ச்சி யடைதலும், கோபித்தலும் கொள்ளுமாயின், முகமானது அதனைத் தான் முன்னர் அறிந்து நிற்குமாதலால், முகத்தைப்போல மிகுந்த அறிவுடையது பிறிதொன்றில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உயிர் ஒன்றை எண்ணி மகிழ்கின்ற காலத்து முகமானது மலர்ந்தும், உயிர் ஒன்றைக் கருதிக் கோபிக்கின்ற காலத்து முகமானது வாடியும் வருவது இயல்பாதலால், முகமானது ஐம்புலன்களின் சேர்க்கையால் உண்டாகிய அசேதனமாயினும் அதற்கு அறிவு இல்லை என்று கருதாமல் இருக்கும் வண்ணம் உயிரைச் சேர்ந்த அறிவானது முகத்தினிடத்தே விளங்கும், ஆதலால் முகத்திற்கும் உயிரின் தன்மையாலறிகின்ற கருவியாம் தன்மை உண்டு என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவனது குறிப்பை அறிவதற்கு முகம் கருவியாயிருப்பதை அறிந்தோம். இனி மற்றையவற்றைக் கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

708. முகநோக்கி நிற்க வமையு மகநோக்கி
யுற்ற துணர்வார்ப் பெறின்.

(பரி.) இ-ள். அகம் நோக்கி உற்றது உணர்வார்ப் பெறின் = குறையுறுவானும் தன் மனத்தைக் குறிப்பானறிந்து தானுற்றவதனைத் தீர்ப்பாரைப் பெறின்,—முகம் நோக்கி நிற்க அமையும் = அவர் தன்முகம் நோக்கும்வகை தானும் அவர்முகநோக்கி அவ்வெல்லைக்கணிற்க வமையும். எ-று.

உணர்வாரெனக் காரியத்தைக் காரணமாக்கிக் கூறினார். அவ்வெல்லையைக் கடந்து சொல்லுமாயின் இருவர்க்குஞ் சிறுமையா மாகலின், அது வேண்டாவென்பதாம். குறையுறுவானியல்பு கூறுவார்போன்று கருவி கூறியவாறு. இவை மூன்றுபாட்டானும் குறிப்பறிதற்கருவி முகமென்பது கூறப்பட்டது. (அ)



விளக்கம்: —தன்னுடைய குறையைத் தீர்த்துக் கொள்ளும் வண்ணம் சென்ற ஒருவன், தன்னுடைய மனதைக் குறிப்பாலறிந்து தான் எண்ணிச் சென்ற குறையினைத் தீர்க்கவல்ல அறிவுடைய ஒரு

வகைப் பெறுவானாயின், அவ்விதம் குறிப்பாலறிகின்ற அப்பெரியோர் தன் முகத்தைப் பார்க்கும்படிச்செய்து, தானும் அவர்முகத்தை உற்றுப் பார்ப்பதே தான் எண்ணிச் சென்ற கருமம் முடிவதற்கு இடமாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், குறிப்பறிந்து செய்கின்ற பேரறிவாளன் ஒருவனிடத்தே குறையுடையான் ஒருவன் செல்வானாயின், அவன் குறையை வாக்கால் சொல்லிக் கொள்ள வேண்டுவதில்லை யென்றும், அவன் முகத்தைப் பார்ப்பது ஒன்றே போதுமென்றும், பார்ப்பதனாலேயே இவன் மனத்தின் எண்ணிய குறையை முகத்தாலறிந்து தீர்ப்பானென்றும், அவ்விதமல்லாது வாக்கால் கூறுவானாயின் பேரறிவாளனாகிய குறை தீர்ப்பானுக்கு அது தாழ்வை உண்டுபண்ணுமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய மூன்று திருக்குறளாலும் ஒருவன் குறிப்பினை அறிதற்கு முகம் கருவியாகும் என்று அறிந்தோம். ஆயின் இரண்டாவதாய்க் கூறிய குறிப்பறியும் கருவியாகிய கண் இலக்கணத்தையும் கூறல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

709. பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின்
வகைமை யுணர்வார்ப் பெறின்.

(பரி.) இ-ள். கண்ணின் வகைமை உணர்வார்ப் பெறின் = வேந்தர்தம் நோக்கு வேறுபாட்டின்றன்மையை அறியவல்ல அமைச்சரைப்பெறின்,— பகைமையும் கேண்மையும் கண் உரைக்கும் = அவர்க்கு மனத்துக்கிடந்த பகைமையையும் கேண்மையையும் வேற்று வேந்தர் சொல்லிற்றிலராயினும் அவர் கண்களே சொல்லும். எ-று.

இறுதிக்கட் கண் ஆகுபெயர். நோக்குவேறுபாடாவன:—வெறுத்த நோக்கமும் உவந்த நோக்கமும். உணர்தல் = அவற்றை அவ்வக் குறிகளானறிதல். (க)

விளக்கம்:—அரசரானவர் தம் பார்வையில் வேறுபடுகின்ற தன்மையை அறியும் வல்லமையுடைய அமைச்சரை அடையக்கூடுமா

பின், அவ்வித அரசர் மனத்தின்கணிருக்கும் பகைமையையும் அது அல்லாத நட்பையும் அயலரசர்கள் இவ்வமைச்சருக்குச் சொல்லிக் கொள்ளாவிடினும், தம்மரசர் கண்களே அவ்வமைச்சருக்குக் கூறும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் ஒருவன், தன்னோடு ஒப்பும், தாழ்வுமுள்ள அரசர்களைப் பார்க்கின்ற பார்வை யினாலேயே குறிப்பறிகின்ற அமைச்சன் 'நம் மரசன் இவன்மீது பார்க்கின்ற பார்வையால் இவனை நட்பினனாகக் கருதுகின்றான்' என்றும், உவந்த பார்வையில்லாமல் வெறுத்துப் பார்க்கின்ற பார்வையால் 'நம்மரசன் இவன்மீது பகை கொள்கின்றான்' என்றும் அறிதல்கூடுமென்றும், அதனால் என்மீது உம்மரசன் கோபித்துள்ளான் அல்லது மகிழ்ந்துள்ளான் என்று ஏனைய அரசர்கள் இவனிடத்துச் சொல்லிக்கொள்ள வேண்டுவதில்லை என்றும் இதனால் அறிகின்றோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "வெறுப்புடைய பார்வையும், உவப்புடைய பார்வையும் ஆகிய இவ்விரண்டினையுமே கொண்டு மதிமந்திரி எதையும் அறிதல்கூடும் என்று கூறுவதால் கண்ணைக் காட்டிலும் அளக்கும் கோல் ஒன்றில்லைபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

710. நுண்ணிய மென்பா ரளக்குங்கோல் காணுங்கால்
கண்ணல்ல தில்லை பிற.

(பரி.) இ-ள். நுண்ணியம் என்பார் அளக்கும் கோல் = யாம் நுண்ணறி வுடையேமென்றிருக்கும் அமைச்சர் அரசர்கருத்தினையளக்குங் கோலாவது — காணுங்கால் கண்ணல்லது பிற இல்லை = ஆராயுமிடத்து அவர்கண்ணல்லது பிறவில்லை, எ-று.

அறிவினுண்மை அஃதுடையார்மேலேற்றப்பட்டது. இங்கிதம், வடிவு, தொழில், சொல்லென்பன முதலாகப் பிறர் கருத்தளக்குமளவைகள் பல அவையெல்லாம் முன்னறிந்தவழி அவரான் மறைக்கப்படும், நோக்கம் மனத்தொடு கலத்தலான் ஆண்டு மறைக்கப்படா தென்பதுபற்றி, அதனையே பிரித்துக் கூறினார். இனி அலைக்குங்கோலென்று பாடமோதி, நுண்ணிய மென்றிருக்கும் அமைச்சரை அரசரலைக்குங்கோலாவது கண்ணென வுரைத்து, தன் வெகுளிநோக்கால் அவர் வெகுட்சிக்குறிப்பறிகவென்பது கருத்தாக்குவாருமுளர். இவையிரண்டுபாட்டானும் நண்பகுவி நோக்கென் பது கூறப்பட்டது. (ல)

விளக்கம் :—தமக்கு நுட்பமாகிய அறிவு உள்ளது என்று தம்மை எண்ணி இருக்கும் அமைச்சரானவர் தம்மரசர் கருதும் கருத்தினை அளக்கவல்ல கோலானது எதுவென்று எவ்விதத்தில் ஆராய்ந்து பார்க்கினும் அவ்வரசருடைய கண் அல்லாமல் வேறு ஒன்றில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் நுண்ணிய அறிவுடையார் பிறருடைய கருத்தை அளப்பதற்கு அவர் கூறும் இவ்வித வார்த்தை, அவரது வடிவு, அவருடைய தொழில், அவர் கூறும்சொல் என்பனவாகிய பல அளவைகளைக் கொண்டு அளக்கக் கூடுமாயினும், 'இவர் நம் உண்மையை அறிய வந்துள்ளார்' என்று அறிந்துகொள்ளுவாராயின், மேற்கூறிய இவ்விதம் முதலானவைகளை எல்லாம் மறைத்துக் கொள்ளுதல் கூடுமென்றும், ஆதலால் அக்கருவிகள் நுட்பமாகிய கருவிகள் அல்லவென்றும், கண் ஒன்றே மனத்தோடு கலப்பதால் மனத்தோடு கலந்த அக்கண்ணினை மாற்றிக்கொள்ளுதல் ஆகாதென்றும், மனத்தில் தோன்றிய உண்மையினையே மாற்றாது கூறுவது கண்ணாதலால் கண்ணினும் நுட்பமாகிய கருவி இவ்வுலகத்தில்லை யென்றும், அதுவே பிறர் மனதை அளந்தறியும் கருவி யென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் அமைச்சர்க்கு உரிய தொழில்களுள் குறிப்பறிதல் என்னும் தொழிலை நன்கு உணர்ந்தோம். இனி அரசர்க்கு அமையவேண்டிய ஏனையவற்றையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 72 அதிகாரம்.

---

## அவையறிதல்.

(பரி.) அஃதாவது அரசனோடிருந்த அவையினதியல்பையறிதல், காரியஞ்சொல்லுங்கால் அவன் குறிப்பறிதலேயன்றி இதுவும் வேண்டுதலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

விளக்கம் :—அதாவது அரசனோடு கூடியிருந்த ஏனைய சபை யிலுள்ளாரின் தன்மையை உணர்தல். வேற்றரசனிடத்துச்சென்று தான் சொல்ல எண்ணிய காரியத்தைச் சொல்லுமிடத்து அவனு

44



டைய குறிப்பை மாத்திரம் அறிவதல்லாமல் ஏனைய அவைக்களத் தாரையும் அறிந்து சொல்ல வேண்டுமாதலால், இவ்வவை யறிதல் என்னும் அதிகாரம் குறிப்பறிதல் என்பதற்குப் பிறகு வைக்கப்பட் டுள்ளது என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அமைச்சனுக்கு ஈதொன்றுமுள்ளதோ? அதை அறிய விரும்புகின்றோம்" என்ன லும், ஆசிரியர் கூறுவாராயினர்.

711. அவையறிந் தாராய்ந்து சொல்லுக சொல்லின்
தொகையறிந்த தூய்மை யவர்.

(பரி.) இ-ள். சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர்=சொல்லின் குழுவினையறிந்த தூய்மையினையுடையார்—அவை அறிந்து ஆராய்ந்து சொல் லுக=தாமொன்று சொல்லுங்கால் அப்பொழுதை யவையினையறிந்து ஆராய்ந்து சொல்லுக, எ-று.

சொல்லின் குழுவெனவே, செஞ்சொல், இலக்கணச்சொல், குறிப்புச் சொல்லென்னும் மூவகைச்சொல்லுமடங்கின. தூய்மை=அவற்றான் தமக் காகாதனவொழித்து ஆவன கோடல். அவையென்றது ஈண்டு அதனளவை, அது மிகுதி, ஒப்பு, தாழ்வென மூவகைத்து. அறிதல்=தம்மொடு தூக்கியறி தல், ஆராய்தல்=இவ்வவைக்கட் சொல்லுங்காரியம் இது, சொல்லுமாறிது, சொன்னால் அதன் முடிவிதுவென்று இவையுள்ளிட்டன வாராய்தல், (க)

விளக்கம் :—செஞ்சொல், இலக்கணச் சொல், குறிப்புச் சொல் என்னும் மூன்றுவிதமாகிய சொற்களின் கூறுபாட்டினை அறிந்த பரிசுத்தமானவர்கள் தாம் ஏதேனும் ஒன்றைச் சொல்லுகின்ற காலத்து அப்பொழுது அவ்விடத்துக் கூடியிருக்கும் சபையோரைத் தெரிந்து, சொல்லவேண்டிய சொற்களை மனத்தால் ஆராய்ந்து சொல்லுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின் றது. இதனால், அமைச்சனானவன் ஒன்றைச் சொல்லப்புகின்

தனக்கும், தன் அரசனுக்கும் ஆகாத விஷயங்களை ஒழித்தும், ஆன விஷயங்களைக் கொண்டும் சொல்லல் வேண்டுமென்றும், அதுவன்றி யும் சபையிலுள்ளார் தன்னினும் மிக்கவரோ, சமானமானவரோ, தாழ்ந்தவரோ என்று எண்ணிச் சொல்லுதல் வேண்டுமென்றும், அவ்விதம் சொல்லும் காலத்தும் அச்சபையினிடத்தே சொல்ல வேண்டிய காரியம் இதுவென்றும், சொல்லுகின்ற விதம் இதுவென்



றும், சொன்னால் அதன் முடிவு இதுவாகுமென்றும் ஆராய்ந்து சொல்லுதல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "சொல்லின் தன்மை உணர்ந்தார் சொல்லும் காலத்தையும் அறிதல் வேண்டுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

...

712. இடைதெரிந்து நன்குணர்ந்து சொல்லுக சொல்
னடைதெரிந்த நன்மை யவர். [லி

(பரி.) இ-ள். சொல்லின் நடைதெரிந்த நன்மையவர் — சொற்களினடையினை ஆராய்ந்தறிந்த நன்மையினையுடையார் — இடை தெரிந்து நன்கு உணர்ந்து சொல்லுக = அவைக்கண் ஒன்று சொல்லுங்கால் அதன் செவ்வியை யாராய்ந்தறிந்து வழூப்படாமல் மிகவுந் தெளிந்து சொல்லுக. எ-று.

சொற்களினடையாவது :—அம்மூவகைச்சொல்லும் செம்பொருள், இலக்கணைப்பொருள், குறிப்புப்பொருளென்னும் பொருள்களைப் பயக்குமாறு. செவ்வி = கேட்டற்கண் விருப்புடைமை. வழூ = சொல்வழூவும் பொருள் வழூவும். இவை யிரண்டுபாட்டானும் ஒன்று சொல்லுங்கால் அவையறிந்தே சொல்லவேண்டுமென்பது கூறப்பட்டது. (௨)

விளக்கம் :—மேற்கூறிய மூவகைச் சொற்களின் நடையினை ஆராய்ந்தறிந்த நன்மையினையுடைய அமைச்சராவார் அவையினிடத்தே ஒன்றுசொல்லுமிடத்து அவ்வவைக்களத்தார் கேட்பதற்கு விருப்புடையனவற்றையே அறிந்து சொல்லுதல்வேண்டுமென்றும், சொல்லுங்கால் சொல்வழூவும், பொருள்வழூவும் இல்லாமல் சொல்லுதல்வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மூவகைச் சொற்களினும் வரும் செம்பொருள், இலக்கணைப் பொருள்,

குறிப்புப்பொருள் என்னும் பொருள்களைப் பயப்பனவாயும், சொல்லும்சபையிலுள்ளார் விரும்புவனவாயும் உள்ளசொற்களையே சொல்லுதல் வேண்டுமென்றும், அவ்வாறு சொல்லும் காலத்தும் தான் சொல்லுகின்ற சொற்களில் சொற்குற்றம் உண்டாகா விதமும், பொருட்குற்றம் உண்டாகா வண்ணமும் மிகுதியும் தன்னைக் காத்துக்கொண்டு சொல்லுதல்வேண்டுமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இரண்டு செய்யுளாலும் அமைச்சனானவன் சபையொன்றில் ஒன்றைச்சொல்லுமிடத்து அச்



சபையிலுள்ளார் அறிவின் தன்மையை முற்றமுணர்ந்தே சொல்ல வேண்டுவனவற்றைச் சொல்லவேண்டும் என்றறிந்தோம். இவ்விதம் சபையறியாது ஏதேனும் அமைச்சன் சொல்லிவிடுவானாயின், அதனால் அவனுக்கு என்ன குற்றம் வரும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

713. அவையறியார் சொல்லன்மேற் கொள்பவர் சொல்
வகையறியார் வல்லதூஉ மில். [லின்

(பரி.) இ-ள். அவை அறியார் சொல்லல் மேற்கொள்பவர் சொல்லின் வகை அறியார் = அவையினதளவையறியாது ஒன்று சொல்லுதலைத் தம் மேற்கொள்வார் அச் சொல்லுதலின் கூறுபாடும் அறியார்,—வல்லதூஉம் இல் = கற்றுவல்ல கலையும் அவர்க்கில்லை. எ-று.

அம்மூவகைச்சொற்களால் வருஞ் சொல்லுதல் வகைமை கேட்பாருணர்வு வகைமைபற்றி வருதலாற், 'சொல்லின்வகையறியார்' என்றும், இஃதறியார் யாதுமறியாரென்று எல்லாராலும் இகழப்படுதலின், 'வல்லதூஉமில்' என்றுங் கூறினார். இதனால் அவையறியாக்கால் வருங்குற்றங் கூறப்பட்டது. (௩)

விளக்கம் :—அமைச்சானவர் தாம் சென்ற அவையிலுள்ளார் தன்மையை அறியாது ஏதேனுமொன்றைச் சொல்ல வேண்டும் என்றெண்ணித் தாம் சொல்லுவாராயின், அவ்விதம் சொல்லும் கூறுபாட்டினையும் அறியாதவராய்ப் போவதுடன் அவர் கற்றுவல்ல கலையினாலும் யாதொரு பயனுமடையாதவராய்ப் போவர் என்று

இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், அமைச்சரானவர் தாம் சொல்லும் வகை, கேட்பாரது அறிவின் வகையின் வண்ணம் உண்டாக வேண்டுமாதலால் அவ்வறிவினை அறியாது பொருந்தாத ஒன்றைச்சொல்லப் புகுவாராயின் தாம் கற்ற சொற்களின் வகை அறியாரென்று, பலரால் பழிக்கப் படுவதுடன் இவ்விதம் அவை அறியாதவராகிய 'இவர் கற்றும் அறியார்' என்று இகழப்படுவாரென்றும் அறிந்தோம்' என்றனர். அதுகேட்ட மாணக்கர், " அவை அறியாது சொல்லுவதால் வரும் குற்றம் இதுவென அறிந்தோம் ஆயின் அவை அறிவார் செய்கின்ற வல்லமை எவ்விதமிருக்கும் ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



714. ஒளியார்முன் ஒள்ளிய ராதல் வெளியார்முன்
வான்சுதை வண்ணங் கொளல்.

(பரி.) இ-ள். ஒளியார்முன் ஒள்ளியர் ஆதல் = அறிவொள்ளியார் அவைக்கட் டாமுமொள்ளியராக,—வெளியார்முன் வான்சுதை வண்ணம் கொளல் = அல்லா வெள்ளையரவைக்கட்டாமும் வாலிய சுதையினிறத்தைக் கொள்க. எ-று.

ஒள்ளியாரென்றது மிக்காரையும் ஒத்தாரையும். அதிகாரத்தால் ஒளியாரென நின்றது. ஒள்ளியராதல் = தந்நூலறிவுஞ் சொல்வன்மையுந் தோன்ற விரித்தல். அவையறியாத புல்லரை வெளியாரென்றது, வெண்மையின் மாத்திரை வெளியென்னும் வழக்குப்பற்றி. அவர் மதிக்குமளவு அவரினும் வெண்மையுடையாராகவென்பார், 'வான்சுதை வண்ணங்கொளல்' என்றார். அவையறிந்தார் செய்யுந் திறம் இதனாற் றொகுத்துக் கூறப்பட்டது. முன்னர் விரித்துக் கூறுப. (௪)

விளக்கம் :—அமைச்சரானவர் தாம் சென்ற அவைக்களத்தில் உள்ளார் அறிவால் தமக்கு மிக்கவரும், ஒத்தவரும் ஆக இருக்கப்பெறின் தாமும், தாம் கற்றறிந்த நூலறிவும் சொல்வல்லமையும் தோன்றும்படி விரித்துச் சொல்லுதல் வேண்டுமென்றும், மற்றைய வெள்ளறிவினர் கூடியுள்ள அவையினிடத்தே சென்று சொல்லும் காலத்து அவரினும் வெண்மையுடையவராகத் தம்மைக் காட்டிக்கொள்ளல் வேண்டு மென்றும் இத்திருக்குறள் கூறு

லென்றது. இதனால், அமைச்சரானவர் நூலறிவினும், சொல்வன்மையினும் தம்மைக்காட்டிலும் மிக்க வருப், அல்லது தமக்கொத்தவரும் நிறைந்துள்ள சபையில் தாம் கற்ற நூல்களிலுள்ள அறிவினையும் தாம் சொல்லுகின்ற சொல்வல்லமையினையும் காணும்படி விரித்துக் கூறல் வேண்டுமென்றும், கல்வி அறிவு இல்லாத வயிரமில்லாத மரத்தைப்போல் வெள்ளையாயிருக்கும் மக்கள் நிறைந்த அவைக்களத்தில் அம்மக்கள் தம்மை மதிக்கும் விதம், அவ்வறிவில்லாத மக்களைக் காட்டிலும் அறிவில்லாதவர் போன்றுத் தம்மை தம் சொற்களால் காட்டிக்கொள்ளல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அவையறிந்த அமைச்சர் தகுதியைத் தொகுப்பாக அறிந்தோம். இன்னும் அவர் தன்மையை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலுற்றாயினர்.



715. நன்றென்ற வற்றுள்ளு நன்றே முதுவருண்
முந்து கிளவாச் செறிவு.

(பரி.) இ-ள். நன்று என்றவற்றுள்ளும் நன்றே = ஒருவற்கு இது நன்றென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட குணங்களெல்லாவற்றுள்ளும் நன்றே — முதுவருள் முந்து கிளவாச் செறிவு = தம்மின் மிக்காரவைக்கண் அவரின் முற்பட்டு ஒன்றனைச் சொல்லாத அடக்கம், எ-று.

தங்குறையும், அவர்மிகுதியும், முந்துறுகிளத்தாற்படும் இழுக்கும், கிளவாக்கால் எய்து நன்மையும் அறிந்தே யடங்கினமையின், அவ்வடக்கத்தினை 'நன்றென்றவற்றுள்ளுநன்று' என்றார். முன் கிளத்தலையே விலக்கினமையின், கடாவினத்தலும் பின்கிளத்தலுமா மென்பது பெற்றாம். இதனான் மிக்காரவைக்கட் செய்யுந் திறங் கூறப்பட்டது. (ரு)

விளக்கம் :—அமைச்சரானவர் தம்மைக் காட்டிலும் அறிவில மிக்கார் கூடியுள்ள அவையினிடத்தே அவ்வறிவுடையோர் ஒன்றைச் சொல்வதற்கு முன் தாம் முற்பட்டு ஒன்றினைச் சொல்லாது அடங்கி இருப்பாராயின், அவ்வடக்கமானது உலகத்து ஒருவனுக்கு 'இதுதான் நன்மையுடையது' என்று சிறப்பித்துச் சொல்லக்கூடிய குணங்கள் எல்லாவற்றுள்ளும் நன்மையுடையதாக இருக்குமென்று

இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தம்மினும் மிக்கார் அறிவின் மிகுதியையும் தம்முடைய அறிவின் குறைவினையும் அறிவதோடு அறிவிற் குறைந்தவராகிய நாம் யாதேனும் ஒன்று கூறினும் அதனால் குற்றம் வருமென்றும், அவ்விதம் கூறுவதாயினும் முன்னர்க் கூறாது அடங்கி இருத்தல் நன்மையை யடையப் புகுவதென்று அறிந்து அடங்குவானாயின் அவ்விதம் அடங்கிய அடக்கமானது நல்லவற்றுளெல்லாம் நல்லது என்றும், முதலில் கூறுதலாகாது என்றமையால் அவர் ஒன்றைச் சொல்லுங்கால் தாமும் ஒன்று சொல்லுதல் கூடுமென்றும், அல்லது பின்னே சொல்லுதல் கூடுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் தம்மினும் அறிவில் மிக்காருடைய அவையின்கண் அமைச்சர் செய்யும் திறம் இதுவென்று அறிந்தோம். ஆயின் இவ்விதம் அவை அறிந்து சொல்லுங்காலத்து அமைச்சனானவன் சொற்குற்றப் படுவானாயின் அதனால் அவ்வமைச்சன் எவ்வித குற்றத்தை அடைவான்" என்றனர், ஆசிரியர் கூறுவாராயினர்.



716. ஆற்றி னிலைதளர்ந் தற்றே வியன்புல
மேற்றுணர்வார் முன்ன ரிழுக்கு.

(பரி.) இ-ள். ஆற்றின் நிலை தளர்ந்தற்று = வீடெய்தற்பொருட்டு நன்னெறிக்கணின்றானொருவன் அந்நெறியினின்றும் நிலை தளர்ந்து வீழ்ந்தாலொக்கும்—வியன் புலம் ஏற்று உணர்வார் முன்னர் இழுக்கு = அகன்ற நூற்பொருள்களையுட்கொண்டு அவற்றின் மெய்ம்மை யுணரவல்லாரவைக்கண் வல்லானொருவன் சொல்லிழுக்குப்படுதல், எ-று.

நிலைதளர்ந்து வீழ்தல் = "மரனென்னும் தோட்டியானோரைத் தாங்காத்" தொழுகியான் பின்னிழுக்கிக் கூடாவொழுக்கத்தனாதல். பயனிழத்தலேயன்றி இகழவும்படுமென்பதாம். இதனான் அதன்கணிழுக்கியவழிப் படுங் குற்றங் கூறப்பட்டது. (௬)

விளக்கம் :—அமைச்சன் ஒருவன் அகன்ற நூல்களைக் கற்று அவற்றின் பொருள்களையெல்லாம் உட்கொண்டு வல்லவனாயிருந்தும் தன்னைப்போன்று நூல்களைக்கற்று அவற்றின் மெய்ம்மையெல்லாம் உணர்ந்துகொள்ளும் அறிவினையுடைய வல்லவர் சபையி

விடத்தே எதேனும் தான் ஒன்றைச் சொல்லும் காலத்துத் தான் சொல்லும் சொற்களில் குற்றப்படுவானாயின், அவ்வித குற்றமானது, பிறக்கும் துன்பத்தை அறிந்து விட்டின் இன்பத்தினை அடைய எண்ணி நன்னெறியாகிய துறவு பூண்டான் ஒருவன் புலன்களைக் காக்க முடியாமல், அத்துறவு ஒழுக்கத்தினின்றும் கூடாவொழுக்கத்தனாகித் தான் கொண்ட துறவறத்தின் பயனை அடையாதுபோவதுடன் பிறராலும் பழிக்கப் படுவதுபோல் வல்லவன் ஆகிய இவனையும் கற்ற நூலின் பயனை அடைய ஒட்டாது பலராலும் இகழவும் செய்யும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், சொற்குற்ற முடையான் ஒருவன் பன்னெடு நாள் கற்றதாகிய நூலின் பயனை அடையாது இகழப் படுவான் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், " இத்திருக்குறளால் அவையினிடத்தே சொற்குற்றப் படுவார்க்கு வரும் குற்ற மிதுவென்று உவமை வாயிலாகவே அறிந்தோம். ஆயின் இனிக் கற்றறிந்த ஒருவன் கற்றறிந்த சபையினிடத்தேயே எதையும் சொல்லுதல்வேண்டும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



717. கற்றறிந்தார் கல்வி விளங்குங் கசடறச்
சொற்றெரிதல் வல்லா ரகத்து.

(பரி.) இ-ள். கசடு அறச் சொற்றெரிதல் வல்லாரகத்து = வழுப்படாமற் சொற்களை ஆராய்தல் வல்லாரவைக்கட் சொல்லின்;—கற்று அறிந்தார் கல்வி விளங்கும் = பல நூல்களையும் கற்று அவற்றின் பயனை யறிந்தாரது கல்வி யாவர்க்கும் விளங்கித் தோன்றும். எ-று.

சொல்லினென்பது அவாய் நிலையான் வந்தது. ஆண்டே சொல்லுக வென்பதாம். (எ)

விளக்கம் :—ஒன்றைச் சொல்லுங் காலத்துக் குற்றப்படாது சொற்களின் வகையை ஆராயும் வல்லமையுடையார் சபையின் கண் சொல்லுவாராயின் பலவாகிய நூல்களையும் கற்று அந்நூல்களால்

ஆகிய பயனை அறிந்தவராகிய அவருடைய கல்வி அச்சபையிலுள்ளார் யாவர்க்கும் விளங்கிக் காணப்படும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், கற்றவராயினும் கற்றவர் சபையினிடத்தே பேசுதல் வேண்டுமென்றும், அவ்வாறு பேசுவதால் சொல்பவரது கல்வியின் தன்மை யாவர்க்கும் விளங்கித் தோன்றுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கல்வியாளர் கல்வி அறிவுடையோர் சபையில் சொல்லுவதால் கேட்பவர்க்கு எவ்விதமாகிய பயன் விளையும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

718. உணர்வ துடையார்முற் சொல்லல் வளர்வதன்
பாத்தியு ணீர்சொரிந் தற்று.

(பரி.) இ-ள். உணர்வது உடையார்முன் சொல்லல்=பிறருணர்த்த லின்றிப் பொருள்களைத் தாமேயுணரவல்ல அறிவினையுடையாரவைக்கட் கற்றார் ஒன்றினைச் சொல்லுதல்—வளர்வதன் பாத்தியுள் நீர் சொரிந்தற்று= தானே வளர்வதொரு பயிர் நின்ற பாத்திக்கண் நீரினைச் சொரிந்தாற் போலும். எ-று.

தானேயும் வளர்தற்குரிய கல்வி மிக வளருமென்பதாம். இவையிரண்டு பாட்டானும் ஒத்தாரவைக்கண் எவ்வழியுஞ் சொல்லுகவென்பது கூறப்பட்டது. (அ)



விளக்கம்:—பிறர் அறிவிக்காமலே பொருள்களின் தன்மையைத் தாமே அறியவல்ல அறிவினையுடையவரது சபையினிடத்துக் கற்றவராயினும் ஒன்றினைச் சொல்லுவதானது ஐயமில்லாமலே தானே வளர்வதாகிய ஒரு பயிர் உள்ள பாத்தியினிடத்து நீரினைக் கொண்டுபோய்விட்டது போலிருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தானே ஒருவர் உதவியில்லாது வளரக்கூடிய பயிர் ஒன்றுக்கு நீரையும் வார்க்கப்புகின் அப்பயிரானது

எவ்வளவு அதிகமாக வளருமோ அதுபோல் நூலைக் கற்று உள்ளார் சபையினிடத்தே கற்றறிந்தவன் பேசுவானாயின் கேட்போரது கல்வியானது மேலும், மேலும் வளருமென்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இதுகாறும் மிக்கார் அவையிலும், ஒத்தார் அவையிலும் அமைச்சன் எவ்விதம் செய்தல் வேண்டும் என்பது அறிந்தோம். இனித் தம்மினும் தாழ்ந்தார் சபையினிடத்து என் செய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

719. புல்லவையுட் பொச்சாந்துஞ் சொல்லற்க நல்ல
ணன்கு செலச்சொல்லு வார். [வையு

(பரி.) இ-ள். நல்லவையுள் நன்கு செலச் சொல்லுவார் = நல்லாரிருந்த அவைக்கண் நல்லபொருள்களை அவர்மனங்கொள்ளச் சொல்லுதற்குரியார் — புல்லவையுள் பொச்சாந்தும் சொல்லற்க = அவையறியாத புல்லரிருந்த அவைக்கண் அவற்றை மறந்துஞ் சொல்லாதொழிக. எ-று.

சொல்லின், தம்மை அவையறியாமை நோக்கி நல்லவையும், பொருளறியாமையாற் புல்லவைதானும் இகழ்தலின், இரண்டவைக்குமாகாரென்பது கருதிப் 'பொச்சாந்துஞ் சொல்லற்க' என்றார். (க)

விளக்கம்:—நூலறிவுடைய நல்லவரிருந்த சபையினிடத்தே நல்ல நூற் பொருள்களை அக்கற்றறிந்தவர் மனம் விரும்பும்படிச் சொல்லுதற்கு உரிய கல்வியாளர், அந்நூற் பொருள்களை அறியாத அற்பர்களிருந்த சபையினிடத்தே நன்னூற் பொருள்களை மறந்தும் சொல்லாதிருத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், கற்றறிந்த சபைக்கும், கல்லாத சபைக்கும்





ஆகிய இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டினைக் கூறித் தம் அவையல்லாத புல்லரிருக்கும் அவையில் ஒன்றைச் சொல்லப்புகினும் இவன் கூறும் நூலின் பொருளை அவர் அறிந்து கொள்ளும் தகுதிகளில்லாமையால் சொல்லுமிவனை இகழ்ந்து உரைப்பாராதலால், அவ்வித

புல்லருடைய சபையுள் மறந்தும் ஒன்றைச் சொல்லாதிருத்தல் வேண்டும் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அவை புல்லிருப்பதாயினும் கற்றறிந்த சொல்லாலும், சொல்வன்மையாலும் சிறிது பயனை அப்புல்லர் அடைதல் கூடாதோ? அவ்விதம் அடைவதால் இகழ்ச்சியை மதியாது சொல்லுதல் கூடுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

720. அங்கணத்து ளுக்க வமிழ்தற்றாற் றங்கணத்த
ரல்லார்முற் கோட்டி கொளல்.

(பரி.) இ-ள். தம் கணத்தர் அல்லார்முன் கோட்டி கொளல்=நல்லார் தம்மினத்தரல்லாதா ரவைக்கண் ஒன்றனையுஞ் சொல்லற்க,—அங்கணத்துள் உக்க அமிழ்தற்று=சொல்லின், அது தூய்தல்லாத முற்றத்தின்கணுக்க அமிழ்தினையொக்கும். எ-று.

கொள்ளென்னும் முதனிலைத் தொழிற்பெயர் முன்னின்று பின்னெதிர் மறை அல்விகுதியோடு கூடி "மகனெனல்" * என்பது போனின்றது. சொல்லின், அது என்பன அவாய் நிலையான் வந்தன. பிறரெல்லாம் கொளலென்பதனைத் தொழிற் பெயராக்கி யுரைத்தார்; அவர் அத்தொழில் அமிழ்தென்னும் பொருளுவமையோடு இயையாமை நோக்கிற்றிலர். சாவாமருந்தாதலின் துகர்வார் கையினும் படாது அவ்வங்கணத்துக்கு மியைபின்றிக் கெட்டவாறு தோன்ற, 'உக்கவமிழ்து' என்றார். அச்சொற் பயனில்சொல்லாமென்பதாயிற்று. இவை யிரண்டுபாட்டானும் தாழ்ந்தாரவைக்கண் ஒருவழியுஞ் சொல்லற்கவென்பது கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—நூல்வல்ல நல்லவர்கள் தம்மினத்தவர் அல்லாதவராகிய புல்லர் கூடிய சபையின்கண் யாதொன்றனையும் சொல்லாதிருத்தல் வேண்டுமென்றும், அவ்விதம் சொல்லின் சொல்லிய அப்பொருள், மிகுதியும் பரிசுத்தமில்லாத இடத்தில் சிந்தியதாகிய

* திருக்குறள்—196.



தேவாமிருதத்தை யொக்கும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, சாவா மருந்தாகிய தேவாமிருதத்தை ஜலதாரையில்

கொட்டிய காலத்துக் கொட்டியவர்க்கும் யாதொரு பயனுமில்லாது கொட்டிய இடத்துக்கும் யாதொரு தூய்மையுமில்லாமல் போவது போல், நல்லவரல்லாத புல்லர்களிருக்கும் சபையினிடம் எண்ணிய நற் பொருள்களைச் சொல்லப்புகின் சொல்லியவன் யாதொரு பய னையும் அடையாது போவதுடன் இகழ்ச்சியையும் பெறுவானென் றும், ஜலதாரையானது அமிழ்தத்தின் பயனை அடையாததுபோல் இருந்து கேட்டவரும் சொல்லிய பொருளின் பயனை அறியாமற் போவரென்றும், ஆகவே இவர் சொல்லிய நற்சொல்லும் பயனில் சொல்லாக முடியும் என்றும் கூறியதாக அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "இவ்வதிகாரத்தால், சொல்லுகின்ற ஒரு வன் அவையை அறிவது என்பதனுள் தன்னிலும் மிக்காரை அறிந்து செய்ய வேண்டுவனவற்றையும், தன்னோடு ஒத்தாரை அறிந்து செய்ய வேண்டுவனவற்றையும், தன்னிலும் தாழ்ந்தாரை அறிந்து செய்ய வேண்டுவனவற்றையும் நன்றாக அறிந்தோம். இனி அவ்வவையினை அறிந்து சொல்லுபவன் அவ்வவைக்கு அஞ் சுதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 73 அதிகாரம்.
## அவையஞ்சாமை.

---

(௧௧௯). அஃதாவது சொல்லுதற்குரிய அவையினையறிந்து சொல்லுங்கால் அதற்கஞ்சாமை. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது, தான் சொல்லுவதற்கு அமைந்த சபையினைத் தெரிந்து தான் ஒன்றைச் சொல்லும் காலத்து அச் சபைக்கு அஞ்சாது கூறுதல். இவ்வதிகாரத்தை அவை யறிவ தற்குப் பிறகு வைத்ததற்கு முறைமையும் இதுவே ஆகும் என்ற னர். அதுகேட்ட மாணக்கர், "சபைக்குப் பயப்படாது பேசுகின்ற வர் வெகு சிலர் என்று கேள்விப்படுகின்றோம். ஆதலால் அவ்



வஞ்சாதவாது இலக்கணம் யாதென அறிய விரும்புகின்றோம்?"

என்றும், ஆசிரியர் கூறுவாராயினர்.

721. வகையறிந்து வல்லவை வாய்சோரார் சொல்லின்
றொகையறிந்த தூய்மை யவர்.

(பரி.) இ-ள். வகை அறிந்து வல்லவை வாய்சோரார்=கற்றுவல்ல வவை, அல்லாவவை யென்னும் அவை வகையினை யறிந்து வல்ல வவைக் கண் ஒன்று சொல்லுங்கால் அச்சத்தான் வழுப்படச்சொல்லார்—சொல்லின் தொகை அறிந்த தூய்மையவர்=சொல்லின் றொகையெல்லாமறிந்த தூய் மையினையுடையார். எ-று.

இடத்தது வன்மை அவைமே லேற்றப்பட்டது. வல்லவை யென்ப தற்குத் தாங்கற்றுவல்ல நூற்பொருள்களை யென்றுரைப்பாரு முளர். அச் சத்தானென்பது அதிகாரத்தான் வந்தது. சொல்லின்றொகை, தூய்மை* என்பனவற்றிற்கு மேலுரைத்தாங்குரைக்க. (௧)

விளக்கம் :—சொல்லிலக்கணம் நன்றாக அறிந்த நூல் வல்லவர் நூற்பொருள்களைச் சொல்லுங்காலத்து அவ்வவையி னது தன்மையினை அறிந்து கற்றுவல்ல சபையைச் சிறிதும் அஞ் சாது குற்றமில்லாமல் சொல்லுவரென்று இத்திருக்குறள் கூறு கின்றது. அதாவது, நூல்வல்லவன் ஒன்றைச் சொல்லும் காலத்து மேல் அதிகாரத்தில் கூறிய படித்தசபை, படியாதசபை என்கின்ற இரண்டினையும் முதலில் ஆராய்ந்து அறிந்து படித்த சபையாயின் 'இது படித்தார் சபையாயிற்றே' என்று அதற்கு அஞ்சாது தாம் கற்றுவல்ல நூல் பொருள்களையெல்லாம் சொல்லுங்காலத்துப் பயப்படாது சொல்லுதல் வேண்டும் என்றும், அதுவே கற்றதினுலா கிய பயனென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக் கர், "சபையினிடத்தே அஞ்சாது கூறினால் என்? கூறாவிடில் என்? நூற்பொருளை ஒருகால் உணர்ந்தவர் கற்றவர் என்று கருதப்படுகின்றார்களே? பேசுபவர் தாம் கற்றவரென்று சொல் லப்படுவரோ?" என்றும், ஆசிரியர் கூறுவாராயினர்.

* திருக்குறள்—711.

**722. கற்றாருட் கற்றா ரெனப்படுவர் கற்றார்முற்**
**கற்ற செலச்சொல்லு வார்.**

(பரி.) இ-ள். *கற்றாருள் கற்றார் எனப்படுவர்*=கற்றாரெல்லாரினும் இவர் நன்குகற்றாரென்று உலகத்தாரால் சொல்லப்படுவார்—*கற்றார்முன் கற்ற செலச் சொல்லுவார்*=கற்றாரவைக்கண் அஞ்சாதே தாங்கற்றவற்றை அவர் மனங்கொள்ளும்வகை சொல்லவல்லார். எ-று.

உலகமதிப்பது அவரையே யாகலின், அதனாற் புகழப்படுவாரும் அவ ரென்பதாம். (உ)

விளக்கம்:—படித்தவர் சபையில் சிறிதும் அஞ்சாது தம் படிப்பை அக்கல்வியாளர் மனம் கொள்ளும் விதமாகச் சொல்ல வல்லவரென்பார் படித்தவரில் யாவரினும் நன்றாகப் படித்தவ ரென்று உலகத்தாரால் புகழ்ந்து சொல்லப்படுவோர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனில்? பலநூல்களைக் கற்றாராயினும் கற்ற அவைக்களத்துத் தாம் கற்ற நூலைச் சொல்ல ஆற்றலில்லாவிடின் சபையினிடத்துச் சொல்லாராதலால் அவரையும் அவர் நூற்பொருளையும் ஒருவரும் அறிவதற்கு இல்லாமற் போகும். ஆகவே, சபையினிடத்தே சென்று தாம் கற்ற பொருள்களை அஞ்சாதும் குற்றமில்லாதும் எடுத்துச்சொல்பவரே உலகத்தாரால் அறியக் கூடியவரென்றும், அவரே படித்தவரென்று புகழப்படுவாரென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "எச்சபைக்கும் அஞ்சாத தன்மையினை ஓர் உவமை வாயிலாக விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**723. பகையகத்துச் சாவா ரெளிய ரரிய**
**ரவையகத் தஞ்சா தவர்.**

(பரி.) இ-ள். *பகையகத்துச் சாவார் எளியர்*=பகையிடையஞ்சாது புக்குச் சாவவல்லார் உலகத்துப் பலர்;—*அவையகத்து அஞ்சாதவர் அரியர்*=அவையிடையஞ்சாது புக்குச் சொல்லவல்லார் சிலர். எ-று.

அஞ்சாமை சாவாரென்பதனோடுங்கூட்டி, அதனாற் சொல்லவல்லா ரென்பது வருவித்துரைக்கப்பட்டது. இவை மூன்றுபாட்டானும் அவையஞ் சாது சிறப்புக் கூறப்பட்டது. (௩)



விளக்கம் :—பகைவர் நிறைந்த யுத்தகளத்துச் சிறிதும் பயப்படாது சென்று யுத்தம் செய்து சாகவல்லவர் உலகத்துப் பலர் உண்டென்றும், ஆனால் கற்றறிந்தவர் சபையினிடத்தே அஞ்சாது சென்று தாம் கற்ற நூற்பொருள்களைச் சொல்லவல்லவர் வெகு சிலரென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தம்மரசன் பொருட்டு யுத்தகளத்துச்சென்று தோல்வியடையும் காலத்து அதற்காக மனமஞ்சிப்புறமுதுகிட்டு ஓடாது தம்முயிரைக் கொடுத்துப் புகழை அடையவல்லவர் உலகத்துப் பலர் உண்டென்றும், ஆயின் கற்றறிந்த சபையினிடத்துச் செல்பவர் வெகு சிலரென்றும், அவ்விதம் சென்றவருள் சபைக்கு அஞ்சாது தாம் கற்ற விஷயத்தைக் குற்றமில்லாமல் பேசுபவர் வெகு சிலரென்றும் அறிகின்றோம். ஆகலால் சொல்வல்லமை உடையார் வெகு சிலரென்றும், அச்சொல்வன்மையிருந்தும் சபைக்குப் பயப்படாது சொல்லுதல் மிக அருமையென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற் கூறிய மூன்று செய்யுள்களாலும் கற்றறிந்த சபைக்குப் பயப்படாத கற்றறிந்தவர் சிறப்பினை அறிந்தோம். இனிச் சபையினிடத்தே அஞ்சாது சென்ற ஒருவன் தான் கற்ற நூலின் பொருள்களைப் பிறர்க்குக் கூறிவந்துவிடுதல் வேண்டுமோ? அல்லது தம்மின் மிக்கவர் ஏதேனும் அச்சபையினிடத்தே சொல்லப் புகுந்தால் அதனையுங் கேட்டல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

724. கற்றார்முற் கற்ற செலச்சொல்லித் தாங்கற்ற
மிக்காருண் மிக்க கொளல்.

(பரி.) இ-ள். கற்றார்முன் கற்ற செலச் சொல்லி=பலநூல்களையுங் கற்றாரவைக்கட் டாங்கற்றவற்றை அவர் மனம் கொள்ளுமாற்றாற் சொல்லி—தாம் கற்ற மிக்க மிக்காருள் கொளல்=அவற்றின் மிக்க பொருள்களை அம்

மிகக் கற்றாரிடத் தறிந்துகொள்க. ஏ-று.

எல்லாம் ஒருவர்க்குக் கற்றல் கூடாமையின் வேறுவேறுய கல்வியுடையார் பலரிருந்த அவைக்கட் டாங்கற்றவற்றை அவர்க்கேற்பச் சொல்லுக; சொல்லவே, அவரும் அவையெல்லாஞ் சொல்லுவாராகலான், விளக்கற்கப் பெறுதன கேட்டறியலாமென்பதாயிற்று. இதனால் அதனதொருசார்பயன் கூறப்பட்டது. (எ)

## அவையஞ்சாமை



விளக்கம் :—பல நூல்களையும் கற்றறிந்த சபையின் முன் தாம் கற்ற நூற்பொருள்களை அக்கற்றறிந்தவர் விரும்பி மனத்தில் ஏற்றுக்கொள்ளும் விதமாகச் சொல்லுவதுடன் தாம் கல்லாததாகிய நூல்களின் பொருள்களைத் தம்மினும் மிக்கார் சொல்லுவாராயின் அம்மிக்கவரிடத்து அம்மேலாகிய பொருள்களை அறிந்து, கேட்டுக்கொள்ளுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், 'கற்றது கைம்மண்ணளவு, கல்லாதது உலகளவு' என்று ஔவை கூறியபடி எல்லா நூல்களையும் கற்று விடுதல் ஒருவர்க்குக் கூடாதாகையால், வேறு வேறுகிய நூல்களைக் கற்றுவல்லவர் பலர் கூடியிருக்க சபையின்கண் தாம் ஒன்று தாம் கற்ற விஷயங்களைச் சொல்லும் காலத்து அவர் குணமெனக் கொள்ளும்படிச் சொல்லுதல் வேண்டுமென்றும், அவ்விதம் சொல்லும் காலத்துக் கேட்டவராகிய ஏனைய புலவோர் இவரை விரும்பித் தாம் கற்ற நூற் பொருள்களையும் சொல்ல மனம் உவந்து சொல்லுவாரென்றும், அவ்விதம் சொல்லுங்காலத்துத் தாம் கல்லாதனவற்றையும் கேட்டறிந்து கொள்ளலாமென்றும், அதனால் பெரும் பயன் அடைதல் கூடுமென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "நூல்களைக் கற்கும் காலத்து இலக்கணம் இலக்கியம் சாத்திரம் என்னும் வகையினுள் இலக்கியம் என்பது ஒன்றைக் கற்கும் காலத்து இலக்கணமும் பயிலுதல் வேண்டுமோ? அல்லது எவ்விதம் பழகல்வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

725. ஆற்றி னளவறிந்து கற்க வவையஞ்சா
மாற்றங் கொடுத்தற் பொருட்டு.

(பரி.) இ-ள். ஆற்றின் அளவு அறிந்து கற்க=சொல்லிலக்கண நெறியானே அவையை நூலை அமைச்சர் உட்பட்டுக் கற்க;—அவை அஞ்சாமாற்றம் கொடுத்தற்பொருட்டு=வேற்றுவேந்த ரவையிடையஞ்சாது அவர் சொல்லிய சொற்கு உத்தரஞ் சொல்லுதற்பொருட்டு. எ-று.

அவையறால் சொன்னால் கற்றே கற்கவேண்டுதலின், அதற் கவ்விதா றெனப்பட்டது. அளக்குங் கருவியை 'அளவு' என்றார், ஆகுபெயரான், அவர் சொல்லை வெல்லவொருசொற் சொல்லலாவது நியாயத்து வாத செற்ப



விதண்டைகளும் சல சாதிகளும் முதலிய கற்றார்க்கேயாகலின், அவற்றைப் பிழையாமற் கற்கவென்பதாம். இதனால் அதன் காரணங் கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—அமைச்சரானவர் வேற்றரசர் சபையினிடத்தே அவர் சொல்லிய சொற்களுக்குப் பயப்படாமல் பதில் சொல்லுதல் வேண்டுமாயின் அளவு நூல்களைச் சொல்லிலக்கண நூலிற் சொல்லியபடிக் கற்றல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் அளவு நூலைச் சொல்லிலக்கண வழியாற் கற்ற அமைச்சன் ஒருவன் தன்னரசன் பொருட்டு வேற்றரசர் சபையிற் சென்று பேசும்போது அவர் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்லக் கூடுமென்றும், இவன் சொல்லும் சொல்லை மற்றொரு சொல் கொண்டு வாதித்து வெல்லா வண்ணம் சொல்லுதல் கூடுமென்றும், அவ்விதம் கூறி வெல்லாவிடின் பகைவர் சொல்லால் தான் எண்ணிச் சென்ற கருமம் இயற்றுவதற்காகாது தோல்வி அடைய வேண்டி வரும் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் இலக்கண வழியாக நூலினைக் கல்லாது சொல்வானாயின் அவ்வித அமைச்சன் தான் கற்ற நூலால் எவ்வித பயனையும் அடைதலில்லைபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

726. வாளொடென் வன்கண்ண ரல்லார்க்கு நூலொடென்
நுண்ணவை யஞ்சு பவர்க்கு.

(பரி.) இ-ள். வன்கண்ணரல்லார்க்கு வாளொடு என் = வன்கண்மை யுடைய ரல்லாதார்க்கு வாளோடென்ன வினையுண்டு — நுண்ணவை அஞ்சுபவர்க்கு நூலொடு என் = அதுபோல நுண்ணியாரதவையை யஞ்சுவார்க்கு நூலோடென்ன வினையுண்டு. எ-று.

இருந்தாரது தன்மை அவைமேலேற்றப்பட்டது. நூற்குரிய ரல்லரென்பதாம். (௬)

விளக்கம்:—மனத்திட்பம் ஆகிய வன்கண்மை இல்லாதார்க்கு அவர் பகைக் களத்தில் பிடித்துச் சென்ற வாளால் எவ்வித பயன் உண்டாகுமோ, அதுபோல நுட்பமாகிய நூல்களை இலக்கண வழியாகக் கற்றவர் சபையில் சென்று அவர்க்கு அஞ்சும் கல்வியாளர்க்குந் தாம் கற்ற நூலோடாகிய பயனுமது எய்திடும்



கிடைக்கும் என்று இத்திருக்குறள் விளங்குகின்றது. இதனால், பேடி ஒருவன் வாளேந்திச் சென்றான் ஆயினும் பகைவராகிய வீரரைக் கண்டவிடத்து அவ்வாளாலாகிய பயனை அடையாது பயந்துவிடுவது போல், நூலினைக் கற்றோமென்று அமைச்சன் சென்று சபையிடத்துப் பேசுங்காலத்துத் தான் கற்ற நூல் இலக்கண வழியாகக் கல்லாததாயின், இலக்கணவழியாகக்கற்ற நூல்வல்லவர்களை ஐயப்பாடற்றில்லாமல் தோல்வியடைவதுடன் தான் கெடும்பொழுது வருந்திக் கற்ற நூலாலாகிய பயனையும் அடையாமற்போவான். ஆதலால் இலக்கண வழியோடு ஒருவன் நூலைக் கற்க வேண்டுமென்றும், அல்லவிட்டால் சபைக்கு அஞ்சுதல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், “வன்கண்ணர் அல்லாதார் கொண்ட வாள் என்பதற்கு பேடிகை வாளென்று கூறினீர். நம்மாசிரியர் வன்கண்ணர் அல்லாதாரைப் பேடியென்று கூறினரோ?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

727. பகையகத்துப் பேடிகை யொள்வா ளவையகத்
தஞ்சு மவன்கற்ற நூல்.

(பரி.) இ-ள். பகையகத்துப் பேடி கை ஒள்வாள் = எறியப்படும் பகை

நவென் அதனை யஞ்சும் பேடி பிடித்த கூர்வாளை யொக்கும்—அவையகத்து அஞ்சுமவன் கற்ற நூல்=சொல்லப்படும் அவைநடுவண் அதனை யஞ்சுமவன் கற்ற நூல். எ - று.

பேடி=பெண்ணியல்பு மிக்கு ஆணியல்பு முடையவன். வாளும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததே யாயினும் பிடித்தவன் குற்றத்தால் வாள் சிறப்பின்றாயினாற் போல, அவையும் வாய்த்துத் தானும் நன்றாயிருந்ததே யாயினுங் கற்றவன் குற்றத்தால் நூல் சிறப்பின்றாயிற்று. (எ)

விளக்கம்:—சொல்லுவதற்குச்சென்று சொல்லக்கூடிய சபையும் வாய்த்து அவ்வித சபையின் நடுவில் அச்சபையிலுள்ளாரைக்கண்டுச் சொல்லுவதற்குப் பயப்படுகின்ற ஒருவன் கற்ற நூல் பகைவர் நடுவே சென்று எறிவதற்குத் தாங்கிய வாளினை எறிவதற்கில்லாது பயப்படுகின்ற பேடி ஒருத்தி பிடித்த கூர்மையுடைய வாளினையே ஒத்திருக்கும் என்று இத்திருக்குறள்

46



கூறுகின்றது. இதனால், யுத்தகளம் இருக்கவேண்டிய வழியாக இருந்தும், வாளும் ஒளியோடு கூடிய கூர்மையுடையதாகவிருந்தும், அவ்வாளைப் பிடித்தவன் பேடியாயின் எவ்வாறு சிறப்பை அடையாமற் போமோ, அதுபோல் சொல்லுதற்குரிய கற்றறிந்த சபையும் வாய்த்து, கற்ற நூல்களும் நன்னெறியுடையவேயாயினும், சொல்லும் வன்மையில்லாது அவைக்கு அஞ்சுகின்ற ஒருவன் கற்ற குற்றத்தால் அக்கற்ற நூல் சிறப்படையாமல் போம் என்று அறிந்தோம், ஆதலால் மேல் திருக்குறளில் வன்கண்ணரல்லார்க்கென்று கூறியது மனவலி இல்லாதாரை என்று பொதுப்படக் கூறினும் இத்திருக்குறளால் மனவலி இல்லாதார் பேடிகளே ஆவர் என்று விரித்துக் கூறியதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஏதேனும் ஓர் நூலைக் கற்றிருந்து அவைக்கு அஞ்சுவதால் அக். நூல் பயன்படாமல் போம். ஆயின் பல சபைகளில் பல நூலைக் கற்றவர் சொல்வன்மை யில்லாமையினாலேயே நன்கு மதிக்கப்படாமல் போவரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

728. பல்லவை கற்றும் பயமிலரே நல்லவையு
ணன்கு செலச்சொல்லா தார்.

(பரி.) இ-ள். நல்லவையுள் நன்கு செலச் சொல்லாதார் = நல்லாரிருந்த வவைக்கண் நல்ல சொற்பொருள்களைத் தம்மச்சத்தான் அவர்க்கேற்கச் சொல்லமாட்டாதார்—பல்லவை கற்றும் பயம் இலரே = பலநூல்களைக் கற்றாராயினும் உலகிற்குப் பயன்படுதலிலர். எ-று.

அறிவார் முற்சொல்லாமையிற், கல்வியினுண்மை யறிவாரில்லை யென்பதாம். இனிப் பயமிலரென்பதற்குக் கல்விப்பயனுடையரல்லரென்றுரைப் பாருமுளர். (அ)

விளக்கம் :—நல்லவரிருந்த சபையினிடத்தே நல்ல சொற்களைத் தம்முடைய பயத்தால் அந்நல்லவர் மனங்கொள்ளும்படிச் சொல்லமுடியாதவர், பல நூல்களையும் படித்தவராயினும், உலகத்திற்குப்பயன்படுதல் இல்லாமற்போவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், கற்றறிந்த அறிவுடையோர் முன் சொல்லுவ



தற்கு அஞ்சுகின்ற ஒருவனது கல்வியின் நுட்பத்தைக் கேட்டறிவார் ஒருவருமில்லாராதலால் அவ்விதம் கற்ற கல்வி கற்றவனுக்கும் பயன்படாது, கேட்பார்க்கும் பயன்படாது போகுமென்றும், உலகிற்கும் பயன்படுதலில்லை என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "சொல்லும் வல்லமை இல்லாவிடினும் படித்த ஒருவனைப் படித்தவனென்றே மதித்தல் வேண்டுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

729. கல்லா தவரிற் கடையென்ப கற்றறிந்து
நல்லா ரவையஞ்சு வார்.

(பரி.) இ-ள். கற்று அறிந்தும் நல்லார் அவை அஞ்சுவார் = நூல்களைக் கற்றுவைத்தும் அவற்றின் பயனறிந்துவைத்தும் நல்லாரிருந்த அவையினை யஞ்சி ஆண்டுச் சொல்லாதாரை—கல்லாதவரின் கடை என்ப = உலகத்தார் கல்லாதவரினுங் கடையரென்று சொல்லுவர். எ-று.

அக்கல்வியறிவுகளாற் பயன் கொள்ளாமையோடு பிறரை யெய்துவிப்ப

தாஞ் செய்யாத கல்வித்துன்பமே யெய்தினிற்றலின், கல்லாதவரிற் கடை யென உலகம் பழிக்கு மென்பதாம். (௯)

விளக்கம் :—பல நூல்களையும் படித்து வைத்தும் அவற்றால் ஆகவேண்டிய பயனை அறிந்து வைத்தும் நூல்வல்லவராகிய நல்லவர்களிருந்த சபைக்குப் பயந்து அச்சபையினிடத்துச் சொல்லாதவரை உலகத்தார் 'படியாதவன் என்று கூறுது, இவன் படியாதவரினும் மடையன்' என்று சொல்லுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, படித்த படிப்பினுலாகிய அறிவின் முதிர்ச்சியால் அடையக்கூடிய பயனைப் படித்தவராகிய தாமும் அடையாது பிறரையும் அடைவிப்பதும் செய்யாது தான் வருந்திக் கற்ற துன்பம் ஒன்றையே அடைகின்றாராதலால், இவ்விதம் 'அவை அஞ்சுபவரைப் படியாதவரினும் படியாதவர்' என்று உலகம் பழிக்குமே அன்றிப் படித்தவராகக் கருதாது என்று அறிக தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் உலகத்தார் அவையஞ்சுபவனைப் படியாதவருள் படியாதவன் என்று கருதினும், அவனை ஓர் உயிரோடு வாழும் மனிதனுகவாகிலும் எண்ண மாட்டாரோ ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



730. உளரெனினு மில்லாரொ டொப்பர் களனஞ்சிக்
கற்ற செலச்சொல்லா தார்.

(பரி.) இ-ள். களன் அஞ்சிக் கற்ற செலச் சொல்லாதார் = அவைக்களத்தை யஞ்சித் தாம்கற்றவற்றை அதற்கேற்கச் சொல்லமாட்டாதார்,— உளர் எனினும் இல்லாரொடு ஒப்பர் = உயிர் வாழ்கின்றாராயினும், உலகத்தாரா லெண்ணப்படாமையின இறந்தாரோடொப்பர். எ-று.

களனென்றது ஆண்டிருந்தாரை. இவையிரண்டுபாட்டானும் அவை யஞ்சுவார் இழிபு கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—சபையிலுள்ளோர்க்குப் பயந்து தாம் கற்ற விஷயங்களை அச்சபையிலுள்ளோர் ஏற்றுக்கொள்ளும்படிச் சொல்ல

மாட்டாதவர் உயிரோடு கூடிவாழ்கின்றவராயினும், உலகத்தாரால் அவர் உயிரோடிருப்பவராகக் கருதப்படாமல் இறந்தவராகவே கருதப்படுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், உலகத்து உடலோடு வாழும் உயிர்களுள் மக்கள் உயிர் சிறந்ததே ஆயினும், நூல்களைக் கல்லாவிடின் பயனற்றதென்றும், அவ்விதம் கற்றும் சபைக்குப் பயந்து சொல்லாதிருக்குமாயின் கற்றதாக எண்ணப்படாது பழிக்கப்படுமென்றும், பழிக்கப்படுவதோடு நில்லாமல் உலகத்தாரால் ஒரு உயிரிருப்பதாகவே கருதப்பட மாட்டாதென்றும், அவை யஞ்சுதலால் உண்டாகிய இழிவினை அறிந்தோம். இதுகாறும் அரசனுக்கு உரிய அங்கங்கள் ஆறனுள் முதலாவதாக அமைச்சனது இயல்பைக் கூறுவான் தொடங்கி அமைச்சு என்பது முதல் அவையஞ்சாமை ஈறாகப் பத்து அதிகாரங்களால் கூறி முடித்தனர். இனி அவ்வங்கங்களுள் இரண்டாவதாக 'நாடு' என்பதனைக் கூறத்தொடங்கினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரசியலும், அமைச்சியலும் உணர்ந்தோம். இனி, நாட்டின் தன்மையை அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

அங்கவியலில் அமைச்சியல் முற்றிற்று.

---



## 74 அதிகாரம்.

### நாடு.

---

*(பரி.) இனி அவ்வரசனானும் அமைச்சனானுங் கொண்டுய்க்கப்படுவதாய் ஏனையரண் முதலிய அங்கங்கட்கு இன்றியமையாச் சிறப்பிற்றாய நாடு அதிகாரத்தாற் கூறுகின்றார்.*

விளக்கம்:—அதாவது, மேற்கூறிய அரசனும் அவனது அமைச்சனும் கொண்டு ஆளப்படுவதாய் மற்றைய அரண் முத

லாகச் சொல்லப்பட்ட அங்கங்களுக்குக் காரணமாய் உள்ள சிறப்பினையுடைய நாட்டினை ஓர் அதிகாரத்தினால் சொல்லத் தொடங்கினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "உயிர்கள் வாழ்வதற்கு இன்றியமையாச் சிறப்பினை உடையது நாடு என்பதை அறிவதே அறிவாதலால் எவ்விதமிருக்கின் நாடு என்று கூறப்படும் என்பதை அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

781. தள்ளா விளையுளுந் தக்காருந் தாழ்விலார்
செல்வருஞ் சேர்வது நாடு

(பரி.) இ-ள். தள்ளா விளையுளும்=குன்றாத விளையுளைச் செய்வோரும்—தக்காரும்=அறவோரும்—தாழ்வு இலாச் செல்வரும்=கேடில்லாத செல்வ முடையோரும்—சேர்வது நாடு=ஒருங்கு வாழ்வதே நாடாவது. எ-று.

மற்றை யுயர்திணைப் பொருள்களோடுஞ் சேர்தற்கொழிபிலாமும் இயையாமையின், விளையுளென்பது உழவர்மேனின்றது. குன்றாமை=எல்லா வுணவுகளும் நிறைய விளைவாதல். இதனான் வாழ்வார்க்கு வறுமையின்மை பெறப்பட்டது. அறவோர்=துறந்தோர், அந்தணர் முதலாயினார். "நற்றவஞ் செய் வார்க்கிடந் தவஞ்செய்வார்க்கு மஃதிடம்" என்றார் பிறரும். இதனால் அழிவின்மை பெறப்பட்டது. கேடில்லாமை=வழங்கத்தொலையாமை. செல்வர்=கலத்தினுங் காலினும் அரும்பொருள் தரும் வணிகர். இதனால் அரசனுக்கும் வாழ்வார்க்கும் பொருள் வாய்த்தல் பெறப்பட்டது. (க)

விளக்கம் :—எக்காலத்தும் குறையாத விளைவுகளைச் செய்கின்றவராகிய உழவர்களும், அறமே உயிரெனக் கொண்ட துறந்தோரும், எக்காலத்தும் கேட்டை யடையாத செல்வமுடையவரும்



ஆகிய இவர்களெல்லாம் ஒருங்கு சேர்ந்து வாழ உள்ளதே நாடு என்று சொல்லப்படும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், விளையுளும் என்று கூறியதினாலேயே வேறு எதன் மீதுஞ் செல்லாது அவ்விளைவினைச் செய்யும் உழவர் மீதேயேசென்று நின்றதென்றும், அவரே உலகத்து உயிர்களெல்லாம் காக்கின்ற ஆணிபோல்வரென்று பின்னர் வருகின்ற உழவு என்பதனுள் கூற

வதால் அவ்வுழவரை முதலில் நாட்டிற்கு அங்கமாகக் கூறியும், பின்னர் உயிர்களுக்கு அறம் ஒன்றே இம்மை, மறுமை, வீடு என்கின்ற மூன்றையும் தருவதால் அவ்வறத்தை உயிரெனக் கொண்ட துறவிகளை இரண்டாவதாகக் கூறியும், எவ்வளவு கொடுக்கினும் குறையாத செல்வத்தைத் தேடுகின்ற செல்வரென்றமையால் கடலில் செல்லுகின்ற கப்பலாலும், நிலத்துச் செல்லுகின்ற வண்டி முதலியவைகளாலும் செய்யக்கூடிய வர்த்தகங்களையெல்லாம் செய்து அரசனுக்கும் ஏனைய வாழ்வார்க்கும் பொருளினை உண்டாக்கும் வணிகரை மூன்றாவதாகக் கூறியும் இருப்பதாக அறிகின்றோம். அன்றியும் குன்றாத விளையுள் என்றமையால் எல்லாவித உணவுகளும் நிறைய உண்டாகும்படிச் செய்கின்றது விளைவு என்றும், அவ்விதம் செய்வதால் அந்நாட்டில் வாழ்வார்க்கு வறுமை யென்பது வாராதென்றும், துறவிகள் கூறும்வழி அறத்தைக் கடைப்பிடிப்போர் சிறந்தமக்களாவாராதலால் சிறந்தமக்களுள்ள இடமென்றும், வழங்கும்தோறும் தொலையாத செல்வமுடையோரென்றமையால், பொருளைத் தேடும் காலத்து நடு நிலையாகச் சம்பாதிக்கின்ற வணிகரென்றும் அறிந்தோம். ஆதலால், மேற்கூறிய உழவர், துறவோர், செல்வர் ஆகிய மூவரும் அவரவர்க்கு உரிய இலக்கணங்களோடு அமைந்து வாழ்பவராயின், அதுநாடு என்றும், அவ்விதம்வாழ்வதிலும் ஒன்றிருந்து மற்றவை இல்லாவிடின் பயன்படாது போகுமாதலால் மூன்றும் இருத்தல் வேண்டுமென்றும், அவ்விதம் மூன்றுமிருக்குமாயின் அந்நாட்டினை ஆளும் அரசன் யாதொரு குறைவும் அடையாது அறம், பொருள், இன்பத்தைச் செய்தல் கூடுமென்றும், அவ்விதம் அரசன் வாழ்வதுடன் அவன் கீழ்ப்பட்ட குடிகளும் இம்மை, மறுமை, வீட்டினை அடைதல் கூடுமென்றும் அறிந்தோம். அன்றியும், இதனைச் சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், 48-வது செய்யுளாகிய



நற்றவஞ் செய் வார்க்கிடந் தவஞ்செய் வார்க்கு மஃதிடம்
நற்பொருள் செய் வார்க்கிடம் பொருள் செய் வார்க்கு மஃதிடம்
வெற்றவின்பம் விழைவிப்பான் விண்ணுவந்து வீழ்ந்தென
மற்றை நாடு வட்க மாகவைகு மற்ற நாடரோ.

என்பதினாலும் அறிதல் கூடும்" என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நாட்டிற்கு முதலாக இருக்கவேண்டிய மூன்று அங்கங்களையும் அறிந்தோம். இனி ஏனையவற்றையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

732. பெரும்பொருளாற் பெட்டக்க தாகி யருங்கேட்டா
லாற்ற விளைவது நாடு.

(பரி.) இ-ள். பெரும் பொருளால் பெட்டக்கது ஆகி = அளவிறந்த பொருளுடைமையாற் பிறதேயத்தாராலும் விரும்பத்தக்கதாய் — அருங்கேட்டால் ஆற்ற விளைவது நாடு = கேடின்மையோடு கூடி மிக விளைவதே நாடாவது. எ-று.

அளவிறப்புப் பொருள்களது பன்மைமேலும் தனித்தனி அவற்றின் மிகுதிமேலும் நின்றது. கேடாவது:—மிக்கபெயல், பெயலின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை யென்றிவற்றான் வருவது. "மிக்கபெய லோடு பெய லின்மையெலி விட்டில்கிளி—பக்கனர சண்மையோ டாறு." இவற்றை வடநூலார் ஈதிகளென்ப. இவற்றுள் முன்னையவற்ற இன்மை அரசனறத்தானும், பின்னைய இன்மை அவன் மறத்தானும், வரும். இவ்வின்மையான் மிக விளைவதாயிற்று. (உ)

விளக்கம்:—மற்றைய தேசத்தவர்களும் விரும்பக்கூடியதாகிய அளவு சொல்லக்கூடாத பொருள்களை உடையதும், ஒரு கேடும் இல்லாமல் மிகுதியும் விளையும் விளைவுகளை உடையதுமே நாடாகுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது பொருள்களுள், இன்ன பொருள் விளையும், இன்ன பொருள் விளையாது என்று கூறவொண்ணாமல் எல்லாப்பொருள்களும் விளையக்கூடியதாயும், அவ்விதம் விளையாது கெட்டுப் போவதற்கு மழை அதிகமாகப் பெய்தலும், பெய்யாது போதலும் ஆகிய இரண்டு துர்க்குணங்களுமில்லாததாயும், பயிர்களை அழிக்கும் எலி, விட்டிற்

பூச்சி, கிளி, அரசனது பார்வையில்லாமை ஆகிய இவற்றால் வரும் கேடுகளில்லாததாயும் இருத்தல் வேண்டுமென்றும், இவ்விதமிருப்பதற்கு அரசனுடைய அறச்செய்கையும், மறச்செய்கையும் ஆகிய இரண்டும் வேண்டுமென்றும், அதாவது அரசனது செயல் அறமாயிருக்குமாயின் அந்நாட்டினுள் அதிவருஷம், அனாவருஷம் என்கின்ற அதிகமாகப் பெய்தல், பெய்யாது போதல் என்கின்ற குற்றங்கள் உண்டாகா என்றும், அரசனது செயல் வேட்டையாடல் முதலிய மறச்செயலாயின் தன் குடிகளால் விளைவிக்கப் பட்ட விளைவுகளை அழிக்கின்ற எலி முதலிய பிராணிகள் அழியுமென்றும் அறிந்தோம். இவ்விதம் அரசனது தகுதியால் நாடு செழித்து மிக விளையுமென்பதாயிற்று என்றனர். அது கேட்ட மாணாக்கர், "பொருள் மிகுதியும் விளைவது நன்மையேயாகும், ஆயின் விளையும் பொருள் கொண்டு நாட்டவர் தம் நாடொன்றினைக் காத்துக்கொள்வாராயின், அது சிறந்த நாடாகும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

733. பொறையொருங்கு மேல்வருங்காற் றாங்கி யிறை
இறையொருங்கு நேர்வது நாடு. [வற்

(பரி.) இ-ள். பொறை ஒருங்கு மேல்வருங்கால் தாங்கி = பிறநாடுகள் பொறுத்த பாரமெல்லாம் ஒருங்கே தன்கண் வருங்கால் அவற்றைத் தாங்கி— இறைவற்கு இறை ஒருங்கு சேர்வது நாடு = அதன்மேற் றன்னரசனுக்கு இறைப் பொருள் முழுவதையும் உடம்பட்டுக் கொடுப்பதே நாடாவது. எ-று.

பாரங்கள் = மக்கட்டொகுதியும் ஆன் எருமை முதலிய விலங்குத் தொகுதியும். தாங்குதல் = அவை தத்தந்தேயத்துப் பகை வந்திறுத்ததாக, அரசு கோல்கோடியதாக, உணவின்மையானாகத் தன்கண் வந்தால் அவ் வத்தேயங்களைப்போல இனிதிருப்பச் செய்தல். அச்செயலால் இறையைக் குறைபடுத்தாது தானேகொடுப்பதென்பார், 'இறையொருங்கு சேர்வது'

என்றார். (க)

விளக்கம்:—பிற நாடுகள் தாங்கிய பாரமெல்லாம் தன்னிடத்தே ஒன்றா சேர்ந்து வருமாயினும், அப்பாரங்களைத் தாங்குவதுடன் தன்னரசனுக்குச் செலுத்தவேண்டிய இறைப்பொருளென்னும் பகுதியை முழுவதும் கட்டும் நிலைமையுடையதே



நாடென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது பிற நாடுகளிலுள்ள மக்கள் கூட்டமும், பசுக்கள், எருமைகள் என்கின்ற விலங்கின் கூட்டங்களும், தம் தம் தேசங்களில் பகைவரால் துன்புறுத்தப்பட்டோ, அன்றி அரசன் செங்கோலனாக இல்லாமல் கொடுங்கோலனாக இருக்குங் காரணம் பற்றியோ, அன்றி விளையுளில்லாமையால் உணவு கிடைக்காமையாலோ தம் தம் நாட்டை விட்டு ஒரு நாட்டிற்குச் செல்வார்களானால், அவ்விதம் வந்த மக்களுக்கு வேண்டுவன உதவி அவர் நாட்டில் இருந்ததுபோல் இனிமைப்பட இருக்கச் செய்தும், விலங்குகளுக்கு வேண்டுவன செய்து அவைகளைக் காத்தும் இருப்பதுடன் இவ்விதம் அயல் நாட்டுப் பாரங்களை 'நாங்கள் தாங்குகின்றோம்! ஆதலால் அரசனுக்குச் செலுத்தவேண்டிய இறைப் பொருள் முழுவதையும் கொடுத்தல் முடியாது' என்று கூறாது சிறிதும் குறைவில்லாது தானே வலிந்து கொடுக்கக் கூடியதுமே நாடாகும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேல் திருக்குறளில் பிறதேசத்தவரும் விரும்பக்கூடிய செல்வமுடையது நாடென்றபடி இத்திருக்குறளில் அப்பிறதேசத்தவரைத் தாங்குவதும், அது மாத்திரம் அல்லாது தன் மன்னனுக்குக் கொடுக்கவேண்டுவனவற்றைக் குறையாது கொடுப்பதும், நாட்டின் வளமென்று அறிந்தோம். இனி இன்னும் அந் நாட்டிற்கு உரிய சிறப்பினை எல்லாம் கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

734. உறுபசியு மோவாப் பிணியுஞ் செறுபகையுஞ்
சேரா தியல்வது நாடு.

(பரி.) இ-ள். உறு பசியும்=மிக்க பசியும்—ஓவாப் பிணியும்=நீங்காத நோயும்—செறுபகையும் சேராது=புறத்து நின்றவர் அழிவுசெய்யும்

பகையுமின்றி—இயல்வது நாடு=இனிது நடப்பதே நாடாவது. எ-று.

உறுபசி, உழவருடைமையாலும் ஆற்றவிளைதலாலும் சேராதாயிற்று. ஓவாப்பிணி, தீக் காற்று மிக்க குளிர் வெப்பங்களும் நுகரப்படு பவற்றது நிலையுமின்மையிற் சேராதாயிற்று. செறுபகை, அரசனாற்றலும் நிலைப்படையும் அடவியும் அரணுமுடைமையிற் சேராதாயிற்று. (அ)

47



விளக்கம்:—மிகுந்த பசியும், நீங்காத நோயும், பிறர் தேயத்திருந்து வந்து அழிவு செய்கின்ற பகையுமில்லாமல் இனிமையாக இருப்பதே நாடென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, முதற்றிருக்குறளில் 'தள்ளாவிளையுளும்' என்று கூறியபடி உழுது பயிர்செய்கின்ற உழவர் பலரிருப்பதினாலும், பயிர்செய்த வண்ணமே யாதொருகேடில்லாது விளைவதினாலும், மிகுந்த பசி சேராதென்றும், தீயும், காற்றும், மிகுந்த குளிரும், அதிகரித்த வெப்பமும் ஆகிய இவைகளில்லாமையும் உண்பதற்கு வேண்டுவனவாகிய பொருள்கள் நிலையுடையனவாய் இல்லாமையும் இருக்குமாயின் பிணி நாடாதென்றும், நாட்டை ஆளும் அரசன் வல்லமையுடையவனும், நிலைத்த சைன்னிய முடையவனும், மலை, காடுகள் முதலாகிய அரண்களை உடையவனும் இருப்பானாயின் பகைவர் சேராரென்றும், இவ்விதம் இருக்கும் நாடு குடிகளுக்கு இனிமைப்பட இருக்குமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நாட்டிற்கு உண்டாகும் தீமைகள் இவை என்றும், அத்தீமைகளில்லாமையால் வரும் நன்மைகள் இவை என்றும் அறிந்தோம். இனி நாட்டிலுள்ளார் தகுதியையும் கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

735. பல்குழுவும் பாழ்செய்யு முட்பகையும் வேந்தலைக்
கொல்குறும்பு மில்லது நாடு. [குந்

(பரி.) இ-ள். பல் குழுவும்=சங்கேதவயத்தான் மாறுபட்டுக் கூடும் பல கூட்டமும்—பாழ் செய்யும் உட்பகையும்=உடனுறையாநின்றே பாழாகச் செய்யுமுட்பகையும்—வேந்து அலைக்கும் கொல் குறும்பும் இல்லது நாடு=அவையன்றால் வேந்தனையலைக்குங் கொல்லினைக் குறும்பரு மில்லாததே நாடாவது. எ-று.

சங்கேதம்=சாதிபற்றியும் கடவுள்பற்றியும் பலர்க்குளதா மொருமை

உட்பகை = அழிப்பார், கள்வர், குறளை கூறுவோர் முதலிய மக்களும், பன்றி, புலி, கரடி முதலிய விலங்குகளும். உட்பகை, குறும்பென்பன ஆகுபெயர். இம்மூன்றும் அரசனாலும் வாழ்வாராலும் கடியப்பட்டு நடப்பதே நாடென்பதாம். (௫)

விளக்கம்:—சாதிபற்றியோ, தெய்வந்தொழுகையைக்குறித்தோ ஒருவருக்கொருவர் தம் மனப்பாங்கின்படி மாறுபட்டுக் கூடு



கின்ற பல கூட்டங்களும், உடன் வசித்தே அரசனைப் பாழ்படுத்தும் உட்பகையும், சமயம் வாய்ந்த காலத்து அரசனைத் துன்பப்படுத்திக் கொல்லும் தொழிலையுடைய குறும்பர் என்னும் தலைவர்களும் இல்லாததே நாடென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒவ்வோர் கூட்டத்தினர் ஒவ்வோர் பிரிவாகப் பிரிந்து கூட்டம் கூட்டமாக ஒருவருக்கொருவர் சண்டை யிடுவாராயின் அவ்வித நாடு அமைதியோடு இராதென்றும், "புறப்பகைகோடியின் மிக்குறினும் அஞ்சார், அகப்பகை ஒன்று அஞ்சிக் காப்பர்" என்றபடி உடனிருந்தே எல்லாவுளவுகளையும் அறிந்து பாழ்படுத்துகின்ற உட்பகையிருக்குமாயின் அந்நாடு நன்மையடையாதென்றும், அவ்வுட்பகையாவார் வழிப்பறி கள்வரும், வீடுபுகுந்து திருடுபவரும், கோள் சொல்லுவாரும் ஆகிய மக்கட் கூட்டங்களும், பன்றி, புலி, கரடி ஆகிய மிருகங்களும் ஆகும் என்றும், ஆகையால் இவ்வித உட்பகை இல்லாமற் செய்தும், சிறு சிறு கூட்டங்களுக்குத் தலைவராக இருந்து சமயம் வாய்த்தபோதெல்லாம் அரசனைத் துன்பப்படுத்துகின்ற குறும்பர்களாகிய பகைவர்களைத் தொலைத்தும் நாட்டை ஆளும் அரசனும், அவன்கீழ் வாழும் குடிகளும் வாழ்வார்களாயின் அவ்விதம் வாழும் நாடே நாடென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நாட்டின் தன்மை யாவுமறிந்தோம். இனி வேற்றரசராகிய பகைவரால் ஓர் நாடு கேட்டினை அடைதல் கூடுமன்றோ? அவ்விதக் கேட்டினை அடைந்த காலத்தும் எவ்வித தன்மையுடைய நாடு நாடாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

736. கேடறியாக் கெட்ட விடத்தும் வளங்குன்றா
நாடென்ப நாட்டிற் றலை.

(பரி.) இ-ள். கேடு அறியா=பகைவராற் கெடுதலறியாததாய்—கெட்டவிடத்தும் வளம் குன்றாநாடு=அரிதிற் கெட்டதாயினும் அப்பொழுதுந் தன் வளங்குன்றாத நாட்டினை—நாட்டின் தலை என்ப=எல்லா நாட்டினுந் தலையென்று சொல்லுவர் நூலோர். எ-று.

அறியாத, குன்றாதவென்னும் பெயரெச்சங்களி னீறுகள் விகாரத் தாற் றொக்கன. கேடறியாமை அரசனாற்றலானுங் கடவுட்பூசை யறங்க



ளென்றிவற்றது செயலானும் வரும், வளம்=ஆகரங்களிற்* படுவனவும் வயலினுந் தண்டலையினும்† விளைவனவுமாம். குன்றாமை=அவை செய்யவேண்டாமல் இயல்பாகவே புனலாயும் முன்னீட்டப்பட்டுக் குறைவறுதல். இவையாறு பாட்டானும் நாட்டிலக்கணங் கூறப்பட்டது. (சு)

விளக்கம்:—பகைவர்களால் கெடுதல் என்பதே அறியாததாயும், ஓர்கால் எப்போதேனும் பகைவரால் கெடுக்கப்பட்டதாயினும் எக்காலத்தும் வளம் குன்றாததாயும் உள்ள நாட்டினை எல்லா நாடுகளுக்கும் தலைமையுடைய நாடென்று நூல்வல்லவர் கூறுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் அறிவு, ஆண்மை, பெருமை என்கின்ற மூவித வல்லமையும், கடவுட் பூசை, தருமம் செய்தல் என்கின்ற நற்செயலும் உள்ளவனாக இருப்பானாயின், அவன் ஆளும் நாடு கேடு அடையாதென்றும், அவ்விதம் ஓர் கால் பகைவரால் கெடுக்கப்படுமாயினும், கனிகளில் உண்டாகிய பொருள்களாலும், வயல்களிலும், தோட்டங்களிலும் விளைகின்ற பொருள்களாலும், அப்பகைவரால் கெடுத்த கேட்டிற்குக் குறைவுபடாது நிரப்பக்கூடியதாகிய வளமுடையதாகவும் இருத்தல் வேண்டுமென்றும், அவ்விதம் வளமுடைய நாட்டினை நூல் வல்லவர் ஈட்டப்படாமலே இயல்பாகவே வளத்தைப் பெறும் நாடென்றும், நாடுகளில் தலைமையுடையது என்றும் கூறுவ

சென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் இயல்பாகவே நாட்டிற்கு வளம் உண்டாகச் செய்யும் கருவிகள் எவை?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

787. இருபுனலும் வாய்ந்த மலையும் வருபுனலும்
வல்லரணும் நாட்டிற் குறுப்பு.

(பரி.) இ-ள். இருபுனலும்=கீழ்நீர் மேனீரெனப்பட்ட தன்கணீரும்—வாய்ந்தமலையும்=வாய்ப்புடைத்தாய மலையும்—வருபுனலும்=அதனின்றும் வருவதாய நீரும்—வல்லரணும்=அழியாத நகரியும்—நாட்டிற்கு உறுப்பு=நாட்டிற்கவயவமாம். எ-று.

* ஆதாரங்கள்=சாரங்கள்.

† தண்டலை=குளிர்ந்த சோலை.



ஈண்டுப் புனலென்றது துரவு, கேணிகளும், ஏரிகளும், ஆறுகளுமாகிய ஆதாரங்களை, அவயவமாதற்குரியன அவையேயாகலின். அவற்றான் வானம் வறப்பினும் வளனுடைமை பெறப்பட்டது. இடையதன்றி யொருபுடைய தாகலும் தன் வளந் தருதலும் மாரிக்கணுண்டநீர் கோடைக்க ணுமிழ்தலு முடைமைபற்றி, 'வாய்ந்தமலை' என்றார். அரண் ஆகுபெயர். இதனான் அதனவயவங் கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—கீழ் நீர், மேல் நீர் எனக்கூடிய இருவித நீர் வளப்பத்தையும், வாய்ப்புடைய மலையையும், அம்மலையிடத்தினின்றும் வருவதாகிய நீரும், அழியாத நகரியும் நாட்டிற்கு அவயவம் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, துரவு, கேணிகள், ஏரிகள், ஆறுகள் என்று சொல்லப்பட்ட ஆதாரங்களையுடையதும், தனக்கு உண்டாகிய வளத்தைக் கொடுப்பதுடன் மாரிக்காலத்து உண்ட நீரைக் கோடைக்கால முழுவதும் கொடுப்பதாகிய மலைவளமுடையதும், பகைவர் அபகரியாதபடி நாட்டிற்கு உரியதாகிய அரணும், அழிவில்லாத நகரமுமுடையதுமாக இருக்க

வேண்டுமென்றும், அவ்வாறு அவயவங்களை யெல்லாம் பெற்றிருக்கின் ஓர் கால் வானம் மழைபெய்யாது விடினும் நாடு வளமடைதல் கூடுமென்றும், அதுவே சிறந்த நாடென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "நாட்டிற்கு உறுப்பினை அறிந்தோம். இனி அந்நாட்டிற்குப் பிறதேயத்தாரும் விரும்பும் அழகினைக் கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**738. பிணியின்மை செல்வம் விளைவின்ப மேம**
**மணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.**

(பரி.) இ-ள். பிணியின்மை செல்வம் விளைவு இன்பம் ஏமம் இவ் வைந்து=நோயின்மையுஞ் செல்வம் விளைதல் இன்பம் காவலென்றிவை யுடைமையுமாகிய இவ்வைந்தினையும்—நாட்டிற்கு அணி என்ப=நாட்டிற் கழகென்று சொல்லுவர் நூலோர். எ-று.

பிணியின்மை நிலநலத்தான் வருவது. செல்வம்மேற் சொல்லியன. இன்பம்=விழவும் வேள்வியுஞ் சான்றோரு முடைமையாலும், நுகர்வன வுடைமையாலும், நிலநீர்களது நன்மையாலும், வாழ்வார்க்கு உண்ணிகழ்வது. காவலெனவே அரசன் காவலும் வாழ்வோர் காவலும் அரண்காவலு



மடங்கின. பிறதேயங்களிலுள்ளாரும் விழைந்து பின் அவையுள்ளாமைக் கேதுவாய அதனழகு இதனாற் கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—நூல் வல்லவர் நாட்டிற்கு அழகென்று கூறுவது நோயில்லாமையும், செல்வங்களையுடையதும், விளைவினையுடையதும், இன்பத்தை விளைப்பதும், காவலையுடையதும் ஆகிய ஐந்தும் ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நாட்டின் நிலம் குற்றமற்றதாயும், நன்மையுடையதாயும் இருக்குமாயின் நோய் வாராதென்றும், வாணிபம் முதலியன செய்து செல்வத்தை அதிகரித்தலால் வறுமை நீங்கிச் செல்வத்தையுடையதாகுமென்றும், உழவர் கெடாது தம் தொழிலைச் செய்வாராயின் நல்ல விளைவு வருமென்றும், நாட்டில் உள்ள ஆலயங்களுக்குத் திருவிழாச் செய்தலாலும், வேள்விமுதலிய செய்தலாலும்,

சான்றோர் இருத்தலாலும், உண்ணக்கூடிய பொருள்கள் கிடைப்பதாலும், நிலத்தின் நன்மையும் நீர் நன்மையும் அமைந்திருப்பதாலும் வாழ்வார்க்கு இன்பம் உண்டாகுமென்றும், அரசன் காவலும் நாட்டில் வாழ்வோர் செய்து கொள்ளும் காவலும், அரண் காவலும் இருக்குமாயின் காவலாகுமென்றும், மற்ற தேசத்தவர்கள் இங்கு வந்து இந்நாட்டினை விரும்பிய பிறகு பின்னர் அவர் நாட்டினை விரும்பாவண்ணம் செய்யுமாயின் அழகுடையதாகுமென்றும் கூறுவதாக அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதமெல்லாம் அழகுபெற நாடிருப்பது தம் தம் நிலைக்கேற்ப அவரவர் தேடி வருந்துவதால் உண்டாகுமே அன்றி இயல்பாகவே உண்டாகுமோ ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

739. நாடென்ப நாடா வளத்தன நாடல்ல
நாட வளந்தரு நாடு.

(பரி.) இ-ள். நாடா வளத்தன நாடு என்ப = தங்கண்வாழ்வார்தேடி வருந்தாமல் அவர்பாற்றானே யடையுஞ் செல்வத்தை யுடையவற்றை நூலோர் நாடென்று சொல்லுவர்;—நாட வளம் தரும் நாடு நாடு அல்ல = ஆதலாற் றேடிவருந்தச் செல்வமடைவிக்கும் நாடுகள் நாடாகா. எ-று.

நாடுதல் இருவழியும் வருத்தத்தின்மேனின்றது. "பொருள் செய்



வார்க்குமஃதிடம்" * என்றார் பிறரும். நூலோர் விதிபற்றி எதிர்மறைமுகத்தாற் குற்றங் கூறியவாறு. இவ்வாறன்றி 'என்ப' என்பதனைப் பின்னுங் கூட்டி இருபொருள்பட வுரைப்பின் அனுவாதமாம். (௯)

விளக்கம் :—தன்னிடத்து வாழும் மக்கள் தேடி வருந்தாமல் அம்மக்களிடத்துத் தானே சென்று அடையும் செல்வத்தை உடையதை நூல் வல்லவர் நாடென்று கூறுவர் என்றும், அதுவல்லாமல் தேடி வருந்துதலால் செல்வத்தை உண்டுபண்ணும் நாடுகள் நாடுகள் ஆகாவென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் இயல்பாகவே நிலவளத்தாலும், நீர்வளத்தாலும், செல்வத்தைத்

தருவதே நாடென்றும், வருந்திச் செல்வத்தை அடையச் செய்யும் நாடு நாடல்ல வென்றும் கூறினர். அது கேட்ட மாணக்கர் "நாடு, நாட்டின் உறுப்பு, நாட்டின் அழகு, வாடாத செல்வம் இவையெல்லாமிருக்கினும் அரசன் தகுதியற்றவனாக இருப்பானாயின் அக்காலத்து எதுவாகும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

**740. ஆங்கமை வெய்தியக் கண்ணும் பயமின்றே
வேந்தமை வில்லாத நாடு.**

(பரி.) இ-ள். வேந்து அமைவு இல்லாத நாடு=வேந்தனோடு மேவுதலில்லாத நாடு—ஆங்கு அமைவு எய்தியக் கண்ணும் பயம் இன்றே=மேற் சொல்லிய குணங்களெல்லாவற்றானும் நிறைந்திருந்ததாயினும் அவற்றாற் பயனுடைத்தன்று. எ-று.

வேந்தமைவெனவே, குடிகள் அவன் மாட்டன்புடையாராதலும் அவன் றான் இவர்மாட்டருளுடையனாதலும் அடங்கின. அவையில்வழி வாழ்வோரின்மையின், அவற்றாற் பயனின்றாயிற்று. இவை யிரண்டுபாட்டானும் அதன் குற்றங் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—மேற் சொல்லிய குணங்கள் எல்லாவற்றாலும் நிறைந்திருக்கும் நாடாயினும், வேந்தனோடு பொருந்தாத நாடாயின் அக்குணங்களால் பயன் அடையாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, குடிகள் அரசன்மாட்டு அன்புடையவராயிருத்தலும், அவ்வரசன் தானும் குடிகளிடத்து அன்புடைய



வனாயிருத்தலும் ஆக நாடானது இருக்குமாயின் மேல் நாட்டிற்குக் கூறிய குணங்களெல்லாம் குணங்களாக நின்று பயன் படுமென்றும், அவ்வாறு அரசனும், குடிகளும் பொருந்தாவிடின் அக்குணங்களால் அவ்வரசனும், நாடும் யாதொரு பயனும் அடைவதற்கு இல்லாமற்போம் என்றும் அறிக்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "முன்னர் நாட்டிற்கு உறுப்புக்களைக் கூறிய காலத்து வல்லரண் வேண்டுமென்று கூறினீர். அவ்வரண் எத்தகைத்து என்பதைப்பற்றி

* 731-வது குறளுரையைப் பார்க்க.

அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

## 75. அதிகாரம்.

### அரண்.

(பரி.) இனி அக்காட்டிற்குறுப்பா யடங்குமாயினும் பகைவாற் றெலிவு வந்தழி அது தனக்கும் அரசன்றனக்கும் ஏமமாதற் சிறப்புப்பற்றிப் பிறிதோ ரங்கமாக வோதப்பட்ட அரண் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார்.

விளக்கம்:—அதாவது, இவ்வரண் என்பது ஏனைய உறுப்புக்கள்போல் காட்டிற்கு ஓர் உறுப்பாய் காடு என்னும் அதிகாரத்துள் அடங்கி வருவதாயினும், பகைவரால் ஏதேனும் துன்பம் வந்து அக்காட்டிற்குக் கெடுதிவரும் காலத்து அக்காட்டையும், அக்காட்டையாளும் அரசனையும் காக்கின்ற காவலாக இருப்பதால், இதனை மற்றொரு அங்கமாக இறைமாட்சியுள் வைத்தபடி இங்கு கூறுகின்றனர் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "ஏனைய உறுப்புக்களை எல்லாம் தனித்துக் கூறாது இதனையே தனித்துக் கூறுவதால் இதன் சிறப்பு மிக்கதாக இருக்கும்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

741. ஆற்று பவர்க்கு மரண்பொரு ளஞ்சித்தற்
போற்று பவர்க்கும் பொருள்.

(பரி.) இ-ள். ஆற்றுபவர்க்கும் அரண் பொருள்=மூவகையாற்றலுமுடையராய்ப் பிறர்மேற் செல்வார்க்கும் அரண் சிறந்தது;—அஞ்சித் தற்போற்றுபவர்க்கும் (அரண்) பொருள்=அவையின்றித் தம்மேல் வருவார்க்கஞ்சித் தன்னையே யடைவார்க்கும் அரண் சிறந்தது; எ-று.



பிறர்மேற் செல்லுங்கால் உரிமை பொருள் முதலியவற்றைப் பிறனொருவன் வௌவாமல் வைத்துச் செல்லவேண்டுமாகலானும், அப்பெருமை தொலைத்திறுதிவந்துழிக் கடனுடைய ருடைகலத்தார்போன்று ஏமங்காணுதிறவாராகலானும், ஆற்றுபவர்க்கும் போற்றுபவர்க்கும் அரண் பொருளாயிற்று. ஆற்றலுடையாராயினும் அரணில்வழி அழியும் பாலாரகலின், அவரை முற்கூறினர். இதனால் அரணினது சிறப்புக் கூறப்பட்டது. (க)

விளக்கம் :—அறிவு, ஆண்மை, பெருமை என்கின்ற மூவகை ஆற்றலும் உடையராய்ப் பகைவர்மீது செல்வார்க்கு அரண் என்பது சிறந்ததாகுமென்றும், அவையில்லாமல் தம்மீது வெல்வதற்கு வருகின்ற பகைவர்களுக்குப் பயந்து தன்னையே வந்து அடைகின்றவர்களுக்கும் அரண் ஆனது சிறப்புடையதாகும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசனானவன் பிறபகைவர்கள் மீது யுத்தத்திற்குச் செல்லும்போது தன்னுடைய உரிமை, பொருள் முதலிய எல்லாவற்றையும் வேறு ஒருவன் அபகரியா வண்ணம் வைத்துச் செல்லவேண்டுமாதலால் அக்காலத்து அரண் வேண்டுமென்றும், அதுவன்றியும் பகைவர் தன்மீது வந்த காலத்துத் தனக்குள்ள பெருமையெல்லாம் ஒழிந்து தோற்றுப்போவானானால், நடுக்கடலில் செல்லுபவர் தம்மை ஏற்றிச் செல்லும் கப்பல் உடையுமாயின் எவ்வாறு வருந்துவரோ அது போல் வருந்துவதற்கு ஏதுவாகுமாதலால், அவ்விதம் வருந்தா வண்ணம் செய்வதற்கு அரண் வேண்டுமென்றும், ஆதலால் வலியுடையார்க்கும், வலி இல்லாதார்க்கும் இருவர்க்கும் அரண் என்பது வேண்டியே உள்ளது என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் அரணது சிறப்பினை அறிந்தோம். இனி அரண் என்பது யாதென அறிய விரும்புகின்றோம்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

742. மணிநீரு மண்ணு மலையு மணிநிழற்
காடு முடைய தரண்.

(பரி.) இ-ள். மணிநீரும் மண்ணும் மலையும் அணிநிழற்காடும் உடையது அரண் = மணிபோலும் நிறத்தினையுடைய நீரும் வெள்ளிடை நிலமும் மலையும் குளிர்ந்த நிழலையுடைய காடுமுடையதே அரணாவது. எ-று.

AR



எஞ்ஞான்றும் வற்றாத நீரென்பார், 'மணிநீர்' என்றும், நீருநிழலுமில்லா மருநிலமென்பார் 'மண்' என்றும், செறிந்த காடென்பார் 'அணிநிழற்காடு' என்றுங் கூறினார். மதிற்புறத்து மருநிலம் பகைவர் அரண்பற்றாமைப் பொ

சூட்டு. நீராண், நிலவரண், மலையரண், காட்டரண் என இயற்கையுஞ் செயற்கையுமாய இந்நான்காலுஞ் சூழப்படுவது அரணென்பதாம். (உ)

விளக்கம் :—மணிநீரும், வெள்ளிடை நிலமும், உயர்ந்த மலையும், குளிர்ந்த நிழலுடைய காடும் உடையதே அரண் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மணிபோலும் நிறத்தை யுடைய வற்றாத ஊற்று நீரையுடையதும், நீரும் நிழலுமில்லாத வற்றல் நிலம் உடையதும், உயர்ந்த மலையினையுடையதும், பகைவர் தாண்டிவருவதற்குக் கூடாத அடர்ந்தகாடு உடையதும் ஆகிய இலக்கணம் பொருந்தியதே அரண் என்று அறிந்தோம். அது என்னேயோவெனில்? வற்றாத நீர் இல்லாவிடின் மதிற்புறத்தை சூழ்ந்துகொள்ள அகழியைத் தாண்டிப் பகைவர் உள்நுழைந்து விடுவார்களாதலால் நீர் அரண் வேண்டுமென்றும், அகழிக்கும் மலைக்கும் நடுவே நிழலும், நீருமில்லாத வெறு நில மிருக்குமாயின் அந்நிலத்தைத் தாண்டிவருவது பகைவர்க்குக் கடினமாயிருக்குமாகையினால் அவ்வித வெறுநிலம் வேண்டுமென்றும், அவ்வித வெறு நிலத்திற்கும் அடர்ந்த காட்டிற்கும் நடுவே மலையிருக்குமாயின் பகைவர் அதனைக் கடந்து வருதல் கூடாதாதலால் மலை வேண்டுமென்றும், அம்மூன்றும் கடந்து பிறகு நெருங்கிய காடிருக்குமாயின் பகைவர் முதலிலேயே உள்நுழைந்து வருவதற்குக் கடுமையாக இருக்குமாதலால் செறிந்த காடு வேண்டுமென்றும், நீர் அரண், நிலவரண், மலை அரண், காட்டரண் ஆகிய நான்கு அரண்களும் ஒன்றுகூடி யிருப்பதே அரண் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நான்கு அரண்களையும் அறிந்தோம். இனி நாட்டினைச் சுற்றி மதிலும் இருக்கக் காண்கின்றோம். அதனையும் ஓர் அரண் என்று கூறல்வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

743. உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி
னமைவர ணென்றுரைக்கு நூல்.

(பரி.) இ-ள். உயர்வு அகலம் திண்மை அருமை இந்நான்கின் அமைவு= உயர்ச்சியும் அகலமுந் திண்மையும் அருமையுமென்று சொல்லப்பட்ட இந்

நான்கின் மிகுதியையுடைய மதிலை—அரண் என்று உரைக்கும் நூல்=அர ணென்று சொல்லுவர் நூலோர். எ-று.

அமைவு, நூலென்பன ஆகுபெயர். உயர்வு=ஏணியெய்தாதது. அகலம்= புறத்தோர்க்கு அகழலாகா அடியகலமும், அகத்தோர்க்கு நின்று வினைசெய்ய லாந் தலையகலமும். 'திண்மை=கல்லிட்டிகைகளாற்* செய்தலிற் குத்தப் படாமை. அருமை=பொறிகளான் அணுகற்கருமை. பொறிகளாவன:—"வளை விற் பொறியு மயிற்செறி விலையுங்—கருவிரலூகமுங் கல்லுமிழ் கவணும்— பரிவுறு வெந்நெயும் பாகடு குழிசியுங்—காய்பொன் னுலையுங் கல்லிடு கூடை யுந்—தூண்டிலுந் தொடக்கு மாண்டலை யடுப்புங்—கவையுங் கழுவும் புதையும் புழையு—மையவித் துலாமுங் கைபெய ரூசியுஞ்—சென்றெறி சிரலும் பன்றி யும் பணையு—மெழுவுஞ் சீப்பு முழுவிறற் கணையமுங்—கோலுங் குந்தமும் வேலுஞ் சூலமும்"† என்றிவை முதலாயின. (௬)

விளக்கம்:—உயர்வும், அகலமும், வலிமையும், அருமையும் என்று சொல்லப்பட்ட இந்த நான்கு தகுதியையும் மிகுதியாக உடைய மதிலொன்று இருக்குமாயின் அவ்வித மதிலை நூல்வல்லவர் அரண் என்று சொல்லுவரென்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், மேற்கூறிய நான்கு அரண்களோடு மதிலென்னும் ஓர் அரணும் வேண்டும் என்றும், பகைவரால் ஏணி முதலியவை கொண்டு மேல் ஏறக்கூடாததாகிய உயர்ச்சியும், பகைவர்களால் வெளியே இருந்து தோண்டிவிடாதபடி மதிலின் அடிப்புறத்தில் அக லமும், உள்ளிருந்து யுத்தம் செய்பவர்க்கு மேலேறி யுத்தத்தைச் செய்வதற்குக்கூடிய மேற்புறத்தில் அகலமும், ஆயுதம்கொண்டு குத் தித் துளைபோக்கக்கூடாதபடி கல் முதலியவைகளால் கட்டப்பட்டதா யும், பகைவர் அம்மதிலிடத்து அணுகாதவண்ணம் தானேவளைந்து எய்யும் இயந்திரவிற்பொறியும், கருமையாகிய விரலை யுடையதாய்க் குரங்கு போலிருந்து பகைவர் சேர்ந்தவுடன் கடிக்கின்ற பொறியும், தானே கல்லை வீசுகின்ற கவண் என்னும் பொறியும், அணுகினவ ரைக் கொல்லுவதற்குக் காய்ந்து கொண்டே இருந்து இறைக்கின்ற நெய்யையுடைய பொறியும், செம்பினை உருக்கித் தன்னிடத்தே

* இட்டிகை=செங்கல்லு(?).

† சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, 207-216.

வைத்து அணுகினவர்மீது இறைக்கும் பொறியும், பல உலை க்கல்லைக் காய்ச்சி எறிவதற்கு உரியதாகிய பலவித பொறிகளும், வீசுவதற்கு உரியதாகிய பொறிகளுக்குக் கல்லினை நிரைத்து வைக் கும் கூடைகளாகிய பொறிகளும், தூண்டில்போன்ற வடிவமுடை யதாகச் செய்யப்பட்டு அகழியைத் தாண்டி மதிலினைப்பற்றும் பகை வரைக் கோத்துவலிக்கும் கருவியாகிய பொறியும், கழிகோல்போலக் கழுத்தில் பூட்டி முறிக்கும் சங்கிலிகளையுடைய பொறியும், பறவை வடிவாகப் பண்ணப்பட்டுப் பறக்கவிடுதலால் பகைவரது உச்சியைக் கொத்தி மூளையைக் கடிக்கும் பல பொறிகளும், கிடங்கில் ஏறிய வுடன் மல்லாத்தித்தள்ளும் இருப்பு உலக்கையுடைய பொறியும், கடுகுபோன்ற பொறியும், பாணக்களை நிறையவுடைய பொறியும், பகைவர் வருங்காலத்து நுழைந்து கொள்ளுவதற்கு உரிய அறை களும், பகைவரைப்பற்றி அவர் உடலைத் தூக்கிப்போகும்படிச் செய் கின்ற கிறைகோல்போன்ற பொறியும், மதிலினுடைய தலையைப் பற்றுவாரை அவர்கள் கையைப் பொத்துகின்ற ஊசிகளை யுடைய பொறிகளும், பகைவர்மேல் சென்று கண்ணைக் கொத்துகின்ற சிச் சிலிப் பறவை போன்ற பொறியும், மதிலின்தலையிலேறின பகைவ ரது உடலைக் கொம்பினால் கிழிக்க இரும்பால் செய்துவைத்த பன்றியாகிய பொறியும், வருகின்ற பகைவரை அடித்தற்காக மூங் கில் வடிவாக அமைத்து வைத்த பொறியும், மதிற்புறத்தின் கத வுக்கு வலிமைசெய்யும்படி உள்வாயிற்படியில் நிலத்திலே வீழவிடு கின்ற மரங்களும், கணையாபீசம் விட்டேறும், குந்தமும், வேலும் நூறுபேர்களைக் கொல்லுகின்ற சதக்கினி, தள்ளிவெட்டி, பாளைப் பொறி, பாம்புப்பொறி, புலிப்பொறி, சகடப்பொறி, ஆட்டுப் பொறி, சிங்கப்பொறி என்கின்ற பொறிகளும் ஆகிய இவ்வித பொறிகளை யெல்லாம் உடைய மதிலை அரண் என்றும் அறிந் தோம். இதை மேல் பரிமேலழகர் தம் உரையுள் எடுத்துக்காட் டிய சிலப்பதிகாரம், அடைக்கலக்காதை, அகலற்பாலாதும் அறிதல்

கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித மதிலொன்று அமைந்த காலத்து அரசன் மதிற்புறத்து வேறு ஒரு காவலையும் அமைக்கவேண்டுவதில்லை போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



744. சிறுகாப்பிற் பேரிடத்த தாகி யுறுபகை
யூக்க மழிப்ப தரண்.

(பரி.) இ-ள். சிறுகாப்பிற் பேர் இடத்தது ஆகி=காக்கவேண்டுமிடஞ் சிறிதாய் அகன்றவிடத்தை யுடைத்தாய்—உறு பகை ஊக்கம் அழிப்பது அரண்=தன்னைவந்து முற்றிய பகைவரது மனவெழுச்சியைக் கெடுப்பதே அரணாவது. எ-று.

வாயிலும் வழியுமொழிந்த விடங்கள் மலை, காடு, நீர்நிலையென்றிவற்றான் ஏற்பனவுடைத்தாதல் பற்றிச் 'சிறுகாப்பின்' என்றும்; அகத்தோர் நலிவின்றி யிருத்தல்பற்றிப் 'பேரிடத்ததாகி' என்றும், தம்வலி நோக்கி இதுபொழுதே யழித்துமென்று வரும் பகைவர் வந்து கண்டால் அவ்வூக்க மொழிதல்பற்றி 'ஊக்கமழிப்பது' என்றுங் கூறினார். (ச)

விளக்கம் :—காக்கவேண்டுமிடம் சிறியதாயும், ஏனைய இடம் அகன்றதாயும் உடையதாய் மதிலாகிய தன்னைப் பகைவர் வந்து அடைந்தகாலத்து அப்பகைவரது மனத்திலுள்ள ஊக்கத்தைக் கெடுத்து நிற்பதே அரண் என்று சொல்லப்படும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மதிலின் வாயில், சிறுவழி ஆகிய சிறு இடங்களில் காவல் அமைக்கக்கூடியதாயும், ஏனைய இடங்களெல்லாம் மலை, காடு, நீர்நிலையாகிய அகழிகள் ஆகிய இவைகளால் சூழ்ந்திருக்க வேண்டுமென்றும், அவ்விதமிருக்குமாயின் அவ்வாயிற் புறத்தும் வழியிலும் காவலாளர்களை அமைக்கின் அது போதுமானதாக இருக்குமென்றும், உள்ளிருக்கும் வீரர்முதலியோர் பகைவரால் வளைக்கும் காலத்துத் துன்பப்படாது இருக்கக்கூடிய பெரிய இடத்தை யுடையதாயும் தம்முடைய வலிமையை எண்ணி 'இப்போதே இந்நாட்டையும், நாட்டையாளும் அரசனையும் அழித்து விடுவோம்' என்றெண்ணி வருகின்ற பகைவர், மதிலிடத்தே வந்து மதிலைப்பார்த்ததும், 'இம்மதிலோ மிக அருமையுடையது

இதனைக்கடக்க ஒருவராலுமாகாது' என்று அப்பகைவரது ஊக்கத்தை ஒழிக்கக் கூடியதாயும் இருக்கின்ற மதிலே அரண் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரணானது உள்ளிருப்போர் கவலையடையாவண்ணம் வேறிடத்தை உடையதாய் இருந்தாற் போதுமோ? உள்ளிருப்போர்க்கு வேறு ஒன்றும் வேண்டாமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



745. கொளற்கரிதாய்க் கொண்டகூழ்த் தாகி யகத்தார்
நிலைக்கெளிதா நீர தரண்.

(பரி.) இ-ள். கொளற்கு அரிதாய் = புறத்தாரால் கோடற்கரிதாய்— கொண்டகூழ்த்தாகி = உட்கொண்ட பலவகை யுணவிற்றாய்—அகத்தார் நிலைக்கு எளிதாம் நீரது அரண் = அகத்தாரது போர்நிலைக் கெளிதாய நீர்மையை யுடையதே அரணாவது. எ-று.

கோடற்கருமை = இளைகிடங்குகளானும் பொறிகளானும் இடங்கொள்ளுதற் கருமை. உணவு நிலைமைபற்றிக் கூறினமையின், மற்றுள்ள நுகரப்படுவனவுமடங்கின. நிலைக்கெளிதா நீர்மையாவது:—அகத்தார் விட்ட வாயுத முதலிய புறத்தார்மேல் வெளியிற் சேறலும், அவர் விட்டன அகத்தார் மேற் செல்லாமையும், பதணப்பரப்பும் முதலாயின. (௫)

விளக்கம்:—பகைவராகிய புறத்தில் உள்ளவர்களால் கொள்ளுதற்கு அருமையுடையதாய் உள்ளே உள்ள வீரர் முதலியோர் உண்பதற்கு உரிய பலவகை யுணவினை உடையதாய் உள்ளிருக்கும் வீரர் போர்செய்வதற்கு உரிய எளிமையுடையதாய் இருப்பதே அரண் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, இளை, நீர் இடங்கி, பொறிகள் ஆகிய இவைகளைப் பெற்றிருப்பதால் பகைவரால் அடையக்கூடாததாயும் உண்ணப்படுகின்ற உணவுகள் யாவும் குடிப்பனவாகிய ஜலமும் ஆகிய எல்லாம் அடங்கியதாயும், உள்ளிருக்கின்ற வீரர் பகைவரைக் குறிக்கொண்டு எய்த ஆயுதங்கள் அப்பகைவர்மீது குறிதவறாது சென்று எய்தவண்ணமே எய்தற்குக் கூடியதாகிய துளைகள் உடையதும், வெளியிலிருந்து பகைவரால் விடப்பட்ட ஆயுதங்கள் உள்ளிருக்கின்ற வீரர்கள்மீது வந்து பாயா வண்ணம் செய்து உள்ள பரப்பு முதலியவைகளை உடையதும் மதி

லென்றும், அதுவே அரண் என்றும் அறிக்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மதிலும், பொருளும் இருக்கின் போதுமோ? வேறு ஒன்றும் வேண்டாமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

746. எல்லாப் பொருளு முடைத்தா யிடத்துதவு
நல்லா ளுடைய தரண்.

(பரி.) இ-ள். எல்லாப்பொருளும் உடைத்தாய்=அகத்தோர்க்கு வேண்டும் பொருள்களெல்லாவற்றையும் உள்ளே யுடைத்தாய்—இடத்து உதவும்



நல்லாள் உடையது அரண்=புறத்தோரால் அழிவெய்து மெல்லைக்கண் அஃதெய்தாவகை யுதவிக் காக்கும் நல்ல வீரரையு முடையதே அரணாவது.

அரசன்மாட்டன்பும் மானமும் மறமும் சோர்வின்மையும் முதலிய நற்குணங்களுடைமைபற்றி 'நல்லாள்' என்றார். (க)

விளக்கம்:—உள்ளிருப்பவர்க்கு வேண்டிய பொருள்கள் எல்லாவற்றையும் தன்னிடத்தே உடையதும், புறத்தோராகிய பகைவரால் அழிக்கக்கூடிய காலம் வருமிடத்து அவ்விதம் அழிக்கப்படாமல் உதவிக் காக்கின்ற நல்ல வீரரை உடையதும் அரண் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. இதனால் யுத்தம் நேர்ந்த காலத்து அரணுக்கு வெளியே சென்று பொருள்களைத் தேடிவருதல் கூடாதாதலால் எல்லாப்பொருள்களும் அடைவதற்கு உரிய தகுதியுடையதாய்ப் பகைவர் வந்தகாலத்து அரசனிடத்து அன்பும், தன் மதிப்பும், அஞ்சாதவீரமும், சோர்வின்மையும் ஆகிய நற்குணங்கள் உடையவரே வெல்வாராதலால் அவ்வித நற்குணங்களமைந்த வீரர்களுடையதாய் இருக்குமாயின் அதுவே அரண் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளில் நல்லாள் என்கின்ற வீரர் வேண்டும் என்று கூறுவதால், நல்லாளின் இலக்கணம் எதுவென்றும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

747. முற்றியு முற்றா தெறிந்து மறைப்படுத்தும்

பற்றற் கரிய தரண்.

(பரி.) இ-ள். முற்றியும்=புகலொடு போக்கொழியும் வகை நெருங்கிச் சூழ்ந்தும்—முற்றாது எறிந்தும்=அவ்வனஞ் சூழாது செறிந்த விடனோக்கி ஒருமுகமாகப் பொருதும்—அறைப்படுத்தும்=அகத்தோரை அவர் தெளிந்தோரை விட்டுக் கீழறுத்துத் திறப்பித்தும்—பற்றற்கு அரியது அரண்=புறத்தோரால் கொள்ளுதற்கரியதே அரணாவது. எ-று.

இம் மூன்றுபாயத்தானும் முதலாவது எல்லாப்பொருளு முடைமையானும், ஏனைய நல்லாளுடைமையானும், வாயாவாயின. (எ)

விளக்கம்:—உள்ளே வந்து நுழைதலும், வெளியே போதலும் இல்லா வகை நெருங்கிச் சூழ்ந்தும், அவ்விதம் சூழாது மன



மிளைத்தவிடத்தே அவ்விடம் நோக்கி ஒருமுகமாகச் சென்று யுத்தம் செய்தும், உள்ளிருப்பார்களில் உளவு தெரிந்தவரைக் கொண்டு மதிற்புறத்தின் கீழிடத்தை அறுத்துப் புறத்தவரால் அடையக்கூடாத வாயிலுள்ளதும் அரண் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், எல்லாப்பொருளும் உடைமையால் பகைவர் உள்நுழையா வண்ணமும், நுழைந்தபகைவர் வெளியேபோகா வண்ணமும் இருக்கச் செய்வதும் தம்படை சூழாது இளைத்த விடத்தே பகைவர் படைகள், முழுவதையும் ஒருங்கு திரட்டி யுத்தம் செய்யக்கூடியதும், பகைவரானவர் உளவு சொல்லக் கூடியவர்களைக்கொண்டு மதிலின் கீழினை அறுத்து சதி செய்தலும் இல்லாது காத்துப் பகைவரால் கொள்ளக் கூடாததாகிய தொழில்களைச் செய்யக்கூடியவராகிய வீரர்களை உடையதாய் இருக்கவேண்டுமென்றும், இவ்விதம் பொருளும் வீரரும் இருப்பாராயின் பகைவரால் கொள்ளக் கூடாமல் இருக்குமென்றும் அவ்வித அரணே அரசனுக்கு அரண் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இன்னும் அக்கல்லரண்களின் பெருமையை அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

748. முற்றாற்றி முற்றி யவரையும் பற்றாற்றிப்
பற்றியார் வெல்வ தரண்.

(பரி.) இ-ள். முற்ற ஆற்றி முற்றியவரையும்—தன்னைப் பெருமையாற் சூழ்தல் வல்லராய் வந்து சூழ்ந்த புறத்தோரையும்—பற்றியார் பற்று ஆற்றி வெல்வது அரண்—தன்னைப்பற்றிய வகத்தோர் தாம் பற்றியவிடம் விடாதே நின்று பொருது வெல்வதே அரணாவது; எ-று.

உம்மை சிறப்பும்மை பற்றின்கண்ணேயாற்றியென விரியும். பற்று ஆகுபெயர். வெல்வதென உடையார்தொழில் அரண்மேனின்றது. பெரும் படையானைச் சிறுபடையான் பொருது நிற்கும் துணையேயன்றி வெல்லு மியல்பின தென்பதாம். இதற்குப் பிறருரைப்பாரு முளர். இவை பெருபாட்டாலும் அரணிலக்கணங் கூறப்பட்டது. (அ)

விளக்கம் :—சேனைச்சிறப்பின் பலத்தால் சூழவல்லவராய் வந்து சூழ்ந்துகொண்ட புறத்தோராகிய பகைவரையும் தன்னைப் பற்றிய உள்ளிருப்போர் தாம் பற்றியவிடம் எதுவோ அவ்விடத்



தை விடாமல் நின்று யுத்தம் செய்து வெல்லக்கூடியதே அரண் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது பகை அரசர்கள் தங்கள் சேனையின் பலத்தால் தம்நாடுவிட்டுப் பிறநாட்டின்கண்ணே சென்று சூழ்ந்துகொள்ளும் காலத்துச் சிறுபடை உடைய அரசர்கள் தங்களுடைய அரண் வலிமையால் தாங்களிருந்த இடத்தி லிருந்து சிதறுபடாமல் பொருத்து நிற்பாராயின் பெரும் படை உடையாரும் இச்சிறு படையுடையாரை அரண் வலிமையால் வெல்வதற்கில்லாமல் போமென்றும், ஆதலால் அரணும், அதனுள் நின்ற வீரரும் சிறப்புடையராக இருத்தல் வேண்டும் என்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இதுகாறும் அரண் இலக்கணமறிந்தோம். இனி, அவ்வரணைக் காக்கின்ற வீரரது இயல்பை அறிய விரும்புகின்றோம்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

749. முனைமுகத்து மாற்றலர் சாய வினைமுகத்து
வீறெய்தி மாண்ட தரண்.

(பரி.) இ-ள். முனை முகத்து மாற்றலர் சாய வினைமுகத்து வீறு எய்தி=போர் தொடங்கின பொழுதே பகைவர் கெடும் வண்ணம் அகத்தோர் செய்யும் வினைவேறுபாடுகளான் வீறுபெற்று—மாண்டது அரண்=மற்றும் வேண்டுமாட்சியையுடையதே அரணாவது. எ-று.

தொடக்கத்திற் கெட்டார் பின்னுங் கூடிப் பொருதல் கூடாமையின்,

'முன்முகத் தச்சாய' என்றார். வினைவேறுபாடுகளாவன:—பகைவர் தொடங்கிய போரினையறிந்து எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதலென்றிவை முதலாய வினைகளும் அதனைச் சாய்ப்பனசெய்தல். மற்றும் வேண்டுமாட்சியென்றது புறத்தோரறியாமற் புகுதல், போதல் செய்தற்குக் கண்ட சுருங்கை வழி முதலாயின வுடைமை. (௯)

விளக்கம்:—போர் தொடங்கினவுடனே பகைவரானவர் கெட்டுப்போம்படி உள்ளிருப்பவர் செய்கின்ற யுத்த வேறுபாடுகளால் பலமுடையதாய் மற்றும் வேண்டிய பெருமைகளையும் உடையதே அரணாகுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, யுத்தம் தொடங்கிய உடனே பகைவர் கெடும்படி பலவித சூழ்ச்சிகளுடன் யுத்தத்தைச்செய்ய ஆரம்பிக்கின் அச்சூழ்ச்சிகளால் யுத்த ஆரம்பத்திலேயே கெட்டுப் போவார்களாயின், அவ்விதம் கெட்ட பகைவர்கள் மறுபடியும் போர்செய்தல் கூடாதென்றும், அவ்வித சூழ்ச்சிகளால் செய்யக்கூடிய வினை வேறுபாடுகள் பகைவரது தகுதிக்குத் தக்க அளவாகத் தெரிந்து வில்லால் எய்தலும், ஆயுதங்





களை எறிதலும், ஆயுதங்களைக்கொண்டு குத்துதலும், வாள் முதலியவை கொண்டு வெட்டுதலும் ஆகிய வினைகள் என்றும், பகைவர் அறியாமல் உள்ளே வருவதற்கும் வெளியே போவதற்கும் அமைத்துள்ள பல சுருங்கிய வழிகள் உள்ளனவாயிருத்தல் அரணுக்கு மாட்சி என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இன்னும் அக்காப்பாரின் தன்மையை அறிய விரும்புகின்றோம்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

750. எனைமாட்சித் தாகியக் கண்ணும் வினைமாட்சி
யில்லார்க ணில்ல தரண்.

(பரி.) இ-ள். அரண்—அரண்,—எனைமாட்சித்து ஆயினக் கண்ணும்=மேற் சொல்லப்பட்ட மாட்சியெல்லாமுடைத்தாய விடத்தும்,—வினைமாட்சி இல்லார்கண் இல்லது ''வினைசெய்தற்கண் மாட்சியில்லாதார்மாட்டு அமையிலதாம், எ-று.

வாளாவிருத்தலும் அளவறியாது செய்தலும் வலாது செய்தலுமெல்லாம் அடங்க 'வினைமாட்சியில்லார்' என்றும், பற்றவினையை யனட்டிக்கு

செய்து காவாக்கால் அம்மாட்சிகளாற் பயனின்றி யழியுமென்பார் 'அடையுடைத்தன்று' என்றுங் கூறினார். இவை யிரண்டு பாட்டானும் காப்பாரை யின்றியமையா தென்பது கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—மேற்கூறிய எல்லாப் பெருமைகளையும் உடையதாக அரணானது அமைக்கப்பட்டிருக்கினும், பகைவரிடத்து யுத்தம் செய்யும் போர் வீரர்களிடம் மாட்சிமையில்லாவிடத்து அப்பெருமைகளெல்லாம் பயனில்லாமற் போய்விடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேல் கூறிய பொறிகளையும், சுருங்கிய வழிகளையும், அகன்றும், உயர்ந்தும், வலிவுகொண்டும் எய்தற்கரிய அருமையுடையதும் ஆகிய எல்லாமிருக்கினும், அவ்வரணைக் காக்கின்ற காவலாளர்கள் தகுதியுடையவர்களாக இல்லாவிடில் பயனில்லாமற்போம் என்றமையால், அக்காவலாளர் அறிந்து செய்ய வேண்டுவனவற்றை விரைந்து செய்யாது சும்மா இருத்தலும் இதற்கு இவ்வளவு செய்யவேண்டுமென்று அளவினை அறியாது ஓர் வகைத்து மிகுதியாயும், ஓர் காலத்துக் குறைவாகச் செய்தலும், போர்க்கு உரியனவல்லாத வகைகளைச் செய்தலும் ஆகிய வீரரைப் பெற்றிருக்கின் அவர்கள் செய்யும் வினைகளால் யாதும் மாட்சிமைப் படாததுடன், அரணும் மாட்சிமைப்படாதென்றும், அவ்விதம் செய்த வீரரைக் காத்தற்கு யோக்கியமில்லாமல் அரணும்



அழிந்து போம் என்றும், அவ்வரண் எத்துணைப் பெருமை யுடையதாயினும் பயனில்லை என்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "காப்பார் அமையாவிடின் அரண் பயனில்லை என்று அறிந்தோம். இனி, இறைமாட்சியுள் கூறிய அங்கங்களுள் கூழ் என்னும் பொருளென்பதை அறிய விரும்புகின்றோம்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 76. அதிகாரம்.

## பொருள்செயல்வகை.

---

(பரி.) இனிப் பெரும்பான்மையும் காட்டானும் அரணானும் ஆக்கலாகவும் படுவதாய பொருளைச் செய்தலின் திறம் இவ்வதிகாரத்தாற் கூறுகின்றார்.

விளக்கம்:—அதாவது நாட்டில் உண்டாவதும், அரணால காக்கப்படுவதும ஆகிய பொருளை அரசன் அங்கங்கள் ஆறினுள் மூன்றாகச் சொல்லியிருப்பதால், இப்போது அப்பொருளைச் செய்கின்ற விதம் ஈதென்று அறிவித்தற்கு நாட்டையும், அரணையும் கூறியபிறகு பொருள்செயல்வகை என்று கூறுகின்றார் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பொருள் நில்லாதது என்று பன்முறை சொல்லக் கேட்டோம். ஆனால், அவ்விதப் பொருள் அரசனுக்கும் ஏனையோர்க்கும் இன்றியமையாததாக உள்ளதுபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

751. பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்.

(பரி.) இ-ள். பொருள் அல்லவரைப் பொருளாகச் செய்யும் பொருளல்லது=ஒருபொருளாக மதிக்கப்படாதாரையும் படுவோராகச் செய்யவல்லபொருளையொழிய—பொருள் இல்லை=ஒருவனுக்குப் பொருளாவதில்லை, எ-று.

மதிக்கப்படாதார்=அறிவிலாதார், இழிகுலத்தார். இழிவுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. மதிக்கப்படுவோராகச் செய்தல்=அறிவுடையாரும் உயர்குலத்தாரும் அவர்பாற்சென்று சிறப்புப் பண்ணுதல். அதனால் ஈட்டப்படுவது அதுவே பிறிதில்லை யென்பதாம். (க)

விளக்கம்:—உலகத்துப் பிறரால் ஒரு பொருளாக எண்ணி மதிக்கப்படாதவரையும் மதிக்கப்படுபவராகச் செய்ய வல்லதாகிய பொருளைக் காட்டிலும் வேறுபொருள் ஒருவனுக்குப் பொருளாக



இல்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அறிவில்லாதவரும், இழிகுலத்தவரும் ஆகிய மதிக்கப்படாதாரும் பொருளுடையவராக இருப்பாராயின் அவரிடத்து உள்ள பொருள் கருதி அறிவுடையவரும், வேறு குலத்தோரும் அவரிருக்குமிடம் சென்று அவர் கூறும்வரையில் உட்காராமல் நின்றுகொண்டே இருப்பதை நாம் காண்கின்றோமாதலால், அவ்வித பொருளை ஒருவன் சேர்ப்பதே பொருளென்றும் அப்பொருளல்லாமல் வேறு அறிவும், உயர்குலமும் கொண்டு தம்மை அதிகமாக எண்ணுவதால் பயனில்லை யென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அறிவுடையோரும், உயர் குலத்தோரும் பொருளுடையானிடத்துச் சென்று தாழ்ந்து நிற்பர் என்றமையால் செல்வம்

முன் இருக்குமாயின் அவர் அறிவில்லாதவரும், இழிகுலத்தோரா ரும் இருப்பதுடன் தீமையுடையாராக இருக்குங்காலத்தும் அச் செல்வரை அவரிடத்துள்ள தீமையைக் கருதாது மதிப்பரோ? நன்மையுடையாரைப் பொருளில்லாமை கருதி உயர்த்தாரோ?" என்னும், ஆசிரியர் கூறுவாராயினர்.

752. இல்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பு. *

(பரி.) இ-ள். இல்லாரை எல்லாரும் எள்ளுவர் = எல்லா நன்மையு முடையராயினும் பொருளில்லாரை யாவரும் இகழ்வர்;—செல்வரை எல்லாரும் சிறப்புச் செய்வர் = எல்லாத் தீமையு முடையராயினும் அஃதுடையாரை யாவரு முயர்த்துச்செய்வர். எ - று.

---

* இத்திருக்குறள் சேரமான் பெருமானாயனார் திருக்கைலாய ஞான உலாவில் எடுத்தாளப்பட்டுள்ளது. அஃதாவது:—

செக்கேழ்த் துவரைபோற் சேடியாரதிலை
வக்கேழிலைப் பிரயத்த—வொண்கேழ்
திக்களூர் தாரகையும் வில்லுஞ் செழும்பவளுக்
நக்கொளிசேர் செவ்வாய் முண்மையாற்—பொக்கொளிசேர்
மின்னுவான் காட்டு முகவொளியான் மெய்ம்மையே
நன்னுகரில்லாத் தகைமையா—லென்னாளு
மில்லாரை யெல்லாரு மெள்ளுவர் செல்வரை
யெல்லாருஞ் செய்வர் சிறப்பென்னுஞ்—சொல்லாலே



உயர்ச்செய்தல் = தாம் தாழ்ந்து நிற்றல். இகழ்தற்கண்ணும் தாழ்தற்கண்ணும் பகைவர், நட்டார், நொதுமலரென்னும் மூவகையாரு மொத்தலின், 'யாவரும்' என்றார். பின்னும் கூறியது அதனை வலியுறுத்தற் பொருட்டு. (உ)

விளக்கம்:—பொருளில்லாதோர் எல்லா நன்மைகளையும் உடையவராயினும் அவரை உலகத்தோர் யாவரும் இகழ்வரென்றும், செல்வமுடையவர் எல்லாத் தீமைகளையுமுடையவராயினும் அவரை உலகத்தார் யாவரும் உயர்த்திக் கூறுவரென்றும் இத்

எல்லாராலுஞ் சிறப்பிக்கப்படும் நந்தாவிளக்கு—எண்ணியதேயத்துச்சென்று இருள் அறுக்கும்=தன்னைச் செய்தவர்க்கு அவர் நினைத்த தேயத்துச் சென்று பகையென்னு மிருளைக் கெடுக்கும். எ-று.

எல்லார்க்கும் எஞ்ஞான்றும் இன்றியமையாததாய் வருதல் பற்றிப் 'பொய்யாவிளக்கம்' என்றும், பிறவிளக்கோடு இதனிடை வேற்றுமை தோன்ற 'எண்ணியதேயத்துச்சென்று' என்றும் கூறினார், ஏகதேசவுருவகம். இவை மூன்று பாட்டானும் பொருளது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

விளக்கம்:—எல்லாராலும் சிறப்பிக்கப்படும் பொருளாகிய கெடாத விளக்கு அப்பொருளைச் செய்தவர்க்கு அவரெண்ணிய தேயத்திற் சென்று பகையென்னும் இருளைக் கெடுக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், எவ்வித தகுதியுடையார்க்கும், எக்காலத்தும் இல்லாது முடியாததாய் வருகின்ற பொய்யாத விளக்கென்னும் பொருளானது மற்றைய விளக்குகள்போல் தன்னிடத்தே மாத்திரம் எரிந்து ஒளி தருவதுபோல் இல்லாது, நினைத்த இடங்களிலெல்லாம் சென்று பொருளுக்கு உரியானாகிய இவனுடைய ஒளியைப் பரப்புகின்றதென்று அறிகின்றோம். ஆதலால், மற்றைய ஒளிகள்போலல்லாது பிறநாட்டிலும் சென்று புகழை அடைவிக்கக்கூடியது பொருளென்று கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் யாவராலும் எக்காலத்தும் புகழ்பெறக்கூடிய பொருளை எவ்விதமேனும் சேர்த்துவிடுதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

754. அறனீனு மின்பமு மீனுந் திறனறிந்து
தீதின்றி வந்த பொருள்.

(பரி.) இ-ள். திறன் அறிந்து தீது இன்றி வந்த பொருள்=செய்யுந் திறத்தினையறிந்து அரசன் கொடுங்கோன்மையின்றி உளதாயபொருள்—அறன் ஈனும் இன்பமும் ஈனும்=அவனுக்கு அறத்தையும் கொடுக்கும், இன்பத்தையும் கொடுக்கும். எ-று.

செய்யுந்திறம் = தான் பொருள்செய்தற்குரிய நெறி. இலதுடையென்பது இன்றியெனத் திரிக்கின்றது. செங்கோலனென்று புகழ்ப்படுதலானும், கடவுட்பூசை தானங்களாற் பயனெய்தலானும் 'அறனீனும்' என்றும், நெடுங்காலநின்று துய்க்கப்படுதலான், 'இன்பமுமீனும்' என்றுங் கூறினார். அதனுள் அத்திறத்தானீட்டுக வென்பதாம். (௫)

விளக்கம்:--அரசன் கொடுங்கோலனாக இல்லாது செய்ய வேண்டிய கருவிகளை அறிந்து தேடிய பொருள் அவ்வரசனுக்கு அறத்தையும் இன்பத்தையும் கொடுக்குமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசன் தான் பொருளைத் தேடுதற்கு உரிய நெறியினின்றும் சிறிதும் விலகாதவனாய்ப் பொருளைத் தேடுதல் வேண்டுமென்றும், அவ்விதம் செங்கோலனாக நின்று தேடிய பொருள் செங்கோலனென்று இம்மையில் புகழைத்தரும் என்றும், அவ்விதம் தேடிய பொருளை கடவுட் பூசைக்கும் தானங்களுக்கும் செலவழிப்பானாயின் அதனாலாய பயன் இம்மை, மறுமை, வீடென்கின்ற மூன்றையும் தரும் அறத்தைக் கொடுக்குமென்றும், அவ்வறத்தைப் பெறுதல் மாத்திரமல்லாமல் "செப்ப முடையவனாக்கஞ் சிதைவின்றி, எச்சத்திற்கேமாப் புடைத்து" *என்னும் நடுநிலைமை என்னும் அதிகாரத்தில் கூறிய திருக்குறளின்படி பொருள் தேடிய இவன் நெடுங்காலம் நிலைபெற்றிருந்து அனுபவித்து இன்பத்தை அடைவனாதலால், இன்பத்தைத் தருமென்றும் அறிகிறோம். இதனை,

"வடுவிலா வையத்து மன்னிய மூன்றின்
நடுவண தெய்த விருதலையும்—எய்தும்
நடுவண தெய்தாதா னெய்து முலைப்பெய்
தடுவது போலுந் துயர்." †

என்னும் நாலடிச் செய்யுளே இதை நாட்டும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் அறத்தின் வழியாய்ப் பொருள் சேர்க்க முயலல் வேண்டும் என்றீர். இவ்விதம் வாராது வேறு வழியில் பொருள் வருமாயின் அதனை ஏற்றுக் கொள்ளல் ஆகாதோ?" என்ன

னும், ஆசிரியர் கூறுவாராயினர்.

* திருக்குறள், 112.
† நாலடியார், மெய்ம்மை, 114.



755. அருளொடு மன்பொடும் வாராப் பொருளாக்கம்
புல்லார் புரள விடல்.

(பரி.) இ-ள். அருளொடும் அன்பொடும் வாராப் பொருள் ஆக்கம் = தான்குடிகண்மாட்டுச் செய்யுமருளோடும் அவர் தம்மாட்டுச் செய்யுமன்போடும் கூடி வாராத பொருளீட்டத்தை—புல்லார் புரளவிடல் = அரசர் பொருந்தாது கழியவிடுக. எ-று.

அவற்றோடு கூடிவருதலாவது:—ஆறிலொன்றும் வருதல். அல்லாது வாராத பொருளீட்டம் பசுமட்கலத்துணீர்போலச் செய்தானையுங்கொண் டிறத்தலின், அதனைப் புல்லார் என்றொழியாது 'புரளவிடல்' என்றுங் கூறினார். (ரு)

விளக்கம்:—அரசன் தான் குடிகளிடத்துச் செலுத்துகின்ற அருள் தன்மையோடும், அக்குடிகள் அரசனிடத்துச் செய்யும் அன்போடும் கூடிவாராத பொருளின் தொகுதியை ஏற்றுக் கொள்ளாமல் கழியவிடல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசர் பொருள் சேர்க்கும் வழியாவது குடிகளிடத்தே ஆறில் ஒன்று வாங்குதல். ஆறிலொன்றாவது:—இல்லறத்தார்க்கு வகுத்த தென்புலத்தார், தெய்வம், விருந்து, சுற்றத்தார், தான் என்கின்ற ஐவர்க்கும் ஐந்து பங்கினை எடுத்துக்கொண்டு ஒரு பங்கினை அரசனுக்குக் கொடுத்தல். அவ்விதம் குடிகள் தங்களுக்கு வரும் வருவாயை ஆறுபங்குகளாக்கி ஒன்றினை அரசனுக்குக்கொடுக்கும் காலத்து அன்போடு தருதல் வேண்டுமென்றும், அவ்விதம் அன்போடு வந்த பொருளை எல்லா உயிர்களையும் ஒன்றென்று

பார்க்கும் கடமையுடைய அரசன் அருளோடு ஏற்று அப்பொருளை மேற்கூறிய வண்ணம் அறத்திற்கும், இன்பத்திற்கும் செலவிடல் வேண்டும் என்று அறிந்தோம். ஆதலால், நல்வழியில் வாராது அதற்கு மாறுபட்ட தீயவழியில் வரும் பொருளை அரசன் கொள்ளாது கழித்துவிடுதல்வேண்டும் என்றும் அறிகின்றோம் என்றார். அது கேட்ட மாணாக்கர், "அரசன் குடிகளிடத்தில் எவ்வெவ்வழியாகப் பொருளை அடைதல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறலானார்.

பொருள்செயல்வகை 398

**756. உறுபொருளு முல்கு பொருளுந்தன் னொன்னார்த்**
**தெறுபொருளும் வேந்தன் பொருள்.**

(பரி.) இ-ள். உறு பொருளும் = உடையாரின்மையிற் றானே வந்துற்ற பொருளும் — உல்கு பொருளும் = சுங்கமாய பொருளும் — தன் ஒன்னார்த் தெறுபொருளும் = தன் பகைவரைத் திறையாகக்கொள்ளும் பொருளும் — வேந்தன் பொருள் = அரசனுக்குரிய பொருள்கள். எ-று.

உறுபொருள் = வைத்தாரிறந்துபோக நெடுங்காலம் நிலத்தின்கட் கிடந்து பின் கண்டெடுத்ததூஉம், தாயத்தார் பெறுவதூஉமாம். சுங்கம் = நிலத்திலும் நீரினும் வரும் பண்டங்கட்கிறையாயது. தெறுபொருள் = தெறுதலான் வரும் பொருளென விரியும். ஆறிலொன்றொழியவும் உரியன கூறியவாறு. இவை மூன்றுபாட்டானும் அஃதீட்டுநெறி கூறப்பட்டது. (சு)

விளக்கம்:—உடையாரில்லாமையால் தானே வந்து சேர்கின்ற பொருளும், சுங்கத்தால் வருகின்ற பொருளும், தன்னுடைய பகைவரைத் தனக்குக் கீழ்ப்படியச் செய்து அவரிடத்தே வாங்குகின்ற பொருளும் அரசனுக்கு உரிய பொருள் ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேற்கூறிய வண்ணம் குடிகளால் செய்யப்படும் உழவுமுதலிய தொழில்களால்வரும் பொருள்கள் ஆறிலொரு கடமையாக அரசனைச் சேருவதுடன், எவரேனும் தம்முடைய பொருளை நிலத்தின் கண் புதைத்து வைத்து, அவ்வைத்தவர் இறந்துபோக நெடுங்காலம் புதைத்த அந்நிலத்திலேயே கிடந்து பின்னர் ஒரு காலத்து கண்டு எடுக்கப்படுமாயின்

அவ்வித புதையல் பொருளும், பெரும் பொருள் படைத்தவர் இறந்து போக அப்பொருளை அடைய தாயத்தாராகிய பங்காளிகள் இல்லாவிடில் அவ்வித பொருளும், கப்பலிலும், வண்டி முதலியவைகளிலும் வருகின்ற பொருள்கள் மீது சுமத்திய சுங்கத்தால் வருகின்ற பொருளும், பகைவர்களை வெற்றி கொள்வதால் அப்பகைவர் கொடுக்கின்ற கப்பமாகிய பொருளும் ஆகிய இவை யெல்லாம் அரசனுக்கு உரியனவாகும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பொருளுக்கு உரிய சிறப்பினையும் அதைச் சேர்க்கும் வழியும், அப்பொருளால் வரும் அறத்தையும், இன்பத்தையும் அறிந்தோம். ஆயின் இப்பொருள் இல்லறத்தாரா

60



கிய மக்கள் தம் தொடர்புடையவரிடத்துச் செலுத்தும் அன்பினை வளர்ப்பதற்கு மாத்திரம் துணையாகும் போலும்! இப்பொருளால் அன்பிற்கு மேற்பட்ட அருளை அடைதற்கு முடியாதுபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

757. அருளென்னு மன்பீன் குழவி பொருளென்னுஞ்
செல்வச் செவிலியா லுண்டு.

(பரி.) இ-ள். அன்பு ஈன் அருள் என்னும் குழவி=அன்பினாலீனப் பட்ட அருளென்னும் குழவி—பொருள் என்னும் செல்வச் செவிலியால் உண்டு=பொருளென்று உயர்த்துச் சொல்லப்படுஞ் செல்வத்தையுடைய செவிலியான் வளரும். எ-று.

தொடர்புபற்றாதே வருத்தமுற்றார்மேற் செல்வதாய அருள் தொடர்பு பற்றிச் செல்லுமன்பு முதிர்ந்துழி உளதாவதாகலின், அதனை 'அன்பீன் குழவி' என்றும், அது வறியார்மேற் செல்வது அவ்வறுமை களையவல்லார்க் காதலிற் பொருளை அதற்குச் 'செவிலி' என்றும், அஃது உலகிற் செவிலியர் போலாது தானே யெல்லாப்பொருளு முதவி வளர்த்தலிற் 'செல்வச் செவிலி' என்றுங் கூறினார். (எ)

விளக்கம் :—அன்பென்னும் தாயால் பெறக் கூடிய அருளென்னும் குழந்தையானது எவராலும் உயர்த்திச் சொல்லப்படும்

பொருளென்னும் செல்வத் தாயால் உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அன்பென்கிறது மனைவி, தாய், தந்தை, மக்கள், சுற்றத்தவர் என்னும் சம்பந்தமுடையவரிடத்தே செல்லுகின்ற ஆசையென்றும், அவ்விதம் செல்லுகின்ற ஆசையானது பின்னர் வறியார் மாட்டும் ஏனைய உயிர்களிடத்தும் சென்று அருளாவதற்குப் பொருள் உடையவனுக்கே ஆகுமாதலால் அவ்வித பொருளைச் செல்வத்தாயென்றும், அச்செல்வத்தாயால் உண்டாகின்ற அருளினை அன்பால்பெறப்பட்ட குழந்தையென்றும் விளக்கிக் கூறியதாக அறிகின்றோம். ஆதலால், பொருளால் ஒருவன் வீட்டினை அடையக் கூடிய அருளையும் அடைதல் கூடுமென்றும், அப்பொருளே இம்மை, மறுமை, வீடாகிய மூன்றிற்கும் காரணமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "உலகத்து உள்ள மற்று எத்தகைய தாய்மார்களைக் காட்டிலும் இச்செல்வத்தாய்



எல்லா நன்மைகளையும் உண்டாக்குவாள் என்று அறிந்தோம். இனி, அவ்விதம் பொருளுடையான் ஒருவன் யாதொரு தொழிலையும் யாதொரு வருத்தமுமில்லாமல் முடித்து விடுதல் கூடும்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

758. குன்றேறி யானைப்போர் கண்டற்றாற் றன்கைத்
துண்டாகச் செய்வான் வினை. [தொன்

(பரி.) இ-ள். தன் கைத்து உண்டாக ஒன்று செய்வான் வினை = தன் கையதாகிய பொருளுண்டாக ஒரு வினையை யெடுத்துக்கொண்டான் அதனைச் செய்தல்—குன்று ஏறி யானைப்போர் கண்டற்று = ஒருவன் மலைமேலேறி நின்று யானைப்போரைக் கண்டாலொக்கும். எ-று.

ஒன்றென்பது வினையாதல் செய்வா னென்றதனாற் பெற்றும். குன்றேறியவன் அச்சமும் வருத்தமுமின்றி யுயர்விடை யானையும் யானையும் பொருபோரைத் தானினிதிருந்து காணுமதுபோலக், கைத்துண்டாக வினையை மேற்கொண்டானும் அச்சமும் வருத்தமுமின்றி யவ்வினையையெளிதிற் றானினிதிருந்து முடிக்கு மென்பதாம். (அ)

விளக்கம் :—தன் கையில் பொருளிருந்து ஒரு காரியத்தைச் செய்ய எடுத்துக்கொண்ட ஒருவன் அதனைச் செய்து முடித்தல்

ஒருவன் யானைச் சண்டையைக் காணவேண்டி மலையின் மீதேறிப் பார்ப்பது போலிருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, இரண்டு யானைகள் ஒன்றோடொன்று போர் செய்யும் காலத்து அச் சண்டையைக் காணவெண்ணிய ஒருவன் ஓர் மலைமீது ஏறிப் பார்க்கப் புகுந்தால் எவ்விதம் யாதொரு அச்சமும் வருத்தமும் இல்லாமல் அச் சண்டையைக் கண்டு களிப்பானோ அது போல் ஒரு தொழிலை மேற்கொண்டவனும் அக்காரியத்திற்கு வேண்டிய பொருளைத் தன் கையில் உடையவனாக இருந்து செய்வானாயின் யாதொரு அச்சமும் வருத்தமுமில்லாமல் அவ்வினையை முடிக்கும் வல்லவர்களை எளிதில் அதை முடிக்கும்படிச் செய்து தானிருந்தவிடத்தில் இனிமையுடனிருத்தல் கூடும் என்று அறிவீர்களாம். ஆதலால், பொருளைப் படைத்த ஒருவன் பொருள் படைத்த தகுதியால் எவ்வித காரியத்தையும் யாதொரு வருத்தமுமில்லாமல் இனிதுபட முடிப்பானென்றும், எதற்கும் பொருளே காரணமென்



றும் அறிகிறோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் பொருள் படைத்து நிற்பதால் எண்ணிய கருமம் இனிது முடியு மென்று அறிந்தோம். ஆயின், இப்பொருள் கொண்டு பகைவரை அடக்குதல் கூடுமோ ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

759. செய்க பொருளைச் செறுநர் செருக்கறுக்கு
மெஃகதனிற் கூரிய தில்.

(பரி.) இ-ள். பொருளைச் செய்க = தமக்கொன்றுண்டாகக் கருதுவார் பொருளையுண்டாக்குக ;—செறுநர் செருக்கு அறுக்கும் எஃகு = தம்பகைவர் தருக்கினையறுக்கும் படைக்கலம் அதுவாம் ;—அதனிற் கூரியது இல் = அதற்கதுபோலக் கூரிய படைக்கலம் பிறிதில்லை. எ-று.

அதுவாம் அதற்கென்பன அவாய்நிலையான் வந்தன. பொருளைச் செய்யவே பெரும்படையும் நட்பு முடையராவர்; ஆகவே, பகைவர் தருக்கொழிந்து தாமேயடங்குவரென்பார் 'செறுநர்செருக்கறுக்குமெஃகு' ஆமென்றும், ஏனை யெஃகுகள் அதுபோல அருவப்பொருளை யறுக்கமாட்டாமையின் 'அதனிற் கூரியதில்' என்றும் கூறினார். (கூ)

விளக்கம் :—தமக்கு ஓர் புகழ் உண்டாக என்னுபவர்

பொருளை உண்டாக்குதல் வேண்டுமென்றும், அப்பொருள் ஒன்றே பகைவரது கர்வத்தை அடக்கும் ஆயுதமென்றும், அவ்விதம் பகைவர் கர்வத்தை அடக்கக்கூடிய ஆயுதங்களுள் இப்பொருள் போன்ற கூர்மையுடையது வேறு ஒன்றுமில்லை என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பொருளை மிகுதியும் படைத்தான் ஒருவனுக்கு நிலைப்படை முதலாகிய பெரும்படைகளும், நன்னெறி அடையச் செய்யும் நட்பினரும் உண்டாவாரென்றும், அவ்விதம் உண்டாதலைக் கண்ட பகைவர் தாம் கொண்டிருந்த தருக்கு நீங்கி யுத்தம் செய்து அடக்காமலே தாமே அடங்கி விடுவர் என்றும், அதனுடன் கர்வமென்னும் அருவப்பொருளை அடக்குவதற்கு இப்பொருள் ஒன்றே கருவியென்றும், ஏனைய கூர்மையுடைய கருவிகளெல்லாம் புறத்தே உள்ள உருவப்பொருளை அறுக்குமே அன்றி ஒருவன் மனத்தே உள்ள அருவப்பொருளாகிய செருக்கினை அறுப்பதற்கு முடியாவென்றும், ஆதலால் பொருள் படைத்தோன் ஒருவன் தன் பகைவரது கர்வத்தைத் தான் ஒன்றும் செய்யாமலே



அடக்கிவிடுதல் கூடும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் பொருள் படைத்தவன் ஒருவனுக்கு எல்லாம் தானே வந்து அடையும் என்று அறிந்தோம். இப்பொருளால் அறத்தையும் இன்பத்தையும் அடைதல் கூடும்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

760. ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க் கெண்பொரு
ளேனை யிரண்டு மொருங்கு.

(பரி.) இ-ள். ஒண்பொருள் காழ்ப்ப இயற்றியார்க்கு = நெறியான்வரும் பொருளை இறப்ப மிகப் படைத்தார்க்கு — ஏனை இரண்டும் ஒருங்கு எண் பொருள் = மற்றை அறனும் இன்பமும் ஒருங்கே எளிய பொருள்களாம். எ-று.

காழ்த்தல் = முதிர்தல். பயன்சொல்லத் தகுவது போகாமையின் 'ஒண் பொருள்' என்றும். ஏனையிரண்டும் அதன் விளைவாகலின் முயலாமலே எளிதின் முடியுமென்பார் 'எண்பொருள்' என்றுங் கூறினார். இவை நான்கு

பாட்டாலும் அதனான் வரும் பயன் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—நன்னெறியில் வந்த பொருளை அளவிறந்து உடையவர்க்கு மற்றைய அறப் பொருளும், இன்பப் பொருளும் உண்டாவது மிக எளிமையென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பொருளைத் தேடுங்காலத்து பழியஞ்சிச் சம்பாதித்தல் வேண்டுமென்றும், அவ்விதம் பழியஞ்சிச் சம்பாதித்த பொருளானது ஒருவனுக்கு மிகுதியாக உண்டாகுமாயின், அப்பொருளால் அறத்தையும், இன்பத்தையும், அவன் வருந்தாமலே மிக எளிமையாக ஒருங்கே அடைதல் கூடுமென்றும் அறிந்தோம். ஆதலால், பொருளுடையான் ஒருவனுக்கு அறம், இன்பம் என்கின்ற இரண்டையும் அடைவது சுலபமென்றும், அவனே உலகத்து மக்களால் புகழப்பட்டவனென்றும், ஆகையால் பொருளை, செய்ய வேண்டிய விதத்து விடாதுசெய்து எல்லா நன்மைகளையும் அடைய வேண்டுமென்றும், அவ்விதம் பொருள் செய்தல் அரசன் அங்கங்களில் ஆறினுள் ஒன்றாக இருக்கினும் மற்றையயாவர்க்கும் பொதுப் படக் கூறப்பட்டிருக்கிறதென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "பொருள் செய்யும் விதமும் பொருளால் வரும் பயனும் இவையென்று நன்கு அறிந்தோம். இனி, அரச



னுக்கு உரிய ஏனைய அங்கங்களின் மாட்சிமையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 77. அதிகாரம்.

### படைமாட்சி.

(பரி.) இனி அப்பொருளினாகுவதாய வெல்வதாய படை இரண்டதிகாரத்தாற் கூறலான்றொடங்கி, முதற்கட் படைமாட்சி கூறுகின்றார். அஃதாவது படையினது நன்மை.

விளக்கம்:—அதாவது, முன்னர் பொருள் இருக்குமாயின் பெரும்படை உண்டாகும் என்றபடி பொருள் கொண்டு படைப்பதாகிய வெல்லக்கூடிய தகுதியுடைய படை என்னுமங்கத்தை இரண்டு அதிகாரங்களால் சொல்லத்தொடங்கி முதலாகப் படையினது நன்மை இதுவென்று அறிவிக்கும் படைமாட்சி யென்பதை இங்குக் கூறுகின்றார் என்றனர். அதுகேட்டமாணாக்கர், "படையினது நன்மை யென்று மொன்று உண்டுபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

761. உறுப்பமைந் தூறஞ்சா வெல்படை வேந்தன்
வெறுக்கையு ளெல்லாந் தலை.

(பரி.) இ-ள். உறுப்பு அமைந்து ஊறு அஞ்சா வெல்படை = யானை முதலிய நான்குறுப்பானும் நிறைந்து போரின்கண் ஊறுபடுதற்கஞ்சாது நின்று பகையை வெல்வதாய படை—வேந்தன் வெறுக்கையுள் எல்லாம் தலை = அரசன் செல்வங்களெல்லாவற்றுள்ளுந் தலையாய செல்வம். எ-று.

வென்றிப்படையென்றது அச்சாரன்கன்றெருதிலை. ஊறஞ்சியவழி வேறல் கூடாமையின் 'ஊறஞ்சா' என்றும், ஒழிந்தவெல்லாங்கெட்டும் அரசன்றனக்குக் காவலாகலின் 'வெறுக்கையுளெல்லாந்தலை' என்றுங் கூறினார். (க)

விளக்கம்:—யானைப்படை முதலிய நான்கு உறுப்புகளாலும் நிறையப்பெற்று யுத்தத்தின்கண் அஞ்சாது நின்று எதிர்த்த பகைவரைவெல்லக்கூடிய படையானது அரசன் ஒருவனுக்குக் கிடைக்குமாயின் அவ்வித படையே அரசனுக்கு உள்ள செல்வங்கள் எல்



லாவற்றிலும் முதன்மையாகிய செல்வம் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, யானை, தேர், குதிரை, காலாள் என்கின்ற நான்குவித படைகளும் ஒருவனுக்குஅமையப்பெறுவதுடன் அவ்விதம் அமைந்த படையானது பகைவர் மீது யுத்தத்திற்குச் செல்லும் காலத்துப் பகைவரால் எய்தல், எறிதல், குத்துதல், வெட்டுதல் என்ற கருவிகளால் உண்டாகும் காயங்களுக்குப் பயந்து ஓடாது நிலைத்து நின்று பகைவரோடு போர் செய்து அப்பகைவரை

வெல்லக்கூடிய தகுதியோடு இருக்குமாயின் அப்படையைக் காட்டிலும் வேறு சிறந்த செல்வம் வேண்டாமென்றாம், ஏனெனில்? இனைய செல்வங்களை எல்லாம் காப்பதும் அரசனைக் காப்பதும் படையாதலால் அப்படையைக் காட்டிலும் சிறந்த செல்வம் இல்லை என்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "பகைவர் மீது போர்க்குச் சென்ற படைவீரர் கருவிகளால் தாக்கப்பட்ட காலத்தும் எவ்விதம் அஞ்சாதிருத்தல் கூடும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

762. உலைவிடத் தூறஞ்சா வன்கண் தொலைவிடத்துத்
தொல்படைக் கல்லா லரிது.

(பரி.) இ-ள். தொலைவிடத்து உலைவிடத்து ஊறு அஞ்சா வன்கண் = தான் சிறிதாய வழியும் அரசற்குப் போரின்கண் உலைவுவந்தால் தன்மேலுறுவதற்கஞ்சாது நின்று தாங்கும் வன்கண்மை—தொல்படைக்கல்லால் அரிது = அவன் முன்னோரைத் தொடங்கிவரும் படைக்கல்லது உளதாகாது. எ-று.

இதுவும் சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. மூலப்படை, கூலிப்படை, நாட்டுப்படை, காட்டுப்படை, துணைப்படை, பகைப்படையென்னும் அறுவகைப் படையுள்ளுஞ் சிறப்புடையது மூலப்படை யாகலான், அதனை அரசன் "வெல்பொறிய சாடும் விழுப்பொருளுந் தன்னடையும்—கொல் களிறுமாவுங் கொடுத்தளிக்க"* என்பது குறிப்பெச்சம். இப்படையை வடநூலார் 'மௌலம்' என்ப. (உ)

விளக்கம்:—அரசன் படையானது சிறிதாக இருப்பினும், தன்னைக் காவலாக அடைந்துள்ள அரசனுக்கு யுத்தத்தின்கண் துன்பம் வருமாயின் அக்காலத்துப் பகைவரால் செய்யும் துன்பத்



திற்கெல்லாம் அஞ்சாது நிலைபெற்று யுத்தம் செய்து தாங்குகின்ற அஞ்சாத வீரத்தன்மையை அவ்வரசனது முன்னோர் காலம் தொடங்கி இருந்து வரும் பழமையாகிய படைக்கேயுண்டாகுமன்றிப் புதிதாகச் சேர்க்கும் படைக்கு உண்டாகாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மூலப்படை யென்றும், கூலிப்

படையென்றும், நாட்டுப்படையென்றும், காட்டுப் படையென்றும், துணைப்படையென்றும், பகைப்படையென்றும் உள்ள படைகளுள் முதலாவதாகக் கூறப்பட்ட மூலப்படையே சிறந்ததென்றும், அப்படையொன்றே யுத்தகளத்தில் புறமுதுகு இடாது யுத்தஞ்செய்து பகையை வென்று அரசனைக் காக்குமென்றும், அவ்விதம், காப்பது பண்டைக்காலந்தொட்டு வழிவழியாக வருகின்ற படைக்கலப் பயிற்சியாலும், வீரத்தாலும், அரசனிடத்தே உள்ள அன்பினாலும் நிகழுமென்றும், ஏனைய படைகளாகிய கூலிக்குச் சண்டை செய்வதும், நாடு ஒன்றினையே காப்பதும், காடு ஒன்றனையே காப்பதும், துணையாக வருவதும், பகைவர் வாராவண்ணம் தடுப்பதும் ஆகிய படைகள் எல்லாம் அவ்விதம் வீரத்தோடு போர் புரிதல் கூடாதென்றும் அறிந்தோம். இதனை வெண்பாமாலை, தும்பைப் படலத்துள்,

"வெல்பொறிய நாடும் விழுப்பொருளுந் தன்னுடையுங்
கொல்களிறு மாவுங் கொடித்தேரும் — பல்புரவி
நன்மணித் திண்டேர் நயவார் தம்பணிப்பா
பன்மணிப் பூணான் படைக்கு"*

என்று கூறியுள்ளதாலும் அறிதல்கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மூலப்படையல்லாத வேறுபடைகள் வெல்லா என்றமையால் ஏனைய படைகள் எல்லாம் ஒன்று சேருமாயின் அம்மூலப் படைசெய்யும் வெற்றியை உண்டாக்காவோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

763. ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை
நாக முயிர்ப்பக் கெடும்.

(பரி.) இ-ள். எலிப்பகை உவரி ஒலித்தக்கால் என்னும் = எலியாய பகை திரண்டு கடல்போலவொலித்தால் நாகத்திற்கு என்ன ஏதம் வரும்! — நாகம் உயிர்ப்பக் கெடும் = அந்நாக முயிர்த்த துணையானே அதுதானே கெடும், எ-று.



உவமைச்சொற் றொக்குநின்றது. இத்தொழிலுவமத்தாற் றிட்பம்பெற்றும். வீரரல்லாதார் பலர் திரண்டார்த்தால் அதற்கு வீரனஞ்சான், அவ்

சேர்ந்ததுணையானே அவர் தாம்கெடுவரென்பது தோன்ற நின்றமையின், இது பிறிதுமொழிதலென்னு மலங்காரம். வீரரல்லாதார் பலரினும் வீர னொருவனே யமையு மென்பதாம். இவை மூன்றுபாட்டானும் முறையே அரசனுக்குப் படை ஏனையங்கங்களுட் சிறந்ததென்பதூஉம், அது தன்னுள் ளும் மூலப்படை சிறந்ததென்பதூஉம், அது தன்னுள்ளும் வீரன் சிறந்தா னென்பதூஉங் கூறப்பட்டன. (௩)

விளக்கம்:—எலிகளெல்லாம் திரண்டு நாகம் ஒன்றிற்குப் பகை யாகி அந்நாகத்தின் எதிரே சமுத்திரத்தைப் போலக் கூச்சலிட்டா லும் அவ்வெலிகளின் கூச்சல் அந்நாகத்திற்கு ஒரு துன்பத்தையும் செய்யாதென்றும், அந்நாகம் ஒன்றாயிருக்கினும் அது மூச்சு விடுமா யின் எண்ணிறந்தனவாகிய அவ்வெலிகள் இறந்துபோம் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, படைக்களத்தில் புறமுது கிடாத வீரர் அல்லாதார் பலர் ஒன்று கூடி தம் வீரத்தைக் காண்பிப்பதுபோல் இரைச்சலிட்டாலும் வீரமுள்ள ஒருவன் அவ்விரைச்சலுக்குப் பயப்படமாட்டானென்றும், அவன் கொஞ்சம் தன்னுடைய வீரத்தைக் காண்பிக்கப் புகுவானாயின் வீரரல்லாதார் பலரும் தாமே கெட்டுப் போவரென்றும் அறிவதுடன், வீரரல்லா தார் பலரை அரசன் தனக்குப் படைத்துணையாகப் பெற்றிருப்பதி னும் வீரமுள்ளவன் ஒருவனை வைத்துக்கொண்டு இருப்பது போதுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இதுவரையும் அரசனுக்கு உரிய ஆறு அங்கங்களுள் படை யென்பது சிறந்தது என்பதும், அப்படையுள் மூலப்படை சிறந்த தென்பதும், அம்மூலப்படையுள்ளும் வீரமுள்ள ஒருவன் இருப்பது சிறப்பு என்பதும் அறிந்தோம். இனி, படையினது இலக்கணம் இதுவென்றறிய விரும்புகின்றோம்?" என்னலும், ஆசி ரியர் கூறுவாராயினர்.

764. அழிவின் றறைபோகா தாகி வழிவந்த
வன்க ணதுவே படை.

(பரி.) இ-ள். அழிவு இன்று=போரின்கட்கெடுதலின்றி—அறைபோ காதாகி=பகைவரால் வேறாக்கப்படாததாய்—வழிவந்த வன்கணதுவே

படை = தொன்றுதொட்டுவந்த வன்கண்மையையுடையதே அரசனுக்குப் படையாவது. எ-று.

அழிவின்மையான் மறமானங்களுடைமையும், அறைபோகாமையான் அரசன்மாட் டன்புடைமையும் பெறப்பட்டன. வழிவந்த வன்கண்மை "கன்னின் றானெந்தை கணவன் களப்பட்டான்—முன்னின்று மொய்ம்ப விந்தா ரென்னையர் - பின்னின்று—கைபோய்க் கணையுதைப்பக் காவலன் மேலோடி—யெய்போற் கிடந்தானென் னேறு" * என்பதனா னறிக. குற்றிய லுகரத்தின் முன்னர் உடம்படுமெய் விகாரத்தான் வந்தது. இது வருகின்ற பாட்டிற்கு மொக்கும். (௪)

விளக்கம்:—அரசனுக்குப் படையென்று கூறுவது யுத்த களத்தில் கெட்டுப் போகாததும், பகைவரால் குழிபோடு கெடுக்கப்படாததும், தலைமுறையாக வந்த அஞ்சாத வீரத்தன்மையுடையதும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, வீரத் தன்மையும், பழிக்கு அஞ்சுகின்ற மானமும் ஆகிய இரண்டுடனே இருக்குமாயின் அவ்வித படையானது யுத்தத்தின் கண் கெட்டுப் போகாதென்றும், அரசனிடத்து அன்புடைய படையாயிருக்குமாயின் பகைவரின் சூழ்ச்சியால் கெடுக்கப்படாதென்றும், சந்ததி சந்ததியாக அரசனது வீரர்களாயிருந்தவர்கள் வழிவந்தவர்களாக இருந்தால் அவர்களே யுத்தகளத்தில் அஞ்சாது போரிடுவரென்றும் படையின் இலக்கணத்தை அறிந்தோமென்றனர். இதனைப் பரிமேலழகர் எடுத்துக் காட்டிய வெண்பாமாலை, வாகைப்படலம் 22-வது செய்யுளாலும் அறிதல்கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பகைவர் எதிர்த்த காலத்து கெடாதிருப்பது எவ்விதம்? வீரமும், புகழும் இருக்கினும் பொறுக்கும் வரையில் பொறுத்தல் கூடுமேயன்றி உயிர்க்குத் துன்பம் வருங்காலத்தும் பொறுத்தல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

765. கூற்றுடன்று மேல்வரினுங் கூடி யெதிர்நிற்கு
மாற்ற லதுவே படை.

(பரி.) இ-ள். கூற்று உடன்று மேல்வரினும் = கூற்றுவன் தானே வெ

குன்று மேல் வந்தாலும்—கூடி எதிர்நிற்கும் ஆற்றலதுவே படை=செஞ்

* வெண்பாமாலை, வாகைப்படலம் 22.



சோத்து எதிர்நின்று தாக்கு மாற்றலை யுடையதே படையாவது. எ-று.

மருத்தில் கூற்றுகலின் * உம்மை சிறப்பும்மை. மிகப்பலர் செஞ்சோத் தற்குக் காரணம் அரசன்மே லன்பு. ஆற்றல்=மனவலி. (௬)

விளக்கம் :—எல்லோர் உயிரையும் கொள்ளை கொள்ளுகின்ற யமனே கோபித்து மேல் வந்ததுபோல் பகைவர்கள் எதிர்த்த காலத்தும் ஒருவரோடு ஒருவர் மனம் ஒன்றுகூடி அப்பகைவர் எதிரில் நின்று யுத்தம் செய்து தாக்கும் வலிமையுடையதே படையென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, யமனே கோபித்து வந்தாலும் எதிர் நின்று தாக்கும் வலிமையுடையதே படையென்று கூறினமையால், பகைவர் எதிரில் நின்றால் உடலிலிருந்து உயிரை இழக்க நேருமென்று திட்டமாகத்தெரிந்தும் அதைவிட்டு நீங்காதுபோரிட வேண்டுமென்றும், அவ்விதம் போராடுங் காலத்து வீரர்களெல்லாம் அரசன் மீதுள்ள அன்பினால் மிகப் பலர் செஞ்சோற்று ஆகவேண்டுமென்றும், அது அரசன் மீதுள்ள அன்பினால் ஆதல் வேண்டுமென்றும், அவ்வன்போடு மனவலியுமிருத்தல் வேண்டுமென்றும் அவ்வித தகுதியுடையதே படையென்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்வித படையாளர் படைகளுக் காவல்போல் இருப்பர் அன்றோ? வேறு காவலும் வேண்டாம் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

766. மறமான மாண்ட வழிச்செலவு தேற்ற
மெனநான்கே யேமம் படைக்கு.

(பரி.) இ-ள். மறம் மானம் மாண்ட வழிச்செலவு தேற்றம் என நான்கே=தறகண்மையும் மானமும் முன் வீரராயினோர் சென்ற நன்னெறிக்கட்சேறலும் அரசனுற் றேறப்படுதலுமென இந்நான்கு குணமுமே—படைக்கு எமம்=படைக்கு அரணாவது. எ-று.

இவற்றுள் முறையே பகைவரைக் கடிதிற்கொன்ற லற்றலும், அரச

னுக்குத் தாழ்வுவாராமற் காத்தலும், “அழியுநர்புறக்கொடையயில்வா ளோச்சாமை”† முதலியவும், அறைபோகாமையுமாகிய செய்கைகள் பெறப்பட்டன.

* மருந்தில் கூற்றத் தருந்தொழில் சாயா—புறநானூறு 3.
† வெண்பாமாலை, வஞ்சிப்படலம், 20.



இச்செய்கையார்க்குப் பகைவர் நணுகாராகலின், வேறரண் வேண்டா வென்பதாம். (௬)

விளக்கம்:—அஞ்சாத வீரச் செய்கையும், பழிக்கு அஞ்சும் மானமும், தனக்கு முன் இருந்த வீரர்கள் சென்ற நல்வழியின்கண் தாமும் செல்லலும், அரசனால் 'இவன் நம்மோன்' என்று அறியப்படுதலும் ஆகிய இந்நான்கு குணமுமே படைக்கு அரண் ஆவது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அஞ்சாத வீரத் தன்மையிருப்பதால் பகைவரை அதி சீக்கிரத்தில் கொன்று நிற்பா ரென்றும், பழிக்கு அஞ்சுகின்ற மானமுடையவரா யிருக்கின் தம் அரசனுக்குத்தாழ்வுவருமாயின் தமக்குத்தாழ்வுவந்ததுபோல் எண்ணிப் பழிக்குப்பயந்து தாழ்வுவாராமல் காப்பாரென்றும், முன்வீராயினோர் சென்ற நல்வழியே சென்று யுத்தம் புரிவதால் பகைவர்களால் சூழ்ச்சி செய்து வெல்லப்படாரென்றும், அரசன் தம்மைத் தெரிந்து கொள்ள வேண்டுவதற்கு வேண்டிய வினைகளைச் செய்யும் வீரத்தன்மையும் இருக்குமாயின் அவ்வித குணம் அமைந்த வீரர்களே படையைக் காக்கும் அரண்போல் இருப்பரென்றும், இவ்வித படைவீரர்கள் இருப்பதால் பகைவர்கள் பயந்து சமீபிக்கார் ஆதலால் வேறு அரண் வேண்டாமென்றும் அறிகவென்றனர். அதுகேட்ட மாணாக்கர், “படை வீரர்கள் யுத்தம் வந்த காலத்துத் தாமே மேல் சென்று யுத்தம் செய்தல் வேண்டுமோ? அல்லது யுத்தத்திற்கு வந்தவர்கள் தம் நாட்டில் வந்த பிறகு எதிர்த்து யுத்தம் செய்தல் வேண்டுமோ?” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

767. தார்தாங்கிச் செல்வது தானை தலைவந்த
போர்தாங்குந் தன்மை யறிந்து.

(பரி.) இ-ள். தலைவந்த போர் தாங்கும் தன்மை அறிந்து=மாற்றாரால் வகுக்கப்பட்டுத் தன்மேல்வந்த படையின்போரை விலக்கும் வகுப்பறிந்து வகுத்துக்கொண்டு—தார் தாங்கிச் செல்வது தானை=அவர் தூசியைத் தன்மேல் வாராமற் றடுத்துத் தான் அதன்மேற் செல்வதே படையாவது. எ-று.



படைவகுப்பாவது:—வியூகம்; அஃது எழுவகையுறுப்பிற்றாய், வகையா னான்காய், விரியான் முப்பதாம். உறுப்பெழுவன:—உரமுதற்கோடியீறாயின. வகைநான்காவன :— தண்டம், மண்டலம், அசங்கதம், போகமென விவை. விரி முப்பதாவன:-தண்டவிரி பதினேழும், மண்டலவிரி இரண்டும், அசங்கதவிரியாறும், போகவிரியைந்துமென விவை. இவற்றின பெயர்களும், இலக்கணமும் ஈண்டுரைப்பிற் பெருகும்; அவையெல்லாம் வடநூல்களுட் கண்டு கொள்க. இவை நான்கு பாட்டானும் படையினிலக்கணங் கூறப்பட்டது. (௭)

விளக்கம் :—பகைவர்களால் வகுக்கப்பட்டுத் தன்மீது வந்த படையினால் உண்டாகிய யுத்தத்தைத் தடுத்து விலக்கும் வகுப்பினைத் தெரிந்து அதற்கு வேண்டியபடி தான் வகுத்துக் கொண்டு அவரது தூசிப்படை யென்னும் முன் படையாகிய கொடிப்படை தன்மேல் வாராவண்ணம் தடுத்துத் தான் அப்படைமீது யுத்தம் செய்வதற்குச் செல்வதே படையாவது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பகைவரது படைக்கலத்தைக் கண்டு அப்படை பகைவரால் எவ்விதம் வகுக்கப்பட்டு உள்ளதென்று தெரிந்து அதற்குத் தக்க அளவாகத் தன்னுடைய படைகளை வகுத்து நிற்பதுடன் அப்பகைவர் படையானது தன்மீது வந்து மோதுவதற்கு முன் தான் யுத்தத்திற்கு உரிய தும்பைமாலையை அணிந்து எதிர் சென்று அப்பகைவரது படையைத் தாக்க வேண்டுமென்றும், அவ்விதம் முதலில் வலிமை கொண்டு பகைவர் படையைத் தாக்குதலால் வெற்றி உண்டாகுமென்றும், அவ்விதமல்லாது பகைவர்

படையானது தன்னை முதலில் தாக்குமாயின் வெற்றி படைவது அருமையென்றும் அறிந்தோம் என்றனர். அன்றியும் படை வகுப்பு என்கின்ற வியூகம் இதுவென்று மேல் பரிமேலழகர் கூறியிருக்கிறும் அவ்வியூகமானது எழுவித உறுப்பாகிய மார்பு ஒன்றும், இறக்கை இரண்டும், மத்தியம் ஒன்றும், பிரதிக்கிரகம் ஒன்றும், பிரிஷ்டம் ஒன்றும், கோடி ஒன்றும் ஆகிய உறுப்புகளோடு அமைந்துள்ளது. தண்டம் முதலாகிய நான்கு வகையினுள் தண்டமாவது சேனையைக் குறுக்காக நிறுத்துவதும், மண்டலமென்பது பாம்புசுற்றிக் கொள்வதுபோல் சேனையைச் சுற்றி நிற்கிறதும், அசங்கதம் என்பது சேனையை வேறுவேறாக நிறுத்துவதும், போகம் என்பது



யானை, தேர், குதிரை, காலாட்படை என்னும் நால்வித சைன்னியங்களையும் ஒன்றன்பின் ஒன்றாக நிறுத்துவதும் ஆகுமென்றும், இந்நான்கு வகையினுள் தண்டவிரியாவது, பிரதரம், திருடகம், சௌவந்தம், குஷி, பிரதிட்டம், சுப்பிரதிட்டம், சியேநம், விஜயம், சஞ்சயம், விசாலம், விஜயம், சூசி, ஸ்தூணு, கர்ணம், சமூமுகம், சதாசியம், வலயம் என்கின்ற பதினேழும் மண்டல விரியாகிய சர்வதோபத்திரம், துர்ஜயம் என்னும் இரண்டும், அசங்கத விரியாகிய அர்த்தசந்திரம், உத்தானம், சிருங்காடம், கர்க்கடகசிருங்காரி, காகபாரி, கோதிகா என்கின்ற ஆறும், போகவிரி என்கின்ற கோமூத்திரிகை, இம்சகம், சஞ்சாரி, சகடார், பக்தம் என்னும் ஐந்தும் காமசுதக மென்னும் வடநூலுள் விரிவாகக் கூறப்பட்டுள்ளதால் அவ்வித நூல்களை யெல்லாம் கற்று உணர்ந்து படைகளை வகுக்கவேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "இவ்வித பாகுபாடுகள் பிறர் அமைப்பார்களாயின் அப்பாகுபாடுகளாலேயே வெற்றி உண்டாகும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

768. அடற்றகையு மாற்றலு மில்லெனினுந் தானை
படைத்தகையாற் பாடு பெறும்.

(பரி.) இ-ள். தானை=தானை,—அடற்றகையும் ஆற்றலும் இல் எனி னும்=பகைமேற் சென்றடர்க் தறுகண்மையும் அது தன்மேல்வந்தாற் பொறுக்கு மாற்றலும் இல்லையாயினும்,—படைத்தகையால் பாடு பெறும்= தன்றோற்றப் பொலிவானே பெருமை யெய்தும். எ-று.

இல்லெனினு மெனவே, அவற்றின்றியமையாமை பெறப்பட்டது. படைத்தகையென்றது ஒரு பெயர் மாத்திரமாய் நின்றது. தோற்றப் பொலி வாவது :—அலங்கரிக்கப்பட்ட தேர், யானை, குதிரைகளுடனும், பதாகை, கொடி, குடை, பல்லியம், காளமுதலியவற்றுடனும் அணிந்து தோன்று மழகு. பாடு=கண்டளவிலே பகைவரஞ்சும் பெருமை. (அ)

விளக்கம்:—பகைவர்மீது தானே சென்று வெல்லுகின்ற தகுதியும் வலிமையும் இல்லையெனினும், பகைவர் தன்மீது வந்து யுத்தஞ்



செய்யும் காலத்தும் பொறுத்துக்கொள்ளும் பொறுமையும் வலிமையும் இல்லையாயினும், படையானது அது அமைக்கப்பட்டுள்ள அழகினால் பெருமை அடையும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மிக அலங்காரம் பெற்ற தேர், யானை, குதிரை, காலாட் படை என்கின்ற படைகளுடைய அழகும், கொடி, குடை, பல வாத்தியங்கள் ஆகிய உறுப்புகளும் அமைந்திருக்குமாயின், அவ்வழகினையும் பெருமையினையும் கண்ட அளவில் பகைவர் அஞ்சி அணுக மாட்டார்களென்றும், படையினை அலங்கரிக்கும் தகுதியே வெற்றிக்கு ஏதுவாகுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இனி, படையானது எவ்வித குறைகளில்லாதிருக்கின் அப்படை உண்மையாக வெல்லும் என்பதைக் கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

769. சிறுமையுஞ் செல்லாத் துனியும் வறுமையு
மில்லாயின் வெல்லும் படை.

(பரி.) இ-ள். சிறுமையும் செல்லாத் துனியும் வறுமையும் இல்லாயின்=

தான் தேய்ந்து சிறிதாதலும் மனத்தின்கண் நீங்காத வெறுப்பும் நல்குரவும் தனக்கில்லையாயின்,—படை வெல்லும் = படை பகையை வெல்லும். எ-று.

விட்டுப்போதலும் நின்றது நல்கூர்தலும் அரசன் பொருள் கொடாமையான் வருவன. செல்லாத்துனியாவது:—மகளிரைவௌவல், இளிவாயின செய்தல் முதலியவற்றான் வருவது. இவையுள்வழி அவன்மாட்டன்பின்றி உற்றுப்பொராமையின், 'இல்லாயின் வெல்லும்' என்றார். (௯)

விளக்கம் :—படையானது சிறிது சிறிதாகத் தேய்ந்து போகாமலும், மனத்தினிடத்தே நீங்காத வெறுப்பும், தரித்திரமும் தனக்கு இல்லாமல் இருக்குமாயின், அவ்வித படை பகைவரை வெல்லும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அரசனிடத்து அன்பில்லாவிடினும் அரசன் பொருள் கொடாவிடினும் படையானது விட்டு விலகுமென்றும், அவ்விதம் விட்டுப் போகாது இருந்த படையானது சரியாகப் பொருள் தரப்பெறாவிடில் தரித்திரமடைந்து அதனால் வெறுப்படையுமென்றும், படையிலுள்



ளார் மகளிரை அரசன் அபகரிப்பதாலும் மற்றும் இழிந்த காரியங்களைச் செய்வதாலும் படைகள் வெறுப்பினை அடைந்து சிறிது சிறிதாகத் தேய்ந்துபோகுமென்றும், அவ்விதம் அல்லாது இருக்குமாயின் பகைவரது படையை வெல்லுதல் கூடுமென்றும் அறிஞரும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் படைவீரர்களிருக்கின் பகைவரை வெல்லுதல் கூடும் போலும்! தக்கதோர் தலைவர் வேண்டாவோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

770. நிலைமக்கள் சால வுடைத்தெனினுந் தானை
தலைமக்க ளில்வழி யில்.

(பரி.) இ-ள். நிலைமக்கள் சால உடைத்து எனினும் = போரின்கணிலையுடைய வீரரை மிகவுடைத்தேயாயினும்,—தலைமக்கள் இல்வழித் தானை இல் = தனக்குத் தலைவராகிய வீரரில்லாதவழித் தானை நில்லாது. எ-று.

படைத்தலைவர் நிலையுடையரன்றிப் போவாராயிற் காண்போரில்லனைப் போகாது தானும் போமென்பார், 'தலைமக்களில்வழியில்' என்றார். இவை மூன்று பாட்டானும் முறையே படைத்தகைமையின்மையானும், அரசன் கொடைத் தாழ்வுகளானும், தலைவரின்மையானும், தாழ்வு கூறப்பட்டது. (ய)

விளக்கம் :—மேற்கூறிய வண்ணம் யாதொரு துன்பமுமில்லாமல் அரசனைவிட்டுப் பிரியாத நிலையுடைய போர்வீரர்கள் பலர் இருக்கினும், அவ்வீரர்களுக்குத் தலைவர் இல்லையாயின் படை நில்லாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் பல படைவீரர் இருக்கினும் அவர்களை நடத்தும் அனுபவமுடைய தலைவர்கள் இல்லாவிடில் அப்படையானது பகைவரால் அலைப்புண்டு நிற்பதற்கு ஆற்றாது அழிந்துபோம் என்று அறியவேணும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "படையின் தகுதியில்லாமையாலும், அரசன் கொடைத்தாழ்வுகளாலும், தலைவரில்லாத தாழ்விலும் உண்டாகின்ற நிலைகளும், அவை இருக்குமாயின் அவற்றால் உண்டாகும் நன்மைகளும் இவையென்று அறிந்தோம். அவ்வித படைவீரர்களின் வீரம் இத்தகைத்தென அறிய ஆசைப்படுகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 78. அதிகாரம்.

## படைச்செருக்கு.

---

(பரி.) அஃதாவது அப்படையது மறமிகுதி. அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம் :—அதாவது, மேற்கூறிய வண்ணம் மாட்சிமை அமைந்த படைகளுக்கு உரிய வீரத்தின் மிகுதியே படைச் செருக்காதலால் படைமாட்சி என்பதற்குப் பிறகு இவ்வதிகாரம் வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இப்படைச்

செருக்கை முறையே பகரல் வேண்டும்!" என்பதூஉம், ஆசிரியர் கூறவாராயினர்.

771. என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
 முன்னின்று கன்னின் றவர்.

(பரி.) இ-ள். தெவ்விர் என் ஐமுன் நின்று கல் நின்றவர் பலர் = பகைவீர், இன்றிக்கென்றலைவனெதிர் போரேற்று நின்று அவன்வேல்வாய் வீழ்ந்து பின்கல்லின்கண்ணே நின்றவீரர் பலர்,—என் ஐமுன் நில்லன்மின்—நீவிர் அதன்கணின்றும் தம்முடற்கணிற்றல்வேண்டின், என்றலைவனெதிர் போரேற்று நிற்றலை யொழிமின். எ-று.

'என்னை' எனத் தன்னொடு தொடர்புபடுத்துக் கூறினமையின், அவன் வேல்வாய் வீழ்தல் பெற்றாம். கல் = நடுகல்.* "நம்பன் சிலைவாய் நடக்குங் கணை மிச்சி லல்லா—லம்பொன் முடிப்பூ ணரசம்மில" † எனப் பதுமு

* நடுகல்லிலக்கணம், தொல், பொருள், புறம், 5-ம் சூத்திரத்துட் காண்க.

† "பைம்பொற் புனைப் பருமக்களி யானையிட்டுஞ்
 செம்பொ னெடுந்தேர்த் தொகை மாக்கடற்றுள்ளே வென்ற
 நம்பன் சிலைவாய் நடக்குங்கணை மிச்சிலல்லா
 லம்பொன் மணிப்பூ ணரசம்மில வென்று நக்கான்"
 சீவகசிந்தாமணி, காந்தருவதத்தையாரிலம்பகம், 317.

52



கன் கூறியதுபோல ஒரு வீரன் தன்மறம் அரசன்மேல் வைத்துக் கூறிய வாறு. இப்பாட்டு செருமொழிவஞ்சி. ‡ (௧)

விளக்கம் :—யுத்தகளத்தில் பகைவரைக் கண்டகாலத்து அவரை நோக்கி, 'ஓ! பகைவர்களே! என்னுடைய தலைவன் எதிர் நின்று போர்செய்து, அவன் வேலால் கொல்லப்பட்டுப் பின்னர் அவ்வீரத்தை அறிவிக்கக் கற்கோளியர் என்ற வீரர் பலர் உண்டாதலால், இப்போது யுத்தத்திற்கு வந்தவர்களாகிய

நீங்கள் அவரது வேலால் விழுந்து இறக்காமல் உம்முடைய உடல்களினிடத்தே உயிர்கள் இருக்கவேண்டுமாயின் என்னுடைய தலைவர் எதிர்நின்று யுத்தம்செய்தலை ஒழித்து போய் விடுங்கள்' என்று கூறுவதே படைச்செருக்கென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, வீரன் ஒருவன் யுத்தகளத்துத் தன்னை எதிர்த்த பகைவனைக் காணும் காலத்துத் தன்னுடைய வீரத்தன்மை இது என்றுகூறவேண்டுமாதலால் அவ்வாறு கூறுங்கால் அதைத்தன் மீது ஏற்றிக் கூறாமல் தன் அரசன்மீது ஏற்றிக் கூறுவது வழக்கென்றும், இவ்விதம் கூறுவதால் எதிர்த்துவந்த பகைவர் ஊக்கத்தோடு போர் செய்வதற்கில்லாது முதலிலேயே மனமுடைந்து ஓடிப்போவரென்றும் அறிகின்றோம் என்றனர். அன்றியும், இத்திருக்குறளால் போரில்வெல்லாவிடில் புறமுதுகு இடாது யுத்தம் செய்கின்ற வீரர்கள் யுத்தத்தில் இறப்பாராயின் அவரது வீரத்தன்மையை மற்றைய வீரர்கள் அறியும் பொருட்டு அவர்போன்று கல்லில் அடித்துப் பலரும்பார்க்க நடுகல்லாகவைப்பது வழக்கென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் யுத்தம் செய்யுங்காலத்து வீரனாயுள்ள ஒருவன் தன்னை எதிர்த்துப் போர் செய்யவந்த ஒரு வீரனோடு போர்செய்தல் வேண்டுமோ? அன்றி எவரேனும் எதிர்த்தாராயின் அவர் எவ்வித தகுதியுடையவரேனும் அவரோடு போர்செய்தல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

‡ செம்மொழி வஞ்சியென்பது:—ஒன்னார் படைகெழுமித்தன் னாண்மை பெயர்த்துரைத்தன்று—வெண்பாமாலை, வஞ்சிப்படலம், 12.



772. கான முயலெய்த அம்பினில் யானை
பிழைத்தவே லேந்த லினிது.

(பரி.) இ-ள். கான முயல் எய்த அம்பினில்=கானத்தின்கணோடும் முயலைப் பிழையாமலெய்த அம்பையேந்தலினும்—யானை பிழைத்தவேல்

ஏந்தல் இனிது=வெள்ளிடை நின்ற யானையை யெறிந்து பிழைத்த வேலை யேந்துதல் நன்று. எ-று.

கானமுயலென்றதனால் வெள்ளிடை யென்பதூஉம், பிழைத்தவென்றதனாற் பிழையாமையென்பதூஉம், முயற்குத் தக எய்தவென்றதனால் யானைக்குத் தக எறிதலும், வருவிக்கப்பட்டன. இது மாற்றார் படையொடு பொருதானோர் வீரன் அது புறங்கொடுத்ததாக நாணிப் பின்னையன்றான்மேற் செல்ல லுற்றுளனது கூற்று. (௨)

விளக்கம்:—காட்டிலோடும் முயலினைத் தவறாமல் எய்த அம்பு ஒன்றினை ஒருவன் கையில் ஏந்துதலினும், வெளியிடத்தே நின்ற யானை ஒன்றின்மீது வீசி எய்யாது தவறிய வேல் ஒன்றினைக் கையில் ஏந்தி நிற்றல் நன்றென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் முயல் ஒன்றினைப் பெருங்காட்டினுள் தவறாது கொல்வதினும் வெளியிடத்தில் நின்ற யானை ஒன்றைக் கொல்ல முயற்சித்துப் பிழைபடுவதே நன்மையுடையது என்றமையால், வீரனாயுள்ள ஒருவன் தன்னோடு யுத்தம்செய்ய வந்த படையொன்று அந்யுத்தத்திற்கு ஆற்றாது புறமுதுகிட்டு ஓடியகாலத்து 'தக்கதோர் யுத்தத்தைச் செய்யும் வீரரோடு போரிடுவதற்கு அமையாமல் போயிற்று அன்றோ? இவ்விதம் புறமுதுகிட்டு ஓடிப்போகின்றவரிடம் போரிட்டு வெற்றி அடைவதினும் புறமுதுகிடாது நின்று யுத்தத்தில் இறக்கும் வீரர்களோடு யுத்தம் செய்வதற்கு இல்லாமற் போயிற்றே' என்று வருந்திக் கூறியதாக அறிகின்றோம். ஆதலால், வீரனென்பான் ஒருவன் தன்னோடு பொருத ஓர் வீரனோடு யுத்தம் செய்தல் வேண்டுமென்றும் தாழ்ந்தவரிடத்து யுத்தம் செய்தல் தகுதியல்லவென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் யுத்தம் செய்கின்ற வீரன் 'இவர் இன்னவர்' என்று தாரதம்யம் கொண்டு யுத்தத்தைச் செய்தல் வேண்டுமோ? அல்லது 'பகைவனத்தில் ஒப்பாரி இல்லை' என்ற பழமொழிப்படி யுத்தம் செய்தல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்,



773. பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றத னெஃகு.

(பரி.) இ-ள். தறுகண் பேராண்மை என்ப = பகைவர்மேற் கண்ணோடாது செய்யும் மறத்தை நூலோர் மிக்கவாண்டன்மையென்று சொல்லுவர்;—ஒன்று உற்றக்கால் ஊராண்மை அதன் எஃகு (என்ப) = அவர்க்கு ஒரு தாழ்வு வந்தாயிற் கண்ணோடி அது தீர்த்தற்கோடற்பொருட்டு ஊராண்மை செய்தலை நூலோர் அதற்குக் கூர்மையென்று சொல்லுவர். எ-று.

என்பவென்பது பின்னுமியைந்தது. ஊராண்மை = உபகாரியாந்தன்மை. அஃதாவது இலங்கையர்வேந்தன் போரிடைத் தன்றானை முழுதும்படத் தமியனாயகப்பட்டானது நிலைமை நோக்கி, அயோத்தியரிறை மேற்செல்லாது 'இன்று போய் நாளை நின்றானையோடு வா'வென விட்டாற்போல்வது. இவை யிரண்டுபாட்டுந் தழிஞ்சி.* (௩)

விளக்கம் :—பகைவர் மீது யுத்தஞ் செய்யச் சென்ற வீரன் ஒருவன்தான் யுத்தம் செய்யுங் காலத்துச் சிறிதும் தாக்ஷிண்யமில்லாது யுத்தம் செய்வது மிகுந்த ஆண்மையென்று நூலோர் கூறுகின்றனரென்றும், அவ்விதம் யுத்தம் செய்யுங்காலத்து அப்பகைவர்க்கு யாதேனும் ஒருதாழ்வுவருமாயின் அக்காலத்துத் தாக்ஷிண்யமடைந்து அவருக்கு நேர்ந்த துன்பத்தை நீக்குதல் பொருட்டு உபகாரியாக இருத்தல் வேண்டுமென்றும், அவ்விதம் செய்வதே மிகுந்த ஆண் தன்மையின் தகுதி என்று நூல்வல்லவர் கூறுகின்றனரென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, வீரனொருவன் தான்யுத்தம்செய்யுங்காலத்துப் பகைவனிடத்துச் சிறிதும்தாக்ஷிண்யமில்லாது யுத்தம் செய்து வெல்லல் வேண்டுமென்றும், அவ்விதம் யுத்தம் செய்யுங்காலத்துப் பகைவன் தன் கையில் ஒன்று மில்லாது படையினை யெல்லா மிழந்தும், சேனையை இழந்தும் நிற்பானாயின் அக்காலத்து முன் கொண்ட தாக்ஷிண்ய மின்மையை விட்டுவிட்டு எல்லாவற்றையு மிழந்த அப்பகைவன் மீது அருளால் தாக்ஷிண்யப் பட்டு அவனுக்கு வேண்டும் உபகாரங்களை யெல்லாம் செய்தல் வேண்டுமென்றும், அவ்விதம் செய்வதே யுத்த முறை யென்றும்,

---

* தழிஞ்சியென்பது:—அழிபடர் புறக்கொடை யயில்வா ளோச்சாக் கழிதறு கண்மை காதலித் துரைத்தன்று—வெண்பாமாலை, வஞ்சிப்படலம், 8.

அதுவே பேராண்மை யுடையது என்றும், பிறர்க்கும் அழகென்றும் அறிந்தோம். இதனைப் பண்டைக் காவியங்களுள் ஒன்றாகிய இராமாயணத்துள் கம்பர் கூறியதையே முதலாகக் கொண்டு உரை ஆசிரியர், பரிமேலழகர், 'அயோத்தியின் அரசனாகிய இராமன் இலங்கையின் அரசனாகிய இராவணனை நடத்தியது போல்' என்றெடுத்துக் காட்டினார். இவ்விதம் எடுத்துக் காட்டிய கதைக்கு உரிய செய்யுள் தனைப் பின்னர் காணுதல் கூடும்.

" அண்டர்காவகனடுசிலையுதைத்தவோராய்
கொண்டுபோகப்போய்க்குரைகடல்குளித்தலக்கொள்ளாக
மண்டலத்தொடர்பங்குவெங்கதிர்கள்வாயால்
உண்டகோளொடுவாளிகடல்வீழ்ந்ததுமொக்கும்.
சொல்லுமத்தனையளவையின்மணிமுடி துறந்தான்
எல்லைமத்தெழுமதியமுனாயிரமிழந்த
அல்லுமொத்தனன்பகலுமொத்தனனமர்பொருமேல்
வெல்லுமத்தனைபல்லதுதோற்றிலாவிறலோன்.
மாற்றருந்தடமணிமுடிவீழ்ந்தவாளரக்கன்
ஏற்றமெவ்வுலகத்தினுமுயர்ந்துளானெனினும்
ஆற்றனெடுங்கிரிஞ்சங்கதமுழைப்பாய்ப்
போற்றரும்புகழிழந்தபேரொருவனும்போன்றான்.
அறங்கடந்தவர்செயலிதென்றுலகெலாமார்ப்ப
திறங்கரிந்துகாவிலம்விரல்லிளைத்திடநின்றான்
இறங்குகண்ணிமையெல்லதிமுகத்தினன்றியன்
வெறுங்கைநாற்றினன்விழுதுடையாலன்னமெய்யன்.
நின்றவக்கினைநோக்கியநெடுந்தகையிவனைக்
கொன்றதுன்னிலன்வெறுங்கைநின்றானெனக்கொள்ளா
இன்றவித்ததுபோதுமுன்றீமையென்றிசைபோ
டொன்றுவந்தனையாசமயிலையெனவுரைத்தான்.
அறத்தினாலன்றியமரர்க்குமருஞ்சமங்கடத்தல்
மறத்தினாலரிதென்பதுமனத்திடைவலித்தி
பறத்திநின்னெடும்பதிபுகவிமைப்பினிற்பாவி
இறத்தியானதுநினைக்கிலென்றனிமைகண்டிரங்கி.

உடைபெருங்குலத்தினொடுமுறைவொடுமுதவும்
படைக்கலங்களுமற்றரிதேடியபலவும்
அடைத்துவைத்தனனிறந்துகொண்டாற்றுதியாயின்
கிடைத்தியல்லையோவெளித்தியாற்சிறுதொழிற்கேய்.
சிறையின்வைத்தவடன்னைவிட்டுலகினிற்றேவர்
முறையின்வைத்துநின்றம்பியைபிராக்கதமுதற்பேர்
இறையின்வைத்தவற்கேவல்செய்திருத்தியாலன்றேல்
தறையின்வைக்கிலெனின்றலைவாளியிற்றடித்து.
அல்லையாமெனினாமமாற்றெறுனைத்தோற்றம்
வல்லையாமெனினுனக்குளவலியெலாங்கொண்டு
நில்லையாவெனவேச்சின்றுபொன்றுதியெனினும்
கல்லையாகுதிபிழைப்பினியுண்டெனயமேல்.
ஆளையாவுனக்கமைந்தனமாருதமறைந்த
பூளையாயினகண்டனையின்றுபோய்ப்போர்க்கு
நாளைவாவெனநல்கினனாளிளங்கமுகின்
வாளைதாவுறுகோசலநாடுடைவள்ளல்.

அதாவது, முதல் நாள் போரில் இராவணனானவன் தன் சைன்னி
யங்களையும், படைக்கலங்களையும், பதாக் கிரீடங்களையும் ராம
னது அம்புகளால் இழந்தபிறகு தலைவணங்கி நிலத்தைக் காலால்
கீறி நின்றதனைக் கண்ட இராமன் 'இன்றையதினம் உன் தீச்செயல்
களெல்லாம் ஒழிந்தது போதும்! தேவராயினும் அறத்தின்
வழியல்லாத மறத்தின் வலிமையால் யுத்தத்தில் வெற்றி கொள்
வதில்லை என்பதை நீ உன் மனத்திற் கொள்வாயாக! நீ இனி
யேனும் உனது சுற்றத்தவரோடும், தேடிய பொருள்களோடும்
உலகத்து வாழ வேண்டுமாயின் சிறையில் வைத்துள்ள
எனது தலைவியை என்னிடத்துக் கொண்டு வந்து விடுதலோடு
உன் தம்பியாகிய விபீஷணனை இலங்கைக்குத் தலைவனாக்கி அவ
னுக்கு ஏவல் செய்து வருதல் வேண்டும். அல்லையேல் உன்னு
டைய வலிமை யெல்லாம் கொண்டு யுத்தம் செய்யினும் இனி

உனக்குப் பிழைப்பென்பதே இல்லையாகும். அதனை இன்றையப் போரில் அறிந்தாய் போலும்! ஓ! இராவணா! இப்போது நீ நிற்கின்ற நிலையில் உனக்கென்று நீ ஆள்வதற்கு உரிய பொருள்கள் எவையேனும் உளவோ? நீ கொண்டு வந்த பொருள்களெல்லாம்



பெருங் காற்றில் அகப்பட்ட பூளைப்பூப்போல் ஆயின கண்டனை அன்றோ? ஆதலால், உனக்கு யுத்தம் செய்வது விருப்பமாயின் இன்றுபோய் நாளை வருதல் கூடும்!" என்று போரில் யாவு மிழந்த இராவணனுக்கு உயிர்க்கு உபகாரியாய் இருந்தானாதலால் இத்திருக்குறளில் கூறிய ஊராண்மை என்பதற்கு இராமனையே இலக்காக உரை ஆசிரியர் எடுத்துக் காட்டினர் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் வீரன் ஒருவன் தோற்று நிற்றலைக் கண்ட மற்றொரு வீரன் உபகாரியாக இருந்த காலத்து உபகாரம் பெற்ற வீரன் அவ்வளவோடு உயிரைக் காப்பாற்றிக் கொண்டு ஓடிவிடுதல் தகுதியோ? அல்லது தன் பெருமையை நிலை நாட்ட யுத்தம் செய்வது தகுதியோ?" என்று கேட்டதும், ஆசிரியர் கூறலாயினர்.

774. கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்.

(பரி.) இ-ள். கைவேல் களிற்றொடு போக்கி வருபவன் = தன் கைப்படையாய வேலைத் தன்மேல் வந்த களிற்றொடு போக்கி வருகின்ற களிற்றுக்கு வேறுதேடித் திரிவான்—மெய் வேல் பறியா நகும் = தன் மார்பின் நின்ற வேலைக்கண்டு பறித்து மகிழும். எ-று.

களிற்றொடு போக்கல் = களிற்றின் உயிரைக் கொண்டுபோமாறு விடுதல். மகிழ்ச்சி தேடியதெய்தலான். இதனுட் களிற்றையல்லதெறியானென்பதூஉம், சிறுமக்கிலான் வேலிடை போக்கதறிக்கிலனென்பதூஉம், பின்னும் போர்மேல் விரும்பினனென்பதூஉம் பெறப்பட்டன. ஏழிலாட்டு.*(௪)

விளக்கம்:—வீரனென்பான் தன் கையிலுள்ள ஆயுதமாகிய வேல் ஒன்றினைத் தன்மீது எதிர்த்து வந்த யானையின் மீது எறிந்து அதுபோதலும், மறுபடியும் தன்மீது எதிர்த்து வருகின்ற மற்றொரு யானையை வெல்வதற்கு மற்றொரு வேலினைத் தேடுபவன் தன் மார்பினிடத்தே பகைவரால் எவப்பட்டுப் புதைந்து கிடந்த

வேலைப் பார்த்து அதனைப் பிடுங்கி எதிர்த்து மகிழ்வான் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. இதனால், வீரனென்பான் ஓர் முறை தன் கையிலுள்ள படையெல்லாம் ஒழியினும் அதற்காக அஞ்சாது

* ஒழிவாட்டென்பது:—கைக்கொண்ட படையிரிய—மெய்க்கழிந்தவேல் பறித்தோச்சின்று,—வெண்பாமாலை, தும்பைப் படலம், 16.



தன் உயிர் இழப்பதையும் கருதாது தன் மார்பில் புதைந்து கிடந்த வேலினைப் பறித்து எய்வான் என்னும் குறிப்பால், போர் செய்கின்ற காலத்தில் தனக்குள்ள கோபமிகுதியால் தன் மார்பில் வேல் பாய்ந்ததும் அறியவில்லை யென்றும், போரின் மீதேயே விருப்பமுள்ளவன் என்பதையும் அறிகின்றோம். ஆதலால் புறமுதுகிடாது போரில் உயிரிழக்கும் வீரனே வீரனாவான் என்றும் 'இன்றுபோ நாளைவா என்றான்' என்று கூறியபடி இராவணன் அன்றுபோய் அன்றைய மறுதினமும் மற்றத் தினங்களிலும் போரினைச் செய்து கடைசியாகப் படைக்களத்தில் இறந்துவிட்டமையே வீரனுடைய தகுதியை நன்கு எடுத்துக் காட்டும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதப் போர்புரியும் வீரன் ஒருமுறை நின்ற இடத்து அசையாது யுத்தம் செய்தல் வேண்டும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

775. விழித்தகண் வேல்கொண் டெறிய அழித்திமைப்பி
னோட்டன்றோ வன்க ணவர்க்கு.

(பரி.) இ-ள். விழித்த கண் = பகைவரை வெகுண்டுநோக்கியகண் — வேல்கொண்டு எறிய அழித்து இமைப்பின் = அவர் வேலைக்கொண்டெறிய அதனாற்றாது அந்நோக்கையழித்து இமைக்குமாயின்,—வன்கணவர்க்கு ஓட்டு அன்றோ = அது வீரர்க்குப் புறங்கொடுத்தலாம். எ-று.

அவ்வெருணோக்கமிட்டலும் போரின்கண் மீட்சியெனக்கருதி அதுவுஞ் செய்யாரென்பதாம். (௫)

விளக்கம்:—போரில் பகைவரைக் கோபித்துப் பார்த்த கண்ணானது அப்பகைவர் இவன்மீது கோபித்து வேல் ஒன்றினைக்கொண்டு

எறிவாரின் அவ்வேலிற்கு ஆற்றாது பயந்து முன்பார்த்த கோபப் பார்வையை ஒழித்து இமைக்குமாயின், அவ்வித தருதி வீரர்க்குப் புறங்கொடுத்தல் ஆகுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் நீர் முன் விளம்பியபடி இடம்விட்டு அசைதல் மாத்திர மல்லாமல் ஒருமுறை கோபித்துப் பார்த்த பார்வையினின்றும் விட்டு நீங்குதல் ஆகாதென்றும், பகைவர் எத்தனைத் தருதியோடு கூடிய யுத்தங்களை நடத்தினும் அதற்காக அஞ்சுதல் கூடாதென்றும், அவ்வஞ்சுதல் இமைகொட்டாது பார்க்கின்ற கோபப்பார்வை



கொண்ட கண் அஞ்சுதற்கு உரிய இமை கொட்டுமாயினும் அது வீரத்தன்மையாகாதென்றும் கூறுவதால் வீரனென்பான் யுத்தத்தில் நின்ற நிலையில் யுத்தம் செய்வான் என்பது பொருளாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "வீரனென்பான் ஒரு முறை முன் யுத்தத்தில் வெற்றியை அடைந்து நிற்பதிலேயே மகிழ்ந்து நிற்பனோ? அன்றி ஆயுட்காலம் முழுவதும் போரினை விரும்புவனோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

776. விழுப்புண் படாதநா ளெல்லாம் வழுக்கினுள்
வைக்குந்தன் னாளை யெடுத்து.

(பரி.) இ-ள். தன் நாளை எடுத்து = தனக்குச் சென்ற நாள்களையெடுத் தெண்ணி,—விழுப்புண் படாத நாளெல்லாம் வழுக்கினுள் வைக்கும் = அவற்றுள் விழுப்புண்படாத நாள்களையெல்லாம் பயன்படாது கழிந்தநாளுள்ளே வைக்கும் வீரன். எ-று.

விழுப்புண் = முகத்தினும் மார்பினும் பட்டபுண். போர்வேட்கைமை அது பெறாத நாள்களோடு கூட்டுமென்பதாம். இவை மூன்றுபாட்டானும் மறஞ்சாமை கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—வீரனென்பான் தனக்குச் சென்ற நாட்கள் இவை என்றெண்ணி அவ்விதமெண்ணிய நாட்களில் பெரியதோர் புண்ணினை அடையாத நாட்களையெல்லாம் பயனடையாமல் கழிந்த நாள்கள் என்று எண்ணுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் வீரனென்பான் தினந்தோறும் யுத்தத்தைச் செய்ய விரும்புவானென்றும், அவ்விதம் செய்யும் யுத்தத்தில் புற

ழுதாகு இடமையால் முகத்திலும், மார்பிலும் புண்ணினை அடைய விரும்புவாரென்றும், தினந்தோறும் யுத்தம் செய்தும் தனக்கு அஞ்சி ஓடிப்போகின்ற வீரரோடு யுத்தம் செய்தலில் மகிழாது தன்னை எதிர்த்துப் போர்செய்து தன் முகத்தின்மீதும், மார்பின்மீதும் புண்படும்படியாக யுத்தம் செய்வதற்கே மகிழ்வாரென்றும், அவ்விதம் புண்பட்ட நாள்களையே தன் ஆயுட் காலத்தில் பயன்பட்ட நாள்களென்று எண்ணுவாரென்றும், ஏனைய நாட்கள் பயன்படாது ஒழிந்த நாள்களென்று வருந்துவா





ரென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர் இதனால் வீரனென்பான் தன்மீது படும் காயத்திற்கு அஞ்சமாட்டான் என்பது அறிந்தோம். வீரன் ஒருவனுக்கு இவ்வுலகத்து வாழும் இன்பத்தில் விருப்பமில்லை போலும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

777. சுழலு மிசைவேண்டி வேண்டா வுயிரார்
கழல்யாப்புக் காரிகை நீர்த்து.

(பரி.) இ-ள். சுழலும் இசைவேண்டி வேண்டா உயிரார்=துறக்கத்துத் தம்மொடு செல்லாது வையத்தைச் சூழ்ந்து நிற்கும் புகழைவேண்டி உயிர் வாழ்தலை வேண்டாத வீரர்—கழல் யாப்புக் காரிகை நீர்த்து=கழல் கட்டுதல் அலங்கார நீர்மையையுடைத்து. எ-று.

வையத்தைச் சூழுமெனவே, அதன் பெருமை பெற்றும். செயப்படுபொருள் வருவிக்கப்பட்டது. சூழ்தல்=அகத்திடல். துறக்கமும் புகழும் எளிதி னெய்துவராகலின், ஆபரணமாவது அதுவே யென்பதாம். (எ)

விளக்கம்:—துறக்கமென்கின்ற தேவநாட்டிற்குத் தம்முடன் வாராது இவ்வுலகத்திலேயே பரவி நிற்கும் புகழினை விரும்பி உயிர் வாழ்தலை விரும்பாத வீரர் பாரினிடத்தே கழல் என்னும் வீரகண்டையைக் கட்டிக் கொள்ளுதல் அலங்காரத் தன்மை யுடையதே ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது,

உலகத்தன் பொருள் தேடிச் செய்ய வேண்டுவன யாவும் செய்து இம்மைப் புகழையும், மறுமைப் போகத்தையும் அடைய விரும்புவார் நெடுங்காலம் அவ்வொழுக்கத்தில் நின்று அதனைச் செய்ய வேண்டுமாதலால், அவ்விதம் வருந்தாது யுத்தகளத்தில் போர் வீரனாக நின்று உயிரைத் துரும்பென மதித்து இறந்து விடுகின்ற வீரன் இம்மைப் புகழையும், மறுமைப் போகமாகிய தேவ போகத்தையும் ஒருங்கே அடைந்து விடுகின்றான். ஆதலால், அவ்வித வீரச் செயலே தக்கதென்றும், அவ்விதம் உயிரைத் துரும்பாக மதிக்கும் வீரன் ஒருவனுக்குக் காலில் வீரகண்டை அணிவதும் வேண்டாமென்றும், அவ்விதம் அணிந்து கொள்வது அலங்காரத் தன்மையுடையது ஆகுமே அன்றி வேறு பயனைத் தருவதில்லை என்றும்



அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித வீரர் தம் அரசன் எவ்வகாலத்து யுத்தத்தை அவன் சொல்லியவாறு செய்வரோ? அல்லது தம் மனம்போல் செய்வரோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

778. உறினுயி ரஞ்சா மறவ ரிறைவன்
செறினுஞ்சீர் குன்ற லிலர்.

(பரி.) இ-ள். உறின் உயிர் அஞ்சா மறவர் = போர்பெறிற் றம்முயிர்ப் பொருட்டஞ்சாது அதன்மேற்செல்லும் வீரர் -- இறைவன் செறினும் சீர் குன்றல் இலர் = தம்மிறைவன் அது வேண்டாவென்று முனியினும் அவ்வீர மிகுதி குன்றார். எ-று.

போர்பெறற்கரியாமையின், அதுபெற்றால் அரசன்றடுப்பினும் நில்லா ரென்பதாம். பிறரும் "போரெனிற் புகலும் புனைகழன் மறவர்" * என்றும் "புட்பகைக்—கேவா னாகலிற் சாகேம் யாமென—நீங்கா மறவர் வீங்குதோள் புடைப்ப" † என்றுங் கூறினர். (அ)

விளக்கம்:—யுத்தம் வருங்காலத்துத் தம்முயிரை இழந்து விடுவோம் என்று அஞ்சாமல் யுத்தத்தின் மீதே செல்லுகின்ற வீரர்கள் தம்முடைய தலைவனாகிய அரசன் யுத்தத்திற்குச் செல்லவேண்டாமென்று கோபிக்கினும் தம்முடைய வீரத்தில் குறையாது யுத்தத்திற்குச் செல்வார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இத

னால், இவ்வீரரது ஆற்றலைக் கேட்ட மற்றைய அரசர்கள் படை யெடுப்பதற்கே அஞ்சியிருப்பரென்றும், அவ்விதம் படை யெடா திருந்த அரசர் ஓர் காலத்தில் தம்முடைய படைச் செருக் கால் படை யெடுத்து வந்தாராயினும் அதைக் கண்ட வீரர்கள் 'நெடும் பொழுது யுத்தம் என்பதே இல்லாது வீணாள் கழித் தோம்; இப்போது யுத்தம் வந்துவிட்டது; இது நம்முடைய நன் னாளாகும்' என்றெண்ணி யுத்தத்திற்கு மகிழ்ச்சியோடு செல்வரென் றும், அவ்வாறு செல்லுங் காலத்து அரசன் வேண்டாமென்று கோபித்துத் தடுக்கினும் அதற்காக அஞ்சாது யுத்தம் பெற்ற தையே மகிழ்ச்சியாகக் கொண்டு யுத்தத்திற்குச் செல்வரென்றும் அறிகிறோம். ஆதலால், நீங்கள் மேல் விளக்கியபடி வீரனென்பான்

* புறநானூறு, 31. † புறநானூறு, 68.



எக்காலத்தும் யுத்தத்தை விரும்ப வேண்டும் என்றும், அரசன் தடுக்கினும் யுத்தத்தில் உள்ள மகிழ்ச்சியால் யுத்தம் செய்யவேண்டு மென்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "வீரனா வான் 'நான் இப்போரைச் செய்து முடிப்பேன்' என்று வஞ்சினங் கூறிச்சென்று வெற்றியடையாது இறப்பானாயின், அக்காலத்து உலகோர் அவனை இகழாது புகழ்வரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

779. இழைத்த திகவாமைச் சாவாரை யாரே
பிழைத்த தொறுக்கிற் பவர்.

(பரி.) இ-ள். இழைத்தது இகவாமைச் சாவாரை = தாம் கூறின வஞ் சினந் தப்பாமற்பொருட்டுச் சென்று சாவவல்ல வீரரை — பிழைத்தது ஒறுக் கிற்பவர் யார் = அது தப்பியவாறு சொல்லி யொறுத்தற்குரியார் யாவர்! எ-று.

இழைத்தல் = இன்னது செய்யேனாயின் இன்னனாகுகவெனத் தான் வருத்தல். சொல்லியென்பது அவாய்நிலையான் வந்தது. வஞ்சினமுடிப்பான் புக்கு முன்னே சாவினுந் தோலாவன்மையின், அது முடித்தாராகவே வைத்துச் சாதற்சிறப்புக் கூறியவாறு. (க)

விளக்கம்:—தாம் கூறிய வஞ்சினம் தப்பாமற் பொருட்டு யுத்தத்திற்சென்று சாவல்லவராகிய வீரனை அவ்வஞ்சினம் முடியாமல் அவர் இறந்ததைக்கூறி இகழ்ந்து பேசுபவர் யாவர் என்று இத்திருக்குறள் வினவுகின்றது. அதாவது, போர்க்களத்துச் சென்று 'என் பகைவனுகிய இவனை இவ்விதம் செய்யேனுயின் நான் ஒரு வீரன் அல்லேன்' என்பது முதலாகப் பல சபத வார்த்தைகளைக் கூறி அவ்விதமே போரிற் சென்று தன் சபதத்தை முடிக்கக்கருதி அது முடிவதற்கு முன்னமே பகைவனுல் இறப்பானுயினும், அவ்விறத்தலால் சபதம் முடித்தவனுகவே உலகோர் கருதுவரே அன்றி, சபதம் முடியாமல் இறந்தான்' என்று யாரும் பழியார் என்றமையால் போரிற் சென்று யுத்தகளத்தில் இறப்பான் ஒருவன் புகழுக்கே உரியனுவான் என்று அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், " இவ்விதம் சாதலால் உலகோர் புகழ்வர் என்று அறிந்தோம். ஆயின், இவ்வித வீரனை வைத்து ஆண்டவனுகிய அரசன் தன் போர்வீரர் தனக்காக இறந்தமை பற்றி எதுவாகக் கரு



துவான் என்பதையும் அறிய ஆசைப்படுகின்றோம்" என்னலும் ஆசிரியர் கூறலாயினர்.

780. புரந்தார்கண் ணீர்மல்கச் சாகிற்பிற் சாக்கா
டிரந்துகோட் டக்க துடைத்து.

(பரி.) இ-ள். புரந்தார் கண் நீர் மல்கச் சாவப்பெறின் —தமக்குச் செய்த நன்றியை நினைந்து ஆண்டவரசர் கண்கள் நீர் மல்கும் வகை போர்மேற் சாவப்பெறின்,—சாக்காடு இரந்து கோட்டக்கது உடைத்து—அச்சாக்காடு இரந்தாயினுங்கொள்ளுந் தகுதியையுடைத்து. எ-று.

மல்குதலாகிய இடத்து நிகழ்பொருளின்றொழில் இடத்தின்மேனின்றது. வினைபழு இல்லிடை சாவாமல் விளிவார் பழிவினைப்பயனெய்தலின், அழித்தவினையாற் றுறக்கமெய்துஞ் சாதலை 'இரந்துகோட்டக்கதுடைத்து' என்றார். இவை நான்குபாட்டானும் உயிரோம்பாமை கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—தமக்குச்செய்த நன்றிகளை எண்ணி ஆண்ட அவ்

லாசர்களது கண்களினின்றும் ஜலமானது பெருகி வழியும்படி யுத்தத்திலிடத்தே சாகக்கூடுமாயின், அவ்வித சாதலானது யாசித்தாயினும் அடையும் தகுதியுடையதாய் உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், யுத்தகளத்தில் தன்னுடைய அரசன்தான் செய்தவீரத்தன்மைக்காகத் தன்னை நினைந்து தம்மிக்கும்படிச் சாதலால் துறக்கமென்கின்ற தேவபோகத்தை அடைதல் கூடுமென்றும், அவ்விதமல்லாது இல்லத்தினிடை இறப்போராகிய உலகத்தவர் நோய் முதலிய கொண்டு இறத்தலால் அவர் செய்த முன் வினையின் பயன்படியே ஏதேனும் பலனை அடைதல் கூடுமே அன்றி, இவ்விதம் வீரசொர்க்கத்தை அடைதற்கு இல்லாததலால இவ்வித வீரசொர்க்கத்தை அடையும், யுத்தகளத்தில் சாகும்சாவினை ஒருவன் யாசித்தாயினும் கொள்ளல் வேண்டுமென்பதால் இவ்வித வீரத்தன்மையே சிறந்ததென்றும அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், “இப்படைச்செருக்கு என்னும் அதிகாரத்தால் வீரரின் தன்மை, அவர் உயிர் ஓம்பாது யுத்தகளத்தில் சாவும் சாவினால் வரும் பயன் ஆகிய யாவுமறிந்தோம். இனி அரசனுக்குக் கூறிய அங்கங்கள் ஆறனுள் மிகுந்து உள்ளதாகிய நட்பு என்பதையும் கூறல்வேண்டும்” என்னனும், ஆசிரியர் கூறலுறாயினர்.

---



## 79. அதிகாரம்.

## நட்பு.

(பரி.) இனி அப்படைபோல அரசனுக்கு வினையிடத்துதவுவதாய நட்பினை ஐந்ததிகாரம் விதிமுகத்தானும் பன்னிரண்டதிகாரம் எதிர்மறைமுகத்தானுங் கூறுவான்றொடங்கி, விதிமுகவதிகாரமைந்தனுள்ளும் முதற்கண் நட்புக் கூறுகின்றார். அஃதாவது இன்னதென்பதூஉம் அதிகாரமுறைமையும் இதனான் விளங்கும்.

விளக்கம் :—அதாவது, இனி மேற்கூறிய படையின் தகுதியைப் போல் அரசனுக்கு அவன் செய்யும் தொழிலிடத்து உதவுவதாகிய நட்பு என்பதனைக் கூற ஆரம்பித்து, ஐந்து அதிகாரங்களால் அந்நட்பினைச் செய்யவேண்டும் விதம் இதுவென்று விரித்துக்காட்

டியும், பன்னிரண்டு அதிகாரங்களால் இவ்விதம் செய்தல்காரு மென்று விலக்கிக்காட்டியும் சொல்லவேண்டி ஆரம்பித்து முதலில் விதிமுகமாயுள்ள ஐந்து அதிகாரங்களும் முதலாவதாகிய நட்பு என்பதனைக் கூறுகின்றனர். அந்நட்பாவது இது என்பதும், படைச் செருக்கினுக்குப் பிறகு ஏன் வைக்கப்பட்டுள்ளது என்பதும் இவ்வதிகாரத்தினுள் விளங்குமென்றனர். அதுகேட்ட மாணுக்கர், "நட்பென்பது அரசனுக்குக் கூறி இருக்கினும் உலகத்தோர் யாவர்க்கும் அதனினும் சிறந்ததில்லை என்று பலர் கூறக்கேட்டிருக்கின்றோம். அவ்வித நட்பினை நன்கு விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

781. செயற்கரிய யாவுள நட்பின் அதுபோல்
வினைக்கரிய யாவுள காப்பு.

(பரி.) இ-ள். நட்பின் செயற்கரிய யாவுள=நட்புப்போலச் செய்து கோடற்கரிய பொருள்கள் யாவையுள!—அதுபோல் வினைக்கு அரிய காப்பு யாவுள=செய்துகொண்டால் அதுபோலப் பகைவர் செய்யும் வினைக்குப் புகற்கரிய காவலாவன யாவையுள! எ-று.

நட்புச்செய்தற்பாலாரைப் பெறுதலும் பெற்றாற் செய்யுமுபாயமும் செய்தாற் பிரிவின்றி நிற்றலுமுதலிய அரியவாகலின் நட்பிற் செயற்கரியன இல்லையென்றும், செய்தாற் பகைவரஞ்சி வினைதொடங்காராகலின் அது போல வினைவாராமைக்கு அரிய காவலில்லையென்றுங் கூறினார். நட்புத்தான்



இயற்கை செயற்கையென இருவகைப்படும். அவற்றுள் இயற்கை பிறப்பு முறையானுடையன தேயமுறையானுடையனவென இருவகைப்படும். அவற்றுள் முன்னையது சுற்றமாகலின் அது சுற்றந்தழாலினடங்கிற்று; ஏனையது பகையிடையிட்ட தேயத்தாராகலின், அது துணைவலியென வலியறிதலுள் அடங்கிற்று. இனி ஈண்டுச் சொல்லப்படுவது முன்செய்த உதவிபற்றிவருஞ் செயற்கையேயாகலின், அதன் சிறப்பு இதனாற் கூறப்பட்டது. (௧)

விளக்கம்:—நட்பினைப்போலே செய்து அடையக்கூடிய பொருள்கள் எவையேனும் உளவோ? அந்நட்பினைப்போல ஒருவனுக்குப் பகைவர் செய்யும் தீங்கான வினையைத் தடுத்தற்கு உரிய

அரியகாவல் ஏதாயினும் உளவோ? என்று இத்திருக்குறள் வினவுகின்றது. அதாவது, நட்பினைச் செய்யவேண்டுமாயின் நட்பிற்கு உரியாரைப் பெறுதல் மிகுதியும் அருமையென்றும், அவ்விதம் பெறினும் அந்நட்பினைச் செய்யும் உபாயத்தை அறிதல் வேண்டுமென்றும், அவ்விதம் உபாயம் அறிந்து செய்யுங்காலத்து அந்நட்பானது மாறுபாடு அடையாது நிற்கவேண்டுமென்றும் அறிகின்றோமாதலால், முதலில் நட்பினைச் செய்வது மிக அருமையென்றும், அந்நட்புத்தான் கைகூடிவிடுமாயின் அதைக் கொண்ட ஒருவனைக் கண்டகாலத்து அவன் பகைவர் மிகப் பயந்தவராய் அவன் மீது பகைகொண்டு எதிர்க்கமாட்டாரென்றும், ஆதலால் நட்பைப்போல் பகைவரைத் தடுக்குங் காவல் வேறொன்றுமில்லையென்றும் அறிகின்றோம். அன்றியும் அவ்வித நட்பு இயற்கை நட்பென்றும், செயற்கை நட்பென்றும் இரண்டு விதப்படும். அவ்விரண்டனுள் இயற்கையாக அமைந்த நட்பானது ஒருவருக்கொருவர் சாதியால் உண்டாவதும், தேசமுறையால் உண்டாவதும் ஆக இரண்டு விதப்படும். இவ்விதம் சாதியும், சுற்றமும் ஆகியவற்றால் உண்டாகிய நட்பினை முன்னரே "சுற்றந்தழால்" என்று அரசனுக்குக் கூறிய அரசியலுள் ஐம்பத்து மூன்றாமதிகாரமாக வைக்கப்பட்டு உள்ளதால் அவ்வித நட்பு அதனுள் அடங்கிற்று. இனி தேசமுறையால் உண்டாகும் நட்பானது பகையர் எதிர்த்த காலத்து உண்டாகின்றதாதல் பற்றி அது வலியறிதல் என்னும் நாற்பத்தெட்டாம் அதிகாரத்துள் "துணை வலியென"க் கூறியதாயிற்று. ஆகவே இயற்கை அல்லாது முன்செய்த உதவி ஒன்றினையே எண்ணி



வரும் செயற்கை நட்பினையே நன்குச் சொல்லுகிறதென்றும் அவ்வித செயற்கை நட்பினையே இத்திருக்குறள் நமக்கு அறிவிக்கின்றதென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "நட்பைப்போல் சிறப்புடையது வேறொன்றில்லை என்று அறிகின்றோம். அவ்வித சிறப்பாகிய நட்பினைச் செய்து கொள்வதற்கு எவ்வித காரணம் கொண்டு செய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

782. நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப்
பின்னீர பேதையார் நட்பு.

(பரி.) இ-ள். நீரவர் கேண்மை பிறை நிறை நீர = அறிவுடையார் நட்புக்கள் பிறைநிறையுந் தன்மைபோல நாடோறு நிறையுந்தன்மையவாம்,— பேதையார் நட்பு மதியின் பின் நீர = மற்றைப்பேதைமையுடையார் நட்புக்கள் நிறைந்த மதியின் குறையுந்தன்மைபோல நாடோறுங்குறையுந் தன்மையவாம். எ-று.

'நீரவர்' என்றார் இனிமைபற்றி. கேண்மை, நட்பென்பன ஒருபொருட் கிளவி. செய்தாரது பன்மையான் நட்பும் பலவாயின. அறிவுடையாரும் அறிவுடையாருஞ் செய்தன முன்சுருங்கிப் பின்பெருகற்கும், பேதையாரும் பேதையாருஞ்செய்தன முன்பெருகிப் பின் சுருங்கற்குங் காரணம் தம்முண் முன்னறியாமையும் பின்னறிதலுமாம். (உ)

விளக்கம் :—அறிவுடையார் செய்கின்ற நட்புக்கள் வளர் பிறைச் சந்திரன் தினந்தோறும் ஒவ்வொரு கலையாகச் சேர்ந்து நிறைவதுபோல் நாள்தோறும் நிறையும் தன்மையுடையனவாய் இருக்குமென்றும், அவ்விதம் அல்லாது அறிவில்லாத பேதையர் செய்யும் நட்புக்கள் பூரணச்சந்திரன் பின் ஒவ்வொரு கலையாக ஒவ்வொருநாளும் குறைந்து போவதுபோல் தினந்தோறும் குறைந்து கொண்டேவரும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அறிவுடைய பெரியோர் முதலில் நட்புக்கொள்வதற்கு முன் நட்புக் கொள்வதற்கு உரியாரைத் தெரிந்து நட்பினைச் செய்வர் ஆதலால் முதலில் ஒவ்வொரு குணங்களாக ஒருவருக் கொருவர் ஆய்ந்து அறிந்தபிறகு நட்பினைப் பலப்படுத்துவரென்றும், அவ்வித நட்பு பிறைச் சந்திரன்போல் வளர்ந்து பயன் தருமென்றும், அவ்விதம்



அறியவேண்டுவனவற்றை அறியும் அறிவில்லாத பேதையர் நட்புச் செய்யத் தொடங்குவாராயின் ஒன்றும் ஆராயாமல் பூரணச் சந்திரனைப்போல் முழுநட்பு முதலிலேயே கொள்வரென்றும், பிறகு ஒன்று கூடி எல்லா இன்பங்களையும் அநுபவிக்க ஆரம்பித்து குற்றங்கள் ஒன்றின்பின் ஒன்றாகத்தோன்ற நாளுக்கு நாள் சந்திரன் தேய்ந்து போவதுபோல் அவ்வித நட்புத் தேய்ந்து பின்னர் ஒன்றுமில்லா

மல் போய்விடுமென்றும் அறிகின்றோம். ஆகலால் அறிவுடைமை யோடு கூடிச்செய்கின்றநட்பே நட்பென்றும், அவ்விதமல்லாத நட்பு நட்பாகாதென்றும் அறிகிறோம். இதனை,

"கருத்துணர்ந்து கற்றறிந்தார் கேண்மை யெஞ்ஞான்றுங்
குருத்திற் கரும்பு தின்றற்றே—குருத்திற்
கெதிர் செலத் தின்றன்ன தகைத்தரோ வென்று
மதுர மிலாளர் தொடர்பு."

என்னும் நாலடிச் செய்யுளாலும் அறிதல்கூடும் என்றனர். அதை கேட்ட மாணக்கர், "இவ்விதம் அறிவுடையார் ஒருவருக்கொருவர் செய்த நட்புப் பிரியாது இருப்பதற்குக் காரணம் என்ன?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

783. நவிறொறு நூனயம் போலும் பயிறொறும்
பண்புடை யாளர் தொடர்பு.

(பரி.) இ-ள். பண்பு உடையாளர் தொடர்பு பயிறொறும்=நற்குண முடைய மக்கள் தம்முட்செய்த நட்புப் பயிலுந்தோறும் அவர்க்கின்பஞ் செய்தல்—நூல் நவிறொறும் நயம்போலும்=நற்பொருள் கற்குந்தோறுங் கற்றார்க் கின்பஞ் செய்தலை யொக்கும். எ-று.

நயத்தினைச் செய்தலான், நயமெனப்பட்டது. இருமையினும் ஒருகாலைக் கொருகால் மிகுமென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் அச்சிறப்பிற் கேது கூறப்பட்டது. (௩)

விளக்கம்:—நல்ல குணமுடைய மக்கள் தமக்குள் செய்த நட்பானது பழகும்தோறும் அவர்க்கு இன்பத்தைச்செய்தல், நூலில் உள்ள பொருளைப் படிக்கும்தோறும் படிப்பார்க்கு இன்பம் செய்தலை ஒத்திருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதனால்,

54



பழகும்தோறும் பழகும்தோறும் நட்பு மிகுதியால் ஒரு காலைக்கு ஒருகால் மிகுந்து வருமென்றும், அவ்விதம் மிகுதலால் உண்டாகும் இன்பமானது, நூல்களைக்கற்று அதனாலாகிய பயனை அடைய விரும்பிய ஒருவன் மேலும் மேலும் கற்குந்தோறும் கற்குந்தோறும்

பொருளின் இன்பமானது எவ்விதம் அதிகரித்துக்கொண்டே வருகின்றதோ அதுபோல் அதிகரிக்கும் என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "இவ்விதம் நட்புக்கொண்டு இன்பமடைகின்ற இருவருள் ஒருவர் ஏதேனும் தவறிப்போவாராயின் மற்றொருவன் குற்றம் செய்தவனோடு மகிழ்தல் வேண்டுமோ? அல்லது அவனுக்குப் புத்திபுகட்டல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

784. நகுதற் பொருட்டன்று நட்டன் மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

(பரி.) இ-ள். நட்டல் நகுதற்பொருட்டன்று=ஒருவனோடொருவன் நட்புச் செய்தல் தம்முணகுதற்கியைந்தன சொல்லி நகையாடற் பொருட்டன்று,—மிகுதிக்கண் மேற்சென்று இடித்தற் பொருட்டு=அவர்க்கு வேண்டாத செய்கை புகுதாயவழி முற்பட்டுக் கழறுதற்பொருட்டு. எ-று.

பழியும் பாவமுந் தருஞ்செய்கை துன்பமே பயத்தலான் வேண்டப்படுவ தன்மையின் அதனை 'மிகுதி' என்றும், அதுசெய்தற்கு முன்னே மீட்டல் வேண்டுதலின் 'மேற்சென்று' என்றும், இன்சொற்கு மீளாமையின் 'இடித்தற்பொருட்டு' என்றும் கூறினார். இதனான் நட்பின் பயன் கூறப்பட்டது. (௪)

விளக்கம்:—ஒருவனோடொருவன் நட்புக்கொள்ளுதல் ஒருவன் குற்றம் செய்தால் மற்றொருவனும் குற்றம் செய்தவனோடு சேர்ந்து தங்கள் தங்களுக்கு இசைந்த வார்த்தைகளைச் சொல்லி நகைப்பதற்கு அன்று என்றும் ஒருவனிடம் குற்றம் கண்டவிடத்து அவன் கூறுமளவிருக்கினும் மற்றொருவன் தானே முந்தி அவன் செய்த குற்றத்தைச் சொல்லி இடித்துப் புத்தி கூறல்வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நட்புக்கொண்ட ஒருவன் தன் நண்பன் ஏதேனும் பழியும் பாவமும் தருகின்ற செய்கையைச் செய்வானாயின், பலரால் வேண்டப்படாத அவ்வித அதிக்



கிரமச் செயல்களைச் செய்வதற்கு எண்ணிய காலத்து எண்ணிய அச்செய்கை முடிவதற்கு முன்னே விரைந்து சென்று அவனைப் பழியினின்றும், பாவத்தினின்றும் மீட்டல் வேண்டுமென்றும், அவ்

விதம் மீட்க எண்ணி புத்தி புகட்டும் காலத்து இனிய சொற்களுக்குப் பெரும்பான்மையும் இணங்கி மீளாகுதலால் வன்சொல் கூறிப் புத்திபுகட்டித் திருப்புதல் வேண்டுமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நட்புக் கொள்வதாலாகிய பயன் இதுவென்று அறிந்தோம். இனி நட்புக்கொள்வதற்கு ஏது காரணமாக வுள்ளது?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

785. புணர்ச்சி பழகுதல் வேண்டா வுணர்ச்சிதா
னட்பாங் கிழமை தரும்.

(பரி.) இ-ள். புணர்ச்சி பழகுதல்வேண்டா = ஒருவனோடொருவன் நட்பாதற்குப் புணர்ச்சியும் பழகுதலுமாகிய காரணங்கள் வேண்டுவதில்லை,— உணர்ச்சிதான் நட்பாம் கிழமை தரும் = இருவர்க்குமொத்தவுணர்ச்சிதானே நட்பாமுரிமையைக் கொடுக்கும். எ-று.

புணர்ச்சி = ஒருதேயத்தராதல்; "இன்றேபோல்கநும் புணர்ச்சிதானே"* என்றதும் அது. பழகுதல் = பலகாற் கண்டுஞ் சொல்லாடியும் மருவுதல். இவ்விரண்டுமின்றிக் கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும்போல உணர்ச்சியொப்பின், அதுவே உடனுயிர்நீங்குமுரிமைத்தாய நட்பினைப் பயக்குமென்பதாம். †நட்பிற்குப் புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சியொத்தலென்னும் காரணமூன்றனுள்ளும் பின்னது சிறப்புடைத்தென்பது இதனாற் கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—உலகத்தில் ஒருவனோடொருவன் நட்பினைச் செய்வதற்குப் புணர்ச்சியும், பழகுதலும் ஆகிய காரணங்கள் வேண்டுவதில்லையென்றும், அந்நட்புக்கொண்ட இருவருக்கும் உள்ள சமானமாகிய உணர்வே நட்பு ஆகக்கூடிய உரிமையை உண்டுபண்ணும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நட்புக்கொள்ளுபவர் ஒரு தேயத்தாராகவும், பலமுறை கண்டு பேசிப் பழகுகின்ற பழக்கமுடையவராகவும் இருத்தல் வேண்டுவதில்லை என்றும், இருவர்க்கும் ஒத்த அறிவே அந்நட்பினை அதிகரிக்கச் செய்

* புறநானூறு; 58. † புறநானூறு, 217.

கின்றதென்றும், ஆதலால் நட்புச் செய்வதற்கு வேண்டுவனவாகிய புணர்ச்சி, பழகுதல், உணர்ச்சி ஒத்தல் என்னும் மூன்று காரணங்களுள் உணர்ச்சி ஒத்தலே சிறப்புடையதாதலால் அதுவே போதுமானது என்றும் அறிகின்றோம். அன்றியும், இதனைப் புறநானூறு ஐம்பத்தெட்டாவது செய்யுளில் "பெருந்திருமாவளவன்" என்னும் வளவன் என்னும் சோழனும், "பெருவழுதி" என்னும் பாண்டியனும் ஆகிய இருவரும் நட்புக் கொண்டிருந்தகாலத்து அவ்விருவரையும் நோக்கிக் கூறியது போல் "உம்முடைய புகழ் நெடுங்காலம் இருப்பதாக, நீங்கள் ஒருவர் ஒருவர்க்கு உதவி செய்வீராக! நீங்கள் இப்போது கூடியுள்ள நட்பினின்றும் வேறுபடாது இருப்பீராயின் இவ்வுலகமானது உங்கள் கையகத்தே தவறாமல் கிடைக்கும். ஆதலால் நல்லனவும், நியாயமுடையனவும், ஒழுக்கமுடையனவும் ஆகிய சீலையும், அன்பினையும் உடைய மனமுடையவராகிய உங்களைப் பிரித்துவிடுதற்குச் சுழன்று வருகின்ற பகைவரது பயனற்ற மொழிகளைக் கேளாமல் இன்றிருப்பதுபோல் இந்நட்பு என்று மிருத்தல் வேண்டும்" என்று கூறப்பட்டிருக்கின்றது. 'இன்றேபோல்கநும் புணர்ச்சி' என்று கூறும் ஒரு தன்மையாயிருக்கும் புணர்ச்சி ஒன்றினையே கூறியதாயிற்று. அதுவன்றியும் கோப்பெருஞ்சோழனுக்கும் பிசிராந்தையார்க்கும் போல உடலினின்றும் உயிர் நீங்கும் வரையில் நட்பிருக்கும் என்று கூறுவதால் இவ்விருவர்க்கும் உள்ள நட்பின் சரிதையை ஈண்டுக் கூறுவோம்.

உறையூரைத் தனக்கு ராஜதானியாகக் கொண்டு ஆண்ட கோப்பெருஞ்சோழனென்பான் பிசிராந்தையார் என்னும் ஓர் புலவர்க்கு உயிர்த்தோழனாக இருந்தானென்றும், இச்சோழன் தன் பிள்ளைகள் இருவரும் தன்னொடு பகைகொண்டு போர்செய்ய வந்தகாலத்து புல்லாற்றூர் எயிற்றியனாரால் சமாதானம் செய்யப்பட்டு இருந்தானென்றும், இவ்விதமிருந்தவன் பாடும் தொழிலில் வல்லவரும்

இருந்தமையாலும் இல்லறப்பொருளின் உண்மை நிலையின உணர்ந்தவருதலாலும், தனக்கிருந்த எல்லாவற்றையும் துறந்து வடக்குச் சென்று இருந்து உயிரை நீப்பதற்கு ஆயத்தமாய் இருந்த காலத்துத் தன்னுடன் உயிரை விடுவதற்கு வந்த பொத்தியாரென்னும்



மற்றொரு நண்பினை "நீவிர் மகன் பிறந்தபின் வருக" என்று கூறித் தன் உயிர் நீத்து நின்றனென்றும், இவ்விதம் வடக்குச் சென்று துறவுபூண்டு உயிர் நீத்தான் என்று கேள்வியுற்ற பிசிராந்தையார் என்ற புலவரும் உடனே உயிரை நீத்தனர் என்றும் அறிகின்றோம். அதுவன்றியும், சோழன் மந்திரியாராகிய சீனக்க முதலியாரும், பொய்யா மொழிப் புலவரும் கொண்டிருந்த நட்பே உணர்ச்சி தந்ததற்கு ஓர் உதாரணமாகும். அது எங்ஙனமோ வெனில்? பொய்யா மொழிப் புலவர் தம் நாடுவிட்டுப் பாண்டிநாட்டிற்குச் சென்று அங்கு மறைந்த சங்கத்தை மறுபடியும் நிறுத்த வேண்டி முயற்சித்தும் அது பயன்படாமற் போகவும், பின்னர் சோழநாட்டிற்குச் சென்று அங்கு அக்காலத்துச் சோழன் பிரதம மந்திரியாக இருந்த சீனக்க முதலியாரை நட்பினராகப் பெற்று அவருடன் வசித்திருந்த காலத்து ஓர் நாள் மந்திரியார் புலவரோடு தம் மஞ்சத்தில் படுத்துக்கொண்டு பேசி இருக்கவும், அவ்விதம் பேசி இருந்த காலத்து அரசனால் அழைக்கப்பட்ட மந்திரியார் போய்விடவும் மஞ்சமிசையில் படுத்துப் பேசிய புலவர் பெரும் பொழுது காத்திருந்து அதன்மீதே உறங்கி விடவும், அது அறியாத முதலியார் மனைவியார் தம் தலைவரது படுக்கையாதலால் தலைவரே பள்ளிகொண்டு உள்ளார் என்று எண்ணியவராய் அப்படுக்கையிற் சென்று படுத்துக் கொண்டனர். பின்னர் மந்திரியார் தம்முடைய தொழில் முடிந்தவுடன் நடுராத்திரியில் மஞ்சமிசையில் வந்து பார்த்த காலத்து இருவரும் படுத்திருப்பதைக் கண்டு 'செல்லக்கிடமின் செல்லக்கிடமின்' என்றுகூறி அவ்விருவருக்கும் நடுவில் உறங்கினரென்றும், இதை எவ்விதமாகவோ அறிந்த அர

மாழனுக்கும் வேல்விழியார் மாசேனை கண்டியூர்
சேனைக்கா செல்லக்கிட"

என்னும் வெண்பாவைப் பாடுதலும் அவ்விரண்டு தேகங்களும் பிரிந்து கடலில் இடம் விடக்கண்டு கடலில் படுத்து உயிர் துறந்தனர். ஆதலால், உணர்ச்சி ஒன்று மாத்திரம் ஒத்திருக்குமாயின் அந்நட்பானது எக்காலத்தும் நீங்காததென்றும் அறிகவென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சிலர் நட்புக் கொண்டு கடைசியில் அந்நட்பினின்றும் நீங்குவது எக்காரணம் பற்றி?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



786. முகநக நட்பது நட்பன்று நெஞ்சத்
தகநக நட்பது நட்பு.

(பரி.) இ-ள். முகம் நக நட்பது நட்பு அன்று = கண்டவழி அகமொழிய முக மாத்திரமே மலரும்வகை நட்கும் அது நட்பாகாது;—நெஞ்சத்தகம் நக நட்பது நட்பு = அன்பால் அகமு மலர நட்குமதே நட்பாவது எ-று.

நெஞ்சின்கணிகழ்வதனை 'நெஞ்சத்தகம்' என்றார். நிறைந்த உவகையின்மை விகாரத்தாற் றொக்கது. இதனான் இரண்டும் ஒருங்கே மலரவேண்டு மென்பது பெற்றாம். (௬)

விளக்கம்:—அன்பின் மிகுதியால் மனமும் மலரும்படி நட்புக் கொள்வதே நட்பாகுமென்றும், அதுவன்றிக் கண்ட இடத்தே அகத்தில் அன்பு கொள்ளாது புறத்தில் முகம் மாத்திரம் மலர்ந்து நட்புக்கொள்வது நட்பு ஆகாது என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நீங்கள் மேல் விளம்பியபடி அகமும், முகமும் ஒன்று படும்படி அன்புகொண்டு நட்புக் கொண்டவர் எக்காலத்தும் விடாத நட்பினராய் இருப்பரென்றும், அவ்விதமல்லாது மனத்தில் சிறிதும் அன்பில்லாது பொய்ம்மையாக நடித்து அன்பு கொண்டவர்போல் முகத்தை அலர்த்திக் காண்பிப்பவர் நட்பானது நெடுநாள் நில்லாது பிரிந்து போகுமென்றும் அறிகோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் முகமும் அகமும் ஒன்றாக அன்புகொண்டு நட்புக்கொண்டால் ஒருவருக்கொருவர் எவ்வித

உபகாரத்தைச் செய்துகொள்வர் ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

787. அழிவி னவைநீக்கி யாறுய்த் தழிவின்க
ணல்ல லுழப்பதா நட்பு.

(பரி.) இ-ள். அழிவினவை நீக்கி ஆறு உய்த்து=கேட்டினைத் தரும் நெறிகளைச் செல்லுங்கால் விலக்கி நன்னெறிகளைச் செல்லாக்கால் செலுத்தி—அழிவின்கண் அல்லல் உழப்பது நட்பாம்=தெய்வத்தால் கேடுவந்துழி அது விலக்கப்படாமையின் அத்துன்பத்தை உடனனுபவிப்பதே ஒருவனுக்கு நட்பாவது. எ-று.

ஆறென வருகின்றமையின், அழிவினைத் தருமவை யென்றொழிந்தார். "தெருண்டவறிவினவர்", *என்புழிப்போல இன்சாரியை நிற்க இரண்டா

* நாலடியார், இளமை, 1



வுருபு தொக்கது. இனி அவையென்று பாடமோதி, அதற்கு அழிவி னுஞ் செல்வழியிலும் வந்த துன்பங்களென்றும், அழிவின்க ணென்பதற்கு யாக்கை யழிவின்கணென்றும் உரைப்பாருமுளர். (எ)

விளக்கம்:—நட்புக்கொண்ட ஒருவன் அவனுக்குக் கேட்டினைத்தருகின்ற தீயவழிகளில் செல்லுவானாயின் அவ்வாறு செல்லாது அவனை விலக்கி அத்தீயவழிகளுக்கு மாறுபட்ட நல்லவழிகளில் செலுத்தியும், ஊழ்வலியால் அவனுக்குக் கேடு சம்பவித்த காலத்து அவ்விதக் கேட்டினை நட்பாயினவன் விலக்குவது கூடாததனால் அக்கேட்டால்வரும் துன்பத்தைத் தானும் அனுபவித்து நிற்பதே ஒருவனது நட்பின் செயலாகும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், உண்மை நட்புக்கொண்ட ஒருவன் தன் நண்பனுக்கு நல்லறிவு ஊட்டியும், நீதியல்லாத வழிகளில் செல்லாமல் தடுத்தும், நீதியானவைகளைச் செய்யும்படிச் செய்தும், தன் நட்பினனது ஊழ்வலியால் தீமையை அனுபவிக்க நேரின் அதனைத் தானும் உடன் அனுபவித்தல் வேண்டும் என்றும் அறிக்

தோம். அன்றியும், இதனை இராமாயணத்தில் இராவணனுக்குப் புத்திகூறிய கும்பகர்ணனிடத்தும், பாரதத்தில் துரியோதனனுக்குப் புத்திகூறிய பீஷ்மன், துரோணன் முதலியவர்களிடத்தும் காணுதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நண்பினனுக்கு வந்த துன்பத்தைத் தடுக்கும் காலத்து மிக விரைந்துசெய்தல்வேண்டுமென்னோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

788. உடுக்கை யிழந்தவன் கைபோல வாங்கே
யிடுக்கண் களைவதா நட்பு.

(பரி.) இ-ள். உடுக்கை இழந்தவன் கைபோல = அவையிடை ஆடை குலைந்தவனுக்கு அப்பொழுதே கைசென்றுதவி அவ்விளிவரல் களையுமாறு போல,— ஆங்கே இடுக்கண் களைவது நட்பாம் = நட்டவனுக்கு இடுக்கண் வந்துழி அப்பொழுதே சென்றுதவி அதனைக்களைவதே நட்பாவது. எ-று.

அற்றமறைத்தற்கட் கை தன்மனத்தினுமுற்படுதலின், அவ்விரைவு இடுக்கண்களைவுழியும் அதற்கொத்த தொழிலுவமையினும் வருவிக்க. உடையவன் றொழில் நட்பின்மே லேற்றப்பட்டது. (அ)



விளக்கம்:—சபையினிடத்தே நின்ற ஒருவன் உடுத்தி இருந்த ஆடை அவிழ்ந்து கீழேவிழநேருமாயின், நேர்ந்த அப்பொழுதே அவ்வுடுக்கை இழந்த அவனது கையானது சென்று அவிழ்ந்த வஸ்திரத்தை உடுத்தி அவனுக்கு அவமானத்தை நீக்குவதுபோல், தன்னிடத்து வந்த நட்புக்கொண்டவனுக்குத் துன்பம் வந்தகாலத்துத் துன்பம் வந்த அப்பொழுதே போய் உதவி அத்துன்பத்தினை நீக்குவதே நட்பென்று சொல்லப்படுவது என்று இத்திருக்குறள் கூறாநின்றது. ஆதலால், ஆடையிழந்தவனுக்கு வந்த அவமானத்தினை அவன் கையானது அவன் மனத்திற்கும் முன் சென்று தடுப்பதற்கு அவ்வாடையைக் கட்டுகின்றதோ அதுபோல் மனத்தினும் விரைந்து சென்று தன் நட்பினன் துன்பத்தை நீக்க முயலல் வேண்டும் என்று அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் விரைந்து துன்பத்தை நீக்குவது எது? எதைக் கருவியாகக் கொண்டு நீக்குதல் வேண்டும்?" என்

என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

789. நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனிற் கொட்பின்றி
ஒல்லும்வா யூன்று நிலை.

(பரி.) இ-ள். நட்பிற்கு வீற்றிருக்கை யாதெனின் = நட்பினுக்கு அரசிருக்கையாதெனின்,—கொட்பு இன்றி ஒல்லும்வாய் ஊன்றும் நிலை = அஃது ஒருஞான்றுந் திரிபின்றி இயலுமெல்லை யெல்லாம் அறம்பொருள்களிற் றளராமைத் தாங்குந் நிலைமை. எ-று.

ஒருஞான்றும் வேறுபடாது மறுமையிம்மைகட்கு உறுதியாய அறம் பொருள்களிற் றளர்ந்துழி அத்தளர்ச்சி நீக்கி அவற்றின்கணிறுத்துதற்கு மேல் ஒரு செயலின்மையின், அதனை நட்பிற்கு முடிந்தவெல்லை யென்றார். (௯)

விளக்கம்:—நட்பிற்கு அரசிருக்கைபோன்ற முதன்மையாவது எது எனின்? அந்நட்பானது எக்காலத்தும் சிறிதும் வேறுபாடு இல்லாது செல்லும் இடங்களிலெல்லாம் கூடிய அளவு அறம், பொருள்களில் தளராது இருக்கும் வண்ணம் தாங்குகின்ற வன்மை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், நட்பிற்கு முடிந்த எல்லையாவது ஒரு காலத்தும் சிறிதும் வேறுபடாது இருப்





பதற்கு அறம், பொருள்களில் தன் நட்பினனுக்குக் குறைவு வந்த காலத்து அக்குறைவை நீக்கும்படி அறத்தின் வழி நிற்கச் செய்தும், பொருள்களில் தளர்ச்சிவந்த காலத்துப் பொருள் உதவியும் அவன் அடையவேண்டிய இம்மைப் புகழையும், மறுமை வான உலகத்தையும் அவனை அடையச் செய்வது நட்பின் முடிந்த எல்லை என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நட்புக் கொண்ட ஒருவருக்கொருவர் தம் நட்பின் மிகுதியைப்பற்றி மற்ற ஒருவரிடத்துப் புகழ்ந்து சொல்லிக் கொள்ளல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

790. இனைய ரிவரெமக் கின்னம்யா மென்று

புனையினும் புல்லென்னு நட்பு.

(பரி.) இ-ள். இவர் எமக்கு இனையர் யாம் இன்னம் என்று புனையினும் = இவர் எமக்கித்துணையன்பினர் யாமிவர்க்கித்தன்மையமென்று ஒருவரை யொருவர் புனைந்து சொல்லினும், — நட்புப் புல்லென்னும் = நட்புப் புல்லி தாய்த் தோன்றும். எ-று.

இவர்க்கென்பது வருவிக்கப்பட்டது. தாம் அவரென்னும் வேற்றுமை யின்றி வைத்துப் புனைந்துரைப்பினும் வேற்றுமையுண்டாமாகலின், நட்புப் புல்லென்னுமென்றார். இவை யைந்துபாட்டானும் நட்பினதிலக்கணங் கூறப்பட்டது. (௰)

விளக்கம் :— நட்புக்கொண்டவர் தம் நட்பு இத்துணைத் தகுதி யுடையது என்று பிறர் அறியவேண்டி ஒருவருக் கொருவர் எதி ரெதிராக இருந்து கொண்டு 'இவர் நமக்கு இவ்வளவு பெரிய தோர் அன்பினை உடையவர்; நாம் இவர்க்கு இவ்வித தன்மையினை உடையோம்' என்று ஒருவரை ஒருவர் அலங்கார வார்த்தை களால் புகழ்ந்து சொல்லிக் கொள்ளின், அவ்வித நட்பு அற்ப மாகவே காணப்படும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆத லால், உண்மை நட்புக்கொண்ட நட்பினர் இவரென்றும் நாமென் றும் வேறுபடுத்திக் கூறிய சொற்களாலேயே, எவ்வளவு வேறு படாதசொற்களால் தம்மைப் புகழ்ந்து சொல்லிக் கொள்ளினும், வேறுபாடாகக் காணப்பட்டு நட்பின் உறுதியை உண்டாக்காதென்



றும், வேறுபாடு அற்று ஒருவருக்கொருவர் எதிரே புகழாது இருப் பதே உண்மை நட்பென்றும் அறிகிறோம். இதனை,

“ஆசானைக் காணுமிடத்து அன்பாரவேறுதித்தல்
நேசனையு மப்படியே வாச மனையாளைப்
பஞ்சணையில் மைந்தனை நெஞ்சில், வினை
யாளை வேலை முடிவில்.”*

என்றபடி, உண்மை அன்பு கொண்ட நட்பினர் ஒருவருக்
கொருவர் நேரே புகழாது, ஒருவர் இல்லாத இடத்தில் மற்றொரு
வர் அன்பு மிகுந்த மனத்தால் துதித்தல் வேண்டுமே அன்றி
நேரே புகழ்ந்து கொள்ளுதல் கூடாதென்றும், அவ்வாறு புகழ்
தால் அது நட்பு ஆகாதென்றும் அறிந்தோம் என்றனர். அது
கேட்ட மாணாக்கர், "இவ்வதிகாரத்தால் நட்பு என்பது இது என்
பதையும், அதன் சிறப்பினையும், அதன் பயனையும், அதன் இலக்க
ணத்தையும் அறிந்தோம். இனி அவ்வித நட்பினரைத் தெரிந்து
கொள்ளல் வேண்டுமன்றோ? அவ்விதம் தெரிந்து கொள்வதற்கு நம்
ஆசிரியர் தெய்வப்புலவர் என்ன அருள் செய்கின்றனர் என்று
அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 80. அதிகாரம்.

## நட்பாராய்தல்.

---

(பரி.) அஃதாவது மேற் சொல்லிய இலக்கணத்தாரை யாராய்ந்தறிந்தே
நட்க வேண்டுதலின், அவரை யாராயுந் திறம். அதிகாரமுறைமையும் இத
னானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது, முன் அதிகாரத்தில் கூறிய நட்புக்
குரிய இலக்கணமுடையாரை ஆராய்ந்து, பின்னர் நட்புக்கொள்ள
வேண்டுவது ஆதலின், அவ்வித நட்பினரை ஆராயும் தன்மையே
நட்பாராய்தல் எனப்படும். அதன் பொருட்டே இவ்வதிகாரம்
அதன் பின்னர் வைக்கப்பட்டு உள்ளது என்று அறிகின்றோம்

---

* தனிப்பாடற்றிரட்டு.



என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அவ்வாராய்தலின் திறத்தைக்
கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

791. நாடாது நட்டலிற் கேடில்லை நட்டபின்

வீடில்லை நட்பாள் பவர்க்கு.

(பரி.) இ-ள். நட்பு ஆள்பவர்க்கு நட்டபின் வீடு இல்லை = நட்பினை விரும்பி அதன் கண்ணே நிற்பார்க்கு ஒருவனோடு நட்புச் செய்தபின் அவனை விடுதலுண்டாகாது;— நாடாது நட்டலிற் கேடு இல்லை = ஆதலான், ஆராயாது நட்புச் செய்தல்போலக் கேடுதருவது பிறிதில்லை. எ-று.

ஆராய்தல் = குணஞ்செய்கைகளது நன்மையையாராய்தல். கேடு — ஆகு பெயர். நட்டார் தாமென்னும் வேற்றுமையின்மையின், 'வீடில்லை' என்றும், அவ்வேற்றுமையின்மையான் அவன்கட் பழிபாவங்கள் தமவாமாகலின் இருமையுங் கெடுமென்பது நோக்கி 'நாடாது நட்டலிற் கேடில்லை' என்றுங் கூறினார். (க)

விளக்கம்:— உலகத்து நட்பு என்பதனை விரும்பி அந்நட்பினிடத்தே நிலைத்து நிற்பார்க்கு ஒருவனோடு நட்புச் செய்வரேனின், பின் அந்நட்பினை விடுதல் கூடாதாதலால், ஆராயாது நட்புச் செய்வாருயின் அதைப்போல் பின்னர் கேடு தரும் செய்கை வேறு ஒன்றுமில்லை யென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், ஒருவன் ஒருவனோடு நட்புச்செய்ய வேண்டுமாயின் தான் நட்புக் கொள்ளுகிறவனது குணங்களையும், செய்கைகளையும் ஆராய்ந்து குணமும், செயலும் நன்மையாக இருக்குமாயின் அவ்வித நட்பினைச் செய்தல் வேண்டுமென்றும், ஏனெனில்? அவ்வாறு நட்பைக் கொண்ட பிறகு நட்புக் கொண்டவனும் தானும் ஒருவித வேறுபாடும் இல்லாது இருக்க வேண்டுமாதலாலும், அவ்வித மிருக்குங்காலத்து நட்புச்செய்தவன் தீக்குணங்கள் உடையவனும், தீச்செயல்கள் உடையவனும் ஆக இருப்பானுயின் அதனால் அவன் செய்கின்ற காரியங்களால் அவனுக்கு வருகின்ற பழியும், பாவங்களும் தனக்கும் வருமாதலாலும், அவ்வாறாயாது செய்த நட்பின் தொடர்பினால் இம்மைப் பயனாகிய புகழையும், மறுமைப்பேறாகிய தேவ போகத்தையும் இழக்க நேருமாதலால் 'நாடாது நட்டலிற் கேடு இல்லை' என்று ஆசிரியர் நட்பின் ஆராய்தலை முத

லாவது கூறினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் ஆராயாது நட்புச் செய்தவனுக்குப் பழிபாவங்கள் தான் உண்டாகுமோ? அல்லது இன்னும் ஏதேனும் துன்பங்கள் சேருமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

792. ஆய்ந்தாய்ந்து கொள்ளாதான் கேண்மை கடை-
தான்சாந் துயரந் தரும். [முறை

(பரி.) இ-ள். ஆய்ந்து ஆய்ந்து கேண்மை கொள்ளாதான் = குணமுஞ் செய்கையும் நல்லவென்பதும் அல்லவென்பதும் பலகாலாராய்ந்தும் பலவாற்றானாராய்ந்தும் ஒருவனோடு நட்புக் கொள்ளாதவன் — கடைமுறை தான் சாம் துயரம் தரும் = முடிவிற் றான்சாதற்கேதுவாய துன்பத்தினைத் தன்மாற்றார் விளைக்கவேண்டாமற் றானே விளைக்கும். எ-று.

கடைமுறைக்கண்ணென இறுதிக்கட்டொக்க ஏழாவது விரிக்க. குண முஞ் செயலுந் தீயானொடு கொள்ளின் அவற்கு வரும்பகைமை யெல்லாந் தன்மேலவாய்ப் பின் அவற்றானிறந்துவிடு மென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் ஆராயாவழிப்படுமிழுக்குக் கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—நட்புக்கொள்ளும் காலத்து அந்நட்புக்கொண்டவனது குணத்தாலும், செயலாலும், நல்லவனென்பதும், நல்லவனல்லாத தீயவன் எனபதும் பல முறையிலும் பலகாலங்களிலும் ஆராய்ந்து நட்புக்கொள்ளாவிடின், அவ்வித நட்பானது முடிவில் தான் சாதற்கு ஏதுவாகிய துன்பங்களைத் தன்னுடைய பகைவர் விளைவிக்காமலே தானே கொண்டுவந்துவிடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது எங்ஙனமெனில்? நற்குணமும், நற்செயலும் இல்லாத தீயவனோடு நட்புக்கொண்டால் அவனது தீமையால் பலர் அவனுக்குப் பகைவர் ஆகித் தீவினை இழைக்கும் காலத்து அப்பகைமையும், நீங்கும் நட்புக்கொண்ட தனக்குமாகி அதனால் பின்னர் இறந்து விடவேண்டிவரும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இரண்டு திருக்குறள்களாலும் ஆராயாது செய்யும் நட்பினால் வரும் துன்பத்தை அறிந்தோம். இனி அந்நட்பினை ஆராயும் திறத்தையும் கூறல்

வேண்டும்" என்னனும், ஆசிரியர் கூறுவாராயினர்.



793. குணனுங் குடிமையுங் குற்றமுங் குன்றா
இனனு மறிந்தியாக்க நட்பு.

(பரி.) இ-ள். குணனும் குடிமையும் குற்றமும் குன்றா இனனும் அறிந்து=ஒருவன் குணத்தினையும் குடிப்பிறப்பினையும் குற்றத்தினையும் குறைவற்ற சுற்றத்தினையுமாராய்ந்தறிந்து,—நட்பு யாக்க=அவனோடு நட்புச் செய்க. எ-று.

குற்றமில்லாதார் உலகத்தின்மையின் உள்ளது பொறுக்கப்படுவதாயின் அவர் நட்பு விடற்பாற் றன்றென்பார் 'குற்றமும்' என்றும், சுற்றப்பிணிப் புடையார் கட்டாரோடும் பிணிப்புண்டு வருதலிற் 'குன்றாவினனும்' என்றும், விடப்படிற் றங்குறையாமென்பார் 'அறிந்தியாக்க' என்றுங் கூறினார். (௩)

விளக்கம்:—ஒருவனிடத்து நட்புச்செய்ய வேண்டுமாயின் அவனது குணத்தினையும், அவன் குடிப்பிறப்பினையும், அவனிடத்து உள்ள குற்றத்தினையும், அவனுடைய குறைவு அற்ற சுற்றத்தாரை யும் ஆராய்ந்து அறிந்து அவனோடு நட்புச்செய்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், உலகத்தக் குற்ற மில்லாதவர்கள் ஒருவரு மில்லையென்றும், "அரியகற் றாசற்றார் கண்ணுந் தெரியுங்கா, லின்மை யரிதே வெளிறு" என்று முன்னரே தெரிந்து தெளிதல் என்னும் அதிகாரத்தள் கூறிய துடன், அவ்வதிகாரத்தின் உள்ளேயே "குணநாடிக் குற்றமு நாடி யவற்றுள், மிகைநாடி மிக்க கொளல்" என்று கூறியிருப்பதால் குற்றம் சிறியதாக இருந்து குணம் பெரியதாக இருக்குமாயின் அச் சிறியதோர் குற்றங்களையே எண்ணி அவனை நட்புக்கொள்ளாது விடுதல் கூடாதென்றும், அதுவன்றியும் பெரியதோர் உறவின ரால் பிணிக்கப்பட்டு உள்ள தகுதியுடையவனாயின் தான் நட்புக் கொள்பவரிடத்தும் பிணிப்புண்டு விடாது நட்புக்கொள்ளுவானாத லால் அவ்விதத் தகுதியுடையான் ஒருவனை ஆய்ந்து அறிந்து

நட்புக்கொள்ளுதல் வேண்டுமென்றும், அவ்வாறு கொள்ளாது விடின் கொள்ளாதவனுடைய குற்றமே ஆகும் என்றும் கூறியதாக அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் குணத்தைப்பற்றியும், குற்றத்தைப்பற்றியும், குறையாத சுற்றத்தைப்பற்றியும் அறிந்தோம். ஆயின், குடிப்பிறப்பைப்பற்றி



விளக்கிக் காட்டவில்லை ஆதலால் அதனை அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

794. குடிப்பிறந்து தன்கட் பழிநாணு வானைக்
கொடுத்துங் கொளல்வேண்டு நட்பு.

(பரி.) இ-ள். குடிப்பிறந்து தன்கட் பழி நாணுவானை = உயர்ந்தகுடியின்கட்பிறந்து தன்மாட்டு உலகோர்சொல்லும் பழிக்கஞ்சுவானை — கொடுத்தும் நட்புக் கொளல் வேண்டும் = சில கொடுத்தாயினும் நட்புக்கோடல் சிறந்தது. எ-று.

குடிப்பிறப்பாற் றான் பிழைசெய்யாமையும், பழிக்கஞ்சலாற் பிழைத்தன பொறுத்தலும் பெற்றும். இவை யிரண்டுமுடையானைப் பெறுதலருமையின், அவனட்பை விலைகொடுத்துங் கொள்க வென்பதாம். (௪)

விளக்கம் :—உயர்ந்த குடியில் ஒருவன் பிறந்து தன்னிடத்து உலகத்தார் சொல்லும் பழிக்கு அஞ்சுபவனாக இருப்பானாயின், அவ்வித தகுதியுடையான் நட்பினை அவன் விரும்பும் பொருள் சில கொடுத்தாயினும் கொள்ளுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், ஒருவன் உயர்ந்த குடியில் பிறந்திருப்பானாயின் அக்குடியில் பிறந்தவன் பிழை செய்ய மனமிசையானென்றும், பழிக்கு அஞ்சுகின்றவனாதலால் தன்னோடு நட்புக்கொண்டவன் பிழையைப் பொறுத்தல் குணமுடையவனாயிருப்பானென்றும், அவ்விதம் இரண்டு நற்குணங்களையும் பெறுவது அருமையாதலால் அவ்விதம் உடையவன் நட்பினனாகக் கிடைப்பானாயின் அவனது நட்பினை விலை கொடுத்தாயினும் கொள்ளுதல் வேண்டுமென்றும் அறிகின்றோமென்றனர். ஆதலால், நீங்கள் வினை

விய குடிப்பிறப்பின் தகுதியையும் இத்திருக்குறளால் அறிந்தோ மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நற்குடித் தோற்ற முடையான் பழிக்கு அஞ்சுபவனும், பிழை பொறுப்பவனுமாக இருப்பானாயின், அவன் தன்னிடத்து நட்புக் கொண்டான் ஒருவன் செய்த குற்றத்தை மகிழ்ந்து அதற்கு உடன்படுவானோ? அவ்விதம் உடன்படுவானாயின் அவனை நட்பினனாகக் கொள்ளுதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



795. அழச்சொல்லி யல்ல திடித்து வழக்கறிய
வல்லார்நட் பாய்ந்து கொளல்.

(பரி.) இ-ள். அல்லது அழச் சொல்லி = தாம் உலகவழக்கல்லது செய்யக் கருதிற் சோகம்பிறக்கும்வகை சொல்லி விலக்கியும் — இடித்து = செய்தக்கால் பின்னுஞ் செய்யாவகை செருக்கியும் — வழக்கு அறியவல்லார் = அவ்வழக்குச் செய்யாவழிச் செய்விக்கவும் வல்லாரை — ஆய்ந்து நட்புக் கொளல் = ஆராய்ந்து நட்புக் கொள்க. எ-று.

அழச்சொல்லி இடித்தெனவந்த பரிகாரவினைகளான் அவற்றிற்கேற்ற குற்றவினைகள் வருவிக்கப்பட்டன. வழக்கு = உலகத்தார் அடிப்படச் செய்து போந்த செயல். தம்மொடு நட்டாரும் அறியும்வகை அறிவித்த லரிதாக லின், 'அறியவல்லார்' என்றார். இரண்டாவது இறுதிக்கட் டொக்கது. (௫)

விளக்கம் :—உலகத்தில் வழக்க மில்லாததொன்றைத் தாம் செய்ய எண்ணில் தமக்கு வல்லறிவு பிறக்கும் விதம் நன்னெறியைத் தாம் அழும்படியாகச் சொல்லி விலக்கியும், ஓர்வேளை செய்துவிடின் மறுபடியும் செய்யாவிதம் இடித்துப் புத்தி கூறியும், அவ்விதம் தீநெறியிற் செல்ல வொட்டாது செய்விக்கவும் வல்லமை யுடையாரை ஆராய்ந்து நோக்கி நட்புக்கொள்ளுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உலகத்தார் பண்டைக் காலமுதல் வழங்கி வந்த வழிகளை விடுத்துக் குற்றம் பொருந்திய வழிகளில் தம்மிடத்து நட்புக்கொண்டார் செல்வாராயின் அவரை அவ்விதம் செல்லவொட்டாது தடுத்தும், ஓர்வேளை வழு வியால்

சென்றபோதும் மறுபடியும் அவ்விதம் செல்லாத வண்ணம் இடித்துப் புத்தி கூறியும் திருப்பவே நட்பினரென்றும், அது விட்டுத் தம் கலங்கருதி நட்பினர் தீவழிச் செல்லும் காலத்து உடனிருந்து மகிழ்வார் நட்பினரல்லரென்றும், இவ்விதம் அழச்சொல்லி இடித்துப் புத்தி கூறும் நட்பினராலேயே இம்மை மறுமையாகிய இரண்டும் கிடைக்குமாதலால், அவரைத் தேர்ந்து கொள்ளுதல் வேண்டுமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் நட்பினராயினோர் தனக்கு வறுமை வந்த காலத்தும் தன்னோடு உடனிருந்து நட்பினராக இருப்பரோ? இரரோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



796. கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை
நீட்டி யளப்பதோர் கோல்.

(பரி.) இ-ள். கிளைஞரை நீட்டி அளப்பது ஓர்கோல் = ஒருவனுக்குக் கேடென்பது தன்னட்டாராகிய நிலங்களை யெஞ்சாமலளப்பதோர்கோல்;— கேட்டினும் ஒருறுதி உண்டு = ஆகலின், அதன் கண்ணும் அவனுற் பெறப் படுவதோர் நல்லறிவுண்டு. எ-று.

தந்த நட்பெல்லைகள் சுருங்கியிருக்கவும் செல்வக்காலத்துப் புறத்துத் தோன்றுமாற்போர்ந்தார் பின் கேடு வந்தாழிச் செயல்வேறுபடுதலின் அக்கேட்டால் அவை வரையறுக்கப்படுமென்பதுபற்றிக் கேட்டினைக் 'கோல்' ஆக்கியும், அதனால் அவரை யளந்தறிந்தால் ஆவாரையே கோடலின் அவ்வறிவை 'உறுதி' என்றுங் கூறினர். கிளைஞர்—ஆகுபெயர். இஃதேகதேசவுருவகம். இவை நான்கு பாட்டானும் ஆராயுமாறும், ஆராய்ந்தால் நட்கப்படுவார் இவரென்பதூஉம் கூறப்பட்டன. (சு)

விளக்கம் :—நட்புக்கொண்டுள்ள ஒருவனுக்குச் செல்வக்கேடு வந்த காலத்து அக்கேடென்று சொல்லப்படுவது தன்னுடைய நட்பினராகிய நிலங்களைக் குறையாமல் அளக்கின்ற ஓர் அளவு கோலாகுமென்றும், ஆதலால் அச்செல்வக்கேட்டானும் அவன்

அடையக்கூடிய நல்லறிவு உண்டாகுமென்றும் இத்திருக்குறள் கூறு கின்றது. அதாவது, ஒருவனிடத்துத் தமக்கு உண்மையாகவே பெரியதோர் நட்பு இல்லாதிருக்கவும் அவனிடத்து உள்ள செல் வத்தைக் கவரும் வண்ணம் தம்முடைய நட்பினை அவன் அறியா வண்ணம் அவனிடத்தே வந்து பயனை அனுபவித்தவர், பின் தம் நட்பினனுக்குச் செல்வக்கேடு வந்தகாலத்து முன்போல் வா ராது செயல் வேறுபட்டு நிற்பாராதலால், அவ்வித நட்டாள்ளை நட் பினரை அளந்து பார்ப்பதற்கு வறுமையே ஓர் அளவு கோலாகும் என்று அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணுக்கர், "ஓர்கால் அறிவிலாத ஒருவனிடத்து ஒருவன் நட்புக் கொள்வானாயின் நட்பினனுகக் கொண்ட அவனை என் செய்தல் வேண்டும்?" என்ன லும், ஆசிரியர் கூறுவாராயினர்.





797. ஊதிய மென்ப தொருவற்குப் பேதையார்
கேண்மை யொரீஇ விடல்.

(பரி.) இ-ள். ஒருவற்கு ஊதியமென்பது=ஒருவனுக்குப் பேறென்று சொல்லப்படுவது—பேதையார் கேண்மை ஒரீஇ விடல்=அறிவிலாரோடு நட்புக் கொண்டானுயின் அதனை யொழித்து அவரினீங்குதல். எ-று.

நட்பொழித்தாலும் நீங்காக்கால் "வெறிகமழ் சந்தனமும் வேங்கையும் வே" *மாறுபோலத் தீங்கு வருதலின் 'விடல்' என்றும், நீங்கியவழித் தீங் கொழிதலேயன்றி இருமை யின்பத்திற் குரிமை யெய்தலு முடைமையின் அதனை 'ஊதியம்' என்றுங் கூறினர். (எ)

விளக்கம் :—ஒருவன் அறிவிலாரோடு நட்புக் கொண்டானு யின், அந்நட்பினின்றும் நீங்கி அவரை விட்டுப் பிரிதல் அவனுக்குப் பெறுகின்ற செல்வங்களுக்கெல்லாம் பெரியதோர் செல்வமாகும் என்றுஇத்திருக்குறள் கூறுகின்றது. எனெனில்? நட்புக்குஉரியனல் லன் என்று அறிந்து அவனது நட்பினின்றும் நீங்காது அவனோடு இருக்கின், மூங்கிற்காடு பற்றி எரியும் காலத்து அக்காட்டினுள்ள

வாசனை வீசும் சந்தனமரமும், வேங்கைமரமும் உடன் வெந்து போவதுபோல், அவனுக்கு உள்ளபகைவர் அவனை அழிக்குங்காலத்து அத்தீயவன் நட்பால் தானும் அழியவேண்டி வருமென்றும், ஆதலால் அப்பகைவனை விட்டு நீங்கிய காலத்துத் தீங்கடையா திருப்பதுடன் புகழையும், புண்ணியத்தையும் அடைதல் கூடும் என்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இதனால் தீயோரது நட்பை விடுதல் வேண்டும் என்று அறிந்தோம். ஆயின், நட்பினரென்று கூறிச் சமயத்துக் கைவிடுபவர் நட்பினை என் செய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

798. உள்ளற்க வுள்ளஞ் சிறுகுவ கொள்ளற்க
வல்லற்க ணாற்றறுப்பார் நட்பு.

(பரி.) இ-ள். உள்ளம் சிறுகுவ உள்ளற்க = தம்முயற்சி சுருங்குதற்குக் காரணமாய வினைகளைச் செய்ய நினையாதொழிக;—அல்லற்கண் ஆற்று

* நாலடியார், நல்லினஞ்சேர்தல், 10.



அறுப்பார் நட்புக் கொள்ளற்க = அதுபோலத் தமக்கொருதுன்பம் வந்துழிக் கைவிடுவார் நட்பினைக் கொள்ளாதொழிக. எ-று.

உள்ளஞ்சிறுகுவனவாவன:—தம்மின்வலியாரோடு தொடங்குவனவும் பயனில்லனவுமாம். ஆற்றென்பது முதனிலைத்தொழிற்பெயர். முன்னெல்லாம் வலியராவார்போன்று ஒழிதலின், வலியறுப்பாரென்றார். எடுத்துக் காட்டுவமை. கொன்னின் *அழிந்தே விடுமென்பதாம். (அ)

விளக்கம்:—நல்லறிவுடையார் தாம் எடுத்தகாரியம் சுருங்கி விடுவதற்கு ஏற்ற தொழில்களைச் செய்ய எண்ணாதிருத்தல் வேண்டுமென்றும், அதுபோலவே தமக்கு ஒரு துன்பம் வந்தகாலத்துத் தம்மைக் கைவிட்டுப் போய் விடுவார் நட்பினைக் கொள்ளாது ஒழிய வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவன் தன்னைக்காட்டிலும் வலியாரோடு போர் முதலிய தொடங்கின் அவர் வலிமையால் தன் ஊக்கம் கெட்டு எடுத்த தொழில் அழிந்து போம் என்று எண்ணி அத்தகைய தொழில்

களை எவ்வாறு செப்ப மென்னாது ஒழிதல் வேண்டுமோ அதுபோல் நன்மையாக இருந்த காலத்து உடனிருந்து உண்டு தமது துன்பம் வந்தகாலத்து நட்பினரென்று எண்ணாது கைவிடுவோர் நட்பு நட்பு ஆகாது என்று எண்ணி அவ்வித நட்பினை ஒழித்துவிடுதல் வேண்டும் என்று அறிந்தோம். இதனை,

" அற்ற குளத்தில் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவல்லர்—அக்குளத்தில்
கொட்டியு மாம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி உறுவார் உறவு."*

என்பதினாலும் அறிதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் வறுமை வந்தகாலத்து நட்பினைக் கைவிட்டுப் போகின்றவரை 'இவர் இவனுக்கு நட்புக் கொண்டவர்' என்னின், அது அவனுக்கு எவ்விதம் இருக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

799. கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை யடுங்காலை
யுள்ளினு முள்ளஞ் சுடும்.

(பரி.) இ-ள். கெடுங்காலைக் கைவிடுவார் கேண்மை = ஒருவன் கெடுங்காலத்து அவனை விட்டு நீங்குவார் முன் அவனோடு செய்த நட்பு—அடுங்

* வாக்குண்டாம்.



காலை உள்ளினும் உள்ளம் சுடும் = தன்னைக் கூற்றடுங்காலத்து ஒருவனினைப் பினும், அந்நினைத்த உள்ளத்தைச் சுடும். எ-று.

நினைத்ததன்மையானே இடைவிடாத பிறனுக்கும் கூற்றினும் கொடிதா மெனக் கைவிடேன்மின் செய்த நட்பின் கொடுமை கூறியவாறு. இனி அவன்றனே ஆக்கிய கேடு தன்னை யடுங்காலை யுள்ளினும் அக்கேட்டினுஞ் சுடுமென்றுரைப்பாருமுளர். இவை மூன்றுபாட்டானும் ஆராய்தல் நட்கப் படாதார் இவரென்பது கூறப்பட்டது. (க)

விளக்கம் :—ஒருவன் தான் கெட்டுப்போகும் காலத்து நட்

பிழை விட்டு நீங்குவார் முன் அவரோடு செய்த நட்பினை, நட்புச் செய்தவனை எமனானவன் வந்து கொல்லும் காலத்தும் அவன் நினைக்கின் அந்நினைவானது அவன் மனத்தைச் சுட்டுவிடும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. இதனால் நட்புக்கொண்ட ஒருவன் தன் நட்பினன் தனக்குத் துன்பம் வந்தகாலத்துத் தன்னைக்கைவிட்டு நீங்குவானாயின், அவ்வித செயலானது மிகக்கொடிய செயலென்றும், அக்கொடிய செயல்என்னுந்தோறும் என்னுந்தோறும் மனதிற் சுடுமென்றும், அவ்விதம் சுடுகின்ற தன்மையானது இறக்கும் வரையில் இருக்குமென்றும், இறக்கும் காலத்து உண்டாகும் துன்பம்பெரிய தென்றாலும் நட்பினன் செய்த துன்பத்தை நினைக்கும் காலத்து அத் துன்பம் சிறிதாகி அதற்கு வருந்தாது தான் கெடுங் காலத்துத்தன் நட்பினன் தன்னைக் கைவிட்ட செயலையே நினைந்து வருந்துவானென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், “நட்பாராய்தலின் தன்மையை அறிந்தோம். இனி எவரோடு நட்புக்கொள்ளுதலாகாது, எவரோடு நட்புக்கொள்ளுதல் வேண்டுமென்பதில் இரண்டையும் ஒருங்கே அறிவித்தல் வேண்டும்!” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

800. மருவுக மாசற்றார் கேண்மையொன் றீத்து
மொருவுக வொப்பிலார் நட்பு.

(பரி.) இ-ள். மாசு அற்றார் கேண்மை மருவுக = உலகோடொத்துக் குற்ற மற்றார் நட்பினையே பயில்க;—ஒப்பு இலார் நட்பு ஒன்று ஈத்தும் ஒருவுக = உலகோடொத்தலில்லார் நட்பினை அறியாது கொண்டாராயின், அவர் வேண்டிய தொன்றினைக் கொடுத்தாயினும் விடுக. எ-று.



உலகோடொத்தார் நட்பு இருமையின்பமும் பயத்தலின் ‘மருவுக’ என்றும், அதனோடு மாறாயினார் நட்புத் துன்பமே பயத்தலின் அதனொழிவை விலைகொடுத்துங் கொள்க வென்றுங் கூறினார். இதனால் அவ்விருமையுந் தொகுத்துக் கூறப்பட்டன. (௰)

விளக்கம்:-உலகத்து அறிவுடையார் சென்ற வழியேசென்று குற்றமற்று இருப்பவர் நட்பினையே கொள்ளுதல் வேண்டுமென்

றும், அவ்விதம் அன்றி உலகத்தோடு ஒற்றுமை இல்லாத காரியங்களைச் செய்வார் நட்பினை ஓர்கால் ஊழ்வலியால் அறியாது கொண்டாலும் அவர் நட்பினின்றும் நீங்குவதற்கு அவர் விரும்புகின்ற ஏதேனும் ஒரு பொருளைக் கொடுத்தாயினும் அந்நட்பினை விட்டு விடுதல் வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், நீங்கள் முன்னர் விளம்பியபடி உலகத்தோடு ஒத்து வாழக்கூடிய நல்லறிவினை உடையார் நட்பினையே கொள்ளுதல் வேண்டுமென்றும், அதனால் இருமைப்பயனையும் அடைதல் கூடுமென்றும், அவ்விதம் அல்லாதார் நட்புத் தீமையை விளைத்து இருமைப்பயனையும் கெடுத்தலால் அவர் தம்மைவிட்டு நீங்குவதற்கு ஏதேனும் ஓர் நன்மையை அவர்க்குச்செய்து விலக்கி விடுதல் வேண்டுமென்றும் அறிவின்றேனும் உலகத்தோடு ஒட்டி ஒழுகுபவரே அறிவுடையார் என்பதை "உலகத்தோடு ஒட்ட ஒழுகல் பலகற்றும், கல்லார் அறிவிலா தார்" என்பதனால் அறியப்படும் என்று நட்பாராய்தலைக் கூறி முடித்தனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நட்புச் செய்யவேண்டிய ஒருவன் தன் நட்பினர் ஏதேனும் ஓர் பிழையைச் செய்வாராயின் அதனைப் பொறுத்துக் கொள்ளுதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 81. அதிகாரம்.

### பழைமை.

---

(பரி.) அஃதாவது நட்டாரது பழையராந்தன்மைபற்றி அவர் பிழைத்தன பொறுத்தல். காரணப்பெயர் காரியத்திற்காயிற்று. ஆராய்ந்து நட்கப்பட்டாரெனினும் பொறுக்கப்படுங் குற்றமுடையாராகலாலும் ஊழ்வகையாலும்



நட்டார்மாட்டுப் பிழையுளதாமென்பது அறிவித்தற்கு, இது நட்பாராய்தலின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, நட்பினர் பழைமையராய் இருப்பாராயின் அந்நட்பினர் செய்த பிழைகளைப் பொறுத்துக் கொள்ளுதலே பழைமையாகும். மேல் அதிகாரத்தில் சொல்லிய வண்ணம் எல்லாவற்றையும் ஆராய்ந்து நட்புச் செய்தவராயினும் பொறுத்துக் கொள்ளக் கூடிய குற்றம் உண்டாகுமென்றும், ஊழ்வலியால் சிறந்த நட்பினைக் கொண்டவிடத்தும் பிழை உண்டாதல் கூடுமென்றும், அவ்வித குற்றங்களைப் பொறுத்துக் கொள்ளுவதே தகுதியென்றும் அறிவித்தற்கு நட்பாராய்தலின் பின் இப்பழைமை என்னும் அதிகாரம் வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நட்பினர் செய்த பிழையைப் பொறுத்துக் கொள்ளுதல் பழைமையென்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

801. பழைமை யெனப்படுவ தியாதெனின் யாதுங்
கிழமையைக் கீழ்ந்திடா நட்பு.

(பரி.) இ-ள். பழைமை எனப்படுவது யாதெனின் = பழைமையென்று சொல்லப்படுவது யாதென்று வினவின்,—கிழமையை யாதும் கீழ்ந்திடா நட்பு = அது பழைமையோர் உரிமையாற் செய்வனவற்றைச் சிறிதுஞ் சிதையாது அவற்றிற் குடம்படும் நட்பு. எ-று.

கிழமை—ஆகுபெயர். கெழுதகைமையென வருவனவுமது. உரிமையாற் செய்வனவாவன:—கருமமாயின செய்யுங்காற் கேளாது செய்தல், கெடும்வகை செய்தல், தமக்கு வேண்டியன தாமே கோடல், பணிவச்சங்களின்மை யென்றிவை முதலாயின. சிதைத்தல் = விலக்கல். இதனாற் பழைமையாவது காலஞ் சென்றதன்று இப்பெற்றித்தாய நட்பென்பது கூறப்பட்டது. (க)

விளக்கம்:—பழைமையென்று சொல்லப்படுவது எது என்று அறிய வேண்டுமாயின், அது அப்பழைமையை யுடையார் தங்களுக்கு உள்ள உரிமையினால் செய்கின்றவைகளைச் சிறிதும் விலக்காது அக்காரியங்களுக்கு உடன்படுகின்ற நட்பு என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தம்மிடத்து நட்புக் கொண்டவர் தம்முடைய தொழில்களைச் செய்யுங் காலத்துத் தம்மைக்



கேளாமலே செய்தலும், செய்யும் தொழில்கள் கெட்டுப் போம்

படிச் செய்தலும், தமக்கு வேண்டியனவாகிய பொருள்களைத் தம்மைக் கேளாமலே எடுத்துக் கொள்ளுதலும், பணிவுடைமை, அஞ்சுதல் இவை முதலாயின இல்லாதிருத்தலும் ஆகிய காரியங்களைப் பொறுத்துக் கொள்ளுதலே நட்புக் கொண்டவரின் இலக்கணமென்றும், அதுவே பழைமையென்றும் அறிந்தோ மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித நட்பைப்பெற்ற ஒருவன் தனக்கு உள்ள உரிமையினால் எது செய்யினும் பொறுத்துக்கொள்ளுதல் வேண்டும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

802. *நட்பிற் குறுப்புக் கெழுதகைமை மற்றதற்*
*குப்பாதல் சான்றோர் கடன்.*

(பரி.) இ-ள். *நட்பிற்கு உறுப்புக் கெழுதகைமை* = நட்பிற் கவயவமாவன நட்டார் உரிமையாற் செய்வன,— *அதற்கு உப்பாதல் சான்றோர்கடன்* = அதனால் அவ்வுரிமைக்கு இனியராதல் அமைச்சர்க்கு முறைமை. எ-று.

வேறன்மைதோன்ற 'உறுப்பு' என்றார். உறுப்பென்பது சண்டிலக்கணையடியாகவந்த குறிப்புச்சொல். அவயவமாதலறிந்தே இனியவராவரென்பது தோன்றச் சான்றோர்மேல் வைத்தார். (உ)

விளக்கம் :—நட்பு என்று சொல்லப்படுதற்கு உறுப்புகளாக இருப்பன, நட்பாகக் கொண்டவர் உரிமையால் செய்வன என்றும், அவ்வுரிமைக்கு உவந்து இனிமை யுடையாராக இருத்தல் நட்புக் கொண்டவர்க்கு முறைமை யென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேற்கூறிய வண்ணம் தம்முடைய நட்பினர் ஏதேனும் ஒன்றைத் தம்மிடத்து உள்ள உரிமையால் செய்து விடுவாராயின், அதற்காக அவரை வெறுக்காது அவரிடத்து இனியவராயிருந்து தாம் கொண்ட நட்பினிடத்தே பொருந்துகின்றவரே நட்புச் செய்தற்கு உரியரென்றும், அவரே சான்றோரென்றும், அவரே பழைமை யென்பதைப் பாராட்டவல்லோரென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் உரிமையால் செய்தவற்றிற்கு உடன்படாவிடின் அவ்வித நட்பால் பயனில்லை போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

803. பழகிய நட்பெவன் செய்யுங் கெழுதகைமை
செய்தாங் கமையாக் கடை.

(பரி.) இ-ள். கெழுதகைமை செய்தாங்கு அமையாக்கடை=தாமுடம்படாதனவேனும் நட்டார் உரிமையாற் செய்தனவற்றிற்குத் தாஞ்செய்தாற்போல உடம்படாராயின்,—பழகிய நட்பு எவன்செய்யும்=அவரோடுபழைய தாய் வந்த நட்பு என்ன பயனைச் செய்யும், எ-று.

செய்தாற்போல வுடம்படுதலாவது:— தாமும் அவரிடத்துரிமையா னுடம்படுதல். இவை யிரண்டுபாட்டானும் பழைமையான் வரு முரிமையது சிறப்புக் கூறப்பட்டது. (௩)

விளக்கம்:—தாம் உடன்படக் கூடாத தொழில்களாக இருந்தும் தம்மிடத்து நட்புக்கொண்ட அவர் தம்மிடத்து உள்ள பாத்தியத்தின் மிகுதியால் செய்த தொழில்களுக்குத் தாமேசெய்தாற் போல உடன்படாது விடுவாராயின், அந்நட்பினரோடு பழைமையா யிருந்து நட்புக்கொண்டு இருத்தல் ஒரு பிரயோசனத்தையுந்தாராது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தம்முடைய நட்பினர் தமக்கு நன்மை உண்டாதல் வேண்டுமென்று ஒரு காரியத்தைச் செய்த காலத்து அதில் தவறுவருமாயின் தாமேசெய்த தவறாயின் அத்தவறினை எவ்விதம் வழ்வலி என்றெண்ணி அத்தவறுக்கு உரிய கஷ்டத்திற்கு ஈடுபடுவாரோ அவ்விதம் ஈடுபடாவிடின் ஒருவரோடு ஒருவர் நட்புக்கொள்ளுவதால் ஆகும் பிரயோசனத்தை அடைவதற்கு இல்லாமற்போம். ஏனெனின்? உரிமையால் ஒன்றுசெய்து அதனால் ஒருகாலத்து கஷ்டம் வரினும் மற்றொரு காலத்து உரிமைகொண்டு செய்கின்றகாரியத்தால் பெரும் பயன் அடைவது கூடுமாதலால், உண்மை அன்புகொண்ட தம் நட்பினர் உரிமையால் செய்கின்ற செயல்களுக்கு உடன்பட்டு நிற்பதே நட்பால் அடையும் பயன் என்று அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ்விதம் யாவரும் தம் நட்பினர் செய்த செயலுக்கு உடன்படுவரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**804.** விழைதகையான் வேண்டி யிருப்பர் கெழுதகை
கேளாது நட்டார் செயின். [யாற்

(பரி.) இ-ள். நட்டார் கெழுதகையால் கேளாது செயின் = தங்கருமத்தை நட்டார் உரிமையாற் கேளாது செய்தாராயின், — விழைதகையான்



வேண்டியிருப்பர் = அச்செயலது விழையப்படுந்தன்மைபற்றி அதனை விரும்புவர் அறிவுடையார். எ-று.

ஒருவர்க்குத் தங்கருமந் தாமறியாமல் முடிந்திருத்தலினூங்கு நன்மையின்மையின், அச்செயல் விழையத்தக்கதாயிற்று. அதனை அவ்வாறாதல் விரும்புதல் அறிவுடையார்க்கல்லதின்மையின், அவர்மேல் வைத்துக் கூறினார். வேண்டியிருப்பரென்பது எழுந்திருப்பரென்பதுபோல ஒருசொன்னீர்மைத்து. இதனாற் கேளாது செய்வழி அதனை விரும்புமென்பது கூறப்பட்டது. (௪)

விளக்கம்:—அறிவுடையோர், தம்முடைய காரியத்தைத் தம்முடைய நட்டார் தம்மைக் கேளாமலே தமக்கு உள்ள பாத்தியதையால் செய்து விடுவாராயின், அவ்வித உரிமையால் தனக்குச் செய்த செயலின் அன்பினை நோக்கி அதனை விரும்புவார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தம்மை அறியாமலே தமக்கு ஆகவேண்டுவனவாய கருமங்கள் முடிந்திருக்குமாயின் அதனைக் காட்டிலும் நன்மை ஒருவருக்கு உலகத்து இல்லை ஆதலால் அவ்விதம் தாம் அறியாமலே தம்முடைய காரியத்தைச் செய்த நட்பினரை அவர் அதுஇக்கு விருப்பம் கொள்ளுவதே அன்றி அறிவுடையார் வேறு ஒன்றும் செய்யமாட்டாரென்றும், அறிவுடையார் அல்லது மற்றவர்க்கு அவ்வுரிமை அறிவதற்கு இல்லையென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தம் நட்பினர் தம்மைக் கேளாமலே செய்த கருமங்களில் தவறு வருமாயின், அதனை ஏது என்று சான்றோர் கொள்ளுவர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**805.** பேதைமை யொன்றோ பெருங்கிழமை யென்
நோதக்க நட்டார் செயின். [றுணர்க

(பரி.) இ-ள். நோதக்க நட்டார் செயின் = தாம் வெறுக்கத்தக்கனவற்றை நட்டார் செய்தாராயின், — பேதைமை ஒன்றோ பெருங்கிழமை என்று

உணர்க=அதற்குக் காரணம் ஒன்றிற் பேதைமையென்றுதல் ஒன்றின் மிக்க வுரிமையென்றுதல் கொள்க. எ-று.

ஒன்றோவென்பது எண்ணிடைச் சொல். செயினெனவே, தம்மியல் பாற்செய்யாமை பெற்றும். இது வருகின்றவற்றிற்கு மொக்கும். இழவூழால்





வரும் பேதைமை யாவர்க்கு முண்மையிற் றமக்கேதங்கொண்டதென்றுதல் கெழுதகைமையான் எம்மின் வரற்பாலது ஒற்றுமை மிகுதிபற்றி அவரின்வந்ததென்றுதல் கொள்வதல்லது அன்பின்மையென்று கொள்ளப்படாதென்பதாம். கெழுதகைமை செய்யின் அதற்குக் காரணம் இதனாற் கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—நாம் வெறுக்கக்கூடிய விஷயத்தினைத் தம்முடைய நட்பினர் செய்து விடுவாராயின், அவ்விதம் செய்தற்குக் காரணம் பேதைமையால் நடந்ததென்று கொள்ளுதல் வேண்டும் என்றும், அல்லது மிகுந்த பாத்தியதையால் நடந்தது என்று கொள்ளுதல் வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தம் நட்பினர் தம்தொழிலை நன்குக முடியாது கெட்டுப்போகும் விதமாகச் செய்வாராயின் அதனைத் தமக்கு உள்ள துர் அதிர்ஷ்டத்தால் தம் நட்பினர் இவ்விதம் செய்தாரே அன்றித் தமக்குத் துன்பம் வர வேண்டுமென்று செய்தவர் அல்லரென்றும், தாமேசெய்துத் தமக்கு வரவேண்டியதுன்பமானது தம்நட்பினர் மூலமாக அவருக்கும் தமக்கும் உள்ளமிகுந்த ஒற்றுமையால்வந்தது என்றும் அறிவுடையோர் சொல்வரே அன்றித் தம்மிடத்து அன்பில்லாமையால் இவ்விதத் துன்பம் வரும்படிச் செய்தார் என்று கொள்ளார் என்று அறிஞரும் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "கெடுக்கின்ற ஊழ்வலியால் இவ்விதம் தமக்குத் தம் நட்பினரால் துன்பம்வந்ததே என்று பொறுத்துக் கொள்ளுவதுடன் அத்தவறு உண்டாகச் செய்தவரைப் பின்னும் தம் நட்பினராகவே கொள்ளுவரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

806. எல்லைக்க ணின்ருர் துறவார் தொலைவிடத்துந்
தொல்லைக்க ணின்ருர் தொடர்பு.

(பரி.) இ-ள். எல்லைக்கண் நின்றார்=நட்பு வரம்பிகவாது அதன் கண்ணே நின்றவர்—தொல்லைக்கண் நின்றார் தொடர்பு தொலைவிடத்தும்

றவர்=தம்மொடு பழைமையிற் றிரியாது நின்றாரது நட்பினை அவராற் றொலைவு வந்த விடத்தும் விடார். எ-று.

பழைமையிற் றிரியாமை=உரிமை யொழியாமை. தொலைவு=பொருட் கேடும் போர்க்கேடும். (௬)

விளக்கம் :—நட்பின் வரம்பு கெடாது அந்நட்பினிடத்தே நிலைத்து நின்றவர் தம்மோடு பழைமையில் சிறிதும் வேறுபடாது



நின்றவர்களுடைய நட்பினை, அவரால் பொருளுக்குக் கேடும் போரில் அபஜெயமும் நேருமாயினும், அவற்றின் பொருட்டாக விட்டுவிட மாட்டார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மேற்கூறிய வண்ணம் தமக்குத் தம் நட்பினரால் உண்டாகும் கஷ்டங்களைத் தம்முடைய ஊழ்வலியால் வந்தது என்று எண்ணுவரே அன்றித் தமக்குப் பதிலாக பாத்தியதையைக்கொண்டு செய்தவர் செயலால் வந்தது என்று அவரை வெறுத்து நீக்கிவிடமாட்டார்கள் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் தம நட்பினரை நீக்காது தம்மோடு வைத்துக்கொண் டிருப்பாரேனும் அவரிடத்துப் பழைமை அன்பு பாராட்டுவரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

807. அழிவந்த செய்யினு மன்பறா ரன்பின்
வழிவந்த கேண்மை யவர்.

(பரி.) இ-ள். அழிவந்த செய்யினும் அன்பு அறார்=நட்டார் தமக் கழிவுவந்தவற்றைச் செய்தாராயினும் அவர்மாட்டன்பொழியார்—அன்பின் வழி வந்த கேண்மையவர்=அன்புடனே பழைமைதாய்வந்த நட்பினை யுடையார். எ-று.

அழியென்பது முதனிலைத் தொழிற்பெயர். அழிவு=மேற்சொல்லிய கேடுகள். இவை யிரண்டு பாட்டானுங் கேடுசெய்தக்கண்ணும் நட்பு விடற் பாற்றன்றென்பது கூறப்பட்டது. (௭)

விளக்கம்:—அன்புடனே பழைமையாகத் தாம் நட்பினைச் செய்துவந்த நட்பினை உடையவர் தம்முடைய நட்டார் தமக்கு அழிவினை உண்டாக்கும் செயல்கள் பலவற்றைச் செய்து இருந்தா

சாளுதும், அவ்விதம் அழிவு தரும் செயல்களைச் செய்த அந்நட்பினை ரிடத்துத் தமக்கிருந்த அன்பினை நீக்கிக்கொள்ள மாட்டார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மேற்கூறிய வண்ணம் தன்னுடைய பொருளுக்குக் கேடும், தன்னுடைய பகைவர்கள்மேல் சென்று யுத்தம் செய்தகாலத்து யுத்தத்தில் தோல்வியாகிய கேடும் வரும்படித் தம்மிடத்தே நட்புக் கொண்டவர் செய்துவிடுவாராயின், தம்முடைய பழைமை மிகுதியால் அவரது நட்பினை விடாததோடு அவரிடத்து இருந்த அன்பினையும் குறைக்க மாட்டார்கள் என்று



அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நட்பின் வசம் பினை அடைந்த தம்முடைய நட்டார் செய்த பிழையைத் தாம் பொறுத்துக் கொள்வதுடன் பிறர் கோள் சொல்லும் காலத்தும் அப்பிறர் சொல்லும் சொல்லை எடுத்துக் கொள்ளாது நட்பினர் பிழையைப் பொறுத்துக் கொள்ளுவரோ?" என்னதும், ஆசிரியர் கூறுவாராயினர்.

808. கேளிழுக்கங் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு
நாளிழுக்க நட்டார் செயின்.

(பரி.) இ-ள். கேள் இழுக்கம் கேளாக் கெழுதகைமை வல்லார்க்கு = நட்டார் செய்த பிழையைத் தாமாகவேயன்றிப் பிறர் சொன்னாலுங்கொள்ளாத உரிமையறிய வல்லார்க்கு—நட்டார் இழுக்கம் செயின் நாள் = அவர் பிழை செய்வாராயின், அது பயன்பட்ட நாளாம். எ-று.

பிழையாவன:—சொல்லாது தற்பொருள்கொளல், பணியாமை, அஞ்சாமை முதலாயின. கேட்டல் = உட்கோடல். கெழுதகைமை வல்லாரென்பது ஒருபெயராய்க் கேளாதவென்னும் எச்சத்திற்கு முடிபாயிற்று. செய்து போந்தழி யல்லது அவ்வுரிமை வெளிப்படாமையின், செய்யாதன நாளல்லவாயின. இதனாற் பிழைபொறுத்தற் சிறப்புக் கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—தம்முடைய நட்பினர் செய்த குற்றத்தைத் தாம் மனத்துள் கொள்ளாது பொறுப்பதுடன் பிறர் தமக்கு வந்து சொன்ன காலத்தும் பிழைகளை மனத்துள் கொள்ளாத உரிமையை உடைய பெரியோர்க்குத் தம் நட்பினர் தமக்குப் பிழை செய்வாரா

பின் அவ்விதம் பிழை செய்த நாள் தமக்குப் பயன்பட்ட நாளாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நட்பையும் அதனது பழைமையையும் இவையென்று உணர்ந்து அவற்றின்வழி நிற்கும் சான்றோர் தம் நட்பினர் தம்முடைய நல்ல பொருள்களை அபகரித்ததும், தமக்கு வணக்காதிருந்ததும், தமக்குப் பயப்படாதிருந்ததும் ஆகிய குற்றங்களைச் செய்வாராயின், அக்குற்றங்களைப் பிறர் வலிந்து வந்து சொல்லினும் அவைகளைக்கேட்டுத் தம் நட்பினர் விஷயத்தில் கோபிக்கமாட்டா ரென்றும், அவ்விதம் நட்பினர் பிழை செய்யும் நாளே சான்றோர்க்கு நல்ல நாளென்றும், ஏனெனில்? அவ்விதம் பிழை செய்தும் பொறுத்துக் கொள்ளுதலாகிய தகுதி தமக்கு



உள்ளது என்று உலகத்தாரால் அறிய நேருமாதலால் அந்நாளே நன்னாளென்றும் கூறுவதுடன், நட்பின் தகுதியை அடைந்தவர், தம்மிடத்தே நட்புச் செய்தவர் எவ்வளவு பிழைகளைச் செய்தாலும் பொறுத்துக் கொள்வார்கள் என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் நட்பினர் செய்யும் பிழைகளைப் பொறுத்துக் கொள்வதால் பொறுத்துக் கொண்டவனுக்கு என்ன பயன் உண்டாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

809. கெடாஅ வழிவந்த கேண்மையார் கேண்மை
விடாஅர் விழையு முலகு.

(பரி.) இ-ள். கெடா வழி வந்த கேண்மையார் கேண்மை = உரிமை யறாது பழையதாய்வந்த நட்பினையுடையாரது நட்பினை—விடார் உலகு விழையும் = அவர் பிழைநோக்கிவிடுதல் செய்யாதாரை உலகம் நட்புக்குறித்து விரும்பும், எ-று.

கெடாதென்பது வினையெச்சம் விகாரத்தாற்றொக்கது. விடாதாரையெனவே, விடுதற்காரணங் கூறப்பட்டது. எம்மாட்டும் இவர்த்தன்மையராவ ரென்று யாவருந் தாமே வந்து நட்பாவ ரென்பதாம். கெடாவென்று பாட மோதி, நட்புத்தன்மையிற் கெடாதவழி யென்றுரைப்பாரு முளர். (௯)

விளக்கம்:—தம்மிடத்தே உள்ள பாத்தியதை கெடாமல் பழைமையாய்ச் சேர்ந்த நட்பினை உடையவர்கள் பிழைசெய்த காலத்தும், அப்பிழையைக் குறித்து அவரை நீக்காது தம்மிடத்தே வைத்துக் கொள்ளுபவரையே உலகத்தார் அவர்களது நட்பின் சிறப்பினைக் குறித்து விரும்புவார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தம்முடைய நட்பினர் தமக்குச் செய்த பிழையைப்பொறுத்துக்கொண்டு அவரை நீக்காமலும், அவரிடத்துத் தமக்கு உள்ள அன்புநீங்காமலும் இருக்கின்ற நல்ல சிநேகப்பான்மை யுடையவர்களை உலகத்தார் காணுவாராயின், 'இவர் இவ்விதம் தம்முடைய நட்பினர் செய்யும் பிழையைப் பொறுத்துக்கொள்ளுகின்ற குணமுடையவராக இருக்கின்றார்களால் இவரிடத்து நாம் நட்புக் கொள்வோமாயின் நாம் பிழை செய்யுங்காலத்தும் நம்மையும் இவ்விதமே பொறுத்து அன்பு நீங்காது ஆதரிப்பர்' என்று அவரைவிடாது பின்பற்றி அவரிடத்து நட்புக்கொள்ள



விரும்புவார்கள் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்டமாணாக்கர், "இவ்விதம் பிழை பொறுக்கும் பெரியோரது நட்பினை உலகத்தார் விரும்புவர் என்றமையால் உலகத்து அவரது அன்பினர் மாத்திரம் அவரை விரும்புவரோ? அல்லது பகைவரும் விரும்புவரோ?" என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்

810. விழையார் விழையப் படுப பழையார்கண்
பண்பிற் றலைப்பிரியா தார்.

(பரி.) இ-ள். பழையார்கண் பண்பின் தலைப்பிரியாதார்=பழைய நட்டார் பிழை செய்தாராயினும் அவர்மாட்டுத் தம் பண்பினீங்காதார்—விழையார் விழையப்படுப=பகைவராலும் விரும்பப்படுவர். எ-று.

தம் பண்பாவது:-செய்யாத முன்போல அன்புடையராதல். மூன்றனுருபு சிறப்பும்மையும் விகாரத்தாற் றொக்கன. அத்திரிபின்மை நோக்கிப்

பகைவரும் நட்டாராவரென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் பழைமை யறிவார் எய்தும் பயன் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—தம்முடைய பழைய நட்பினர் தமக்குப் பிழை செய்த காலத்தும் அவரிடத்துத் தம்முடைய பழைய அன்பினையும், நட்பினையும் விடாதவரை அவருடைய பகைவரும் விரும்புவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, எக்காலத்தும் வேறுபா டாத அன்புடையவர்களைச் சால்புடையவர்கள் என்றெண்ணி அவ ருடைய பகைவரும் தமக்கு இருந்த பகையை ஒழித்துத் தமக்கு நட்பினராவர் என்றமையால், பழைமையை அறிந்து எக்காலத்தும் நட்பினின்றும் வேறுபடாதவர் உலகத்தார் யாவராலும் விரும்பப் படுவர் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்க ர் "இவ்வதிகாரத்தால் பழைமை என்பது இதுவென்றும், அதனால் வரும்பயன் இதுவென்றும் அறிந்தோம். இனிப் பழைமை உடைய ராயினும் பொறுக்கக் கூடாத குற்றத்தைச் செய்பவர் மாட்டுப் பெரி யோர் என் செய்வர்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 82. அதிகாரம்.

---

### தீ நட்பு.

(பரி.) இனிப் பொறுக்கப்படாத குற்றமுடைமையின் விடற்பாலதாய நட்புநட்பாராய்தற்கட் சுருங்கச்சொல்லிய துணையா னடங்காமையின் அதனை யிருவகைப்படுத்து இரண்டதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட் டீ நட்புக் கூறுகின்றார். அஃதாவது தீக்குணத்தாரோடு உளதாய நட்பு. குணத்தின் தீமை ஒற்றுமை பற்றி உடையார் மேற்றாய், அதன் பின் அவரோடு செய்த நட்பின்மேற்றாயிற்று. அதிகாரமுறைமை கூறுமையே விளங்கும்.

விளக்கம்:—அதாவது, பொறுக்கமுடியாத குற்றத்தினைச் செய் கின்றவரை நீக்கல் வேண்டும் என்று நட்பு, நட்பாராய்தல் என்

னும் இரண்டு அதிகாரத்தான் சுருங்கச் சொன்னாராலும், சொல்லிய அதனால் அது அடங்காமையின், நீக்கிவிட வேண்டிய நட்பினை இரண்டு அதிகாரங்களால் சொல்ல வேண்டி முதலில் தீநட்பு என்பதைக் கூறுகின்றனர். தீநட்பாவது தீயகுணம் உடையவரோடு செய்ததாகிய நட்பு. அவ்விதம் தீயகுணத்தை உடையாரோடு செய்த நட்பினை விலக்கவேண்டும் என்று கூறுவதே இவ்வதிகாரத்தின் கருத்தாகும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேல் அதிகாரங்களில் சொல்லியதுபோல் மிக்க அன்புடையார் தமக்கு நட்பினராய்ச் சேர்ந்துவிட்டு அவரிடத்து உள்ள தீக்குணத்தால் அவரை விலக்குதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

811. பருகுவார் போலினும் பண்பிலார் கேண்மை
பெருகலிற் குன்ற லினிது.

(பரி.) இ-ள். பருகுவார் போலினும் பண்பு இலார் கேண்மை=காதன் மிகுதியாற் பருகுவார் போன்றாராயினும் தீக்குணமுடையார் நட்பு—பெருகலின் குன்றல் இனிது=வளர்தலிற் றேய்தல் நன்று. எ-று.

'பருகு வன்ன வருகா நோக்கமொடு' *என்றார் பிறரும். நற்குணமில்லாரெனவே, தீக்குணமுடையாரென்பது அருத்தாபத்தியான் வந்தது. பெரு

* பொருநராற்றுப்படை, 78-ம் அடி.



கினால் வருங்கேடு குன்றினால் வாராமையின், 'குன்றலினிது' என்றார். இதனும் தீநட்பினது ஆகாமை பொதுவகையாற் கூறப்பட்டது. இனிச் சிறப்பு வகையாற் கூறுப. (க)

விளக்கம்:—தீக்குணமுடையார் தம்மிடத்து உள்ள ஆசை மிகுதியால் குடிக்கின்ற அமுதம்போல் தம்மைப் பெரும் பொருளாக எண்ணி ஆசையோடு இருப்பாராயினும், அவருடைய நட்பு தமக்கு வளர்வதினும் தேய்வதே நன்மை உடையது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தீயகுணமுடைய ஒருவன்

ஒருவரிடத்து எவ்வளவு அன்புடையவனாக இருக்கினும் அவனுடைய கெட்ட குணத்தினால் பெரியதோர் கேட்டினைத் தனக்குச் செய்துகொள்ளுவதுடன் தன் நட்பினருக்கும் அக்கெடுதியையும் அதனால் இம்மையில்வரும் பழியையும், மறுமையில் வரும் பாவத்தையும் கொண்டுவந்து விடுவான். ஆதலால், ஒரு முறை ஆய்ந்து அறியாது நட்புக்கொண்டாலும்பின்னர் அறிந்தபிறகு அவனுடைய அன்புடைமையைச்சிறிதும் நினையாமல் அவனது தீயகுணத்தையே எண்ணி அவனை ஒழித்து விடுதல் வேண்டும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அன்புடையவனையே அவனது தீயகுணம் கண்டு ஒழித்துவிடுதல் வேண்டுமாயின், அன்பில்லாது பயன் கருதி நட்புச் செய்பவனை என் செய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

812. உறினட் டறினொரூஉ மொப்பிலார் கேண்மை
பெறினு மிழப்பினு மென்.

(பரி.) இ-ள். உறின் நட்டு அறின் ஒரூஉம் ஒப்பு இலார் கேண்மை = தமக்குப் பயனுள்வழி நட்புச்செய்து அஃதில்வழி ஒழியும் ஒப்பிலாரது நட்பினை—பெறினும் இழப்பினும் என் = பெற்றால் ஆக்கமியாது இழந்தாற்கேடியாது எ-று.

தமக்குற்றன பார்ப்பார் பிறரோடு பொருத்த மிலராகலின், அவரை 'ஒப்பிலார்' என்றார். அவர்மாட்டு நொதுமற்றன்மையே அமையுமென்பதாம்.

விளக்கம் :—தமக்குப் பயன் கிடைக்கின்றகாலத்து நட்பினைச் செய்தும்,பயன் கிடைக்கக்கூடாத காலத்து நட்பினை விட்டும் உள்ள பொருத்த மில்லாதவர்களது நட்பினைப் பெறுவதால் வருகின்ற



லாபமேது என்றும், அந்நட்பினை இழத்தலால் வரும் கேடேது என்றும் இத்திருக்குறள் விளக்குகின்றது. இதனால், தன்னலம் கருதி நட்புச் செய்பவர்களோடு நட்பினை அடைதல் யாதொரு பயனையும் அடைவதற்கு இல்லாமல் போமென்றும், அவ்வித கருதி உடையாரோடு நட்பும் பகையுமில்லாது நடுவாகிய நொதுமலர் தன்மையைப்போலும் தன்மையுடையராயிருத்தலே போதுமென்றும்

அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் தம் பயன் கருதி நட்புச்செய்யும் மக்களை உலகோர் எவ்விதம் கருதுகின்றனர்"? என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

813. உறுவது சீர்தூக்கு நட்பும் பெறுவது
கொள்வாருங் கள்வரு நேர்.

(பரி.) இ-ள். உறுவது சீர்தூக்கும் நட்பும் = நட்பளவு பாராது அதனால் வரும் பயனளவு பார்க்கும் நட்டாரும் — பெறுவது கொள்வாரும் = கொடுப்பாரைக் கொள்ளாது விலையைக் கொள்ளும் பொதுமகளிரும் — கள்வரும் = பிறர் கேடு நோக்காது அவர் சோர்வு நோக்குங் கள்வரும் — நேர் = தம்முளொப்பர். எ-று.

நட்பு — ஆகுபெயர். பொருளையே குறித்து வஞ்சித்தொழுகலின், கணிகையர், கள்வரொடொப்ப ரென்பதாயிற்று. இவை யிரண்டுபாட்டானும் தமக்குறுவது பார்ப்பார் நட்பின்றீமை கூறப்பட்டது. (௩)

விளக்கம்:—நட்பின் விசேடத்தைச் சீர்தூக்காது அந்நட்பினால் வருகின்ற பயன் அளவையே பார்த்து நட்புச்செய்கின்ற நட்பினரும், கொடுப்பவரை மனத்துக்கொள்ளாது அவர் கொடுக்கும் விலையை மனத்துக்கொண்டு மகிழும் பொதுமகளிரும், மற்றவர்க்கு வரும் கேட்டினை நோக்காமல் அவர் மறந்திருக்கும் தருணத்துத் திருடப் பார்க்கும் கள்வரும் ஒரே சமானமானவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நட்புக்கொள்வதால் நட்பினர்க்கு உள்ள சிறந்த குணங்களால் இம்மை மறுமைப் பயனை அடையலாம் என்று எண்ணாது அவரால் வரும் பலன்களையே எதிர்பார்த்து நட்புச்செய்வாரானால் அவ்வித நட்பினை இருமனப் பெண்டிராகிய பரத்தையர் பொருள் கொடுக்கின்றவனை விரும்





பிப் புணராது அவன் கொடுக்கின்ற பொருளையே விரும்புகின்றார்கள் ஆதலால் அவ்விலை மாதர்க்குச் சமானமென்றும், அது

வன்றியும், பிறர் பொருளை அபகரிப்பதற்குச் சமயம் பார்த்து அபகரிக்கும் கள்வரோடு சமானமென்றும் உலகத்தார் என்னுவரென்று அறிமின்றேம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தம் நலம் கருதுவார் நட்பினுள்வரும் தீமை இதுவென அறிந்தோம். இவ்விதம் தம் நலம் கருதுவார் நட்பினைக் கொள்ளாதிருத்தலே தகுதி யன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

814. அமரகத் தாற்றறுக்குங் கல்லாமா வன்னார்
தமரிற் றனிமை தலை.

(பரி.) இ-ள். அமரகத்து ஆற்று அறுக்கும் கல்லா மா அன்னார் தமரின் = அமர் வாராத முன்னெல்லாம் தாங்குவது போன்று வந்துழிக் களத்திடை வீழ்த்துப்போம் கல்வியில்லாத புரவிபோல்வாரது தமர்மையில் — தனிமை தலை = தனிமை சிறப்புடைத்து. எ-று.

கல்லாமை = கதியைந்தும் சாரிபதினெட்டும் பொருமுறைமுற்றும் அறியாமை. துன்பம் வாராதமுன்னெல்லாம் துணையாவார்போன்று வந்துழி விட்டுநீங்குவரென்பது உவமையாற் பெற்றாம். அவர் தமரானால் வருமிறுதி தனியானால் வாராமையின், தனிமையைத் 'தலை' என்றார்: எனவே, அதுவும் நேர்தல் பெறுதும். (௪)

விளக்கம் :—யுத்தம் வருவதற்குமுன்னெல்லாம் தாங்கிச் சென்று வெற்றியைக் கொடுப்பதுபோல் காணப்பட்டு யுத்தம் வந்த காலத்து யுத்தகளத்தில் தன்மீது ஏறிச்சென்ற யுத்த வீரனை யுத்தகளத்தில் வீழும்படிச் செய்துவிட்டுப் போய்விடுகின்ற அறிவில்லாத குதிரை ஒன்றினைப்போன்ற மனிதரது நட்பைக் கொள்வதினும் தனிமையாக இருப்பதே சிறப்புடையது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அறியவேண்டிய கதி ஐந்து என்கின்ற வேகத்தினையும், சுழன்று வருவது ஆகிய சாரி பதினெட்டினையும், யுத்தம் வந்தகாலத்துப் பகைவருடைய படை தன் மீது வந்து பாயுமாயின் அஞ்சாது நிற்றலும் ஆகிய நற்குணங்களைப் பெறாது தன்மீது ஏறியுள்ள தலைவன் யுத்தம் செய்யும் காலத்துத்

தாங்கி யில்லாது அவனை யுத்தகளத்தில் வீழ்த்தி விட்டுப் பகைவரால் கொல்லும்படிச் செய்யும் குதிரை ஒன்று எவ்விதம் தகுதியற்றதோ, அதுபோல் தம் நட்பினனுக்கு யாதொரு துன்பமு மில்லாத காலத்திலெல்லாம் பெரியதோர் துணைவர்போன்று காணப்பட்டு அவனுக்கு "ஏதேனும் ஒரு துன்பம் வந்தகாலத்து அவனை விட்டு நீங்குகின்ற மக்களோடு நட்புக்கொள்வதினும், அவர் நட்பில்லாது தனியாக இருப்பதே நன்மையென்று அறிந்தோம். ஏனெனின்? தனியாக இருப்பின் அஞ்சுவதற்கு அஞ்சி நடக்க நேருமாதலால் தனக்கு யாதொரு துன்பமும் வருவதற்கில்லை யென்றும், இவ்வித நட்பில்லாதாரை நட்புக்கொள்வதால் துணை யுள்ளது என்று எண்ணிச் சென்று துன்பம் அடைய நேருமென் றும், இவ்வித தீயாரோடு நட்புக்கொள்ளாதிருத்தலே சிறந்ததென் றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித தீநட்பினர் நட்பினைக் கொள்ளாதிருத்தல் வேண்டுமென்றமையால், நட்புக்கொள்பவர் நன் மக்களாயின் இவ்வித தீங்கு நேராதன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்

815. செய்தேமஞ் சாராச் சிறியவர் புன்கேண்மை
எய்தலி னெய்தாமை நன்று.

(பரி.) இ-ள். செய்து ஏமம் சாராச் சிறியவர் புன்கேண்மை=செய்து வைத்தாலும் அரணாகாத கீழ்மக்களது நட்பு—எய்தலின் எய்தாமை நன்று=ஒருவற்குண்டாதலின் இல்லையாதல் நன்று. எ-று.

சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. அரணாகாமை=தொலைவின்கண் விட்டு நீங்குதல். எய்தலினெய்தாமை நன்றென்பதற்கு மேலுரைத்தாங்கு ரைக்க. சாராதவென்னும் பெயரெச்சம் கேண்மையென்னும் பெயர்கொண்டது; சிறியவரென்பதனைக் கொள்ளின், செய்தென்பது நின்று வற்றும். இவை யிரண்டுபாட்டானும் தொலைவிற் றுணையாகாத நட்பின்றீமை கூறப் பட்டது. (௫)

விளக்கம் :—எவ்வளவு செய்து வைத்தாலும் சமயத்துக் காவலாகாத அறிவிலாக் கீழ்மக்களது தீய நட்பினை ஒருவன் அடைவதுடன் அடையாதிருப்பதே நன்மையாகுமென்று இத்



திருக்குறள் கூறுகின்றது. இதனால், நட்புக்கொள்பவர் மேன் மக்களாயின் அவ்விதம் சமயத்துவிட்டு ஒழியாரென்றும், அறிவிலாக் குடியிற்பிறந்த கீழ்மக்களே அவ்விதம் செய்வார்களென்றும், ஆதலால் நட்புக்கொள்ளும் காலத்து நற்குடிப்பிறப்பு உடையவரை நாடியே நட்புச்செய்தல் வேண்டுமென்றும், அவ்வித நல்லகுடியில் பிறந்தவர் தமக்குத் துன்பம் வந்தகாலத்துத் தாங்கும் அரண்போல் காவலாக இருப்பாரென்றும், அவ்விதமல்லாத கீழ்மக்களது நட்பினைக்கொள்வது தமக்கு நன்மை ஆகாது முடிவதுடன் தீமையையும் தரும் என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அறிவிலாதார் நட்புக் கூடாது என்று அறிந்தோம். ஆயின், அறிவுடையார் பகைவராக இருப்பின் அவரது பகை ஏதேனும் தீமையைச் செய்யுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

816. பேதை பெருங்கெழீஇ நட்பி னறிவுடையா
ரேதின்மை கோடி யுறும்.

(பரி.) இ-ள். பேதை பெருங்கெழீஇ நட்பின் = அறிவிலானது மிகச் செறிந்தநட்பின்—அறிவுடையார் ஏதின்மை கோடி உறும் = அறிவுடையானது பகைமை கோடி மடங்கு நன்று. எ-று.

கெழீஇயவென்பது விறுதிநிலை விகாரத்தாற்றொக்கது. பன்மை உயர்த்தற்கண்வந்தது. அறிவுடையான் பகைமை ஒருதீங்கும் பயவாமையானும், பேதைநட்பு எல்லாத்தீங்கும் பயத்தலானும் 'கோடியுறும்' என்றார். பெருங் கெழி நட்பென்று பாடமோதுவாரு முளர். (௬)

விளக்கம் :—அறிவில்லாதவரோடு செய்கின்ற மிகுதியும் செ

குத்தமாகிய நட்பைக்காட்டிலும் அறிவுடைய ஒருவனது பகையா னது கோடி மடங்கு நன்மையை உடையது என்று இத்திருக் குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனின்? அறிவுடைய ஒருவன் பகைவன் ஆயினும் தனக்கு உள்ள பகையால் நன்னெறி விலகித் தீவழியிற் செல்லான் ஆதலால் அவ்வித பகைவனால் யாதும் தீமையே நேராது என்றும், அறிவில்லாத சிற்றினத்து நட்புக் கொள்ளுவதால் அவன் அறிவில்லாமையால் செய்கின்ற தீமை யில் தனக்கும் துன்பம் வருமென்றும் அறிகின்றோமாதலால்,



அறிவில்லாதவரோடு நட்புக்கொள்வதினும் அறிவுடையோரது பகையே மேலானது என்று அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "அறியவேண்டுவனவற்றை அறியாது நட்பின ரிடத்து மகிழ்ச்சி அடைவதற்கு மாத்திரம் இருக்கின்ற மக்களோடு ஒருவன் நட்புக்கொள்ளுவானாயின், அது எவ்வித தகுதியுடைய தாகும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

817. நகைவகைய ராகிய நட்பிற் பகைவராற்
பத்தடுத்த கோடி யுறும்.

(பரி.) இ-ள். நகை வகையர் ஆகிய நட்பின் = தாமறிதல் வகையராகாது நகுதல் வகையராதற் கேதுவாகிய நட்பான் வருவனவற்றின் — பகைவரால் பத்து அடுத்த கோடி உறும் = பகைவரான் வருவன பத்துக்கோடி மடங்கு நல்ல, எ-று.

நட்பு — ஆகுபெயர். அந்நட்பாவது :— விடமருந் தூர்த்தரும் வேழம் பரும் போன்று பலவகையா னகுவித்துத் தாம் பயன்கொண் டொழிவாரோடு உளதாவது. பகைவராலென்பது அவாய்நிற்றலின், வருவனவென்பது வரு விக்கப்பட்டது. பத்தடுத்தகோடி = பத்தாகத்தொகுத்தகோடி. அந்நட்பான் வருமின்பங்களின் அப்பகைவரான் வருந்துன்பங்கள் இறப்பநல்லவென்ப தாம். இதற்குப் பிறரெல்லாஞ் சொல்லிலக்கணத்தோடு மாறுகொள வுரைத் தார்.

விளக்கம் :— தாம் அறியவேண்டுவனவற்றை அறிவதற்கு

இல்லாமல் தம் நட்பினரோடு களிப்புடன் பேசி நடித்து மகிழச் செய்து பயன்கொண்டு போகின்ற மக்களுடைய நட்பினால் வருகின்ற இன்பங்களைக் காட்டிலும் நட்புக்கொள்ளாத பகைமையை உடைய பகைவரால் வரும் நன்மை பத்துக்கோடி மடங்கு அதிகமாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, காமுகரும் கூத்து முதலிய நடிப்புகளைச் செய்யும் கூத்தாடிகளும் ஆகிய மக்கள் தம்மிடத்து நட்புக்கொண்டாரைப் பல வகையாலும் சிரிக்கும்படிச் செய்து தாம் அடையவேண்டிய பயனை அடைந்துவிட்டு ஒழித்து போவாராதலால், அவ்விதம் தன்பயன் கருதும் அறிவிலாத மக்களோடு நட்புக்கொண்டு பொருளையும் காலத்தையும் அறிவையும் அழிப்பதிலும் பகைவரால் வருகின்ற லாபம் பத்துக்கோடி



மடங்கு அதிகமாகும் என்று கூறுகின்றனர். ஏனெனில்? அப்பகைவரால் எவ்வித பொருட்கேடும், காலக்கேடும், அறிவின்கேடும் சோர ஆகையால் அவரால் வரும் குற்றமில்லாமையையே இலாபமாக்கி அவ்விலாபத்தால் வருமின்பத்தைக் காமுகர் முதலிய மக்கள் செய்த இன்பத்தைக் காட்டிலும் இன்பமென்று கூறி அவ்வின்பமானது அளவற்றது என்று அறிவித்தற்குப் பத்துக்கோடி மடங்கு என்று ஓர் பெரிய எண்ணினையும் எடுத்துக் காட்டினர் என்று அறிகின்றோம் என்றனர் அதுகேட்ட மாணாக்கர், “சிலர் தம்மால் பெரிய காரியங்களைச் செய்ய வல்லவராயினும் சமயத்தில் முடியாததுபோல் நடித்துத் தம் நட்பினைக் கைவிடுகின்றார்கள் என்று அறிகின்றோம். அவ்வித நட்பினை என் செய்தல் வேண்டும்?” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

818. ஒல்லுங் கரும முடற்று பவர்கேண்மை.
சொல்லாடார் சோர விடல்.

(பரி.) இ-ள். ஒல்லுங் கருமம் உடற்றுபவர் கேண்மை = தம்மால் முடியுங் கருமத்தை முடியாதாக்கிச் செய்யாதாரோடு கொண்ட நட்பினை—

சொல்லாடார் சோரவிடல்=அது கண்டால் அஃதறியச் சொல்லாதே சோர விடுக. எ-று.

முடியாதாக்குதல்=முடியாதாக நடித்தல். சோரவிடல்=விடுகின்றவாறு தோன்றாமல் ஒருகாலைக்கொருகா லோயவிடுதல். அறியச்சொல்லினும் விடுகின்றவாறு தோன்றினும் அதுபொழுது பரிகரித்துப் பின்னு நட்பாமொழுகக் கருதுவாராகலின், 'சொல்லாடார்' என்றுஞ் 'சோரவிடல்' என்றுங் கூறினார். இவை மூன்றுபாட்டானும் முறையே பேதையார், நகுவிப்பார், இயல்வதுசெய்யாதாரென் றிவர்களது நட்பின் றீமை கூறப்பட்டது. (௮)

விளக்கம்:—தம்மால் முடியக்கூடிய தொழிலை முடியாதது போல் நடித்துக்காட்டி வஞ்சகம் செய்தாரிடத்துக் கொண்ட நட்பினை அவர் அறிய யாதும் சொல்லாமல் சிறிது சிறிதாக விட்டுவிடுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தம்மால் முடியக்கூடிய கருமத்தை முடியாததுபோல் நடித்துச் சமயத்துக் கைவிடுகின்ற தீயவரது நட்பானது ஓர் பயனும்



தராது ஆகையால் அவ்வித நட்பினை விட்டுவிடுதல் வேண்டுமென்றும், அவ்வாறு விடுங்காலத்து அவர் அறியாவண்ணம் சிறிது சிறிதாக நாளுக்கு நாள் குறையும்படிச் சொல்லாமல் விட்டுவிட வேண்டுமென்றும் அறிகின்றோம். ஏனெனின்? நட்பினை விட்டுவிடுவதாக அவர் அறிவாராயின் அதுபொழுது ஏதோ பரிகாரத்தைச் சொல்லி திருப்திபடுத்திப் பின்னும் நட்பினராக இருக்க எண்ணுவாராதலால் அவர் அறியாமலே நட்பினை விட்டுவிடுதல் வேண்டுமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய மூன்று செய்யுள்களாலும் அறிவில்லாதவர் நட்பும், சிரிக்கச்செய்து பொருள் கொள்ளுவார் நட்பும், தம்மால் செய்யக் கூடியதைச் செய்யாது ஒழிவார் நட்பும் தீமையாக்குமென்றும், அவ்வித தீய நட்புக் கொள்ளுதல் கூடாதென்றும் அறிகின்றோம். ஆயின், சிலர் நட்புக்கொண்டவர்போன்று வாக்கால் கூறிச் செய்கையால் வேறுபடுகின்றவர்களாகக் காண்கின்றோம். அவ்வித தகுதியுடையாரை என்செய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

819. கனவினு மின்னாது மன்னோ வினைவேறு
சொல்வேறு பட்டார் தொடர்பு.

(ப.உ.) இ-ள். வினை வேறு சொல் வேறு பட்டார் தொடர்பு=வினையுஞ் சொல்லு மொவ்வாது வேறுவேறாயிருப்பார் நட்பு,—கனவினும் இன்னாது=நனவின்கண்ணே யன்றிக் கனவின்கண்ணு மின்னாது. எ-று.

வினை சொற்களொவ்வாமை முதன்மே லேற்றப்பட்டது. அஃதாவது வினையிற் பகைவராய்ச் சொல்லின் நட்டாராயிருத்தல். நிகழ்வின்கண் உளதா யிருத்தலால், 'கனவினுமின்னாது' என்றார். உம்மை எச்சவும்மை; இழிவு சிறப்பும்மையுமாம். மன்னும், ஓவும் அசைநிலை. (௯)

விளக்கம்:—செய்யும் தொழிலும், சொல்லும்படியான சொல்லும் ஒன்றை ஒன்று பொருந்தாது வேறு வேறாயிருக்கக்கூடிய தகுதியுடைய நட்பானது நினைக்குங்காலத்து நினைவினிடத்தே மாத்திரமல்லாமல் கனவினிடத்தேயும் துன்பம் தரும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நட்பினர்போன்று உரையாடிப் பின்னர் தம தொழிலைச் செய்யுங்காலத்துப் பகைவர் செய்



யும் செயலைச் செய்கின்ற மக்கள் எமனினும் கொடியவர் ஆதலால் அவ்வித தகுதியுடையார் நட்பானது விழித்திருக்கும் நல்ல நினைவோடு இருக்கின்ற காலத்துத் துன்பம் தருவது மாத்திரமல்லாமல் தூங்கும் காலத்துத் தோன்றுகின்ற கனவிலேயும் அந் நினைவு தோன்றி மிக்க துன்பத்தைத் தருமாதலால், அவ்வித நீசரோடு செய்த நட்பினை அறவே ஒழித்தல் வேண்டும் என்று அறிவின்றோம் என்றனர். இதுகேட்ட மாணாக்கர், "இவர் தனியாக உள்ள காலத்து நட்புக்கொண்ட நட்பினரைப் புகழ்ந்தும் பலரோடு கூடியுள்ள காலத்துப் பழிப்பதாகக் காண்கின்றோம். அவ்வித தகுதியுடையார் நட்பினை என் செய்தல்வேண்டும்"? என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**820. எனைத்துங் குறுகுத லோம்பன் மனைக்கெழீஇ**
**மன்றிற் பழிப்பார் தொடர்பு.**

(பரி.) இ-ள். மனைக் கெழீஇ மன்றிற் பழிப்பார் தொடர்பு=தனியே மனைக்க ணிருந்துழி நட்பாடிப் பலரோடு மன்றின்க ணிருந்துழிப் பழிகூறுவார் நட்பு—எனைத்தும் குறுகுதல் ஓம்பல்=சிறிதாயினுந் தம்மை யணுகுதலைப் பரிகரிக்க. எ-று.

மனைக்கட் கெழுமலும் மன்றின்கட் பழித்தலுந் தீராகலின், அவர் ஒருகாலும் தம்மை யணுகாவகை குறிக்கொண்டு காக்கவென்பார், அவர் நட்பின் மேல் வைத்துக் கூறினார். இவை யிரண்டுபாட்டானும் வஞ்சர்நட்பின் தீமை கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—தனியே வீட்டிலிருந்த காலத்து நட்பினர் போல் புகழ்ந்துபேசிச் சபையில் பலரோடு கூடியிருந்த காலத்துப் பழிச் சொற்களைச் சொல்லுகின்றவர் நட்பானது தம்மைச் சிறிதள வும் சேராதபடிப் பரிகரித்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, வீட்டிலுள்ள காலத்து ஏதோ சிறிது யும் நட்பால் ஒற்றுமை கொண்டவர்போல் கூடிப் புகழ்ந்து குலவு தலும் பலரோடு கூடியிருந்த காலத்துப் பகைவரினும் பகைவராய்ப் பழித்துக் கூறி மானத்தைப் போக்குதலும் உடையாரது நட்பு தம்மைச் சிறிதும் சேரவொட்டாது ஒழித்துத் தொலைத்தல்



வேண்டுமென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக் கர் "மேற்கூறிய இரண்டு செய்யுள்களாலும் வஞ்சகருடைய நட் புக்கொள்ளுவதால் வரும் நிலைமையினையும் அவரிடத்துச் சேர்தல் கூடாதென்பதையு மறிந்தோம். அன்றியும் தீநட்பு என்னும் இவ் வதிகாரத்தால் நட்புக்கொள்ளக் கூடாதார் தகுதியையும் அறிந் தோம். இனிச் சிலர் பகைவராக இருந்து நட்பினர் போல நடிப் பதாகக் காண்கின்றோம். அவ்வித நட்பினை என் செய்தல் வேண் டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 83. அதிகாரம்.

## கூடாநட்பு.

(பரி.) இனி வினைக்கூடாநட்புக் கூறுகின்றார். அஃதாவது பகைமையான் அகத்தாற் கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் புறத்தாற் கூடி யொழுகுவார் நட்பு.

விளக்கம்:—அதாவது, தமக்கு உள்ள பகைமையால் மனத்துள் கூடாமலிருந்து தம் பகையை முடிக்கக் கூடிய காலம்வரும் வரையில் வெளிக்கு நட்பினர் போல் கூடி நடிக்கின்றவரது நட்பு. மேல் தீநட்புக் கூறினாராதலால் இப்போது கூடா நட்பென்னும் இவ்வதிகாரத்தைக் கூறத் தொடங்கினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித கூடா நட்பினை ஓர் உவமை வாயிலால் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**821. சீரிடங் காணி னெறிதற்குப் பட்டடை
நேரா நிரந்தவர் நட்பு.**

(பரி.) இ-ள். நேரா நிரந்தவர் நட்பு=கூடாதிருந்தே தமக்கு வாய்க்குமிடம் பெறுந்துணையும் கூடியொழுகுவார் நட்பு—சீரிடம் காணின் எறிதற்குப் பட்டடை=அது பெற்றால், அறவெறிதற்குத் துணையாய பட்டடையாம். எ-று.

• எதிவுமெல்ல வாராமுனெல்லார் தாக்குவதுபோன்றிருந்து வஞ்சி

55



அறவெறிவிப்பதாய பட்டடைக்கும் அத்தன்மைத்தாய நட்பிற்குந் தொழி லொப்புமையுண்மையான், அதுபற்றி அந்நட்பினைப் பட்டடையாக உபசரித்தார். சீரிடமென்பது பாடமோதி முடிவிடமென் றுரைப்பாருமுளர். (க)

விளக்கம்:—தமக்குள்ள பகைமையால் மனத்திற் கூடா திருந்து தம் பகையை முடிக்கக் கூடும் சமயம் வரும் வரையில் நட்பினர் போன்று கூடி இருப்பவர் நட்பானது தன்னிடத்து வைத்த ஒன்றினை அறவெட்டுவதற்குத் துணையாகும் பட்டடை

போன்று உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் கொல்லன் ஒருவன் தான் வெட்ட எண்ணிய இரும்பு முதலாகிய லோகத்தை வெட்டுவதற்குப் பட்டடை என்னும் (பட்டரை) பீடத்தின் மீது வைத்த காலத்து அவன் வெட்டுகின்ற காலம் வரையில் தன்னிடத்து வைத்த பொருளைத் தாங்கி நிற்பதுடன் அப்பொருளை வெட்டும் காலத்து உறுதியாக நின்று வெட்டுவதற்கு இடம் தருவது போல், உட்பகை உடைய மக்கள் கொள்ளுகின்ற நட்பானது கொல்லன் பட்டடை போல் சமயம் வரும் வரையில் தாங்கி நிற்பது போல் காணப்பட்டுப் பகையைத் தீர்த்துக்கொள்ளச் சமயம் வந்த காலத்து நட்புக் கொண்டவரைத் தொலைப்பதற்குத் தகுதியாக உள்ளது என்று கூடா நட்பினைக் கொல்லன் பட்டடைக்குச் சமானமாக எடுத்துக் காட்டினர் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இக்கூடா நட்பினை மற்றொரு உவமையால் விளக்குதல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

822. இனம்போன் றினமல்லார் கேண்மை மகளிர்
மனம்போல வேறு படும்.

(பரி.) இ-ள். இனம்போன்று இனமல்லார் கேண்மை=தமக்குற்றார் போன்று உறாதாரோடு உறாதாய நட்பு—மகளிர் மனம்போல வேறுபடும்= இடம்பெற்றுழிப் பெண்பாலார் மனம்போல வேறுபடும். எ-று.

அவர்மனம் வேறுபடுதல் "பெண்மனம் பேதின் றொருப்படுப்பே னென்னு—மெண்ணி லொருவன்" * என்பதனானுமறிக. நட்பு வேறுபடுதலாவது:—பழைய பகைமேயாதல். இவை யிரண்டுபாட்டானும் கூடா நட்பினது குற்றம் கூறப்பட்டது. (உ)

* வளையாபதி.

விளக்கம்.—தம்மிடத்து மிகுதியும் மனம் பொருந்தியவர் போல் வெளியே காணப்பட்டு மனத்தால் பொருந்தாதவரது நட்பானது தம்முடைய எண்ணத்தை முடிக்கக் கூடிய இடம் கிடைக்குமாயின் பெண்களுடைய மனம் எவ்விதம் மாறுபடுமோ அவ்விதம் மாறுபடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மனத்துள் ஒன்றும் வெளியில் ஒன்றும் ஆகச் சிறிதும் பொருந்தாத மக்களோடு கொள்ளுகின்ற நட்பானது தமக்குத் தக்க இடம் கிடைக்கும் வரையில் பயத்தால் நடித்துக்காட்டித் தம்முடைய எண்ணத்தை முடித்துக்கொள்ள இடம் கிடைக்குமாயின் தம்முடைய மனத்தை மாற்றித் தம் விருப்பத்தை முடித்துக்கொள்ளும் பெண்களுடைய மனம்போல் மாறுதலடையும் என்றும், அப்பெற்றியோர் தம் பகைமை முடிய இடம் கிடைக்கும் வரையில் பொறுத்திருந்து இடம் கிடைத்தகாலத்துத் தம் பகைமையை முடித்துக் கொள்ள எண்ணுவார்களென்றும், ஆகவே அம்மக்களது நட்பு கூடாதென்றும் அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "ஏன் பெண்கள் தங்களுடைய மனத்தை இடம் கிடைத்தவிடத்து வேறாக்கிக் கொள்ளுவர்?" என்னலும், ஆசிரியர் கூறத்தொடங்கினர். "மக்காள்! மகளிர் மனம் அயலார்மீது எக்காலத்தும் செல்வதென்றும், தம் நாயகர் எவ்வித தகுதியுடையவராயினும் அவர் மனம் அயலவரிடத்தேயே செல்லுமென்றும், குமரகுருபரஸ்வாமிகள் தமது நீதிநெறி விளக்கத்தில், "ஏர்தெழில் மிக்கான் இளையான் இசைவல்லான், சார்ந்தையர் கண்கவர் நோக்கத்தான்—வாய்ந்த, நயனுடை இன்சொல்லான் கேளே னினும் மாதர்க்கு, அயலார்மேலாகும் மனம்" என்றுகூறியுள்ளார். அதாவது, பெண்கள் தமக்கு வாய்ந்த நாயகன் அழகில் மிகுந்தவனும், இளமைப்பருவம் கழியாதவனும், இசையில் வல்லவனும், பெண்களுடைய கண்களைக் கவரக்கூடிய பார்வையுடையவனும், நெருங்கிய சுற்றத்தவனும் இருந்தாலும், இவ்வித குணங்களையெல்லாம் மதியாது காம இன்பம் ஒன்றையே

கருதித் தம்மனத்தை அவரிடத்துச் செலுத்துவரென்றும், அவ் விதம் செலுத்துபவர் தமக்கு இடம் பெறும்வரையில் தம் காரி யத்தின் பொருட்டு உயிர் விடுவார் போன்று நடித்துக் காட்டி



இடம் பெற்ற விடத்தில் தம் மனத்தை வேறுபடுத்தித் தாம் கொண்ட எண்ணத்தை முடித்துக் கொள்ளுவரென்றும் இச் செய்யுளால் அறிகின்றோம். அதுவன்றியும், பரிமேலழகர் தம் விசேட உரையுள் வியாபதி செய்யுளாகக் கூறிய செய்யுளிலும் பெண்ணின் மனத்தை வேறுபடாது ஒருமிக்கும்படி செய்வேன் என்று ஒருவன் எண்ணுமாயின் என்று பொருள்படக் கூறிய அடி களை எழுதி உள்ளமையால், பெண்கள் மனம் எக்காலத்தும் வேறு படக் கூடியதென்றும், அதுபோல் பகைவர் வெளியில் நட்பாக இருக்கினும் பழைய பகையே பகையாக நிலைத்து நிற்குமென்றும் கண்டோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஏதோ அறிவில்லா தார் பகைகொண்டு நிற்பாராயின் அவர் தம் நலம் கருதிக் கொள்ளு கின்ற நட்பு கூடா நட்பாக இருக்கும் என்று கூறியதாக அறிகின் றோம். ஆயின், பல நூல்கள் கற்றவர் பகைவராக இருந்து நட்புக்கொள்வாராயின் அந்நட்பு எதுவாக இருக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

828. பலநல்ல கற்றக் கடைத்து மனநல்ல
ராகுதல் மாணார்க் கரிது.

(பரி.) இ-ள். நல்லபல கற்றக்கடைத்தும்=நல்லன பலநூல்களைக் கற்ற விடத்தும்—மனம் நல்லர் ஆகுதல் மாணார்க்கு அரிது=அதனுன் மனந்தி ருந்தி நட்பாதல் பகைவர்க்கில்லை, எ-று.

நல்லன—மனக்குற்றங்கெடுப்பன. மனநல்லரெனச் சினைவினை முதன் மேனின்றது. நல்லராகுதல்=செற்றம் விடுதல். உள்ளே செற்ற முடையா ரைக் கல்வியுடைமைபற்றி நட்பென்று கருதற்க வென்பதாம். (௩)

விளக்கம்:—மனக்குற்றத்தைக் கெடுப்பனவாகிய நல்ல நூல்

ன் பலவற்றைக் கற்ற இடத்து அக்கற்றலால் மனமானது திரும்பி நட்புத் தன்மையைக் கொள்ளுதல் பகைவர்க்கு உண்டாவதில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் நல்ல பல கற்றவர் என்று கல்வி உடைமை ஒன்றையே கருதி கூடா நட்பினராகிய பகைவரை நட்பினரென்று கருதுதல் கூடாது. ஏனெனில்? அப் பகைவர் கூடா நட்பினர் ஆதலால், தம் பகைமையை ஒழிக்கக் கூடிய கோபத்தை விடுத்து நல்லவராதல் இல்லை என்று அறிக்கோ



மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சிலர் எக்காலத்தும் இனிய முகமுடையாராய்ச் சிரித்து மனத்தோடு வஞ்சகராக இருக்கக் காணுகின்றோம். ஆதலால், அவ்விதம் நகைமுக முடையாரைக் காணில் என் செய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறு வாராயினர்.

824. முகத்தி னினிய நகாஅ வகத்தின்னா
வஞ்சரை யஞ்சப் படும்.

(பரி.) இ-ள். முகத்தின் இனிய நகாஅ அகத்து இன்னா வஞ்சரை= கண்டபொழுது முகத்தால் இனியவாகச் சிரித்து எப்பொழுதும் மனத்தா லின்னாராய வஞ்சரை— அஞ்சப்படும்= அஞ்சல்வேண்டும். எ-று.

நகையது வகைபற்றி 'இனிய' என்றும், அகத்துச் செற்றம் நிகழவும் அதற்கு மறுதலையாய நகைசெயப் புறத்து விளைத்தலின் 'வஞ்சர்' என்றும், அச்செற்றம் குறிப்பறிதற்கருவியாய முகத்தானும் தோன்றாமையின் அஞ்சுதல் செய்யப்படுமென்றும் கூறினார். இவை யிரண்டுபாட்டானும் குற்றத்திற் கேதுவாய அவர்கொடுமை கூறப்பட்டது. (௪)

விளக்கம் :—ஒருவரை ஒருவர் பார்த்தகாலத்து முகத்தில் இனிமை தோன்றும்படிச் சிரித்துப் பேசி மனத்திடத்தே கோபத்தோடு வஞ்சகத்தைச் செய்யும் வஞ்சகரைக் காணின் அஞ்சுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் மனத்து இனிமை கொள்ளுகின்ற காரணத்தால் மலர வேண்டியதாகிய முகத்தை மக்கள் கண்டு 'இவர் இன்முக முடையாரதலால் இவர் மனத்திடத்தே இனியவர்' என்று எண்ணி அவரிடத்து நட்புக் கொள்ளவும், மாறாத பகைமையைக்கொண்ட அவ்வஞ்சகர் தம் முகத்தால் தம் கோபம் தெரியாமல் வஞ்சித்து நகைத்து நின்று பின்னர் தம் பகைமையை முடிப்பதற்குக் காலம் நேருகின்ற இடத்து நட்புக்கொண்டவர்களைத் துன்புறுத்துவார்கள் ஆதலால், மனத்தில் உள்ளதை அறிவிக்கக்கூடிய முகத்தை மாறுபடுத்தி வஞ்சிக்கின்ற வஞ்சகரைக் கண்ட உடனேயே அஞ்சி அகலவேண்டும் என்று அவர் கொடுமை கூறியதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மனத்தினில் இனிமை கொள்ளாது முகத்தினில் இனிமைகொள்ளும் வஞ்சகரைப்பற்றி அறிந்தோம். இனி சிலர் எக்கா



லத்தும் இனிய சொற்களையே கூறி வஞ்சிக்கின்றனர். அவரைப் பற்றி ஏன் செப்பல்வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

825. மனத்தி னமையா தவரை யெனைத்தொன்றுஞ்
சொல்லினாற் றேறற்பாற் றன்று.

(பரி.) இ-ள். மனத்தின் அமையாதவரை = மனத்தாற் றம்மொடு மேவாதாரை— எனைத்தொன்றும் சொல்லினன் தேறற்பாற்று அன்று— யாதொரு கருமத்திலுஞ் சொல்லாற் றெளிதன்முறைமைத் தன்று என்று சொல்லும் நீதி நூல். எ-று.

நீதிநூலென்பது அவாய்நிலையான் வந்தது. பகைமை மறைத்தற்பொருட்டுச் சொல்லுகின்ற வஞ்சனைச்சொல்லைச் செவ்விய சொல்லெனக்கருதி

அவரைக் கருமங்களிற்றெளிதல் நீதிநூன்முறைமை யன்றென்பதாம். (இ)

விளக்கம் :—மனத்திடத்தே பகைமை கொண்டு எக்காலத்தும் தம்மோடு உள்ளவராகிய கூடா நட்பினரை அவர் இனிமை படப் பேசும் சொற்களால் 'இவர் நம்மிடத்து இனியர்' என்று கருதுதல் கூடாது என்று நீதி நூல்கள் கூறுகின்றன என்று இத் திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் மேல் விளக்கியபடி நஞ்சடைய நாகம் போன்று தம்முடைய பகைமை தெரியாத விதமாக மறைத்து இனிமைபடப் பேசும் வஞ்சகச் சொற்களை உண்மை யாகிய சொற்கள் என்று எண்ணி அவ்வஞ்சகரைத் தாம் செய்ய எண்ணிய காரியங்களுள் கூடும்படிச் செய்தல் கூடாதென்றும், அவ் விதம் செய்யின் அது நட்புக் கொண்டார்க்குத் தீமையே இழைக்கு மென்றும் அறிகின்றோம். ஆதலால், இவ்வித வஞ்சகரை நட்புக் கொள்ளுதல் கூடாதென்பதே துணிபாகு மென்றனர். அது கேட்ட மாணாக்கர், "நட்பினரைப் போன்று சிலர் பகைவராகவே இருந்து பேசுகின்றனர். அவர் சொல்லைப் பகைமைகொண்ட சொல் என்று அறிதல் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

826. நட்டார்போ னல்லவை சொல்லினு மொட்டார்
லொல்லை யுணரப் படும். [சொ

(பரி.) இ-ள். நட்டார்போல் நல்லவை சொல்லினும் = நட்டார்போன்று நன்மைபயக்குஞ் சொற்களைச் சொன்னாராயினும்,—ஒட்டார் சொல் ஒல்லை



உணரப்படும் = பகைவர்சொற்கள் அது பயவாமை அச்சொல்லியபொழுதே யறியப்படும், எ-று.

சொல்லினுமெனவே, சொல்லாமையே பெற்றும். ஒட்டாராதலாற் றீமை பயத்தல் ஒருதலையென்பார், 'ஒல்லையுணரப்படும்' என்றார். (சு)

விளக்கம் :—நட்பினரைப்போலவே நடித்து நன்மையைத் தரக் கூடிய சொற்களைச் சொன்னாராயினும் மனத்தில் பகைமை

கொண்ட அவருடைய சொற்கள் நன்மை பயவாதென்பதை அப்பகைவர் சொல்லுகின்றபொழுதே அறியக்கூடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னேயெனில்? மனத்தால் பகைகொண்டார் தம் பகைமையால் நல்ல சொற்களைச் சொல்லுவதே இல்லை என்றும், ஓர் கால் வஞ்சகமாகச் சொல்லினும் அவர் சொல்கொண்டு நடக்ின் நடந்த ஒருவனுக்கு அவன் எண்ணியபடி நன்மை யுண்டாகாது தீமையே உண்டாகிவிடுமாதலால் அக்கூடா நட்பினராகிய வஞ்சகருடைய சொற்கள் எக்காலத்தும் நன்மையை உண்டாக்காமல் தீமையையே உண்டாக்கும் என்றும் அறிதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சிலர் பகைவராக இருந்தும் காணுகின்ற காலத்து மிகுதியும் பணிவாகப் பேசுகின்றனர். அவ்வித பகைவருடைய வணக்கத்தைக் கண்டு யாது எண்ணுதல் வேண்டும் என்பதை ஓர் உவமையால் விளக்கல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

827. சொல்வணக்க மொன்னார்கட் கொள்ளற்க வில்வ
 ணக்கந் தீங்கு குறித்தமை யான்.

(பரி.) இ-ள். வில்வணக்கம் தீங்கு குறித்தமையான் = வில்லினது வணக்கம் எய்தவர்க்குத் தீமைசெய்தலைக் குறித்தமையால்,—ஒன்னார்கண் சொல்வணக்கம் கொள்ளற்க = பகைவர்மாட்டுப் பிறக்குஞ் சொல்லினது வணக்கத்தையும் தமக்கு நன்மை செய்தலைக் குறித்ததென்று கருதற்க, எ-று.

தம்வணக்க மன்றென்பது தோன்றச் 'சொல்வணக்கம்' என்றும், வில்வணக்கம் வேறுபிறும்வணங்குதலொப்புமைபற்றி அதன் குறிப்பை எதுவாக்கியும் கூறினர். வில்லியது குறிப்பு அவனினுடைய வில்வணக்கத்தின்மேனிற்றலான், ஒன்னாரது குறிப்பும் அவரினுடைய சொல்வணக்கத்தின் மேல



தாயிற்று. இதுவுந் தீங்கு குறித்த வணக்கமென்றே கொண்டு அஞ்சிக்காக்க வேண்பதாம். இவைமூன்றுபாட்டானும் அவரைச்சொல்லாற் றெளியற்க வென்பது கூறப்பட்டது. (எ)

விளக்கம் :—போர்க்களத்தில் பகைவன் மீது எறியும்படி எண்ணிய போர்வீரன் ஒருவன் தன்னுடைய வில்லை எவ்வளவு

வளைத்து எய்கின்றனரோ அவ்வளவு நிலையை அப்பாணத்தை ஏற்றுக் கொண்டவனுக்கு அவ்வில்லின் மிகுந்த வளைவு செய்வது போல், பகைவரிடத்து உண்டாகின்ற சொற்களால் ஆகிய வணக்கத்தையும் நமக்கு நன்மை செய்யும் சொற்களென்று எண்ணுதல் கூடாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால் பகைவர் வணங்கிச் சொல்லுகின்ற பணிவாகிய சொற்கள் ஒருவனுக்கு மிகுந்த அழிவைத் தருவதற்குக் காரணமாகு மென்றும், பகைவன் எவ்வளவு வில்லை வளைத்துப் பாணத்தை எய்கின்றனரோ அவ்வளவு அதிகமாக அப்பாணத்தைத் தம் மீது தாங்கிக் கொள்ளுகின்றோர் அழிந்து போவது போல், சொல்லின் வணக்கத்தைக் கொண்டு 'இவர் மிகுதியும் இப்போது வணக்கமாகப் பேசுகின்றார்; ஆதலால் நமக்கு மிகுதியும் அடங்கியவர்' என்று மகிழ்தல் கூடாதென்றும், மகிழ்வதோடு அவ்வித நம்பிக்கையால் மிகவிரைவில் அழிந்து போதற்குக் காரணமாகு மென்றும், ஆதலால் அவ்வித வஞ்சகரைக் கண்டகாலத்திலேயே பயந்து தமக்குத் தீங்கு வாராத விதமாகக் காத்துக் கொள்ளுதல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மேற்கூறிய மூன்று திருக்குறள்களாலும் கூடா நட்பினரது சொற்களால் அவரை மதித்தல் கூடாது என்று அறிந்தோம். இனி, பகைமை கொண்ட சிலர் நம்மைக் கண்டகாலத்து அழுத கண் உடையவராய்ப் பேசி நடிக்கின்றனரே, அவரைப்பற்றி நம்மாசிரியர் யாது கூறுகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

828. தொழுதகை யுள்ளும் படையொடுங்கு மொன்னா
ரழுதகண் ணீரு மனைத்து.

(பரி.) இ-ள். ஒன்னார் தொழுத கையுள்ளும் படை ஒடுங்கும் = ஒன்னார் குறிப்பை யுணரவல்லார்க்கு அவர் தொழுத கையகத்தும் படைக்கலம் மறைந்



திருக்கும்;—அழுதகண்ணீரும் அனைத்து = அவர் அழுத கண்ணீரும் அவ்

வாறே அதுமறைந்திருத்தற் கிடனும். எ-று.

நாம் நட்பென்பதனைத் தங்கையாலுங் கண்ணாலுந் தேற்றிப் பின் கோறற்கு வாய்க்கவிருக்கின்ற படைக்கலம் உய்த்தனர்வழித் தேற்றுகின்ற பொழுதே அவற்றுள்ளே தோன்றுமென்பார், 'ஒடுங்கும்' என்றார். பகைவர் தம் மென்மைகாட்டித் தொழினு மழினும், அவர் குறிப்பையே நோக்கிக் காக்கவென்பதாம். இதனால் அவரைச் செயலாற் றெரியற்க வென்பது கூறப் பட்டது. (அ)

விளக்கம்:—பகைவருடைய செயல் இது வென்று குறிப்பால் உணரக்கூடிய அநுபவ ஞானமுடையவர் தம்பகைவர் தம்மை வணங்கிய விடத்து அவ்வணங்கிய கையினுள் தம்மைக் கொல்ல ஓர் ஆயுதமிருக்கும் என்று கண்டு அறிந்து அவர் வணக்கத்தைக் கொண்டு எவ்வித நம்பிக்கையும் கொள்ளாமல் அவரைத் தம் பகைவராகவே எண்ணித் தம்மைக் காத்துக் கொள்ளுகின்றனரோ அது போல், அப்பகைவர் அழுகின்ற கண்ணீரும் தம்மை அழிப்பதற்கு உரியதோர் குறிப்பென்று கண்டு தம்மைக் காத்துக் கொள்ளுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பகைவரானவர் நாம் பகைவரன்று நட்பினரானோம் என்று தம் கையினாலும், கண்ணினாலும் நடித்துக் காட்டி நம்பும்படிச் செய்தாலும், அவர் குறிப்பு நட்பன்று பகைமையே ஆகும் என்று உணர்ந்து நிற்பதோடு அவர் கையினுள்ளே தம்மைக் கொல்லுதற்கு மறைத்துவைத்திருக்கும் ஆயுதத்தினையும் கண்டு பிடித்து அவர் தம்மைக் கொல்லாதவண்ணம் எவ்விதம் தம்மைக் காத்துக் கொள்ளுகின்றனரோ அதுபோல் அழுத கண்ணும், சிந்திய மூக்கும், தொழுதகையும், துவண்ட நடையும் ஆக இருந்து தம்மிடத்தே வந்து தம்பகைவர் தம்முடைய பலமின்மையைக் காட்டி வணங்கினாலும், அழுதாலும் அவருடைய குறிப்புத் தம்மைக் கெடுப்பதற்கே அல்லாமல் உண்மையாக மெலிவுடைமை அல்ல என்று அறிந்து அவர் தம்மிடத்தே அணுகாவண்ணம் தம்மைக் காத்துக் கொள்ளுதல் வேண்டும். அன்றியும் இதனை மெய்ப்பொருள் நாயனாரைக் கொல்ல வந்த பகை அரசனிடத்தும், ஔரங்கசீப்பின் சேவுத்தலைவனைக் கொன்ற சிவாஜியினிடத்தும் சேர்த்துரைதலே

முறையே பெரிய புராணத்துள்ளும், இந்த தேச சரித்திரத்திலும் அறிதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் கூடா நட்பினரது செயலால் அவரை நம்புதல் கூடாது என்று அறிந்தோம். ஆயின், சிலர் தம்மனத்துள்ள பகைமை தோன்றாத வழி மிகுதியும் நட்பினைச் செய்து பின்னர் மனத்தின்கண் இகழ்ச்சி செய்கின்றனர். அவ்வித தகுதியுடையாரை உலகத்தைக் காக்கும் அரசன் யாது செய்தல்வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

829. மிகச்செய்து தம்மெள்ளு வாரை நகச்செய்து
நட்பினுட் சாப்புல்லற் பாற்று.

(பரி.) இ-ள். மிகச் செய்து தம் எள்ளுவாரை = பகைமை தோன்றாமற் புறத்தின்கண் நட்பினை மிகச்செய்து அகத்தின்கட் டம்மையிகழும் பகைவரை— நட்பினுள் நகச்செய்து சாப் புல்லற்பாற்று = தாமும் அந்நட்பின் கண்ணே நின்று புறத்தின்கண் அவர் மகிழும்வண்ணஞ் செய்து அகத்தின் கண் அதுசாம்வண்ணம் பொருந்தற்பாலது அரசநீதி. எ-று.

நின்றென்பதூஉம் அரசநீதியென்பதூஉம் அவாய்நிலையான் வந்தன. அகனொன்று புறனொன்றுதல் ஒருவற்குத் தகாதெனினும் பகைவர்மாட்டாயிற்றாகுமென்பது நீதிநூற்றுணிபென்பார், அதன்மேல் வைத்துக் கூறினார். சாவவென்பதனிறுதிநிலை விகாரத்தாற்றொக்கது, "கோட்டின்வாய்ச்சாக் குத்தி"* என்புழிப்போல. எள்ளுவாரைப் புல்லலெனக் கூட்டுக. (௯)

விளக்கம் :—அரச நீதியாவது மனத்துக்குள்ளிருக்கும் பகை தோன்றாவிதம் செய்து புறத்தே மிகுதியும் நட்பினை உடையவர் போல் நடித்து உள்ளுக்குள் தம்மை இகழ்ந்து பேசுகின்ற பகைவரைத் தாமும் அவ்விதமே இருந்து புறத்தே அப்பகைவர் மகிழும் வண்ணமாகச் செய்து மனத்திற்குள்ளே அப்பகைவர் சாதற்குத் தக்கவிதமாகக் கூடியிருப்பது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உள்ளே ஒன்றும், புறத்தே ஒன்றும் வைத்து நடிப்பது நீதியல்லாயினும் உலகத்தைக்காக்கும் அரசன் ஒருவன் வஞ்

சகனைக் கண்ட காலத்துத் தாமும் வஞ்சகனாக இருந்து அவர்களை வெல்லாவிடில் உலகத்தைக் காத்தல் கூடாது ஆதலால், இவ்வித

* கலி, முல்லை 5.



வஞ்சகர்க்கு வஞ்சகராக நடப்பது அரசனுக்குப் பொருந்துமென்றும், அது அரச நீதியென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், “பகைவர் ஏதோ ஒரு காரணத்தால் தம்மிடத்து நட்புச்செய்யவேண்டி வருமாயின், அப்பகைவரை எவ்விதம் கொள்ளல்வேண்டும்?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

880. பகைநட்பாங் காலம் வருங்கால் முகநட்
டகநட் பொரீஇ விடல்.

(பரி.) இ-ள். பகை நட்பாம காலம் வருங்கால்= தம்பகைவர் தமக்கு நட்டாராயொழுகுங்காலம் வந்தால்,—முகம் நட்டு அகம் நட்பு ஒரீஇ விடல்= தாமும் அவரோடு முகத்தால் நட்புச்செய்து அகத்தால் அதனைவிட்டுப் பின்னதுவுந் தவிர்க. எ-று.

அக்காலமாவது :—தம்மானும் பகையென்று வெளிப்பட நீக்கலாகாத வளவு. இதனானே ஆமளவெல்லாம் நீக்குகவென்பது பெற்றாம். இவையிரண்டுபாட்டானும் அந்நட்பிடை யொழுகுமாறு கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—தமக்குப் பகைவராக இருந்தவர் ஏதோ ஒரு காரணத்தால் தமக்கு நட்பினராக இருக்கக்கூடிய காலம் வருமாயின், அப்பகைவரோடு தாமும் முகத்தால் நட்பினர்போல் காட்டி, மனத்தால் நட்புக்கொள்ளாதிருந்து பிறகு அம்முக நட்பினையும் ஒழித்து விடுதல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பகைவரானவர் தம்மிடத்து நட்பினர்போல் நடித்து இருக்கவேண்டிய கால அளவு வருமாயின், அறிவுடையோர் அக்காலத்துத் தாமும் பகைவரென்று காட்டாதிருப்பதற்கு முகத்தால் நட்புக்காட்டியும், பின்னர் தம் பகைமையை வெளிப்படுத்தக்கூடிய காலத்து அம்முகத்தானும் நட்புக்கொள்வதைவிட்டு அவர்களோடு

நீங்கி இருத்தலே வேண்டும் என்றும் அறிகின்றோ மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கூடா நட்பினரோடு எவ்விதம் கூடி இருத்தல் வேண்டும் என்பதை மேற்கூறிய இரண்டு திருக்குறள்களாலும் அறிந்தோம். அன்றியும், நட்புக்கு நேரக விதிமுகமாகக் கூறிய ஐந்து அதிகாரங்களையும் கேட்டு உணர்ந்தோம். இனி, எதிர் மறை முகத்தால் கூறியுள்ள நட்புக்கு உரிய பன்னிரண்டு அதிகாரங்களையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்,

---



## 84. அதிகாரம்.

---

## பேதைமை.

(பரி.) இனி அந்நட்பினை யெதிர்மறுத்துப் பகைமுகத்தாற் கூறிய தொடங்கினார். அப்பகைதான் முற்றக்கடியுங் குற்றமன்மையி னுளவாய வெகுளியானும் காமத்தானும் வருவதாம். அவற்றுள் வெகுளியான் வருவன ஐந்ததிகாரத்தானும் காமத்தான் வருவன ஐந்ததிகாரத்தானும் கூறுவார், அவ்விரண்டற்கும் அடியாய மயக்கத்தை இருவகைப் படுத்து, இரண்டதிகாரத்தாற் கூறுவான் றொடங்கி, முதற்கட் பேதைமை கூறுகின்றார். அஃதாவது யாது மறியாமை.

விளக்கம்:—அதாவது, நீங்கள் வினவிய வண்ணம் நட்பு என்பதை எதிர் மறுத்துப் பகை முகத்தால் சொல்லிய அதிகாரங்களைச் சொல்ல ஆசிரியர் ஆரம்பித்தனர். அதாவது, பகைநட்பென்பது கோபத்தாலும், காமத்தாலும் வருவது ஆம். அவ்விரண்டும் முழுவதும் நீக்கும் குற்றமல்லவாதலால், அக்கோபம், காமம் என்னு மிரண்டினுள் கோபத்தால் வருகின்ற பகையினை ஐந்து அதிகாரங்களாலும், காமத்தால் வரும் பகையினை ஐந்து அதிகாரங்களாலும் கூறத் தொடங்கியவர் அக்கோபத்திற்கும், காமத்திற்கும் அடிப்பீடமாயுள்ள மயக்க அறிவினை இரண்டுவிதமாக்கி ஒன்றைப் பேதைமை யென்றும் மற்றொன்றைப் புல்லறிவாண்மை யென்றும் பெயரிட்டு, முதலில் பேதைமை யென்னு மதிகாரத்தைக் கூறத்தொடங்

னர். அப்பேதைமையாவது:—அறியவேண்டுவது ஒன்றனையும் அறியாதிருத்தலே ஆகும் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "அறிய வேண்டுவது ஆகிய ஒன்றனை அறியாமை பேதைமை என்று கூறுவதால், உலகத்து மக்கள் ஒன்றையுமறியாது இருத்தல் முடியாது. ஏதோ ஒன்றில் ஒருவர் அறிவு செல்லுவதாகவே இருக்கும். ஆனால், இப்பேதைமை கொண்டவர் அறிவின் செயல் எதுவாக இருக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

881. பேதைமை யென்பதொன் றியாதெனி னேதங்
டூதியம் போக விடல். [கொண்

(பரி.) இ-ள். பேதைமை என்பது ஒன்று=பேதைமையென்று சொல்லப்படுவது ஒருவனுக்கு விளைக்குற்றங்களெல்லாவற்றினும் மிக்கதொன்று;—



யாது எனின் ஏதம் கொண்டு ஊதியம் போகவிடல்=அதுதான் யாதென்று வினவின், தனக்குக் கேடுபயப்பனவற்றைக் கைக்கொண்டு ஆக்கம் பயப்பன வற்றைக் கைவிடுதல், எ-று.

கேடு=வறுமை, பழி, பாவங்கள். ஆக்கம்=செல்வம், புகழ், அறங்கள். தானே தன்னிருமையும் கெடுத்துக் கோடலென்பதாம். (க)

விளக்கம்:—பேதைமை என்று சொல்லப் படுவது ஒரு வனுக்கு உள்ள குற்றங்கள் எல்லாவற்றிலும் பெரியது ஒன்றாகும் என்றும், அப்பெரியது ஆகிய குற்றம் எது என்று அறிய வேண்டு மாயின் தனக்குக் கேட்டினை உண்டுபண்ணும் செயல்களைக் கைக் கொண்டு தனக்கு நன்மை பயக்கும் செயல்களை விட்டு விடுதல் என்பதே ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நீங்கள் வினவியபடி பேதைமை உடைய ஒருவனது அறிவானது தனக்குக் கேடு செய்கின்ற தரித்திரம், பழி, பாவங்கள் ஆகிய இவைகளில் சென்று, தனக்கு உயர்வினை உண்டு பண்ணும் செல்வம், புகழ், தருமங்கள் ஆகிய இவைகளை யெல்லாம் ஒழித்து, இம்மை

மறுமையாகிய இரண்டினையும் வரவொட்டாமல் செய்து விடும் என்று அறிந்தோ மென்றனர். அது என்னையோவெனின்? உலகத்து மக்கள் இருமையை அடைவதற்குரிய முயற்சிகளை யெல்லாம் கைவிட்டு இருமையையும் கெடுக்கும் முயற்சிகளுள் சென்று தாமே தம்மைக் கெடுத்துக் கொள்ளும் தகுதியுடையோரைப் பேதைமையுடையரென்றும், ஒருவனுக்கு இருக்கவேண்டிய குற்றங்களுள் இதனினும் மேற்பட்ட குற்றம் ஒன்று இல்லையென்றும் கூறிய தாயிற்று என்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஏன் பேதைமையுடையார் கேட்டினைத் தேடிக்கொள்ளுகின்றனர்? அவ்விதம் செய்து கொள்வதற்கு எவ்விதச் செயலை செய்பவராயிருப்பர்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

832. பேதைமையு ளெல்லாம் பேதைமை காதன்மை
கையல்ல தன்கட் செயல்.

(பரி.) இ-ள். பேதைமையுள் எல்லாம் பேதைமை=ஒருவனுக்குப் பேதைமையெல்லாவற்றுள்ளும் மிக்க பேதைமையாவது—கையல்ல தன்கண்



காதன்மைசெயல்=தனக்காகாத ஒழுக்கத்தின்கட் காதன்மை செய்தல். எ-று.

இருமைக்கும் ஆகாவென்று நூலோர் கடிந்த செயல்களை விரும்பிச் செய்தலென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் பேதைமையதிலக்கணங் கூறப்பட்டது.

விளக்கம் :—ஒருவனுக்கு உள்ள அறியாமை எல்லாவற்றுள்ளும் மிகுந்த அறியாமையாவது தனக்கு ஆகாத ஒழுக்கத்தில் ஆசைகொண்டு ஒழுகுதல் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நூல்வல்லவர் விதியிது, விலக்கு இது என்று கூறியபடி விதியினைச் செய்தல் வேண்டுமென்றும், விலக்கினை ஒழிதல் வேண்டுமென்றும் கூறியிருக்கப் பேதைமை யுடை

யார் தம், பேதைமை மிகுதியால் நீதியையும், அறத்தையும் கைவிட்டு அநீதியையும், பாவத்தையும் செய்யப் புகுவாராதலால், அவ்வித ஒழுக்கம் அவர்களுக்குப் புகழிற்கும் புண்ணியத்திற்கும் மாறாகிய பழியையும் பாவத்தையும் விளைத்து இம்மைக்கு உரிய பயனையும், மறுமைக்கு உரிய பயனையும் போக்கிவிடும் என்று அறிந்தோம். ஆதலால், பேதைமையுடையார் செயல் ஒழுக்கத்துக்கு மாறாகிய விஷயங்களில் ஆசைகொண்டு நிற்பரென்று அறிந்தோமென்றனர். அது கேட்டமாணாக்கர், "பேதைமையென்பதின் தன்மையை அறிந்தோம். இனிப் பேதைமை என்பதற்கு இயற்கையான தொழில் ஏதுவென்று விளக்கல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

833. நாணாமை நாடாமை நாரின்மை யாதொன்றும்
பேணாமை பேதை தொழில்.

(பரி.) இ-ள். நாணாமை=நாண வேண்டுமவற்றுக்கு நாணாமையும்—நாடாமை=நாடவேண்டுமவற்றை நாடாமையும்—நார் இன்மை=யாவர் மாட்டும் முறிந்தசொற்செயலுடைமையும்—யாதொன்றும் பேணாமை=பேணவேண்டுமவற்றுள் யாதொன்றினையும் பேணாமையும்—பேதை தொழில்=பேதையது தொழில். எ-று.

நாணவேண்டுமவை=பழி பாவங்கள். நாடவேண்டுமவை=கருமங்களிற் செய்வன தவிர்வன. முறிதல்=கன்னறுதல். பேணவேண்டுமவை



=குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்க முதலாயின. இவை பேதைக்கு ஒன்றொன்று மியல்பாய் வருதலின், 'தொழில்' என்றார். (௩)

விளக்கம்:—பேதைமை உடையார் தொழில் நாணவேண்டுவதற்கு நாணாமையும், நாடவேண்டுவனவற்றை நாடாமையும், யாரிடத்தும் தாக்ஷிண்யமில்லாது பேசுதலும், விரும்ப வேண்டுவனவற்றை விரும்பாமையும் ஆகுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உலகத்து மக்கள் தம்மைப் பிறர் பழிக்கும் பழியை அடையாமலும், நரகத் துன்பத்திற்குச் செலுத்தும் பாவங்களைச்

செய்யாமலும் ஆகிய நற்செயல்களைச் செய்ய வேண்டி இருக்க அவ்விதம் அச் செயல்களைச் செய்யாததோடு அவற்றிற்குச் சிறிதும் வெட்கப்படாத தன்மையும், செய்ய வேண்டிய கருமங்களைச் செய்ய வும், செய்யக் கூடாத கருமங்களை விடவும் வேண்டிய ஆராய்ச்சி களைச் செய்யாதிருத்தலும், நட்பினர், பகைவர், நொதுமலர் என் னும் யாவரிடத்தும் தாக்ஷிண்யமில்லாது பேசுதலும் குடிப் பிறப்பு, கல்வி, ஒழுக்கம் ஆகிய மூன்றனையும் உயிர்போல் எண்ணி ஒழுக வேண்டி இருக்க அவற்றைக் கொண்டு ஒழுகாமலும் இருப்பது அறிவிலாதார் செயல் ஆகலால், அவ்வித செயலைப் பேதைமை உடையார் செயல் என்று பிரித்துக்காட்டினர். அன்றியும், மேல் திருக்குறளில் தனக்கு ஆகாத ஒழுக்கத்தில் நில்லிடுவது ஒருவ னுக்கு 'அறிவில்லாமை எல்லாவற்றுள்ளும் அறிவில்லாமை' என்று கூறியதை இத்திருக்குறளில் அவ்வொழுக்கமுடைமை இது வென் றும், அவ்வொழுக்கமுடைமையால் அப்பேதையர்க்கு இயற்கையாக வரும் குற்றங்கள் இவை என்றும் வகுத்துக் காட்டியதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சிலர் எல்லா நூல்களையும் கற்று உணர்ந்தும் மேற் கூறிய ஒழுக்க மின்மையைச் செய்கின் றனர். அவரையும் பேதையரென்று அழைத்தல் கூடுமோ?" என் னலும், ஆசிரியர் கூறலுறாயினர்.

834. ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப்
பேதையிற் பேதையா ரில்.

(பரி.) இ-ள். ஓதி=மனமொழி மெய்களடங்குதற் கேதுவாய நூல் களை யோதியும்,—உணர்ந்தும்=அவ்வடக்கத்தான் வரும் பயனை யுணர்ந்



தும்,—பிறர்க்கு உரைத்தும்=அதனை ஐயமறப் பிறர்க்குரைத்தும்,— தான் அடங்காப் பேதையின்=தான் அவை யடங்கி யொழுகாத பேதை போல—பேதையார் இல்=பேதையார் உலகத்தில்லை. எ-று.

உம்மை மூன்றுங் கூட்டப்பட்டது. இப்பேதைமை தனக்கு மருந்தாய இவற்றுத் தீராமையானும், வேற்றுமருந்தின்மையானும், 'பேதையிற்பேதை

லாம் தான் கிரயத்தன்ப முழுத்தற் கேறுவால் கொடுவினைகளையே பதித்து சில காலத்தன்னே செய்துகொடல் பிறக் கரிதாகலின், 'ஆற்றும்' என்றார். இதனன் அவன் மறுமைச்செயல் கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—பேதைமை உடைய ஒருவன் வருகின்ற பிறவிகள்-தோறும் தான் சென்று அழுந்துகின்ற நரகத்தினை இப்போது அடைக்குள்ள இவ்வொரு பிறப்பிலேயே செய்து கொள்ள வல்லவனாகின்றான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உயிரானது எவ்வித பிறப்பினை எடுக்கினும் அப்பிறப்பினுள் எழு முறை எடுத்தல் வேண்டுமென்றும், அவ்விதம் எடுத்த பிறவிகளுள் மக்கட் பிறப்பினை எடுத்த இப்பேதையாயினன் தன் பேதைமையால் இப்பிறப்பில் செய்து கொள்ளுகின்ற அதிகரித்த தீமையால் இனிவரும் பிறவிகளிலெல்லாம் இப்பிறப்பில் செய்த தீமையின் முயற்சியே அதிகரித்தும் பலவித நரகங்களில் சென்று அடைவதற்குக் காரணமாகிய தீவினைகளை எல்லாம் செய்தும் நிற்பான் என்று அறிக்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "இதனுல் பேதைக்கு உண்டாகும் மறுமைப் பயன் இதுவென்றறிக்தோம். இவ்வித பேதையாயினன் உலகத்து இம்மைப்பயனை அடையக்கூடிய செல்வத்தை எவ்விதம் தேடும் வல்லமை உடையவனாயிருப்பான் என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

836. பொய்படு மொன்றோ புனைபூணுங் கையறியாப்
பேதை வினைமேற் கொளின்.

(பரி.) இ-ள். கை அறியாப் பேதை வினைமேற்கொளின்—செய்யு முறைமை யறியாத பேதை ஒருகருமத்தை மேற்கொள்வனயின்,—பொய்படும் ஒன்றோ புனைபூணும்=அதுவும் புரைபடும், தானும் தளைபூணும். எ-று.

புரைபடுதல்=பின் ஆகாவகை உள்ளழிதல். ஒன்றோவென்பது எண்ணிடைச்சொல். அதனையுங் கெடுத்துத் தானும் கெடுமென்பதாம். இதனுல் அவன் செல்வம் படைக்குமாறு கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—தொழிலைச் செய்யும் முறைமை இதுவென்று தெரிந்து கொள்ளுதலாகாத பேதையாயினன் ஒருவன் ஒரு தொழி

61

லைச் செய்ய உடன்பட்டுச் செய்வானாயின் அவன் செய்த தொழிலும் முடியாத விதமாகக் குற்றமடைவதுடன் அதனோடு கை, கால்களில் விலங்கென்னும் தளையைத் தனக்கு இடும்படியும் செய்து கொள்ளுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், அறிவிலாத ஒருவன் தான் அடையவேண்டிய இம்மைப் பயனுக்குக் காரணமாயே செல்வத்தை உண்டு பண்ணுவதற்கு ஓர் தொழிலைச் செய்ய எடுத்துக் கொள்ளுவானாயின், அத்தொழிலைச் செய்யவகை அறியாது எடுத்த தொழில் முடிவு அடையாதவிதமும், அத்தொழில் கெட்டுப்போம்படியும் செய்வதுடன் தனது அறியாமையால் பலதவறுகளைச் செய்து அரசன் ஆணையால் இவன் செய்த தீங்குகளுக்காகத் தண்டனையும் அடைதல் கூடும் என்று அறிகின்றோம். இதனால் நீங்கள் மேல் வினவிய வண்ணம் பேதையாயினான் இம்மைப் பயனைத்தரும் செல்வத்தை உண்டுபண்ணும் யோக்கியனாக இரான். ஆதலால் பேதைக்கு இம்மைப்பயன் கிடைப்பதும் அரிதாகும் என்று கூறினர். அதுகேட்ட மாணாக்கர், "செல்வமில்லாத ஒருவன் தன் பேதைமையால் செல்வத்தைத் தேடுதல் முடியாது என்று அறிந்தோம். ஆயின், பெரும் செல்வமுடைய ஒருவன் பேதைமை உடையவனாயின் அவன் அடைந்த செல்வம் எவ்விதப் பயனை உண்டாக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

837. ஏதிலா ராரத் தமர்பசிப்பர் பேதை
பெருஞ்செல்வ முற்றக் கடை.

(பரி.) இ-ள். பேதை பெருஞ் செல்வம் உற்றக்கடை=பேதையாயினான் பெரிய செல்வத்தைத் தெய்வத்தானெய்தியவழி,—ஏதிலார் ஆரத் தமர் பசிப்பர்=தன்னோடோரியைபு மில்லாதார் நிறைய, எல்லாவியைபுமுடைய தமராயினார் பசியாநிற்பர். எ-று.

எல்லா நன்மையுஞ்செய்து கோடற்கருவியென்பது தோன்றப் 'பெருஞ் செல்வம்' என்றும், அதனைப் படைக்குமாற்றலில்லாமை தோன்ற 'உற்றக் கடை' என்றும், எல்லாம் பெறுதறோன்ற 'ஆர' என்றும், உணவும் பெறுமை தோன்றப் 'பசிப்பர்' என்றுங் கூறினார். (எ)

விளக்கம்:—பேதையாயினான் ஒருவன் தான்முன் செய்த நல்வினைக்குத்தக்க அளவாகப் பெரியதோர் செல்வத்தை அடைவானா

பின் அச்செல்வத்தால் யாதொரு சம்பந்தமும் இல்லாத அயலார் வயிறு நிறைய உண்டு சுகித்திருக்கவும், தன்னோடு பெரிதும் சம்பந்தம் உடைய சுற்றத்தவர் உணவின்மையால் மிகுதியும் பசித்திருக்கவும் ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தான் அடைந்த பெரியதோர் செல்வத்தால் தனக்கும் தன் சுற்றத்தவர்க்கும் எல்லாவித நன்மையும் செய்துகொள்வதற்கு ஏதுக்களைப் பெற்றிருந்தும் அச்செல்வத்தை உண்டாக்கவும், காக்கவும் வல்லமை இல்லாமையால் தன்னோடு யாதொரு சம்பந்தமுமில்லாத அயலவர் உண்ணுதல் முதலாகிய எல்லாவிதப் பயன்களையும், அடைந்திருக்கவும் தன் நெருங்கிய சுற்றத்தவர் இவனது செல்வத்தால் உண்ண உணவும் பெறாது பசி நோயால் வருந்தவும் ஆவதொன்றும் அறிந்தோம். ஆதலால் பேதையாயினோர் செல்வம் உதவவேண்டியவர்க்கு உதவாது அயலவர் அனுபவிப்பதற்கு உரியதாகும் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் பேதையாயினன் பெரும் செல்வம் சுற்றத்துக்கு உதவாதென்று அறிந்தோம். ஆயின், அச்செல்வத்தைத் தான் அனுபவிக்குங் காலத்து அவன் செயல் எதுவாக இருக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

838. மையலொருவன் களித்தற்றாற் பேதைதன்
கையொன் றுடைமை பெறின்.

(பரி.) இ-ள். பேதை தன்கை ஒன்று உடைமை பெறின்=பேதையாயினன் தன் கைக்கண்ணே ஒன்றனை யுடைமையாகப் பெற்றானாயின்,—மையல் ஒருவன் களித்தற்று=அவன் மயங்குதல், முன்னே பித்தினை யுடையானொருவன் அம்மயக்கத்தின்மேலே மதுவுண்டு மயங்கினாற்போலும், எ-று.

பெறினெனவே, தெய்வத்தானன்றித் தன்னாற் பெறாமை பெற்றாம். பேதைமையுஞ் செல்வக்களிப்பும் ஒருங்குடைமையால் அவன் செய்வன மையலும் மதுக்களிப்பும் ஒருங்குடையான் செய்வனபோற் றிலதமோது மென்பதாம். இவை யிரண்டுபட்டாலும் அவன் செல்வமெய்தியவழிப்

பயன் கொள்ளுமாறு கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—பேதைமையுடைய ஒருவன் தனக்கென்று ஒரு பொருளைத் தெய்வத்தால் பெறுவானாயின், அச்செல்வத்தைக்



கொண்டு அவன் மயங்குகின்ற தன்மையானது முன்னமே பயித்தியம் கொண்ட ஒருவன் அப்பயித்தியத்தால் உண்டாகும் மயக்கத்தோடு அறிவினை மயக்கும் கள்ளையும் உண்டு மயங்குவானாயின் எவ்வித மிருக்குமோ அவ்வித தன்மையாக இருக்குமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பேதைமை யுடையான் ஒருவன் தானாகவே செல்வத்தைப்படைக்கும் வல்லமை இல்லாதவன் என்று அறிந்தோமாதலால் அவ்வித வல்லமை இல்லாத அப்பேதைமையுடையானுக்குத் தெய்வத் திருவருளால் ஏதேனும் செல்வம் கிடைக்குமாயின் அச்செல்வத்தின் மகிழ்ச்சியால் மயங்குவானாகையாலும், முன்னமே இருந்த அறிவில்லாமையாகிய மயக்கமும் செல்வத்தின் மகிழ்ச்சியால் வரும் மயக்கமும் இரண்டும் ஒன்று சேர்ந்து பித்தமுதிர்ச்சியால் அறிவு மயங்கி பயித்தியம் கொண்ட ஒருவன் இயல்பாகவே உண்டவருடைய அறிவை மயக்கும் கள்ளையும் குடித்து விடுவானாயின் எவ்விதம் இவ்விரண்டு மயக்கமும் ஒன்றுசேர்ந்து அவனை அழித்துவிடுமோ அதுபோல் இருக்குமென்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "பேதைமையுடையான் தான் அடைந்த செல்வத்தால் பயன் அனுபவியாது அழிந்துபோவானென்று அறிந்தோம் ஆயின், அப்பேதைமை யுடையானது நட்பினைக் கொண்டால் எதுவாகும் என்பதையும் விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

839. பெரிதினிது பேதையார் கேண்மை பிரிவின்கட்
பீழை தருவதொன் றில்.

(பரி.) இ-ள். பிரிவின்கண் தருவது பீழை ஒன்று இல் = பின் பிரிவு வந்துழி அஃதிருவர்க்குந் தருவதொரு துன்பமில்லை;—பேதையார் கேண்மை பெரிது இனிது = ஆகலாற் பேதையாரினுள் தம்முட்கொண்ட நட்பு மிகவினிது.

காடோறுந் தேய்ந்து வருதலின், அன்பற்றாராதலின்று. புகழ்வார் போன்று பழித்தவாறு. இதனால் அவரது நட்பின் குற்றங் கூறப்பட்டது. (கூ)

விளக்கம் :—பேதைமை கொண்ட இருவர் நட்புக்கொள்வா ராயின் பின்னர் அவ்விருவர்க்கும் பிரிவு நேருமாயின் நட்புக்



கொண்ட அவ்விருவர்க்கும் அப்பிரிவால் யாதொரு துன்பமும் உண் டாகாது; ஆதலால் பேதைமையுடையார் ஒருவருக்கொருவர் கொள் ளுகின்ற நட்பானது மிக இனிமையை உடையது என்று இத்திருக் குறள் கூறுகின்றது. இதனால், பேதைமையுடையவர்கள் கொண்ட சிநேகமானது தேய்பிறைபோல் முன்னர் முதிர்தலும், பின்னர் தேய்தலும் போவதுமாதலால் அவ்விதம் தேய்ந்து போகின்ற காலத்து இருவர்க்கும் துன்பமில்லாமல் போம் என்று அப் பேதைமையுடையார் நட்பைப் புகழ்கின்றவர்போல் பழித்துக் கூறியபடியால் பேதைமையுடையவர் இவ்வுலகத்துப் பெறுதற் கரிய நட்பினையும் பெறுவதற்கு யோக்கியமில்லாதவர் என்று அறிந் தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பேதைமையுடையா ரது நட்புக்குரிய குற்றத்தையும் அறிந்தோம். ஆயின் பேதைமை யுடையான் ஒருவன் அறிவுடைய ஆன்றோர் சபையில் புகுவானா யின் அச்சபை எதுபோல் இருக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறு வாராயினர்.

840. கழாஅக்கால் பள்ளியுள் வைத்தற்றாற் சான்றோர்
குழாஅத்துப் பேதை புகல்.

(பரி.) இ-ள். சான்றோர் குழாத்துப் பேதை புகல் = சான்றோரவை யின்கட் பேதையாயினான் புகுதல்—கழாக்கால் பள்ளியுள் வைத்தற்று = தூயவல்ல மிதித்தகாலை இன்பந்தரும் அமளிக்கண்ணே வைத்தாற் போலும். எ-று.

கழுவாக்காலென்பது இடக்கரடக்கு. அதனால் அவ்வமளியும் இழிக்கப் படுமாறுபோல இவனால் அவ்வவையும் இழிக்கப்படு மென்பதாம். இதனால் அவன் அவையிடை யிருக்குமாறு கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—ஆன்றோர் சபையினிடத்தே பேதைமை யுடையான் ஒருவன் செல்லுவானாயின் பரிசுத்தமல்லாத ஒன்றை மிதித்த காலினை இன்பத்தைக் கொடுக்கின்ற படுக்கையினிடத்தே வைத்தால் எவ்வித மிருக்குமோ அவ்விதம் காணப்படும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நாயனார் 'இடக்கரடக்கல்' என்னும் இலக்கண வழக்கப்படி தூய அல்ல என்றுகூறிய மலத்தை ஒருவன் காலில் மிதித்துக் கொண்டு அக்காலினைக் கழுவாமலே அம்



மலத்தோடு சென்று, இன்பமுடையார் இருவர் இன்பம் அனுபவிப்பதற்கு மலர் முதலியவைகளால் அலங்கரிக்கப்பட்டு உள்ள படுக்கையில் அம்மலம் நிறைந்த காலை வைத்து விடுவானாயின் அதை கண்ட இன்பத்திற்கு உரிய இருவரும் எவ்விதம் அப்படுக்கையை இகழ்ந்து அதில் நித்திரை செய்யாமல் அகலுவரோ, அதுபோல், பேதைமை யென்னும் அறிவில்லாத மலத்தை மேல் பூசிக்கொண்ட ஒருவன் அலங்கரித்த படுக்கைபோல் ஆன்றவர் கூடி இன்பமடைய இருந்த சபையிற் செல்வானாயின் அதைக்கண்ட ஆன்றவராகிய அறிஞர் 'இவன் வருகையால் இச்சபை தூய்மை குலைந்தது. ஆதலால் நாம் இனி இவ்விருத்தல் ஆகாது' என்று அவனை விட்டு நீங்கி விடுவர் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கழுவாக் காலைப் பள்ளியில் வைத்தால் எவ்வாறு அப்படுக்கையானது இழிவடைந்து போமோ அதுபோல் பேதைமையுடைய ஒருவன் அறிவுடைய சபையிற் சென்றாலும் இவன் சென்றமையால் அவ்வறிவுடைய சபையும் இழிவாக எண்ணப்படும் என்பதையும் இவ்வதிகாரத்தால் பேதைமையுடையவருக்கு வரும் குற்றங்களையும் முற்றும் உணர்ந்தோம். இனி மயக்கத்திற்குக் காரணமாகிய புல்லறிவாண்மை என்பதைக் கூறல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 85. அதிகாரம்.

---

## புல்லறிவாண்மை.

(பரி.) இனி யதனைப் புல்லறிவாண்மை கூறுகின்றார். அது புல்லிய வறிவினையாளுந் தன்மையென விரியும். அஃதாவது தான் சிற்றறிவினனா யிருந்தே தன்னைப் பேரறிவினனாக மதித்து உயர்ந்தோர் கூறும் உறுதிச்சொற் கொள்ளாமை.

விளக்கம் :—மேலே விளக்கிய வண்ணம் மயக்கத்தால் வரும் புல்லறிவாண்மை இது என்று கூறலாயினர். அதாவது, அற்ப அறிவினைத் தனக்குப் பெரியதோர் அறிவுடைமை யென்று எண்ணி அதன்வழி நடத்தல் என்பதேயாம். அது என்னையோ வெனின்? தான் சிற்றறிவினை யுடையவனாகவே இருந்தும் தன்னைப் பேரறி



வுடையவனாக எண்ணிக் கொள்வதுடன் அறிவால் உயர்ந்த பெரியோர் சொல்லுகின்ற உயிர்க்கு உறுதியைத் தரும் நீதி நற்சொற்களை மனத்துக் கொள்ளாது நடத்தல் என்பதேயாம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித அற்ப அறிவினை உடையார் உலகத்து எவ்விதம் மதிக்கப்படுவர்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

841. அறிவின்மை யின்மையு ளின்மை பிறிதின்மை
யின்மையா வையா துலகு.

(பரி.) இ-ள். இன்மையுள் இன்மை அறிவின்மை = ஒருவனுக்கு இல்லாமை பலவற்றுள்ளும் மிக்க இல்லாமையாவது அறிவில்லாமை ;—பிறிதின்மை இன்மையா வையாது உலகு = மற்றைப்பொருளில்லாமையோவெனின், அதனை அப்பெற்றித்தாய இல்லாமையாகக் கொள்ளார் உலகத்தார். எ-று.

அறிவென்பது ஈண்டுத் தலைமைபற்றி நல்லறிவின்மே னின்றது. புல்லறிவாளர் செல்வ மெய்தியவழியும் இம்மை மறுமைப்பய னெய்தாமையின் அதனை 'இன்மையுளின்மை' என்றும், நல்லறிவாளர் வறுமை யெய்திய வழியும் அஃதிழவாமையின் அதனை 'இன்மையா வையாது' என்றுங் கூறினார். இதனாற் புல்லறிவினது குற்றம் கூறப்பட்டது. (க)

விளக்கம் :—ஒருவனுக்கு இல்லாமை என்று கூறுகின்ற இல்லாமை பலவற்றுள்ளும் பெரிய இல்லாமையாவது நல்லறிவு இல்

லாமையே என்றும், ஆயின் உலகத்து இன்பம் அடையக் கூடிய பொருள் இல்லாமை ஒருவனுக்கு இருக்குமாயின் அப்பொருள் இல்லாமையை மேற்கூறிய அறிவில்லாமையாகிய இல்லாமையோடு ஒப்பாக உலகத்தவர் கொள்ளமாட்டார் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது அறிவுடைய பெரியோன் ஒருவன் தான் வறுமை அடைந்த காலத்து அவ்வறுமையால் தீயவழிச் செல்லாது இம்மைப் புகழையும், மறுமைப் போகத்தையும் அடைதல் கூடுமாத லால் அவன் தரித்திரத்தை இல்லாமையாக உலகோர் கொள்ளமாட் டாரென்றும், அற்ப அறிவினரென்னும் புல்லறிவாளர் செல்வத்தை அடைந்த காலத்துந் தம் அற்ப அறிவால் நல்ல நெறியில் ஒழுகாது தீயவழி ஒழுகி இம்மை, மறுமையாகிய இரண்டு பயன்களையும்



அடையாமற் போய்விடுவார்களாதலால் அவர் அடைந்த செல் வத்தால் பயனில்லை என்றும், ஆதலால் ஒருவனுக்கு நல்லறிவு இல் லாமையே இல்லாமையென்றும் தரித்திரமென்றும் நல்லறிவு உடை மையே எல்லாப் பொருளுமுடைய செல்வமுடைமை யென்றும் அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "புல்லறிவுடை மையே செல்வமிருந்தும் எல்லா வறுமைக்கும் காரணமாகுமென்று அறிந்தோம். இவ்வித புல்லறிவாளன் முன்வினைப் பயனால் தான் அடைந்த உள்ள செல்வத்தை யவர்க்கேனும் கொடுத்தல் கூடுமோ?" என்னவும், ஆசிரியர் கூறலாயினர்.

842. அறிவிலா னெஞ்சுவந் தீதல் பிறிதியாது
மில்லை பெறுவான் றவம்.

(பரி.) இ-ள். அறிவிலான் நெஞ்சு உவந்து ஈதல்=புல்லறிவுடையான் ஒருவனுக்கு மனமுவந்து ஒன்று கொடுத்தல் கூடிற்றாயின்,—பெறுவான் தவம் பிறிது யாதும் இல்லை=அதற்குக்காரணம் பெறுகின்றவனல்வினையே, வேறொன்று மில்லை. எ-று.

ஒரோவழி நெஞ்சுவந்தீதல் கூடலிற் புல்லறிவாளரும் நல்வினைசெய்ப என்பார்க்கும் பெறுவான் வீழ்பொருளெய்தியான்போல்வதல்லது இம்மை நோக்கியாக மறுமை நோக்கியாக ஈவின்றாரல்லரெனக் கூறியவாறு. கூடித்

ருமின், அதற்குக்காரண மென்னுஞ் சொற்கள் அவாய்நிலையான் வந்தன. இத னால் அஃதுடையார் தம்மாட்டு நல்லன செய்தலறியாமை கூறப்பட்டது. (உ)

விளக்கம்.—அற்ப அறிவினை உடைய ஒருவன் தன்னிடத்து உள்ள செல்வத்தைப் பிறர்க்குக் கொடுக்கும் காலத்து மனத்தில் அன்போடு கொடுக்க நேருமாயின் அவ்விதம் கொடுக்க நேர்ந்த தைப்பெற்றுக் கொண்டவனது பூர்வ நல்வினையென்று எண்ணுதல் அல்லாது வேறு ஒன்றாகவும் எண்ணுதற்கு இராது என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அற்ப அறிவினையுடையார் அறம் ஒன்றைக்கருதித் தாம் அடைந்த பொருளைச் செலவழித்தல் இல்லையென்றும், அவ்வாறு செலவழித்தல் இல்லாத அவ்வற்ப அறி வினை உடையோர் மனமகிழ்ச்சியுடன் ஒருவருக்கு ஒருபொருளைக் கொடுப்பதாயின் அப்பொருளை அடைந்தவர் பிறர் மறதியால் போக் கடித்து விட்டபொருளை நடக்கும் வழியில் கண்டு எடுத்தது



போல் ஆகுமே அன்றி வேறு ஆகாதென்றும், அவ்விதமல்லாது அவ்வற்ப அறிவினர் மனமகிழ்ச்சியுடன் கொடுப்பது கூடுமானால் அவ்விதம் கொடுத்ததற்குக் காரணம் பெற்றுக் கொண்டவனது முன்னை நல்வினைப் பயனாக இருக்கவேண்டுமே அன்றிக் கொடுத் தவனது அறிவுடைமை அன்று என்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "புல்லறிவுடையார் தம்முடைய செல்வத் தால் நன்மையான விஷயங்களைச் செய்வதில்லை என்பதை அறிந் தோம். ஆயின் நன்மைசெய்யாத இவர் தாம் அடைந்த செல்வத் தால் தீமையைச் செய்தல் கூடும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

843. அறிவிலார் தாந்தம்மைப் பீழிக்கும் பீழை
செறுவார்க்குஞ் செய்த லரிது.

(பரி.) இ-ள். அறிவிலார் தாம் தம்மைப் பீழிக்கும் பீழை=புல்லறி வுடையார் தாமே தம்மை வருத்தும் வருத்தம்—செறுவார்க்கும் செய்தல் அரிது=அது செய்தற்குரியராய தம் பகைவர்க்குஞ் செய்தலரிது. எ-று.

பகைவர் தாம் அறிந்ததொன்றினைக் காலம் பார்த்திருந்து செய்வதல் லது வறுமை, பழி, பாவ முதலிய பலவற்றையும் எக்காலத்துஞ் செய்ய மாட்

டாமையின், அவர்க்குந் 'செய்தலரிது' என்றார். இதனால் அவர் தம்மாட்டுந் தீயன செய்தலறிவரென்பது கூறப்பட்டது. (க)

விளக்கம்:—அற்ப அறிவினை உடையவர் தமக்குத் தாமே தம்மை வெறுத்துக் கொள்ளும்படி வரவழைத்துக் கொள்ளுகின்ற துன்பத்தைப்போல், தம்மைத் துன்பப்படுத்த எண்ணிய பகைவராலும் செய்தற்குக் கூடாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனின்? பகைவராயினும் தமக்குத் துன்பம் செய்ய எண்ணுவாராயின் காலம், இடம் முதலியவைகளை நோக்கித் தமக்குக் கூடும் காலத்தே செய்வதற்குக் கூடுமே அன்றி வறுமை, பழி, பாவம் ஆகிய எல்லாத் துன்பங்களையும் எக்காலத்தும் தமக்குச் செய்யமுடியாது. ஆதலால் பகைவர் செய்கின்ற துன்பத்தைக் காட்டிலும், தமக்குத் தாமே தேடிக்கொள்ளுகின்ற துன்பம் பல என்றும், அத்துன்பங்கள் செல்வத்தை நல்வழியில் செலவழியாது தீயவழியில் செலவழித்து, உள்ள செல்வத்தைப்போக்கித் தரித்தி





ரத்தை வரவழைத்துக் கொள்ளுதலென்றும், தீயவழியில் செல்வத்தைச் செலவழித்தமையால் புகழைப்போக்கி பழியைத் தேடிக் கொள்வதென்றும், தீயவழியில் நடந்தமையால் புண்ணியத்தைப் போக்கிப் பாவத்தைத் தேடிக் கொள்வதென்றும் ஆகிய எல்லாத் துன்பங்களையும் எக்காலத்தும் இடைவிடாது தமக்குத் தாமே தேடிக்கொள்வரென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அற்ப அறிவினை உடையார் பிறர்க்குத் தீங்கு செய்வதுடன் தாமும் தம்மைத் தாமே துன்புறுத்திக் கொள்ளக் கூடிய தன்மை யுடையவர் என்று அறிந்தோம். ஆயின், இவ்விதம் ஏன் அப்புல்லறிவாளர் செய்து கொள்ளுகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

844. வெண்மை யெனப்படுவ தியாதெனி னொண்மை
யுடையம்யா மென்னுஞ் செருக்கு.

(பரி.) இ-ள். வெண்மை எனப்படுவது யாது எனின் = புல்லறிவுடைமை யென்று சொல்லப்படுவது யாதென்று வினவின்,—யாம் ஒண்மை உடையம் என்னும் செருக்கு = அது தம்மைத்தாமே யாம் நல்லறிவுடைய மென்று நன்கு மதிக்கும் மயக்கம். எ-று.

வெண்மையாவது:—அறிவு முதிராமை. ஒண்மையெனக் காரியப்பெயர் காரணத்திற்காயிற்று. உலகத்தாரிகழ்தல் அறிந்துவைத்தும் அவ்வாறு மதித்தலான், மயக்கமென்றார். (௪)

விளக்கம்:—புல்லறிவுடைமை என்று சொல்லப்படுவது எது என்று வினவினால் அப்புல்லறிவுடைமை தங்களுக்குத் தாங்களே 'நாம் நல்லறிவுடையோம்' என்று எண்ணித் தங்களை நன்கு மதித்துக் கொள்ளும் மயக்கமே ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நீங்கள் வினவிய வண்ணம் புல்லறிவுடையோர் பிறரைத் துன்புறுத்துவதும், தம்மைத் தாமே துன்புறுத்திக் கொள்வதும் வெள்ளறிவு என்னும் முதிர்ந்த அறிவில்லாமை ஆகும். ஏனெனில்? தம்மைப் பிறர் அறிவில்லாதவர் என்று இகழ்ந்து கூறுவதை அறிந்திருந்தும் மயக்க அறிவால் தம்மை முதறிஞராக எண்ணிக் கொள்வதால் நன்மை யுடையனவற்றைத் தீமையுடையன வென்றும், தீமை யுடையனவற்றை நன்மையுடையன வென்றும் மயங்கிச் செய்து



அம்மயக்கத்தால் தமக்கும் பிறர்க்கும் துன்பத்தைத் தேடுகின்றனர் என்றும் அறிக்கோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவர் நிரம்பிய கல்வி இல்லாமலே எல்லாவற்றையும் ஓதியவர்போல் நடிக்கின்றனரே; அவ்வித மக்களை உலகோர் எவ்விதம் கருதுவர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

845. கல்லாத மேற்கொண் டொழுகல் கசடற
வல்லதூஉ மையந் தரும்.

(பரி.) இ-ள். கல்லாத மேற்கொண்டு ஒழுகல் = புல்லறிவாளர் தாம் கல்லாத நூல்களையுங் கற்றாராகத் தாம் மேலிட்டுக்கொண்டு ஒழுகுதல்,— கசடு அற வல்லதூஉம் ஐயம் தரும் = கசடறக் கற்றதொரு நூலுண்டாயின், அதன்கண்ணும் பிறர்க்கையத்தை விளைக்கும். எ-று.

வல்லதென எழாவது இறுதிக்கட் டொக்கது. உண்டாயினென்பது அவாய் நிலையான் வந்தது. ஐயம்=அது வல்லரென்பதூஉம் இவ்வாறு செல்லோவென்பது. (௫)

விளக்கம் :—புல்லறிவாண்மையென்னும் மயக்கிய அறிவினை உடையார் தாம் கற்று அறியாத நூல்களையும் கற்றவர்போல் பிறர்க்குக் கூறி ஒழுகுதலாவது அவ்வித புல்லறிவாளர் ஏதேனுமொரு நூலைக் குற்றமில்லாது கற்றிருந்தாராயினும், அந்நூலையும் அவர் உண்மையாகக் கற்றிலர்போலும் என்று சந்தேகப்பட வேண்டிய நிலையினை உண்டுபண்ணும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது புல்லறிவாளனானவன் ஒரு நூலினைச் சந்தேகமும் வேறுபாடும் இல்லாமல் கற்றல் முடியாதென்றும், அவ்வாறு ஒரு வேளை கற்றானாயினும் அவனது மயக்க அறிவால் கல்லாத நூல்களையும் கற்றவன்போன்று பிறர்க்குக் கூற எண்ணிக் குற்றப்படுவதால் அதுகண்ட குணமுடையோர் 'இவன் தான் அறியாத நூல்களையும் அறிந்தான் போன்று நடிக்கின்ற தகுதியுடைமையால் இவன் யாதொரு நூலையும் கற்றிருத்தல் முடியாது' என்று சந்தேகம் கொள்ளுதற்கு இடமாகுமென்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்வித அற்ப அறிவினை உடையவர் தமக்கு வரும் அவமானத்தைக் கருதார்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



846. அற்ற மறைத்தலோ புல்லறிவு தம்வயிற்
குற்ற மறையா வழி.

(பரி.) இ-ள். தம் வயின் குற்றம் மறையாவழி=புல்லறிவாளர் தங்கணிகழுங் குற்றங்களையறிந்து கடியாராயின்,—அற்றம் மறைத்தலோ புல்லறிவு= ஆடையால் அற்றமறைத்தாராகத் தம்மைக் கருதுதலும் புல்லறிவாம். எ-று.

குற்றமறைத்தலாவது அவற்றை இலவாக்குதல். மறைக்கப்படுவன பலவற்றுள்ளும் உயர்ந்தவற்றையெல்லாம் மறையாது தாழ்ந்த தொன்றனையே மறைத்து அவ்வளவாற் றம்மையு முலகவொழுக்கினராக மதித்தலும் புல்லறி வென்பதாம். இவை மூன்று பாட்டானும் அவர் தம்மை வியத்தற் குற்றங்

கூறப்பட்டது. (௬)

விளக்கம் :—அற்ப அறிவினை உடையவர் தம்மிடத்து உண்டாகும் குற்றங்களைத் தெரிந்து அக்குற்றங்கள் உண்டாகா வண்ணம் செய்யாரெனில் வஸ்திரத்தினால் தம்முடைய மானத்தை மறைத்ததாக அவரெண்ணிக் கொள்ளுதலும் அற்ப அறிவினை உடையதாம் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மறைக்கப்படவேண்டிய பல உயர்ந்த குற்றங்களை மறைக்காது மிகத் தாழ்ந்ததாகிய தம் உறுப்பினுள் ஒன்றினை வஸ்திரத்தால் மறைத்துத் தம் மானத்தைக் காத்துக்கொண்டதாக எண்ணுவது அறிவில்லாமையே ஆகுமென்றும், உலகோர் பழியாவண்ணம் தம்மிடத்து உண்டாகும் குற்றங்களை மறைத்தலே நல்லறிவாளர்க்கு அழகென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இருக்குறள்களால் அற்ப அறிவினையுடையார் தம் அற்ப அறிவால் வரும் குற்றங்களை மறையாது தம்மை அதிகமாக எண்ணிக்கொள்ளுதலால் வருகின்ற குற்றங்கள் இவை என்று அறிந்தோம். ஆயின் புல்லறிவாளனும் உள்ள ஒருவனுக்கு நல்லுபதேசம் செய்து அவனது புல்லறிவாண்மையைப் போக்குதல் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

847. அருமறை சோரு மறிவிலான் செய்யும்
பெருமிறை தானே தனக்கு.

(பரி.) இ-ள். அருமறை சோரும் அறிவிலான்=பெறுதற்கரிய உபதேசப் பொருளைப் பெற்றாலும் உட்கொள்ளாது போக்கும் புல்லறிவாளன்—



தானே தனக்குப் பெருமிறை செய்யும்=அவ்வுறுதி யறியாமையாற் றானே தனக்கு மிக்க வருத்தத்தைச் செய்துகொள்ளும். எ-று.

சோருமென இடத்து நிகழ்பொருளின் றொழில் இடத்தின்மே னின்றது. மிக்க வருத்தம்=பொறுத்தற்கரிய துன்பங்கள். இனி அருமறைசோருமென்பதற்குப் பிறரெல்லாம் உள்ளத்தடக்கப்படும் எண்ணத்தை வாய் சோர்ந்து பிறர்க்குரைக்கு மென்றுரைத்தார்; அது பேதைமை யென்னும் பேதைமை யாவதன்றிப் புல்லறிவாண்மை யன்மை யறிக. (எ)

விளக்கம்:—நல்லாசிரியனிடத்து அடைவதற்கு அரிய உப

தேசப் பொருள்களை அறிவில்லாத ஒருவன் பெறுவானாயினும், அவ்வுபதேசப் பொருளைத் தன் மனத்துள் கொள்ளாது போக்கிவிடுவதுடன் அவ்வுபதேசப் பொருளின் உண்மைப்பயன் இது என்று அறியாமையால் தனக்குத் தானே பெரியதோர் துன்பத்தைச் செய்துகொள்வான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், புல்லறிவாளனுக்கு எவ்வளவு பெரியதாகிய உபதேசங்களைச் செய்தாலும் அவ்வுபதேசத்தின் பயனால் அவனுக்கு இயல்பாக உள்ள அற்ப அறிவினை அவன் நீக்கிக்கொள்ளாததுடன் அவ்வுபதேசப் பொருளை ஒன்றை ஒன்றாக எண்ணும் பேதைமையால் தனக்குத் தானே துன்பத்தைத் தேடிக்கொள்ளுவான் என்றமையால் அற்ப அறிவாளனுக்கு எவ்வித உபதேசம் செய்தும் பயனில்லை என்பது அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதமான அற்ப அறிவினை யுடையவன் உலகத்தார்க்கு எவ்விதமாகக் காணப் படுவான்?" என்று கேட்டதும், ஆசிரியர் கூறுவாராயினர்.

848. ஏவவுஞ் செய்கலான் றான்றேறா னவ்வுயிர்
போஒ மளவுமோர் நோய்.

(பரி.) இ-ள். ஏவவும் செய்கலான் = புல்லறிவாளன் தனக்குறுதியாயவற்றை அறிவுடையார் சொல்லாற்றவுஞ் செய்யான், — தான் தேறான் = அதுவன்றித் தானாகவும் இவை செய்வனவென்றறியான், — அவ்வுயிர் போமளவும் ஓர் நோய் = அவ்வுயிர் யாக்கையி னீங்குமளவும் நிலத்திற்குப் பொறுத்தற் கரியதொரு நோயாம். எ-று.



உயிர் தான் உணர்தற் றன்மைத்தா யிருந்தும் நின்ற யாக்கையைத் தான் மருடற் றன்மைத்தாய் வேறு படுதலின் 'அவ்வுயிர்' என்றும், அதனின் நீங்கியபொழுதே அதற்கு இரண்டனுளொன்று கூறுதலிற் 'போமளவும்' என்றும், குலமலை முதலிய பொறுக்கின்ற நிலத்திற்குப் பாவயாக்கை பெரும் பொறையாய்த் துன்பஞ் செய்தலின் 'ஒரு நோய்' என்றுங் கூறினர். (அ)

விளக்கம்:—அற்ப அறிவினையுடைய புல்லறிவாளன் அறிவுடையார் தன் உயிர்க்கு உறுதியான விஷயங்களைச் சொல்லிய காலத்தும் அவ்வுறுதிச் சொற்களைத் தனக்குச் சொல்லா வண்ணம் செய்துகொள்ளுவானென்றும், தானாகவே இது செய்யக்கூடியது இது செய்யக்கூடாதது என்று அறியவும் மாட்டான் என்றும், ஆதலால் இவ்வித தகுதி யுடையானுடைய உயிரானது தேகத்தினின்று நீங்கும் வரையில் அத் தேகத்தைப் பொறுத்த நிலத்திற்குத் தாங்குவதற்கு அருமையான ஒரு நோயாகவே இருக்கும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், உயிரானது அறிவுடைய பொருளாக இருந்தும் கர்மத்துக்குத் தக்க அளவாக எடுத்த தேகத்தின் தன்மையால் மயங்கிய அறிவை உடையதாய் வேறுபட்டுத் தான் அறிவதற்கு மில்லாது, அறிவுடையோர் சொற்களைக் கேட்பதற்கு மில்லாது தனக்குத் துன்பம் தேடிக்கொள்வதுடன் ஏனைய உயிர்க்கும் துன்பத்தைத் தேடும் என்றும், மேல் திருக்குறளில் 'உபதேசப் பொருள் உணரான்' என்று கூறியமையால் புல்லறிவாளனது உயிர், அது நற்கதி அடைவதற்கு உரிய வழியைத் தேடிக் கொள்ளாதிருப்பதுடன் ஏனைய உயிர்கள் செல்லும் நன்னெறியைத் தீநெறி என்றும், கொள்ளுதலாகா தென்றும் போதித்து மயக்க அறிவினை உண்டுபண்ணித் தான் கெடுவதுடன் பிறரையும் கெடுப்பதால் இவ்வித அறிவுடையானை உலகத்தில் உள்ளார்க்கு ஒரு நோய் என்றும், இவ்வித நோய் போன்ற உயிருக்கும் தேகத்தைப் பொறுத்தல் கூடாமையிய மலை முதலியவைகளைப் பொறுக்கின்ற நிலத்திற்கும் கூடாததாக உள்ளதென்றும், அற்ப அறிவினனது இழிவினைக் கூறியதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித பாவ யாக்கையை யுடையான் ஏன் பிறர் உபதேச மொழிகளைச் சொல்லும்படிச் செய்யான்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



849. காணாதாற் காட்டுவான் றான்காணான் காணாதான்
கண்டானாந் தான் கண்ட வாறு.

(பரி.) இ-ள். காணாதாற் காட்டுவான் தான் காணான்=தன்னை எல்லா மறிந்தானாக மதித்தலாற் பிறரால் ஒன்றறியுந் தன்மையிலாதானை அறிவிக்கப் புகுவான் அவனாற் பழிக்கப்பட்டுத் தான் அறியானாய் முடியும்;—காணாதான் தான் கண்டவாறு கண்டானாம்=இனி அவ்வறியுந் தன்மையில்லாதான் கொண்டது விடாமையாற் றானறிந்தவாற்றால் அதனை அறிந்தானாய் முடியும், எ-று.

புல்லறிவாளர்க்கு நல்லறிவு சொல்லுதல் ஒருவர்க்கும் இயைவதன் றென்பதாம். (க)

விளக்கம்:—புல்லறிவாளன் தன்னை எல்லாம் அறிந்தவனாக மதித்துக் கொள்ளுதலால் மற்றவரால் ஒன்றினையும் அறிந்துகொள்ளும் மனமில்லாதவனாக இருப்பானென்றும், நல்லாசிரியன் ஒருவன் அவனுக்கு அறிவினைப் புகட்டச் செல்லுவானாயின் அப்புல்லறிவாளனால் பழிக்கப்பட்டு அறிவுடைய இவனும் அறிவிலாதவனாகவே முடியநேருமென்றும், அன்றியும் இனி அறிந்துகொள்ளும் தன்மையில்லாத அற்ப அறிவுடையோன் தான் கொண்டது விடாமையால் தான் எவ்விதமாக உண்மைப் பொருளின் பயனைத் தவறாக எண்ணினாலும் அத்தவறு உடைமையே நன்மையுடைய பொருள் என்று அறிந்து நிற்பான் என்றும், இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், அற்ப அறிவினை உடையோர் தாங்கள் உண்மையாகவே ஒன்றும் அறியாதவர்களாக இருந்தும் கர்வத்தினால் எல்லாம் அறிந்தவர்களாகத் தங்களை எண்ணிக் கொள்ளுகின்றார்கள் என்றும், ஆதலால் அவ்வித தகுதியுடையவர்களிடத்து அவ்வறியாமையை நீக்கப் பிறர் பரிந்து சென்று உபதேசப் பொருளைக் கூறினும் அது அவனுக்குப் பயனைத் தராததுடன் தமக்கும் பெரியதோர் இழுக்காகுமென்றும், அவ்வளவே அல்லாமல் அவ்வற்ப அறிவாளன் தான் எதை உண்மை என்று எண்ணினானோ அதனையே உண்மை யென்று எண்ணித் தன் மனத்துள் தீர்மானித்து அவ்வழியே ஒழுகுவானென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அற்ப அறிவினை உடையார்க்கு நல்லறிவினை உண்டுபண்ணுதல் கூடாது என்பது அறிந்தோம். இவ்வித அறிவினை உடையான் உலகத்து எவ்விதமாக மதிக்கப்படுவான்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

850. உலகத்தாருண்டென்ப தில்லென்பான் வையத்
தலகையா வைக்கப் படும்.

(பரி.) இ-ள். உலகத்தார் உண்டு என்பது இல் என்பான் = உயர்ந்தோர் பலரும் உண்டென்பதோர் பொருளைத் தன் புல்லறிவா னில்லையென்று சொல்லுவான் — வையத்து அலகையா வைக்கப்படும் = மகனென்று கருதப்படான், வையத்துக் காணப்படுவதோர் பேயென்று கருதப்படும். எ-று.

கடவுளும், மறுபிறப்பும், இருவினைப்பயனும் முதலாக அவர் உளவென்பன பலவேறுஞ் சாதிபற்றி 'உண்டென்பது' என்றும், தானே வேண்டிய கூறலால் ஒப்பும் வடிவால் ஒவ்வாமையு முடைமையிற் றன்யாக்கை சார்ந்து மக்கள்யாக்கையுட்டோன்றுதலல்ல 'அலகை' என்றுங் கூறினார். இவை நான்கு பாட்டானும் உறுதிச் சொற்கொள்ளாமையது குற்றங் கூறப்பட்டது.

விளக்கம்:—அறிவால் உயர்ந்தவர் பலரும் உண்டு என்பதாகிய ஒரு பொருளைத் தன் புல்லறிவாண்மையால் இல்லையென்று சொல்லும் அற்ப அறிவுடையான் ஒருவன் உருவத்தால் மகனே ஆயினும் மகனென்று கருதப்படமாட்டான் என்றும், ஆனால் உலகத்துக் காணப்படுவதாகிய ஒரு பேயென்றே எண்ணப்படுவான் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் கடவுள் உண்டென்றும், மறுபிறப்பு உண்டென்றும், நல்வினை தீவினைகளாகிய இரண்டுவினைகளும் அவற்றால் ஆகியபயன்களும் உண்டென்றும் உயர்ந்தஞானிகள் கூறுவனவற்றை மனத்துள் கொள்ளாது தன் அறியாமையால் தான் எண்ணிய ஒன்றினையே கொண்டவன் தான் கெடுவது மாத்திரமல்லாமல் உயர்ந்தோர்பலரும் ஒழுகியொழுக்கத்தில் சென்று உய்பவராம் என்று எண்ணுபவரையும் கெடுப்பன். ஆகலால் இவ்வித புல்லறிவாளனை மக்கள் தேகத்திலுள் காணப்படுகின்ற அலகையென்றுவமித்தனர். என் எனின்? மக்கள் தேகத்துள் தோன்றி தன் தேகத்துள் இல்லாது மறைந்து நிற்கின்ற அலகையைப்போல் இப்புல்லறிவாளன் உயர்ந்தோர்கூறும் ஒழுக்கத்தைச் செய்பவனைப்போல் ஆஸ்திகமதம் கொண்டு நாஸ்திகம் பேசுகின்றான் ஆதலால் ஒப்பும் ஒவ்வாமையும் ஆகிய இரண்டுங்கொண்டு உருவத்தால் மனிதனாகவும் செயலால் அலகையுமாக எண்ணப்படுவான் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய நான்கு திருக்குறள்களாலும்

உயர்ந்தோரது உறுதிச் சொற்களைக் கொள்ளாத புல்லறிவாளர் தன்மை இதுவென அறிந்தோம். இனிமேல் உட்பகை எதிர்முகமாகக் கூறத் தொடங்கி வெகுளி யென்றும், காமமென்றும் பிரித்தார் ஆதலால், மயக்க அறிவால் உண்டாகும் பேதைமையோடு கூடிய வெகுளியைப்பற்றிக் கூறும் விஷயத்தை ஒன்றன்பின் ஒன்றாக விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 86. அதிகாரம்.

## இ க ல்.

(பரி.) இனி அவற்றுள் வரும் வெகுளி காமங்களுள் அரசர்க்கு வெகுளி பெரும்பான்மைத்தாகலின், அதனான் வருவன கூறுவான் றொடங்கி, முதற்கண் இகல் கூறுகின்றார். அஃதாவது இருவர் தம்முட் பொருது வலிதொலைதற் கேதுவாய மாறுபாடு.

விளக்கம்:—அதாவது, மேல்விளக்கிய வண்ணம் பேதைமையாலும், புல்லறிவாண்மையாலும் முறையே வருகின்ற வெகுளியென்பதையும், காமமென்பதையும் கூறத் தொடங்கி அவ்விரண்டனுள்ளும் அரசர்க்கு வெகுளியென்பது மிகுதியாதலால் அதனை முதற்கண் சொல்லவிரும்பி அதன்முதற் பாகமாகிய இகலென்னும் இவ்வதிகாரத்தை முதலில் கூறத் தொடங்கினர். அவ்விகல் என்பது பகை கொண்டார் இருவர் தமக்குள் யுத்தஞ்செய்து வலிமையை ஒழித்தற்குக் காரணமாகிய மாறுபாடு என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இகல் என்பது அறிவின் மாறுபாடு என்று அறிகின்றோம். ஆனால் அம்மாறுபாடாகிய இகலைக் கொண்டார்க்கு என்ன உண்டாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

851. இகலென்ப வெல்லா வுயிர்க்கும் பகலென்னும்
பண்பின்மை பாரிக்கு நோய்.

(பரி.) இ-ள். எல்லா உயிர்க்கும் பகல் என்னும் பண்பு இன்மை பாரிக்கும் நோய்=எல்லாவுயிர்கட்கும் பிறவுயிர்களோடு கூடாமையென்னும் தீக்கு

63



ணத்தை வளர்க்குங் குற்றம்—இகல் என்ப=இகலென்று சொல்லுவர் நூலோர். எ-று.

மக்களையும் விலங்குகளோ டொப்பிப்பதென்பது தோன்ற 'எல்லாவுயிர்க்கும்' என்றும், பகுதிக்குணத்தை இடைநின்று விளைத்தலிற் 'பகலென்னும் பண்பின்மை' என்றுங் கூறினார். நற்குணமின்மை அருத்தாபத்தியாற் றீக்குணமாயிற்று. இதனால் இகலது குற்றங் கூறப்பட்டது. (௧)

விளக்கம்:—உலகத்துத் தோன்றும் எல்லா உயிர்களுக்கும் பிற உயிர்களோடு கூடிவாழாமை என்னும் தீயகுணத்தை விளைக்கும் குற்றமொன்றினை நூல் வல்லவர் இகல் என்று சொல்லுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் இகல்கொண்ட உயிரொன்று ஏனைய உயிர்களோடு ஒத்துப் பொருந்தாதென்றும், ஒன்றைவிட்டு ஒன்று பிரிந்திருக்கும் பிரிவென்னும் குணத்தையே நடுவினின்று விளைக்குமென்றும், அவ்வித குற்றத்தை விளைப்பதால் நற்குணத்தைஒழித்துத் தீக்குணத்தைஉண்டாக்குவது இகல்என்பதற்கு இயற்கை என்றும் கண்டோம். ஆதலால், இகலுடையோர் உலகத்து எக்காலத்தும் யாரோடும் நேசப்பான்மை கொள்ளார். மக்கட்கு மாத்திரமல்லாமல் ஏனைய உயிர்களுக்கும் அதாவது விலங்கு முதலியவைகட்கும் இக்குற்றமுண்டாகுமென்று அறிவித்தற்கு 'எல்லா உயிர்களுக்கும்' என்று நம்மாசிரியர் கூறினர் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இத்திருக்குறளால் இகலால் வரும் குற்றம் இதுவென்று உணர்ந்தோம். ஆயின் ஒருவன் தனக்குப் பொறுக்கக் கூடாத விஷயங்களைச் செய்கின்றகாலத்து இகல் கொள்ளுதல் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

852. பகல்கருதிப் பற்றா செயினு மிகல்கருதி
யின்னாசெய் யாமை தலை.

(பரி.) இ-ள். பகல் கருதிப் பற்றா செயினும்=தம்மொடு கூடாமையைக் கருதி ஒருவன் வெறுப்பன செய்தானாயினும்,—இகல் கருதி இன்னா செய்யாமை தலை=அவனொடு மாறுபடுதலைக் குறித்துத் தாமவனுக்கு இன்னாதவற்றைச் செய்யாமை உயர்ந்தது. எ-று.



செய்யிற் பகைமை வளரத் தாம் தாழ்ந்து வரலானும், ஒழியின் அப் பற்றாதன தாமே யோய்ந்து போகத் தாம் ஓங்குவராலானும், 'செய்யாமை தலை' என்றார். பற்றாத வென்பது விகாரமாயிற்று. (உ)

விளக்கம்:—ஒருவன் தம்மோடு கூடாதிருக்கின்ற செயலை எண்ணி வெறுக்கக் கூடியதாகிய செயல்களைச் செய்தானானாலும் அவ்வித தகுதி யுடையாரோடு மாறுபடும்படியாகிய தன்மையை மனத்தின் எண்ணித் தாம் அம்மாறுபாட்டால் அத்தீக் குணமுடையானுக்குத் துன்பமான விஷயங்களைச் செய்யா திருத்தல் உயர்ந்த தகுதி என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், அவன் தமக்கு வெறுக்கக்கூடிய விஷயங்களைச் செய்கின்றான் என்று எண்ணித் தாமும் அவனுக்குத் துன்பத்தைச் செய்யப் புகுந்தால் அதனால் மேலும் மேலும் பகைவளரவும் அப்பகைமையினால் தாம் தாழ்ந்து போகவும் நேரும் என்றும், அவ்விதம் அவனுக்குத் துன்பம் செய்யாதிருப்பாராயின் அவ்வெறுப்பனவாகிய விஷயங்களைச் செய்கின்ற அவன் அச்செயல்களைச் செய்வதில் அலுத்து ஓய்ந்து போவானென்றும், இவ்வித செயலால் தாம் ஓங்கி வளரக் கூடுமென்றும் அறிகின்றோம். ஆதலால், இகலை மனத்திற் கொள்ளாதவர் உயர்வாரென்றும் ஏனையோர் தாழ்வாரென்றும் அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஒருவன் இகலைக் கொள்ளாது வாழ்வானாயின், அவனுக்கு உலகத்து எவ்வித நன்மை கிடைக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

853. இகலென்னு மெவ்வநோய் நீக்கிற் றவலில்லாத்
தாவில் விளக்கந் தரும்.

(பரி.) இ-ள். இகல் என்னும் எவ்வநோய் நீக்கின் = மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பத்தைச்செய்யு நோயை ஒருவன் தன் மனத்தி னின்று நீக்குமாயின்,—தவல் இல்லாத் தாவில் விளக்கம் தரும் = அவனுக்கு அந்நீக்குதல் எஞ்ஞான்றும் உளதாதற் கேதுவாய புகழைக்கொடுக்கும். எ-று.

தவலில்லாமை அருத்தாபத்தியான் அப்பொருட்டாயிற்று. தாவில் விளக்கம் வெளிப்படை. யாவருநண்பராவர்; ஆகவே, எல்லாச்செல்வமு மெய்திக் கொடைமுதலிய காரணங்களாற் புகழ்பெறு மென்பதாம். (௩)



விளக்கம்:—மாறுபடுதல் என்று சொல்லக் கூடிய துன்பத்தை உண்டு பண்ணும் ஓர் நோயைத் தன் மனத்தினின்றும் நீக்கி விடுவானாயின், அவ்விதம் நீக்கிய அவனுக்கு அந்நீக்குதலானது எக்காலத்தும் அழியாது இருப்பதற்குக் காரணமாகின்ற புகழை உண்டுபண்ணும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பகைமையை விளைக்கும் இகல் என்று சொல்லும் மாறுபாடாகிய தீய குணத்தை ஒருவன் மனத்தின் கொள்ளாது யாவரோடும் நட்பாக வாழ்வானாயின் அதனால் யாவரும் நட்பாவரென்றும், அவ்வித நட்பு உண்டாகவே எல்லாச் செல்வமும் அடைந்து கொடை முதலிய புகழுக்கு உரிய காரணங்களை எல்லாம் செய்து இறந்தும் அழியாத பெயருடையவனாய்ப் பூததேகம் ஒழிந்தாலும் புகழ் உடம்போடு வாழ்வானென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் இகலில்லாது புகழ்பெறுவது அறிந்தோம். இவ்விகலின்மையால் புகழ் அல்லாது இன்னும் எது வருதல் கூடும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

854. இன்பத்து ளின்பம் பயக்கு மிகலென்னுந்
துன்பத்துட் டுன்பங் கெடின்.

(பரி.) இ-ள். இகல் என்னும் துன்பத்துள் துன்பம் கெடின் = மாறுபாடென்று சொல்லப்படுகின்ற துன்பங்களெல்லாவற்றிலும் மிக்க துன்பம் ஒரு

னுக் கில்லையாயின்,—இன்பத்துள் இன்பம் பயக்கும்=அவ்வின்மை அவனுக்கு இன்பங்களெல்லாவற்றினும் மிக்க வின்பத்தினைக் கொடுக்கும். எ-று.

துன்பத்துட்டுன்பம்=பலரொடு பொருது வலிதொலைதலான் யாவர்க்கு மெளியனாய் யுறுவது. அதனை இடையின்றியே பயத்தலின், 'இகலென்னும்' என்றார். இன்பத்துளின்பம்=யாவருடட்பாகலின் எல்லாப்பயனு மெய்தியுறுவது. (௩)

விளக்கம்:—மற்றவர்களோடு மாறுபடுதல் என்று சொல்லப்படுகின்ற எல்லாத் துன்பங்களினும் பெரியதோர் துன்பம் ஒருவனுக்கு உண்டாகாதாயின், அவ்வுண்டாதல் இல்லாமை உடையனாகிய அவனுக்கு இன்பங்கள் எல்லாவற்றினும் பெரிய தோர் இன்பம் உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இத



னால், மாறுபடுதல் என்கின்ற துன்பத்துள் துன்பத்தினை ஒருவன் மனத்துக்குள் கொள்வானாயின், அத்துன்பத்தால் பலரோடு பகை கொண்டு யுத்தம்செய்து தன்னுடைய வலி குறைவதற்கு ஏதுவாகி எதற்கும் எளியனாய்த் துன்புறுவானென்றும், அவ்வித மாறுபாடு இல்லாவிடின் எல்லோரும் நட்பினராகி அந்நட்பின் மிகுதியால் இன்பத்தை அடைந்து மாறாத இன்ப உருவினனாய் இருப்பானென்றும் அறிகின்றோம். ஆதலால், இகலில்லார்க்குப் புகழ்வருவதோடு இம்மை இன்பமும் அடைதல் கூடும் என்று அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "என்றும் இகலில்லார்க்கு வரும் நன்மைகளை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

855. இகலெதிர் சாய்ந்தொழுக வல்லாரை யாரே
மிகலூக்குந் தன்மை யவர்.

(பரி.) இ-ள். இகல் எதிர் சாய்ந்து ஒழுக வல்லாரை=தம்முள்ளத்து மாறுபாடுதோன்றியவழி அதனை பேற்றுக்கொள்ளாது சாய்ந்தொழுகவல்லாரை,—மிகல் ஊக்கும் தன்மையவர் யார்=வெல்லக்கருதுந் தன்மையுடையார் யாவர்! எ-று.

இகலை யெதிர்ந்தொழுகல் வேந்தர்க்கு எவ்வாற்றானும் அரிதாகலின் 'வல்லாரை' என்றும், யாவர்க்கும் நண்பாகலின் அவரை வெல்லக் கருதுவார் யாவருமில்லையென்றுங் கூறினர். இவை நான்குபாட்டாலும் இகலாதார்க்கு வரும் நன்மை கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—தம்முடைய மனதில் மாறுபாடு தோன்றிய காலத்து அம்மாறுபாட்டினை மனத்தின் கொள்ளாது நட்பாக ஒழுகவல்லவரை வெற்றி கொள்ள என்னும் தகுதி யுடையவர் இவ்வுலகத்து ஒருவரும் இல்லையென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், அரசாள்வோர் பகைமையை மனத்திற் கொள்ளாது வாழ்தல் அரிதென்றும், அவ்விதம் வாழ அறிவின் வல்லமை உடையவராய் இருப்பாராயின், அவர்க்கு உலகத்து எல்லோரும் நண்பராய் இருப்பாராதலால் அவ்விதநட்பின் தகுதியுடையாரை ஒருவராலும் வெல்லல் முடியாதென்றும், அவர்க்கு வருவது எவையும் நன்மையாகவே இருக்கும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட



மாணாக்கர், "இதனாலும் இகல் கொள்ளாதார்க்கு வரும் நன்மை கண்டுணர்ந்தோம். இனிஇகலினைக் கொள்ளுவார்க்கு வரும்கேடுகள் இவை என்று அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

856. இகலின் மிகலினி தென்பவன் வாழ்க்கை
தவலுங் கெடலு நணித்து.

(பரி.) இ-ள். இகலின் மிகல் இனிது என்பவன் வாழ்க்கை = பிறரொடு மாறுபடுதற்கண் மிகுதல் எனக்கு இனிதென்று அதனைச் செய்வானது உயிர் வாழ்க்கை—தவலும் கெடலும் நணித்து = பிழைத்தலும் முற்றக் கெடுதலுஞ் சிறிது பொழுதின் உளவாம். எ-று.

மிகுதல் = மேன்மேலூக்குதல். இனிதென்பது தான்வேறல் குறித்தல். பிழைத்தல் = வறுமையானின்றுதாதல். முற்றக்கெடுதல் = இறத்தல். இவற்றோடு நணித்தென்பதனைத் தனித்தனிகூட்டி, உம்மைகளை எதிரதும் இறந்ததுந் தழீஇய வெச்சவும்மைகளாக வுரைக்க. பொருட்கேடும் உயிர்க்கேடும் அப்பொழுதே புணவா மென்பதாம். (௬)

விளக்கம்:—"மற்றவர்களோடு மாறுபடுதலில் மிகுந்தவனாக யானிருப்பது எனக்கு இனிமையைத் தரும்" என்று அம்மாறு பாட்டினை விரும்பிச் செய்வானது உயிர் வாழ்க்கையானது இருந்த நிலையில் மாறுபடுதலும் பிறகு முழுவதும் கெடுதலும் சிறிது காலத்தில் உண்டாதல் கூடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பகைமை மேற்கொண்டு ஒருவரோடு ஒருவர் மாறுபடு கின்ற மாறுபாட்டினை மேலும் மேலும் அதிகமாகச் செய்து ஒருவன் தான் வெல்லும்படி எண்ணுதல் அவனுக்கு உள்ள செல்வங்களை எல்லாம் போக்கி வறியனாக்கி நிற்பதுடன் உயிர்க்கேட்டையும் உண்டுபண்ணும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "உலகத்து இகலென்னும் மாறுபாட்டை விரும்பும் கொள்ளுவான் தன்னுடைய செல்வத்தையும் உயிரையும் இழப்பது திண்ணமென்று அறிந்தோம். ஆயின், என் இவ்விதம் வெற்றியைக் குறித்த இவர் வெற்றியுமடையாது, செல்வத்தையும் இழந்து, உயிரையும் போக்கிக்கொள்வர்? இதன் காரணத்தையும் விளக்கல் வேண்டும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



857. மிகன்மேவல் மெய்ப்பொருள் காணா ரிகன்மேவ
லின்னா வறிவி னவர்.

(பரி.) இகல் மேவல் இன்னா அறிவினவர் = இகலோடு மேவுதலையுடைய இன்னாத வறிவினையுடையார்— மிகல் மேவல் மெய்ப்பொருள் காணார் = வெற்றி பொருந்துதலையுடைய நீதிநூற் பொருளை யறியமாட்டார். எ-று.

இன்னாவறிவு = தமக்கும் பிறர்க்குந் தீங்கு பயக்கு மறிவு. வெற்றி = வழி நின்றார்க்கு உளதாவது. காணப்படும் பயத்ததாகலின், மெய்ந்நூலெனப் பட்டது. இகலால் அறிவு கலக்குதலின், 'காணார்' என்றார். இவையிரண்டு பாட்டானும் இகலினார்க்கு வருந் தீங்கு கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—தமக்கும் பிறர்க்கும் தீங்கினை உண்டுபண்ணும் இகலென்னும் மாறுபாட்டோடு கூடிய அறிவாகிய துன்பம் தரும்

அறிவு உடையார் பகைவரோடு போரிட்டு வெல்லுதற்குரிய நீதிகளைக் கூறும் நூற்பொருள்களை அறியமாட்டார்களென்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது எவ்வாறெனின்? தமக்கும் பிறர்க்கும் தீங்கினை உண்டுபண்ணுகின்ற இகலைக் அறிவு கலங்கி, அதனால் கலங்கிய அறிவுடையாராய் உள்ளகாலத்து எல்லா வலிமையும் பெற்றிருந்தும் கலங்கிய மனத்தால் உண்மை காணாது போரிட்டுத் தோல்வி அடைவதோடு பொருளையும், உயிரையும்இழப்பார் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் இகலென்பது கேடுதரும் என்று அறிந்தோம், ஆயின், இவ்விகல் இல்லாத தன்மையை ஒருவன் கொள்ளுவானாயின், அவனுக்கு ஆக்கம் வரும்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

858. இகலிற் கெதிர்சாய்த லாக்க மதனை
மிகலூக்கி னூக்குமாங் கேடு.

(பரி.) இ-ள். இகலிற்கு எதிர் சாய்தல் ஆக்கம் = தன்னுள்ளத்து மாறுபாடு தோன்றியவழி அதனை எதிர்தலைப் பொறுத்தல் ஒருவனுக்கு ஆக்கமாம்;—அதனை மிகல் ஊக்கின் கேடு ஊக்குமாம் = அது செய்யாது அதன்கண் மிகுதலை மேற்கொள்வானாயிற் கேடும் தன்கண் வருதலை மேற்கொள்ளும். எ-று.



எதிர்தல் = ஏற்றுக்கோடல். சாய்ந்தபொழுதே வருதலின், 'சாய்தலாக்கம்' என்றார். இகலிற்கெனவும் அதனையெனவும் வந்தன வேற்றுமை மயக்கம். (அ)

விளக்கம்:—ஒருவனுக்குத் தன் மனத்தினிடத்து மாறுபாடு என்னும் இகல் தோன்றிய காலத்து அதனோடு பொருந்தாது அதனை விட்டு விலகிச் செல்லுதல் மேலும் மேலும் வளர்ச்சியைத் தருமென்றும், அவ்விதம் ஒழியாது அவ்விகலை விரும்பி அதனிடத்தே பொருந்தி அதனையே மேலும் மேலும் கொள்ளுதல் அவனுக்குக் கேட்டினை உண்டாக்கும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், நீங்கள் வினவியபடி இகல் என்பதைச் சிறிதும் விரும்பாத மனத்தை உடையானுக்கு

யாவரும் நட்பினர் ஆவரென்றும், அந்நட்பின் மிகுதியால் செல்வம் வளர்தலோடு ஆயுளும் வளருமென்றும், அவ்விதமல்லாதார் அவ்விரண்டையும் இழப்பரென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் இவ்வாக்கக் கேடுகளை ஒருவன் தனக்குத் தானே செய்து கொள்ளுதல் கூடுமோ? யாவும் வினையின் பயன் அன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

859. இகல்காணா னாக்கம் வருங்கா லதனை
மிகல்காணுங் கேடு தரற்கு.

(பரி.) இ-ள். ஆக்கம் வருங்கால் இகல் காணான்=ஒருவன் தன்கணாக்கம் வரும் வழிக் காரணமுண்டாயினும் இகலை நினையான்,—கேடு தரற்கு அதனை மிகல் காணும்=தனக்குக் கேடுசெய்து கோடற்கட் காரணமின்றியும் அதன்கண் மிகுதலை நினைக்கும். எ-று.

இகலான் வருங்கேடு பிறரா லன்றென்பது தோன்றத் 'தரற்கு' என்றார். நான்காவதும் இரண்டாவதும் ஏழாவதன்கண் வந்தன. ஆக்கக்கேடுகட்கு முன்னடப்பன இகலினது இன்மை உண்மைகளென்பதாம். (க)

விளக்கம்:—ஒருவன் தன்னிடத்துச் செல்வத்திற்கு அதி தேவதையாகிய இலக்குமி ஆனவள் வரவேண்டி இருக்கின் அக்காலத்து மற்றொருவனிடத்துப் பகை கொள்வதற்குப் பல காரணங்கள் இருந்தாலும், அக்காரணங்களால் மாறுகொள்ளுதல் என்பதையே



என்ன மாட்டானென்றும், ஆயின் தனக்குக் கேட்டினை உண்பெண்ணும் மூதேவியானவள் வரவேண்டிய காலத்து யாதொரு காரணமில்லாமலும் இகலென்னும் மாறுபாட்டினைச் செய்ய மிகுதியும் எண்ணுவான் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், ஒருவனுக்கு ஆகூழ் இருக்குமாயின் பகைவரிடத்தும் மாறு கொள்ளாமல் நட்பினனாய் இருந்து தன் செல்வத்தை வளர்ப்பானென்றும், அவ்விதம் அல்லாது போகூழ் இருக்குமாயின் பகைகொள்ளாதவ

ரிடத்தும் பகையைச் செய்து செல்வத்தைப் போக்கி வறுமையை அடைவான் என்றும் அறிந்தோம். இதனால் ஒருவனது கல்வியை, நீதியையே இகலை உண்டு பண்ணுவதற்கும் இல்லாதிருக்கச் செய்வதற்கும் காரணமாம் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இகல் இல்லாமையால் ஒருவனுக்கு ஆக்கம் வருமென்றும், இகல் உள்ளமையால் ஒருவனுக்குக் கேடு வருமென்றும் அறிந்தோம். வாழ்வழியின் வண்ணம் சொல்லுகின்ற இகலால் இன்னும் எது உண்டாகும் என்பதையும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

860. இகலானா மின்னாத வெல்லா நகலானா
நன்னய மென்னுஞ் செருக்கு.

(பரி.) இ-ள். இகலான் இன்னாத எல்லாம் ஆம்=ஒருவனுக்கு மாறுபாடொன்றானே இன்னாதனவெல்லாம் உளவாம்;—நகலான் நன்னயம் என்னும் செருக்கு ஆம்=நட்பொன்றானே நல்ல நீதியென்னும் பெருஞ்செல்வம் உளதாம், எ-று.

இன்னாதன=வறுமை, பழி, பாவ முதலாயின. நகல்=மகிழ்தல். நக வென்பதூஉஞ் செருக்கென்பதூஉம் தத்தம் காரணங்கட் காயின. நயமென்னுஞ் செருக்கெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். இவை மூன்று பாட்டானும் அவ்விருமையுங் கூறப்பட்டன. (௰).

விளக்கம்:—ஒருவனுக்கு மற்றவரிடத்துக் கொள்ளுகின்ற மாறுபாடு ஒன்றினால் துன்பங்களெல்லாம் உண்டாகுமென்றும், மற்றவரிடத்துக் கொள்ளும் நட்பு ஒன்றினாலேயே நல்ல நீதியென்னும் பெரியதோர் செல்வம் கிடைக்குமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், இகல் கொள்ளுவான் ஒருவனுக்குத் தரித்திரம்,





பழி, பாவம் எல்லாம் உண்டாகுமென்றும், அவ்விதமல்லாது பிறரிடத்து நட்புக்கொள்ளுவானுக்குச் செல்வம், புகழ், புண்ணியம்

எப்பகை யாவும் உண்டாகுமென்றும் முடிவாகக் கூறிய விஷயம் கீழ்க் கண்டோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இகல் உடைமையால் இம்மை மறுமை என்னும் இரண்டினையும் இழக்க நேருமென்றும், இகலில்லாமையால் இருமையும் அடையலாமென்றும் அறிந்தோம். இனி, அவ்வெகுளியால் வரும் ஏனையவற்றையும் கூறுதல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 87. அதிகாரம்.

---

## பகைமாட்சி.

(பரி.) அஃதாவது அறிவின்மை முதலிய குற்றங்க ளுடைமையாற் பகையை மாட்சிப்படுத்தல். அரசர்க்கு எவ்வாற்றானும் பகையின்மை கூடாமையின் மேற்பொதுவகையான் விலக்கப்பட்ட இகலை ஈண்டுச் சிறப்புவகையான் விதிக்கின்றாராகலின், இஃதிதன்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, அறிவின்மை முதலிய குற்றங்களிருப்பதால் அதன் பொருட்டுப் பகைத்தலை மாட்சிமையாக்க வேண்டும் என்பதாம். அரசராய் உள்ளவர்களுக்கு எவ்விதத்தாலும் பகை யென்பது இல்லாதிருத்தல் கூடாததாதலால் முன்னமே அதற்குப் பொதுவாகக் கூடாதென்று விலக்கப்பட்ட இகலென்னும் மாறுபாட்டினை இவ்விடத்துச் சிறப்பாகக் குறிக்கின்றார் ஆதலால், இப்பகைமாட்சி யென்பது இகலென்னும் அதிகாரத்துக்குப் பிறகு வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அதுகேட்ட மாணுக்கர், எதற்கும் ஒரு சிறப்பு விதி உண்டென்பது போல், கூடாததாகிய இவ்விதனுக்கும் ஒரு சிறப்புவிதி உண்டுபோலும்! அச்சிறப்பினைக் கூறல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

861. வலியார்க்கு மாறேற்ற லோம்புக வோம்பா
மெலியார்மேன் மேக பகை.

(பரி.) இ-ள். வலியார்க்கு மாறு ஏற்றல் ஓம்புக=தம்மின் வலியார்க்குப்

பகையா பெதிர்தலை ஒழிக;—மெலியார்மேல் பகை நம்பா மேக =எளிமெலி யார்க்குப் பகையாதலை ஒழியாது விரும்புக, எ-று.

வலியாரென்புழித் துணைவலியு மடங்கலின், மெலியாரென்புழித் துணை வலி யின்மையுங் கொள்ளப்படும். அத்துணைதான் படை பொருண்முதலிய வேற்றுமைத்துணையும் நல்லறிவுடைமை நீதிநூல்வழியொழுகன் முதலிய ஒற்றுமைத்துணையுமென விரண்டாம். அவ்விரண்டு மில்லாரை வெல்வார்க்கு வலி தேரவேயாமையின் அவரோடு பகைத்தல் விதிக்கப்பட்டது. இங்ஙனாக் காவெ இதனுட் பகைமாட்சி பொதுவகையாற் கூறப்பட்டது. (௧)

விளக்கம்:—அரசராயினோர் தம்மைக் காட்டிலும் வலியவரி டத்துப் பகைகொண்டு அவரை எதிர்த்தலை ஒழித்தல் வேண்டு மென்றும், தம்மைக் காட்டிலும் வலிமையில்லாத மெலியாரிடத்துப் பகை கொள்ளுதலை எக்காலத்தும் விரும்புதல் வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, படை, பொருள் முத லிய புறத்துணையும், நல்லறிவுடைமை, நீதி நூல் வழி ஒழுகுதல் முதலிய அகத்துணையும் ஆகிய இரண்டினையும் கொண்டவரிடத்துப் பகைகொள்ளுதல் ஆகாதென்றும், அவ்விதம் புறத்துணை, அகத் துணையாகிய இரண்டுமில்லாரை வெலவது சுலபமாதலால் அவரைப் பகைத்து வெற்றி கொண்டு உலகத்தை ஆளவேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "வெகுளியால் வரும் இகலைக் கொள்ளவேண்டிய இடம் இது வென்றும், கொள்ளக் கூடாத இடம் இதுவென்றும் அறிந்தோம். ஆயின், ஏன் ஒரு வருக்குத் துணைவலி யுள்ளது? ஏன் சிலர்க்குத் துணைவலி யில்லா மற் போகின்றது? என்பதை விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

862. அன்பில னான்ற துணையிலன் றான்றுவ்வா
னென்பரியு மேதிலான் றுப்பு.

(பரி.) இ-ள். அன்பு இலன்=ஒருவன் தன் சுற்றத்தின் மேலன்பிலன்,—ஆன்ற துணை இலன்=அதுவேயன்றி வலிய துணையிலன்,—தான் துவ்வான்=அதன்மேற் றான் வலியிலன்,—ஏதிலான் துப்பு என் பரியும்=அப்பெற்றியான் மேல்வந்த பகைவன் வலியினை யாங்ஙனந் தொலைக்கும்! எ-று.



சுற்றமும், இருவகைத் துணையும், தன்வலியு மிலனாயவழி, அவன்மேற் செல்வார்க்கு வலி வளர்வதன்றித் தொலையா தென்பதாம். துவ்வான்=துவ் வினைச் செய்யான். (உ)

விளக்கம்:—ஒருவன் தன் சுற்றத்தவர் மீது அன்பு இல்லாதவனும், அது மாத்திரம் அல்லாமல் கல்வியறிவுடைய வலியார் துணையில்லாதவனும், தனக்குத் தானே வலிமையில்லாதவனும் இருப்பானாயின் அவ்வித தகுதியுடையான் தன் மேல் எதிர்த்து வந்த பகைவனுடைய பலத்தை எவ்விதத்தாலும் தொலைத்தல் முடியாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேல் கூறிய வண்ணம் சுற்றத்தவரிடத்து அன்பு செய்யாமையால் அவருடைய துணையற்றும், பொருள், படை முதலிய வெளித்துணையும், அறிவு முதலிய உள் துணையும் ஆகிய இரண்டு துணையுமில்லாமலும் இருக்கும் ஒருவன் தன் மீது வந்த பகைவனை வெற்றி கொள்வதற்கு முடியாது தோற்றுப்போவான் ஆதலால், அப்பகைவர் வலிமையானது வளருமென்றும், இவன் வலிமை ஒழிந்துபோம் என்றும் அறிந்தோம். ஆதலால் ஒருவன் வலிமைகொள்வதற்கும், வலிமையற்றிருப்பதற்கும் காரணம் துணை வலியேயாம் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "எவ்வித தீக்குணங் கொளிலர் துணைவலிமை பெறாது பகைவரால் வெல்லப்படுகின்றனர் என்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

863. அஞ்சு மறியா னமைவில னீகலான்
றஞ்ச மெளியன் பகைக்கு.

(பரி.) இ-ள். அஞ்சும்=ஒருவன் அஞ்சவேண்டாதவற்றிற்கு அஞ்சாமைக்

கும்,—அறியான் = அறியவேண்டுமவற்றை யறியான்,—அமைவு இலன் = பிறரோடு பொருந்துதலிலன்,—ஈகலான் = இவற்றின்மேலும் யாவர்மாட்டும் இவறன்மாலையன்,—பகைக்குத் தஞ்ச மெளியன் = இப்பெற்றியான் பகைவர்க்கு மிகவெளியன். எ-று.

தஞ்ச மெளிய னென்பன ஒருபொருட்பன்மொழி. * இந்நான்கு குற்ற முடையான் பகையின்றியு மழியுமாகலின், 'தஞ்சமெளியன்' என்றார்.

* தஞ்சக்கிளவி யெண்மைப்பொருட்டே. தொல்காப்பியம், சொல்; 869.



விளக்கம்:—ஒருவன் பயப்படக்கூடாதவற்றிற்குப் பயந்தும், அறிய வேண்டுவனவற்றை அறியாதும், பிறரோடு பொருந்துதல் இல்லாதவனும் இருப்பதோடு உலோபத்தன்மை உடையவனாயும் இருப்பானாயின், அவ்வித தகுதி உடையான் பகைவர்க்கு மிகுதியும் எளிமை உடையவன் ஆவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பயப்படக்கூடாதவற்றிற்குப் பயந்தும், அறிய வேண்டிய விஷயங்களை அறியாமலும், பிறர் கொள்கையோடு பொருந்தாமலும், ஈகை என்பதே இல்லாது உலோப குணமும் ஒருவனுக்கு இருக்குமாயின், அவ்வித தகுதியுடையானை உலகோர் விரும்பாரென்றும், அவ்விதம் விரும்பாத காலத்து அவன் தனியனாவன் ஆதலால் பலமற்றவன் ஆவானென்றும், அவ்வித பலமில்லாதவனை வெற்றிகொள்வது பகைவர்க்குச் சுலபமென்றும் அறிந்தோம். அன்றியும், இவ்வித நான்கு குற்றங்களையும் ஒருவன் கொண்டிருப்பானாயின், பகைவரில்லாமலே தானே அழிந்துவிட நேரினும் நேருமென்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இன்னும் எவ்வெவ்வித குற்றங்களை உடையானைப் பகைவர் சுலபமாக வெல்லுதல் கூடும் என்பதையும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

864. நீங்கான் வெகுளி நிறையில னெஞ்ஞான்றும்
யாங்கணும் யார்க்கு மெளிது.

(பரி.) இ-ள். வெகுளி நீங்கான் = ஒருவன் வெகுளியினீங்கான்,—நிறை

இலன் = அதுவேயன்றித் தான் நிறையுடையனல்லன்,—எஞ்ஞான்றும் யாங்கணும் யார்க்கும் எளிது = அவன்மேற்சேறல் எக்காலத்தும் எவ்விடத்தும் யார்க்கு மெளிது. எ-று.

நிறை = மறைபிறரறியாமை. வெகுடன்மாலை யுடைமையாலும், மறை வெளிப்படுத்தலாலும், மேற்செல்வார்க்குக் காலமும் இடனும் வலியுமறிந்து சேறல் வேண்டாதாயிற்று. இனி, இனிதென்று பாடமோதி அவன் பகைமை இனிதென் றுரைப்பாருமுளர். (௪)

விளக்கம்:—ஒருவன் கோபத்தை விட்டு ஒழியாதவனும், மறைவாகிய விஷயங்களைப் பிறர் அறியச் செய்பவனும் இருப்பானாயின், பகைவர் அவன் மேல் செல்லுதல் எந்தக் காலத்திலும்,



எந்த இடத்திலும், எவர்க்காயினும் சுலபமாக இருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பகைவரானவர் ஒருவன்மீது செல்லவேண்டுமாயின் காலத்தையும், இடத்தையும், அவனுக்கு உள்ள தன் வலி துணை வலியையும் நோக்கிச் செல்லல் வேண்டி இருக்க இவ்வித கோபத்தையுடையானும், இவ்வித மறைவாகிய விஷயங்களை வெளிப்படுத்தி விடுகின்ற புல்லறிவாண்மையை உடையவனுமாகிய இவன்மீது பகைவர் பகைகொண்டு சென்று வெல்லுதல் மிகச் சுலபம் என்று கூறுவதால், அரசன் ஒருவன் பகைவரால் வெல்லப்படுவதற்கு இக்குற்றங்களும் காரணமாயின என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர் "ஒருவன் வலியிலனாதற்கு இன்னும் உள்ள குற்றங்களையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

865. வழிநோக்கான் வாய்ப்பன செய்யான் பழிநோக்
பண்பிலன் பற்ருர்க் கினிது. [கான்

(பரி.) இ-ள். வழி நோக்கான்—ஒருவன் நீதிநூலையோதான்,—வாய்ப்பன செய்யான் = அது விதித்ததொழில்களைச் செய்யான்,—பழி நோக்கான் = தனக்கு வரும் பழியைப் பாரான்,—பண்பு இலன் = தான் பண்புடையனல்லன்,—பற்ருர்க்கு இனிது = அவன் பகைவர்க்கு அப்பகைமையினிது. எ-று.

தொல்லோராடிப்பட்டு வழங்கி வந்ததாகலான் 'வழி' என்றும், தப்பாது

பயன்படுதலின் 'வாய்ப்பன' என்றும், இக்குற்றங்களுடையான் குணவழிதலிற் 'பற்றார்க் கெளிது' என்றுங் கூறினர். (௫)

விளக்கம்:—ஒருவன் உலகத்து உள்ள நீதிநூல்களைப் படியாதவனும், அந்நீதிநூல்கள் சொல்லிய வண்ணம் செய்ய வேண்டிய செயல்களைச் செய்யாதவனும், தான்செய்யும் காரியங்களால் தனக்கு வரும் பழியைப் பாராதவனும், தான் நற்குணமுடையவன் அல்லாதவனும் இருப்பானாயின், அவ்வித குற்றங்களுடையான் பகைமையானது அவனுடைய பகைவர்க்குமிக இனிமை உடையதாக இருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மேற்கூறிய நீதிநூல்களை ஓதாதிருத்தலும், செய்ய வேண்டுவனவற்றைச் செய்யாதிருத்தலும், செய்யக் கூடாதவற்றையே செய்தலும், அவ்விதம் செய்யக் கூடாதவற்றைச் செய்வ



தால் தனக்கு வரும் பழியை எண்ணாமையும் நற்குணங்களில்லாதவனாயும் ஒருவன் இருப்பானாயின், அவன் உலகத்தாரால் விரும்பப் படானென்றும் அவ்விதம் விரும்பப்படாதவனது வலிமையைத் தொலைத்து வெற்றிகொள்வது சுலபமென்றும், அவ்விதம் பல மற்றவனிடத்துப் பகையைக் கொள்ளுதல் பகைவர்க்குத் துன்பமாகத் தோன்றாது இன்பமாகவே காணப்படும், என்றும் அறிந்தோம். அதுவல்லாமலும் இவ்வித தீக்குணங்கள் உடையான் பகைவரால் அழிக்கப்படாது தானேயே அழிந்து போவான் ஆதலால் அவன் பகை பகைவர்க்கு இனிமை யென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இன்னும் மெலிவோனது குற்றங்களை எடுத்துக் காட்டல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

866. காணாச் சினத்தான் கழிபெருங் காமத்தான்
பேணாமை பேணப் படும்.

(பரி.) இ-ள். காணாச் சினத்தான் = தன்னையும் பிறரையுந் தானறியாமைக் கேதுவாகிய வெகுளியையுடையான் யாவன்,—கழிபெருங் காமத்தான் = மேன் மேல் வளராநின்ற மிக்க காமத்தையுடையான் யாவன்,—பேணாமை

பேணப்படும் = அவாது பகைமை விரும்பிக் கொள்ளப்படும். எ-று.

காணாத சினமென்பது விகாரமாயிற்று. முன்னோனுக்கு யாவரும் பகையாகலானும், ஏனோனுக்குக் காரியந் தோன்றாமையானும், தாமே அழிவரென்பது பற்றி, இவர் 'பேணாமை பேணப்படும்' என்றார். (௬)

விளக்கம்:—தன்னையும் மற்றவரையும் தான் அறியாதபடிச் செய்வதற்குக் காரணமாகிய கோபத்தை உடையான் ஒருவனும், மேன் மேல் அதிகரிக்கின்ற மிகுந்த காமத்தை உடையவனுமுள்ள ஒருவனும் ஆகிய இவரது பகைமையானது பகைவரால் விரும்பிக் கொள்ளப்படுவதாக உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோ வெனில்? தன் வலியும் மாற்றான் வலியும் அறியாவிதமாகத் தனக்கு உள்ள கோபத்தால் யாவருடனும் பகை கொள்வான் ஆதலால் அவ்வித கோபத்தை உடையானுக்கு எவருக்கும் பகை ஆவரென்றும், மங்கையர் மையலிலே மயங்கிக் காமத்தையே பொருளாகக் கொண்டவனுக்கு வேறு ஒரு காரியத்திலும்



அறிவு செல்லாது ஆதலால் அவனது பகைமையும் விரும்பிக்கொள்ளப்படும் என்றும், மெலிபோனது குற்றங்களை எடுத்துக்காட்டி முடிக்கின்ற இடத்தில் எதிர் முகமாகக் கூறுகின்ற கட்பிறுக்கு ஆதாரமாகிய வெகுளியையும், காமத்தையும் அறிவித்துவிட்டனர் ஆதலால், ஒருவன் அகம்புறமாகிய துணை வலியெல்லாம் கொண்டிருப்பனாயினும் கோபத்தையும் காமத்தையும் பொருளாகக்கொண்டு உலகத்து ஒழுகுவானாயின் பகைவரில்லாமலே அழிந்துபோவானென்றும் அவ்வித குறியுடையான் பகைமையை விரும்பிப் பகைவர் கொள்ளுதல் கூடுமென்றும் பகைமாட்சியின் திறத்தை அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இதுவரையும் யார் மீது பகைகொள்ளுதல் வேண்டும் என்பதை அறிந்தோம். இனி இவ்வித பகைவனைத் தனக்குப் பகையாகக் கொள்வதற்கு அரசன் ஒருவன் எதுசெய்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

867. கொடுத்துங் கொளல் வேண்டுமன்ற வடுத்திருந்து

மாணாத செய்வான் பகை.

(பரி.) இ-ள். அடுத்து இருந்து மாணாத செய்வான் பகை=வினையைத் தொடங்கியிருந்து அதற்கேலாதன செய்வான் பகைமையை—கொடுத்தும் கொளல் மன்ற வேண்டும்=சிலபொருள் அழியக் கொடுத்தாயினும் கோடல் ஒருதலையாகவேண்டும். எ-று.

ஏலாதன=மெலியனும் வைத்துத் துணிதலும், வலியனும் வைத்துத் தணிதலும் முதலாயின. அப்பொழுது அதனாற் சிலபொருளழியினும் பின் பலபொருளெய்தற்கு ஐயமின்மையின், 'கொளல் வேண்டுமன்ற' என்றார். இவை பாடபாட்டாலும் அது சிறப்புவகையாற் கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—ஒரு வினையைத் தொடங்கி அதற்கு வேண்டுவன வற்றைச் செய்யாது அவ்வினைக்குப் பொருந்தாத செயல்களைச் செய் பவன் ஒருவனது பகையைச் சிலபொருள் அழியும்படிக் கொடுத்தா யினும் கொள்ளுதல் மிக முக்கியமாம் என்று இத்திருக்குறள் கூறு கின்றது. அதாவது, அறிவிலாத ஒருவன் தான் எடுத்த காரியத் தைச் செய்யும் காலத்து அக்காரியத்திற்கு வேண்டுவனவாகிய செயல்களை எல்லாம் செய்து அதனை முடிக்காது தனது அறிவின்



மையால் தான் எடுத்த காரியத்திற்குப் பொருந்தாதனவுள்ள செ யல்களை எல்லாம்செய்து அதனை அழித்துவிடுவர் ஆதலால் அவ்வித அறிவில்லாதார் பகைமையை முதலில் சில பொருள் செலவழித் தாயினும் கொள்ளல் வேண்டும் என்றும், அவ்வித பகைமையால் தான் பின்னர் பெரும் பொருள் அடைதல் கூடுமாதலால் அவ்வறி விலாதவன் பகையைக் கொள்ளுதல் கூடுமென்றும் அறிகின்றோம். அது என்னையோ வெனில்? அறிவில்லாதான் செய்கின்ற காரியமா னது தான் வலியனாக இருந்தும் தன்னை மெலியன்போல் எண்ணி அஞ்சுதலும் தான் மெலியனாக இருந்தும் தன்னை வலியவனென்று எண்ணித் துணிந்து செல்லுதலும் ஆகிய பொருந்தாத செயல் களாக இருக்கும் ஆதலால் அவனது பகையால் அவனை வெற் றிக் கொள்வது திண்ணமென்று, முதற்திருக்குறளில் கூறிய

படி அவ்விதமெளியவனது பகையை விலைகொடுத்தும் வாங்குதல் வேண்டும் என்று அறிந்தோம் என்றனர். அதைகேட்ட மாணுக்கர், "ஏன் அறிவிலாதவன் 'பகைவரால் தோற்கடிக்கப்படுகின்றான்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

868. குணனிலனாய்க் குற்றம் பலவாயின் மாற்றார்க்
கினனிலனா மேமாப் புடைத்து.

(பரி.) இ-ள். குணன் இலனாய்க் குற்றம் பலவாயின் இனன் இலனாம் = ஒருவன் குணமொன்று மிலனாய் உடைய குற்றம் பலவாயவழி, அவன் துணை யிலனாம்;— மாற்றார்க்கு ஏமாப்பு உடைத்து = அவ்விலனாதல்தானே அவன் பகைவர்க்குத் துணையாதலையுடைத்து. எ-று.

குணம் = இறைமாட்சியுட் சொல்லியன. குற்றம் = இவ்வதிகாரத்துச் சொல்லியனவும் மற்று மத்தன்மையனவும். துணை = சுற்றம், நட்பு, பொருள், படை முதலியன. பகைவர்க்கு இவற்றானாம் பயன்றானே யுண்டாமாகலின், 'ஏமாப்புடைத்து' என்றார். இலனா மென்னுஞ் செய்தெனெச்சம் உடையவென வந்த பெயரெச்சக்குறிப்புக்கொண்டது. (அ)

விளக்கம்:— ஒருவன் குணம் ஒன்றுமில்லாதவனாய், பல குற்றங்களை உடையவனாயிருப்பானாயின் அவனுக்குத் துணை என்பது இல்லாமற் போமென்றும், அவ்விதம் துணையில்லாமற் போதலே அவனது பகைவர்க்குப் பல துணைவலி வந்து சேர்ந்ததுபோலாகும்

என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, இறைமாட்சி என்னும் அதிகாரத்தில் அரசனுக்குக் கூறிய தூங்காமை, கல்வி, துணிவுடைமை ஆகிய நற்குணங்களில்லாமையும், இவ்வதிகாரத்தில் கூறுகின்ற வெகுளி, உலோபத்தனம் முதலிய குற்றங்கள் உடைமையும் ஒருவனுக்கு இருக்குமாயின் அவனிடத்திற் சுற்றத்தவர், நட்பினர், பொருள், படை முதலியவை பொருந்தாவென்றும், இவ்வித துணைப்பலங்கள் இல்லாத காலத்துப் பகைவர்க்கு மிகுந்தநேர பயன் உண்டாகித் துணை அதிகரிக்குமென்றும், ஆதலால் ஒருவனது அறியாமையே அவன் பகைவனுக்குத் துணையாய் நின்று பயனைத் தருவதால் பகைவன் வெற்றி அடைகின்றான் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அறிவில்லாமையானது பகைவர் வெல்வதற்கு உபாயமாக உள்ளது என்பதை அறிந்தோம். இவ்வித அறிவில்லாத அரசனின் பகையைக் கொண்ட அரசன் தாம் பகையைச் சாதிக்கின்ற காலத்துத் துன்பத்தோடு சாதிக்கவேண்டும் போலும்!" என்னவும், ஆசிரியர் கூறலாயினர்.

869. செறுவார்க்குச் சேணிகவா வின்ப மறிவிலா
வஞ்சும் பகைவர்ப் பெறின்.

(பரி.) இ-ள். அறிவு இலா அஞ்சும் பகைவர்ப் பெறின் = நீதியையறித லில்லாத அஞ்சும் பகைவரைப் பெற்றால், — செறுவார்க்குச் சேண் இன்பம் இகவா = அவரைச் செறுவார்க்கு உயர்ந்த இன்பங்கள் நீங்கா. எ-று.

உபாயமறிதலும் அஞ்சாது செய்துமுடிக்கும் திண்மையு மில்லாதாரே பகைவராதல் கூடாமையிற் 'பெறின்' என்றும், அவரையறிந்து மேற்சென்ற பொழுதே பகையின்மையுஞ் செல்வமும் ஒருங்கெய்தலிற் 'சேணுடை யின்பங்கள் இகவா' என்றும் கூறினர்.

(௯)

விளக்கம்:—உலக நீதியை அறியாதவரும், அஞ்சக் கூடாதவற்றிற்கு அஞ்சுபவரும் ஆகிய பகைவரைப் பெற்றால் அவ்வித பகைவரை வெற்றிகொள்ள எளிதில் செல்லுகின்ற பகை அரசர்க்கு மிகவும் உயர்ந்த இன்பங்கள் எக்காலத்தும் உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், செய்யவேண்டிய உபாயம் அறிவதற்கு அறியாதவர்களையும், உபாயத்தை அறிந்து செய்து முடிக்கும் வலிமை இல்லாதவரையும் ஒருவர்க்குப் பகை



வர் கிடைப்பது மிக அருமை என்றும், அவ்விதம் நூல் கேள்வி அறிவில்லாத பகைவர் கிடைப்பாராயின் அப்பகைவர் மீது சென்ற வெற்றிப்பகை அரசர், யுத்தத்திற்குச் சென்ற காலத்திலேயே அவரிடத்திருந்த பகை ஒழிந்து போதற்குக் கூடிய வெற்றியையும் அவரிடத்தே இருந்த செல்வங்களையும், ஒரே காலத்து அடையக் கூடிய வல்லமையையும் அடைவார்களாதலால் வெற்றி கொண்டவர்க்கு நீங்காத பெரியதோர் இன்பம் அவர்க்கு உண்டாகும் என்றும் அறிந்தோம். ஆதலால், அறிவில்லாதார் கொள்ளுகின்ற பகை இன்பம் தாராது அவர்க்குத் துன்பத்தையே தரும் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் நீதி அறியாதவனிடத்துப் பகைகொண்டு வெல்லுதல் வேண்டுமோ? அறிவிலாதவனென்று விட்டுவிடுதல் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

870. கல்லான் வெகுளுஞ் சிறுபொரு ளெஞ்ஞான்று
மொல்லானை யொல்லா தொளி.

(பரி.) இ-ள். கல்லான் வெகுளும் சிறுபொருள் ஒல்லானை = நீதிநூலைக் கல்லாதானொடு பகைத்தலான் வரும் எளியபொருளை மேவாதானை — எஞ்ஞான்றும் ஒளி ஒல்லாது = எஞ்ஞான்றும் புகழ் மேவாது. எ-று.

சிறுபொருள் = முயற்சி சிறிதாய பொருள். நீதியறியாதானை வேறல் எளிதாயிருக்கவும் அதுமாட்டாதானை வெற்றியான் வரும் புகழ் கூடாதென்ப

தாம்; ஆகவே, இச்சிறிய முயற்சியாற் பெரிய பயனெய்துக வென்றவாறா யிற்று. இதற்குப் பிறரெல்லாம் அதிகாரத்தோடு மாறுதன்மேலும் ஓர் பொருட்டொடர்பு படாமலுரைத்தார். இவை மூன்று பாட்டானும் அதனா லாய பயன் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—உலகத்துக் கூறும் நீதி நூல்களைப் படியாதவ னோடு பகைத்து அதனால் வருகின்ற எளியதோர் பொருளை அடை யாத அரசன் ஒருவனை எக்காலத்தும் புகழ் அடையாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நீதி நூல் அறியாதவனை வென்று வெற்றி கொள்வது மிக எளிமையாக இருக்கவும் அவ் வெளிமையாகிய காரியத்தைச் செய்து அதனால் அடைகின்ற என்றுமுள்ள புகழை அடையாமல் போதல் கூடாதென்றும், சிறு முயற்சி செய்து பெரும் பொருளாகிய புகழை அடைவது அர



சர்க்குத் தருமமென்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக் கர், "மேற்கூறிய மூன்று திருக்குறள்களாலும் பகைமாட்சி என் பதனால் அடையக் கூடும் பயன் இது என்பதை அறிந்தோம். இனிப் பகைவருடைய திறங்களைத் தெரிந்து அரசன் அடையவேண் டிய பலன் எவ்விதம், என்பதையும் விளக்கல் வேண்டும்" என்ன லும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 88. அதிகாரம்.

---

## பகைத்திறந்தெரிதல்.

(பரி.) அஃதாவது மாணாத பகையை ஆக்குதற் குற்றமும், முன் ஆகி நின்ற பகையுள் நட்பாக்கற் பாலதும், நொதுமலாக்கற்பாலதும், அவற்றின் கட் செய்வதும், இளைக்கினைதற்பாலதன்கட் செய்வனவும், களையும் பருவ மும், களையாக்காற்படுமிழுக்கும் என்ற இத்திறங்களை ஆராய்தல். இரட்டுற மொழிதலென்பதனாற் பகையது திறமும் பகையிடத்தாக்குந் திறமுமென விரிக்கப்பட்டது. இவையெல்லாம் மாணாப் பகையாகலின், இது பகை

மாட்சியின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, மாட்சிமைப் படாத பகையினைப் பகையாக ஆக்குகின்ற குற்றமும், முன்னமே பகையாகி நின்ற பகையுள் நட்பாக்கக் கூடியதும், நட்புமில்லாது, பகையுமில்லாது நடுவாக்கக் கூடியதும், அப் பகையினிடத்தே செய்யக் கூடியதைச் செய்வதும், களையக் கூடியதைக்களைவதும், இவ்விதம் களையும் காலத்துக் களையக் கூடிய பருவத்தை நோக்குதலும், அவ்விதம் பகையினைக் களையாதவிடத்து உண்டாகும் குற்றத்தினையும் ஆகிய இத்திறங்களை அறிந்து தெரிதலே பகைத் திறந்தெரிதல் என்பதாகும். மேற்கூறியவைகளெல்லாம் மாட்சிமைப் படாத பகை ஆதலால் அதைத் தெரிதலைக் கூறும் இவ்வதிகாரம் பகைமாட்சி என்னும் அதிகாரத்துக்குப் பிறகு வைக்கப்பட்டு உள்ளது என்று கூறினர். அதுகேட்ட மாணாக்கர், "பகைமாட்சிக்குப்பின் பகைத்திறந் தெரிதலென்பதைக் கூறுவதால் பகையென்பது விரும்பக் கூடியதொன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

## பகைத்திறந்தெரிதல் 517

871. பகையென்னும் பண்பி லதனை யொருவ
னகையேயும் வேண்டற்பாற் றன்று.

(பரி.) இ-ள். பகை என்னும் பண்பு இலதனை = பகையென்று சொல்லப்படும் தீமை பயப்பதனை — ஒருவன் நகையேயும் வேண்டற்பாற்று அன்று = ஒருவன் விளையாட்டின்கண்ணேயாயினும் விரும்புதலியற்கைத் தன்றென்று கூறும் நீதி நூல். எ-று.

மாணாதபகையை யாக்கிக்கோடல் பண்பாற்றுணுந் தீமையே பயத்தலின் 'பண்பிலது' என்றும், அதனை விளையாட்டின்கண் வேண்டினுஞ் செற்றமே விளைத்து மெய்யாமாகலின் 'நகையேயும்' என்றும், வேண்டாமை தொல்லையோரது துணிவென்பார் நீதிநூல்மேல் வைத்துங் கூறினார். அப்பெயர் அவாய் நிலையான் வந்தது. (௧)

விளக்கம்:—பகையென்று சொல்லப்படுகின்ற தீமை செய்யக் கூடிய ஒன்றினை ஒருவன் விளையாட்டுக்காகவும் விரும்புதல் ஆகாதென்று நீதிநூல் கூறுகின்றது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால்,மேல் அதிகாரத்தில் மாட்சிமை கொண்ட பகையைப் பகை

ராக்கிக் கொண்டு வெற்றியை அடைந்து அவ்வெற்றியால் ஆகிய புகழை அடையக்கூடிய உபாயத்தை அரசர்க்குக் கூறினோரும் இவ்வதிகாரத்துள் கொள்ளக் கூடாத பகையைக் கொண்டு அப் பகையால் தீமையை அடைவது குணமுடையது அல்லவென்றும், அவ்வித குணமில்லாத ஒன்றினை விளையாட்டிற்காக ஒருவன் கொண்டானாயினும் அவ்விளையாட்டே வினையாய் முடிந்து தீமை உண்டாவது உண்மையாக முடியுமென்றும், விளையாட்டிற்கும் கொள்ளக்கூடாத பகையைக் கொள்ளுதல் ஆகாதென்று நீதிநூல் எல்லாம் கூறுகின்றதென்றும் கூறியதாக அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "மாட்சிமையுடைய பகையென்றும், மாட்சிமை இல்லாத பகையென்றும் அறிந்துகொள்வதற்குச் சிறிது வகுத்துக் காட்டுதல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

872. வில்லே ருழவர் பகைகொளினுங் கொள்ளற்க
சொல்லே ருழவர் பகை.

(பரி.) இ-ள். வில் ஏர் உழவர் பகை கொளினும்=ஒருவன் வில்லை



ஏராகவுடைய உழவரோடு பகைகொண்டானாயினும்,—சொல் ஏர் உழவர் பகை கொள்ளற்க=சொல்லை ஏராகவுடைய உழவரோடு பகை கொள்ளாதொழிக.

சொல்—ஆகுபெயரான் நீதிநூன்மேனின்றது. வீரம் சூழ்ச்சியென்னும் ஆற்றல்களுள் வீரமேயுடையாரோடு பகைகொண்டாற் கேடுவருதல் ஒருதலையன்று, வந்ததாயினும் தனக்கேயாம், ஏனைச் சூழ்ச்சி யுடையாரோடாயிற் றன் வழியி லுள்ளார்க்குந் தப்பாது வருதலின், அது கொள்ளினும் இது கொள்ளற்க வென்றார். உம்மையான் அதுவுமாகாமை பெறுதும். இரண்டுமுடையாரோடு கொள்ளலாகாமை சொல்லவேண்டாவாயிற்று. உருவகவிசேடம். (உ)

விளக்கம் :—ஒருவன் வில்லினைத் தமக்கு ஏராக உடைய வீரரோடு பகை கொள்ளினும் சொல்லை ஏராக உடைய புலவரோடு பகை கொள்ளுதல் ஆகாதென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் உலகத்து வீரமென்னும் வல்லமையுடையவர்

கள் என்றும், சூழ்ச்சி என்னும் ஆராய்தலென்ற வல்லமை யுடையவர்கள் என்றும், ஆகிய இவ்விரண்டு பிரிவினுள் வீரமுடைய பகைவராகிய வில்லாளிகளுடன் பகைகொள் ளின் அதனால் தனக்குக் கெடுதி வருதல் அவ்வளவு நிச்சயமில்லை என்றும், ஓர் கால் கெடுதி வருமாயினும் அக்கெடுதி தன்னோடு ஒழிந்து போமென்றும், ஆனால் சூழ்ச்சி உடையாரென்னும் நால் வல்லவரோடு பகை கொண்டால் அப்பகையால் கேடு வருதல் நிச்சயமென்றும், அக்கேடு தன்னோடு ஒழியாது தன்சந்ததியா ருக்கும் தப்பாது வந்து சேருமென்றும், ஆதலால் மாட்சிமைப் படாத பகைகளுள் புலவர் பகை முக்கியமென்றும் கூறியதாக அறிந்தோம். ஆனால், வீரனது பகையும், புலவனது பகையும் ஆகிய இரண்டையும் கொள்ளுதல் ஆகாது எனினும், புலவன் பகை பெரிதோர் தவறு உடையதென்பது இதனால் பெறப்படுகின்றது. இதனைப் பாண்டியனுக்கும் கம்பருக்கும் நடந்த கதையே நன்கு அறிவிக்கும்.

"வில்லம்பு சொல்லம்பு மேதினியி லிரண்டுண்டு
வில்லம்பிற் சொல்லம்பே மேலதிகம்—வில்லம்பு
பட்டதடா என்மார்பிற் பாண்டியா! நின்குலத்தைச்
சுட்டதடா என்னுடைய சொல்."

என்பதனாலேயே அறிதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணுக்கர்,



"இவ்விதம் பலரிடத்தும் பகை கொள்ளும் அரசனை உலகத்தவர் என்னென்று கருதுவர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

873. ஏமுற் றவரினு மேழை தமியனாய்ப்
பல்லார் பகைகொள் பவன்.

(பரி.) இ-ள். தமியனாய்ப் பல்லார் பகைகொள்பவன் = தான் தனியனாய் நின்று பலரோடு பகைகொள்வான்—ஏமுற்றவரினும் ஏழை = பித்துற்றா ரினும் அறிவிலன். எ-று.

தனிமை = சுற்றம், நட்பு, படை முதலிய இன்மை. மயக்கத்தால் ஒப் பாராயினும் ஏமுற்றவர் அதனாற் றீங்கெய்தாமையின், தீங்கெய்துதலு

முடைய இவனை 'அவரினும் ஏழை' என்றார். நீங்காவது:— தனிமையுள்வழியும் வேறல் ஐயமாயிருக்க அஃதின்றியும் பலரோடு பகைகொண்டு அவரால் வேறு வேறு பொருதற்கண்ணும் ஒருங்கு பொருதற்கண்ணும் அழிந்தே விடுதல். இவை மூன்று பாட்டானும் பகைகோடற்குற்றம் பொதுவாகவும் சிறப்பாகவும் கூறப்பட்டன. (௩)

விளக்கம்:—தான் தனியனாக இருந்துகொண்டு பலரோடும் பகை கொள்வான் ஒருவன் பயித்தியம் கொண்டவர்களைக் காட்டிலும் அறிவில்லாதவன் ஆவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, சுற்றத்தவர், நட்பினர், நான்குவித படை ஆகிய ஓர்வித பலமுமில்லாத ஒருவன் பலரோடும் பகை கொண்டு அப் பகைவர்களோடு தனித் தனியாகப் போர் செய்தும், பலர் ஒன்றுகூடி இருந்தகாலத்துப் போர் செய்தும், தனக்குத் துணை வலி இருந்த காலத்தும் வெல்வது சந்தேகமாக இருக்கத் துணையில்லாமலே இவ்வாறு செய்யின் அவன் பித்தத்தின் மிகுதியால் தம் அறிவு மயங்கிப் பயித்தியம் கொண்டவரோடு ஓர்வித சமானம் உடையவன் என்றும், பின்னர் அப்பயித்தியம் கொண்டவர் தமக்குத் தீங்கு அடைதல் இல்லாதவராயிருப்பதால் அவர்களோடு ஒப்புமை சொல்லிய இவ்வறிவிலாதவன் தனக்குத் தீங்கு தேடிக் கொள்ளுதலால் அப்பயித்தியக் காரரினும் இவன் அறிவில்லாதவனாயிருக்கின்றான் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மேற்கூறிய மூன்று திருக்குறள்களானும் பகையின் திறமறியாது பகைகொள்ளுதலின் குற்றம் இதுவென்று



பொதுவாகவும், சிறப்பாகவும் தெரிந்து கொண்டோம். இனிப் பகைவரைத் திறமறிந்து நட்பாக்கிக் கொள்ளும் தகுதியையும் உணர்த்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

874. பகைநட்பாக் கொண்டொழுகும் பண்புடை யாளன்
றகைமைக்கட் டங்கிற் றுலகு.

(பரி.) இ-ள். பகை நட்பாக்கொண்டு ஒழுகும் பண்புடையாளன் தகை

மைக்கண் = வேண்டியவழிப் பகையை வேறுபடுத்துத் தனக்கு நட்பாகச் செய்துகொண்டொழுகும் இயல்பினையுடைய அரசனது பெருமையுள்ளே — தங்கிற்று உலகு = அடங்கிற்று இவ்வுலகு. எ-று.

வேண்டியவழியென்பது ஆக்கத்தான் வந்தது. வேறுபடுத்தல் = பகைநிலைமையின் நீக்குதல். ஒழுகல் = நீதிவழியொழுகல். பெருமை = பொருள், படையென இருவகைத்தாய ஆற்றல். அதன்வழித்தாதற்கு எஞ்ஞான்றும் திரிபின்மையின், அத்துணிவுபற்றித் 'தங்கிற்று' என்றார். (௪)

விளக்கம்:—தனக்கு வேண்டிய காலத்துத் தன் பகைவரிடத்தே தனக்கிருந்த பகைமையை மாறுபடும்படிச் செய்து, தனக்கு அவர்களை நட்பினராகச் செய்து கொள்ளக்கூடிய இயற்கை அறிவினையுடைய அரசன் ஒருவனது பெருமையாகிய வல்லமையினுள் இவ்வுலகம் அடங்கி உள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது? பகைமையை நட்பாக்கிக்கொள்ளும் காலம் வந்த காலத்து அறிவுடைய அரசன் ஒருவன் தனக்கு அவரிடத்து உள்ள பகைமையை நீக்கி நட்புக்கொண்டு அவர்க்கு வேண்டுவன யாவும் செய்து தானும் நீதியோடு நடப்பானாயின் அவ்வித பொருளானும் படையானும் வல்லமை கொண்ட அவன் பெருமையுள் உலகத்தார் வாழ்வார். ஏனெனின்? இவ்வித அறிவும் ஆற்றலும் உடைய அரசன் ஒருவன் குடைக்கீழ் தங்கின் எக்காலத்தும் யாதொரு வேறுபாடும் இல்லாது வாழ்தல் கூடும் என்னும் துணிபால் அவன் குடை நிழலில் வாழ்வார்களென்று அறிக்கோமென்றனர். அது கேட்ட மாணாக்கர் "பகைமையை நட்பாக்கிக்கொள்ளும் குணமுடைய அரசனைக் குடிகள் மகிழ்வார்கள் என்று அறிந்தோம். அவ்விதம் பகைவரை நட்பாக்கிக் கொள்ளும் விதம் எது என்பதையும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



875. தன்றுணை யின்றாற் பகையிரண்டாற் றானொருவ
னின்றுணையாக் கொள்கவற்றி னொன்று.

(பரி.) இ-ள். தன்றுணை இன்று = தனக்குதவுந் துணையோவெனின்

இல்லை,—பகை இரண்டு=வலிசெய்யும் பகையோவெனின் இரண்டு,— ஒருவன் தான் அவற்றின் ஒன்று இன்றுணையாக் கொள்க=அங்ஙனமாய் நின்ற வழி ஒருவனாகிய தான் அப்பகையிரண்டனுள் பொருந்தியதொன்றை அப்பொழுதைக்கு இனிய துணையாகச் செய்துகொள்க. எ-று.

பொருந்தியது=வினையதனை வேறற்கு ஏற்பது. அப்பொழுது=அச் செல்லும்பொழுது. பிரிபின்றாகச் செய்து கொள்கவென்பார், 'இன்றுணையா' என்றார். ஆல்கள் அசை. இவை யிரண்டுபாட்டானும் நட்பாக்கற்பாலது கூறப்பட்டது. (௫)

விளக்கம் :—உலகத்தில் தனக்கு யாதொரு துணையுமில்லாமல் நிற்கின்ற ஒருவன் தன்னை இரண்டு பகைவர்கள் துன்பம் செய்ய வரும் காலத்துத் தன்னை எதிர்த்து வந்த பகைவர் இருவருள் தன்னோடு சேரக்கூடிய பொருத்தமாகிய பகை ஒன்றினை அப்போதைக்குத் தனக்கு இனிய துணையாகச் செய்துகொள்ளல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், துணையில்லாத ஒருவன்மீது இருவர் பகைகொண்டு போர் செய்யத் தொடங்கிய காலத்து அது அறிந்த அவன் அறிவுடையவனாயிருப்பானாயின் எப்படையினைத் தன்னோடு உறவாக்கிக் கொண்டால் மற்றொரு பகைவனைச் சுலபமாக வென்று விடலாம் என்று அறிந்து ஒரு பகைவனைத் தனக்குத் துணையாக்கிக் கொள்ளல் வேண்டுமென்றும், அவ்விதம் துணையாக்கிக்கொள்வதால் மற்றொரு பகைவனை வெல்லுதற்கு எளிதாக இருக்குமென்றும் பகையை நட்பாக்கிக் கொள்ளும் உபாயத்தினைக் கூறுகின்றனர் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பகையை நட்பாக்குவது அறிந்தோம்; ஆயின், பகைவரிடத்துப் பகையும் நட்பும் ஆகிய இரண்டுமல்லாது நொதுமல் என்னும் நடுவாக உள்ளதைக் கொள்ளுதலாகாதோ ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.





876. தேறினுந் தேறா விடினு மழிவின்கட்
டேறான் பகாஅன் விடல்.

(பரி.) இ-ள். தேறினும் தேறாவிடினும் = பகைவனை முன் தெளிந்தா னாயினும் தெளிந்திலனாயினும் — அழிவின்கண் தேறான் பகான் விடல் = தனக்குப் புறத்தொருவினையால் தாழ்வு வந்தவழிக் கூடாது நீக்காது இடையே விட்டுவைக்க. எ-று.

முன் தெளிந்தானாயினும் அப்பொழுது கூடாதொழிகவென்றது, உள் ளாய்நின்று கெடுத்தலை நோக்கி. தெளிந்திலனாயினும் அப்பொழுது நீக்கா தொழிகவென்றது, அவ்வழிவிற்குத் துணையாதலை நோக்கி. இதனான் நொதும லாக்கற்பாலது கூறப்பட்டது. (௬)

விளக்கம் :—அறிவுடைய அரசன் ஒருவன் தன் பகைவனை முன் அவன் தகுதி அறிந்தும் அறியாதும் இருந்தானாயினும் தனக் குத் தான் எடுத்த வேறொரு காரியத்தால் ஒரு தாழ்வு வருவதாக இருக்குமாயின் அவனோடு கூடாதும், அவனை நீக்கி வேறுபடுத்தா தும் நடுவாகவிட்டு வைத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், அறிவுடையான் ஒருவன் ஒருவனைத் தனக் குப் பகைவனென்று அறிந்திருந்தாலும் தனக்குத் துணையில்லாத காலத்து அப்பகைவனைப் பகைத்துக் கொள்வானாயின் அவன் உள் ளுக்குள்ளாய் நின்று கெடுத்துவிடுவான் ஆதலால் அவனைப் பகை யென்று நீக்குதல் கூடாதென்றும், பகையென்று முன்னமே தெரி யாதவிடத்தும் பகைவன் தன்னோடு கூட வருவானாயின் அவனோடு கூடாதிருந்து அவனை நீக்காததுபோல் இருத்தல் வேண்டுமென் றும் அறிந்தோம். இவ்விதம் நட்பும் பகையுமில்லாத பகைவரை நொதுமலென்றும் நடுநிலையில் வைத்துக் கொண்டிருக்கின், தனக் குத் துணையில்லாத காலத்துத் துன்பமற்று இருத்தல் கூடுமென் றும், துணை வந்த காலத்துப் பகையைத் தீர்த்துக் கொள்ளலா மென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பகை வனிடத்து நொதுமலன்போல் உள்ள செயல்களை அறிந்து கொண்டோம். இனி, பகைவனிடத்தும் நட்பினரிடத்தும் செய்ய வேண்டுவது எவை என்பதையும் அறிவித்தல் வேண்டும்" என்ன லும், ஆசிரியர் கூறலாயினர்.

**877.** நோவற்க நொந்த தறியார்க்கு மேவற்க
மென்மை பகைவ ரகத்து.

(பரி.) இ-ள். நொந்தது அறியார்க்கு நோவற்க=நொந்ததனைத் தாமாக அறியாத நட்டார்க்குத் தன்னோவு சொல்லற்க;—மென்மை பகைவரகத்து மேவற்க=வலியின்மை பார்த்திருக்கும் பகைவர்மாட்டு அவ்வலியின்மையை மேவிட்டுக் கொள்ளற்க. எ-று.

நோவென்னும் முதனிலைத்தொழிற்பெயர் ஈண்டு அது சொல்லுதற்கு ஆயிற்று. பகைவர்கட் டவிர்வது கூறுவார், நட்டார்கட் டவிர்வதும் உடன் கூறினார். இதனால் அவ்விருபகுதிக்கண்ணுஞ் செய்வது கூறப்பட்டது. (எ)

விளக்கம் :—அறிவுடையான் ஒருவன் தனக்கு வந்த துன்பத்தினைத் தன்னுடைய நட்பினர் தாமாகவே அறிந்துகொள்ளாத காலத்துத் தானேசென்று தன் நட்பினர்க்குத் தனக்கு வந்த துன்பத்தைச் சொல்லுதல் கூடாதென்றும், தனக்கு எக்காலத்து வலிமை ஒடுங்கும் என்று எதிர்பார்த்திருக்கும் பகைவரிடத்து அவ்வலி இல்லாமையை அவர்மாட்டுத் தெரிவித்துக்கொள்ளாதிருத்தல் வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, 'தோழனோடும் ஏழைமை பேசேல்' என்ற வாக்கியத்தின்படி நட்பினனாயினும் அவன் தன்னுடைய துன்பத்தை அறிந்துகொண்டு வருவதற்கு முன் தன்னுடைய துன்பத்தை அவனிடம் சொல்லிக் கொள்ளுவானாயின் தன்னிடத்திருந்த மதிப்பு அவனுக்குக் குறைந்து விடுமாதலால் அவ்விதம் போய்ச் சொல்லிக் கொள்ளுதல் கூடாதென்றும், பகைவனானவன் எப்போது தன் பகைவனுக்கு வலிமை குறையும் என்றும், அவ்விதம் குறைந்த காலத்து மேல் சென்று தாக்குவோம் என்றும் இருக்கும் காலத்துத் தானே

சென்று தனக்குள்ள வலிமைக் குறைவினை அவன் தெரிந்துகொள்ளச் செய்வானாயின் அச்சமயம் அறிந்து அவன் சுலபமாக வந்து விடுவான் ஆதலால் தனக்கு உள்ள பலமின்மையைப் பகைவர் அறியும்படிச் செய்தல் கூடாது என்றும், நட்பினரிடத்துச் செய்ய வேண்டுவதையும், பகைவரிடத்துச் செய்யவேண்டுவதையும் இரண்டையும் ஒன்றாகக் கூறிவிட்டனர் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நட்பினர் பகைவ



ராகிய இருவரிடத்தும் செய்யவேண்டுவன இவையென்று அறிந்தோம். அறிவுடைய ஒருவன் எவ்வித தகுதியோடு இருந்து தன் பகைவர் செருக்கை அடக்குதல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

878. வகையறிந்து தற்செய்து தற்காப்ப மாயும்
பகைவர்கட் பட்ட செருக்கு.

(பரி.) இ-ள். வகை அறிந்து தற்செய்து தற்காப்ப=தான் வினைசெய்யும் வகையை அறிந்து அது முடித்தற்கேற்பத் தன்னைப் பெருக்கி மறவி புகாமற் றன்னைக்காக்கவே,—பகைவர்கண் பட்ட செருக்கு மாயும்=தன் பகைவர் மாட்டுளதாய களிப்புக் கெடும், எ-று.

வகை=வலியனாயத் தானெதிரே பொருமாறும், மெலியனாயவழிப் போர் விலக்குமாறும் முதலாயின. பெருக்கல்=பொருள் படைகளாற் பெருகச்செய்தல். களிப்பு=இவற்றான் வெறுமென்றெண்ணி மகிழ்ந்திருத்தல். இவ்விருதலறிந்து தாமே அடங்குவரென்பதாம். இதனாற் களைதற்பால தன்கட் செய்வன கூறப்பட்டது. (அ)

விளக்கம் :—அறிவுடைய அரசன் ஒருவன் தான் செய்ய வேண்டிய தொழிலையும் அத்தொழிலின் வகையினையும் நன்றாக அறிந்து அத்தொழிலினை முடித்தற்குக் கூடிய அளவாகத் தன்னை செல்வத்தால் பெருக்கி மறதி என்பதே உண்டாகாமல் காத்துக் கொள்ளுவானாயின், அவனுடைய பகைவர்கொண்டிருந்த மகிழ்ச்சியானது மாய்ந்து கெட்டுப் போய்விடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னையோ வெனின்? மேற்கூறிய அள

வாகவே தன் வலியும், மாற்றான் வலியும், துணைவலியும் ஆகிய
வலிமைகளெல்லாம் முன்னர் தெரிந்து பின்னர் தான் எடுத்த காரி
யத்தின் தொழிலின் தன்மையை நன்றாக அறிந்து, அது செய்யும்
விதத்தையும் நன்றாகத் தெரிந்து அதைமுடித்தற்கு உரிய உபாயங்
களும் தன்னை அதிகமாக்குவதற்குப் பொருள் படை முதலிய
செல்வங்களையும் ஆக்கிக் கொண்டு பிறகு எடுத்த காரியத்தைச் சிறி
தும் மறதி என்பதே இல்லாமல் செய்து இவ்வழியால் தன்னைக்
காத்துக் கொள்வானாயின், அவ்வித அறிவுடைய ஒருவனைக் கண்ட
அவன் பகைவர் தாம் கொண்டிருந்த மகிழ்ச்சியினின்றும் மனத



படுவர். அதாவது, தான் எடுத்த தொழிலில் தான் வல்லவனாக
இருந்தால் தானே சென்று யுத்தம் செய்வதும், தன்னினும் பகை
வன் வலியனாயிருப்பானாயின் அவனிடத்துப் போர் செய்யாது
விலக்கிக் கொள்ளுதலும் ஆகிய இவற்றினை அறிந்து ஒருவன்
செய்வானாயின், அதனை அறிந்த பகைவர் இவ்வித தகுதி யுடை
யானை வெல்லுதல் கூடாது என்று தாமே அறிந்து அடங்கிவிடு
வர் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பகை
வரை அடக்கும் விதம் இதுவென அறிந்தோம். ஆயின், எக்கா
லத்துப் பகைவரை அடக்கிவிடுவது சுலபமாக இருக்கும் என்பதை
யும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

879. இளைதாக முண்மரங் கொல்க களையுநர்
கைகொல்லுங் காழ்த்த விடத்து.

(பரி.) இ-ள். முள் மரம் இளைதாகக் கொல்க — களையவேண்டுவதாய
முள் மரத்தை இளைதாய நிலைமைக்கட் களைக ; — காழ்த்தவிடத்துக் களையு
நர் கைகொல்லும் = அன்றியே முதிர்ந்த நிலைமைக்கட் களையலுறிற் களைவார்
கையினை அதுதான் களையும். எ-று.

களையப்படுவதாய தம்பகையை அது மெலிதாய காலத்தே களைக : அன்
றியே வலிதாயகாலத்துக் களையலுறிற் றம்மை அதுதான் களையுமென்பது
தோன்ற நின்றமையின், இது பிறிதுமொழிதல். இதனாற் களையும்பருவம்
கூறப்பட்டது. (௯)

விளக்கம் :—ஒழித்துவிட வேண்டியதாகிய முள்ளொடு கூடிய மரங்களை அவற்றின் இளமைப் பருவத்திலேயே ஒழித்துவிடுதல் வேண்டும் என்றும், அவ்விதம் செய்யாது அம்முள் மரங்கள் முற்றி வயிரம் கொண்ட விடத்து அவற்றை ஒழிக்கப் புகுந்தால் வெட்டப் போகின்றவர் கையை அவை வெட்டிவிடும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நகத்தால் கிள்ளி விடும் செடி ஒன்றினை மரமாகவிடின் பிறகு கோடாலி (கோடரி) கொண்டு வெட்டுதல் வேண்டும் என்னும் பழமொழிப்படி மனி தர்க்கு இடையூறு செய்யும் முள்ளொடு கூடிய மரங்களை அவை தோன்றும் போதே அழித்து விடுவது வெகு சுலபமாக இருக்கவும் அவ்விதம் செய்யாது அவை முதிர்ந்து வயிரம் அடைந்த காலத்து அவற்



றைக் களையப் புகின் களைகின்றவர் கைகளில் காயம் முதலியவைகள் உண்டாகித் துன்பப்படுவதுபோல், பகைவரானவரை அவர் மெலிய ராயிருக்கும் காலத்தேயே தலை எடுக்க வொட்டாமல் தடுத்தல் வேண்டு மென்றும், அவ்விதம் அல்லாது அவர்கள் பொருள், படை முதலிய ஆற்றல்களைக் கொண்ட பிறகு அவரை அழிக்கப்புகின் மிகுதியும் துன்பம் கொடுத்து அழிக்கச் சென்ற அரசன் உயிர்க்கும் இறுதி யைத் தருமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக் கர், "பகைவரை ஒழிக்கும் பருவம் இதுவென்று அறிந்தோம். இனி அவ்விதம் இளமையிலேயும், வயிரம் கொண்ட விடத்தும் பகைவரைக் களையாதுவிடின் ஏதுவாகும் என்பதையும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

880 உயிர்ப்ப வுளரல்லர் மன்ற செயிர்ப்பவர்
செம்மல் சிதைக்கலா தார்.

(பரி.) இ-ள். செயிர்ப்பவர் செம்மல் சிதைக்கலாதார்=தம்மொடு பகைப்பாரது தருக்கினைக் கெடுக்கலாயிருக்க இகழ்ச்சியான் அது செய்யாத வரசர்—உயிர்ப்ப உளரல்லர் மன்ற=பின் உயிர்க்குமாத்திரத்திற்கும் உள ரல்லர் ஒருதலையாக. எ-று.

அவர் வலியராய்த் தம்மைக் களைதல் ஒருதலையாகலின், இறந்தாரேயாவ ரென்பதாம். அவருயிர்த்த துணையானே தாமிறப்பரெனினு மமையும். இது ஞற் களையாவழிப் படுமிழுக்குக் கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—அரசர் தம்முடன் பகைப்போருடைய கர்வத்தைக் கெடுக்க வேண்டி இருக்கவும் அவர் மெலியர் என்கின்ற அவமதிப்பால் அவரைக் கெடுக்காது இருப்பாராயின், பின்னர் அவ்விதம் அவமதிப்பாய் இருந்த அரசராகிய அவர் ஒரு மூச்சுவிடுமளவும் நிச்சயமாகப் பிழைத்திருப்பார் என்று சொல்லுவதற்கில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பகைவர் பலமற்ற எளத்து அவரை அவமதித்து அவர் கர்வத்தை அடக்காது இருந்த அரசன் ஒருவன் அப்பகைவர் பொருள், படை முதலிய வலிமைகளை எல்லாம் அடைந்த பிறகு தான் போருக்குச் செல்லாவிடினும் 'அவர்கள் இவன்மீது போர்கொண்டுவந்து இவனைத் தொலைத்து விடுவார்கள் என்பதாக அறிகிறோமென்ற



னர். அதுகேட்ட மாணுக்கர், "பகைவரைப் பருவம் கண்டு அடக்காத அரசனுக்கு வரும் குற்ற மிதுவென்று அறிந்தோம். இனி, இவ்வெகுளியால் வரும் ஏனைய அதிகாரங்களையும் விளக்கல்வேண்டும்." என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 89. அதிகாரம்.
## உட்பகை.

---

(பரி.) அஃதாவது புறப்பகைக்கு இடனுக்கிக் கொடுத்து அதுவெல்லுந் துணையும் உள்ளாயிருக்கும் பகை. இதுவும், களையப்படுவதன் பாலதாகலின், பகைத்திறந் தெரிதலின்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது பகைவரென்று தர்மை வெளிப்படையாகத் தெரிவித்துக்கொண்டு பகை கொண்டிருக்கும் புறப்பகை

வர்க்கு வெல்லுவதற்கு ஏற்ற உபாயங்களை எல்லாம் செய்துக் கொடுத்து அப்புறப்பகைவர் போர்செய்து வெற்றிகொள்ளும் வரையும் தாம் உள்ளாய் நின்று பகை சாதிக்கின்ற பகைவர் கொள்ளுகின்ற பகையே உட்பகையென்பதாம். இவ்வித உட்பகைவரைப் புறப்பகைவரைக் களைவதற்குமுன் களைந்துவிட வேண்டுமாதலால், பகைத்திறந்தெரிதல் என்னும் அதிகாரத்துக்குப் பிறகு இது வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித உட்பகைவரென்பார் ஒருவனுக்குச்சுற்றத்தவராகஇருப்பரோ? அல்லது சுற்றமல்லாதவர்களாக இருப்பரோ ? சுற்றத்தவராயினும் அவரும் உட்பகை கொள்வதுண்டோ ? அவ்விதம் அவர் கொள்ளுவாராயின் அவ்வுட்பகை எவ்வித தகுதியோடு இருக்கும் ?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

881. நிழனீரு மின்னாத வின்னா தமர்நீரு
மின்னாவா மின்னா செயின்.

(பரி.) இ-ள். நிழல் நீரும் இன்னாத இன்னா=ஒருவனுக்கு அநுபவிக்க வேண்டுவனவாய நிழலும் நீரும் முன் இனியவேனும் பின் நோய்செய்வன இன்னாவாம் ;—தமர் நீரும் இன்னாசெயின் இன்னாவாம்=அதுபோலத்தமுவ



வேண்டுவனவாய தமரியல்புகளும் முன் இனியவேனும் பின் இன்னாசெய்வன இன்னாவாம். எ-று.

நோய்=பெருங்கால், பெருவயிறு முதலாயின. தமரென்றதனால் உட்பகையாதற்குரியாராய ஞாதியரென்ப தறிக. இன்னாசெயல் முன் வெளிப்படாமைநின்று நிலைபெற்றவழிக் கெடுத்தல். (க)

விளக்கம் :—ஒருவனுக்கு இயல்பாகவே அநுபவிக்கக் கூடிய நிழலும் நீரும் அநுபவிக்கும் காலத்து முதலில் மிகுதியும் இனிமையுடையனபோல் இருந்து பின்னர் நோய் செய்யுமாயின், அவ்வித நிழலும் நீரும் எவ்விதம் துன்பமாமோ அதுபோலவே,

தழுவி வாழவேண்டியவர்களாகிய சுற்றத்தவர்கள் இயல்பாய் முன்னர் இனியவராகக் காணப்பட்டுப் பின்னர் துன்பந்தருபவராக இருப்பாராயின் அவ்வியல்புகள் துன்பமுடையனவாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், உண்ணுகின்ற ஜலம் உண்ணுங்காலத்துத் தாகவிடாயைத் தணிப்பதாயினும், மரத்தின் நிழலில் இருக்குங்காலத்து அம்மரத்தின் நிழல் முதலில் நிழல் தருவதாயினும், பின்னர் உண்ட ஜலத்தினது இயற்கைக்குத் தகுந்த விதமாகவும், நிழல் தந்த மரத்தினது இயற்கைக்குத்தகுந்த அளவாகவும் பெருங்கால் என்னும் ஆனைக்காலும், பெருவயிறு என்னும் மகோதரமும் உண்டு அநுபவித்தவனுக்கு உண்டாவதுபோல், உள்ளே பகைகொண்டு வெளியே சுற்றத்தவரைப்போல் நடித்து நிற்கின்ற சுற்றத்தவரும் வெளிப்படைக்கு மிகுதியும் நன்மையை விரும்புகின்றவர்போல் நடித்துக்காட்டிப் பின்னர் பகைவரோடு கூடிக் கெடுக்கும் உட்பகை யாவர் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம் சமயம் வரும்வரையில் தம்முடைய பகையை வெளிப்படுத்தாது சமயம் வந்தகாலத்து கெடுக்கின்ற சுற்றத்தவரை உட்பகையென்று அறிந்து கொண்டோம். இனி, அவ்வித சுற்றத்தவரைப் பகைவராகவே கொள்ளுதல் வேண்டுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

882. வாள்போல் பகைவரை யஞ்சற்க வஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

(பரி.) இ-ள். வாள்போல் பகைவரை அஞ்சற்க=வாள்போல எறிது வென்று வெளிப்பட்டுநிற்கும் பகைவர் பகையினை அஞ்சாதொழிக; கேள்



போல் பகைவர் தொடர்பு அஞ்சுக=அண்மையும் நில்லாது கேள்போல மறைந்துநிற்கும் பகைவர் நட்பினை அஞ்சுக. எ-று.

பகைவர்—ஆகுபெயர். முன்னேயறிந்து காக்கப்படுதலான் "அஞ்சற்க" என்றும், அண்மையும் அறியவும் காக்கவும்படாமையிற் கெடுதல் ஒருதலையென்பதுபற்றி 'அஞ்சுக' என்றுங் கூறினார். பின்செய்யும் பகையினுங் கொடிதாகலானும், காக்கலாகாதாகலானும், அஞ்சப்படுவது முன்செய்த அவர்தொடர்பாயிற்று. இவை யிரண்டுபாட்டானும் உட்பகை யாகாதென்பது கூறப்

பட்டது. (உ)

விளக்கம்:—வெட்டுகின்ற வாளினைக் கைக்கொண்டு வெட்டி விடுவோம் என்று வெளிப்படையாக எதிர் நின்று பகைக்கும் பகைவரை அஞ்சுதல்வேண்டாமென்றும், அவ்விதம் வெளிப்படையாக நில்லாமல் சுற்றத்தவர்போல்நடித்துக்காட்டி உள்ளேபகைகொண்டு நிற்கும் பகைவருடைய நட்பினை அஞ்சுதல் வேண்டுமென்றும் இத் திருக்குறள் கூறுகின்றது. இதனால், பகைவராயினர் பகைவரென்று வெளிப்படையாக நிற்கின்றமையின் அவர் தீங்கு செய்யாவண்ணம் தம்மைக் காத்துக்கொள்ளுதல் கூடுமாதலால் அவ்வித வெளிப்படையான பகைவர்க்கு அஞ்சுதல்வேண்டாமென்றும், ஆயின் சுற்றத்தவர் உட்பகைவராகி நட்பினர்போல நடிக்கின்றமையால் அவர் பகையைக் கண்டு தம்மைக் காத்துக்கொள்ளும் வண்ணம் செய்து கொள்வது கூடாமையாகுமென்றும், ஆதலால் அவ்வுட்பகைவர்க்கு மிகுதியும் பயப்படுதல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "உட்பகையாயுள்ள சுற்றத்தவரது நட்பு ஒருவனுக்குக் கூடாது என்றும், அவர் பகைவரைக்காட்டிலும் பகைவர் என்றும் அறிந்தோம். இவ்விதம் உட்பகையாயினர் நம்பியவர்களைக் கெடுப்பது எவ்விதமாயிருக்கும் என்பதை ஒரு உவமை வாயிலாக அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

883. உட்பகை யஞ்சித்தற் காக்க வுலைவிடத்து
மட்பகையின் மாணத் தெறும்.

(பரி.) இ-ள். உட்பகை அஞ்சித் தற்காக்க=உட்பகையாயினாரை அஞ்சித்தன்னைக் காத்துக் கொண்டொழுகுக;—உலைவிடத்து மட்பகை





யின் மாணத்தெறும்=அல்லது பொழுதுவழித் தனக்கோர் தளர்ச்சி வந்தவிடத்துக் குயவன் மட்கலத்தை அறுக்கும் கருவிபோல அவர் தப்பாமற் கெடுப்பர். எ-று.

காத்தல்=அவரணையாமலும் அவர்க்குடம்படாமலும் பரிகரித்தல்.

மண்ணைப் பகுக்கும் கருவி மட்பகை யெனப்பட்டது. புகைமை தோன்றா மல் உள்ளாயிருந்தே தேய்த்தலின், கெடுதல் தப்பாதென்பதாம். (௩)

விளக்கம்:—சுற்றத்தவர்போல் இருந்து உட்பகைவராகத் தன்னைக்கெடுக்க முயற்சிக்கும் பகைவரினின்றும் தன்னைக் காத்துக் கொள்ளுதல் வேண்டுமென்றும், அவ்விதம் காத்துக்கொள்ளா விடின் தனக்கு ஓர் தளர்வு வந்த காலத்தே குயவன் செய்கிற மட்பாண்டத்தை அறுக்கும் கருவியாகிய பலகைபோல் அப் பகைவர் தப்பாமல் கெடுத்து விடுவர் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் குயவன் தான் மட் பாண்டத்தைச் செய் யுங்காலத்து அது செய்து முடிந்தவுடன் அதை அறுப்பதற்குத் தன்னிடம் உள்ள மாத்திரலாகிய ஒரு சிறு பலகை போன்ற கருவியை அப்பாண்டத்தைச் செய்யும் வரையும் அமைதியாக வைத்து இருந்து பின்னர் அறுக்கவேண்டிய சமயத்து அம் மட்கலத்துள் வைத்தும் அவ்விதம் வைத்ததும் பிறர் கண்ணுக் குப் புலப்படாமல் வைத்த தனக்கே தெரியும்படி அறுத்து விடுவதுபோல், உட்பகையாயிருக்கும் வெளிப்பகையாகிய பகை வர் அழிப்பதற்கு வேண்டுவன வெல்லாம் செய்கின்ற காலத்தே ஒருவருக்கும் தெரியாமல் அவரோடிருந்து அழித்து நின்றும் அழிந்த பிறகு தாமும் வெளிப்படையாகப் பகைவரென்று தோன் றுவர் என்பது அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "குயவன் மட்கலத்தை அறுக்கும் கருவி அவன் அறியும்படி மாத்திரம் அவன் கைக்குள்ளிருந்து மட்கலத்திற்கு சோகாவண்ணம் 'அறுத்து விடுவதுபோல், உட்பகைவரும் தம் உதவி கொள்ளும் பகைவர் மாத்திரம் அறியும் வண்ணம் அவர்க்கு உடனுமிருந்து வேறு ஒருவர் அறியாவண்ணம் தம்மை மறைத்துக்கொண்டு அழித்துவிடுவர். அவ்விதம் அழிப்பதால் சுற்றத்தவர் என்றெண்ணி இருந்தவர் தப்பாமல் கெடுவர் என்பது அறிந்தோம். இனி, இவ்வித உட்பகைவர் அரசன் ஒருவனுக்கு இருப்பாராயின், அவ்



வரசனுக்கு அவர் உள்ளவரையில் தீமையாக இருக்குமன்றோ?"

என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

884. மனமாணு வுட்பகை தோன்றி னினமாணு
வேதம் பலவுந் தரும்.

(பரி.) இ-ள். மனம் மாணு உட்பகை தோன்றின் = புறந்திருந்தியது போன்று அகந்திருந்தாத உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின்,—இனம் மாணு ஏதம் பலவும் தரும் = அஃது அவனுக்குச் சுற்றம் வயமாகாமைக்கேதுவாகிய குற்றம் பலவற்றையுங் கொடுக்கும், எ-று.

அவை சுற்றத்தாரை உள்ளாய்நின்று வேறுபடுத்தலும், அதனான் அவர் வேறுபட்டவழித் தான்றேறாமையும், பின் அவற்றான் வினைவாராமையுமாம். (௪)

விளக்கம்:—அரசன் ஒருவனுக்குப் புறத்தில் அன்புடையவர் போன்று இருந்து மனத்தின் அன்பு பொருந்தாத உட்பகை உண்டாவதாயின், அவ்வித உட்பகையை அடைந்த அவ்வரசனுக்கு அவன் சுற்றத்தார் அவனோடு பொருந்தாது வேறுபடுதற்குக் காரணமாகிய பல குற்றங்களும் உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், வெளியில் நட்பும் மனத்துள் பகையும் கொண்ட உட்பகைவர் ஒரு அரசனுக்கு இருப்பாராயின், அப்பகைவர் அவ்வரசனது சுற்றத்தவர் முதலியவரை உள்ளாகவே நின்று அவ்வரசனைவிட்டுப் பிரித்துவிடுவரென்றும், அவ்வாறு பிரித்துவிட்டகாலத்து அச்சுற்றத்தவரால் பல தீங்குகள் சேருமென்றும் அறிந்தோம். ஆதலால் உட்பகைவர் இனத்தவரையும் பிரிப்பர் என்றறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித உட்பகைவர் சுற்றத்தவரைப் பிரிப்பதால் அரசனுக்கு எவ்வித குற்றங்கள் சேரும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

885. உறன்முறையா னுட்பகை தோன்றி னிறன்முறை
னேதம் பலவுந் தரும். [யா

(பரி.) இ-ள். உறல் முறையான் உட்பகை தோன்றின் = புறத்து உறவு முறைத்தன்மையோடு கூடிய உட்பகை அரசனுக்கு உண்டாவதாயின்,— இறல் முறையான் ஏதம் பலவும் தரும் = அஃது அவனுக்கு இறத்தல் முறை

போம் கூடிய குற்றம் பலவற்றையுஞ் சேர்க்கும். எ-று.



அவை புறப்பகைக்குத் துணையாய் நின்றே அது தோன்றுமற் கோறன்முதலிய வஞ்சனை செய்தலும், அமைச்சர் முதலிய உறுப்புக்களைத் தேய்த்தலும் முதலாயின. (௫)

விளக்கம்:—வெளியே உறவு முறை கொண்டு தன்னோடு கூடிய உட்பகை அரசனுக்கு உண்டாகுமானால், அவ்வுட்பகையால் அவ்வரசனுக்கு இறந்து போகக்கூடிய நிலைமையோடு பல குற்றங்களும் உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, உள்ளே பகையும், வெளியே உறவுங்கொண்ட உட்பகைவர் புறப்பகைவராயிருக்கின்ற பகைவர்களுக்குத் துணையாக இருந்துகொண்டே தாம் கொண்ட உட்பகை தோன்றுமிதம் அரசனைக் கொல்லுவதற்கேற்ற வஞ்சனையாகிய செயலைச் செய்தலும் அவ்வரசனுக்கு உறுப்புக்களாகிய அமைச்சர் முதலியவர்களைப் பிரித்துவிடும்படிச் செய்தலும் ஆகிய குற்றங்களையெல்லாம் உண்டாக்குவர் என்றறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "அரசன் ஒருவன் மிகுதியும் ஆற்றல் உடையவனாயின், அவனுக்கு எவ்விதம் இவ்வித தீங்குகள் சேரும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

886. ஒன்றாமை யொன்றியார் கட்படி னெஞ்ஞான்றும்
பொன்றாமை யொன்ற லரிது.

(பரி.) இ-ள். ஒன்றாமை ஒன்றியார்கண் படின் = பகைமை தனக்குள்ளாயினார் மாட்டே பிறக்குமாயின், — பொன்றாமை ஒன்றல் எஞ்ஞான்றும் அரிது = அரசனுக்கு இறவாமை கூடுதல் எஞ்ஞான்று மரிது. எ-று.

பொருள் படை முதலிய உறுப்புக்களாற் பெரியனாய காலத்து மென்பார், 'எஞ்ஞான்றும்' என்றார். இவை நான்குபாட்டானும் அதனாற் றனக்கு வருந்தீங்கு கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—அரசன் ஒருவனுக்குத் தன்னிடத்து உள்ளவர்

ளாலேயே பகை தோன்றுமாயின், அவ்வித பகை கொண்ட அர சனுக்கு எக்காலத்தும் இறவாதிருப்போம் என்று எண்ணுதல் கூடாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், பொருள் படை முதலிய உறுப்புக்களால் மிகுதியும் வலிமை யுடையவனாயி



னும், அவ்வித வலிமைகளால் தன்னைக் காத்துக்கொள்ள முடியாமல் உட்பகைவர் செய்யும் வஞ்சகங்களால் இறந்துவிடுதலே வேண்டும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற் கூறிய நான்கு திருக்குறள்களாலும் அரசனுக்கு உட்பகையால் வரும் தீங்குகள் இவையென அறிந்தோம். ஆயின், உட்பகை கொண்டார் நட்புகொள்ளுங் காலத்து எவ்விதமாக ஒழுகுவர் என் பதை ஓர் உவமை வாயிலாக விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

887. செப்பின் புணர்ச்சிபோற் கூடினுங் கூடாதே
யுட்பகை யுற்ற குடி.

(பரி.) இ-ள். செப்பின் புணர்ச்சிபோல் கூடினும்=செப்பினது புணர்ச் சிபோலப் புறத்து வேற்றுமை தெரியாமற் கூடினாராயினும்,—உட்பகை உற்ற குடி கூடாது=உட்பகை உண்டாயகுடியிலுள்ளார் அகத்துத் தம்முட்கூடார்.

செப்பினதுபுணர்ச்சி=செப்பு மூடியோடு புணர்ந்த புணர்ச்சி. உட் பகையான் மனம் வேறுபட்டமையிற் புறப்பகை பெற்றுழி வீற்றுவீற்றாவ ரென்பதாம். குடிகூடா தென்பதனை நாடு வந்ததென்பதுபோலக் கொள்க. உட்பகை தானுற்ற குடியோடு கூடாதென்றும், உட்பகை யுண்டாயகுடி அப் பகையோடு கூடாதென்றும் உரைப்பாருமுளர். (எ)

விளக்கம்:—செப்பு என்னும் செப்புப் பாத்திரத்தின் மூடி யானது எவ்விதம் ஒன்றாகத் திருகி உள்ள காலத்து வேற்றுமை தோன்றாது உள்ளதோ, அதுபோல உட்பகையானவர் வெளியே வேற்றுமை தோன்றாமல்கூடி இருப்பாரென்றும், ஆயின், அச்செப் பினது மூடி முதலியவைகளைக் கழற்றிப் பிரிக்கின்றகாலத்து அது வேறுவேறாகக் காணப்படுவதுபோல் முதலிலிருந்து உள்ளே பகைமை கொண்டு வஞ்சித்துநிற்கும் உட்பகை கொண்ட உறவினரும், புறப்

பகை வந்து அடைந்த காலத்து அதனோடு சேர்ந்து எவ்வளவு வேறு பாடுகளைத் தெரிவித்தல் வேண்டுமோ, அவ்வளவையும் தெரிவிப்பர் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், கொல் லன் ஒருவன் செய்த செப்புப் பாத்திரம் பல உறுப்புக்களாக இருந்து பூட்டப்பட்டிருக்கும் காலத்து ஒன்றே என்று காணப் படுதலும், வேண்டிய காலத்து அதைக் கழற்றுகின்றவரைக் கொண்டு



கழற்றினால் எவ்விதம் வேறுபடுகிறதோ அதுபோல், உட்பகை வரும் தாம் பொருந்திய இனத்தவரோடு பிரிக்கப்படாத இன முடையவர் போன்று தம் நடிப்பால் பொருந்தியிருந்தாலும் அப் பாத்திரத்தைக் கழற்ற வேண்டியவர்கள் கழற்றுகின்ற காலத்தே அவர் இச்சையின் வழியே இருந்து கழலுவதுடன் அப்பாத்திரத் தில் உள்ளவைகளையும் அவர் கொள்ளும்படி உதவியாயிருப்பது போல், புறப்பகைவர் வந்தகாலத்து அவர் மனத்திற்கு இசைந்து நடந்து இதுகாறும் கூடி இருந்த அரசனிடத்து உள்ள எல்லா மென் மைகளையும், வன்மைகளையும் பகைவர்க்கு அறிவித்துத் தீங்குசேரும் படிச் செய்வர் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக் கர், "இவ்வுவமையால் உட்பகைவர் உள்ளிருக்கும் காலத்துப் பொருந்தி ஒழுகும் புணர்ச்சியின் தன்மையும், அவர் பிரிகின்ற காலத்து வேறுபடுகின்ற பிரிவின் தன்மையும், அவற்றால் புறப் பகைவர்க்கு உண்டாகும் நன்மைகளும், அவ்வுட்பகை கொண்ட அரசனுக்கு உண்டாகும் தீமைகளும் இவையென நன்கு உணர்ந் தோம். இனி, உட்பகைகொண்ட குடியானது கெட்டுப்போய் விடுவது எவ்விதம் என்பதையும் ஓர் உவமை வாயிலாக விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

888. அரம்பொருத பொன்போலத் தேயு முரம்பொரு
துட்பகை யுற்ற குடி.

(பரி.) இ-ள். உட்பகை உற்றகுடி=முன் வளர்ந்துவந்ததாயினும் உட் பகை யுண்டாயகுடி—அரம் பொருத பொன்போலப் பொருது உரம் தேயும்=அரத்தாற் பொரப்பட்ட இரும்புபோல அதனாற் பொரப்பட்டு வலி

தேயும். எ-று.

பொருதென்னுஞ் செயப்பாட்டுவினையெச்சம் தேயுமென்னும் வினை கொண்டது. அஃது உரத்தின் தொழிலாயினும் குடிமே லேற்றதலின், வினைமுதல் வினையாயிற்று. சாரியஞ்செய்வதுபோன்று பொருந்தி மெல்ல மெல்லப் பிரிவித்தலான், வலிதேய்க்குமிடுமென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் அவன் குடிக்கு வருந் தீங்கு கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—முதலில் வளர்ச்சி பெற்றுவந்த குடியொன்று உட்பகையை யடையுமாயின், இரும்பு ஒன்று அரத்தால் அராவப்படு



கின்ற காலத்து அவ்வரத்தினால் அராவப்பட்டு எவ்விதம் வலிமை தேய்ந்து போமோ அதுபோல் தேய்ந்துபோம் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், இரும்பால் செய்யப்பட்ட பொருளொன்றிற்குக் கொல்லன் தனது கை வல்லமைக்குத் தக்க அளவாக முதலில் ஓர் உருவத்தை அமைக்கினும், அவ்விரும்பினையே பின்னர் தேய்க்க எண்ணிய வழி ஓர் அரத்தைக்கொண்டு தேய்ப்பானாயின் அவ்வரமானது அவ்விரும்பின் வலிமையைச் சிறிது சிறிதாகத் தேய்த்து அதன் உருவத்தையும், வலிமையையும் குறைத்து விடுவதுபோல், உட்பகைவரும் புறப்பகைவராகிய கொல்லரோடு கூடி அவர் கை அரம் போலச் சிறிது சிறிதாக உட்பகைகொண்ட குடியின் உள்ளாரைத் தேயும்படிச்செய்து அவர் உருவமாகிய புகழையும் அவர் வலிமையாகிய பொருள், படைகளையும் இழக்கும்படிச் செய்வர் என்று அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேல் இரண்டு திருக்குறள்களானும் உட்பகை உடைய ஒருவனது குடிக்கு வரும் தீங்குகள் இவையென அறிந்தோம். இனி, அவ்வுட்பகை மிகச் சிறியதோர் பகையாயிருக்குமாயின், அப்பகையும் இவ்விதத் தீமையைச் செய்தல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

889. எட்பக வன்ன சிறுமைத்தே யாயினு
முட்பகை யுள்ளதாங் கேடு.

(பரி.) இ-ள். உட்பகை எட்பகவு அன்ன சிறுமைத்தே ஆயினும் = அ

சனது உட்பகை அவன் பெருமையை நோக்க எள்ளின்பிளவை யொத்த சிறுமையுடைத்தேயாயினும்,—கேடு உள்ளதாம் = பெருமையெல்லாம் அழிய வருங்கேடு அதனகத்ததாம். எ-று.

எத்துணையும் பெரிதாயகேடு தனக்கெல்லைவருந்துணையும் எத்துணையுஞ் சிறிதாய உட்பகையுள்ளே யடங்கியிருந்து, வந்தால் வெளிப்பட்டுநிற்குமென்பதாம், இதனால் அது சிறிதென்று இகழப்படாதென்பது கூறப்பட்டது. (க)

விளக்கம்:—அரசனுடைய உட்பகையானது அவனுக்கு உள்ள பெருமையை நோக்குகின்ற காலத்தே ஒரு எள்ளினுடைய பிளவு எவ்வளவு அளவோ அவ்வளவு சிறியதாயிருக்கினும், அவனுக்கு உள்ள பெருமையை எல்லாம் அழிக்கக்கூடிய கெடுதியா



னது அவ்வுட்பகையினுள் உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், உட்பகையானது எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அது புறப்பகைவர் வந்து பெரிதாகிய கேடுகளை ஒருவனுக்குச் செய்யும்வரையும் உள்ளேயே அடங்கியிருந்து பின்னர் அது பெரிதாக வெளிப்பட்டு நிற்குமென்றும், ஆதலால் மிகச்சிறிய தானியமாகிய எள்ளின் பாதியை உவமித்துக் காட்டி அவ்வளவு பகையே இருக்குமாயினும் அது சமயம் வந்த காலத்துப் பெரிய கேட்டை விளைவிக்கும் என்று உவமித்துக் காண்பித்ததால் உட்பகைவர் எவ்வளவு தாழ்ந்தவராயினும் அவர் தாழ்வினை நோக்கி 'இவர் நமக்கு என்செய்தல் கூடும்?' என்று இகழ்ந்து விட்டுவிடுதல் கூடாதென்றும், அவரை உடனே தொலைத்துவிடல் வேண்டுமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித அற்ப உட்பகைவர் வாழ்கின்ற குடியுள் வாழ்பவர்க்கு எவ்வித தகுதி உண்டாகும் என்பதை ஓர் உவமை வாயிலாக விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

890. உடம்பா டிலாதவர் வாழ்க்கை குடங்கருட்
பாம்போ டுடனுறைந் தற்று.

(பரி.) இ-ள். உடம்பாடு இலாதவர் வாழ்க்கை = மனப்பொருத்தமில்லாதாரோடுகூட ஒருவன் வாழும் வாழ்க்கை — குடங்கருள் பாம்பொடு உடன் உறைந்தற்று = ஒருகுடிலுள்ளே பாம்பொடுகூட உறைந்தாற்போலும். எ-று.

குடங்கமென்னும் வடசொற் றிரிந்து நின்றது. இடச்சிறுமையானும் பயிற்சியானும் பாம்பாற் கோட்படல் ஒருதலையாம்; ஆகவே, அவ்வுவமையால் அவனுயிர்க்கு இறுதிவருதல் ஒருதலையென்பது பெற்றாம். இதனாற் றன்னோடுடம்படாதவரைக் கடிகவென்பது கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—மனத்தான் பொருந்தாது உட்பகையோடு உள்ளவர்களோடு கூடி ஒருவன் வாழ்கின்ற வாழ்க்கையானது ஒரு பெட்டகத்தின் பாம்பு ஒன்றிருக்க, அப்பாம்போடு வசித்துக்கொண்டிருப்பது போல் இருக்குமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பாம்புப் பிடாரன் அமைத்துள்ள பெட்டியொன்றினுள் பாம்போடு கூடி இருக்கும்படி ஒருவன் அதனுள் இருக்கப்புகுந்தால் எவ்விதம் அப்பாம்பானது அவனைக்



கடியாதுவிடாதோ, அதுபோல் உள்ளுக்குள்ளேயே இருந்து உட்பகை செய்கின்ற மனிதரும் உயிர்க்கு இறுதியை உண்டாக்குவரென்றும், அவ்வுட்பகையை வைத்துக்கொண்டவர் இறந்துபோவது திண்ணமாகுமென்றும், ஆதலால் மேற்கூறிய வண்ணம் உட்பகைவர் எவ்வளவு சிறியரேனும் அவரை இகழாதும், அவரிடத்துத் தாக்ஷிண்யங்கொள்ளாதும் அவரை ஒழித்துவிடல்வேண்டும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வதிகாரத்தால் உட்பகையாவார் இவரென்றும், உட்பகை கூடாதென்றும், அவ்வுட்பகையால் உண்டாகுங் குற்றங்களும், உட்பகை உண்டான குடிகளுக்கு நாள் சிறிது சிறிதாகத் தேய்ந்துவிடுமென்றும், உட்பகை மிகச்சிறிதாயினும் அதனை இகழாது கடிதல் வேண்டுமென்றும் அறிந்தோம். இனி, வெகுளியால் வரும் பிழை இன்னும் எதுவாகும் என்பதை விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 90. அதிகாரம்.

---

## பெரியாரைப் பிழையாமை.

(பரி.) அஃதாவது பெரியாரினுரை அவமதித்து ஒழுகாமை. இரட்டை

மொழிதலென்பதனாற் பெரியாரென்பது ஆற்றலாற் பெரியாராய வேந்தர் மேலும் தவத்தாற் பெரியாராய முனிவர்மேலும் நின்றது. மேற்சொல்லாது எஞ்சிநின்றதாகலின், இது வெகுளியான் வருவனவற்று இறுதிக்கண் வைக்கப் பட்டது.

விளக்கம்:—அதாவது, வல்லமையால் பெரியவராகிய வேந்தரிடத்தும், தவத்தால் பெரியவராகிய தவசிகளிடத்தும், அவரை அவமதித்துப் பிழைபடாதிருத்தல். இதுகாறும் இப்பெரியாரிடத்துப் பிழைத்தல் கூடாதென்பதைச் சொல்லாதிருந்தமையால், வெகுளியால் வரும் நிலைகள் எல்லாவற்றையுங்கூறி அவைகளுக்குப் பிறகு கடைசியாக இவ்வதிகாரம் வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பெரியார் இவரென்றும், அவரிடத்துப் பிழைத்தல் கூடாதென்றும் கூறுகின்ற இவ்வதிகாரம் மிக





முக்கியமாதலின், இதைக் கேட்க மிகுதியும் ஆசைப்படுகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

891. ஆற்றுவா ராற்ற லிகழாமை போற்றுவார்
போற்றலு ளெல்லாந் தலை.

(பரி.) இ-ள். ஆற்றுவார் ஆற்றல் இகழாமை=எடுத்துக்கொண்டன யாவும் முடிக்கவல்லாருடைய ஆற்றலை அவமதியாமை—போற்றுவார் போற்றலுள் எல்லாம் தலை=தங்கட்கு ஊறு வாராமற் காப்பார் செய்யும் காவல்களெல்லாவற்றினும் மிக்கது. எ-று.

ஆற்றலென்பது பெருமை, அறிவு, முயற்சியென்னும் மூன்றன்மேலும் நிற்றலின் சாதியொருமை. இவற்றான் வழிக் கினையவல்லாரென்பது தோன்ற 'ஆற்றுவார்' என்றும், அரண், படை, பொருள், நட்பு முதலிய பிறகாவல்கள் அவரானழியுமாதலின் அவ்விகழாமையைத் தலையாய காவலென்றுங் கூறினார். பொதுவகையால் அவ்விருதிறத்தாரையும் பிழையாமையது சிறப்பு இதனாற் கூறப்பட்டது. (க)

விளக்கம்:— தமக்கு யாதொரு தீங்கும் வாராது காத்துக்

கொள்ளுவார் செய்யும் காவல்கள் எல்லாவற்றினும் மிக்கதாவது, தாம் எடுத்துக்கொண்ட தொழில்கள் எவையாயினும் அவற்றை முடிக்கவல்லவருடைய வல்லமையினை அவமதியாது இருத்தலே ஆகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பெருமை, அறிவு, முயற்சி என்னும் மூன்று வல்லமைகளையும் பொருந்திய பெரியோரை அரண், படை, பொருள், நட்பு முதலிய காவல்களை உடைய அரசர்களும் இகழ்தல் கூடாதென்றும், அவ்வாறு இகழின் தம்மைக் காத்துக்கொள்ளுபவர் ஆரென்றும் கூறியதாயிற்று என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தவத்திற்குரிய பெரியார் வல்லமை இதுவென்றும், ஏனைய அரசர் வல்லமை இதுவென்றும் அறிந்தோம். மேலும், வல்லமையால் பெரியாராய அரசராயினும் அத்தகையினரை இகழ்தல் கூடாதென்றும் அறிந்தோம். அங்ஙனம் இகழ்வாராயின் எவ்விதத் துன்பம் இகழ்ந்தவர்க்கு வரும் என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



892. பெரியாரைப் பேணா தொழுகிற் பெரியாராற்
பேரா விடும்பை தரும்.

(பரி.) இ-ள். பெரியாரைப் பேணாது ஒழுகின் = ஆற்றல்களாற் பெரியாராயினாரை வேந்தர் நன்குமதியாது அவமதித்து ஒழுகுவாராயின்,—பெரியாரால் பேரா இடும்பை தரும் = அவ்வொழுக்கம் அப்பெரியாரால் அவர்க்கு என்றும் நீங்காத துன்பங்களைக் கொடுக்கும். எ-று.

அத்துன்பங்களாவன:—இருமையினும் இடையறாது வரும் மூவகைத் துன்பங்களுமாம். அவையெல்லாந் தாமே செய்து கொள்கின்றனரென்பது தோன்ற, ஒழுக்கத்தை வினைமுதலாக்கியும் பெரியாரைக் கருவியாக்கியும் கூறினார். பொதுவகையால் அவரைப் பிழைத்தற்குற்றம் இதனாற் கூறப்பட்டது. இனிச் சிறப்புவகையாற் கூறுப. (உ)

விளக்கம்:—மேற்கூறிய வல்லமைகளில் மிக்க பெரியோராயினாரை அரசர் நன்குமதியாது அவமதித்து நடப்பாராயின், அவ்விதவொழுக்கத்தால் அப்பெரியோரால் அவ்வரசர்கள் என்றும் நீங்

சாத துன்பங்களை அடைவார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பெரியோராயினாரை அவமதிப்பார் அரசராக இருப்பினும் இம்மையில் பொருளை இழந்து பழியைத் தேடிக்கொள்வதுடன், மறுமையில் பாவத்தின் மிகுதியால் புண்ணியத்தையும் இழந்து நரகத்தையும் அடைவர் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பெரியோரைப் பழிப்பவர் இம்மை, மறுமையாகிய இரண்டு பயன்களையும் இழப்பரென்று பொதுவாக அறிந்தோம். இனி, அவ்விதம் பிழைத்தலால் ஆகிய குற்றங்களையெல்லாம் சிறப்பு வகையால் கூறுதல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

893. கெடல்வேண்டிற் கேளாது செய்க அடல்வேண்டி
ஆற்று பவர்க ணிழுக்கு.

(பரி.) இ-ள். அடல் வேண்டின் ஆற்றுபவர்கண் இழுக்கு=வேற்றுவேந்தரைக் கோறல்வேண்டியவழி அதனை அப்பொழுதே செய்யவல்ல வேந்தர் மாட்டுப் பிழையினை—கெடல் வேண்டின் கேளாது செய்க=தான் கெடுதல் வேண்டினானாயின் ஒருவன் நீதிநூலைக் கடந்துசெய்க. எ-று.



அப்பெரியாரைக் "காலனும் காலம் பார்க்கும் பாராது—வேலீண்டு தானை விழுமியோர் தொலைய—வேண்டிடத் தடூஉம் வெல்போர் வேந்தர்"* என்றார் பிறரும். நீதிநூல் செயலாகாதென்று கூறலின், 'கேளாது' என்றார்.

விளக்கம்:—வேற்றரசர்களைக் கொல்ல எண்ணிய காலத்து அக்கொல்லும் தொழிலை அப்பொழுதே செய்யக்கூடிய ஆற்றலுடைய அரசரிடத்து ஒருவன் தான் கெடுதல் வேண்டுமாயின் அப்போதுதான் நீதி நூல்களில் சொல்லியவற்றை யெல்லாம் மறந்து பிழையினைச் செய்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, காலம், இடம், துணை முதலிய யாவுமில்லாது தாமே சென்று போரிடக்கூடிய போராற்றலை உடைய அரசர்பால் பிழை செய்தல் கூடாதென்றும், அவ்விதம் ஒருவன் செய்யப்புகுவானாயின் அது அவன் கெட்டுவிடுவதற்கே செய்வதென்றும் அறிந்தோ

மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பெரியார்க்குக் கேடு செய்தார் எவ்வித கேட்டினை அடைவர்?" என்றதும், ஆசிரியர் கூறலாயினர்.

894. கூற்றத்தைக் கையால் விளித்தற்றா லாற்றுவார்க்
காற்றாதா ரின்னா செயல்.

(பரி.) இ-ள். ஆற்றுவார்க்கு ஆற்றாதார் இன்னா செயல்=வல்லமையுடையார்க்கு அவையில்லாதார் தாம் முற்பட்டு இன்னாதவற்றைச் செய்தல்—கூற்றத்தைக் கையால் விளித்தற்று=தானேயும் வரற்பாலனாய கூற்றுவனை அதற்குமுன்னே கைகாட்டி அழைத்தா லொக்கும். எ-று.

கையால் விளித்தல் இகழ்ச்சிக்குறிப்பிற்று. தாமேயும் உயிர்முதலிய கோடற்குரியானை அதற்குமுன்னே விரைந்து தம்மேல் வருவித்துக்கொள்வார் இறப்பினது உண்மையும் அண்மையும் கூறியவாறு. இவை இரண்டு பாட்டானும் வேந்தரைப் பிழைத்தலின் குற்றம் கூறப்பட்டது. (௪)

•

விளக்கம்:—அறிவு, பெருமை, ஆண்மை என்னும் மூவிதமாகிய வல்லமையும் உடையவரிடத்தே அவ்வாற்றலில்லாதவர்கள் தாமே முன் சென்று அவர்க்குத் தீமையைச் செய்யப் புகுதல் ஆயுள் முடிந்த காலத்து அழையாமலே தானே வரக்கூடிய யமனை

* புறநானூறு, 41.



அவன் வருவதற்கு முன்னேயே 'வா' என்று தாமே தம் கையைக் காட்டி அழைப்பதுபோலுள்ளது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், இறப்பதற்குக் காலம் வருமுன்னே இறக்கத் தாமே விரும்புகின்றவர்களே பெரியோர்க்குப் பிழைசெய்வரென்றும், அவ்வாறு செய்வாராயின் அப்பிழைக்குத் தக்க தண்டனை இறப்பு என்றும், அது சீக்கிரத்தில் வருவதென்றும் அறிந்துகொண்டோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "இருவித பெரியோர்களுள் அரசராகிய பெரியவரை இகழ்கின்ற குற்றத்தால்வரும் தீங்குகளை அறிந்தோம் இனி அவ்வித ஆற்றலுடைய அரசர்க்குத் தீங்கு செய்பவன் அவன் நாட்டை விட்டு எங்கேனும் சென்று

தப்பிப் போதல் கூடாதோ ?" என்றலும், ஆசிரியர் கூறலாயி னர்.

895. யாண்டுச்சென் றியாண்டு முளராகார் வெந்துப்
வேந்து செறப்பட் டவர். [பின்

(பரி.) இ-ள். வெந்துப்பின் வேந்து செறப்பட்டவர் = பகைவர்க்கு வெய்தாய வலியினையுடைய வேந்தனாற் செறப்பட்ட அரசர் — யாண்டுச் சென்று யாண்டும் உளராகார் = அவனைத் தப்பி எங்கேபோயுளராவர், ஓரிடத்தும் உளராகார். எ-று.

இடைவந்த சொற்கள் அவாய்நிலையான் வந்தன. வெந்துப்பின் வேந்தாகலால் தன்னிலம் விட்டுப்போயவர்க்கு இடங்கொடுப்பாரில்லை, உளராயின் இவர் இனியாகரென்பது நோக்கி அவனொடு நட்புக்கோடற்பொருட்டும் தானே வந்தெய்திய அவருடைமை வௌவுதற்பொருட்டுங் கொல்வர், அன்றெனின் உடனே யழிவரென்பனநோக்கி, 'யாண்டுச் சென்றியாண்டு முளராகார்' என்றார். இதனால் அக்குற்றமுடையார் அருமையுடைய அரண் சேர்ந்தும் உய்யாரென்பது கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—தன்னை எதிர்த்த பகைவரை வெல்லக் கூடிய வலிமையுடைய அரசன் ஒருவனால் பகைக்கப்பட்டவர் அவன் போன்ற அரசராயிருக்கினும், அவ்வலியுடைய அரசனுக்குத்தப்பித் துக் கொண்டு எவ்விடத்துச்சென்றும் இருப்பதற்கு ஆகாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மன்னர் மன்னனும் உள்ள ஒருவனைப் பகைக்கின்ற சிற்றரசன் ஒருவன் அவனிடத்தே இருந்து



தப்பித்துக் கொள்ள வேண்டி மற்றொரு அரசனிடத்துச் சென்றும் 'இவன் வேறு அரசன் ஒருவனுக்குப் பிழைசெய்து வந்தவனாதலால் இவனுக்கு அடைக்கலம் நாம் தருவோமாயின் அப்பெரிய அரசனது கோபமானது நம்மீதும் பாய்ந்து நம்மையும் கொல்லும்' என்னும் பயத்தினால் ஓடிவந்த சிற்றரசனுக்கு இடம் தாரானென்றும், அவ்விதம் அல்லாவிடின் 'இவன் தஞ்சமில்லா திருப்பதால் இவன் பொருளை அபகரிப்பதற்கு இது தக்கதோர் காலம் ஆதலால் இப்பொழுதே ஓடிவந்த இவனது பொருளை வௌவுவதற்கு இவ

னைக் கொன்றுவிடுவோம்' என்று அவனைக் கொன்றுவிடுவாரென்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித வலிமை உடைய பெரியோரைப் பிழைக்கும் குற்றமுடையவர் மிக அருமையாகிய காவலுள்ள இடத்தே செல்லினும் இறவாதிருத்தல் கூடாதென்பதை அறிந்துகொண்டோம். இனி, ஏனைய தவத்தால் பெரியாரது கோபத்தை ஏற்றுக்கொள்பவரது பிழையினைக் கூறுதல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

896. எரியாற் சுடப்படினு முய்வுண்டா முய்யார்
பெரியார்ப் பிழைத்தொழுகு வார்.

(பரி.) இ-ள். எரியால் சுடப்படினும் உய்வு உண்டாம் = காட்டிடைச் சென்றொருவன் ஆண்டைத் தீயாற் சுடப்பட்டானாயினும் ஒருவாற்றான் உயிருய்தல்கூடும்; — பெரியார்ப் பிழைத்து ஒழுகுவார் உய்யார் = தவத்தாற் பெரியாரைப் பிழைத்து ஒழுகுவார் எவ்வாற்றானும் உயிருய்யார். எ-று.

தீ முன் உடம்பினைக் கதுவி அதுவழியாக உயிர்மேற்சேறலின் இடையே உய்யவுங்கூடும். அருந்தவர்வெகுளி அன்னதன்றித் தானிற்பது கணமாய் அதற்குள்ளே யாவர்க்குங் காத்தலரி தாகலின்,* அது கூடாதாகலான், அதற் கேதுவாய பிழைசெய்யற்க வென்பதாம். (சு)

விளக்கம்:— காட்டிடத்தே சென்ற ஒருவன் அக்காட்டிடத்து உண்டாகும் காட்டுத்தீயால் சுடப்பட்டானாயினும், அத்தீயினின்றும் ஒருவாறு தப்பித்துக்கொண்டு உயிர் பிழைத்தல் கூடும் என்றும், ஆனால் தவத்தில் பெரியவராயவர்களுக்குப் பிழை செய்து இருப்பார் எவ்விதத்தானும் உயிர்பிழைத்து இருக்கமாட்

* திருக்குறள், 29.



டார் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, காடுகளிலுள்ள மரங்கள் ஒன்றோடொன்று உராய்ந்து அதனால் உண்டாகும் தீயினிடத்தே ஒருவன் அகப்பட்டுக் கொள்வானாயின், அத்தீயானது முன்னே உடம்பினைப்பிடித்து அவ்வுடம்பு வெந்தபிறகு உயிரிடத்தே சென்று கொல்வதாதலால் உடம்பினிடத்திற் பிடித்த

வுடன் தப்பிச்சென்று உடம்பிற் சேர்ந்த புண்ணினை ஆற்றி உயிரைக் காத்துக்கொள்ளுதலுங்கூடும் என்றும், ஆனால், நிறைமொழி மாந்தராகிய பெரியோர்க்கு வந்த கோபமானது ஒரு கணமிருப்பதாயினும் அக்கோபத்தினைத் தாங்கிக்கொள்ளுதல் எவராலும் ஆகாது ஆதலால், அவ்வருந்தவரிடத்துப் பிழை செய்பவர் எவ்வளவு செல்வந்தராயினும் ஒரு கணத்துள்ளே அழிந்துவிடுவர் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "அருந்தவர்க்குப் பிழைசெய்தல் கூடாது என்பதறிந்தோம். பெரியார்க்குப் பிழை செய்தவர் எவராயினும் அழிவர் என்பதால் அரசர் முதலாயினோர் பெரியார்க்குச்செய்த பிழையால் அவர் அழியுங்காலத்து அவர் அரசும், பொருளும் எவ்வாறு ஆகும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

897. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளு மென்
தகைமாண்ட தக்கார் செறின். [ணாம்

(பரி.) இ-ள். தகைமாண்ட தக்கார் செறின் = சாப வநுக்கிரகத்தாலாய பெருமை மாட்சிமைப்பட்ட அருந்தவர் அரசனை வெகுள்வாராயின்,— வகை மாண்ட வாழ்க்கையும் வான் பொருளும் என்னாம் = உறுப்பழகுபெற்ற அவனரசாட்சியும் ஈட்டிவைத்த பெரும் பொருளும் என்பட்டு விடும்! எ-று.

உறுப்பு = அமைச்சு, நாடு, அரண், படை போன்றவை. செறிவென்பது அவர் செற்றமை தோன்ற நின்றது. இவ்வெச்சத்தான் முன் வருவனவற்றிற்கும் இஃதொக்கும். அரசர் தஞ்செல்வக்களிப்பான் அருந்தவர்மாட்டுப் பிழை செய்வாராயின், அச்செல்வம் அவர் வெகுளித்தீயான் ஒரு கணத்துள்ளே வெந்து விடுமென்பதாம். (எ)

விளக்கம்:—தம்மைத் துன்புறுத்தியவர்களைச் சபிப்பதற்கும், தம்மை வணங்கினவரிடத்து அருளைச் செலுத்துவதற்கும் காரணமாகிய பெருமையால் வெகு மாட்சிமை அடைகின்ற அருந்தவ



ராணவர் தமக்குப் பிழைசெய்த ஓர் அரசனைக் கோபிப்பாராயின், அவ்வரசனது அமைச்சு, நாடு, அரண், படை என்கின்ற உறுப்

புகளெல்லாம் அமைந்த அரசாட்சியும், அவன் சேர்த்துவைத்த பெரும்பொருள்களும் அழிந்தே விடுமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நிறைமொழி மாந்தராகிய தவத்தவர் கோபிப்பதே இல்லையென்றும், ஊழ்வலியால் அவர்கள் கோபிக்க நேரின் அக்கோபத்திற்கு இலக்கானவர்கள் உய்வது இல்லையென்றும், அவ்விதம் உய்யாததுடன் அவருடைய அரசும், அரசுக்கு உரிய அங்கங்களும் அவரது கோபத்தீயால் ஒரு கணத்துள்ளே வெந்து விடுமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணக்கர், "பெரியாரைப் பிழைத்தவர் அரசும், செல்வமும் போய் விடுமென்று அறிந்தோம். ஆயின், அப்பிழைத்தவரது குடிக்கும் ஏதேனும் தீங்கு நேருமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

898. குன்றன்னார் குன்ற மதிப்பிற் குடியொடு
நின்றன்னார் மாய்வர் நிலத்து.

(பரி.) இ-ள். குன்று அன்னார் குன்ற மதிப்பின்=குன்றத்தை யொக்கும் அருந்தவர் கெட நினைப்பாராயின்,—நிலத்து நின்றன்னார் குடியொடு மாய்வர்=அப்பொழுதே இந்நிலத்து நிலைபெற்றாற்போலுஞ் செல்வர் தம் குடியொடும் மாய்வர். எ-று.

வெயில் மழை முதலிய பொறுத்தலுஞ் சலியாமையும் உள்ளிட்ட குணங்களுடைமையின், 'குன்றன்னார்' என்றார்: "மல்லன் மலையனைய மாதவர்" * என்றார் பிறரும். நிலைபெற்றாற் போறலாவது:—இறப்பப்பெரியராகலின் இவர்க்கு எஞ்ஞான்றும் அழிவில்லையென்று கண்டாராற் கருதப்படுதல்.

விளக்கம்:—வெயில், மழை முதலியவைகளால் தமக்கு வரும் துன்பங்களைப் பொறுத்துக் கொள்ளுதலும், அவற்றால் சலியாமையுமுடைய மலையை ஒத்த மாதவர் தமக்குப் பிழைசெய்தவர் கெடும்படி நினைப்பாராகில், நினைத்த அப்பொழுதே அப்பிழை செய்தவர் இப்பூமியினுள் எக்காலத்தும் அழியாது நிலைபெற்றிருப்பவர் போன்று பிறரால் மதிக்கக்கூடிய பெருஞ் செல்வமுடையராயினும் தம் குடியோடும் மாய்ந்துபோவர் என்று இத்

* சீவகசிந்தாமணி, முத்திஇலம்பகம், 191.

திருக்குறள் கூறுகின்றது. இதனால், எவ்வித பெரிய செல்வமுடையாராயினும் அருந்தவராகிய பெரியோர்க்குப் பிழை செய்த காலத்தில் தாம் அழிவதுடன் தம் குடியும் அழிவதற்கு நேருமென்று அறிந்தோமென்றனர். ஆதலால், 'இவர் மிகப் பெரியவராதலால், இப்பெரியாராய செல்வத்தர் எக்காலத்தும் அழியார்' என்று உலகத்தாரால் எண்ணப்படக்கூடிய பெரிய செல்வத்தராயினும் தவத்திற் பெரியோரை இகழ்தல் கூடாது என்று அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "இத்தவமுடையாரது சாப அருள்கள் இப்பூமியில் உள்ளாராகிய மக்கள்மீது தான் செல்லும் போலும்! ஏனைய தேவர் முதலாயினாரிடத்துச் செல்லுதல் கூடாது போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

899. ஏந்திய கொள்கையார் சீறி னிடைமுரிந்து
வேந்தனும் வேந்து கெடும்.

(பரி.) இ-ள். ஏந்திய கொள்கையார் சீறின் = காத்தற்கருமையான் உயர்ந்த விரதங்களை உடையார் வெகுள்வாராயின்,—வேந்தனும் இடை வேந்து முரிந்து கெடும் = அவராற்றலான் இந்திரனும் இடையே தன்பதம் இழந்துகெடும். எ-று.

"வேந்தன் மேய தீம்புன லுலகமும்" † என்றார் பிறரும். நகுடனென்பான் இந்திரன்பதம்பெற்றுச் செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியன் வெகுள்வதோர்பிழை செய அதனாற் சாபமெய்தி அப்பதம் இடையே இழந்தானென்பதனை யுட்கொண்டு, இவ்வாறு கூறினார். இவை நான்குபாட்டானும் முனிவரைப் பிழைத்தலின்குற்றம் கூறப்பட்டது.

விளக்கம்:—மற்றைய மக்களால் செய்து காத்தற்கு அருமையான உயர்ந்த விரதங்களாகிய தவங்களை உடைய பெரியோர் கோபம் கொள்வாராயின், கோபங்கொண்ட அம்மாதவரது சாபத்தால் தேவர்களுக்குத் தலைவனாகிய தேவேந்திரனாயினும் தான் நூறு அஸ்வமேத யாகத்தால் அடைந்திருக்கின்ற பதவியாகிய இந்திர பட்டத்தையு மிழந்து கெட்டுப் போவான் என்று இத்திருக்-

குறள் கூறுகின்றது. இதனால், நம் நாயனார் தவத்திற் பெரியாரினும் எவர்மீது கோபிக்கினும் அவர் அழிந்து விடுவார் என்பதை அறி

† தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், 5.

69



வித்தற் பொருட்டு நகுடன் கதையை இத்திருக்குறளில் குறிப்பித்துள்ளார். அஃதென்னெனின்? தொண்ணூற்றொன்பது அஸ்வமேத யாகங்களைச் செய்து, நூறாவது அஸ்வமேத யாகத்தைச் செய்ய எண்ணி இருந்த நகுடன் என்பவனை இந்திர பதவிக்கு ஆளில்லாமையால் தேவர்களெல்லாம் இந்திரலோகத்திற்கு அழைத்துச் செல்லுதலும், சென்ற நகுடன் தான் இந்திர பட்டத்தை அடைந்த மகிழ்ச்சியின் மிகுதியால் இந்திராணியிடத்துச் செல்லுதல் வேண்டும் என்று தன்னுடைய விருப்பத்தைக் கூறவும், தேவர்கள் விரைந்து சென்று இந்திராணிக்கு அந்நகுடனது விருப்பத்தைக் கூறுதலும், அவள் தன் குருவாகிய வியாழ பகவானை அடுத்து 'என் தலைவனாகிய இந்திரன் இன்னும் உயிர் பிழைத்து உம்மால் நாசப்பட்ட சாபத்தால் இந்திரபதவியை இழந்து இருக்கின்றகாலத்தே அப்பதவியைத் தேவர்களால் அடைந்த நகுடன் என்பான் ஒருவன் என்னை விரும்புகின்றான்' என்னலும், குருவாகிய வியாழபகவான் 'அவ்விதம் விரும்புவானாயின் உனது நாயகன் உன்னிடத்து இதுகாறும் வருங்காலத்து எவ்வித தகுதியோடு வருவானோ, அவ்வித தகுதியோடு வருதல் வேண்டும் என்று கூறுவாயாக' என்றார். அவ்விதமே இந்திராணி தேவர்களுக்குச் சொல்லுதலும், தேவர்கள் சென்று நகுடனுக்குத் தெரிவிக்க, நகுடன் 'ஆனால் வழக்கம்போல செய்யுங்கள்' என்றனன். தேவர்களும் சப்தரிஷிகளை அழைத்து, இவ்விந்திரனைச் சிவிகையின்மீது ஏற்றிக் கொண்டு இந்திராணியிடத்துச் செல்லுங்களென்று கேட்டுக் கொண்டனர். அவ்விதமே சப்தரிஷிகளும்நகுடனென்னுமிந்திரனைச் சிவிகையின்மீது ஏற்றிச் செல்லுதலும், "காமநெறிபடரும் கண்ணினார்க் கில்லையே ஏமநெறி படருமாறு" என்றபடிக் காமத்தால் கண் இழந்து நிற்கும் நகுடனென்பான் தன்னைத் தாங்கிச் செல்

னும் தவசிகளுடைய மேன்மையை நோக்காது, "விரைந்து செல்லுங்கள்; விரைந்து செல்லுங்கள்" என்று பொருள்படும் "சர்ப்ப, சர்ப்ப" என்னும் மொழிகளைக் கூறினன். அம்மொழிகளைக் கேட்ட சிவிகையை முன் தாங்கிச் செல்லும் குறு முனிவரானவர் உடனே மிகுதியும் கோபமுடையவராகி 'எங்கள் ஆற்றல் இதுவென்று உணராது சர்ப்பவென்று கூறினய் ஆதலால், நீ சர்ப்



பமாகக் கடவாய்' என்று சபித்தார். அவ்விதம் அவர் சபித்த வுடன் தொண்ணூற்றொன்பது அஸ்வமேத யாகங்களைச் செய்து முடித்த வலிமையால் அடைந்ததாகிய இந்திர பதவியையும் இழந்த துடன், அரிய பிறவியாகிய மானிடர் தேவர் முதலியவர்களுள் ஒருவனாக இருந்த பிறப்பினையும் இழந்து, யாவராலும் வெறுக்கக் கூடிய பாம்பின் பிறப்பினை அடைந்து உருண்டு பூமியில் வந்து விழுந்தனன். ஆதலால் உலகத்து மக்கள் மாத்திரமன்று, வானுலகத் துத் தேவர் மாத்திரமன்று, அத்தேவர்களுக்குத் தலைவனாகிய தேவேந்திரனே யாயினும் அருந்தவரிடத்துப் பிழைசெய்வானாயின் அழிந்துவிடுவது திண்ணமென் றறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் தேவர்க்கு அரசனாகிய இந்திரனும் பெரியா ரைப் பிழைப்பானாயின், தன் பதமிழப்பான் என்பது கண்டோம். ஆயின், மக்கள், தேவர் ஆகிய இருவராலும் அழிக்கக்கூடாத அரண் களைத் தம் தவ வலிமையால் பெற்றவராயின், அவரையும் இப்பெரி யாரது கோபமானது அழித்து விடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

900. இறந்தமைந்த சார்புடைய ராயினு முய்யார்
சிறந்தமைந்த சீரார் செறின்.

(பரி.) இ-ள். சிறந்து அமைந்த சீரார் செறின் = கழியமிக்க தவத்தினை யுடையார் வெகுள்வாராயின்,—இறந்து அமைந்த சார்பு உடையாராயினும் உய்யார் = அவரான் வெகுளப்பட்டார் கழியப் பெரிய சார்பு உடையாராயி னும், அதுபற்றி உய்யமாட்டார். எ-று.

சார்பு = அரண், படை, பொருள், நட்பென விவை. அவையெல்லாம்

வெகுண்டவரது ஆற்றலாற் றிரிபுரம்போல அழிந்துவிடுமாகலின், 'உய்யார்' என்றார். சேருடையது சேரெனப்பட்டது. இதனால் அக்குற்றமுடையார் சார்பு பற்றியும் உய்யாரென்பது கூறப்பட்டது. (௰)

விளக்கம்:— மிகப் பெரிய தவத்தினை உடையார் கோபிப்பாராகில், அவர் கோபத்திற்கு ஆளானவர் மிகப் பெரிய அரண் முதலாகிய சார்பினை உடையவராயினும் பிழைப்பதில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், திரிபுரவாசிகளென்பார் மூவர் தங்கள் தவவலிமையால் இறைவனிடத்து இரும்புக்கோட்



டை, செம்புக்கோட்டை, வெள்ளிக்கோட்டை என்கின்ற மூன்று கோட்டைகளையும் அடைந்து வாழும் காலத்து, உலகத்து மக்களை உயிர்களென்று எண்ணாமல் தாம் மகிழ்ச்சி அடைந்த காலத்தெல்லாம் அக்கோட்டைகளோடு பறந்துசென்று தாம் பகை கொண்டவர்கள் இருக்குமிடமெல்லாம் அக்கோட்டைகளை இருக்கச்செய்து அழித்துக்கொண்டு வருகின்ற காலத்தே, அவ்வொழுக்கத்தினைக் கண்ட மாதவர்கள் தாம் வருந்துவதைச் சிவபெருமானுக்கு அறிவித்தலும், அவர் தேவர்களையெல்லாம் யுத்தத்திற்குச் செல்வதற்குத் தேர்கொண்டுவரும்படி ஏவினரென்றும், எல்லாத்தேவர்களும் தங்களையே ஓர் தேர் போலாக்கி, வேதங்களென்கின்ற குதிரைகளைப் பூட்டி, பிரமனென்னும் சாரதியை அமைத்து, மேருமலையைவில்லாகக்கொண்டு, வாசுகியை நாணாகக்கட்டி, விஷ்ணுமூர்த்தியை பாணமாக்கி, அப்பாணத்திற்கு முனையாக இருக்க அக்கினியையும், ஈர்க்காக இருக்கக் காற்றினையும் அமைத்துச் செல்லுதலும், அக்காலத்தே தம் ஆணவமலத்தடிப்பால் சக்கரமாக இருந்த சூரிய சந்திரர்கள் 'நாங்கள் சக்கரமாக இல்லாவிடில் எவ்விதம் இத்தேர் நடக்கும்' என்பது முதலாக, தேவர்கள் ஒருவருக்கொருவர் தாம் தாம் கொண்ட உறுப்புக்களை உயர்த்திக் கூறிக்கொள்ளுதலும், அதனை அறிந்த இறைவன் தேர் அருகில் வந்தவுடன் 'தேர் சித்தமாயிற்றோ? இதில் ஏறுதல் கூடுமோ?' என்று அத்தேரிடத்துத் தம் பெருவிரலை ஊன்றுதலும், அவ்வலிமையைத்

தாக்கும் வலிமை இல்லாத தேவர்களெல்லாம் இறந்து விழுந் தனரென்றும், அத்தேவர்களது அறியாமையை நீக்கவும், திரி புராதிகளின் ஆணவமலத்தடிப்பை ஒழிக்கவும் சிறிது சிரித் தாரென்றும், அச்சிரிப்பால் திரிபுரங்களும் வெந்து விழுந்தன வென்றும் கூறுகின்ற கதையை ஈண்டு விளக்கல் வேண்டி நாய னார் இத்திருக்குறளைக் கூறியதாக அறிகிறோம். இத்திரிபுரக் கதை யைத் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் தம் தேவாரத்தில்,

"கல்லால் நிழல்மேய இடர்காவாய் எனவானோர்
எல்லா மொருதேரா யயன்மறைபூட்டி நின்றுய்ய
வல்லா யெரிகாற்றீர்க்கரி கோல்வாசுகி நாண்கல்
வில்லால் எயிலெய்தா னிடம் வீழிம்மிழலையே."



என்று அருளிச் செய்திருத்தலானும் அறிதல் கூடும். ஆத லால், தவவலியால் பெரியராய் உள்ளவர் எவரோ அவர்க்குப் பிழை செய்பவர் எவ்வித அரண் முதலிய சார்புகளைப் பெற்ற வலிமையுடையவராயினும் பிழைத்தல் முடியாது என்பதை நன்கு உணர்ந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நட்பின் தகுதியை எதிர்மறை முகத்தால் விளக்கிய ஐந்து அதிகாரங்களை யும் அவை வெகுளியால் வருவனவென்றும், அவற்றின் பயன் இவையெனவும் அறிந்தோம். இனி, காமத்தால் வரும் பிழைய வற்றையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலா யினர்.

---

## 91. அதிகாரம்.

---

## பெண்வழிச்சேறல்.

(பரி.) இனிக் காமத்தான் வருவன நேரே பகையல்லவாயினும் ஆக்கஞ் சிதைத்தல் அழிவுதலைத் தருதலென்னுந் தொழில்களாற் பகையோடொத் தலிற் பகைப்பாற் படுவனவாமாகலான், அவற்றைப் பகைப்பகுதிய திறுதிக் கட்கூறுவான் றொடங்கி, முதற்கட் பெண்வழிச்சேறல் கூறுகின்றார். அஃ தாவது தன்வழி யொழுகற்பாலளாய இல்லாள் வழியே தான் ஒழுகுதல்.

விளக்கம்:—அதாவது, மேற்கூறியவண்ணம் காமத்தால் வருவனவாகிய பகைகள் நேரான பகைகள் அல்லவாயினும், மேன்மேல் வளருதலாகிய ஆக்கத்தைப் போக்குவதினாலும் அழிவாகிய காரியங்களை உண்டுபண்ணுவதினாலும் பகையோடு சமானமாயிருத்தலால், அக்காமத்தால் வரும் அவற்றினை பகைமையைப்பற்றிச் சொல்லிய அதிகாரங்களுக்குப் பிறகு சொல்லத்தொடங்கி, முதலில் பெண் வழிச்சேறல் என்னும் இவ்வதிகாரத்தைக் கூறுகின்றனர். பெண் வழிச்சேறலாவது:—தான் நியமித்தபடி நடக்க வேண்டியவளாகிய தன் மனையாள் நியமித்தபடி ஒருவன் நடப்பானாயின், அதுவே பெண் வழிச்செல்லல் என்பது ஆகும் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ்விதம் தனக்கு உள்ள சுதந்திரத்தைப் போக்கித் தன்மனைவி கற்பித்தவழியே எதற்காக ஒருவன் நடத்தல் வேண்டும்? அவ்விதம் நடப்பான் இவ்வுலகத்து எவ்விதமாவான்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



901. மனைவிழைவார் மாண்பய னெய்தார் வினைவிழை
வேண்டாப் பொருளு மது. [வார்

(பரி.) இ-ள். மனை விழைவார் மாண் பயன் எய்தார் = இன்பங் காரணமாகத் தம் மனையாளை விழைந்து அவடன்மையராய் ஒழுகுவார் தமக்கு இன்றியமையாத அறத்தினை யெய்தார்; — வினை விழைவார் வேண்டாப் பொருளும் அது = இனிப் பொருள்செய்தலை முயல்வார் அதற்கிடையீடென்று இகழும் பொருளும் அவ்வின்பம். எ-று.

மனையும், விழைதலும், பயனும் ஆகுபெயர். அவ்வின்பம் = அவடன்மையராதற்கு ஏதுவாய வின்பம். அஃது அவளாற் பயனாய வறத்தினும் அவ்வறத்திற்குந் தனக்கும் ஏதுவாய பொருளினுஞ் செல்லவிடாமையின், விடற்பாற்றென்பதாம். (க)

விளக்கம்:—எவர் தாம் அடையவேண்டிய இன்பத்தின் பொருட்டு தம் மனையாள் மீது பெரியதோர் விருப்பத்தைக் கொண்டு அவள் ஏவியபடி நடக்கிறாரோ, அவர் இம்மை, மறுமை,

வீடு ஆகிய மூன்றினையுமடைவதற்குத் தமக்கு இனிய துணையாய் நிற்கும் அறமென்பதனை அடையமாட்டாரென்றும், அதுவுமன்றி, அறம், இன்பம் ஆகிய இரண்டினையும் அடைவிக்கும் பொருள் செய்தலை மேற்கொண்டவர்கள், அப்பொருள் செய்வதற்கு இப்பெண் வழிச்செல்லல் இடையூறாய் உள்ளதென்று இகழ்ந்து நீக்குவதாக உள்ளதால், பொருளையு மடையமாட்டார் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், எவன் ஒருவன் தன் மனைவியினிடத்தே காமம் காரணமாகப் பணிந்து நடந்து அவள் சொல்வழி நிற்கின்றானே அவன் இனியதாகிய அறத்தையும், அவ்வறத்திற்குத் துணையாகிய பொருளையுமடையாது வருந்துவானென்றும், ஆதலால் பெண்வழிச் செல்வதைவிட்டு விலகல் வேண்டும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பொருளில்லாதவன் ஒருவன் தான் பெண்வழிச் செல்வதால் துன்பம் அடைதல் கூடும். பெரியதோர் செல்வம் அடைந்த ஒருவன் பெண்வழிச் செல்வானாயின் அவனுக்கு ஏது உண்டாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

பெண்வழிச்சேறல் 551

**902. பேணாது பெண்விழைவா னாக்கம் பெரியதோர்**
**நாணாக நாணுத் தரும்.**

(பரி.) இ-ள். பேணாது பெண் விழைவான் ஆக்கம் = தன்னாண்மையை விட்டு மனையாளது பெண்மையை விழைவான் எய்துகின்ற செல்வம், — பெரியது ஓர் நாண் ஆக நாணுத் தரும் = இவ்வுலகத்து ஆண்பாலார்க்கெல்லாம் பெரியதோர் நாணுண்டாகத் தனக்கும் நாணுதலைக் கொடுக்கும். எ-று.

எய்துகின்றதாயிற்று, படைக்கும் ஆற்றலிலனாகலின். அச்செல்வத்தால் ஈதலுந் துய்த்தலும் முதலிய பயன்கொள்வான் அவளாகலின், அவ்வாண்மைச் செய்கை அவள்கண்ணதாயிற்றென்று ஆண்பாலார் யாவரும் நாண அதனாற் றன்னாண்மையின்மை அறிந்து பின் தானும் நாணுமென்பது நோக்கிப் 'பெரியதோர் நாணாக நாணுத்தரும்' என்றார். இவையிரண்டு பாட்டானும் மனைவிழைதற் குற்றங் கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—எவன் ஒருவன் தனக்கு உள்ளதான ஆண் தன்

மையைப் போக்கித் தன்னால் விரும்பப் படுகின்ற மனைவியினது பெண் தன்மையை விரும்புகின்றானோ, அவ்வித கருதியுடையான் பெற்ற செல்வமானது இவ்வுலகத்து ஆண்மையோடுகூடி இருத்தல்வேண்டும் என்னும் ஆண்பாலார்க்கெல்லாம் மிகப் பெரியதோர் நாணத்தை உண்டாக்குவதுடன் அச்செல்வத்தைப் படைத்த அவனுக்கும் பெரியதோர் நாணத்தை உண்டுபண்ணும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பூர்வ நல்வினைப் பயனால் ஒருவன் செல்வத்தை அடைந்திருந்தும் தான் ஒருவர்க்குக் கொடுப்பதோ அல்லது தானே அனுபவித்தலோ ஆகிய நன்மைகளைத் தானே செய்வதற்கு இல்லாமல் தன் மனைவி சொல்லும் வண்ணம் பிறர்க்குக் கொடுத்தும் தான் உண்டும் காலம் கழிக்க நேருகின்றதனால், இவனுக்கு உள்ள ஆண்மைச் செயலை அவளிடம் ஒப்புவித்து விட்டு அவள் பெண் தன்மையைத் தான் வாங்கிக் கொள்கின்றானத லால், உலகத்திலுள்ள ஆண்மக்கள் யாவரும் இவனைக் கண்ட காலத்து மிகுதியும் நாணத்தை அடைவதுடன் அவர்களைக்கண்ட இவனும் 'நாம் இவ்விதம் மனைவி சொல்லும் வழி நடப்பதால் ஓர் ஆண்மகனாக இவ்வுலகத்து உலாவுவதற்கு இல்லாமற் போயிற்று' என்று தனக்குத் தானே வருந்திப் பிற ஆண்மக்களைப் பார்ப்பதற்



கும் கூடாதவனாய் நாணத்தோடு இருப்பான் என்றறிகோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "எதற்காகப் பெண்தன்மை விரும்புபவன் நாணமடைவான் என்பதையும் விளக்கல் வேண்டும்" என்றதும், ஆசிரியர் கூறுவாராயினர்.

903. இல்லாள்கட் டாழ்ந்த வியல்பின்மை யெஞ்ஞான்று
நல்லாரு ணாணுத் தரும்.

(பரி.) இ-ள். இல்லாள்கண் தாழ்ந்த இயல்பு இன்மை=ஒருவன் இல்லாள்மாட்டுத் தாழ்தற்கு ஏதுவாய அச்சம்—நல்லாருள் நாணு எஞ்ஞான்றும் தரும்=அஃதிலனாய நல்லாரிடைச் செல்லுங்கால் நாணுதலை அவனுக்கு எக்காலத்துங் கொடுக்கும். எ-று.

அவடான் அஞ்சி ஒழுகுதல் இயல்பாகலின், அவளையஞ்சுதல் இயல்

பின்மையாயிற்று. அன்னமஞ்சி யொழுகுதலின், அவனை வியப்பா ரில்லையாம்; ஆகவே, எல்லாக்குற்றமும் விளையுமென்பது நோக்கி, எஞ்ஞான்றும் நாணுத்தரும் என்றார். (௩)

விளக்கம்:—ஒருவன் தன் மனைவி யிடத்துப் பணிந்து நடப்ப தற்குக் காரணமாகிய அச்சத்தைக் கொண்டிருப்பானாயின், அவ்வச்சமானது அவ்விதம் ஒழுகாத நற்குண முடையவரிடத்து அவன் செல்லுகின்ற காலத்தெல்லாம் அவனுக்கு நாணத்தை உண்டு பண்ணும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், அவள் அஞ்சி நடக்க வேண்டிய இயற்கைக்கு மாறாக இவன் அஞ்சி நடப்பதால், மனைவியாகிய அவளை 'இது விதி; இது விலக்கு; இவ்வண்ணம் செய்தல்வேண்டும்; இவ்வண்ணம் செய் தல் கூடாது' என்று கட்டளையிடுவோர் ஒருவருமில்லை யாதலால், அவள் எண்ணிய வழியெல்லாம் அவன் ஒழுகுதல் கூடுமென் றும், அவ்விதம் செய்வதால் எல்லாக் குற்றங்களும் விளையு மென் றும், ஆகவே இவ்வித குற்றங்களோடு கூடிய இவன் நற்குண முடையாரிடத்துச் செல்லுங்காலத்து இவனுக்கே அச்செயல் நாணத்தை உண்டுபண்ணுமென்றும் அறிகிறோம். ஆதலால் பெண் வழிச் செல்பவன் நாணவேண்டி உள்ளது என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் நாணத்தை அடைக்கும் மனைவியை விரும்புபவனுமிருப்பின், இவன் ஏதேனும் ஒருகாரியத்தைத் தனது



இல்லையால் செய்யப் புகுங்காலத்து அவன் செய்யும் தொழி லைக் கண்டு நல்லவர் மகிழ்வரோ?" என்றனர், ஆசிரியர் கூறலா யினர்.

904 மனையாளை யஞ்சு மறுமையி லாளன்
வினையாண்மை வீறெய்த லின்று.

(பரி.) இ-ள். மனையாளை அஞ்சும் மறுமை இலாளன் = தன் மனையாளை யஞ்சி ஒழுகுகின்ற மறுமைப்பயனில்லாதானுக்கு — வினை ஆண்மை வீறு எய் தல் இன்று = வினையை ஆளுந்தன்மை உண்டாயவழியும் நல்லோரால் கொண்டாடப்படாது. எ-று.

உண்டாயவழியுமென்பது அவாய்நிலையான் வந்தது. இல்லறஞ் செய் தற்குரிய நன்மையின்மையின் 'மறுமையிலாளன்' என்றும், வினையையாளுஞ்

தன்மை நன்றன்மையில்லாத ஆண் முடிவுபோகாமையின் 'வீறெய்த லின்று' என்றுங் கூறினர். (௪)

விளக்கம்:—தன் மனைவிக்குப் பயந்து அவள் சொல்லும் வண்ணம் நடக்கின்றதால் மறுமைப் பயனை இழந்த ஒருவனுக்கு ஓர் காரியத்தைச் செய்யும் தன்மை உண்டான இடத்தும் அவன் செய்த அக்காரியமானது நல்லறிவுடையோரால் மகிழ்வுடன் ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பெண்வழிச் செல்பவனாகிய இவன் இல்லறத்தக்க நல்லறமாகச் செய்வதற்கு முடியாதவனாய் இருக்கின்றானாகலின், மறுமைப் பயனாயிருக்கின்ற தேவபோகம் முதலியவைகளை அடைவதற்கு இல்லாமல் போகின்றான் என்றும், அவ்விதம் மறுமைப்பயனை அடைவதற்கு யோக்கிய மில்லாத இவன் ஏதேனும் ஓர் நற்காரியத்தைச் செய்ய மேற் கொள்வானாயினும், அக்காரியம் முடிவடைதற்குப் பொருள் செலவழித்தல் முதலியவைகளை இவனாகச் செய்வது கூடாமையாதலாலும் இவன் மனைவியின் விருப்பத்தின் படியே பொருள் செலவழித்தல் வேண்டுமாதலாலும் தான் விரும்பியபடியே செய்யும் அற்பக்குண முடையாள் இவன் எடுத்த காரியத்தை முடிவு பெறும்படிச் செய்யாளென்றும், அவ்விதம் அவள் செய்வதால் இவன் எடுத்த காரியம் முடிவு பெறாதென்றும், முடிவு பெறாத அக்காரியத்தைக் கண்ட நல்லறிஞர் இவன்



செய்த அவ்வளவு காரியத்திற்கும் மகிழ்ச்சி அடையாது அலட்சியமாக நினைப்பாரென்றும் அறிந்தோம். ஆதலால் பெண்வழிச் செல்பவன் நல்லூழால் ஏதேனுமோர் நற்காரியத்தைச் செய்யப் புகுந்தாலும், அக்காரியம் முடிவு பெறாது போய்விடும் என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவன் தேடிய பொருளை இவன் நல்வழியில் செலவழித்தற்கும் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

905. இல்லாளை யஞ்சுவா னஞ்சுமற் றெஞ்ஞான்று
நல்லார்க்கு நல்ல செயல்.

(பரி.) இ-ள். இல்லாளை அஞ்சுவான் = தன் மனையாளையஞ்சுவான்—

நல்லார்க்கு நல்ல செயல் எஞ்ஞான்றும் அஞ்சும்=தான் தேடிய பொருளே யாயினும் அதனால் நல்லார்க்கு நல்லனசெய்தலை எஞ்ஞான்றும் அஞ்சாநிற்கும்.

நல்லார்=தேவர், அருந்தவர், சான்றோர், இருமுதுகுரவர் முதலாயினாரும் நல்விருந்தினரும். நல்லனசெய்தல்=அவர்விரும்புவனகொடுத்தல். அது செய்யவேண்டும் நாள்களினுமென்பார், 'எஞ்ஞான்றும்' என்றார். "இல்லானை யஞ்சிவிருந்தின்முகங் கொன்றநெஞ்சிற்—புல்லாளனாக"* என்றார் பிறரும். (௫)

விளக்கம்:—தன் மனைவியைக்கண்டு பயந்து நிற்பவன் எவனோ அவன் அடைந்த உள்ள பொருள் தானே தேடிய பொருளாக இருந்தாலும் அப்பொருளால் நல்லவர்களுக்கு நல்ல அறங்களை எக்காலத்தும் செய்வதற்கில்லாமல் பயந்து கிடப்பான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் ஒருவன் தான் தேடிய பொருளை அறத்தின் பொருட்டாகச் செலவழித்தல் வேண்டும் என்று மனத்தில் விருப்பம் கொண்டானாயினும், அவ்வித தருமச்செயலைத் தேவர்களுக்கும், அரிய தவத்தவர்களுக்கும், சால்புடைய சான்றோர்க்கும், தாய் தந்தை முதலியோர்க்கும், ஒழுக்கமுடைய விருந்தினர்க்கும் செய்யவேண்டிய காலங்களிலும் செய்வதற்கில்லாது அஞ்சுவா

*இல்லானை யஞ்சி விருந்தின் முகங் கொன்ற நெஞ்சிற், புல்லாளனாக மறத்தொற்றி வெளைப் புகைந்து, வில்வா ளழுவம்பிளந்திட்டு வேலுண்டு வேக்கிக், கொல்யானை யுந்திக் குடைமேலுமோர் கோலெழுதினான். (சீவகசிந்தாமணி; மண்மகளிலம்பகம்—217)



னென்றும், இவைகளுக்கெல்லாம் காரணம் தன் மனைவியினிடத்தே கொண்டிருக்கின்ற இன்பம் ஒன்றே யென்றும், ஆதலால் நில்லா இன்பமாகிய ஒன்றின் பொருட்டாகப் பெண்வழிச் செல்பவனுக்கு நிலைக்கும் இன்பமாகிய பேரின்பத்தை அடைவதற்கு இல்லாமற்போம் என்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பெண்வழிச் செல்பவன் ஒருவன் வானவுலகத்து வாழும் தேவர்களில் ஒருவனைப்போல் செல்வத்தைப் பெற்றுவாழ்வானாயின் அக்காலத்து உலகோர் அவனை எவ்விதம் கருதுவர்?" என்னலும், ஆசிரி

யர் கூறுவாராயினர்.

906. இமையாரின் வாழினும் பாடிலரே யில்லா
ளமையார்தோ ளஞ்சு பவர்.

(பரி.) இ-ள். இல்லாள் அமை ஆர் தோள் அஞ்சுபவர் = தம்மில்லாளுடைய வேய்போலுந் தோளினை அஞ்சுவார்,—இமையாரின் வாழினும் பாடு இலர் = வீரத்தாற் றுறக்கமெய்திய அமரர்போல இவ்வுலகத்து வாழ்ந்தாராயினும், ஆண்மையிலர். எ-று.

அமரர்போல வாழ்தலாவது:—பகைத்த வீரர் தோள்களையெல்லாம் வேறலான் என்றும் மதிக்கப்பட்டு வாழ்தல். அது கூடாமையின், 'வாழினும்' என்றார். அமையார்தோளெனவே, அஞ்சுதற் காரணத்தது மென்மை கூறிய வாறு. வீரர்தோள்களை வென்றாராயினும் இல்லாடோள்களை அஞ்சுவார் ஆண்மையில ரென்பதாம். இவை நான்குபாட்டானும் அவளையஞ்சுதற் குற்றம் கூறப்பட்டது. (சு)

விளக்கம்:—தம் மனைவியினுடைய மூங்கில்போன்ற அழகு வாய்ந்த தோளினை விரும்பி அவளுக்கு அஞ்சுகின்றவர் தம்முடைய வீரத்தால் பகைவரை யெல்லாம் வென்று தேவரோடு அடைந்த அமரரென்னும் தேவர்களைப்போல இவ்வுலகத்தில் வாழ்ந்திருந்தாராயினும், ஆண்மையில்லாதவரே ஆவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், தம்மோடு பகைத்த வீரர்களுடைய தோள்களை எல்லாம் வெட்டி வெற்றிகொண்டு அவ்வெற்றியால் பலராலும் நன்கு மதிக்கப்பட்டு வாழ்ந்தவர் மறுமையில் தேவ உலகத்தை அடைவது திண்ணமென்று நூல்கள் கூறுகின்றமையால், அவ்விதம் தோள்வல்லமை உடையவராக இருந்து ஒருகால் தம் பகைவரை



வென்று அரசாளக் கூடியவராய் இருந்தாலும், வீரர்கள் தோள்களை வெட்டிய இவர் தம் மனைவியின் தோளுக்கு அஞ்சுவாராயின், வீர முடையரென்று அறிவதற்காகாது என்று அறிந்தோ மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய நான்கு திருக்குறள்களாலும் மனைவிக்குப் பயந்து நடப்பதால் வரும் குற்றங்கள் இவை என உணர்ந்தோம். பெண்வழிச் செல்பவன் ஆண்மை உடையவனாயினும்

ஆண்மை இல்லாதவன் என்றமையால் அவனது ஆண்மையை உலகோர் எங்ஙனம் கருதுவர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

907. பெண்ணேவல் செய்தொழுகு மாண்மையி னாணுடைப்
பெண்ணே பெருமை யுடைத்து. [டைப்

(பரி.) இ-ள். பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்மையின்=நாணின்றித் தன்னில்லாளது ஏவற்றொழிலைச் செய்து திரிகின்றவனது ஆண்டன்மையின்—நாண் உடைப் பெண்ணே பெருமை உடைத்து=நாணினை யுடைய அவள் பெண்டன்மையே மேம்பாடுடைத்து. எ-று.*

நாணுடைப் பெண்ணென வேண்டாது கூறியது அவளேவல் செய்வானது நாணின்மை முடித்தற் காதலின், அம்மறுதலைத்தொழில் வருவிக்கப் பட்டது. ஏவல்—ஆகுபெயர். இறுதிக்கட் பெண்ணென்பதூஉம் அது. ஏவல் செய்வித்தாள் கோட்சிறப்புத்தோன்றப் பெண்ணேயெனப் பிரித்தார். (எ)

விளக்கம்:—நாணமில்லாது, தன் மனைவியால் ஏவப்படுகின்ற ஏவல் தொழிலைச் செய்து திரிகின்ற ஒருவனது ஆண்மைத் தன்மையைக் காட்டிலும், இயல்பாகவே நாண் என்னும் தன்மையை வெளிப்பட அடையவேண்டிய அம்மனைவியின் பெண் தன்மையே மிக மேம்பாடு உடையதாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நாணத்தையே ஆபரணமாகப் பூணவேண்டிய ஒரு பெண்ணினது ஏவலை மேற்கொண்டு இவன் தனது நாணத்தை இழந்து பலரால் பழிக்கப்பட்டு உயிர் வாழ்கின்றானாதலால் அப்பெண்ணைக் காட்டிலும் ஆண்மகனென்று சொல்லிக்கொள்ளும் இவனுடைய தகுதியே மிகுதியும் இழிவுடையதாகும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்விதம்

* "ஆண்மை" என்பதற்கு ஆளுந்தன்மை யென்றும், "பெண்மை" என்பதற்கு அமைதித்தன்மை யென்றும் நச்சினார்க்கினியர் பொருள் கூறியுள்ளார்.



பெண் ஏவல் செய்வார் தம் நட்பினர்க்கு ஏதேனும் குறை உண்டாகுமாயின் தீர்க்கவல்லவரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாரா

யினர்.

908. நட்டார் குறைமுடியார் நன்றாற்றார் நன்னுதலாள்
பெட்டாங் கொழுகு பவர்.

(பரி.) இ-ள். நன்னுதலாள் பெட்டாங்கு ஒழுகுபவர் = தாம்வேண்டியவாறன்றித் தம் மனையாள் வேண்டியவாறு ஒழுகுவார்—நட்டார்குறை முடியார் = தம்மொடு நட்புச் செய்தார் உற்ற குறை முடிக்கமாட்டார்,—நன்று ஆற்றார் = அதுவேயன்றி மறுமைக்குத் துணையாய அறஞ்செய்யவுமாட்டார். எ-று.

நன்னுதலாளென்பதனை "அமையார்தோள்"* என்புழிப்போலக் கொள்க. அவளானே அழிந்து வரலும் பொருள்கொடுத்தலுங் கூடாமையின், இருமைக்கும் வேண்டுவன செய்யமாட்டாரென்பதாம். (அ)

விளக்கம்:—எவர் தாம் விரும்பிய வண்ணம் செய்வதற்கில்லாமல் தம் மனைவி விரும்பியவண்ணம் செய்து உயிர் வாழ்கின்றாரோ அவ்விதவொழுக்கமுடையார் தம் நட்பினர்க்கு நேர்ந்த ஏதேனும் ஒரு குறையைத் தீர்க்க வல்லவர் ஆகார் என்றும், அதுவல்லாமலும் மறுமைப் பயனை உண்டாக்கும் நல்லறத்தினையும் செய்யவல்லவர் ஆகார் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் சேர்ந்த பொருள்கள் தம்முடையவாக இருப்பினும் தாமே கேட்டவர்க்குக் கொடுத்தலும் குறைதீர்த்தலும் கூடாமையான், நட்டார்குறை முடித்து இம்மைக்கு ஆகவேண்டிய புகழையும் அறத்திற்குரிய பொருள் கொடுத்து மறுமைக்கு ஆகவேண்டிய புண்ணியத்தையும் தேடுவதற்கில்லாமல் போவரென்று அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்வித பெண் ஏவல் செய்வார் தாம் விரும்பிய இன்பத்தையாவது பெறுவரோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

909. அறவினையு மான்ற பொருளும் பிறவினையும்
பெண்ணேவல் செய்வார்க ணில்.

(பரி.) இ-ள். அறவினையும் = அறச்செயலும்—ஆன்ற பொருளும் = அது முடித்தற்கு ஏதுவாய பொருட்செயலும்—பிறவினையும் = அவ்விரண்டின்

*திருக்குறள்—906.



வேறாய இன்பச்செயல்களும்—பெண் ஏவல் செய்வார்கண் இல் = தம்மனை

யான் ஏவல் செய்வார்மாட்டு உளவாகா. எ-று.

புலன்களொத்தாகலின், பிறவினை யெனப் பன்மையாயிற்று. அவை நோக்கி அறச்செயல் பொருட்செயல்கள் முன்னே யொழித்தார்க்குத் தலைமை அவன் கண்ணதாகலின், பின் அவைதாமும் இல்லாயினவென்பது தோன்ற, அவற்றைப் பிரித்துக் கூறினார். இவை மூன்றுபாட்டானும் அவனேவல்செய்தற் குற்றங் கூறப்பட்டது. (க)

விளக்கம்:—தம்மனையாள் இட்ட வேலைகளைச் செய்து உயிர் வாழ்கின்ற மக்களிடத்து அறத்திற்கு உரிய செயலாவது, அவ்வறத்தை முடித்தற்கு உரிய பொருளைச் செய்யும் செயலாவது, அவ்விரண்டிற்கும் வேறுகிய இன்பத்தை உண்டாக்கும் செயலாவது உண்டாகமாட்டா என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், முன்னர் அறத்தினையும், பொருளையும் தேடுவதற்குப் பெண் ஏவல் செய்வார்க்குக் கூடாது என்பவர் இன்பத்தின் பொருட்டே பெண் ஏவல் செய்து கிடக்கின்ற இவ்வறிவிலாளுக்கு அவ்வின்பமொன்றுவது கைகூடுமோ எனின்? அவ்வின்பமும் அவள் விரும்பிய காலத்தே இவன் அடையக் கூடுமே அன்றி இவன் விரும்பிய காலத்து விரும்பிய வண்ணம் அடைதற் கில்லாமல் போகுமாதலால், இவன் அடைகின்ற இன்பமும், அடையாத இன்பமே என்று கூறுவாராய் அவ்வின்பமும் இல்லை என்று பிரித்துக் காட்டினார். ஐம்புலன்களாலும் இன்பம் அனுபவிப்பது இயல்பு ஆதலால், இன்பச் செயல்கள் என்று பன்மையால் காட்டி எல்லா இன்பங்களையும் விரும்பிய வண்ணம் எய்தாத காலத்து இன்பம் அனுபவிக்கின்ற ஒருவனுக்கு அவன் அனுபவித்த இன்பம் இன்பமாகாது என்று மறித்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய மூன்று திருக்குறள்களாலும் இன்பம் விரும்பிப் பெண் ஏவல் செய்வார்க்கு வரும் குற்றங்களை அறிந்தோம். ஆயின், இவ்வித பெண்வழிச் செல்லல் என்னும் பேதைமை எவரிடத்து உண்டாகாதிருத்தல் கூடும் என்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



910. எண்சேர்ந்த நெஞ்சத் திடனுடையார்க் கென்

(பரி.) இ-ள். எண்சேர்ந்த நெஞ்சத்து இடன் உடையார்க்கு=கருமச் சூழ்ச்சிக்கட்சென்ற நெஞ்சத்தினையும் அதனானாய செல்வத்தினையும் உடையராய வேந்தர்க்கு.—பெண் சேர்ந்து ஆம் பேதைமை எஞ்ஞான்றும் இல்=மனையாளைச் சேர்தலான் விளையும் பேதைமை எக்காலத்தும் உண்டாகாது.

“இடனில்பருவத்தும்” *எனவும் “இடனின்றியிரந்தோர்க்கு”, †எனவும் வந்தமையான், இடனென்பது அப்பொருட்டாதலறிக. இளமைக்காலத்து மென்பார், 'எஞ்ஞான்றும்' என்றார். அப்பேதைமையாவது:—மேற்சொல்லிய விழைதல், அஞ்சல், ஏவல்செய்தலென்னும் மூன்றற்குங் காரணமாயது. எதிர் மறைமுகத்தான் அம்மூன்றும் இதனாற் றொகுத்துக் கூறப்பட்டன. (௰)

விளக்கம்:—தாம் எடுத்த தொழிலுக்கு உரிய உபாயங்களைச் செய்வதற்குச் செல்லுகின்ற மனத்தினையும் அவ்விதம் செய்து அத் தொழிலால் வந்த செல்வத்தினையும் உடையவராகிய அரசர்க்கு மனைவியின் வழிச்சென்று அவளால் விளையும் அறிவிலாக் குணங்கள் எந்தக் காலத்தும் உண்டாகா என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், எவனொருவன் நல்வழியில் பொருளைச் சம்பாதிக்க எண்ணி அதற்குரிய நற்கருமங்களைச் செய்தற்கு உரிய உபாயங்களையே பலகாலும் எண்ணிச் செய்கின்றானோ அவன் மனம் அவ்வுபாயங்களிலேயே எக்காலத்தும் செல்லுமென்றும், அவன் தேடிய பொருள் நல்ல அறத்திற்கே உபயோகப் படுமென்றும், அவ்விதம் தன் முயற்சியால் பொருளைச் சம்பாதிக்கின்ற அவன் ஐம்புலன்கள் ஆரத் தம் மனைவியினிடத்து இன்பம் துய்க்க எண்ணுவானாயினும் அவளைத் தன் வழி நிற்கச் செய்து தான் அவள் வழிச் செல்லானாய் இருப்பன் என்றும், அவ்விதம் பெண்வழிச் செல்லாத அவன் முதுமைப் பருவத்தில் அல்லாமல் பெண்ணை விட்டுப் பிரியக் கூடாத இளமைப் பருவத்தும் பெண்வழிச் சென்று இன்பம் துய்த்து பேதைமை அடைய மாட்டான் என்றும் அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணக்கர், “பெண்வழிச் சென்று பேதைமை அடையாத ஒருவன் பெண்ணை விரும்புதலும், பெண்ணிற்கு அஞ்ச

* திருக்குறள்—218. † கலி, பாலை—1.

தலும், பெண் இட்ட வேலைச் செய்தலும் ஆகிய குற்றங்களுள் செல்லாரென்றும், ஏனையோர் செல்வரென்றும், பெண்வழிச் சேறல் என்னும் இவ்வதிகாரத்தால் அறிந்தோம். இனிக் காமத்தால் உண்டாகும் ஏனைய குற்றங்களையும் எடுத்து விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 92. அதிகாரம்.

---

## வரைவின்மகளிர்.

(பரி.) அஃதாவது தந்நலம் விலைகொடுப்பார் யாவர்க்கும் விற்பதல்லது அதற்கு ஆவார் ஆகாதாரென்னும் வரைவிலாத மகளிரது இயல்பு; ஆதலால் தமக்குரிய மகளிரான் வருங் குற்றத்தின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, தம்முடைய அழகு முதலிய நலங்களை விலைகொடுத்து வாங்குவார் யாவராக இருப்பினும் விற்று விடுவது அல்லாமல் அதை விட்டு இவர் தக்கவர், இவர் தகாதவர் என்னும் அளவினை உட்கொள்ளாத காமக்கிழத்தியர்களாகிய பொதுமகளிர் இயற்கையாம். தமக்குச் சொந்தமாகிய மனைவியரால் வரும் குற்றத்தையெல்லாம் எடுத்துக்கூறி இனி இப்பொதுமகளிரது இலக்கணத்தைக் கூற இவ்வதிகாரத்தை இங்கு வைத்தனர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பொருள் ஒன்றையே கருதித் தம் மனத்தை யாவரிடத்தும் செலுத்தும் மாதருக்கு அன்பென்பது உண்டாகுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

911. அன்பின் விழையார் பொருள்விழையு மாய்தொடி
யின்சொ லிழுக்குத் தரும். [யா

(பரி.) இ-ள். அன்பின் விழையார் பொருள் விழையும் ஆய் தொடியார் =ஒருவனை அன்புபற்றி விழையாது பொருள்பற்றி விழையும் மகளிர்—இன் சொல் இழுக்குத் தரும்=அது வையுதார்தலையும் தாம் அன்புபற்றி விழைச்

தாராகச் சொல்லும் இனியசொல் அவனுக்குப் பின் இன்னாமையைப் பயக்கும், எ-று.

பொருள்வெஃகுழி இன் விகாரத்தாற் றொக்கது. ஆய்ந்தொடியினை யுடையா ரென்றதனாலும், இனியசொல்லென்றதனாலும், அவர் கருவி கூறப்



பட்டது. அச்சொல் அப்பொழுதைக்கு இனிதுபோன்று பின் வறுமை பயத்தலின், அது கொள்ளற்க வென்பதாம். (க)

விளக்கம் :—ஆபரணத்தால் அழகு பெறச் செய்த தம் நலத்தைப் பொருள் கருதி எவர்க்கும் விற்கின்ற பொதுமகளிர் ஒருவனை அன்புகாரணமாக விரும்புவது இல்லையாதலால், அவ்விதம் தமக்கு வேண்டிய பொருள்கள் தம் கையில் கிடைக்கும் வரையில் தாம் மிக அன்போடு புணர்ந்தவராய்ச் சொல்லுகின்ற இனிய சொற்களின் பொருட்டு அவர்களை விரும்பிச் செல்லுகின்ற ஒருவனுக்குப் பிறகு அவை துன்பத்தைக் கொடுக்குமென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், அன்பென்பது சிறிதுமில்லாமல் பொருளொன்றையே கருதித் தம் மேனியை அணி முதலியவைகளால் அழகு பெறச் செய்து இனிய சொற்களைக் கூறி உயிர் வாழும் பொதுமகளிரது சொல் அவரோடு புணர்ந்த ஒருவனுக்கு அப்போது மிக இனிமையைத் தருவது போல் காணப்படினும், பொருளை இழந்து வறுமை வருங்காலத்துத் துன்பத்தை அடைவிக்குமாதலால், அப்பெண்களது நட்பினைக் கொள்ளுதல் கூடாதென்று அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்வித தகுதியுடையார் தம் நட்பினை விடுதற்கு உபாயம் நம் நாயனார் என்ன கூறுகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறவாராயினர்.

912. பயன்றூக்கிப் பண்புரைக்கும் பண்பின் மகளிர்
நயன்றூக்கி நள்ளா விடல்.

(பரி.) இ-ள். பயன் தூக்கிப் பண்பு உரைக்கும் பண்பு இல் மகளிர்= ஒருவனுக்கு உள்ளபொருளை அளந்தறிந்து அஃதெய்துந்துணையும் தம்பண்புடைமை சொல்லும் பண்பில்லாத மகளிரது—நயன் தூக்கி நள்ளா விடல்=

ஒழுகலாற்றினை ஆராய்ந்தறிந்து அவரைப் பொருந்தாது விடுக. எ-று.

பண்பு சொல்லின்க ணல்லது தங்கட்கிடையாமை தோன்றப் 'பண்பின் மகளிர்' என்றும், அவர்க்கு அது சாதிதருமமாதல் நூலானேயன்றி அவர் செயலானுமறிந்தென்பார் 'நயன்றூக்கி' என்றும், அவ்வறிவு அவரை விடுதற்கு உபாயமென்பது தோன்றப் பின் 'நள்ளாவிடல்' என்றுங் கூறினார். (உ)

விளக்கம்:—ஒருவனிடத்தே உள்ள பொருளின் அளவினை அறிந்து அதற்குத் தக்க அளவாக அப்பொருளை அடையும் வரை





யும் தம்முடைய அன்புடைமையெல்லாம் வாக்கால் கூறும் நற்குணமில்லாத பொதுமகளிருடைய ஒழுக்கத்தினை நூலாலும், அநுபவ ஞானத்தாலும் அறிந்து அவரைச் சேராது விடுதல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, வாக்களவாகத் தமக்கு உள்ளதாகச் சொல்லும் அன்பு முதலியவைகளைக் கருவியாகக் கொண்டு மயக்கும் ஜாதி தர்மமுடைய அப்பொதுமகளிரை நன்றாக அறிந்து அவரிடத்துச்சேராது அவரை முற்றவும் விடுதலே உபாயமாகும் என்று அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் வாக்களவாகக் கூறி, மனத்தால் வஞ்சித்து நிற்கின்ற அம்மகளிரிடத்து முயங்குகின்ற காலத்து அச்சேர்க்கையானது பொருள் கொடுத்துச் சேருகின்ற ஒருவனுக்கு எவ்விதமான இன்பத்தைத் தரும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

913. பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்க மிருட்ட
லேதில் பிணந்தழீஇ யற்று. [றையி

(பரி.) இ-ள். பொருட்பெண்டிர் பொய்ம்மை முயக்கம்=கொடுப்பாரை விரும்பாது பொருளையே விரும்பும் பொதுமகளிரது பொய்ம்மையையுடைய முயக்கம்—இருட்டு அறையில் ஏதில் பிணம் தழீஇயற்று=பிணமெடுப்பார் இருட்டறைக்கண்ணே முன்னறியாத பிணத்தைத் தழுவினாற்போலும். எ-று.

பொருட்கு முயங்கும் மகளிர் கருத்தறிந்து செயலும் ஆராயாது சாதியும் பருவமும் ஒவ்வாதாரை முயங்குங்கால் அவர்குறிப்புக் கூலிக்குப் பிணமெடுப்

பார் காணப்படாததோரிடத்தின்கண் இயைபில்லாததோர் பிணத்தை எடுக்குங்கால் அவர்குழிப்போடொக்குமெனவே, அகத்தால் அருவாகின்றும் பொருணோக்கிப் புறத்தாற்றழுவுவார்; அதனை யொழிகவென்பதாம். இவை மூன்றுபாட்டாலும் அவர்சொல்லும் செயலும் பொய்யென்பது கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—பொருள் கொடுப்பவர்களை விரும்பாமல் கொடுக்கின்ற பொருளையே விரும்புகின்ற பரத்தையரது பொய்யாகிய புணர்ச்சியானது பிண மெடுப்பதே தொழிலாகக் கொண்ட பிண மெடுப்பார் ஓர் இருட்டறையில் முன் எக்காலத்தும் அறியாத பிண மொன்றினைத் தழுவிக் கொண்டால் எவ்விதமோ, அவ்விதமாகும்



என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பொருள் ஒன்றினையே தங்களுக்குப் பொருளாகக் கொண்டு ஒருவனுடைய குலம், வயது இவைகளை யெல்லாம் ஒரு சிறிதும் ஆராயாது இழிகுல முடையவனேனும், வயதிற் சிறியனேனும், வயதில் முதியவனேனும், எத்தகுதியுடையனேனும் அவனிடத்தில் முயங்குகின்ற பொதுமகளிர் ஒருவனோடு புணருங்காலத்து அவர்புணர்ச்சியானது கூலிக்குப் பிணமெடுப்பவர் கண்ணால் காணக்கூடாத இருள் நிறைந்த ஓர் இடத்தில் தமக்கு யாதொரு சம்பந்தமுமில்லாத ஓர் பிணத்தினைத் தழுவி எடுக்க நேருமாயின் எடுக்கின்ற அக்கூலியாளர் அப்பிணத்தை எடுக்குங்கால் மனத்தில் மிகுதியும் அருவருப்புடனே புறத்தில் கூலியின் பொருட்டே தூக்கித் தழுவுவதுபோலும். ஆதலால், இம் மகளிரும் பொருள் கருதிவந்தவன் எவனேனும் அவனைத் தழுவிக் கொண்டாலும் மனத்தில் அன்பு சிறிது மில்லாதவராய் இருப்பர் என்றும் அவரது புணர்ச்சியானது உண்மைப் புணர்ச்சி ஆகாது என்றும் அறிகவென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய மூன்று திருக்குறள்களாலும் அப்பொது மகளிர் பேசும் சொற்களும், செய்யும் செய்கைகளும், பொய்மை என்று அறிந்தோம். இனி இவ்வித தகுதியுடையாரை எவர் கூடுவர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

914. பொருட்பொருளார் புன்னலந் தோயா ரருட்பொரு

ளாயு மறிவி னவர்.

(பரி.) இ-ள். பொருட்பொருளார் புன்னலம்=இன்பமாகிய பொருளை இகழ்ந்து பொருளாகிய பொருளையே விரும்பும் மகளிரது புல்லியநலத்தை— அருட்பொருள் ஆயும் அறிவினவர் தோயார்=அருளோடு கூடியபொருளை ஆராய்ந்துசெய்யும் அறிவினையுடையார் தீண்டார். எ-று.

அறமுதலிய நான்கும் பொருளெனப்படுதலின், பொருட்பொருள் அருட்பொருளென விசேடித்தார். புன்மை=இழிந்தார்க்கே உரித்தாதல். தாம் விரும்புகின்ற அறத்திற்கு அயர்மெய்க்கலம் மறாதலையாதலின், தோயா ரென்பதாம். (௪)

விளக்கம்:—இருவர் புணரும் காலத்து உண்டாகும் இன்ப மாகிய பொருளை விரும்பாமல் பொருளாகிய பொருளையே மனத்



தால் விரும்பும் பொது மகளிருடைய அற்பமாகிய அழகு முதலிய நன்மைகளை அருளென்பதே பொருள் என்று உணர்ந்து அருட் பொருளையே ஆராய்ந்து தாம் செய்யும் செயல்களைச் செய்கின்ற பேரறிவினை உடையவர் அவர்களை விரும்பித் தீண்டமாட்டார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் உலகத்து மக்கள் விரும்பு வனவாகிய அறம், பொருள், இன்பம், வீடாகிய நான்கு பொருள் களுள் பொருட் பொருளையே உயர்வாகக் கொண்டு வஞ்சித்துப் பொருள் தேடும் பொதுமகளிரது அழகு முதலியவைகளைக் கண்டு அருட்பொருளையே பெருளென்று கொண்டு அவ்வருள்வழி நடக் கும் பேரறிஞர் தம் அறத்திற்கு இடையூறு செய்யும் அவர் மெய் யின் நலம் கொண்டு அவரிடத்துச் சேராரென்றும், அற்ப அறி வினை உடையவரே அவர் சொல், செயல் முதலியவைகளில் மயங்கி அவரைப் புணர்வரென்றும் அறிக்கோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பேரறிவாளர் எவ்விதம் அவரது அற்பமாகிய அழகு முதலியவைகளை இகழ்ந்து நீக்குகின்றனர்? அவ்வறிவுடையோர்க்கு உள்ள ஆற்றல் என்ன?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

915. பொதுநலத்தார் புன்னலந் தோயார் மதிநலத்தின்
மாண்ட வறிவி னவர்.

(பரி.) இ-ள். மதிநலத்தின் மாண்ட அறிவினவர்=இயற்கையாகிய மதி நன்மையான் மாட்சிமைப்பட்ட செயற்கையறிவினையுடையார் —பொது நலத்தார் புன்னலம் தோயார்=பொருள் கொடுப்பார்க்கெல்லாம் பொதுவாய ஆசையினையுடைய மகளிரது புல்லிய நலத்தைத் தீண்டார். எ-று.

மதிநன்மை=முற்பிறப்புக்களிற் செய்த நல்வினைகளான் மனத்தெளி வுடைத்தாதல். அதனுனன்றிக் கல்வியறிவு மாட்சிமைப்படாமையின் 'மதி நலத்தின் மாண்டவறிவினவர்' என்றும், அவ்வறிவுடையார்க்கு அவராசை யது பொதுமையும் மெய்ந்நலத்தது புன்மையும் விளங்கித் தோன்றலின் 'தோயார்' என்றுங் கூறினர். (௫)

விளக்கம்:—இயற்கையாகவே தமக்கு உள்ள அறிவின் மிகுதியோடு மாட்சிமைப் பட்ட செயற்கை அறிவினையும் உடையபெரியோர் பொருள் கொடுப்பவர் எவராயினும் அவர்களுக்கெல்லாம் பொதுவாகவே மிக ஆசை உடையவர் போல் நடிக்கும் பொது



மகளிரது அற்ப அழகு முதலியவைகளைக் கண்டு அவரைத் தீண்ட மாட்டார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனுல், முன் பிறப்புகளிற் செய்த நல்வினையின் பலனுற்றெளிந்த மனத்தினையும், இயற்கை அறிவினையும், அதனோடு செயற்கையாகிய கல்வி அறிவினையும் பெற்றிலர் அப்போதிலாளர் அவ்வறிவால் உண்மையும், பொய்ம்மையும் உணரவல்லவராதலால், அப்பொதுமகளிர் பொய்யாக உணர்த்தும் அவர் ஆசையின் தன்மையையும் அவர்கள் தேகத்தின் மேனியையும் கண்டபோதும் மயங்குகின்ற அத்தேகத்தைத் தாம் தீண்டி முயங்க மாட்டாரென்றும், அவ்விதம் அல்லாதாரே அப்பொதுமகளிரது மயக்க வலையில் சிக்கி மயங்கிப் போவரென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணுக்கர், "மயக்க அறிவினை உடையவர் தம் மகளிரை விட்டு அப்பொதுமகளிர் புன்னலத்தை விலை கொடுத்து ஏன் தீண்டுகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

916. தந்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப்

புன்னலம் பாரிப்பார் தோள்.

(பரி.) இ-ள். தகை செருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள் = ஆடல் பாடல் அழகென்பனவற்றாற் களித்துத் தம்புல்லிய நலத்தை விலைகொடுப்பார் யாவர்மாட்டும் பரப்பும் மகளிர்தோளினை — தம் நலம் பாரிப்பார் தோயார் = அறிவொழுக்கங்களானாய தம்புகழை உலகத்துப் பரப்புதற்குரிய உயர்ந்தோர் தீண்டார்; (எ - று.)

ஆடல் முதலிய மூன்றனுடைமை அவர்க்கு மேம்பாடாகலின் 'தகை' என்றும், தோயின் அறிவொழுக்கங்கள் அழியுமாகலின் அவற்றாற் புகழ்பரப்புவார் 'தோயார்' என்றும் கூறினார். தந்நலமென்புழி நலம் ஆகுபெயர். இவை மூன்றுபாட்டானும் அவரை உயர்ந்தோர் தீண்டாரென்பது கூறப்பட்டது.

விளக்கம்:—உலகத்தாரால் விரும்பப்படும் ஆடல் பாடல் அழகு என்று கூறும் கருவியைக்கொண்டு தமது அற்பமாகிய இன்பத்தினை விலைகொடுத்து வாங்குவோர் யாவர்க்கும் விற்கும் பரத்தையர் தோளினை அறிவு ஒழுக்கங்களால் தம் புகழைப் பரப்பவேண்டிய தகுதி யுடையவர் சேரமாட்டார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பொது மகளிர் ஆடவரை மயக்குவது ஆடல்,



பாடல், அழகு, என்பனவற்றாலென்றும், அவ்வாடல் பாடல் அழகு என்பனவற்றை விரும்பித் தமக்கு உரிய மகளிரையும் விட்டு அவர் மயக்கத்தில் சிக்கிப் பொருளையும் கொடுத்துப் புகழையும் இழந்து, வினையும் அறிவிலாதார் இழப்பாரென்றும், ஏனைய அறிவு ஒழுக்கங்களால் இம்மைப் பயனாகிய தம்முடைய புகழைப் பரப்ப எண்ணிய பெருத்த அறிவினையுடையோர் அப் பொதுமகளிரைத் தீண்டாரென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "உயர்ந்தோர் அப் பொதுமகளிரைத் தீண்டாரென்பதை மேற்கூறிய மூன்று திருக்குறள்களாலும் அறிந்தோம். ஆயின் அப் பொதுமகளிரை விரும்பும் புல்லறிவாளர் எவ்விதம் மயங்குகின்றனர்? அதற்குக் காரணமென்ன?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

917. நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர் பிறநெஞ்சிற்

பேணிப் புணர்பவர் தோள்.

(ப. சி. இ-ள். நெஞ்சின் பிற பேணிப் புணர்பவர் தோள்=நெஞ்சினாற் பிறவற்றை ஆசைப்பட்டு அவை காரணமாகக் கொடுப்பாரை மெய்யாற் புணரும் மகளிர் தோள்களை—நிறை நெஞ்சம் இல்லவர் தோய்வர்=நிறையாற்றிருத்திய நெஞ்சமில்லாதார் தோய்வர்; (வ - று.)

பொருளும் அதனாற் படைக்கப்படுவனவும் விரும்பும் நெஞ்ச அவற்றின் மேலதாகலின், புணர்வது உடம்புமாத்திர மென்பதறிந்து அதுவழி ஓடாது நிற்கும் நெஞ்சினையுடையார் தோயாமையின், அஃதிலார் 'தோய்வர்' என்றார்.

விளக்கம் :—மனத்தினிடத்தே பொருளையும் அப்பொருளினால் உண்டாகும் பணி முதலியவற்றையும் அடைய ஆசைகொண்டு அவைகாரணமாகத் தமக்குப் பொருள் கொடுக்கின்றவர்களை மனத்தால் விரும்பிப் புணராது உடம்பு ஒன்றினால் மாத்திரம் புணர்ந்து நிற்கும் பொதுமகளிராய பெண்களுடைய தோள்களை நிறை என்னும் நியதியால் திருத்திய மனத்தையுடையாதவரே பொருந்துவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் பொது மகளிர் தம்மிடத்தே வரும் ஆடவரைப் பொருள் ஒன்றையே கருதி அவரை மிக விரும்புவார் போல் நடித்துத் தேக மொன்றினை மாத்திரம் அவர்க்கு இன்பத்தின் பொருட்டாகக் கொடுத்துப் புணரும்



காலத்திலும் தம் மனத்தினை இனிப் பொருள் கொடுத்துப் புணர வரும் ஏனையோர் வருகையையும் காலத்தையும் நோக்கிச் செலுத்துவாராதலால் இவ்விதம் மனத்தில் அன்புகொள்ளாத மகளிரைப் புணர்ந்து இன்பத்தைப் பெறுபவர் தம் மனத்தை நல்வழியில் செலுத்தாத பின்மக்களே யாவர். ஏனெனின்? வறுமையை அடைந்து துன்பத்தை எய்தி, புகழினைப் போக்கி, மறுமை இன்பத்தையும் இழக்கும் இழிவினையும் உடையராதலால் அவரைப் பொருந்துகின்றனரென்றும் அவ்விதமில்லாத நல்லறிஞர் அவரைப் புணரரென்றும் அறிகவென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் மனத்தினிடத்தே நிறுத்தமடையாதவர் பொது மகளிரை விரும்பும் காலத்து அப்பொதுமகளிரிடத்து உண்டாகும் விருப்பம் அவர்க்கு எவ்விதமாக இருக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

918. ஆயு மறிவின ரல்லார்க் கணங்கென்ப
மாய மகளிர் முயக்கு.

(பரி.) இ-ள். மாய மகளிர் முயக்கு=உருவசொற்செயல்களான் வஞ்சித்தலை வல்ல மகளிரது முயக்கத்தை—ஆயும் அறிவினர் அல்லார்க்கு அணங்கு என்ப=அவ்வஞ்சனை ஆராய்ந்தறியுமறிவுடையரல்லார்க்கு அணங்குதாக்கென்று சொல்லுவார் நூலோர்; (எ - று.)

அணங்கு=காமநெறியான் உயிர்கொள்ளும் தெய்வமகள். தாக்கு=தீண்டல். இவ்வுவமத்தான் அம்முயக்கம் முன் இனிதுபோன்று பின் உயிர்கோடல்பெற்றும், இது நூலோர் துணிவென்பதுதோன்ற அவர்மேல்வைத்துக் கூறினர். அப்பெயர் ஆராய்கிலயான் வந்தது. (அ)

விளக்கம்:—தம்முடைய உருவத்தாலும், சொற்களாலும், செயல்களாலும் வஞ்சிக்கும் வல்லமையுடைய பொது மகளிருடைய புணர்ச்சியானது அவ்வஞ்சகத்தினை ஆராய்ந்து அறியும் அறிவு இல்லாதார்க்கு அணங்கு என்னும் காம நெறியால் ஒருவன் உயிரைக் கொன்று கொல்லும் தெய்வமகள் தீண்டுவது போல் இருக்குமென்று நூல் வல்லவர்கள் சொல்லுவரென்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மனத்தால் விரும்பாது தம்முடைய தேகத்தின் அழகினாலும், வஞ்சகமான சொற்களாலும் உடலி



ரண்டு உயிர் ஒன்று என்பது போல் புணருகின்ற புணர்ச்சியால், வருகின்ற எவரையும் வஞ்சிக்கவல்ல பொதுமகளிரது வஞ்சகத்தை அறிந்து கொள்ளும் தன்மை இல்லாதவர்கள் காமநெறி கொண்ட உயிரைக் கொன்று கொல்லுகின்ற தெய்வமகள் என்பாள் தீண்டினால் தீண்டப்பட்ட அவ்வுயிர் அவளை உடலால் புணராமலே மனத்தால் புணர்ந்த போதிலும் எவ்விதம் நாளுக்குநாள் உடல் மெலிந்து உருதி கெட்டுப் போய் விடுமோ? அதுபோல், மனத்தால் புணராத இப் பொதுமகளிரைத் தோய்ந்து, தோய்ந்த அவ்வுடலின் வன்மை கெட்டு நோய்முதலிய கொண்டு வாழ்வதற்குத் தக்க அளவாக இறந்துவிடுவர் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் அறிவிலாதார் பொதுமகளிரது சேர்க்கையால் இன்பத்தை அடையாமலே உயிர் இழப்பரென்று அறிந்தோம். ஆயினும் அப்பொது மகளிரது இன்பத்தை விரும்பி அவ

சேரடு கூடியுள்ளவரையில் அவரது வாழ்க்கையானது எவ்விதமிருக்கும் என்பதையும் அறிய விரும்புகின்றேம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

919. வரைவிலா மாணிழையார் மென்றோள் புரையிலாப்
பூரியர்க ளாழு மளறு.

(பரி.) இ-ள். வரைவு இலா மாண் இழையார் மென்றோள்=உயர்ந்தோர் இழிந்தோரென்னது விலைகொடுப்பார் யாவரையும்முயங்கும் மகளிரது மெல்லியதோள்கள்—புரை இலாப் பூரியர்கள் ஆழும் அளறு=அக்குற்றத்தை யறியும் அறிவில்லாத கீழ்மக்கள் புக்கழுந்து நிரயம்; (எ - று.)

உயர்தற்கேதுவாகலின், 'புரை' எனப்பட்டது. சாதியானிழிந்தாரினீக்குதற்குப் 'புரையிலாப்பூரியர்கள்' என்றும், அவர் ஆழ்தற்கேது உருவமுதலிய மூன்றுமென்பதுதோன்ற 'மாணிழையார் மென்றோள்' என்றும், அவர்க்கு அளற்றின் இடையின்றிப் பயக்குமென்பது தோன்ற உருவகமாக்கியும் கூறினர். (க)

விளக்கம்:—இவர் உயர்ந்தவர், இவர் இழிந்தவர் என்று சிறிதும் மனத்துக் கொள்ளாது தமக்குக் கொடுக்க வேண்டிய விலையினைக் கொடுத்து நிற்பவர் எவரையும் புணரும் பொது மகளிரது மென்மையாகிய தோள்கள் அக்குற்றத்தை அறியாத அறிவில்லாத



கீழ்மக்கள் புகுந்து அழுந்துகின்ற நரகத் துன்பம் போல் இருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், பொது மகளிரது இயற்கை எக்குலத்தவரேனும் தம்மினும் மூத்தாரேனும், தம்மினும் இளையாரேனும், நோய் கொண்டவரேனும் அவரிடத்து உள்ள குற்றங்களை நோக்காது பொருள் ஒன்றையே கருதி புணர்வதென்றும், அவ்விதம் புணருகின்ற அம்மங்கையரது ஆடல், பாடல், அழகு என்பனவற்றால் அறிவிலாத மக்கள் மயங்கி அம்மயக்க அறிவால் அவளைப் புணர்ந்தாரானாயின் அப்புணர்ச்சியின் பயன் பெரியதோர் நரகத்துன்பமாகவே இருக்கும் என்றும் அறிந்தோம். ஆதலால் பொருள் கொடுத்துப் புணர்ச்சியை விரும்பியும், அப்புணர்ச்சியானது எண்ணிய இன்பத்தைத் தராது துன்பத்தையே தரும் என்று உணர்ந்தோம்

என்றனர். அதுகேட்ட மாணுக்கர் "இவ்விதம் இலாத நட்பைக் கொண்டார்க்கு, இம்மையில் எதுவாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

920. இருமனப் பெண்டிருங் கள்ளுங் கவறுந்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

(பரி.) இ-ள். இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்=கவர்த்த மனத் தினையுடைய மகளிரும் கள்ளும் சூதுமென இம்மூன்றும்--திரு நீக்கப்பட் டார் தொடர்பு=திருமகளாற் றறக்கப்பட்டார்க்கு நட்பு. எ-று.

இருமனம்=ஒருவனோடு புணர்தலும் புணராமையும் ஒரு காலத்தேயு டைய மனம். கவறு—ஆகுபெயர். ஒத்தகுற்றத்தவாகலின், கள்ளும் சூதும் உடன்கூறப்பட்டன. வடநூலாரும் இக்கருத்தான் விதனமென உடன் கூறினர். வருகின்ற அதிகாரமுறைமையும் இதனானறிக. நினைவிரா வென்னிய வழிப்பன்மைபற்றி முடிபுகோடலின், நன்கு அஃறிணையாற் கொண்டது. திரு நீக்கப்பட்டமை இக்குறிகளான் அறியப்படுமென்பதாம். இவை நான்கு பாட் டானும் சேர்வார் இழிந்தோரென்பது கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—வஞ்சக மனத்தினை உடைய பொதுமகளிரும் கள் ளும், சூதும் என்று சொல்லப்படுகின்ற இம்மூன்றும் திருமகளால் வேண்டாமென்று நீக்கப்பட்டவர்களுடைய நட்பு ஆகும் என்று

72



இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, பொருள் கருதி ஒருவ னோடு புணர்ந்து கொண்டிருந்தாலும் அப்புணருகின்ற பொது மகளிருடைய மனமானது அக்காலத்தேயே வேறு ஒருவன் மீது பொருள் கருதிச் செல்லுகின்றது ஆகலால் அவர் மனத்தை இரு மனமென்றும், அவ்விதம் புணர்ந்தவர்க்கு இன்பம் தாராது வறுமை யினையும் துன்பத்தையும் உண்டுபண்ணுகின்ற அப்பொது மகளிர்க் குச் சமானமாக கள், சூது என்னும் இரண்டினையும் ஒன்று சேர்த்து அம்மூன்றினையும் திருமகளால் நீக்கப்பட்டாரது நட்பு என்று கூறி

வர். இம் மூன்று குற்றங்களையும் உடையவர் வறுமை அடைந்து இம்மைப் பயனாகிய புகழினையும் இழந்து, மறுமைப் பயனாகிய தேவபோகத்தையும் இழப்பர் என்னும் குறிப்பை அறிவிக்க வேண்டி வரைவின்மகளிரைப்பற்றி கூறி முடிக்கவேண்டிய இவ் வதிகாரத்துக் கடையில் உள்ள இத்திருக்குறளில் ஏனைய இரண்டு அதிகாரங்களாகிய கள்ளுண்ணாமை, சூது என்பன இரண்டிற்கும் தோற்றுவாய்ச் செய்தனர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "காமத்தால் வரும் கட்பின் தகுதிகளில் ஒன்றாகிய வரைவின் மகளிரைப்பற்றி அறிந்தோம். இனித் தோற்றுவாய் செய்த இரண்டினுள் கள்ளுண்ணாமையைப் பற்றியும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 93. அதிகாரம்.

---

### கள்ளுண்ணாமை.

(பரி.) இனி ஒழுக்கமும் உணர்வு மழித்தற்கண் அவ்வரைவின்மக ளிரோ டொப்பதாய கள்ளினை யுண்ணாமையது சிறப்பு எதிர்மறைமுகத்தாற் கூறுகின்றார்.

விளக்கம் :—அதாவது ஒருவனது ஒழுக்கத்தையும், அறிவினையும் அழிக்குமிடத்தே அப் பொதுமகளிரோடு ஒப்பாக இருக்கும் கள்ளினைக் குடியாமையினது சிறப்பினை எதிர்மறைமுகத்தால் சொல்ல ஆரம்பித்தனர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கள்



ளுண்பாரது தகுதியை முன்றன்பின் முன்றாகக் கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

921. உட்கப் படாஅ ரொளியிழப்ப ரெஞ்ஞான்றுங்
கட்காதல் கொண்டொழுகு வார்.

(பரி.) இ-ள். கட்காதல் கொண்டு ஒழுகுவார்=கள்ளின்மேற்காதல்

செய்தொழுகுமரசர்—எஞ்ஞான்றும் உட்கப்படார் = எஞ்ஞான்றும் பகைவரா னஞ்சப்படார்;—ஒளி இழப்பர் = அதுவேயன்றி முன்னெய்தி நின்ற ஒளியி னையுமிழப்பர். எ-று.

அறிவின்மையால் பொருள் படை முதலியவற்றாற் பெரியராயவிடத் தும் பகைவர் அஞ்சார், தம்முன்னோரெய்தி நின்ற ஒளியினையும் இகழற் பாட்டான் இழப்பரென்பதாம். இவையிரண்டானும் அரசர் இவ்விதுசெய்யா தென்பது இதனாற் கூறப்பட்டது. (௧)

விளக்கம்:—கள்ளினை உண்ண ஆசை கொண்டு உண்டு அக் கள்ளின் வழி ஒழுகும் அரசரானவர் எக்காலத்தும் பகைவரால் அஞ்சக்கூடிய மதிப்பினை அடையமாட்டாரென்றும், அதுவல்லா மலும் இவருடைய பெரியோரால் இவரது குடியானது முன்னர் அடைந்திருந்த மதிப்பினையும் இழந்து விடுவரென்றும் இத்திருக் குறள் கூறுகின்றது. ஏனெனில்? பொருள், படை முதலிய துணைக் காரணங்களெல்லாம் கொண்டு மிகுதியும் பலமுடைய அரசராயிருந்தும் கள்ளினை உண்ணும் காலத்து அறிவினை இழக்கின்றார் ஆதலால், அக்காலத்து அவரைச் சுலபமாக வென்று விடுதல் கூடும் என்று பகைவர் எண்ணுவாராதலால் பகைவர் அஞ்சாரென்றும், கள் முதலியவை உண்ணுதல் மற் றைய அரசர்களால் புகழப்பட்டிருந்த தம் முன்னோர் தேடிய மதிப்பினையும் பலர் இகழ்ச்சியால் இழந்து விடுவரென்றும், இவ் விதம் பகைவர் அஞ்சாமையாலும், முன்னர் தேடிய மதிப்பை இழத்தலாலும் இவ்வரசனது நன்றாக நடவாதென்றும அறிந்தோ மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவன் தன் பொருள் கொடுத்துக் கள்ளினை உண்ட காலத்து உண்டவனை எவ்விதம் தகுதியுடையார் இகழ்ந்து பேசுவர்?" என்னலும், ஆசிரியர் கூற லாயினர்.



922. உண்ணற்க கள்ளை யுணிலுண்க சான்றோரா
னெண்ணப் படவேண்டா தார்.

(பரி.) இ-ள். கள்ளை உண்ணற்க = அறிவுடையாரயினும் அஃதில்லாதற்கு ஏதுவாய கள்ளினை உண்ணாதொழிக,—உணில் சான்றோரான் எண்ணப்பட வேண்டாதார் உண்க = அன்றியே உண்ணல் வேண்டுவார் உளராயின், நல் லோரால் எண்ணப்படுதலை வேண்டாதார் உண்க. எ-று.

பெறுதற்கரிய அறிவைப் பெற்றவைத்தும் கள்ளானழித்துக்கொள்வாரை இயல்பாகவே அஃதில்லாத விலங்குகளுடனும் என்னுராகவின், 'சான்றோரா லெண்ணப்பட வேண்டாதா ருண்க' என்றார். (ட)

விளக்கம் :—அறிவுடையவராய் உள்ளோர் அவ்வறிவினை இழத்தற்குக் காரணமாகிய கள்ளினை உண்ணுது ஒழிதல் வேண்டுமென்றும், அவ்வாறு அல்லாது அக்கள்ளினை உண்ண எண்ணங் கொண்டிருப்பவர் எவரேனுமிருப்பாராயின் நல்லறிவினை உடையவரால் மதித்தலை வேண்டாதவரே உண்ணுதல் வேண்டுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, முன்னே நல்வினைப் பயனால் அறிவு அடைந்திருந்தும் கள்ளினாலே மயங்கி அவ்வறிவினை இழந்துவிடுகின்றவர்களை அவ்விதம் கள்ளுண்டு மயங்காத செயற்கை அறிவற்ற மிருகங்களோடு ஒப்புமையாக உலகத்துடனார் எண்ணுதலில்லை என்றும், அதனால் உயர்ந்த ஒழுக்கத்தைக் கொண்ட சான்றோர் ஒருபொருளாக மதிக்கப்படவேண்டாதாரே நல்லறிவினைப்போக்கி பலதுன்பங்களையும் உண்டுபண்ணும் கள்ளினை உண்ணுதல் வேண்டும் என்றும் கூறியதாயிற்று என்றனர். ஆதலால் தம் பொருள் கொடுத்துக் கள்ளினை உண்பாரேனும், யாதொரு சம்பந்தமுமில்லாத அயலவர் தம் அறியாமையை நோக்கி இகழ்ந்து, பேசுவர் என்பது பெற்றோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "கள்ளுண்பார் சான்றோரால் ஒரு பொருளாக மதிக்கப்படார் என்று கூறினீர். ஆயின், அவரது சுற்றத்தவரால் மதிக்கப்படுவரோ ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

923. ஈன்றாள் முகத்தேயு மின்னாதா லென்மற்றுச்
சான்றோர் முகத்துக் களி.

(பரி.) இ-ள். ஈன்றாள் முகத்தேயும் களி இன்னாது=யாதுசெய்யினும் உவக்குந்தாய் முன்பாயினும் கள்ளுண்டு களித்தல் இன்னாதாம்;—மற்றுச்



சான்றோர் முகத்து என்=ஆனபின், குற்றம் யாதும்பொறாத சான்றோர் முன்பு களித்தல் அவர்க்கியாதாம், எ-று.

மனமொழிமெய்கள் தம்வயத்தவன்மையான் காணுழியும் ; அழியவே,

ஈன்றாட்கும் இன்னாதாயிற்று; ஆனபின், கள் இருமையுங் கெடுத்தலறிந்த செம்மைக்கண்ணே கடியுஞ் சான்றோர்க்கு இன்னாதாதல் சொல்லவேண்டுமோ வென்பதாம். (௩)

விளக்கம் :—எவ்வித காரியத்தைச் செய்யினும் அதற்காக வெறுக்காது மகிழ்ந்த தாய் முன்னே ஆயினும் கள்ளினை உண்டு அறிவு மயங்குதல் துன்பமுடையதாகும் என்று கூறின், ஓர் குற்றத்தினையும் தாம் செய்யாது பிறர் செய்த கீழ்த்தும் பொறுத்துக் கொள்வதற்கும் மனம் கொள்ளாத நல்லோர் முன்பு கள்ளுண்டு களித்தல் அவர்க்கு எதுவாக இருக்கும் என்று இத்திருக்குறள் வினவுகின்றது. இதனால் கள்ளுண்பான் ஒருவனுக்கு மனம், வாக்கு, காயமாகிய மூன்றும் தன் வசமில்லாமல் போய்விடுமாதலால் அவ்வாறு போய்விட்ட காலத்து ஒருவனுக்கு இருக்கவேண்டிய நாணமென்னும் நாண் அழியும். அந்நாண் அழியவே தன்னைக் காத்துக்கொள்ள இருந்த உள்ளாடை முதலியவை குலையும். இவ்விதம் ஓர் சிறிய ஆடையே இல்லாது தாய் முன்னர் நிற்பானாயின் தான் பெற்றுவளர்த்த மகனாயினும் தருணப்பருவத்து ஆடையற்று நிற்கும் அத்தகுநிலையைப் பார்ப்பதற்கு மனம் கொள்ளாள் ஆதலால், தாயும் வெறுப்பளென்றும், அத்தாய்மார் உள்ளும் ஏனைய கைத்தாய் செவிலித்தாய் என்று உலகம் மயங்காவிதம் பெற்றெடுத்த தாய் என்று அறிவித்தற்கு ஈன்றாளென்றும் விதந்து கூறியதுடன் அவ்விதம் ஈற்றுப்பாவிய ஈன்றாளாலும் வெறுக்கப்படுகின்ற கள்ளினை இது இம்மை, மறுமை ஆகிய இரண்டையும் கெடுக்கக் கூடியது என்று அறிந்து வெகு தூரத்தில் காணு முன்னரே வெறுத்து ஒடுகின்ற நற்குணங்களமைந்த சான்றோர்க்கு அக் கள்ளுண்டல் துன்பமாதல் சொல்லுதலும் வேண்டுமோ என்று கூறுவதால் கள்ளுண்பான் ஒருவனைச் சான்றோர் மாத்திரமல்லாமல் மற்றவர் யாவரும் இகழ்ந்தே கூறுவர் என்பது அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கள்ளை ஒருவன் உண்பானாயின் முதலில் அவன் இழக்கின்ற சால்பு எது?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்



924. நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்
பேணாப் பெருங்குற்றத் தார்க்கு. [னும்

(பரி.) இ-ள். கள் என்னும் பேணாப் பெருங்குற்றத்தார்க்கு = கள்ளென்று சொல்லப்படுகின்ற யாவரும் இகழும் மிக்க குற்றத்தினையுடையாரை = நாண் என்னும் நல்லாள் புறங்கொடுக்கும் = நாணென்று சொல்லப்படுகின்ற உயர்ந்தவள் நோக்குதற்கஞ்சி அவர்க்கு எதிர்முக மாகாள். எ-று.

காணுதற்குமஞ்சி உலகத்தார் செய்யமைக்கண்ணே நீங்குவாராகலின் 'பேணா' என்றும், பின் ஒருவாற்றானுங் கழுவப்படாமையிற் 'பெருங்குற்றம்' என்றும், இழிந்தோர்பானில்லாமையின் 'நல்லாள்' என்றும் கூறினார். பெண்பாலாக்கியது வடமொழிமுறைமைபற்றி. இவை மூன்றுபாட்டானும் ஒளி யிழத்தற்காரணங் கூறப்பட்டது. (௪)

விளக்கம் :— யாவராலும் இகழப்படுகிற கள்ளுண்டலென்று சொல்லப்படுகின்ற பெரியதோர் குற்றத்தினை உடையவனிடத்து நாண் என்று கூறப்படும் உயர்ந்தவள் அக்கள்ளுண்டானைப் பார்ப்பதற்கஞ்சி அவர்க்கு எதிர்முகமாக வரமாட்டாள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், கள்ளுண்ட ஒருவனை உலகத்தவர் பார்த்தவுடனே தூரத்திலேயே அவன் எதிர் தோன்றாது மறைந்து கொள்வது இயல்பு ஆதலால் அவ்வாறு ஒருவராலும் விரும்பப் படாததாயும் ஒருமுறை உண்டார்க்குப் பின்னொருகாலும் போக்கிக் கொள்ளக் கூடாத பெருங் குற்றமுடையதாயும் தன்னை உண்டானுக்கு அறிவு மயக்கத்தால் நாணமென்பதே எக்காலத்தும் இல்லாமல் செய்வதாயும் உள்ள கள்ளுண்டல் ஒருவனுக்கு இருக்கவேண்டிய நற்குணங்களாகிய அன்பு, நாண், ஒப்புரவு, கண்ணோட்டம், வாய்மை என்று சொல்லுகின்ற ஐந்து நல்ல குணங்களுள் முதலாவதாகிய நாணத்தைப் போக்கிப் பழிபாவங்களைச் செய்யத் தூண்டும் என்றனர். ஆதலால் நற்குணங்களில் முதலாவதாகிய நாணத்தை இழந்துவிடுகின்றான் என்பவர், "நாணென்னும் நல்லாள் அவனெதிர் வாராள்" என்று நாண் என்பதை ஒரு பெண்ணாக்கிக் கூறினார் என்று அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் தம்பொருளையும் கொடுத்து இவ்வித தீய காரியத்தினை உலகோர் ஏன் செய்கின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



925. கையறி யாமை யுடைத்தே பொருள்கொடுத்து

மெய்யறி யாமை கொளல்.

(பரி.) இ-ள். பொருள் கொடுத்து மெய் அறியாமை கொளல் = ஒருவன் விலைப்பொருளைக்கொடுத்துக் கள்ளாற்றனக்கு மெய்ம்மறப்பினைக் கொள்ளுதல் — கை அறியாமை உடைத்து = அவன்பழவினைப்பயனை செய்வதறியாமையைத் தனக்குக் காரணமாகவுடைத்து. எ-று.

தன்னையறியாமை சொல்லவே, ஒழிந்தன யாவுமறியாமை சொல்லல் வேண்டாவாயிற்று. கை அப்பொருட்டாதல் "பழனுடைப்பெருமரம் வீழ்ந்தெனக் கையற்று" +என்பதனானு மறிக. அறிவார் விலைகொடுத்து ஒன்றினைக் கொள்ளுங்கால் தீயது கொள்ளாமையின் மெய்யறியாமைகொளல் முன்னை யறியாமையால் வந்ததென்பதாம். (௫)

விளக்கம்:— ஒருவன் தன் பொருளை விலையாகக் கொடுத்து வாங்கி உண்ட கள்ளினால் தனக்குத் தேகத்தினிடத்து யாதொரு நினைவுமில்லாமல் செய்து கொள்ளுதல் அவனது முன்னைய வினைப் பயனால் செய்யவேண்டுவதனை அறியாமையாகிய காரணத்தைத் தனக்குக் காரணமாக உடையவனாகின்றான் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அங்ஙனமே ஒருவன் ஏதேனுமொன்றனை விலைகொடுத்து அப்பொருளது பயனைக்கொள்ள விரும்பிய காலத்து, தீமையாகிய பயனைத்தரும் பொருளைக் கொள்ளாதலால் இவ்விதம் அறிவின்மையால் தன்னைத் தான் அறியாது செய்து கொள்வதாகிய மெய்ம்மறப்பினை விலை கொடுத்து வாங்குதல் முற்பிறவிகளிலே செய்த தீவினையின் பயனால் வந்ததென்றே கொள்ளுதல் வேண்டும். ஆகலால் இவ்வித தீமையாகிய கள்ளுண்டலைச் செய்வது முன்செய்த தீவினையின் பயனேயாகும் என்றனர். அது கேட்ட மாணக்கர், "இவ்விதம் கள்ளுண்டு மெய்ம்மயங்குகின்ற அற்பரை உலகோர் என்னென்று கூறுவர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

926. துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

(பரி.) இ-ள். துஞ்சினார் செத்தாரின் வேறு அல்லர் = உறங்கினார், செத்தாரின் வேறுதலுடையரேனும், அக்காலத்தறிவின்மையான் வேறெனப் படார்; — கள் உண்பவர் எஞ்ஞான்றும் நஞ்சு உண்பார் = அவ்வாறே கள்ளுண்

பார், நஞ்சுண்பாரின் வேறாதலுடையரேனும், எக்காலத்துமறிவின்மையான் வேறெனப்படார், அவர் தாமேயாவர், எ-று.

உறங்கினார்க்குங் கள்ளுண்பார்க்கும் வேற்றுமை உயிர்ப்புநிற்றல். வேறாதலும் வேறன்மையுமுடைமை காட்டற்கு உவமை புணர்க்கப்பட்டது. இதனை நிரனிறையாக்கி, பிரிக்கப்படுதலால் உறங்கினாரும் நஞ்சுண்பாருமொப்பர், கைவிடப்படுதலாற் செத்தாருங் கள்ளுண்பாருமொப்பரென்றுரைப்பாருமுளர்; அதிகாரப்பொருள் பின்னதாயிருக்க யாதும் இயைபில்லாத நஞ்சுண்பார்க்கு உவமைபுணர்த்து ஈண்டுக்கூறல் பயனின்றாகலானும், சொற்கிடக்கை நிரனிறைக்கேலாமையானும், அஃதுரையன்மை யறிக. இவை யிரண்டுபாட்டானும் அவரறிவிழத்தற் குற்றங் கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—உலகத்து உறங்குகின்றவர்கள் இறந்து போகின்றவர்களினும் வேறுபட்ட தன்மை உடையவராயினும் அவ்வுறங்குகின்ற காலத்தில் அறிவு இல்லாமையால் வேறு என்று சொல்வதற்கு இல்லாதவராக உள்ளாரென்றும், அது போலவே கள்ளுண்பாரும் விஷத்தை உண்பவரினும் வேறுபட்ட தன்மை உடையவரேனும் உண்ட எக்காலத்தும் அறிவில்லாது மயங்குகின்றார் ஆதலால் நஞ்சு உண்பவரினும் வேறு என்று சொல்லப்படாமல் அந்நஞ்சு உண்பவரே ஆவரென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் தூங்குபவர்க்கும், கள் உண்பவர்க்கும் உள்ள வேறுபாடு மூச்சு இருத்தலென்றும், ஆயின் அறிவில்லாமையினால் இறந்தவரும் நஞ்சு உண்பவரும் ஆகிய இருவரையும் ஒப்பாரென்றும் எடுத்துக் காட்டியதாயிற்று. ஆதலால் இறந்தவரும் நஞ்சு உண்பவரும் தம் செயலற்றுப் போகின்றாரே அதுபோல் கள்ளுண்பாரும் மெய்ம்மறந்து செயலற்று, அறிவிழந்து போவர் என்றும், கள் குடித்தவரைக் காணுங் காலத்து உலகத்தவர் அவரை உயிரோடு கூடி உள்ளவராக மதியாரென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் அறிவு மயங்கிக் கள்ளுண்பாரை உலகோர் பழிப்பர் அன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

927. உள்ளொற்றி யுள்ளூர் நகப்படுவ ரெஞ்ஞான்றுங்
கள்ளொற்றிக் கண்சாய் பவர்.

(பரி.) கள் ஒற்றிக் கண் சாய்பவர் = கள்ளை மறைந்துண்டு அக்களிப பாற் றம்மறிவு தளர்வார்—உள்ளூர் உள் ஒற்றி எஞ்ஞான்றும் நகப்படுவர் =



உள்ளூர் வாழ்பவரான் உண்ணிகழ்கின்றதுய்த்துணர்ந்து எஞ்ஞான்றும் நகு தல் செய்யப்படுவர், எ-று.

உள்ளூர்—ஆகுபெயர். உண்டென்பது அவாய்நிலையான் வந்தது. உய்த் துணர்தல் = தளர்ச்சியாற் களிப்பினையுணர்ந்து அதனாற் கள்ளுண்ட துணர் தல். (எ)

விளக்கம்:—யாரும் பாராவிதம் ஒருவன் கள்ளினை மறைந்து உண்டு அம்மயக்கத்தால் தளர்வடைவானேல் அதைக் கண்ட அவன் வசிக்கும் ஊரில் வாழ்பவர் அவன் அறிவின் தளர்ச்சியால் அவனிடத்தே உண்டாகின்ற வாக்கு, செயல்களை எல்லாம் நன்றாக அறிந்து அவன் கள்ளினை உண்டு இவ்விதம் மயங்கி நிற்கின்றான் என்று அவனைக் காணுந்தோறும் அவனைப் பழித்துச் சிரிப்பர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், கள் உண்பவன் ஒருவன் எவ்வளவுதான் பிறர் அறியாவண்ணம் கள்ளினை மறைந்து உண்டாயினும் அவன் உண்ட கள்ளின் மயக்கமானது அவனை மயக்கச் செய்வதால், அம்மயக்கத்தால் மனம், வாக்கு, காயமென்ப மூன்றும் தன்வழியில்லாது தளர்ச்சியை அடைவதால், அத்தளர்ச்சியைக்கண்டு இவன் கள்ளுண்டு மயங்குகின்றான் என்று உலகோர் எக்காலத்தும் சிரிப்பதும் உண்டாகுமென்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் கள்ளுண்பவன் பலராலும் நகைக்கப்படுவான் என்பது அறிந்தோம். ஆயின், கள்ளுண்பவன் ஒருவன் தான் கள்ளினை உண்பதற்கு முன் மிக ஒழுக்கமுடையவனாக நடிப்பதைச் சிலவிடத்துக் காண்கிறோம். அவ்வித நடிப்பானது கள்ளை உண்டபொழுது பிறர் அறியும் வண்ணம் வெளிப்படுமன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

928. களித்தறியே னென்பது கைவிடுக நெஞ்சத்
தொளித்ததூஉ மாங்கே மிகும்.

(பரி.) இ-ள். களித்து அறியேன் என்பது கைவிடுக = மறைந்துண்டு

வைத்து யான் கள்ளுண்டறியேனென்று உண்ணாதபொழுது தம்மொழுக்கங் கூறுதலையொழிக; — நெஞ்சத்து ஒளித்ததூம் ஆங்கே மிகும் = அவ்வுண்ட பொழுதே பிறரறியின் இழுக்கமென்று முன்னெஞ்சத்தொளித்த குற்றமும் முன்னையளவின்மிக்கு வெளிப்படுதலான். எ-று.

73



களித்தறியேனெனக் காலவத்தாற் கூறினர். இவையிரண்டுபாட்டா னும் அது மறைக்கப்படாதென்பது கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—ஒருவன் கள்ளினை உண்ண அவாவிய காலத்து அக்கள்ளினை மறைவாக உண்டு பின் அக்கள்ளினை உண்ணாத பொழுது 'நான் எக்காலத்தும் கள்ளினை உண்டு அறியேன்' என்று தன்னுடைய பொய்யாகிய ஒழுக்கத்தைக் கூறுதலை ஒழித்துவிடல் வேண்டும் என்றும், ஏனெனில்? இவன் உண்ணாத பொழுது நடித்தானாயினும் கள்ளினை உண்ட காலத்தே 'நாம் உண்ணுகின்ற இச்செயலை மற்றவர்கள் அறிவாராயின் நமக்கு அது குற்றமாகும்' என்று முன் தன் நெஞ்சில் ஒளித்த குற்றமும் முன்னினும் அள வின் மிகுந்து யாவும் வெளிப்படும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் கள்ளுண்பான் ஒருவன் உண்ணாத காலத் துத் தான் கள்ளுண்பது இல்லையென்று மறைத்துக் கூறினானாயினும் உண்டபொழுது மறைத்துச்சொல்லிய குற்றங்களும் மிக அதிக மாக வெளிப்படுமென்றும், கள்ளுண்டலை ஒருவனாலும் மறைக்க முடியாதென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக் கர், "இவ்விதம் கள்ளுண்டு மயங்குவானுக்கு நல்லோர் புத்தி புகட் டுதல் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

929. களித்தானைக் காரணங் காட்டுதல் கீழ்நீர்க்
குளித்தானைத் தீத்துரீஇ யற்று.

(பரி.) இ-ள். களித்தானைக் காரணம் காட்டுதல் = கள்ளுண்டு களித்தா னொருவனை இஃதாகாதென்று பிறனொருவன் காரணங்காட்டித் தெளிவித்

தல்—நீர்க் கீழ்க் குளித்தானைத் தீத்துரீஇயற்று=நீருண்மூழ்கினானொருவனைப் பிறனொருவன் விளக்கினால் நாடுதலை யொக்கும், எ-று.

களித்தானை யென்னு மிரண்டாவது "அறிவுடை யந்தண னவனைக் காட்டென்றானோ"* என்பதுபோல நின்றது. நீருள் விளக்குச் செல்லாததுபோல அவன் மனத்துக் காரணஞ் செல்லாதென்பதாம். இதனான் அவனைத் தெளிவித்தல் முடியாதென்பது கூறப்பட்டது. (௯)

விளக்கம்:—கள்ளினை உண்டு அறிவு மயங்கிய ஒருவனுக்கு இக்கள்ளுண்ணுதல் ஆகாதென்று நல்லொழுக்கமுடைய ஒருவன்

* கலி, மருதம், 7.



தான் கற்ற நூல்களைக் காட்டித் தெளிவிக்கப் புகுவானாயின், ஜலத்தில் முழுகிக்கிடக்கின்ற ஒருவனை மற்றொருவன் விளக்கைக் கையில் கொண்டு ஜலத்துக்குமேல் தேடிப் பார்த்தலையே ஒத்திருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், கள்ளுண்பான் ஒருவனுக்கு எடுத்துக் காட்டுகின்ற நீதியும், அறமும் அவன் மனத்துள் செல்லாதாதலால் அவனைத் தெளிவித்தல் கூடாது என்று கூறவந்தவர் ஜலத்துக்குள் முழுகிக்கிடக்கின்ற ஒருவனை மற்றொருவன் தேடவேண்டுமானால் அந்நீருள் முழுகி அவனைத்தேடினாலன்றி அவனைக் கண்டுபிடித்தல் கூடாதென்றும், அவ்விதமல்லாது ஒருவன் விளக்கைக் கையில்கொண்டு முழுகியவனைத் தேடினால் விளக்கின் ஒளியானது ஜலத்திற்குள்சென்று முழுகியவனைக்காட்டாததுபோல நல்லொழுக்கமுடையவனது விளக்குப்போன்ற அறிவும் கள்ளுண்டானுக்கு யாதொரு பயனும் தாராமல் ஒழிந்துபோகும் என்றும், இவ்வித கள்ளுண்பானைத் தெளிவித்தல் எவராலும் முடியாது என்றும் அறிந்தோம் என்று கூறினர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித கள்ளினை உண்பார் அதனை ஒழித்தற்கு ஏதேனும் உபாயமுள்ளதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

930. கள்ளுண்ணாப் போழ்திற் களித்தானைக் காணுங்கா
லுள்ளான்கொ லுண்டதன் சோர்வு.

(பரி.) இ-ள். கள் உண்ணாப் போழ்தில் களித்தானை = கள்ளுண்பானொருவன் தான் அஃதுண்ணாது தெளிந்திருந்த பொழுதின்கண் உண்டு களித்த பிறனைக் காணுமன்றே,—காணுங்கால் உண்டதன் சோர்வு உள்ளான்கொல் = காணுங்கால் தானுண்டபொழுது உளதாஞ்சோர்வினை அவன் சோர்வால் அறிவு மற்றென்று கருதான்போலும்! எ-று.

சோர்வு = மனமொழிமெய்கள் தன்வயத்தவல்லவாதல். கருதலளவையான் அதனிழுக்கினை யுய்த்துணரின் ஒழியுமென இதனால் அஃதொழிதற் காரணங் கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—கள்ளினை உண்ணுகின்ற ஒருவன் அக்கள்ளினைத்தான் உண்ணாமல் அறிவு தெளிந்திருந்த காலத்தில் தன் போன்று கள்ளினை உண்டு மயங்கிய மற்றொரு குடியனைக் காண்பான் அல்லவோ?



அவ்விதம் காணுங்காலத்து அவனது சோர்வினை எல்லாம் பார்த்துத் தான் கள்ளினைக் குடித்தபோது உண்டாகும் சோர்வும் இவ்விதமே இருக்குமென்று எண்ணமாட்டான் போலும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. இதனால் கள் உண்ணாதகாலத்துக் கள்ளுண்ட ஒருவனைப் பார்க்கின்றவன் தன்னுடைய மனம், வாக்கு காயம் தன்வசப்படாது பிறரால் சிரிக்கவும், பழிக்கவும் படுவதையும் தன்தேகத்திற்குத் துன்பத்தைத் தேடிக்கொள்ளுதலையும் நன்கு ஆராய்ந்து மனத்தின் எண்ணுவானாயின், அவ்வித எண்ணத்தால் ஓர்கால் அறிதல் கூடுமென்றும், அவ்வறிவால் அக்கள்ளுண்டலை ஒழித்தல் கூடுமென்றும் காரணம் கூறுவதாக அறிகின்றோம் ஆயின், கள்ளுண்பான் இவ்விதம் கருதல் அளவையால் கள்ளுண்ணும் குற்றத்தை அறிந்து ஒழிப்பது அருமையினும் அருமையே என்று உணர்கின்றோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "காமத்தால் வரும் கட்புக்களில் ஒன்றாகிய கள்ளுண்பது இதுவென்று அறிந்தோம். இனி, கவறு என்று முன்னர்த் தோற்றுவாய்ச் செய்த

சூது என்பதன் தன்மையையும் உணர அவாவுகின்றோம்" என்ன லும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 94. அதிகாரம்.
### சூது.

(பரி.) இவை அக்கள்ளுண்டல்போல அறம் பொருள் இன்பங்கட்கு இடையீடாகிய சூதாடலும் பிணியுழத்தலுங் கூறுவான்றொடங்கி, முதற்கட் சூதினதியல்பு கூறுகின்றார்.

விளக்கம்:—அதாவது, மேற்கூறிய கள்ளுண்டலால் வரும் இடையூறுகள் போல அறம், பொருள், இன்பங்களுக்குச் சூதாடுத லும், பிணியால் துன்புறுதலும் இடையூறாக உள்ளனவாதலால் அவ்விரண்டினுள் முதலில் சூதினால் வரும் துன்பங்களைக் கூறு வான் தொடங்கினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சூதினால் வெல்லுபவர் பெரும்பொருள் தேடிப் பிழைக்கின்றனர் என்று கேட் டுள்ளோம். அது உண்மையோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயி னர்.



931. வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று. [உ.ந

(பரி.) இ-ள். வென்றிடினும் சூதினை வேண்டற்க—தான் வெல்லு மாற்றலுடையனாயினும் சூதாடலை விரும்பாதொழிக;—வென்றதூஉம் தூண் டிற் பொன் மீன் விழுங்கியற்று—வென்று பொருளெய்துவார் உளராயி னின் அவ்வென்றபொருடானும் இரையான் மறைந்த தூண்டி லிரும்பினை இரையெனக் கருதி மீன் விழுங்கினாற்போலும். எ-று.

வேறல் ஒரு தலையன்மையின் 'வென்றிடினும்' என்றும், கருமங்கள்பல வுங் கெடுதலின் 'வேண்டற்க' என்றுங் கூறினார். எய்தியபொருள் சூதாடுவார் சிங்காமைக்கு இட்டதோர் தலையென்பதூஉம், அதனாற் பின்றுயருழத்தலும் உவமையாற் பெற்றாம். (௧)

விளக்கம்:—ஒருவன் தான் வெல்லக்கூடிய வல்லமை உடைய

வறுமையிருந்தாலும், சூதாட்டம் ஆடுதலை விரும்பாது ஒழிதல் வேண்டும் என்றும், ஏனெனின்? சூதாட்டத்தில் வென்ற பொருளை அடைந்து வாழ்பவர் உண்டு என்று கூறினும் அவ்விதம் வெற்றிகொண்ட பொருள்தானும் இரைபோடு கூடிய தூண்டி லென்னும் மீன் பிடிக்கும் கருவியில் உள்ள இரும்பினை இது முழுவதும் இரை என்று கருதி அதை உண்ணவந்த மீனானது அக்கருவியினை விழுங்குவது போலும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், சூதாட்டத்தில் வென்று பொருளடைந்தவர் பலர் இல்லையென்றும், ஒருவேளை ஒருவன் வென்று பொருளினைக் கைக்கொண்டாலும் அவனுக்கு அப்பொருள் அச்சூதாட்டத்தை விட்டு நீங்காதிருக்கக்கூடிய காலில் தங்கிய ஓர் விலங்கு போலாகிப் பின்னர் வென்ற பொருளையு மிழந்து உலைந்து வாழ்வதற்கு மில்லாமல் வறுமையால் இறப்பன் என்னும் உண்மையைப் பெறுவதற்கு மீன்பிடிப்போர் கருவியாகிய தூண்டிலைச் சூதாகவும், அக்கருவியின் இரும்பில் கோத்துள்ள இரையினை ஜெயித்து வந்த பொருளாகவும், அவ்விரையினை இலவசமாகக் கிடைத்ததென்று விழுங்கவந்த மீனைச் சூதாடியாகவும் உவமித்தனர். அது எவ்வாறோ எனின்? அம்மீனானது இரையல்லாத இரும்பினை இரை என்று எண்ணி அதனை விழுங்கி இறந்து போவதுபோல், சூதாட்டத்தில் சிக்கிக்கொண்ட



ஒருவன் இரவு பகலாகச் சூதாடுவதாலும் உண்ணல், உறங்கல் இல்லாமையாலும், பொருளை இழந்து வறுமை அடைவதாலும், உயிரை விடுகின்றான் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சூதினால் ஒருவன் ஒருமுறை வென்று பொருளை அடைவானாயின் அவன் பின்னர் என் துன்புறுகின்றான்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

932. ஒன்றெய்தி நூறிழக்குஞ் சூதர்க்கு முண்டாங்கொ
னன்றெய்தி வாழ்வதோ ராறு.

(பரி.) இ-ள். ஒன்று எய்தி நூறு இழக்கும் சூதர்க்கும் = அத்தூண்டிற் பொன் போன்ற ஒன்றினை முன்பெற்று இன்னும்பெறுதுமென்னுங்கருத்தால்

த்தினையிழந்து வறியராஞ் சூதர்க்கும்—நன்று எய்தி வாழ்வது தோறு உண்டாங்கொல்=பொருளால் அறனுமின்பமுமெய்தி வாழ்வதொருநெறியுண்டாமோ? ஆகாது. எ-று.

அவ்வாற்றாற் பொருளிழப்பித்து வருதலான், அதனுலெய்தும் பயனும் அவர்க்கில்லை யென்பதாம். (உ)

விளக்கம்:—தூண்டிலிலுள்ள இரையால் மறைக்கப்பட்டுள்ள இரும்பைப் போல் ஏதேனுமொரு பொருளை ஒருமுறை அடைந்து இன்னும் இவ்விதமே ஜெயித்துப் பொருளை அடைவோம் என்னும் எண்ணத்தினால் சூதாடப் புகுந்து முன் அடைந்த ஒரு பொருளைப் போல் நூறு பங்காகிய பொருள்களை அச்சூதாட்டத்தால் இழந்து தரித்திரர்களாகும் சூதாடுபவர்களுக்கும், அவர்களடைந்த பொருளால் பொருள் படைத்த ஏனையோர் அடையக்கூடிய அறத்தினையும், இன்பத்தினையும் அடைந்து வாழ்வதற்கு உரிய ஒரு வழி கிடைக்குமோ? எக்காலத்தும் கிடைக்காது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் சூதாட்டமென்பது ஒருவேளைப் பொருளைத் தருமாயினும் அடைந்த பொருளாசையால் அச்சூதாட்டத்திலேயே நின்று ஜெயித்த பொருளல்லாமல் தம் முன்னோர் தேடிய பொருளையும் இழந்து வறிஞராகி இறப்பரே அன்றி, படைத்த பொருளால் அறத்தைச் செய்து அதனால் ஆகிய பயனை அடைவதற்கோ, அல்லது இன்பத்திற்காகச் செலவழித்து அதனாலடையும் பயனை அடைவதற்கோ இல்லாமல் வருந்தி இறப்பர்



என்று அறிகிறோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "நிதியில்லா வறிஞன் ஒருவன் ஆடப் புகுவானாயின் அவன் துயருறுதல் கூடும். ஆயின், அரசன் ஒருவன் சூதினை ஆடுவானாயின், அவனும் மேற்கூறிய துன்பத்தை அடைவானோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

933. உருளாயம் ஓவாது கூறிற் பொருளாயம்
போஒய்ப் புறமே படும்.

(பரி.) இ-ள். உருள் ஆயம் ஓவாது கூறின்=உருளுங்கவற்றின்கட்பட்ட

ஆயத்தை இடைவிடாது கூறிச் சூதாடுமாயின், உ-பொருள் ஆயம் போய்ப் புறமே படும்=அரசனீட்டியபொருளும் ஆன்பொருள் வருவாயும் அவனை விட்டுப்போய்ப் பகைவர்கண்ணே தங்கும். எ-று.

கவற்றினதுருட்சியை அதனிறுவ ஆயத்தின்மேலேற்றியும், சூதாடலை அது கூறலாகிய காரணத்தின்மேலிட்டுங் கூறினர். பொருளாயமென்பது உம்மைத்தொகை. ஆயம் வடமொழித்திரிசொல். காத்தற்கண்ணும் இயற்றற்கண்ணும் கருத்திலனாகலின், அவையிரண்டும் பகைவர்பாற் செல்லுமென்பதாம். (௬)

விளக்கம்:—உருண்டு ஓடுகின்ற சூதாட்டக் கருவியாகிய பாய்ச்சிகை என்னும் கருவியினிடத்தே வருகின்ற லாபத்தைக் கருதி அதனால் வரும் பந்தயங்களை இடைவிடாது சொல்லி ஒருவன் சூதினை ஆடுவானாயின், அவ்விதம் சூதாடியவன் அரசனாயினும் அவன் சேர்த்த பொருளும் அவனுக்கு இனி வரவேண்டிய பொருள் வருவாயும் அவனை விட்டு நீங்கி அவனது பகைவர்களிடத்தே சேர்ந்து தங்கிவிடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், சூதாடுகின்ற ஒருவன் சூதாடுதலையே தனக்குப் பொருளென்று கொண்டு எக்காலமும் சூதாடிப் பொருளை இழந்து வருவதால் அப்பொருளைக் காத்தல் வேண்டுமென்னும் எண்ணத்தையுமிழந்து உள்ள பொருளைக் காவாததுடன் பொருள் வருதற்கு உள்ள வருவாய்களை எண்ணி அவற்றைச் சேர்த்தல் இல்லை ஆதலால், பொருள் சேர்த்தற்கு இல்லாமையும் ஆகி இருப்பானென்றும், அவ்விதம் இருக்குங்காலத்து இவனது பொருள் இவனோடு சூதாடிய மாற்றானிடத்தே பாயினும் அல்லது ஏனைய பகைவர்களிடத்தே பாயினும் போய்விடும் என்றும் அறிந்தோம். ஆத



லால், சூதாடுகிறவன் அரசனாயினும் அவன் வருந்தி இறத்தல் வேண்டும் என்பதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சூதாட்டத்தால் அடையும் வறுமைபோல் வேறொன்றாலும் அவ்வித வறுமையை அடைவதற்கு இல்லை போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

934. சிறுமை பலசெய்து சீரழிக்குஞ் சூதின்
வறுமை தருவதொன் றில்.

(பரி.) இ-ள். சிறுமை பல செய்து சீர் அழிக்கும் சூதின் = தன்னை விழைந்தார்க்கு முன்னில்லாத துன்பங்கள் பலவற்றையும் விளைத்து உள்ள புகழையும் கெடுக்குஞ் சூதுபோல்—வறுமை தருவது ஒன்று இல் = நல்குரவினைக் கொடுக்கவல்லது பிறிதொன்றில்லை. எ-று.

அத்துன்பங்கள் முன்னர்க் கூறுப. நல்வினைகளையும் நல்லினத்தையும் நீக்கித் தீவினைகளையுந் தீயினத்தையுங் கூட்டுதலால், 'சீரழிக்கும்' என்றார். வறுமைக்கு எல்லையாவதென்பதாம். (௪)

விளக்கம் :—தன்னை விரும்பினர்க்கு முன் ஒருபோதும் இல்லாதனவாகிய பல துன்பங்களையும் உண்டாக்கி உள்ள புகழையும் கெடுக்கின்ற சூதாட்டத்தைப்போல் தரித்திரத்தைக் கொடுப்பது வேறு ஒன்றுமில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் பல துன்பங்களையும் தருமென்று கூறியதுடன், நற்றொழில்களையும், நல்ல கூட்டத்தையும் ஒழித்து தீத்தொழில்களையும், தீய இனத்தையும் இச்சூதாட்டமானது உண்டாக்குகின்றது ஆதலால், இச்சூதாட்டமானது உள்ள சிறப்பினை நீக்கித் துன்பத்தைக் கொடுத்து நிற்குமென்றும், அதனால் அவன் அடைந்த புகழினை இழப்பானென்றும், அதுவன்றியும் இச்சூதைப்போல் தரித்திரத்தை உண்டுபண்ணக்கூடியது வேறு ஒன்றுமில்லையென்றும் அறிகின்றோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் சூதாடி வறுமை அடைகின்ற அரசாயினோர் உலகத்தின் புகழை இழப்பர் என்று கூறியதால் அவர்கள் தாமிருந்த நாட்டில் இருந்தேனும் துன்பத்தை அநுபவித்துக் கொண்டிருத்தல் கூடுமோ? அன்றி நாட்டையும் விட்டுப் போய்விடுதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



935. கவறுங் கழகமுங் கையுந் தருக்கி

யிவறியா ரில்லாகி யார்.

(பரி.) இ-ள். இல்லாகியார்=முற்காலத்துத் தாமுளராகியே இலராகி யொழிந்தனர்,—கவறும் கழகமும் கையும் தருக்கி இவறியார்=கவற்றினையும் அதனாடுங்களத்தினையும் அவ்வாடற்குவேண்டுங் கைத்தொழிலினையும் மேற்கொண்டு கைவிடாத வேந்தர். எ-று.

கைத்தொழில்=வெல்லுமாயம்படப் பிடித்தெறிதல். அவ்விழுதலைப் பாண்டவர் தம்மரசுவிட்டு வனத்திடைப்போய் ஆண்டுமறைந்தொழுகின ரென அநுபவங்காட்டியவாறு. இவையைந்து பாட்டானும் அதனது வறுமை பயத்தற்குற்றங் கூறப்பட்டது. (ரு)

விளக்கம்:—சூதாடுகின்ற கருவியையும், சூதாடுகின்ற இடத்தையும், அச்சூதாட்டத்திற்கு வேண்டிய விதம் உருட்டும் பாய்ச்சிகையைப் பிடித்து எறியும் வன்மையினையும் கொண்டு வெற்றியினைக் கைவிடாத அரசர் முற்காலத்தில் தாம் உலகத்துப் பிழைத்திருந்தவராகவே இருந்தும் இல்லாதவராகவே காணப்பட்டனர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், சூதினையே பொருளென்று விரும்பி அச்சூதாடுதலையே தமக்குத் தொழிலாகக் கொண்டவர் எல்லாவற்றையு மிழந்து நாட்டினைவிட்டுக் காட்டை அடைந்து உலகத்து உயிரோடிருந்தும் உலகத்து உள்ளார் அறியாவண்ணம் அஞ்ஞாத வாசமும் இருத்தல் வேண்டிவரும் என்று காட்டுவார், முன் காலத்து இவ்விதம் இருந்தனரென்று பாண்டவரைக் குறிப்பாக உவமை காட்டினர். இதனைப் பின்வரும் வில்லி பாரதச் செய்யுள்களாலும் அறிதல்கூடும் என்றனர்.

"நீதினும் வரித்த நெஞ்சத் தீயவராடுமாயச்
சூதினால் வென்று கொள்கை தோற்றதும் புகழுமன்று
போதினுன் முகனுமாதும் புரிசடையவனும் கேள்வி
யாதிரான் மறையு முன்னவ்வு மிவ்வகையறுதே."

"அடியுமாண்மையும் வலிமையுஞ் சேனையுமழகும் வென்றியுந்தத்தம்
குடியுமானமுஞ் செல்வமும் பெருமையுங்குலமு மின்பமுந்தேசும்
படியுமாமறை யொழுக்கமும் புகழுமுன்பயின்ற கல்வியுஞ்சேர
மடியுமான் மதியுணர்ந்தவர் சூதின்மேல்வைப்பரோ மனம்வையார்."

74

" தந்தைத னருளாற் பெற்றவுரிமையுந் தம்பிமாரும்
பைந்தொடி தானுஞ் சேயும்பதி பெயர்ந்தயர்ந் தவேயின்
வெந்துழ வனங்களின் வெளிப்படா துறை யினின்றே
மைந்தரா தானிலைவிட் டேகுமினெழுமி னென்றான்."

அதுகேட்ட மாணுக்கர், "மேற்கூறிய ஐந்து திருக்குறள்களாலும் சூதினுல் வறுமை அடையும் குற்றத்தை அறிந்தோம், இனி, இச் சூதால் அடையும் சிறுமைகளையும், அதனுல் இழக்கும் இருமைப் பயன்களையும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறு வாராயினர்.

936. அகடாரா ரல்ல லுழப்பர்சூ தென்னு
முகடியான் மூடப்பட் டார்.

(பரி.) இ-ள். சூது என்னும் முகடியான் மூடப்பட்டார்=தன்பெயர் சொல்லல் மங்கலமன்மையிற் சூதென்று சொல்லப்படும் முகடியான் விழுங்கப்பட்டார்—அகடு ஆரார் அல்லல் உழப்பர்=இம்மைக்கண் வயிறாரப் பெறார், மறுமைக்கண் நிரயத் துன்பமுழப்பர். எ-று.

செல்வங்கெடுத்து நல்குரவு கொடுத்தற்றொழில் வேறுபடாமையிற் 'சூதென்னு முகடி' என்றும், வெற்றிதோல்விகளுக்கு ஒருபொழுதும் விடா ராகலின் ஈண்டு 'அகடாரார்' என்றும், பொய்யுங் களவும் முதலிய பாவங்க ளீட்டலின் ஆண்டு 'அல்லலுழப்பர்' என்றுங் கூறினர். வயிறாராமை சொல்லவே, ஏனைப்புலன்க ளாரப்பெறாமை சொல்லவேண்டாவாயிற்று. உழப்ப ரென்பது எதிர்காலவினை. (சு)

விளக்கம்:—தன்னுடைய பெயரையும் சொல்லப் புகுந்தால் மங்கலமல்லாத சூது என்று சொல்லப்படும் மூதேவியால் விழுங்கப் பட்டவர் எவரோ, அவர் இம்மையில் வயிறார உண்பதற்கு இல்லாமல் பசியால் துன்பப் படுவாரென்றும், மறுமையில் நரகத் துன்பத்தில் விழுந்து வருந்துவரென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனுல், சூது என்பது உள்ள செல்வத்தையெல்லாம் போக்கித் தரித்திரத்தையே உண்டுபண்ணும் தொழிலோடு கூடி உள்ளதாதலால், அதைக் கொண்ட ஒருவனுக்கு அச்சூதானது விழுங்கப்படுகின்ற

முடிவாக உள்ளதென்றும், அதுவன்றியும் சூதாடுகின்றவர் நமக்கு



வெற்றி வந்தகாலத்தில் அவ்வெற்றிக்காக மகிழ்ந்து மேலும், மேலும் ஆடுவதும் தோல்வி வந்த காலத்து அதற்காக வருந்தி மேலும், மேலும் வெற்றி யடையும் பொருட்டு ஆடுவதும் தொழிலாகக் கொண்டு ஓயாது ஆடுவாராதலால், இவ்வித சூதாட்டத்தில் தலைப்பட்டவர் உணவு கொள்வதினும், அறிவைச் செலுத்தார். அதனால் பசியால் வருந்துவர் என்பது அறிய வயிறாரப் பெறுரென்றும், சூதினை ஆடுகின்ற காலத்துப் பாய்ச்சிகையில் ஒன்று விழுந்திருக்க மற்றொன்றாகக் கூறி வெற்றி கொள்வதற்குச், சொல்லும் பொய்களாலும் அதுவல்லாமலும் காய்களை வைக்குங்காலத்து இடங்களை மாற்றி வைக்கின்ற களவுச் செய்கைகளாலும் வருகின்ற பாவத்தைக் கொண்டு தாம் அடைய இருக்கும் மறுமைப் பயனையும் இழந்து நரகத் துன்பத்தையும் அநுபவிப்பர் என்றும் கூறுவார் அல்லலுழப்பார் என்றும் கூறினாராயிற்று. அதுவன்றியும் இத்திருக்குறளில் வயிறாரப்பெறார் என்பதினாலேயே ஏனைய புலன்களாகிய கண், செவி, மூக்கு, வாய் ஆகிய நான்கும் அடைய வேண்டிய இன்பங்களை அடையாவென்றும் அறிகிறோம். ஆதலால் சூதாடுபவர் இம்மை மறுமையாகிய இரண்டு பயன்களையுமிழப்பர் என்று கூறினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இன்னும் இச்சூதால் வரும் சிறுமைகளையும் சொல்லுதல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

937. பழகிய செல்வமும் பண்புங் கெடுக்குங்
கழகத்துக் காலை புகின்.

(பரி.) இ-ள். காலை கழகத்துப் புகின் = அறம் பொருளின்பங்கட்கு உடைத்தகாலம் அரசனுக்குச் சூதாடுகளத்தின்கட் கழியுமாயின், — பழகிய செல்வமும் பண்பும் கெடுக்கும் = அக்கழிவு தொன்றுதொட்டுவந்த அவன் செல்வத்தினையும் நற்குணங்களையும் போக்கும். எ-று.

பழியென்பது பண்புடைமையையும், தான் செய்துகொள்ளும் அற

முதலியவையன்றி முன்னோரைத்தொடங்கி வருகின்ற செல்வமும் முன் செய்த நல்வினையின் பயனாய பண்பும் இலவாமென்பதாம். (எ)

விளக்கம்:—ஒருவனுக்கு அறம், பொருள், இன்பம் என்னும் மூன்றினையும் செய்ய வகுத்த காலத்தைச் சூதாடுகின்ற இடத்தில்



போக விடுவானாயின், அவ்விதம் போகவிட்ட அக்காலத்தினது அழிவானது பழமையாக அவனுக்கு வந்திருந்த அவனுடைய செல்வத்தினையும், இயல்பாக இருந்த நற்குணங்களையும் போக்கிவிடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், ஒருவன் அரியதாகிய மானுடப் பிறவியை அடைந்ததின் பயனாக அறம், பொருள், இன்பங்களால் ஆகிய பயனை அடைவதற்குத் தன் பொழுதைப் போக்கவேண்டி இருக்க அவ்விதம் செய்யாது தன் கால முழுமையும் சூதாடுகின்ற இடத்திலேயே கழித்து விடுவானாயின், மூன்றனும் வரும்பயனையும், இழந்து விடுவதுடன் தன் முன்னோர் தேடிய செல்வத்தையும் சூதாடு மிடத்தில் இழந்து பொய் கூறாமை களவு செய்யாமை என்னும் தனக்கு இயல்பாக இருந்த நற்குணங்களையும் போக்கி நிற்பானென்றும் அறிகின்றோம். ஆதலால், சூதாடுபவன் இம்மையில் வறுமையும், பழியும், பாவமுமடைந்து, மறுமையில் நரகத்தையுமடைவான் என்று இத்திருக்குறளால் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இன்னும் எவ்வெவ்வித சிறுமைகள் சூதாடுபவனுக்கு நேரும் என்பதையும் கூறுதல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

938. பொருள்கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள்
தல்ல லுழப்பிக்குஞ் சூது. [கெடுத்

(பரி.) இ-ள். சூது=சூது—பொருள் கெடுத்து=தன்னைப்பயின்றவன் பொருளைக்கெடுத்து,—பொய் மேற்கொளீஇ=பொய்யை மேற்கொள்ளப் பண்ணி,—அருள் கெடுத்து=மனத்தெழும் அருளைக்கெடுத்து,—அல்லல் உழப்பிக்கும்=இவ்வாற்றான் அவனை இருமையினும் துன்பமுழவிக்கும்.

இத்தொழில்கண்மூன்றற்கும் சூது வினைமுதலாகவும், தோல்வி,

வெற்றி, செற்றமென்பன முறையே கருவிகளாகவுங் கொள்க. முன்னதனுன் இம்மையினும், ஏனையவற்றான் மறுமையினுமாம். பொருள்கொடுத்தென் பது பாடமாயின், அவ்வெச்சத்திற்கு முடிபு மேற்கொளீஇ யென்புழி மேற் கோடலாகிய வினைமுதல்வினை. (௮)

விளக்கம்:—சூது என்று சொல்லப்படுவது தன்னிடத்துப் பழகிய ஒருவனது பொருளை எல்லாம் போக்கிப் பொய்மை கூறு வதையே விரதமாகக் கொள்ளும்படிச் செய்து இயல்பாக மனத்



தில் தோன்றும் பல உயிர்கள் மீதும் செல்லுகின்ற அருள் என்பதைப் போக்கி அவனை இம்மை, மறுமையாகிய இரண்டு இடங்களிலேயும் துன்பத்தை அனுபவிக்கும்படிச் செய்யும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனுல், சூதாடுபவனுக்குப் பொருள் போதலும், பொய் கூறலும், அருள்போதலும், ஆகிய குற்றங்கள் உண்டாகு மென்றும், அவைகளால் இருமையினும் துன்பமடைவா னென்றும் அறிந்தோமென்றனர். இதுகேட்ட மாணுக்கர், "இனி முடிவாகச் சூதாடுபவனுக்கு வரும் குற்றங்கள் இவையென்று சொல்ல விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

939. உடைசெல்வ மூணொளி கல்வியென் றைந்து
மடையாவா மாயங் கொளின்.

(பரி.) இ-ள். ஆயம் கொளின் = அரசன் சூதினைத் தனக்கு வினோதத் தொழிலாக விரும்புவானாயின்,—ஒளி கல்வி செல்வம் ஊண் உடை என்று ஐந்தும் அடையாவாம் = அவனை ஒளியும் கல்வியும் செல்வமும் ஊணும் உடையுமென்றிவ்வைந்துஞ் சாராவாம், எ-று.

ஆயம்—ஆகுபெயர். இச்சிறப்புமுறை செய்யுணோக்கிப் பிறழ்ந்தது. செல்வம் = அறுவகையுறுப்புக்கள். ஊணுடையென்பனவற்றால் துப்புரவுக ளெல்லாம் சொல்லப்படும். காலமும் கருத்தும் பெருமையின், இவையுள வாகாவென்பதாம். இவை நான்கு பாட்டானும் சிறுமைபலசெய்து அவற்று னிருமையுங்கெடுத்தல் கூறப்பட்டது. (௯)

விளக்கம் :—அரசன் ஒருவன் சூதாட்டத்தைத் தனக்கு விநோதத் தொழிலாக எண்ணி விரும்புவானுயின், அவ்விதம் விரும்புகின்ற அவ்வரசனை மதிப்பும், கல்வியும், செல்வமும், ஊணும், உடையும் என்று கூறப்பட்ட இவ்வைந்து தகுதிகளும் அடையா என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், சூதாடுபவனுக்குச் சூதாடுவதிலேயே காலமும், கருத்தும் செல்வதால் அவன் காலமும், கருத்தும் மதிப்பை அடைவதற்கோ, கல்வியைப் போற்றுவதற்கோ, செல்வத்தைக் காப்பதற்கோ, உணவினை உண்பதற்கோ, உடையைத் தரிப்பதற்கோ இல்லாமல் படை, குடி, கூழ், அமைச்சு, நட்பு, அரண் என்கின்ற ஆறு செல்வங்களையுமிழந்து உண்ணுதலும், உடுத்தலுமில்லாது கல்வியால் ஆகிய அறிவினை இழந்து,



பிறர் போற்றும் மதிப்பினை இழந்து, இருமையினும் துன்பத்தை அடைவானென்று முடிந்தது முடித்தலாகக் கூறினர் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஏன் சூதாடலை ஒருவன் விரும்புகின்றானென்றும், அவ்வாறு விரும்புவது எவ்விதம் முடியும் என்றும் ஓர் உவமை வாயிலாக விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

940. இழத்தொறூஉங் காதலிக்குஞ் சூதே போற்றுன்ப
முழத்தொறூஉங் காதற் றுயிர்.

(பரி.) இ-ள். இழத்தொறூஉம் காதலிக்கும் சூதேபோல்=சூதாடலான் இருமைப்பயன்களையு மிழக்குந்தோறும் அதன்மேற் காதல்செய்யுஞ் சூதன் போல—துன்பம் உழத்தொறூஉம் காதற்று உயிர்=உடம்பான் மூவகைத் துன்பங்களையும் அநுபவிக்குந்தோறும் அதன்மேற் காதலையுடைத்து உயிர்.

சூது—ஆகுபெயர். உயிரினறியாமை கூறுவார்போன்று சூதனறியாமை கூறுதல் கருத்தாகலின், அதனை யாப்புறுத்தற்பொருட்டு உவமையாக் கூறினர். இதனை நிர்மறைமுகத்தாற் சூதினை வெறுத்தொழியாமைபோலக் கும் உடம்பினை வெறுத்தொழியுமாயினெனவுங் கொள்க. இதனுன் அஃதொழிதற்கருமையும் ஒழித்தாராது பெருமையும் கூறப்பட்டன. (௰)

விளக்கம்:—உடம்பால் வருகின்ற மூன்றுவித துன்பங்களையும் அனுபவிக்குந் தோறும், அனுபவிக்குந்தோறும் அவ்வுடம்பின் மீது உயிரானது வெறுப்புக் கொள்ளாது எவ்வாறு ஆசைகொண்டு உள்ளதோ, அதுபோல் சூதாடுவதால் இம்மை, மறுமை ஆகிய இரண்டு பயன்களையும் இழக்குந்தோறும், இழக்குந்தோறும் சூதாடுபவன் ஆசைகொண்டு ஆடுவான் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், உடம்பெடுக்குந் தோறும் அவ்வுடம்பை இடமாகக்கொண்டு வாழும் உயிரானது பல துன்பங்களையும் அடைந்து கொண்டிருந்தும், அடைகின்ற துன்பத்தைக் கருதாது அவ்வுடலை இன்பமென்று கருதி அதனிடத்தே வாழ்ந்து அவ்வுடலை மேலும், மேலும் போற்றிக் காத்துப் பின்னர் அவ்வுடலை விட்டு நீங்கும் காலத்து ஓர் சம்பந்தமும் இல்லாது போகின்றதைப்போல் சூதாடுகின்ற ஒருவன் மேல்திருக்குறளில் கூறிய ஒளி, கல்வி, செல்வம், ஊண், உடை என்கின்ற ஐந்தினையு மிழந்து இருமைப் பய



னையு மிழப்போம் என்று அறிந்திருந்தாலும் ஒருமுறைப் பழகிய பழக்கத்தால் அச்சூதினை விடாது எல்லாத் துன்பங்களையும் அனுபவித்துப் பின்னர் ஒன்றுமற்றவனாய்ப் போய்விடுவானென்று அறிவதுடன், உடம்பின் இழிவினை அறிந்த துறவிகள் அவ்வுடம்போடு கூடியிருக்கினும் அவ்வுடம்பில் சிறிதும் பற்றில்லாதிருப்பதுபோல் நல்லறிஞர் சூதால் வரும் இன்பத்தைத் துன்பமாகக் கருதி அதை ஒழித்து இருமைப் பயனையுமடைவர் என்று சூதாடுபவனையும், சூதாடாது ஒழிபவனையும், அவ்விருவர்க்கு வரும் துன்ப இன்பங்களையும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சூதாடுகின்ற ஒருவன் ஒருமுறை சூதினிடத்தே பழகுவானாயின், அதை அவன் ஒழித்தல் மிக அருமை யென்றும் ஒழித்தால் மிகுதியும் பெருமை யென்று மறிந்தோம். இதுகாறும் காமத்தால் வரும் தீமைகளின் குணங்களைப் பெண்வழிச் சேறல், என்பது முதல் சூது என்னும் இவ்வதிகாரம் வரையில் அறிந்தோம். இனி, ஏற்காத உணவு முதலியவைகளாலும், காமம் முதலிய இன்பம் அனுபவிக்கும் தீச்செயல்களாலும் வரும் நோய்களைத் தீர்ப்பதற்குக் கூறுவதாக உள்ள மருந்து

என்னு மதிகாரத்தைக் கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

---

## 95. அதிகாரம்.

---

## மருந்து.

(பரி.) பழவினையானும் காரணங்களானும் மக்கட்கு வாதமுதலிய பிணிகள் வரும்; அவற்றுட் பழவினையான் வருவன அதன்கழிவின்கணல்லது தீராமையின் அவையொழித்து, வினைக்காரணங்களான் வருவனவற்றைத் தீர்க்கும் மருந்தின் திறங்கூறுகின்றார். காரணங்களாவன உணவுசெயல்கள தொவ்வாமையாகலின், பிணிகளும் காரணத்தான் வருவனவாயின.

விளக்கம்:—அதாவது, மக்கள் செய்த முன்னைய வினையின் பயனாலும் காரணங்களாலும் வாத, பித்த, சிலேத்துமம் என்கிற மூன்றினாலாகிய நோய்கள் வருமென்றும், அவ்விதம் வருவதுடன் முற்பிறவியில் செய்த வினைக்குத் தக்க அளவாக வந்தவைகளாய் அப்பழவினை தீர்தலன்றி தீராதனவாய் உள்ள தொழு நோய்



முதலிய நோய்கள் மருந்தால் தீராமையின் அந்நோய்களை எல்லாம் இங்குக் கூறாது மக்கள் செய்கின்ற செயலுக்குத் தக்க அளவாக வருவனவாகிய நோய்களின் தன்மையை நீக்கும் மருந்தின் சிறப்பையே இங்குக் கூறப்புகுந்தனர். அச்செயல்களாவன:—மக்கள் உண்ணுகின்ற உணவும், அவர்கள் செய்கின்ற செயல்களுமாம். அவை ஒன்றோடொன்று ஒவ்வாதனவாக இருக்குமாயின் அவற்றால் வருவனவும் தீர்க்கக்கூடியனவும் ஆகிய நோய்களையே தீர்ப்பதற்கு உரிய மருந்தினை இங்குக் கூறுகின்றனர் என்று அறிக்தேமென்றனர். அதுகேட்ட மாணுக்கர், "மக்கள் அடையும் நோய் காரணத்தால் ஆயின், அக்காரணங்கள் எவை?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

941. மிகினுங் குறையினு நோய்செய்யு நூலோர்
வளிமுதலா வெண்ணிய மூன்று.

(பரி.) இ-ள். மிகினும் குறையினும் = உணவுஞ் செயல்களும் ஒருவன் பகுதிக்கொத்தவளவினவன்றி அதனின் மிகுமாயினும் குறையுமாயினும்,— நூலோர் வளிமுதலா எண்ணிய மூன்றும் நோய் செய்யும் = ஆயுள்வேதமுடையாரால் வாதமுதலாக வெண்ணப்பட்ட மூன்றுநோயும் அவனுக்குத் துன்பஞ் செய்யும். எ-று.

நூலோரெண்ணியவெனவே, அவர் அவற்றுள்வகுத்த வாதப்பகுதி பித்தப்பகுதி ஐப்பகுதியென்னும் பகுதிப்பாடும் பெற்றாம். அவற்றிற்குணவொத்தலாவது:—சுவை வீரியங்களானும் அளவானும்பொருந்துதல். செயல்களொத்தலாவது :—மனமொழிமெய்களாற்செய்யுந் தொழில்களை அவை வருந்துவதற்கு முன்னேயொழிதல். இவை இரண்டும் இங்ஙனமன்றி மிகுதல் குறைதல் செய்யின், அவை தத்தநிலையி னில்லாவாய் வருத்துமென்பதாம். காரணமிரண்டும் அளவாய் நிலையான் வந்தன. மூன்றும்மை விகாரத்தாற்றொக்கது. இதனால் யாக்கைகட் பெல்பாயெ நோய் மூவகைத்தென்பதூஉம், அவை துன்பஞ் செய்தற்காரணம் இருவகைத்தென்பதூஉம் கூறப்பட்டன. இன்பஞ் செய்தற் காரணம் முன்னர்க் கூறப. (க)

விளக்கம்:—ஒருவன் கொள்ளும் உணவுகளும், செய்யும் செய்கைகளும் அவனுடைய தேகக் கூறுக்கு ஒத்த அளவின உடையனவாக இல்லாமல் அத்தேகக் கூறுக்கு அதிகப்பட்டிருக்குமாயினும்,



குறைந்திருக்குமாயினும் ஆயுள்வேத மென்கின்ற வைத்திய நூலார் சொல்லுகின்ற வாத, பித்த, சிலேத்துமமாகிய இம்மூன்றினுள் உண்டாகும் மூன்றுவித நோய்களும் அவனுக்குத் துன்பத்தை உண்டுபண்ணும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, வாதம் முதலியமூன்றிற்கும் ஒத்த அளவாக உணவுகள் ஒத்திருத்தலாவது உணவில் உள்ள சுவையும், உணவில் உள்ள பலமும் கொள்ளுகின்ற உணவின் அளவும், கொள்ளுகின்ற அவனது தேகக்

கூறுபாட்டுக்குத் தக்க அளவாகக் கொள்ளுதல் என்றும், மனத்தாலும், வாக்காலும், தேகத்தாலும் செய்யவேண்டிய அதற்கு உரிய தொழில்களை அம்மனமும், வாக்கும், காயமும் துன்பம் அடைவதற்கு முன்னே நிறுத்திக் கொள்ளல் வேண்டுமென்றும், அவ்விதமல்லாது ஒருவனது தேகக் கூறுபாட்டிற்கு மிகுதியாகவோ, குறைவாகவோ உண்பதும் மிகச் சுவையுடனேயாகவோ, மிகப்பலமுடையனவாகவோ, அல்லது மிகுந்த அளவின உடையனவாகவோ உள்ள பொருள்களை உண்ணுதலும் அல்லது மேற்கூறியவைகளுள் எல்லாவற்றிலும் குறைவாக உண்ணுவதோ ஆகிய தகுதியை ஒருவன் கொள்வானுயின் அப்போது அவனுக்கு நோய் உண்டாகும் என்றும், ஏனெனின்? மிகுந்த அளவைக் கொள்வானுயின் குறைந்த கூறுபாட்டையுடைய அத்தேகப் பகுதியானது அவ்வுணவுகளை ஏற்று ஜீரணிப்பதற்கு இல்லாமல் பலவித நோய்களையும் உண்டு பண்ணுமென்றும், குறைந்த அளவைக் கொள்வானுயின் தேகக் கூறுபாட்டிற்குத் தக்க அளவாக அத்தேகத்துக்கு வலிமை செய்யாது உள்ள பலத்தையும் போக்கி நோயினை உண்டு பண்ணுமென்றும் உணவால் வரும் குற்றத்தை அறிகின்றோம். அன்றியும் மனம், வாக்கு, காயங்களால் ஆகவேண்டிய செயல்களை ஒருவன் செய்யும் காலத்து நெடும் பொழுது சிந்திக்கின் சிந்திக்கின்ற மனமானது வெப்ப மிகுதியால் நோய் கொள்ளு மென்றும், நெடும் பொழுது பேசப்புகின் பேசுகின்ற வாக்கானது வெப்பம் கொண்டு தேகத்தை வாட்டு மென்றும், நெடும் பொழுது பல வேலைகளைச் செய்யப் புகுந்தால் செய்கின்ற உறுப்புகள் மெலிந்து நோயினை உண்டு பண்ணுமென்றும் அவ்விதமின்றி மேற் சொல்லியவைகளாகிய தொழில்களை

75



யெல்லாம் குறைவாகச் செய்யின் அக்காலத்தும் அம்மனம், வாக்கு, காயங்கள் தத்தம் வழி நில்லாமல் நோயினைக் கொள்ளு மென்றும் அறிகிறோம். ஆதலால், ஒருவன் தேகத்துக்கு வருகின்ற நோய்கள் மூன்று விதமென்றும், அந்நோய்கள் உணவும், செயலும் அதிகப்படினும், குறையினும் வருமென்றும் அறிகிறோமென்றனர்.

அது கேட்ட மாணுக்கர், "இவ்விதம் உணவும் செயலும் ஒத்திருக்குமாயின், நோய் என்பது உண்டாகாது போலும்! அதுவன்றியும் மருந்தென்பது ஒன்று வேண்டியதில்லை போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

942. மருந்தென வேண்டாவாம் யாக்கைக் கருந்திய
தற்றது போற்றி யுணின்.

(பரி.) இ-ள். அருந்தியது அற்றது போற்றி உணின்=ஒருவன் முன் னுண்டது அற்றபடியைக் குறிகளாற்றெளியவறிந்து பின்னுண்ணுமாயின்,—யாக்கைக்கு மருந்து என வேண்டாவாம்=அவன் யாக்கைக்கு மருந்தென்று வேறு வேண்டாவாம். எ-று.

குறிகளாவன:—யாக்கைநொய்ம்மை, தேக்கின்றூய்மை,* கரணங்கட்டொழிற்குரியவாதல், பசிமிகுதலென்றிவை முதலாயின. பிணிகள் யாக்கையவாகலின், 'யாக்கைக்கு' என்றார். உணினென்பது அதனருமை தோன்ற நின்றது. (உ)

விளக்கம்:—ஒருவன் தான் உண்ட உணவுகள் நன்றாக வயிற்றினிடத்தே ஜீர்ணித்ததை ஆராய்ந்தறிந்து பின்னர் உண்ணப் புகுவானாயின், அவ்விதம் உண்ணுகின்றவனுக்கு மருந்தொன்று வேண்டுவதில்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தன் தேகத்தினுடைய பலமுடைமை, பலமில்லாமை ஆகிய இரண்டினையும் முதலில் தானே தெரிந்து கொள்ளுதலும், பிறகு உண்ட உணவு எப்பம் கொள்ளுகின்ற காலத்து அவ்வேப்பத்திலேயே உணவு ஜீர்ணித்தது, ஜீர்ணிக்கவில்லை என்று இரண்டையும் தெரிந்துகொள்ளுதலும் பின்னர் கரணங்களாயிருக்கின்ற மனம் முதலியனவைகளெல்லாம் இவன் எண்ணியபடி செய்வதற்கு உரியனவாக உள்ளனவோ அல்லது உரியனவாக இல்லையோ

* தேக்கின்றூய்மை=ஏப்பமிடலின் சுத்தம்.

என்று அவற்றின் செயலால் தெரிந்து கொள்ளுதலும் பசி மிருந்திருத்தல், பசி இல்லாமை என்கின்ற இரண்டின் குறியை அறிந்துகொள்ளுதலும் ஆகிய இவைகளையெல்லாம் உணர்ந்தோரும் குறிப்பால் அறிந்து ஒருவன் உண்ணுவானாயின், அவ்விதம் உண்ணுகின்ற அவனது தேகத்திற்கு நோய் என்பதே உண்டாகாதென்றும், நோய் என்பது எப்போது உண்டாக வில்லையோ, மருந்தும் வேண்டியதில்லை என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "ஒருவன் உண்டது ஜீர்ணித்ததென்று நன்றாக அறிந்து கொண்ட பிறகு எவ்விதம் உண்ணுதல் வேண்டும் என்பதை அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

943. அற்றா லளவறிந் துண்க வஃதுடம்பு
பெற்றா னெடிதுய்க்கு மாறு.

(பரி.) இ-ள். அற்றால் அளவு அறிந்து உண்க=முன்னுண்டது அற்றாற் பின்னுண்பதனை அதுமளவறிந்து அவ்வளவிற்றாக உண்க,—உடம்பு பெற்றான் நெடிது உய்க்கும் ஆறு அஃது=இறப்பவும் பலவாய பிறயாக்கைகளிற் பிழைத்துப் பெறற்கரிய இம்மானுடயாக்கையைப் பெற்றான் அதனை நெடுங்காலங்கொண்டு செலுத்துநெறி அதுவாகலான். எ-று.

இம்மை மறுமை வீடுபேறுகளெய்தற்பாலது ஈதொன்றுமேயாகலின் 'உடம்புபெற்றான்' என்றும், அது நெடிதுநின்றுழி அவைபெருகச்செய்து கொள்ளலாமாகலின் 'நெடிதுய்க்குமாறு' என்றும் கூறினார். பெற்றாலென்று பாடமோதுவாரு முளர். (௩)

விளக்கம்:—ஒருவன் முன் உண்டதாயுள்ள உணவுகள் நன்றாக ஜீர்ணித்தன என்று அறிந்து கொள்ளுவானாயின் அவ்விதம் அறிந்த அவன் பின் உண்ண இருக்கும் உணவினை ஜீர்ணித்துக் கொள்ளக்கூடிய தேகக் கூறுபாட்டின் அளவினை அறிந்து அவ்வளவிற்குத் தக்கவிதமாக உண்ணுதல் வேண்டு மென்றும், அவ்விதம் அவன் செய்வானாயின் மிகப் பலவாகிய ஏனைய தேகங்களில் இருந்து நீங்கிப் பெறுதற்கு அருமையாகிய இம்மனிததேகத்தைப் பெற்றவனாகிய இவன் அத்தேகத்தை வருத்த அளவாக

வைத்துக்கொண்டிருந்து அதனுல் நன்னெறிகளில் எல்லாம் செல்



லுதல் கூடுமென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னேயோவெனின்? உயிர் நின்று புல் முதல் பலபிறவிகளில் சென்று சென்று அப்பிறவிகளுக்குத் தக்க தேகங்களில் எல்லா மிருந்து அவற்றை எல்லாம் விட்டுக் கழிந்து பின்னர் நல்வினையின் பயனுல் மனிததேகத்தை எடுப்பதென்றும், அவ்விதமெடுத்த மனித தேகமே இம்மைப்பயன், மறுமைப்பயன், வீடு என்னும் மூன்றையு மடைவதற்கு உரிய நன்னெறிகளிற் செலுத்துவதென்றும், ஆதலால் அத்தேகம் படைப்போன் வகுத்தபடி நெடுங்காலமிருந்து இம்மைக்கு உரிய புகழை அடைவதற்கு வேண்டிய செல்வங்களைச் சேர்ப்பதற்கும், மறுமைக்கு உரிய தேவபோகங்கள் முதலியவைகளைக்கொள்வதற்கு வேண்டுவனவாகிய வேள்வி முதலியவைகளைச் செய்வதற்கு வேண்டிய பொருளைச் சேர்த்தற்கும், பிறகு இம்மை மறுமைகளாகிய இவ்விரண்டினுலும் வரும்பயன் அத்துணைப் பெரியதல்லவென்றும், மேலும்மேலும் பிறப்பதற்கே காரணமாக உள்ளது என்றும் அறிந்து வீட்டிற்கு உரிய துறவுபூண்டு விரதம் ஞானமென்கின்ற இரண்டு பகுதிகளையும் கொள்வதற்கும் இத்தேகமே காரணமாதலால், இத்தேகம் நெடுநாளிருந்து அதன் பயனை அடைய ஒருவன் விரும்புவானுயின் அவன் அத்தேகத்திற்குத் தக்க அளவாக முன் உண்டதாகிய உணவு நன்ருக ஜீர்ணிக்கின்ற வரையில் எதனையும் உண்ணுதிருந்து பின்னர்ப் பசிக்கின்ற குறிகள் தோன்றுமாயின் மேலும் உண்ண முயற்சித்து அவ்விதம் உண்ணுங்காலும் உண்ணுகின்ற உணவினது அளவு, சுவை, வீரியம் என்பனவற்றையு மறிந்து உண்ணுதல் வேண்டும் என்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணக்கர், "இவ்விதம் உண்டது நன்ருக ஜீர்ணித்தது என்று அறிந்த பிறகு உண்ணவேண்டிய உணவு எவ்வித தகுதியுடையதாயிருத்தல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

944. அற்ற தறிந்து கடைப்பிடித்து மாறல்ல
துய்க்க துவரப் பசித்து.

(பரி.) இ-ள். அற்றது அறிந்து=முன்னுண்டது அற்றபடியை யறிந்து,—துவரப் பசித்து=பின் மிகப்பசித்து,—மாறல்ல கடைப்பிடித்துத் துய்க்க=உண்ணுங்கால் மாறுகொள்ளாத உணவுகளைக் குறிக்கொண்டுண்க.



'அற்றதறிந்து' என்னும் பெயர்த்தனை அதனை யாப்புறுத்தற்பொருட்டு. உண்டது அற்றாலும் அதன் பயனாகிய இரதமறாதாகலான் அதுவு மறல்வேண்டுமென்பார், 'மிகப்பசித்து' என்றார். பசித்தல்வினை உண்டு உடையான்மேனின்றது. மாறுகொள்ளாமையாவது:—உண்பான் பகுதியோடு மாறுகொள்ளாமையும், காலவியல்போடு மாறுகொள்ளாமையும், சுவை வீரியங்களாற் றம்முள் மாறுகொள்ளாமையுமாம். அவையாவன:—முறையே வாத பித்த ஐகளானாய பகுதிக்கு ஆகாதவற்றைச் செய்வனவாதலும், பெரும்பொழுது சிறுபொழுதென்னுங் காலவேறுபாடுகளுள் ஒன்றற்காவன பிறிதொன்றற்காகாமையும், தேனுநெய்யுந் தம்முளொத்து அஞ்சாதல் போல்வனவுமாம். அவற்றைக் குறிக்கொள்ளாது மனம்பட்டவாறு துய்ப்பின் அதனானே நோயும் மரணமும் வருதலின், 'கடைப்பிடித்து' என்றார். (ச)

விளக்கம்:—ஒருவன் உண்ண வேண்டுமாயின் முன் உண்ட உணவுகள் நன்கு ஜீர்ணித்தன என்பதை அறிந்துகொண்டு அவ்வளவோடல்லாமல் பின் பசித்தபிறகு உண்ணுதல் வேண்டுமென்றும், அவ்விதம் உண்ணுங் காலத்தும் முற்கூறியபடி மாறுபாடில்லாத உணவுகளையே நன்கு அறிந்து உண்ணுதல் வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், மேல் திருக்குறளில் 'அற்றால் அளவறிந்து உண்க' என்று கூறியதைப்போல இத்திருக்குறளிலும் 'அற்றதறிந்து கடைப் பிடித்து' என்று கூறியதால், முன் உண்ட உணவானது முற்றும் ஜீர்ணித்த பிறகே உண்ணல் வேண்டும் என்பதையே வலியுறுத்திக் கூறியதாயிற்று என்றும், மாறு கொள்ளாத உணவு என்றமையால் அவ்வுணவும் உண்ணுகின்றவன் தேகக் கூறுபாட்டிற்கு மாறுபடாதிருத்தல் வேண்டுமென்றும், ஓர் உணவு மற்றொரு உணவோடு சுவையினாலும், பலத்தினாலும் மாறுபாடு கொண்டு துன்பப்படுத்தாதிருத்தல் வேண்டுமென்றும், உண்ணுகின்ற கால அளவு கலமல்

லாத வளமைப் இருத்தல் கூடாதென்றும் அறிந்தோம். அவையா வன, வாத பித்த சிலேத்மங்களாகிய மூன்று நோய்களுக்கும் ஒற் றுமையில்லாத உணவுகளை உண்ணுவதோ மனம் வாக்கு காயங்க ளால் ஆகிய மூன்றிற்கும் பொருந்தாத அதிகமாகிய செயல்களைச் செய்வதோ பெரும்பொழுது சிறுபொழுது என்று கூறப்படு கின்ற கார்ப்பருவம் முதலாகிய பருவங்களிலேயும் காலை, மாலை, நடுப்பகல், யாமம், இடையாமம், வைகறை என்னும் சிறு பொழுது



களிலேயும் உண்ணவேண்டிய பொழுதறியாதும், அவ்வப் பருவங் களுக் கேற்ற உணவினை அறியாதும் உண்பதோ கூடாதென்பதாம். அதுவன்றியும் ஒருவன் சில பொருள்களை உண்ணுங்காலத்து, ஒன் றுக்கொன்று ஆகாதனவாகிய பொருள்களை உண்ணுதல் ஆகாதென் றும், அவ்விதம் உண்டால் ஒன்றுக்கொன்று மாறுகொண்டு நோயினை உண்டுபண்ணுமென்றும், அது எது போல வெனின் ஒருவன் தேனும் நெய்யுமாகிய இரண்டினையும் ஒரே காலத்தில் சேர்த்து உட் கொள்ளுவானாகில் அவ்விரண்டும் கூடியகாலத்து உண்ட ஒரு வனுக்கு விஷமாவது போல் மாறுபட்ட பொருள்களைச் சேர்த்து உண்ணின் நோயும், மரணமும் வருமென்றும், அவ்விதமெல்லாம் நோயவண்ணம் நன்றாகக் குறித்துக்கொண்டு உண்ணுதல் வேண்டு மென்பார் கடைப்பிடித் தென்று கூறினரென்றும் அறிமின்றே மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் மாறுபடக்கூடிய உண்டியினை ஒருவன் மனம் போன போக்கின்படி உண்ணுவானா யின் நோயும், மரணமும் வருமென்றீர். அவ்விதம் மாறுபாடில் லாத உண்டியை ஒருவன் உண்ணுவானாயின், அவன் உயிர்க்குத் தீங்கு வாராதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

945. மாறுபா டில்லாத வுண்டி மறுத்துண்ணி
னூறுபா டில்லை யுயிர்க்கு.

(பரி.) இ-ள். மாறுபாடு இல்லாத உண்டி மறுத்து உண்ணின்=அம் முறைமைமாறுகோளு மில்லாத உணவைத் தன்னுள்ளம் வேண்டியவளவிறு

என்றிப் பிணிவாரா வாயினும் ஒருவனுண்ணுமாயின்,—உயிர்க்கு ஊறுபாடு இல்லை = அவனுயிர்க்குப் பிணிகளாற்றுன்பம் விளைதலுண்டாகாது. எ-று.

ஊறுவதனை 'ஊறு' என்றார்; அஃது இன்பத்திற்செல்லாதவிற்று, இல்லையென்பது தொடர்பாகலின். துன்பமுறுவது உயிரோதலின், அதன் மேல் வைத்துக் கூறினார். மாறுபாடில்வழியுங் குறைதல் நன்றென்பதாம். இவை நான்குபாட்டானும் உண்ணப்படுவனவும், அவற்றதளவும், காலமும், பயனுங் கூறப்பட்டன. (௫)

விளக்கம்:—மேற்கூறியபடி உண்பான், பகுதியோடு மாறு கொள்ளாமலும், கால இயற்கையோடு மாறு கொள்ளாமலும், சுவை வீரியங்களால் ஒன்றுக்கொன்று மாறு கொள்ளாமலும்



ஆகிய மூன்று விதங்களாலும் ஒருவித மாறுதலுமில்லாத உணவினை மனம்போனபடி வேண்டிய அளவு ஒருவன் உண்ணாதும் பிணி வருவதை விரும்பாதும் தக்க அளவாக உண்பானாயின், அவ்விதம் உண்டவனது உயிரினுக்கு நோய்களால் உண்டாகும் துன்பங்களே உண்டாகாது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் ஒருவன் தன் மனம் விரும்பியபடி அதிக அளவினை உடைய உண்டியை உண்ணாது மேற்கூறிய மாறுபாடுகளில்லாமல் உண்ணப்புகுவானாயின், நோய் கொள்ளானென்றும், நோய்கொள்ளாத காலத்தில் உயிர்க்குத் துன்பமில்லையென்றும், துன்பமில்லாத காலத்தில் இன்பமே மிகுந்து நிற்குமென்றும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய நான்கு திருக்குறள்களாலும் உண்ண வேண்டிய பொருளினையும், உண்ணவேண்டிய அளவினையும், உண்ண வேண்டிய காலத்தினையும், அறிந்ததுடன் அவை அளவாக நிற்குமாயின் அவற்றால் உண்டாகும் பயனையும் அறிந்தோம். ஆயின், இத்திருக்குறளால் அளவறிந்து உண்பானுக்கு நோய்களால் துன்பம் வாராது என்றமையால் அவனுக்கு உண்டாகும் இன்பம் எவ்விதம் இருக்கும் என்பதையும் அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

946. இழிவறிந் துண்பான்க ணின்பம்போ னிற்கும்

கழிபே ரிரையான்க ணோய்.

(பரி●) இ-ள். இழிவு அறிந்து உண்பான்கண் இன்பம்போல் = அக்குறைதலை நன்றென்றறிந்து அவ்வாறே யுண்பவன்மாட்டு இன்பம் நீங்காது நிலைநிற்குமாறுபோல், — கழிபேர் இரையான்கண் நோய் நிற்கும் = மிகப்பெரிய இரையை விழுங்குவான் மாட்டு நோய் நீங்காது நிலைநிற்கும். எ-று.

அவ்வாறேயுண்டல் = உண்ணலாமளவிற் சிறிது குறையவுண்டல். இன்பமாவது:—வாதமுதலியமூன்றும் தத்தநிலையிற்றிரியாமையின் மனமொழி மெய்கள் அவன் வயத்தவாதலும், அதனான் அறமுதலிய நான்குமெய்துதலுமாம். இரையை யளவின்றிப்பெருக்க அதனான் வருந்துயர் விலக்கொணாததலின், 'இரையான்' என்றார். விதியெதிர்மறைகளை உவமமும் பொருளுமாக்கியது இரண்டானும் பெறுதற்கு. (௬)

விளக்கம்:—மேற்கூறிய வண்ணம் ஒருவன் எல்லா அளவினையு மறிந்து உண்பதுடன் சிறிது குறைவாகவே உண்ணுதல் நன்மை



யென்று தெரிந்து அவ்விதம் சிறிது குறைவாக உண்பானுயின் துன்பமில்லாத இன்பமானது நீங்காமல் நிலைத்து நிற்பதுபோல் மிகப் பெரிய இரையை விரும்பி அளவுகடந்து விழுங்குகிறவனிடத்து நோய் நீங்காது நிலையாகவே நின்று துன்புறுத்தும் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவன் உண்ணக்கூடிய அளவு இவ்வளவு என்று தெரிந்துகொண்டு அவ்வளவிற்கும் சிறிது குறைவாக உண்பானுயின் அவ்விதம் உண்பதால் வாத பித்த சிலேத்மங்களாகிய மூன்றும் அதனதனுடைய நிலையில் நின்று மாறுபடா வென்றும், அவ்வாறு மாறுபடாத காலத்து மனம், வாக்கு, காய மென்கின்றமூன்றும் இவன் நினைக்கும் விதம் ஒத்து நடக்குமென்றும், அவ்வித மன வாக்கு காயங்கள் வேறுபாடு இல்லாது ஒத்தகாலத்து மனித தேகத்தை எடுத்த ஒருவன் அடைவதற்கு உள்ள அறம், பொருள், இன்பம், வீடாகிய நான்கினையு மடைவதற்கு எதுவாக இருக்கும் என்றும் அறிவதுடன் இவற்றிற்கு மாறுகிய செயல்களோடு கூடிய ஒருவன் தன் மனம் விரும்பியபடி கொள்ளுகின்ற உணவினை மனித உணவு என்று கொள்ளாது கிடைத்த எப்பொருளையும் கிடைத்த எக்காலத்தும் அளவில்லாது உண்ணுகின்ற மிரு

கங்களின் இரை என்பதை அறிவித்தற்கு அவன் உண்ணும் உண வின இரையென்றும், அவ்விரையினையும் பேர் இரையென்றும், அப்பேரிரையை மிகப் பெரிய இரையென்று அறிவித்தற்குக் கழி பேர் இரையென்றும் கூறியதால் விலங்குகளாயினும் வயிறு நிறைந்து விடுமாயின் பின்னர் இட்ட இரையினை மிகுத்து விடுமென் றும், இவனே அவ்விதம் மிகுந்தாக காண்கின்ற எதனையும் மிக அளவுகடந்து உண்டுகொண்டே இருப்பானாதலால் அம்மிகுகக்க ளைக் காட்டிடும், இவன் தாழ்ந்தவனாகின்றான் என்று கூறுவதற்கு 'கழி பேரிரையான்கண்' என்று எடுத்துக் காட்டியதுடன் உண வின உண்ணுங்காலத்து உண்ணும் உணவுகளை நன்றாகமென்று அவை கொண்டு மெதுவாக உண்ணவேண்டி இருக்க அவ்விதமல் லாது ஒன்றன்பின் ஒன்றாக விரைந்து உண்ணுகின்றான் ஆதலால் உண்ட அவைகளை மெல்லாமலும், சுவைபாராமலும் உண்கின்றான் என்று அறிவிப்பதற்கு விழுங்குவா னென்றும் அவ்விதம் விழுங்கு வானுக்கு நோயானது நிலைத்து அவனிடத்து நிற்குமென்றும்



அறிவதுடன் நீக்காத துன்பத்தையும் உயிர்க்குத் தேடிக்கொண்டு மனித தேகத்தால் அடையவேண்டிய புருஷார்த்தத்தையும் அடையாமல் போய்விடுவான் என்றும் அறிக்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஏன் அதிக ஆகாரத்தைக் கொண்டால் நோய் வருகின்றது? அதனையும் விளக்கவேண்டும்" என்னலும் ஆசிரியர் கூறுவாராயினர்.

947. தீயள வன்றித் தெரியான் பெரிதுண்ணி
னோயள வின்றிப் படும்.

(பரி.) முன். தெரியான் தீ அளவு அன்றிப் பெரிது உண்ணின் = தன் பசித்தீயும் அதற்கேற்றவுணவும் காலமுமாராயாது வேண்டியதோருணவை வேண்டியதோர்காலத்து வயிற்றுத் தீயளவன்றி ஒருவன் மிகவுண்ணுமா யின், — நோய் அளவு இன்றிப் படும் = அவன்மாட்டு நோய்கள் எல்லையற வளரும். எ-று.

தெரியாமைவினைக்குச் செயப்படுபொருள்கள் அதிகாரத்தான்வந்தன. நோய் — சாதியொருமை. இவையிரண்டுபாட்டானும் அவ்வகை யுண்ணாவழிப்

பழிமுக்குக் கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—ஒருவன் தன்னுடைய தேகக் கூற்றினையும், அத் தேகத்துக்கேற்ற உணவினை உண்ணுகின்ற காலத்தினையும் ஆராயாமல் வேண்டியபடியே ஒரு உணவினை அவன் விரும்பிய ஓர் காலத்தில் வயிற்றில் ஜீர்ணிக்கச்செய்யும் தீ அளவிற்குத் தகுதியாக அல்லாமல் மிகுதிப்பட்டு உண்பானாயின், அவ்விதம் உண்ணுகின்ற அவனிடத்தே நோய்களானவை முடிவில்லாமல் வளர்ந்துகொண் டிருக்கும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், ஒவ்வொ ருவனுக்கும் அவனவனது தேகத்தின் பகுதிக்குத் தக்க அளவாக ஜீர்ணிக்கும் கருவி அமைக்கப்பட்டிருக்கிற தென்றும், அக்கருவி வேலைசெய்து ஜீர்ணிக்கக்கூடிய அளவிற்குமேல் உணவினை உண் டால் அக்கருவியானது ஜீர்ணித்தலைச் செய்யமுடியாது அலுத்துப் போய் அதனுடைய வீரியம் கெட்டு முன்செய்த வேலையும் செய்ய முடியாமல் நாளுக்குநாள் கெட்டுப்போகுமென்றும், அவ்விதம் கெடு தலைப் பின்னர்க்கொள்ளுகின்ற உணவு ஜீர்ணிக்காது பலநோய்களைச் செய்யுமென்றும், அவ்விதம் நோய்களைச் செய்கின்ற காலத்து அள





வறியாது இவன் இயற்கையின்படி உண்டுகொண்டே வருவானா யின் பலவித நோய்கள் வருமென்றும், அந்நோய்கள்முடிவில்லாமல் வளருமென்றும், அவ்விதம் வளர்வதால் எடுத்த தேகத்தின் பயன் ஒன்றையு மடையாமல் போய்விடுவா னென்றும் அறிந்தோமென்ற னர். அதுகேட்ட மாணாக்கர், "இதுகாறும் உண்ணு முணவினை அளவோடு உண்பவனுக்கு வரும் பயனையும், அவ்விதம் அல்லாதவ னுக்கு வரும் தீமையினையும் உணர்ந்தோம். இனிக் காரணங்களால் வருவனவாகிய இவ்வித நோய்களைத் தீர்க்கும் மருத்துவனைப்பற்றி ஆசிரியர்யாதுகூறுகின்றனர்?" என்னலும், ஆசிரியர்கூறுவாராயினர்.

948. நோய்நாடி நோய்முத னாடி யதுதணிக்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்.

(பரி.) இ-ள். நோய் நாடி = மருத்துவனாயினான் ஆதுரன்மாட்டு நிகழ்கின்ற நோயை அதன் குறிகளான் இன்னதென்று துணிந்து,—நோய் முதல் நாடி = பின் அது வருதற்காரணத்தை ஆராய்ந்து தெளிந்து,— அது தணிக்கும் வாய்நாடி = பின் அது தீர்க்குமுபாயத்தினை யறிந்து,—வாய்ப்பச் செயல் = அதனைச் செய்யும் வழிப் பிழையாமற் செய்க. எ-று.

காரணம் = உணவுசெயலென முற்கூறியவிரண்டும். அவற்றை ஆயுள் வேதமுடையார் நிதானமென்ப. அவை நாடுதற்பயன் = நோயினையும் வாயினையும் ஐயமறத் துணிதல். மருந்துசெய்தல், உதிரங்களைதல், அறுத்தல், சுடுதன் முதலிய செயல்களெல்லாம் அடங்குதற்கு, 'அது தணிக்கும்வாய்' என்றார். "கழுவாயுமுள"* என்றார் பிறரும். பிழையாமை = பழையமருத்துவர் செய்துவருகின்ற முறைமையிற் றப்பாமை. (அ)

விளக்கம்:—மருத்துவனென்று சொல்லப்படுகின்ற வைத்தியன் ஒருவன் ஆதுரன் என்கின்ற நோயாளியைக் கண்டபோது அவனிடத்து அப்போது தோன்றுகின்ற நோயினை அதனதனுடைய குறிகளால் இன்னது இன்னது என்று துணிவதுடன், பின்னர் அந்நோய்கள் வருவதற்கு இருந்த காரணங்களையும் தான் கற்றும் கேட்டும் உள்ள நூல்களுக்குத் தக்க அளவாக ஆராய்ந்து தெளிந்தும், அவ்விதம் ஆராய்ந்து தெளிந்தபின்னர் அந்நோய்களைத் தீர்க்கின்ற உபாயங்களை அறிந்தும், அவ்விதம் அறிந்ததோடு

* புறநானூறு—34.



நில்லாமல் அந் நோய்களைத் தீர்க்கச்செய்யும் வழிகளைத் தவறில்லாமல் செய்தும் இருத்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, வைத்தியனானவன் நோயாளியைக் கண்ட காலத்து அவனுக்கு உள்ள நோய் உணவினால் வந்ததோ, அவன் செய்த செயலால் வந்ததோ என்று முதலில் நிதானித்துக் கொள்ளுதல் வேண்டுமென்றும், அவ்விதம் காரணங்கள் அறிந்தபிறகு உள்ள நோயினை இதுவென்றும், அதனைத் தீர்க்கின்ற உபாயம்

இதுவென்றும் சிறிதும் சந்தேகமில்லாமல் தெளிந்து துணிய வேண்டுமென்றும், அவ்விதம் நோயினைக் கண்டு துணியுங் காலத்து அந்த அந்த நோய்க்கு வேண்டிய செயல்களாகிய மருந்து செய்தல், உதிரங்களைதல், அறுத்து விடுதல், சுட்டு விடுதல் என்ற செயல்களையெல்லாம் நன்றாக ஆராய்ந்து பிழைபடாமல் மருந்தினைச் செய்வதும், ஒருவனுக்கு உதிரத்தைக் களைதலும், கட்டி முதலியவை அறுத்தலும், தேகத்தில் உண்டாகும் சுடக் கூடிய நோய்களைச் சுடுதலும் ஆகிய உபாயங்களையெல்லாம் தனக்கு முன்னிருந்த வைத்தியர்கள் செய்த முறையிலும் அளவிலும் தவறாது செய்தல் வேண்டுமென்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "வைத்தியன் நோயாளியைக் கண்ட காலத்து நிதானத்தால் செய்யவேண்டுவன இவை என்று அறிந்தோம். இனி அவ்வைத்தியனானவன் நோயாளியைப் பார்த்த காலத்து தான் அளவாக நோய்க்குச் செய்யவேண்டுவன எவையென்று அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

949. உற்றா னளவும் பிணியளவுங் காலமுங்
கற்றான் கருதிச் செயல்.

(பரி.) இ-ள். கற்றான்=ஆயுர்வேதத்தினைக் கற்றமருத்துவன்,—உற்றான் அளவும் பிணி அளவும் காலமும் கருதிச் செயல்=அவ்வுபாயத்தினைச் செய்யுங்கால், ஆதுரனளவினையும் அவன்கணிகழ்கின்ற நோயினளவினையும் தன் செயற்கேற்ற காலத்தினையும் அந்நூனெறியால் நோக்கி, அவற்றோடு பொருந்தச் செய்க. எ-று.

ஆதுரனளவு=பகுதி, பருவம், வேதனை, வலிகளினளவு. பிணியளவு=சாத்தியம், அசாத்தியம், யாப்பிய*மென்னுஞ் சாதிவேறுபாடும், தொடக்க மிகுதியென்னும் அதன் பருவவேறுபாடும், வன்மைமென்மைகளுமுதலாயின.

* யாப்பியம்=பெரும்பான்மை நீக்கத் தக்கதும் சிறுபான்மை நீக்கத் தகாததுமாயிருப்பது.



காலம் மேற்சொல்லியன. இம்மூன்றும் பிழையாமல் நூனெறியானும் உணர்வுமிகுதியானும் ஆராய்ந்து செய்கவென்பார், 'கற்றான் கருதிச்செயல்' என்றார். இவையிரண்டுபாட்டானும் அவ்விழுக்குப்பட்டுழி மருத்துவன் தீர்க்குமாறு கூறப்பட்டது. (க)

விளக்கம்:—ஆயுள்வேதம் இதுவென்று கற்றவனாகிய வைத்தியன் மேற் கூறியபடி நோய் தீருவதற்கு உரிய உபாயத்தினைச் செய்யுமிடத்து நோய்கொண்டவனது அளவினையும், அவனிடத்தே உண்டாயுள்ள நோயின் அளவினையும், தான் செய்வதற்கு ஏற்ற காலத்தினையும், தான் கற்ற நூலில் கற்ற அளவே உய்த்து உணர்ந்து அந்நூல்களில் சொல்லிய வழியே பொருந்தச் செய்தல் வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நோய்தீர்க்க முயன்ற வைத்தியன் நோயாளியினது உருவம், அவனது தேகவன்மை, அவனுடைய வயது, நோயினால் உண்டாகும் துன்பம், அந்நோய்த் துன்பம் தோன்றுகின்ற காலம், அது இல்லாதிருக்கின்ற காலம், ஆகிய இவைகளை அறிதல் வேண்டுமென்றும், நோய் தோன்றிய காலமும், அது உள்ள காலமும் ஆகிய நோயின் அளவைத் தெரிந்து பின்னர் இந்நோய் தீர்க்கத் தக்கது, இந்நோய் தீர்க்கத்தகாதது, பெரும்பாலும் தீர்க்கத் தகுந்ததும் சிறுபான்மை தீர்க்கத் தகாததுமாகவுள்ளது என்னும் நோயின் தகுதியை அறிய வேண்டுமென்றும், நோய் தொடங்கிய தொடக்கத்தானோ, அல்லது தொடங்கி நடுப்பருவமாக உள்ளதோ, அல்லது தீர்ந்துபோகக் கூடிய கடைப்பருவமாக உள்ளதோ என்று நோயின் பருவத்தை ஆராய வேண்டுமென்றும், அதுவன்றியும், நோய் பலமுடையதென்றும், பலமில்லாதது என்றும் ஆகிய நோய்களின் தகுதியை அறிதல் வேண்டுமென்றும், அவ்விதம் அறிதலோடு மேற்கூறிய வண்ணம் காலத்தையும் நோக்குதல்வேண்டுமென்றும், ஆகியஇவைகளை எல்லாம் சிறிதும் குறைபடாமல் தான் கற்றநூல் அளவாகவும், தன்னுடைய அறிவின் அளவாகவும் ஆராய்ந்து உணர்ந்து நோயினைத் தீர்க்க வேண்டுமென்றும் அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மேலிரண்டு திருக்குறள்களாலும் ஒருவன் உணவாலும், செயலாலும் நோய் கொண்டகாலத்து வைத்தியன் தீர்க்க வேண்டிய முறை இதுவென்று அறிந்தோம். இனி, அம்

மருத்துவன் நோயினைத் தீர்ப்பதற்கு முறை யாது? அதற்கு வேண்டுவன எவை? அவையெல்லாம் தொகுத்துச் சொல்லுதல் வேண்டும்" என்னவும், ஆசிரியர் கூறுவாராயினர்.

950. உற்றவன் தீர்ப்பான் மருந்துழைச் செல்வானென்
றப்பானாற் கூற்றே மருந்து.

(பரி.) இ-ள். மருந்து=பிணிக்கு மருந்தாவது—உற்றவன்=அதனையுற்றவன்,—தீர்ப்பான்=அதனைத் தீர்க்குமருத்துவன்,—மருந்து=அவனுக்குக் கருவியாகிய மருந்து,—உழைச்செல்வான் என்ற அப்பால் நாற்கூற்று=அதனைப்பிழையாமல் இயற்றுவானென்று சொல்லப்பட்ட நான்குபகுதியையுடைய நான்கு திறத்தது. எ-று.

நான்கென்னு மெண் வருகின்றமையின், அதுநோக்கி அப்பாலென்றொழிந்தார். நாற்கூற்றதென்பது விகாரமாயிற்று. அவற்றுள் உற்றவன் வகை நான்காவன:—பொருளுடைமை, மருத்துவன்வழி நிற்றல், நோய்நிலை யுணர்த்தல்வன்மை, மருந்துத் துன்பம்பொறுத்த லெனவிவை. தீர்ப்பான் வகைநான்காவன:—நோய்கண்டஞ்சாமை, ஆசிரியனை வழிபட்டோதிய கல்வியு நுண்ணறிவுமுடைமை, பலகாலுந்தீர்த்துவருதல், மனமொழிமெய்கடூய வாத லெனவிவை. மருந்தின்வகை நான்காவன:—பலபிணிகட்குமேற்றல், சுவைவீரியம் விளைவாற்றல்களான் மேம்படுதல், எளிதினெய்தப்படுதல், பகுதியோடு பொருந்துத லெனவிவை. இயற்றுவான்வகை நான்காவன:—ஆதுரன்மாட்டன்புடைமை, மனமொழிமெய்கடூயவாதல், சொல்லியன அவ்வாறேசெய்தல் வன்மை, அறிவுடைமை யெனவிவை. இவையெல்லாங் கூடியவழியல்லது பிணி நீராமையின், இத்தொகுதியையும் 'மருந்து' என்றார். ஆயுள்வேதமுடையாரும் இவை கால்களாக நடக்குமென்பதுபற்றிப் பாதமென்றும், இவைமாறுபட்டவழிச் சாத்தியமுமுதிர்ந்து அசாத்தியமா மென்றுங் கூறினர். இதனால் அதனைத் தீர்த்தற்கு வேண்டுவனவெல்லாந் தொகுத்துக் கூறப்பட்டன. (௰)

விளக்கம்:—நோய்க்கு மருந்தாவது நோயினைக் கொண்டவன், அந்நோயினைத் தீர்க்கும் வைத்தியன், அவ்வைத்தியனுக்கு நோய் தீர்ப்பதற்குக் கருவியாகிய மருந்து, அம்மருந்தினைப் பிழையாமல் செய்கின்றவன் என்று சொல்லப்பட்ட நான்கு பகுதிகளோடு கூடிய நான்கு தன்மையை உடையது என்று இத்திருக்குறள் கூற

ஒவ்வொன்றும் நான்குதிறத்தது என்று கூறுவதால், மேற்கூறிய நான்கினுள் நோய் கொண்டவனுக்கு இருக்கவேண்டிய நான்கு தகுதிகளாவன:—பொருளுடையவனுயிருத்தல், வைத்தியன்சொல்லிய வழி நடக்கக் கூடியவனுயிருத்தல், தனக்கு உள்ள நோயினை வைத்தியனுக்கு அறிவிக்க வேண்டிய வல்லமை உடையவனு யிருத்தல், மருந்தை உண்ணுகின்ற காலத்து அம்மருந்தினுல் உண்டாகும் துன்பங்களைப் பொறுத்துக்கொள்ளும் வன்மையுடையவனுயிருத்தல் என்பனவென்றும், தீர்ப்பவன் வகையாவது:-நோய்களின்தகுதியை எல்லாம் ஆராய்ந்து உணர்ந்து அவ்விதம் உணர்வதுடன் முதலில் நோய்கொண்டவனுக்கு உற்ற நோய் இதுதான் என்று ஆராய்வதற்கு அஞ்சாது ஆராய்தல், தான் ஆசிரியனை அடைந்து அவன் வழிநின்று ஓதியதாகிய கல்வியின் வல்லமையுடையவனுயிருத்தல், இயற்கை அறிவாகிய நுட்ப அறிவினையும் உடையவனுய் இருத்தல், அன்றியும் நோய் கொண்டார் பலர்க்கு நோய்களைப் பலதாமும் தீர்த்து வருதல், மனம், வாக்கு, காயமாகிய மூன்றும் கூடா ஒழுக்கத்தைச் செய்யாது பரிசுத்தமுடையனவாய் இருத்தல் என நான்காகும் என்றும், மருந்தின் வகையாவது:—பலநோய்களுக்கும் ஏற்றது ஒன்றுயிருத்தல், சுவையிலும் வீரியத்திலும நற்பயனிலும் வன்மையிலும் உயர்ந்திருத்தல், எளிதில் கிடைக்கக் கூடியதா யிருத்தல், நோய் கொண்டவனது தேகக் கூறோடு பொருந்தியதா யிருத்தல் என நான்கென்றும், வைத்தியனுக்கு உதவியாக மருந்தினைச் செய்கின்ற ஒருவனுக்கு நோயாளியினிடத்து அன்புடையவனு யிருத்தல், மனம் வாக்கு காயம் பரிசுத்தமுடையவனு யிருத்தல், மருந்தை முடிக்கும் காலத்து வைத்தியன் சொல்லிய அளவாகவே மருந்தினைச் செய்துமுடிக்கும் வல்லமை உடையவனு யிருத்தல், இயற்கை அறிவுடையவனு யிருத்தல் ஆகிய நான்குவித தகுதிகளும் இருத்தல் வேண்டுமென்றும், மேற்கூறிய நன்னான்கு பகுதிகளாகிய பதினாறு பகுதிகளும் அமையாத காலத்து நோய் தீராதென்றும் கூறியதுடன் இந்நான்கே ஆயுள்

வேதமுடையார் நான்கு கால்களாக நடக்கு மென்பதை அறிந்து இந்நான்கினையும் பாதமென்றும் இவ்வகை நான்கினுள் ஒன்று மாறுபட்ட காலத்தும் நீக்கரிய நோயாகிய அசாத்தியமென்கின்ற



நோயும் அதிகப்பட்டுத் தீராது அசாத்தியமாகும் என்று கூறினர் என்றும் அறிந்தோ மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதமெல்லாம் நோய்க்கு மருந்து இதுவென்று எடுத்து நோய்கொண்டவனது தகுதி நான்கினையும், தீர்க்கின்ற வைத்தியன் தகுதி நான்கினையும், அந்நோயினைத் தீர்க்கும் கருவியாகிய மருந்தின் தகுதி நான்கினையும், அம்மருந்தினைச்சிறிதும் தவறாது செய்பவனது தகுதி நான்கினையும்கூறியதை நன்றாக உணர்ந்தோம். அங்கங்களின் பகுதியாகிய நட்பு என்னுமங்கத்தின் கடைசியாகிய மருந்து என்னுமிவ்வதிகாரத்தால், காமத்தால் வரும் செயல்களின் தீங்கு நோய் என்றும், அந்நோயைத் தீர்ப்பதற்கு உபாயம் மருந்தென்றுங்கூறி உலகத்தார் உய்வதற்கு உரிய உபாயங்களை எல்லாம் உணர்த்தினரென்று அறிந்தோம். இனிப் பொருட்பாலையெடுத்து அரசனுக்கு இருக்கவேண்டிய தன்மையை அரசியல் என்று கூறி, அவ்வரசனுக்கு இருக்கவேண்டிய அங்கங்கள் ஆறென்று அமைச்சியல் முதல் நட்பியல் வரையில் கூறிமுடித்தனராதலால், அப் பொருட்பாலுள் சொல்லவேண்டுவன இன்னும் எவையேனும் உளவோ?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

அங்கவியல் முற்றிற்று.

---

## ஒழிபியல்.

(பரி.) இனி அவ்வரசியலினும் அங்கவியலினும் அடங்காதொழிந்தவற்றதியல்பு பதின்மூன்றதிகாரத்தாற் கூறுவான்றொடங்கி, முதற்கட் குடிமை கூறுகின்றார்.

விளக்கம்:—அதாவது, மேற்கூறிய அரசியலினும், அங்கவியலினும் அடங்காமல் நின்றவற்றின் இயல்பினை எல்லாம் பதின்மூன்று அதிகாரங்களால் சொல்லத்தொடங்கினரென்றும், அவ்விதம்

சொல்லும் காலத்து முதலில் குடிமை என்பதை கூறுகின்றனென் றும் அறிக்தோ மென்றனர். அது கேட்ட மாணுக்கர், "அடங்காத வைற்றை ஒழிபியலென்றும், அவற்றுள் முதலாவது குடிமையென் றும் கூறியதை அறிக்தோம். இனி அக்குடிமை என்பதை விளக் கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



## 96. அதிகாரம்.

### குடிமை.

(பரி.) அஃதாவது உயர்ந்தகுடியின்கட் பிறந்தாரது தன்மை. உயர்ந்த குடிப்பிறப்பு நால்வகை வருணத்தார்க்கும் இன்றியமையாதாகலின், அச் சிறப்புப்பற்றி இது முன்வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, உயர்ந்த குடியில் பிறந்தவர்களுடைய இயற்கை என்பதாம். நான்கு வித வருணத்தவர்க்கும் உயர்ந்த குடிப் பிறப்பு என்பது இருக்தே ஆகவேண்டி இருப்பதால், அவ் வித சிறப்புக் கருதி இக்குடிமை என்னும் அதிகாரம் முதலில் வைக்கப்பட்டு உள்ளது என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்வி தம் மக்கள் தகுதியினுள் யாவரும் இருவினைக்குத் தக்க அளவாக உயர்ந்த குணங்களை உடையவராக இருக்கவேண்டி இருக்கக் குடிப் பிறப்பு ஒன்றினால் உயர்வு வருதல் வேண்டும் என்று கூறுவதைக் கேட்க வியக்கின்றோம். ஆதலால், குடிப்பிறந்தார் என்பார்க்கு இயல்பாகவே உள்ள செய்கைகள் எவை என்று அறிவித்தல் வேண் டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

951. இற்பிறந்தார் கண்ணல்ல தில்லை யியல்பாகச்
செப்பமு நாணு மொருங்கு.

(பரி.) இ-ள். செப்பமும் நாணும் ஒருங்கு=செம்மையும் நாணும் சேர—இற்பிறந்தார் கண் அல்லது இயல்பாக இல்லை=குடிப்பிறந்தார் மாட்டல்லது பிறர்மாட் டியற்கையாக உளவாகா. எ-று.

இல்லுக் குடி குலமென்பன ஒரு பொருள; ஈண் டுயர்ந்தவற்றின் மேல. செம்மை=கருத்துஞ் சொல்லுஞ் செயலுந்தம்முள் மாறுகாமை. நாண்= பழிபாவங்களின் மடங்குதல். இவை இற்பிறந்தார்க்காயின் ஒருவர் கற்பிக்க

வேண்டாமற்றுமேயுளவாம், பிறர்க்காயிற் கற்பித்தவழியும் கெடுதலில்லா வென்பதாம். (௧)

விளக்கம்:—செம்மை என்பதும், நாணமென்பதும் நற்குடியில் பிறந்தவர்களுக்கு அல்லாது மற்றவர்களிடத்து இயற்கையாக ஒன்று சேர உள்ளன ஆகா என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, மனத்தாலும், வாக்காலும், காயத்தாலும் உண்டாகின்ற



கருத்தும், சொல்லும், செயலும் ஒன்றிக்கொண்டு மாறுபடாமலிருக்கும் பெரியோர் செம்மையென்னும் தகுதியும், பழிவரும் காலத்தும், பாவமான செய்கையைச் செய்ய வேண்டிய காலத்தும் அவற்றிற்கு மிகுதியு மஞ்சி அடங்கி நிற்கின்ற தகுதியாகிய நாணமும் நற்குடியில் பிறந்தார்க்கு ஒருவர் சொல்லாமல் இயல்பாகவே உண்டாகு மென்றும், அவ்விதமல்லாது மற்றவர்க்கு எவ்வளவு சொன்னாலும் சொல்லிய அக்காலத்து மாத்திரம் இருப்பதுபோல் காணப்பட்டுப் பின்னர் வெகு விரைவில் மறைந்துவிடும் என்றும், ஆகவே, நல்ல குடியின் இயற்கையை இதனால் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "செம்மையும், நாணமுமாகிய இரண்டுமன்றி இன்னுமேதேனும் இயற்கையாகிய குணங்கள் நற்குடிப் பிறந்தார்க்கு உளவோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

952. ஒழுக்கமும் வாய்மையு நாணுமிம் மூன்று
மிழுக்கார் குடிப்பிறந் தார்.

(பரி.) இ-ள். குடிப்பிறந்தார்=உயர்ந்த குடியின்கட் பிறந்தார்—ஒழுக்கமும் வாய்மையும் நாணும் இம்மூன்றும் இழுக்கார்=தமக்குரிய ஒழுக்கம் மெய்ம்மை நாணெனப்பட்ட இம்மூன்றன்கண்ணும் கல்வியானன்றித் தாமாகவே வழுவார். எ-று.

ஒழுக்க முதலியன மெய்ம்மொழி மனங்களினவாகலின், அம்முறையவாயின. இழுக்குதல் அறியாது வருகின்றமையின், 'இழுக்கார்' என்றார். (௨)

விளக்கம்:—உயர்ந்த குடியில் பிறந்தவர்களுக்குத் தம் வரு

ளத்திற்கு உரிய ஒழுக்கமும், பொய்மை பேசாமையும், நாணமும் ஆகிய இம் மூன்றும் தாம் கற்காமலே வந்து விடும் என்று 'இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, செயற்கை அறிவாகிய கல்வியினால் வரும் மேற்கூறிய நற்குணங்களெல்லாம் இயற்கையாகவே நற்குடியில் பிறந்தவர்களுக்கு உண்டாகி விடுமென்றும், நடுவில் அந்நற்குணங்கள் பிறழ்வுபடா என்றும் அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "குடிமை என்பதன் இயற்கையைத் தொகையாக அறிந்தோம். இனி அதன் வகையையும் விரித்துக் கூறல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

77



953. நகையீகை யின்சொ லிகழாமை நான்கும்
வகையென்ப வாய்மைக் குடிக்கு.

(பரி.) இ-ள். வாய்மைக் குடிக்கு=எக்காலத்துந் திரிபில்லாத குடியின்கட் பிறந்தார்க்கு—நகை ஈகை இன்சொல் இகழாமை நான்கும் வகை என்ப=வறியார் சென்றவழி முகமலர்ச்சியும், உள்ளன கொடுத்தலும், இன்சொற் சொல்லுதலும், இகழாமையுமாகிய இந்நான்கும் உரிய கூறென்று சொல்லுவர் நூலோர். எ-று.

பொய்ம்மை திரிபுடைமையிற் றிரிபின்மையை 'வாய்மை' என்றும், "இல்லாரை யெல்லாருமெள்ளுவர்"* ஆகலின் இகழாமையை அவர் கூறுக்கியுங் கூறினார். குடி—ஆகுபெயர். நான்கின்வகையென்பதுபாடமாயின், வாய்மைக்குடிப் பிறந்தார்க்கும் பிறரின் வேறுபாடு இந்நான்கானுமாமென்றுரைக்க. இவை மூன்று பாட்டானுங் குடிப்பிறந்தா ரியல்பு கூறப்பட்டது.

விளக்கம்:—தம்மிடத்தே தரித்திரர் வந்த காலத்து முகமலர்ச்சியோ டிருத்தலும், தம் கையில் உள்ளவற்றை இல்லையென்னுது கொடுத்தலும், அவர்க்கு இனிய சொற்களைச் சொல்லுதலும், வறியவர்களென்று அவர்களை இகழாமையும் ஆகிய நான்கு விதமாகிய தகுதிகளும் எக்காலத்தும் மாறுதலில்லாத நற்குடியில் பிறந்தவர்களுக்கு இயல்பாகவே உண்டாகும் என்று நூல் வல்லவர் சொல்லுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், முன்னர் இல்லறத்தில் கூறியபடியே நற்குடிப் பிறந்தான் ஒருவன் அன்புடையவனாய் இருந்து விருந்து ஓம்பி இனியவைகூறி நிற்பது

அவனுக்கு இயல்பாகும் என்று எடுத்துக் காட்டினர். ஆதலால் நற்குடியில் பிறந்தார்க்கு உள்ள குணங்கள் இவை என்று கூறியதால், ஏனைய குடியில் பிறந்தார்க்கு இவை உண்டாகாவென்றும், உண்டாகுமாயினும் இயற்கையாகவே உண்டாகாவென்றும் அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ்விதம் நற்குடியில் பிறந்தவர்கள் மறந்தும் தம் ஒழுக்கத்தில் குறைவுபடாரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

954. அடுக்கிய கோடி பெறினுங் குடிப்பிறந்தார்
குன்றுவ செய்த லிலர்.

(பரி.) இ-ள். அடுக்கிய கோடி பெறினும்=பலகாலடுக்கிய கோடி

* திருக்குறள், 752.



யளவிற்றாயபொருளைப் பெற்றாராயினும்,—குடிப்பிறந்தார் குன்றுவ செய்தல் இலர்=உயர்ந்தகுடியின்கட்பிறந்தார் தம்மொழுக்கங்குன்றுந் தொழில்களைச் செய்யார். எ-று.

அடுக்கியகோடியென்பது எண்டெண்ணப்படும் பொருண்மேனின்றது. குன்றுந் தொழில்கள்=குன்றுதற் கேதுவாய தொழில்கள். (ச)

விளக்கம்:—உயர்ந்த குடியில் பிறந்தவர்கள் பல கோடிகளாக அமைந்த பொருள்களைப் பெறுவதாக இருந்தாலும், தன் குடிக்கு உரியதாயுள்ள ஒழுக்கத்தில் சிறிதும் குறைந்த தொழில்களைச் செய்யமாட்டார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், நீங்கள் மேல் வினவிய வண்ணம் உண்மையாகவே நற்குடியில் பிறந்திருப்பவர்கள் எவ்வளவு கோடி அளவாகிய பொருளைப் பெறுவதாக இருக்கினும், 'அப்பொருள்கள் நிலையாதன; தாம் செய்யும் பழிகளோ நிலைத்து நிற்பன' என்று உணர்ந்து, நில்லாத பொருளுக்காகத் தம் குடிக்கு ஊனமாகிய நிலைத்து நிற்கும் பழியைத்தேடிக் கொள்ள மாட்டார்கள் என்று அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணுக்கர், "நற்குடிப் பிறந்தார் பெரும் பொருள் கிடைப்பதாயினும் தகுதியற்ற காரியத்தைச் செய்யமாட்டார் என்று அறிந்தோம். இனி, ஓர் கால் தம் பழைவினை வயத்தால் தாம் அடைந்திருந்த பொருள்கள் சுருங்கி விடுமாயின், அப்போதும் தம் தகுதி

யைக் காத்துக் கொள்வரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவா ராயினர்.

955. வழங்குவ துள்வீழ்ந்தக் கண்ணும் பழங்குடி
பண்பிற் றலைப்பிரித லின்று.

(பரி.) இ-ள். பழங்குடி = தொன்றுதொட்டுவருகின்ற குடியின்கட் பிறந்தார்,—வழங்குவது உள்வீழ்ந்தக்கண்ணும் = தாங்கொடுக்கும் பொருள் பண்டையிற் சுருங்கியவிடத்தும்—பண்பின் தலைப்பிரிதல் இன்று = தம்பண்புடைமையின் நீங்கார். எ-று.

தொன்றுதொட்டு வருதல் = சேர சோழ பாண்டியரென்றாற்போலப் படைப்புக்காலந்தொடங்கி மேம்பட்டு வருதல். அவர்க்கு நல்குரவாவது வழங்குவது உள்வீழ்வதாகலின், அதனையே கூறினார். (௫)

விளக்கம்:—தொன்று தொட்டுப் பழமையாக வருகின்ற நற்குடியில் பிறந்தவர்கள் வறியவர்க்குத் தம்மியற்கைக் குணத்



தால் கொடுக்கின்ற கொடையின் பொருட்டு இருந்தபொருள் முன்னிருந்ததைக் காட்டிலும் சுருங்கிப் போகுமானால், அச்சுருங்கிய காலத்தும் வறியவரைக் கண்டால் தம் இயற்கைக் குணத்தினின்றும் மாறுபடார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், நற்குடியில் பிறந்தவர்கள் தம் கையில் பொருளில்லாவிடத்தும் தமக்கு உரிய நற்குணங்களாகிய ஈகை முதலிய சிறப்பினைச் செய்து உண்மைப்பயனை அடைவதற்கு உரியராவரே யன்றி, தம் பொருள் சுருங்கியதற்காக வருந்தா ரென்றும் அறிந்தோம். அவர்கள் வருந்துவதெல்லாம் தமக்குப் பொருள் நிறைந்திருந்த காலத்து ஈகையைச் செய்த அளவிற்குத் தாம் இக்காலத்துச் செய்வதற்கில்லையே என்று எண்ணுவதே யாகுமென்றனர். இதனைப் பெரிய புராணத்தில் இளையான்குடிமாற நாயனார் சரிதத்தாலும், ஏனைய சரிதங்களாலும் அறிதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் வறுமை உற்றகாலத்தும் வஞ்சனையோடு கூடி இருப்பனவும் தம் குடிக்கு அமையாதனவுமாகிய செயல்களை நற்குடிப் பிறந்தார் ஒருபோதும் செய்வதில்லையோ!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

956. சலம்பற்றிச் சால்பில செய்யார்மா சற்ற
குலம்பற்றி வாழ்துமென் பார்.

(பரி.) இ-ள். மாசு அற்ற குலம் பற்றி வாழ்தும் என்பார்=வசையற்று வருகின்ற எங்குடிமரபினோடொத்து வாழக்கடவேமென்று கருதி அவ்வாறு வாழ்வார்,—சலம்பற்றிச் சால்பு இல செய்யார்=வறுமையுற்றவழியும், வஞ்சனையைப் பொருந்தி, அமைவில்லாத தொழில்களைச் செய்யார். எ-று.

அமைவின்மை=அம்மரபிற்கேலாமை. இவை மூன்று பாட்டானும் அவர் வறுமையுற்றவழியும், அவ்வியல்பின் வேறுபடாரென்பது கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—பிறருடைய பழிப்பென்பதே இல்லாமல் பழைமையாக வருகின்ற தம் குடிப்பிறப்போடு தாம் ஒத்து வாழவேண்டும் என்று மனத்தால் எண்ணி, எண்ணிய அவ்விதமே வாழ்பவர்கள் தாம் தரித்திரத்தை அடைந்த காலத்திலும் வஞ்சனையோடு கூடியனவும் தம் குடிக்குப் பொருந்தாதனவுமாகிய தொழில்களைச் செய்ய



மாட்டார் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், தம் குடிப்பிறப்பின் தகுதியைப் பிறர் பழித்தல் கூடாது என்று எண்ணுகின்ற பெரியோர் தம் உயிரையே இழக்கக்கூடிய அத்துணைத் தீங்குகள் தங்களுக்கு வருவனவாயினும் தம் குடிப்பிறப்புக்குப் பொருந்தாத செயல்களைச் செய்யமாட்டார் என்று அறிகிறோம். இதனைச் சூரிய குலத்துத் தோன்றலாகிய அரிச்சந்திரன் என்பான் விசுவாமித்திரனது சூழ்ச்சியால் எல்லாவற்றையும் இழந்து சுடுகாட்டில் காவலாளியாக இருந்தகாலத்து மைந்தனை இழந்தும் தம் மனைவியையே வெட்டுதற்கிருந்தும், ஒரு பொய் சொல்வதற்கு அஞ்சினவனாய்த் தன் குடிக்கு இயற்கையாகிய வாய்மையையே உறுதியாகக்கொண்டு நின்றான் என்றும், அவன் உறுதியைக் கெடுப்பதற்குச் சூழ்ச்சிசெய்த விசுவாமித்திரன் ஒரு பொய் பேசினால் இழந்தபொருள் யாவும் தருவதாகச் சொல்லிய காலத்தும் அதற்கிணங்காது தனது வாய்மையையே நிலைநாட்டினானென்றும் அறிகின்றோம். இதனைப் பின் வரும் அரிச்சந்திர புராணச் செய்யுளால் அறிதல் கூடும் என்றனர்.

"பதிபிழந்தனம் பாலனை யிழந்தனம் படைத்த
நிதி யிழந்தனம் இனி நமக்கு உளதென நினைக்கும்
கதி யிழக்கினும் கட்டுரை யிழக்கிலே மென்றான்
மதி யிழந்து தன் வாயிழந்து மதிதவன் சென்றான்."

அதுகேட்ட மாணாக்கர், "ஒருவர் ஒரு குற்றத்தைச் செய்து, பிறகு செய்த அக்குற்றத்தை உலகோர் அறியாவண்ணம் மறைத்துவிடுவதையும் நாம் பார்க்கின்றோம். அவ்விதமே உயர் குடிப்பிறந்தாரும் ஒரு குற்றத்தைச் செய்வாராயின், அதைப் பிறர் அறியாது மறைத்து விடுதல் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

957. குடிப்பிறந்தார் கண்விளங்குங் குற்றம் விசும்பின்
மதிக்கண் மறுப்போ லுயர்ந்து.

(பரி.) இ-ள். குடிப் பிறந்தார்கண் குற்றம்= உயர்ந்த குடியின்கட் பிறந்தார்மாட்டுளதாங் குற்றம்—விசும்பின் மதிக்கண் மறுப்போல் உயர்ந்து விளங்கும்= தான் சிறிதேயாயினும் விசும்பின்கண் மதியிடத்து மறுப்போல ஓங்கித் தோன்றும். எ-று.



உயர்குடிமுதலிய பொருள்வகை மூன்றற்கும் விசும்பு முதலிய உவமைவகை யொத்துப் பான்மாறுபட்டது. குடியது உயர்ச்சியானும், மதிபோன்ற அவர் நற்குணங்களோடு மாறுதலானும், உலகெங்கும் பரந்து வெளிப்படுமென்பதாம். (எ)

விளக்கம்:—உயர்ந்த குடியிலே பிறந்தவர்களிடத்தே ஏதேனும் ஓர் குற்றமுண்டாயின், அக்குற்றமானது சிறியதாக இருந்தாலும் ஆகாயத்தில் உள்ள சந்திரனிடத்தே காணப்படுகின்ற களங்கம்போல் யாவருமறிய காணப்படும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், ஆகாயத்திலுள்ள சந்திரனது களங்கத்தை யாவரும் பார்ப்பதுபோல், உயர்ந்த குடியிலுள்ளார் குற்றம் யாவருமறிய காணப்படுமென்றும், வெண்மையாகிய சந்திரனிடத்துக்

களங்கம் சிறிதாக இருந்தாலும் யாவரும் காணும்படி இருத்தல் போலக் குற்றமில்லாத குடியாதலால் அவர் செய்யும் குற்றம் மிகச் சிறிதாக இருந்தாலும் யாவருமறிய எடுத்துக் காட்டுமென்றும், சந்திரனிடத்துத் தோன்றும் வெண்மைக் குணம் பெரிதாக இருந்தும் குற்றமே எடுத்துக்காட்டுவதுபோல் நற்குடிப் பிறந்தார் செயல்கள் பல நல்லனவாக இருக்கினும் அவர் செய்த குற்றமே எடுத்துக் காட்டுமென்றும் அறிந்தோமென்றனர். அது கேட்ட மாணாக்கர், "உயர் குடிப் பிறந்தார் செய்யும் குற்றத்தினை ஏனையோரிடத்துத் தோன்றும் குற்றத்தைப்போல் சிறிதும் மறைத்தல் முடியாது என்பதை அறிந்தோம். இனி, நற்குடிப் பிறந்தவனிடத்தே அன்பென்பது இல்லாவிடின், அவனை உலகோர் என்னென்று எண்ணுவர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

958. நலத்தின்க ணாரின்மை தோன்றி னவனைக்
குலத்தின்க ணையப் படும்.

(பரி.) இ-ள். நலத்தின்கண் நார் இன்மை தோன்றின் = குலநலமுடையனாய் வருகின்றவன்கண்ணே ஈரமின்மையுளதாமாயின்,—அவனைக் குலத்தின்கண் ஐயப்படும் = அவனை அக்குலப்பிறப்பின்கண்ணே ஐயப்படும் உலகம், எ-று.

நலமும் குலமும் ஆகுபெயர். நாரின்மையாற் கொடாமையும் வன்சொல்லும் முதலிய கூறப்பட்டன. தோன்றின் என்பது தோன்றுமை விளக்கி



நின்றது. நலனுடையனாய் வருதலினிடையே இவைதோன்றலின், உள்ளது ஐயமாயிற்று. உலகமென்பது அவாய்நிலையான் வந்தது. ஐயப்படலென்பது பாடமாயின், ஐயப்படுகவென விதியாக்கியுரைக்க. இவை இரண்டு பாட்டானும வேறுபட்டவழிப் படும் இழுக்குக் கூறப்பட்டது. (அ)

விளக்கம்:— நல்ல குலத்திலே பிறந்தவனாய்க் காணப்படுகின்றவனிடத்து அன்பில்லாமை உண்டாகுமாயின், அவ்விதம் நற்குடியில் பிறந்தவனையும் அவன் அக்குலத்தில் பிறந்தவன்தானா என்று சந்தேகிப்பதற்கு இடமுண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நற்குடியில் பிறந்தார்க்கே தோன்றிய

மகன் ஒருவன் தன்னிடத்தே வந்த வறிஞர்க்குக் கொடுத்தலும், இனியவை கூறலும் தனக்குக் கடனாகக் கொள்ள வேண்டி இருக்க அவ்வாறு அல்லாது கொடாமையும், கடுஞ் சொல்லும் உடையவனாக இருப்பானாயின், அவனை உலகத்தவர் 'இவனுக்கு இவன் குடிக்கு இருக்க வேண்டிய நற்குணங்களாகிய ஈகையும், இன்சொல்லுமில்லை ஆகையால், இவன் உண்மையாகவே இக்குடியிற் றோன்றியவன்றானோ அல்லவோ' என்று ஐயுறுவர் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இரண்டு திருக்குறள்களாலும் நற்குடிப் பிறந்தார் அவர் குடிக்கேற்ற குணங்களையும், செயல்களையும் கொள்ளாவிடின் அவர்க்கு வருகின்ற துன்பங்கள் இவை என்று அறிந்தோம். இவ்விதம் ஒருவன் நற்குடியிற் தோன்றினானென்பதை அறிந்துகொள்வதற்கு முதலாக உள்ள குறிப்பு எது?" என்று கேட்டனர், ஆசிரியர் கூறலாயினர்.

959. நிலத்திற் கிடந்தமை கால்காட்டுங் காட்டுங்
குலத்திற் பிறந்தார்வாய்ச் சொல்.

(பரி.) இ-ள். நிலத்திற் கிடந்தமை கால் காட்டும் = நிலத்தினியல்பை அதன்கண் முளைத்த முளை காட்டும்;— குலத்திற் பிறந்தார் வாய்ச் சொல் காட்டும் = அதுபோலக் குலத்தினியல்பை அதன்கட் பிறந்தார்வாயிற்சொற் காட்டும். எ-று.

கிடந்தமை = உள்ளபடி. முளைத்தமரத்திறத்தானே நன்மையுந் தீமையுந் தெரிதலின், இவைமுதலிய கூறாராயினர்; ஆகவே பொருளினுஞ் செயன் முதலியன வேண்டாவாயின. குலத்தியல்பறிதற்கருவி கூறுவார்போன்று, இன்சொல் வேண்டுமென்றவாறாயிற்று. (௯)



விளக்கம்:—ஒரு நிலத்தினது தன்மையை அறியவேண்டுமானால் அந்நிலத்தினிடத்தே முளைத்த முளையைக்கொண்டு அறிந்துகொள்வதுபோல், நற்குலத்தில் தோன்றிய தன்மையினை அவர் வாயினுண்டாகும் சொற்களைக் கொண்டே அறிதல்கூடும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவனிடத்தே உள்ள நற்குணங்கள் பலவற்றினும் முன்னிருக்கவேண்டுவது இனியசொல்

ஒன்றே ஆதலால், அவ்வினியசொல் கண்டவிடத்து அவனை நற்குலத்துதித்தானென்றும், அவ்வொன்றில்லாது ஏனைய குணங்களெல்லாமிருக்கினும் நற்குலத் தோற்றமில்லாதவனென்றும் பிரித்து அறிதல் வேண்டும் என்பதை உவமை வாயிலாகக் காட்டுவதற்குப் பூமியில் முளைக்கின்ற முளை ஒன்றினைக் கண்டே அது இனிக் கொள் எப்போதும் இல முதலிய பயன்களைக் காணுதற்கு முன்னரே 'இம்முளை இத்தன்மையனவுடையது ஆதலால் இதுநல்ல நிலத்தே தோன்றியதாக இருக்கவேண்டும்' என்று குறிக்கொண்டு அறிவது போல், அவனது வாய்ச்சொல் ஒன்றினாலேயே அறிந்துகொள்ளுதல் கூடுமென்று கூறியதுடன், இனிய சொல்லில்லாதார் நற்குடித் தோற்றமில்லாதவரென்று கூறியதாயிற்று ஆதலால், மனம், வாக்கு, காயமாகிய மூன்றினையு மறிவதற்கு வாக்கின் செயலே போதுமென்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவன் பணிவில்லாது இனிய சொற்கள் மாத்திரம் கூறி நிற்பானேயாகில் அது நற்குடித் தோற்றமாகுமா?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

960. நலம்வேண்டி னாணுடைமை வேண்டுங் குலம்
வேண்டுக யார்க்கும் பணிவு. [வேண்டின்

(பரி.) இ-ள். நலம் வேண்டின் நாண் உடைமை வேண்டும்=ஒருவன் தனக்கு நலனுடைமையை வேண்டுவானாயின், நாணுடையனாதல் வேண்டும்;—குலம் வேண்டின் யார்க்கும் பணிவு வேண்டுக=குலனுடைமையை வேண்டுவானாயின், பணியப்படுவார் யாவர்மாட்டும் பணிதலை வேண்டுக. எ-று.

நலம்=புகழ், புண்ணியங்கள். வேண்டுமென்பது விதிப்பொருட்டாய் நின்றது, "வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்"* என்புழிப்போல. அந்தணர், சான்றோர், அருந்தவத்தோர், தம்முன்னோர், தந்தை, தாயென்றிவ

* தொல்காப்பியம், கிளவியாக்கம், 33.



செல்வாருமடங்க, 'யார்க்கும்' என்றார். பணிவு=இருக்கையெழுதலும், எதிர் செலவும் முதலாயின. இவை யிரண்டுபாட்டானும் குடிமைக்கு வேண்டுவன

கூறப்பட்டன.

விளக்கம்:—ஒருவன் தனக்கு எல்லா நலங்களுமாகிய புகழ் புண்ணியங்கள் முதலியவைவேண்டுவானாயின் எவ்வாறு நாணமுடையவனாய் இருத்தல் வேண்டுமோ, அதுபோன்று தான் பிறந்த குடியை நற்குடியாக்க விரும்புவானாயின் யார் யார்க்குப் பணிதல் வேண்டுமோ அவரவர்க்கெல்லாம் பணிவுடையனாக இருத்தல்வேண்டும் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆகலால், நற்குடிப் பிறந்தான் ஒருவன் மேல் திருக்குறளில் கூறியவண்ணம் இனிய சொல்லோடு கூடியிருப்பதுடன் துறவிகள், சால்புடையவர்கள், அரிய தவத்தோர்கள், தமக்குமுன்னே தோன்றினவர்கள், தந்தை, தாய் என்று கூறப்பட்ட பெரியோர்களைக் கண்டகாலத்து இருந்த இடத்தைவிட்டு எழுந்திருந்து எதிர்சென்று அவரவர்க்கு வேண்டுவனவாகிய வணக்கத்தைக் காட்டி வணங்கவேண்டும் என்றும், அவ்விதம் செய்வதே தான் நற்குடியில் பிறந்தானென்று அறிவிக்கும் குறிப்பாகும் என்றமையால் நற்குடிப்பிறந்தார்க்கு இயல்பாகவே எல்லா நற்குணங்களும் அமைந்து கிடக்குமென்றும், அவ்வுண்மையினைத் தெரிந்து கொள்வதற்கு முதலாவதாக உள்ளது இன்சொல்லென்றும், இரண்டாவது பணிவுடைமை யென்றும், அதன்பின்னர் ஈகை முதலியவை என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், " இவ்விதம் நற்குடிப் பிறந்த ஒருவனது குணங்களெல்லாம் இவை என்று தொகையாக அறிந்தோம். இனி, ஒவ்வொன்றாக அவர் குணங்களை எடுத்துக் கூறல்வேண்டும் " என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 97. அதிகாரம்.

## மானம்.

(பரி.) இனிக் குடிப்பிறந்தார்க்கு உரியனவாய குணங்கள் கூறுவான் தொடங்கி முதற்கண் மானங்கூறுகின்றார். அஃதாவது எஞ்ஞான்றும் தந்நிலையிற் றாழாமையும், தெய்வத்தாற் றாழ்வுவந்துழி உயிர்வாழாமையுமாம். இஃது, அக்குடிப் பிறப்பினை நிறுத்தலுடைமையின், அச்சிறப்புப்பற்றி முன்வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, மேற்கூறிய நற்குடியில் தோன்றியவர்களுக்கு இயற்கையாகவே இருக்கும் குணங்களை யெல்லாம் சொல்லத் தொடங்கி முதலாவதாக மானமென்பதைக் கூறத் தொடங்கினர். மானமாவது எக்காலத்தும் தன் குடிக்குத் தகுதியாகிய நிலையிலிருந்து தாழ்ச்சி அடையாது இருத்தலும், ஓர் வேளை தாழ்ச்சி அடையாதிருக்க முயன்றும் ஊழ்வலியால் தாழ்வு வந்துவிடின் பின்னர் எக்காலத்தும் நிலைத்து நிற்பதாகிய பழிக்கு அஞ்சி நிலையாத தேகத்தை ஒழித்து விடுதலும் ஆகும். இவ்வதிகாரம் மேற்கூறிய குடிப்பிறப்பின் பெருமையை நிலைநாட்டக்கூடிய தகுதியுடையது ஆதலால், அதன் சிறப்பினை நோக்கிக் குடிமையென்னும் அதிகாரத்துக்குப்பிறகு இது முதலாக வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நற்குடியில் பிறந்தவர்கள் தம்மைச் சிறிதும் தம் நிலையினின்று தாழ்த்திக் கொள்ளாதிருத்தல் என்றீர். ஆயின், ஒரு பெரும் பொருளை இழந்து விடுவதாயின், அக்காலத்து என்செய்வர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**961.** இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்
குன்ற வருப விடல்.

(பரி.) இ-ள். இன்றியமையாச் சிறப்பின ஆயினும்=செய்யாதவழித் தாம் அமையாத சிறப்பினை யுடையவேயெனினும்,—குன்ற வருப விடல்= தங்குடிப்பிறப்புத் தாழவருஞ் செயல்களை யொழிக. எ-று.

அமையாமை=இறத்தல். குடிப்பிறப்பென்பது அதிகாரமுறைமையான் வந்தது. இறப்பவருவழி இளிவந்தன செய்தாயினும் உய்கவென்னும் வடநூன் முறைமையை மறுத்து, உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி அவைசெய்யற்க வென்பதாம். (க)

விளக்கம்:—தம் குடிப் பிறப்புக்குச் சிறிதும் ஒவ்வாதனவாகிய மானம்பட வரும் செயல்களை ஒருவன் ஒருகாலத்துஞ் செய்யாதுவிடுவானாயின், அவ்விதம் செய்யாது விடுதலால் அவன் பெரியதோர் சிறப்பு அமைந்த செல்வங்களை எல்லாம் இழந்து விடுவதாக இருந்தாலும், அக்காலத்தும் தன் குடிப் பிறப்புக்குத் தகாதனவாகிய தாழ்ந்த செயல்களைச் செய்யாமலே இருத்தல்வேண்டும் என்று

இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, நற்குடிப்பிறந்தான் ஒரு



வன் மானத்திற்காக அஞ்சி ஒரு தாழ்வாகிய காரியத்தைச் செய்யாதுவிட்டால், அவ்விதம் செய்யாமையானது தன் செல்வங்களை யெல்லா மிழந்து தானும் அழிந்து போதற்குரிய தருணத்தை உண்டு பண்ணினும், அக்காலத்தும் தன் குடிப்பிறப்பினை நிலைநாட்டுவதற்கு மானத்தை இழத்தல் கூடாது. ஏனெனின்? உடம்போ நிலையற்றது; காப்பாற்றுகின்ற மானமோ நிலை உடைய புகழைக்கொடுப்பது: ஆகையால் நிலை உடைய மூன்றினை விரும்புதல் நற்குடிப் பிறந்தானுக்கு இலக்கணமென்று கூறியவுடன் ஒருவன் இறக்கவேண்டிய ஆபத்தினை அடையவருங்காலத்து எவ்வளவு இழிவாகிய காரியங்கள் செய்தாகினும் உயிர் வாழ்வதற்குரிய தருணங்களைச் செய்தல்கூடும் என்று கூறுகின்ற வடநூலார் கொள்கையை மறந்து மானத்தின் பெருமையே பெருமை என்று நிலைநாட்டியதும் ஆயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மானத்தை விரும்புபவர் பெரியதோர் தருணத்தை யடைவதன் பொருட்டும் இழிவாகிய காரியத்தைச் செய்யாரோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

962. சீரினுஞ் சீரல்ல செய்யாரே சீரொடு
பேராண்மை வேண்டு பவர்.

(பரி.) இ-ள். சீரினும் சீர் அல்ல செய்யார் = புகழ்செய்யுமிடத்தும் தம் குடிமைக்கொவ்வாத இளிவரவுகளைச் செய்யார்—சீரொடு பேராண்மை வேண்டுபவர் = புகழுடனே மானத்தை நிறுத்துதலை விரும்புவார். எ-று.

எவ்விடத்தும் நிலைகுலையாத திண்மையான் உளதாதல்பற்றிப் 'பேராண்மை' எனப்பட்டது. நிலையுடைய புகழின் பொருட்டாகவுஞ் செய்யாரென்பதாம். (௨)

விளக்கம்:—புகழோடு மானத்தை நிலை நிறுத்துதலை விரும்புகின்றவர் அந்நிலையாகிய புகழைத் தேடுவதன் பொருட்டு தம்முடைய குடிப்பிறப்புக்கு ஒவ்வாதனவாகிய இழிவான காரியங்களைச் செய்யமாட்டார்கள் என்று இத்திருக்குறள் கூறுகின்றது.

இதனால், எவ்விடத்தும் எக்காலத்தும் தம் நிலை குலையாமலிருக்க வேண்டுமென்று உறுதிகொண்ட மனமுடையவர் புகழ்பொருட்டாக இழிந்த காரியங்களைச் செய்யமாட்டார்களென்றும், அவ்விதம் செய்யாது தம் மானத்தை நிலை நாட்டுகின்றவராதலால், அவ்



விதத் தகுதியுடையாரைப் பேராண்மையுடையாரென்றும் அறிஞரென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "புகழ் பொருட்டும் குடிப் பிறந்தார் தம் மானத்தைப் போக்கார் என்று அறிந்தோம். ஆயின், ஒருவனுக்குச் செல்வம் சுருங்கிய காலத்தும் தன் மானத்தைக் கருதாது பணிந்து நடத்தல் வேண்டியதில்லையோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

963. பெருக்கத்து வேண்டும் பணிதல் சிறிய
சுருக்கத்து வேண்டு முயர்வு.

(பரி.) இ-ள். பெருக்கத்துப் பணிதல் வேண்டும்=குடிப்பிறந்தார்க்கு நிறைந்த செல்வமுளதாயவழி யாவர்மாட்டும் பணிவு வேண்டும்;—சிறிய சுருக்கத்து உயர்வு வேண்டும்=குறைந்த நல்குரவுளதாயவழிப் பணியாமை வேண்டும், எ-று.

பணியாமை=தாழ்வு வாராமற் பழையவுயர்ச்சிக்கண்ணே நிற்றல். செல்வக்காலை அவ்வுயர்ச்சி செய்யத் தாம் தாழ்தலும், அல்லற்காலை அது தாழ்வு செய்யத் தாமுயர்தலும், வேண்டுமென்பதாம். இவைமூன்றுபாட்டானும் தாம் தாழ்தற்கேதுவாயின செய்யாமைச் சிறப்புக் கூறப்பட்டது. (ங)

விளக்கம்:—நற்குடியில் பிறந்தவர்களாயினோர்க்கு மிகுந்த பெருஞ் செல்வமுண்டான காலத்தும் செல்வத்தை அடைந்த அவர் யாவரிடத்தும் பணிவாக இருத்தல் வேண்டுமென்றும், அந் நற்குடிப் பிறந்தார்க்கே தரித்திரமென்பது உண்டாகுமாயின் பணியாதிருத்தல் வேண்டும் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், ஒருவன் நற்குடிப் பிறந்தானும் இருந்து தன் செல்வத்தை எல்லாம் போக்கியகாலத்து எல்லோரிடத்தும் வணங்கி நடக்க முயல்வானாயின், உலகத்தவர் அவ்வணக்கத்தை அவனது இயற்கையாகிய நற்குணமென்று கொள்ளாது வறுமை மிகுதியால் பணிவு

காட்டுகின்றான் என்று எண்ணி அவனைத் தாழ்த்தி விடுவார்களாத லால், அவ்விதம் பணிவு செய்பவன் தரித்திரம் வந்தகாலத்து பழைய உயர்ந்த நிலையிலேயே நின்று எல்லாவற்றையும் செய்தல் வேண்டு மென்றும், அவ்விதம் செய்வதால் மானத்தைக் காத்தலாகு மென்றும், அந்நற்குடிப் பிறந்தானே செல்வத்தை உடையவனாக இருக்கின்ற காலத்து யாரிடத்தும் எவ்வளவுக் கெவ்வளவு அதிக மாகத் தாழ்ந்து நடக்கின்றானோ அவ்வளவுக் கவ்வளவு உயர்த்துவர்



'இவன் இவ்வளவு செல்வந்தனாக இருந்தும், இவ்வளவு பணிவுடை யவனாக இருக்கின்றான்' என்று அவனது பணிவுடைமைக்கு இரங்கி அவனை உயர்த்துவாராதலால், செல்வமுள்ளகாலத்துப் பணிதல் அவனுக்கு உள்ள பெருமையை அதிகப் படுத்துவதாகும் என்று அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நற்குலத்தில் தோன்றினர் எக்காலத்துப் பணியுடையராய் இருத்தல் வேண்டும் என்பதை இத்திருக்குறளால் அறிந்துகொண்டோம். ஆனால், இவ்விதம் எவனேனும் ஒருவன் தான் முன்னிருந்த நிலையி னின்றும் சிறிது தாழ்ந்து நடக்க முயலுவானாயின், அவனை உல கோர் எவ்விதம் மதிப்பர் என்பதை ஓர் உவமை வாயிலாக விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

964. தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர்
நிலையி னிழிந்தக் கடை.

(பரி.) இ-ள். மாந்தர் = குடிப்பிறந்தமாந்தர், — நிலையின் இழிந்தக் கடை = தம் உயர்ந்த நிலையைவிட்டு அதனினின்றும் தாழ்ந்தவழி, — தலையின் இழிந்த மயிர் அனையர் = தலையைவிட்டு அதனினின்றும் வீழ்ந்த மயிரினை யொப்பார். எ-று.

அந்நிலையை விடாதுநின்றவழிப் பேணப்படுதலும், விட்டுத்தாழ்ந்தவழி இழிக்கப்படுதலும், உவமையாற்பெற்றாம். (௪)

விளக்கம்:—உயர்ந்த குடியில் பிறந்த மக்கள் தமக்கிருக்க வேண்டிய தம்முடைய உயர்ந்த நிலைமையை விட்டுவிட்டு அந்நிலை மைக்கு மாறாகத் தாழ்ந்து நடக்க முயலுவார்களாயின், அவரை

உலகத்தவர் தலையிலிருந்த மயிரானது அத்தலையை விட்டுக் கீழே விழுந்துவிடுமாயின் அதனை எவ்விதம் மதிப்பரோ அவ்விதம் மதிப்பர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, ஒருவன் தலையில் உள்ள மயிர் அத்தலையினிடத்தே இருந்த காலத்து உறுப்புக்களில் ஒன்றாக எண்ணப்பட்டு வளர்க்கப்படுவதாயினும், அவ்விதம் வளர்ந்த அத்தலைமயிரே கீழே விழுந்துவிடின் அதனைச் சிறிதும் கவனியாது ஒதுக்கிடத்தில் தள்ளிவிடுவது உலக இயல்பாதலால் நற்குடிப் பிறந்தார் தம் குடிக்கேற்ற பெருமையோடு இன்சொல்லும், ஈகையும், தன் மதிப்பும் உடையராய் நிற்பாராயின், அவரை



உலகோர் மிகுதியும் விரும்பிப் போற்றுவரென்றும், அவ்விதமல்லாது தம் நிலையில் தாழ்வராயின் அவரை உலகோர் மதியார் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நற்குடிப் பிறந்தார் தம்மை மறந்து ஏதேனும் தம் குடிக்கு ஏலாத ஓர் சிறிய தாழ்வினைச் செய்து விடுவாராயின் உலகத்தவர் அதன் பொருட்டும் அவரை இழித்துக் கூறுவரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

965. குன்றி னனையாருங் குன்றுவர் குன்றுவ
குன்றி யனைய செயின்.

(பரி.) இ-ள். குன்றின் அனையாரும் = குடிப்பிறப்பான் மலைபோல வுயர்ந்தோரும் — குன்றுவ குன்றி அனைய செயிற் குன்றுவர் = தாழ்தற்கேதுவாகிய செயல்களை ஒருகுன்றியளவாயினுஞ் செய்வாராயிற் றாழ்வர். எ-று.

குன்றியனையவுமென்னும் முற்றும்மை விகாரத்தாற்றொக்கது. தாழ்தற்கேதுவாய செயல்களாவன:—இளிவந்தன. சொற்பின்வருகின்றன. (ரு)

விளக்கம்:—மலைபோன்று உயர்ந்த குடியிற் பிறந்த மக்களும் தாம் தாழ்ந்து போவதற்குக் காரணமாகிய செயல்களில் ஒரு குன்றிமணி அளவு செய்துவிடுவாராயின், அக்குடிப் பிறப்பினின்றும் தாழ்ந்தவராவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் நற்குடிப் பிறந்தார் எத்துணைப் பெரியதோர் தகுதியிலிருப்பவராயினும், தம் குடிக்கு அடாததாகிய பழிவரக்கூடிய செயல் ஒன்

தினைக் குன்றிமணியைப்போன்ற மிகச் சிறிய அளவாகச் செய்தாலும், அவர் உலகத்தாரால் தாழ்ந்தவராகவே எண்ணப்படுவர் என்று அறிந்தோம். அன்றியும், ஆசிரியர் காட்டிய உயர்ச்சிக்கு உரிய மலையும் தாழ்விற்கு உரிய குன்றிமணியும் ஆகிய உவமைகளால் "கலப்பாலிற்குத் துளிப்புரை" என்பதுபோல் பெரியதோர் நற்குணமும் சிறியதோர் பழிப்பால் கெட்டுவிடும் என்பதும் அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நற்குடிப் பிறந்தான் தாழ்ந்த செயல் ஒன்றினைக் கொள்வானாயின், அந்நிலையால் அவன் அடைந்த மக்கட் பிறப்பினால் அடைய வேண்டிய இருமைப் பயன்களையும் இழப்பன் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



966. புகழின்றாற் புத்தேணாட் டுய்யாதா லென்மற்
றிகழ்வார்பின் சென்று நிலை.

(பரி.) இ-ள். இகழ்வார்பின் சென்று நிலை = மானத்தைவிட்டுத் தன்னை யவமதிப்பார் பின்னே ஒருவன்சென்று நிற்கின்றநிலை — புகழ் இன்று = இவ்வுலகத்துப் புகழ்பயவாது; — புத்தேள் நாட்டு உய்யாது = விண்ணப்புத்தேளுலகத்துச் செலுத்தாது; — மற்று என் = இனி அவனுக்கு அது செய்வதியாது! எ-று.

புகழ் பயப்பதனைப் புகழென்றார். பயனுடைய இவ்விரண்டுமின்றிக் கொன்னே மானங்கெடுகின்றதை என்னையென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அதைசெய்தற்குற்றங் கூறப்பட்டது. (௬)

விளக்கம் :—நற்குடிப் பிறந்தான் ஒருவன் தனக்கு இயற்கையாக அமையவேண்டிய மானத்தைவிட்டுவிட்டுத் தன்னை அவமதிப்பவர் பின்னேசென்றுத்தாழ்ந்திருக்கும் நிலையானது இவ்வுலகத்தும் அவனுக்குப் புகழினை உண்டுபண்ணாது என்றும், அதுவல்லாமலும் தேவ உலகத்தும் அவனைச் செல்லும்படிச் செய்யாது என்றும், இவ்விதமிருக்க அவன் தன்னைத் தாழ்த்திக்கொண்ட நிலையானது அவனுக்கு என்னபயனைச்செய்யுமென்று இத்திருக்குறள் வினவுகின்றது.

இதனால் எவன் ஒருவன் தன் பெருமையை விட்டுத் தன்னை மதியாதவர்கள் பின்னேபோய் அவரிடத்துக் கைகட்டி வாய்பொத்தி மானத்தை இழக்கின்றானோ அவ்வித தருதியுடையவனது நிலையானது அவனது இம்மைப்பயனாகிய புகழினையும், மறுமைப்பயனாகிய தேவபோகத்தையும் கெடுக்குமென்றும், ஆதலால் அவ்விதம் செய்தல் ஆகாது என்றும் அறிக்தோ மென்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தனது இன்னுயிர் காத்தற்பொருட்டேனும் ஒருவன் தன்னை இகழ்வானிடத்துச் சென்று பொருள் பெற்று வாழ்தல் கூடாதோ ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

967. ஒட்டார்பின் சென்றொருவன் வாழ்தலி னந்நிலையே
கெட்டா னெனப்படுத னன்று.

(பரி.) இ-ள். ஒட்டார் பின் சென்று ஒருவன் வாழ்தலின் = தன்னையிகழ்வார் பின்னே சென்று பொருள்பெற்று அதனாலொருவன் உயிர்வாழ்த



லின், — அந்நிலையே கெட்டான் எனப்படுதல் நன்று = அது செய்யாது இறந்தானென்று சொல்லப்படுதல் அவனுக்கு நன்று. எ-று.

ஒட்டுதல் = பொருந்துதல். அந்நிலையேயென்றது செல்லாத முன்னை நிலைக்கண்ணே நின்றென்றவாறு; அப்பொழுதே யென்றுமாம். புகழும் புத்தேளுலகும் பயவாதேனும் பொருள்பெற்று உயிர்வாழ்வமென்பாரை நோக்கிக் கூறியது. (எ)

விளக்கம் :— ஒருவன் தன்னை இகழ்ந்து பேசுகின்றவன் பின்னேபோய் அவ்விகழ்தலை நோக்காது பொருள் ஒன்றையே கருதி அவனிடத்துப் பொருள்பெற்று அப்பொருளால் வாழ்ந்து உயிரோடிருத்தலினும், அவ்விழிந்த காரியத்தைச்செய்யாது இறந்து போய்விட்டான் என்று பிறரால் சொல்லும்படி அவன் இறப்பானாயின் அது மிகுதியும் நன்மை உடையது என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஏனெனின் ? அடையவேண்டிய இம்மை மறுமைப் பயன்களை அடையாதவிதம் செய்கின்ற இழிந்த காரியத்தைச் செய்து ஒருவனிடத்துப் பொருளைப்பெற்று நில்லாத தேகத்தைக் காப்பாற்றினாலும், அத்தேகமானது பின்னால் அழிந்தே

பேசின்றபடியால், அவ்விதம் அழிந்து போகும் தேகத்தை மான மழிவதற்கு முன்னேயே விட்டுவிடுவாராயின் புகழ் ஒன்றையேனும் அடைதல் கூடும் என்று அறிவித்ததாக அறிந்தோமென்றனர். அதுகேட்ட மாணக்கர், "சம்மாசிரியர் உடலை ஓம்பி வாழ்வதற்கும் மானம் கெடுதலாகாது என்று கூறுகின்றனர். அவ்விதம் கூறுவ தற்கு உள்ள ஏதுவையும் இன்னும் சிறிது விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

968. மருந்தோமற் றூனோம்பும் வாழ்க்கை பெருந்தகை
பீடழிய வந்த விடத்து. [மை

(பரி.) இ-ள். பெருந்தகைமை பீடு அழிய வந்தவிடத்து = உயர்குடிப் பிறப்புத் தன்வலியாகிய மானம் அழியவந்தவழி,—ஊன் ஓம்பும் வாழ்க்கை மற்று மருந்தோ = இறந்தொழிந்து பயனில்லாத உடம்பினைக் காக்கும் வாழ்க்கை பின்னுமிறவாமைக்கு மருந்தாமோ? எ-று.

மற்றென்பது மேற்சொல்லிய இறப்பினை மறுத்துநின்றது. நற்குணங் கட்கெல்லாம் இடனாதற் சிறப்புப்பற்றிப் 'பெருந்தகைமை' என்றும், அவ்



வெல்லாவற்றினும் அதற்கு வலியாதற்சிறப்புப்பற்றிப் 'பீடு' என்றும், அஃது அழிந்தால் நின்றகெட்டுடம்பு இழிக்கப்படுதலின் அதனை 'ஊன்' என்றும், பின்னுமிறத்தல் ஒருதலையென்பார் 'மருந்தோ' என்றுங் கூறினார். மானத் தின்றொழில் அதற்கிடனாகிய குடிப்பிறப்பின்மேனின்றது. (அ)

விளக்கம்:—உயர் குடிப் பிறப்புக்கு வலிமை என்று சொல்லு கின்ற மானமென்னும் பெருமை ஒருவனுக்கு அழிந்து போகக் கூடிய நிலைமை வந்தகாலத்து அதனால் இறந்து விடாமல் இருந்து, பயன் அடையக்கூடாத இவ்வுடம்பினைக் காத்து, வாழ்கின்ற வாழ்க் கையானது பின்னும் இறவாதிருந்தற்கு ஓர் மருந்தாகுமோ என்று இத்திருக்குறள் வினவுகின்றது. அதாவது, நற்குடிப் பிறப்பு நற் குணங்களுக்கெல்லாம் காரணமாக இருக்கின்றதென்றும், அந்நற் குணங்கள் எல்லாவற்றினும் மானமென்பது மிக வலிமை உடை யதாயிருத்தலின், அவ்வித வலிமை உடைய மானத்தை ஒருவன் இழந்த பிறகு அவனுக்கு இருப்பது பயனற்ற வெற்றுடம்பென்றும்,

அவ்விதம் உயிரில்லாத பிணத்துக்குச் சமானமாகிய வெற்றுடம்பினை ஒருவன் காக்கவேண்டுமென்று இழிந்த தொழிலைச் செய்து காப்பாற்றினாலும், காத்த அவ்வுடம்பு இறவா திருக்குமாயின் காத்தல் கூடுமென்றாம், அவ்வாறு அல்லாது என்றேனும் அவ்வுடம்பு அழிந்தே போகுமாதலால் இவ்விதம் இழிந்த தொழிலைச் செய்து காத்ததாகிய அவ்வுடம்பிற்கு அவ்விழிந்த தொழில் இறவாத நிலைமையை உண்டுபண்ணும் மருந்து என்னும் அமிர்தம் ஆகாது என்றும் கூறியதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இன்னுயிர் தங்கும் இவ்வுடலை ஒருவன் தனக்கு வரும் சிறிய இழிவின்பொருட்டு எவ்விதம் போக்கிக்கொள்ள ஆசைப்படுவான்? அவ்விதம் போக்கிக்கொள்வது மக்களுள் உண்டு என்பதற்கு ஓர் உவமைவாயிலாக விளக்குதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

969. மயிர்நீப்பின் வாழாக் கவரிமா அன்னா
ருயிர்நீப்பர் மானம் வரின்.

(பரி.) இ-ள். மயிர் நீப்பின் வாழாக் கவரிமா அன்னார் = தன்மயிர்த் திரளின் ஒருமயிர் நீங்கினும் உயிர்வாழாத கவரிமாவைப்போல்வார்,—மானம்





வரின் உயிர் நீப்பர் = உயிர் நீக்கத்தான் மானமெய்த வரின், அதனைத் தாங்கார் நீப்பர். எ-று.

இழிவுசிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. உயிரும் மானமும் உடனில்லாமைக்கண், பின்னும் போவதாய உயிரைவிட்டு என்றும் நிற்பதாய மானத்தை யெய்துவரென்பதாம். உவமை அவர்க்கு அஃதியல்பென்பது விளக்கி நின்றது. (க)

விளக்கம் :—தம்முடைய உயிரைப் போக்கிக் கொள்ளுவதால் மானத்தைக் காப்பாற்றிக் கொள்ளும் தருணம் ஒருவருக்கு வாய்க்குமாயின், அக்காலத்து உயிரைப்பொருளென்று கொள்ளாது மானத்தைப் பொருளென்று கொண்டு உயிரைக் காத்து நில்லாது இறந்துவிடுபவர் எவரோ, அவர் அடர்ந்த தன்னுடைய

மயிர்க் கூட்டத்தில் ஒரு மயிர் தன்னை விட்டு நீங்குவதாக நேரிடின் அதற்காக உயிரைப் போக்கிக்கொள்ளும் கவரிமான் என்னும் மிருகத்திற்குச் சமானமாவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால் ஒருவன் தன் உயிர் காக்கும் பொருட்டு மானத்தைப் போக்கி அவ்வுயிரைக் காத்தல் வேண்டிய நிலைவருமாயின், எப்போதும் தேகத்தைவிட்டுப் போய்விடக்கூடியதாகிய அவ்வுயிரைக் காத்துப் பயனில்லை என்று உணர்ந்து எப்போதும் அழியாததாகிய மானத்தையே காக்கும்பொருட்டுத் தன்உயிரைப் போக்கிக்கொள்ளுவான் என்றும், தேகம் முழுவதும் அடர்ந்த மயிரைப்பெற்று இருந்தும் அதில் ஒரு மயிரைப் பிறரால் இழக்கவரும் காலத்து அதற்காக மனம் வருந்தி உயிரைப் போக்கிக் கொள்ளும் கவரிமான் என்னும் மிருகத்துக்கு அவன் சமானமாவான் என்றும் அறிவதுடன், மானமுடையார் "மயிர் நீப்பின்வாழாக் கவரிமான்" என்பதை உணர்ந்து அம்மானத்தை இழந்து உயிரைக்காத்தல் இல்லையென்றும், மானத்தையே காத்தல் அவர்க்கு இயற்கை என்றும் அறிந்தேனென்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்வித மானமுடையாரை உலகோர் எவ்விதம் கொள்வர்?" என்றதும், ஆசிரியர் கூறலாயினர்.

970. இளிவரின் வாழாத மான முடையா
ரொளிதொழு தேத்து முலகு.

(பரி.) இ-ள். இளி வரின் வாழாத மானம் உடையார் ஒளி=தமக்கோரிழிவு வந்துழிப் பொறுத்து உயிர்வாழாது அதனைத்தீர்க்கு மானமுடையா



ரது புகழ்வடிவினை—தொழுது ஏத்தும் உலகு=எஞ்ஞான்றுந்தொழுது துதியாநிற்பர் உலகத்தார். எ-று.

"புலவர் பாடும் புகழுடையோர் விசும்பின்—வலவ னேவா வானவூர்தி யெய்துப" * வாகலின், இறக்கச்செலவு சொல்லவேண்டாவாயிற்று. இவை நான்கு பாட்டானும் மானப்பொருட்டாய உயிர்ப்பினது சிறப்புக் கூறப்பட்டது. (௰)

விளக்கம் :— தமக்கு எந்நாளும் ஓர் இழிவான செயல் வந்த காலத்து அவ்விழிவைப் பொறுத்துக்கொண்டு உயிர் வாழ முடி

யாதவராய் அவ்வுயிரினைப் போக்கிக் கொண்ட மானமென்னும் ஆபரணத்தைப் பூண்டவரது புகழ் என்னும் உருவத்தை உலகத்தார் எக்காலத்தும் வணங்கித் துதித்துக் கொண்டிருப்பர் என்று இத் திருக்குறள் கூறுகின்றது. இதனால், அவர் மானத்தின் பொருட்டு உயிரைப் போக்கிக் கொண்டு மானத்தைக் காத்துச் சென்றோரோ, அவருடைய உருவம் போய்விட்டாலும் அவர்க்குப்பின் நிலையாக நிற்கின்ற புகழ் என்னும் உருவத்தை உலகத்தவர் எக்காலத்தும் நினைத்தலோடு, அதையே மனத்தால் வணங்கி, வாக்கால் துதித்துக் கொண்டிருப்பார் என்று கூறுவதால், மானமுடையவர் இறந்தும் இறவாதாராய் உலகத்து இருப்பதுடன் மறுமைப் பயனாகிய துறக்கத்தையும் அடைவது திண்ணம் என்பது ஆயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய நான்கு திருக்குறள்களாலும் மானத்தின் பொருட்டு உயிரைப் போக்கிக் கொள்ளுகின்றவர்கள் சிறப்பினை அறிந்தோம். இனி, இன்னும் குடிப்பிறந்தார்க்கு உள்ள தன்மைகளையும் அறியவேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 98. அதிகாரம்.

---

### பெருமை.

(பரி.) அஃதாவது செயற்கரியசெய்தல், தருக்கின்மை, பிறர் குறை கூறாமை முதலிய நற்குணங்களாற் பெரியாரது தன்மை. இஃது மேன்மேலுயர்த்தற்பாலதாய வினை உளதாவது நிலையிற் றாழாமையுள் வழியாகலின், இது மானத்தின்பின் வைக்கப்பட்டது.

---

*புறநானூறு, 27.



விளக்கம் :—அதாவது, பெரிய தன்மை. பெரிய தன்மையாவது செய்தற்கு எளியவற்றை விட்டு அரியவற்றைச் செய்தல், கர்வமில்லாமை, பிறருடைய குற்றம் சொல்லாமை என்ற நற்குணங்கள் எவையோ அவைகளை எல்லாம் உடையோருடைய தன்மையேயாம். தம் நிலையினின்றும் எக்காலத்தும் தாழ்வ

புகழ் என்றும் கூறுகின்ற இரண்டு கருத்துகளுள் ஒருவன் தான் உள்ள காலத்துப் பிறர் அறியும்படி வாழ்வது ஒளியென்றும், இறந்த பிறகும் பலரால் எண்ணக் கூடிய அறம் முதலியவற்றால் அடைந்த பயன் புகழ் என்றும் மேலோர் கூறுகின்றனராதலால், இல்லறத்தானாகிய ஒருவன் தான் உள்ளகாலத்துப் பிறரால் அறியப்படும் ஒளியோடு கூடி வாழவேண்டுமானால், அவன் எக்காலத்தும் செய்வதற்கு அரிய செயல்களாகிய அறம் சொலக்கூடாத ஒப்புரவு, ஈகை முதலியவைகளை மேற்கொண்டு செய்தல் வேண்டுமென்றும், அவ்விதம் செய்து அதனாலாகிய பெருமையை அடைவதே ஒருவனுக்குப் பொலிவு என்றும், அப் பொலிவே எக்காலத்தும் அழியாத ஒளியென்றும் கூறினர். இவ்வித ஒளியும், புகழும் ஆகிய இரண்டினையும் பிரித்துக் காட்டும் தன்மையினை,

"உண்ணா னொளிநிறா னோங்கு புகழ்செய்யான்
றுன்னருங் கேளிர் துயர்களையான்—கொன்னே
வழங்கான் பொருள்காத் திருப்பானேல் அஆ
இழந்தானென் றெண்ணப்படும்."

என்னும் நாலடியார் செய்யுளாலும் அறிதல் கூடும். இங்கு இப்பெருமை உடையார் செயல் செயற்கரிய செய்தல் என்றதனும், மேல் நீத்தார் பெருமையினுள் நீத்தாருக்குக் கூறிய செயற்கரிய செயலையே மனத்தைப் புலன்கள் வழி செலுத்தாத பெருமையினின்றும் இது பிரித்துக் காட்டப்பட்டது என்று அறிந்தோம். ஆதலால், ஒத்த பிறப்பினராய மக்களுள் மனத்தைப் பொறி வழிச்செலுத்தாத பெரியோர் துறவிகளென்றும், ஒத்த பிறப்பினராய மக்களுள் தாம் நல்வழியில் தேடிய பொருளை இம்மைப் பயனின் பொருட்டுச் செலவழித்துப் புகழின் அடைகின்றவர் செயற்கரிய செய்கின்ற பெரியாரென்றும், அவ்வாறு செய்யாதும் தாமும் உண்ணாதும் பொருளைச் சேர்த்துவைத்து இழந்து போகின்றவர் சிறியரென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் பெருமையின் சிறப்பு இதுவென்று அறிந்



தோம். ஆயின் எல்லாரும் மக்கட் பிறப்பினராகவே காணப்படுகின்

ராதலால், பெருமை உடையார் சிறுமை உடையாரென்பதை எவ்விதம் அறிந்து கொள்ளுதல் கூடும்?" என்னும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**972. பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா**
**செய்தொழில் வேற்றுமை யான்.**

(பரி.) இ-ள். எல்லாவுயிர்க்கும் பிறப்பு ஒக்கும் = எல்லாமக்களுயிர்க்கும் பொதுவாகிய பிறப்பியல்பு ஒக்குமேயெனினும், — சிறப்பு ஒவ்வா செய்தொழில் வேற்றுமையான் = பெருமை சிறுமையெனப்பட்ட சிறப்பியல்புகளொவ்வா, அவைசெய்யுந் தொழில்களது வேறுபாட்டான். எ-று.

வேறுபாடு = நல்லனவும், தீயனவும், இரண்டுமாயினவும், இரண்டுமல்லவாயினவுமாய அளவிறந்த பாகுபாடுகள். வினைவயத்தாற் பஞ்சபூதபரிணாமமாகிய யாக்கையைப் பொருந்திநின்று அதன் பயனுபவித்தல் எல்லா வருணத்தார்க்குமொத்தலிற் 'பிறப்பொக்கும்' என்றும், பெருமைசிறுமைகட்குக் கட்டளைக்கல்லாகிய தொழிற்பாகுபாடுகள் வருணந்தோறும் யாக்கைதோறும் வேறுபடுதலிற் 'சிறப்பொவ்வா' என்றுங் கூறினார். (௨)

விளக்கம்:— எல்லா மக்களுக்கும் பிறப்பியல்பு பொதுவாக ஒத்திருந்தாலும், பெருமை, சிறுமை என்று சொல்லப்பட்ட சிறப்பு இயல்புகள் அம்மக்கள் செய்கின்ற தொழில்களது வேறுபாட்டினால் ஒவ்வா என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, எச்சாதியிற் பிறந்தவராயினும் ஐம்பூதச் சேர்க்கையாலாகிய தேகமானது ஒத்துக் காணப்படினும் அவர்களிடத்தே தோன்றுகின்ற நல்ல காரியங்களும், தீய காரியங்களும் ஆகிய இரண்டினாலேயே அவர்களுக்குப் பெருமையும், சிறுமையும் வருமே அன்றி, நற்குலத்தான் தீய செயல்களைச் செய்வானாயின் பெருமை வாராதென்றும், தாழ்ந்த குலத்தவன் தீயவை ஒழிந்து நல்லன செய்வானாயின் அவனுக்குச் சிறுமை வாராது பெருமையே வருமென்றும், உருவத்தால் ஒத்திருக்கின்ற மக்கட் பிறப்பினாலேயோ குலத்தினாலேயோ பெருமையும் சிறுமையும் உண்டாவதில்லை என்றும், அவரவருடைய தொழில்களுக்குத் தக்க அளவாகத்தான் பெருமையும் சிறுமையும் வரும் என்றும் எடுத்துக் காட்டியதாயிற்று என்றனர்.

அது கேட்ட மாணாக்கர், "அவரவர் செயல்களால் பெரியர் சிறியர் என்பதை அறிந்து கொள்ளுதல் கூடும் என்பதை அறிந்தோம். ஆயின், செல்வந்தராயிருப்போர் தீயன செய்வாராயின், அவரை உலகத்தோர் பெருமையாக மதிப்பரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்:

973. மேலிருந்து மேலல்லார் மேலல்லர் கீழிருந்துங்
கீழல்லார் கீழல் லவர்.

(பரி.) இ-ள். மேல் அல்லார் மேல் இருந்தும் மேல் அல்லர் = செயற்கரிய செய்கலாது சிறியாராயினார், உயர்ந்த அமளி முதலியவற்றின் மிசையிருந்தாராயினும் பெரியாராகார்; — கீழ் அல்லார் கீழ் இருந்தும் கீழ் அல்லார் = அவை செய்த பெரியாராயினார், தாழ்ந்த வறுநிலத்திருந்தாராயினும், சிறியாராகார். எ-று.

மேலிருத்தல் கீழிருத்தல்களாற் செல்வ நல்குரவுகளும், மேல் கீழ்களாற் பெருமை சிறுமைகளும், கருதப்பட்டன. இவை இரண்டுபாட்டானும் முறையே குடிமை மாத்திரத்தானும் செல்வமாத்திரத்தானும் அஃதாகாதாமை கூறப்பட்டது. (௩)

விளக்கம்:- மற்றவர்கள் செய்தற்கு முடியாத செயல்களைச் செய்யாத சிறியராயினோர் மிக உயர்வாகிய செல்வத்தோடு கூடி இருந்தாராயினும் உலகத்தார் அச்செல்வத்தரைப் பெருமை உடையவரென்று மதிக்கமாட்டாரென்றும், செய்தற்கு அருமையாகிய காரியங்களைச் செய்த பெருந்தன்மையை அடைந்தவர் மிகத் தரித்திரராய் இருந்தாலும் அவர்களை உலகோர் சிறியரென்று மதியாது பெருமை உடையவரென்றே மதிப்பரென்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. இதனால், உண்பன, உடுப்பன, உறங்குவன ஆகிய இவைகளில் எவ்வளவு மேம்பட்ட இன்பங்களை அடையக் கூடியவர்களாக இருந்தாலும், உலகத்தில் மற்றவர்களால் முடியாத இன்சொல், ஈகை ஆகிய நற்குணங்கள் இல்லாதவர்க்கு அவர் செல்

வம் ஒன்றினால் மாத்திரம் உலகத்தில் பெருமை கிடைக்காதென்றும், படிப்பதற்குப் பாயுமில்லாத வெறுநிலத்தில் படுக்கக் கூடிய அவ்வளவு ஏழ்மை உடையவராக இருந்தாலும், உலகத்தவரால் விரும்பக் கூடிய இனியசொல்லும், நகைக்குணமும் இருக்கு



மாயின் அவர்களைப் பலர் வறிஞர் என்று கருதி இகழாமல் செல்வந்தர்க்குக் கொடுக்கும் மேம்பட்ட பெருமையைக் கொடுப்பர் என்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இரண்டு திருக்குறள்களாலும் நல்குடியில் பிறத்தல் மாத்திரத்தாலும், செல்வத்தை உடையராய் இருத்தல் மாத்திரத்தாலும், ஒருவர்க்குப் பெருமை உண்டாகாது என்றும், அவர்களிடத்தே உள்ள நற்குணங்களால்தான் அது உண்டாகும் என்றும் அறிகிறோம். இனி, இவ்விதம் உலகத்துப் பெருமையை அடைய விரும்புவோர் எவ்வித நற்குணங்களோடு இருத்தல் வேண்டுமென்பதை ஓர் உவமை வாயிலாக விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

974. ஒருமை மகளிரே போலப் பெருமையுந்
தன்னைத்தான் கொண்டொழுகி னுண்டு.

(பரி.) இ-ள். ஒருமை மகளிரே போல = மாறாத மனத்தினையுடைய மகளிர் நிறையின் வழுவாமல் தம்மைத் தாம் காத்துக்கொண்டொழுகுமாறு போல,—பெருமையும் தன்னைத் தான் கொண்டு ஒழுகின் உண்டு = பெருமைக்குணமும், ஒருவன் நிறையின் வழுவாமல் தன்னைத் தான் காத்துக் கொண்டொழுகுவானாயின், அவன்கணுண்டாம். எ-று.

பொருளின்ஒழுகின் உவமையினும் வந்தது. கற்புண்டாதல் தோன்ற நின்றமையின், உம்மை எச்சவும்மை. ஒழுகுதல் = மனமொழிமெய்களை ஒடுக்கி ஒப்புரவு முதலிய செய்துபோதல். இதனால் அஃதுண்டாமாறு கூறப்பட்டது. (௪)

விளக்கம்:— வஞ்சகமில்லாத மனத்தினை உடைய பெண்கள் தம்முடைய கற்பினின்றும் வழுவாமல் தம்மைத் தாம் காத்துக்

ஈக இருந்த காலத்தில் மாத்திர மல்லாமல் வறுமைப்பட்ட காலத்தும் நல்ல செய்கைகள் என்று எண்ணி எடுத்தவையாகிய ஒப்புரவு, ஈகை முதலிய செயல்களைத் தாம் இறக்கும் வரையும் எடுத்த தொழில் முடியும் வரையும் செய்து முடிக்கும் வல்லமை உடையவராகவே இருப்பர் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பெருமையே பொருளென்று கொண்ட பெரியார்க்கு எவ்வித இடையூறு வரினும் தாமெண்ணிய நற்செயல்களைச் செய்ய வல்லவர் என்பதை அறிந்தோம். இனி, இவ்வித பெரிய





தகுதி உடையாரை உலகோர் ஏன் பின்பற்றுவதில்லை?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

976. சிறியா ருணர்ச்சியு ளில்லைப் பெரியாரைப்
பேணிக்கொள் வேமென்னு நோக்கு.

(பரி.) இ-ள். பெரியாரைப் பேணிக் கொள்வேம் என்னும் நோக்கு= அப்பெற்றியராய பெரியாரை வழிபட்டு அவரியல்பினை யாங் கொள்வேமென்னுங் கருத்து—சிறியார் உணர்ச்சியுள் இல்லை=மற்றைச் சிறியாரினுடைய உணர்ச்சிக்கண் உளதாகாது. எ-று.

குடிமை, செல்வம், கல்வியென்றிவற்றது உண்மை மாத்திரத்தால் தம்மை வியந்திருப்பார்க்கு அவை நமக்கியல்பென்று அமைந்திருப்பாரை வழிபட்டு அஃதுடையராதல் கூடாதென்பதாம். (௬)

விளக்கம் :—மேற் கூறிய வண்ணம் எடுத்த காரியத்தைச் செய்து முடிக்கும் பெருமை உடையவரை வழிபட்டு அவரது தகுதியை நாம் அடைவோம் என்னும் எண்ணமானது அப்பெருமையை அடையத் தகுதி அல்லாத ஏனைய சிறியவர்களுக்கு மனத்தினிடத்தே தோன்றுதல் இல்லை என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, தாம் பிறந்த குடிப்பிறப்பு, தாமடைந்த செல்வம், தமக்கு உள்ள கல்வி ஆகிய இவைகளே மிகப் பெருமை என்று தம்மைத்தாமே மதித்துக் கொள்ளுகின்ற இழிந்த குணமுடையோர்க்

குப் பிறர்க்கு நன்மையாகிய செயல்களையே செய்து வாழ்வதும் குடிமை, செல்வம், கல்வி ஆகிய இவைகளெல்லாம் பெருமையைத் தருவனவல்ல என்று பெருமையே பொருளாகக் கொண்ட பெரியோர்களை வழிப்பட்டு அவர் சொல்லும் வழி நின்று பெருமை அடைவதும் கூடாது. ஏனெனில்? தமக்குக் கிடைத்த குடிப் பிறப்பு, செல்வம், கல்விஆகிய இவைகளின் தகுதி ஒருவருக்கு அத் தன்மைச் சிறப்பினை உண்டாக்காது என்று அறியாமல் அவைகளை அதிகமாக எண்ணித் தம்மைத் தாமே மதித்துக் கொண்டு இருக் கின்ற கீழ் மக்களுக்கு அவர் மனத்தில் எக்காலத்தும் யான் என் கின்ற கர்வமே முதிர்ந்து நிற்குமாதலால், அவர்க்குப் பெருமையை அடையவேண்டும் என்கின்ற உணர்ச்சி அம்மனத்தினின் தோன்று வதற்கு இடமில்லை என்பது அறிந்தோம் என்றனர். அதுகேட்ட



மாணுக்கர், "இவ்விதம் பெருமையை அடைய விரும்பாத கீழ் மக்களது கல்வி முதலியவை என்னாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

977. இறப்பே புரிந்த தொழிற்றாஞ் சிறப்புந்தான்
சீரல் லவர்கட் படின்.

(பரி.) இ-ள். சிறப்புந் தானும் — தனக்கேற்கும் பெரியாரிடத்து அமைந்திருத்தலைச் செய்வதாய சிறப்புத்தானும்,—சீர் அல்லவர்கட் படின் = தனக்கேலாத சிறியாரிடத்துப் படுமாயின்,—இறப்பே புரிந்த தொழிற்றாம் = அதனையொழிந்து தருக்கின்கண்ணே மிக்க செயலையுடைத்தாம்.

தருக்கினை மிகச் செய்யுமென்பதாயிற்று. சிறப்பு = குடிமை, செல்வம், கல்விகளினுய மிகுதி. இவை யிரண்டு பாட்டானும் அஃதிலார் செய்தி கூறப் பட்டது. (எ)

விளக்கம்:—குடிமை, செல்வம், கல்வி ஆகிய இவைகளின் மிகு தியானது அவை இருக்கவேண்டிய பெரியாரிடத்து அமையாது இருக்கக் கூடாத சிறியாரிடத்து உண்டாகுமாயின், அச்சிறப்பா னது பெருமையினின்றும் நழிந்து கர்வத்தினையே மேற்கொண்டு

சிறுமையே செய்வர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. அது என்னைபோலெனின்! நற்குடித் தோற்ற முடையாரிடத்தே செல்வமும் கல்வியும் உண்டாகுமாயின், அச்செல்வத்திற்கும் கல்விக்கும் உண்டாகவேண்டிய பயன் யாவும் உண்டாகி அவற்றால் ஆகிய பெருமையை அடையுமென்றும், அவ்வாறு அல்லாது நற்குடித் தோற்றமில்லாதாரிடத்துச் செல்வமும் கல்வியும் உண்டாகுமாயின், அவற்றால் தாமும் பயனடையாது பிறர்க்கும் பயன்படுத்தாது தமக்குக் கிடைத்த அப்பொருட் செல்வம், கல்விச் செல்வம் ஆகிய இரண்டு செல்வங்களாலும் தம்மை அதிகமாக மதித்துக் கர்வமடைந்து தீயன செய்து தீய வழியில் செல்வார்களாதலால் கல்வியும், செல்வமும் அடையவேண்டிய பெரியோரிடத்து அடைந்தாலன்றி அவையும் பெருமை யடையாமற்போம் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "சிறியோர் தருக்கும்படி வாழ்வர் என்பதனுள் ஏனைய பெரியோராயினும் தருக்கின்றி இருப்பர்போலும்!" என்னலும், ஆசிரியர் உரைக்கலாயினர்.



978. பணியுமா மென்றும் பெருமை சிறுமை
அணியுமாந் தன்னை வியந்து.

(பரி.) இ-ள். பெருமை என்றும் பணியும்=பெருமையுடையார் அச்சிறப்புண்டாய ஞான்றும் தருக்கின்றி அமைந்தொழுகுவர்;—சிறுமை (என்றும்) தன்னை வியந்து அணியும்=மற்றைச் சிறுமையுடையார் அஃதில்லாத ஞான்றும் தம்மை வியந்து புனையாநிற்பர். எ-று.

பொருளின்றொழில்கள் பண்பின்மேலேற்றப்பட்டன. இஃது 'அற்றமறைக்கும் பெருமை'* என்புழிப் போலும். என்றுமென்பது பின்னும் வந்தியைந்தது. ஆமென்பன இரண்டும் அசை. புனைதல்=பிறரிற் றமக்கோர் மிகுதியை யேற்றிக்கோடல். இதற்கு உயர்ந்தார் தாழ்வார் தாழ்ந்தார் உயர்வார் இஃதொருவிரோத மிருந்தவாறென்னென உலகியலை வியந்து கூறிற்றாக்குவாரு முளர். (அ)

விளக்கம்:—பெருமையையே தமக்கு அணிகலமாகவுடைய பெரியோர் மேற்கூறிய சிறப்புக்களாய குடிமை, செல்வம், கல்வி முதலியவைகள் தமக்கு உண்டாயிய காலத்தும் கர்வமில்லாமல் வாழ்வார் என்றும், ஏனைய சிறியோராயவர் அவ்வித குடிமை, செல்வம், கல்வி முதலியவைகளைத் தாம் அடையாத காலத்தும் தம்மை அதிகமாக எண்ணிக் கர்வித்து நிற்பர் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. அதாவது, அளவிறந்த செல்வங்களும் அளவிறந்த கல்வியும் முன் நல்வினைப் பயனால் பெருமையையுடையவர்கள் அடைவார்களாயின் 'இவை நமக்கு நல்வினைப்பயனால் வந்தன; இனி இவற்றைக் கொண்டு உலகோர்க்கும் பயன்படச் செய்தல்வேண்டும்' என்று எண்ணியவராய் யாவர்க்கும் பயன்படுத்துங் காலத்தும் யாதொரு கர்வமுமில்லாமல் பணிவுடன் வாழ்வர் என்றும், ஏனைய பெருமையில்லாத சிறுமையையே மேற்கொண்ட குடியிற் பிறந்தார் தமக்கு மேற்கூறிய கர்வத்தைத் தரக்கூடிய செல்வங்களெல்லாம் இல்லாதிருந்தும் மிக்கதோர் கர்வத்தைக்கொண்டு பணிவோடு இராது தம்மைத் தாமே அதிகமாக மதித்து உலகில் வாழ்வர் என்றும் அறிகிறோம். ஆதலால், பெருமையுடையார் எக்காலத்தும் பணிவுடையராவர் என்றும், அவரல்லாதாராகிய சிறுமையுடையார் எக்காலத்தும் கர்வத்தோடு வாழ்வர் என்றும் அறிகிறோம் என்றனர். அது கேட்ட

* திருக்குறள், 980.



மாணாக்கர், "இவ்விதமாயின் பெருமையுடையார்க்குக் குணம் இது வென்றும், சிறுமையுடையார்க்குக் குணம் இதுவென்றும் ஆகிய இரண்டனையும் தொகுத்துச் சொல்லுதல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்...

979. பெருமை பெருமித மின்மை சிறுமை
பெருமித மூர்ந்து விடல்.

(பரி.) இ-ள். பெருமை பெருமிதம் இன்மை = பெருமைக்குணமாவது காரணமுண்டாயவழியும் அஃதியல்பாதலைநோக்கிச் செருக்கின்றியிருத்தல்;— சிறுமை பெருமிதம் ஊர்ந்து விடல் = சிறுமைக்குணமாவது அஃதில்வழியும்

அதனை வெற்றிக்கொண்டு தருக்கின்முடிவின்கண்ணே நின்றுவிடுதல். ம-று. அளவறத்தருக்குதலென்பதாயிற்று. விடுமென்று பாடமோதுவாருமுளர்; முற்றுத்தொடரும் எழுவாய்த்தொடரும் தம்முளியையாமையின், அது பாடமன்மை யுணர்க. (௯)

விளக்கம்:—பெரியோர்க்குள்ள பெருமைக்குணம் என்பது கர்வத்தை உண்டாக்கக்கூடிய நற்குடிப் பிறப்பு, செல்வம், கல்வி இவைவெல்லாம் இருந்தும் கர்வமில்லாது வாழ்வது என்றும், சிறியோர்க்கு உள்ள குணம் கர்வத்தை உண்டாக்கக்கூடிய மேற்சொல்லிய காரணங்களெல்லாம் இல்லாதிருந்தும் கர்வத்தின் உச்சியில் நின்று விடுதல் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், நீங்கள் வினவியபடி எல்லாச் செல்வங்களும் அடைந்தாலும், 'இச்செல்வங்களெல்லாம் இயற்கையாகவே உண்டாவனவும் போய் விடுவனவுமாகும்' என்று எண்ணிப் பெரியோர் கர்வத்தை அடைய மாட்டார் என்றும், கர்வத்தை உண்டாக்கக்கூடிய ஒரு காரணமும் தமக்கு இல்லாதிருந்தும் சிறியோராயினர் எல்லாச் செல்வங்களும் தமக்கு இருப்பதுபோல் தம்மை மதித்து, இனி இல்லை என்கின்ற கர்வத்தின் முடிவில் நின்று விடுவார்களென்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் பெருமையுடையார்க்கும் சிறுமையுடையார்க்கும் உள்ள குணங்களை அறிந்தோம். ஆயின் இப்பெருமையுடையார் பிறரைப் பற்றிக் கூறுங்காலத்து எவ்விதம் கூறுவர் என்பதையும், சிறுமையுடையார் பிறரைப்பற்றிக்



கூறுங்காலத்து எவ்விதம் கூறுவர் என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

980. அற்றம் மறைக்கும் பெருமை சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

(பரி.) இ-ள். பெருமை அற்றம் மறைக்கும்=பெருமையுடையார் பிறர் மானத்தையே கூறி அவமானத்தை மறையாநிற்பர்;—சிறுமை குற்றமே கூறி

விடும் = மற்றைச் சிறுமையுடையார் பிறர் குணத்தை மறைத்துக் குற்றத்தையே கூறிவிடுவர். எ-று.

மறைத்தலும் கூறலும் வினைப்பட்டு அமைந்தன. அற்றம் — ஆகுபெயர். தானென்பது அசை. இவை மூன்றுபாட்டானும் இருவர் செயலும் ஒருங்கு கூறப்பட்டன. (௰)

விளக்கம்:—பெருமையுடையவர் பிறரைக் குறித்துச் சொல்லுங்காலத்து அவர்க்கு உள்ள பெருமைகளையே எடுத்துச் சொல்லி அவர்க்கு இருக்கும் பெருமையல்லாத விஷயங்களை மறைத்து விடுவர் என்றும், மற்றைச் சிறுமையுடையார் பிறரைப் பற்றிக் கூறுங்காலத்து அவர்க்கு உள்ள நல்ல குணங்களை எல்லாம் மறைத்து விட்டுக் குற்றங்களையே கூறுவர் என்றும் இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், பெருமையுடையார் பிறர்க்குள்ள பெருமையையே பேசி அவர்க்குள்ள சிறுமையை மறைத்துத் தாமும் பெருமையடைவதுடன் பிறரையும் பெருமையடையச் செய்வர் என்றும், அவ்விதம் அல்லாத கீழ்மக்களாகிய சிறியவர் மற்றவர்களுக்கு நல்ல குணங்களிருப்பினும் அவைகளை எல்லாம் சொல்லாமல் மறைத்து விட்டு ஏதேனும் ஓர் சிறு குற்றம் இருக்குமாயின் அதனையே பொருளாகக் கொண்டு யார்க்கும் பரக்கக்கூறித் தாமும் பெருமையடையாது அவரையும் பெருமையடையாமல் செய்து விடுவர் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மேற் கூறிய மூன்று திருக்குறள்களானும் பெருமையுடையார்க்கும் சிறுமையுடையார்க்கும் சேரும் குணங்களும், குற்றங்களும் இவையென நன்கு அறிந்தோம். இனி, இவ்வித பெருமை உடையார்க்கு உண்டாகும் பல குணங்களையும் எடுத்துக் கூறல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 99. அதிகாரம்.

---

## சான்றாண்மை.

(பரி.) அஃதாவது பலகுணங்களாலு நிறைந்து அவற்றை யாடற்றன்மை. பல குணங்களாலுமென்பது சாலுதற் றொழிலாற் பெறப்படுதலின், அவற்றை யென்பது வருவிக்கப்பட்டது. பெருமையு ளடங்காத குணங்கள் பலவற்றையுந் தொகுத்துக்கொண்டு நிற்றலின், இஃததன்பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது, எல்லாக் குணங்களும் நிறையப்பெற்று அக்குணங்களைப் பயன்படுத்தும் தன்மை. பெருமை என்னும் அதிகாரத்தில் சொல்லாத குணங்களெல்லாவற்றையும் தொகுத்து இதனுள் கூறுவதால் சான்றாண்மை என்னும் இவ்வதிகாரம் பெருமை என்னும் அதிகாரத்துக்குப் பிறகு வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சான்றாண்மை என்பதும் ஒன்று உள்ளதோ ஐயா! அதனை விளக்கல்வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

981. கடனென்ப நல்லவை யெல்லாங் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

(பரி.) இ-ள். கடன் அறிந்து சான்றாண்மை மேற்கொள்பவர்க்கு = நமக்குத் தகுவது இதுவென்றறிந்து சான்றாண்மையை மேற்கொண்டொழுகுவார்க்கு—நல்லவை எல்லாம் கடன் என்ப = நல்லனவாய குணங்களெல்லாம் இயல்பாயிருக்குமென்று சொல்லுவர் நூலோர். எ-று.

அக்குணங்க ளில்லாவழியும் உள்ளன செய்துகொண்டனவாயவழியுஞ் சான்றாண்மையென்னுஞ் சொற்பொருள் கூடாமையின், நூலோர் இவ் வேதுப்பெயர்பற்றி அவரிலக்கணம் இவ்வாறு கூறுவரென்பதாம். (க)

விளக்கம்:—நாம் செய்யவேண்டிய காரியம் இதுவென்று தெரிந்து சான்றாண்மை என்பதை மேற்கொண்டு இவ்வுலகத்தில் நடப்பாரிடத்து நன்மையாகிய குணங்களெல்லாம் இயல்பாகவே அமைந்து இருக்கும் என்று நூல் வல்லவர் சொல்லுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், நூல் வல்லவரெல்லாம் சான்

ரோருடைய இலக்கணத்தைச் சொல்லுங் காலத்து நல்ல குணங்களை யெல்லாம் தம்மிடத்து இயல்பாகவே அடைந்துள்ளவர் சான்றோரென்றும், அங்ஙிதச் சான்றோர் தமக்குத் தகுந்தனவாகிய நல்ல செயல்களையே மேற்கொண்டு ஒழுகுவார் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், " ஆனால் இங்ஙிதச் சான்றோர்க்குக் குண நலம் ஒன்றே அமையும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

982. குணநலஞ் சான்றோர் நலனே பிறநல
மெந்நலத் துள்ளதூஉ மன்று.

(பரி.) இ-ள். சான்றோர் நலன் குணநலமே = சான்றோர் நலமாவது குணங்களாலாய நலமே;—பிற நலம் எந்நலத்துள்ளதூஉம் அன்று = அஃதொழிந்த உறுப்புக்களாலாய நலம் ஒருநலத்தினும் உள்ளதன்று. எ-று.

அகநலத்தை முன்னே பிரித்தமையின் ஏனைப்புறநலத்தைப் 'பிறநலம்' என்றும், அது குடிப்பிறப்பும் கல்வியு முதலாக நூலோரெடுத்த எண்ணுட் புகுதாமையின் 'எந்நலத்துள்ளதூஉமன்று' என்றும் கூறினார். இவை இரண்டு பாட்டானும் சால்பிற்கேற்ற குணங்கள் பொதுவகையாற் கூறப்பட்டன. (௨)

விளக்கம்:—சான்றோர்க்கு உள்ளனவாகிய நலங்களெல்லாம் குணங்களாலாகிய நலமே என்றும், அக்குணநலமொழிந்த ஏனைய உறுப்புக்களாலாகிய நலம் மற்றைய நலங்கள் எவையினும் சேர்ந்தது அன்றென்றும் இத்திருக்குறள் எடுத்துக் கூறுகின்றது. இதனால் ஒருவனுக்குக் குணத்தால் உண்டாகின்ற அழகே அழகுடைமை என்றும், ஏனைய கை கால் முதலிய உறுப்புக்களில் அமைந்துள்ள அழகுகள் அத்துணை அழகுடையனவல்லவென்றும், அவ்வுறுப்புக்களில் அமைந்த அழகினையும் நூல் வல்லவர்கள் மற்றை அழகுகளாகிய கல்வி, குடிப்பிறப்பு முதலியவைகளில் ஒன்றாக எண்ணாமையால், குணநலம் ஒன்றே சான்றோர் என்று கூறுவார்க்கு அமையும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், " இங்ஙிதம் சான்றோர்க்கு உள்ள குணங்களின் பிரிவினை இவை என்று எடுத்துக் கூறல் வேண்

டு" என்னவும், ஆசிரியர் கூறலாயினர்.



**983. அன்புநா ணொப்புர வுகண்ணோட்டம் வாய்மையொ
டைந்துசால் பூன்றிய தூண்.**

(பரி.) இ-ள். அன்பு=சுற்றத்தார்மேலே யன்றிப் பிறர்மேலு முளதாய வன்பும்—நாண்=பழிபாவங்களி னாணுதலும்—ஒப்புரவு=யாவர்மாட்டு மொப்புரவுசெய்தலும்—கண்ணோட்டம்=பழையார்மேற்கண்ணோடலும்—வாய்மை=எவ்விடத்தும் மெய்ம்மை கூறலுமென—சால்பு ஊன்றிய தூண் ஐந்து=சால்பென்னும் பாரத்தைத் தாங்கிய தூண்க ளைந்து, எ-று.

ஒடு முன்னவற்றோடுங் கூடிற்று. இக்குணங்க ளில்வழிச் சால்பு நிலைபெறாமையின், இவற்றைத் 'தூண்' என்றார். ஏகதேச வுருவகம். (௩)

விளக்கம்:—சுற்றத்தவர்கள்மேல் உள்ள அன்பே யல்லாமல் மற்றவர்கள்மீது உண்டாகும் அன்பும், பழிபாவங்களுக்கு நாணுகின்ற நாணமும், எவர்க்கும் உபகாரம் செய்தல் என்னும் ஒப்புரவு செய்தலும், பழைமையாக அறிந்தவர்கள் மீது தாட்சணியமும், எக்காலத்தும் யாரிடத்தும் உண்மை கூறுதல் என்னும் உண்மையும் ஆகிய ஐந்தும் சால்பு என்னும் பெரியதோர் பாரத்தைத் தாங்குகின்ற ஐந்து தூண்கள் என்று இத்திருக்குறள் கூறுவதால், இவ்வைந்து குணங்களும் இல்லாதவழிச் சால்பாகாதென்றும், இச்சால்பினை மேற்கொண்டு சான்றோர் எனப் பெயர் வகிக்க விரும்புவார் இவ்வைந்தையும் உடையவரா யிருத்தல் வேண்டும் என்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் கூறிய ஐந்து குணங்கள் இருத்தலோடு இன்னும் ஏதேனும் முதன்மையாகிய குணம் சால்புடையார்க்கு இருத்தல்வேண்டுமோ ?" என்னவும், ஆசிரியர் கூறலாயினர்.

**984. கொல்லா நலத்தது நோன்மை பிறர்தீமை
சொல்லா நலத்தது சால்பு.**

(பரி.) இ-ள். நோன்மை கொல்லா நலத்தது=பிறவுயிர்களும் வேண்டு

யாயினுந் தவம் ஒருயிரையுங் கொல்லாத வறத்தின்கண்ணதாம்;—சால்பு பிறர் தீமை சொல்லா நலத்தது=அதுபோலப் பிறகுணங்களும் வேண்டுமேயா யினுஞ் சால்பு பிறர்குற்றத்தைச் சொல்லாத குணத்தின்கண்ணதாம். எ-று.

81



நலமென்னும் ஆகுபெயர்ப்பொருளிரண்டனையுந் தலைமை தோன்ற இவ்விரண்டற்கு மதிகாரமாக்கிக் கூறினார். தவத்திற்குக் கொல்லாமைபோலச் சால்பிற்கும் பிறர்குற்றஞ் சொல்லாக்குணஞ் சிறந்ததென்பதாம்.

விளக்கம்:—பிற அறங்களும் ஒருவன் செய்ய வேண்டுமாயினும் யாதொரு உயிரையும் கொல்லாத தவம் என்பது ஒன்றைச் செய்வது எவ்விதம் மேலாகிய அறமாக உள்ளதோ அதுபோலச் சால்புடையார்க்கு எல்லாக் குணங்களும் இருக்கவேண்டுமாயினும் பிறர் குற்றத்தை எடுத்துச் சொல்லா திருத்தலே நற்குணம் என்று சொல்லப்படுவது என்று இத்திருகுறள் கூறுகின்றது. இதனால், தவம் செய்யும் துறவி ஒருவனுக்குக் கொல்லா அறம் எவ்வளவு சிறந்ததோ அதுபோலச் சால்புடையான் என்பானுக்கு அயலவர் குற்றத்தை எடுத்துச் சொல்லாதிருத்தலே நற்குணம் என்று அறிக் தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "சால்புடையார்க்குப் பகைவர் தோன்றுவாராயின் அச்சால்புடையார் தம் பகைவரை ஒழிப்பதற்கு நற்குணங்களே போதுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

985. ஆற்றுவா ராற்றல் பணித லதுசான்றோர்
மாற்றாரை மாற்றும் படை.

(ப-ரை.) இ-ள். ஆற்றுவார் ஆற்றல் பணிதல்=ஒருகருமத்தைச் செய்து முடிப்பாரதாற்றலாவது அதற்குத் துணையாவாரைத் தாழ்ந்து கூட்டிக்கொள்ளுதல்;—சான்றோர் மாற்றாரை மாற்றும் படை அது=இனிச் சால்புடையார் தம்பகைவரைப் பகைமையொழிக்குங் கருவியும் அது. எ-று.

ஆற்றல்=அது வல்லாரத்தன்மை. இறந்ததுதழீஇய வெச்சவும்மை விகா

ரத்தாற் சொல்கது. சால்பிற்கேற்ற பணிதற்குணத்தது சிறப்புக்கூறுவார், வினையது முடன்கூறினர். (௫)

விளக்கம் :—உலகத்து ஒரு தொழிலைச் செய்து முடிக்க எண்ணியவர்கள் எவ்வாறு அத்தொழிலை முடிப்பதற்குத் துணையாக இருப்பவனை வணங்கித் தம்மோடு சேர்த்துக்கொள்ளுவரோ அது போல சால்புடையார் என்பாரும் தமக்குப் பகைவர் நேருமாயின் அப்பகைவரது பகைமையை ஒழிப்பதற்குத் தமக்குக் கருவி



யாகக் கொள்ளுவதும் அப்பணிவுடைமையேயாகும் என்று இத் திருக்குறள் கூறுவதால், சால்புடையார் தமக்குள்ள எல்லா நற் குணங்களோடும் யாவரிடத்தும் தாழ்ந்து நிற்கின்ற பணிவுடைய குணத்தோடு கூடியிருத்தல் வேண்டும். அவ்வித பணிவாகிய நற்குணத்தைக்கொண்ட சால்புடையார் தம் நட்பினரிடத்து மாத்திரமல்லாமல் பகைவரிடத்தும் பகையொழித்து சிறப்பை அடைதல் கூடும் என்று அறிக்கோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், “சால்புடையார் பணிவுடைமை என்பதைத் தமக்குச் சமானமானவர்களிடத்தில் தான் கொள்ளுவரோ அல்லது யாவ ரிடத்தும் கொள்ளுவரோ?” என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

986. சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி
துலையல்லார் கண்ணுங் கொளல்.

(பரி.) இ-ள் சால்பிற்குக் கட்டளை யாதெனின்=சால்பாகிய பொன்னினை அறிதற்கு உரைகல்லாகிய செயல் யாதெனின்,—தோல்வி துலை அல்லார்கண்ணும் கொளல்=அது தம்மின் உயர்ந்தார் மாட்டுக்கொள்ளுந் தோல்வியை இழிந்தார்மாட்டுங் கோடல், எ-று.

துலை=ஒப்பு. எச்சவும்மையான் இழிந்தார்கண்ணும் வேண்டுதல் பெற்றும். கொள்ளுதல்=வெல்லுமாற்ற லுடையராயிருந்தே ஏற்றுக்கொள்ளுதல். இழிந்தாரை வெல்லுதல்கருதித் தம்மோடொப்பித்துக்கொள்ளாது தோல்வியான் அவரின் உயர்வாராயின், அதனாற் சால்பளவறியப்படுமென்பதாம்.

விளக்கம்:—சால்பு என்று சொல்லப்படும் பொன்னினுடைய அளவினை அறிய வேண்டுமாயின், அப்பொன்னினை உரைத்துத் தெரிந்துகொள்வதற்குக் கல்லாக இருப்பது தம்மினும் உயர்ந்தவர்களிடத்து மாத்திரம் அல்லாது இழிந்தவர்களிடத்தும் தோல்வியைக் கொள்ளுதல் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், சால்புடைமையை விரும்புவோர் தம்மினும் உயர்ந்தவரிடத்தும் தமக்குச் சமானமானவரிடத்தும் பணிவோடு இருப்பது மாத்திரம் அல்லாமல், தம்மால் வெல்லக்கூடியவராய் உள்ள இழிந்தவரிடத்தும் அவர்களை வெல்லக் கருதி அவர்களைத், தம்மோடு சமானமாக வைத்துக் கொள்ளாது தாழ்ந்துவிடுதல் என்



னும் தோல்வியால் அவரினும் உயர்ந்து நிற்பது சால்புடைமை உடையார் என்று அறிவதற்குக் குறியாகவுள்ளது என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சான்றாண்மை உடையார் தம் பணிவுடைமையை யாவரிடத்தும் செலுத்தித்தாம் உயர்வினை அடைவர் என்று அறிந்தோம். ஆயின் தமக்கு யாதொரு துன்பமும் செய்யாதவரிடத்து இவ்விதப் பணிவினைக் கொள்ளுவது இயல்பே ஆகும்; அவ்விதமல்லாது தமக்குத் துன்பம் செய்தவரிடத்தும் தம் நற்குணங்களைச் சான்றோர் காட்டுதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

987. இன்னாசெய் தார்க்கு மினியவே செய்யாக்கா
லென்ன பயத்ததோ சால்பு.

(பரி.) இ-ள். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்யாக்கால் = தமக்கு இன்னாதவற்றைச் செய்தார்க்குஞ் சால்புடையார் இனியவற்றைச் செய்யாராயின்;—சால்பு என்ன பயத்தது = அச்சால்பு வேறென்ன பயனை யுடைத்து.

சிறப்பும்மை அவர் இன்னாசெய்தற்கிடனாதல் விளக்கி நின்றது. ஓகாரம் அசை. வினா எதிர்மறைப்பொருட்டு. தாமும் இன்னாசெய்வாராயின், சால்பா

(பரி). இ-ள். சால்பு என்னும் திண்மை உண்டாகப் பெறின்=சால் பென்று சொல்லப்படும் வலியுண்டாகப்பெறின்,—ஒருவற்கு இன்மை இளிவு அன்று=ஒருவனுக்கு நல்குரவு இளிவாகாது. ஏ-து.

தளராமைகாட்டுதலின், வலியாயிற்று. இன்மையான் வருந்தின் திண் மையாகாமை உபசரித்துக்கூறினார். சால்புடையார் நல்குரவுற்றவழியும் மேம்படு தலுடைய ரென்பதாம். (அ)

விளக்கம்:—சான்றாண்மை என்று சொல்லப்படும் வலிமை நன்று மாத்திரம் ஒருவனுக்கு உண்டாகுமாயின் அவ்வித வலிவு டையான் ஒருவனுக்கு அவனடைந்த தரித்திரம் இழிவினைச் செய்யாது என்று இத்திருக்குறள் கூறுவதால், சால்புடைமை யையே தமக்குப் பெரியதோர் காப வலிமையாகக் கொண்ட பெரி யோர் தரித்திரத்தால் வரும் உணவின்மை, உடையின்மை ஆகிய துன்பங்களுக்கு அஞ்சார் என்றும், தம்மை நிலையை நல்வழி யிலேயே செலுத்துவார் என்றும் *அறிவதுடன், இவ்விதம் நல்ல வழியில் நடப்பவரைத் தரித்திரத்தை உலகோர் இழிவாகக் கரு தார் என்றும், இதற்குக் குசேல முனிவரையே சான்றாகக் கொள்ளு தல்வேண்டும் என்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்



கர், "இவ்வித சான்றாண்மை உடையார் தரித்திரம் வந்த காலத்துந் தம் நிலையினின்றும் மாறுபட மாட்டார் என்பது அறிகிறோம். ஆயின், தம்மைத் தாம் தாங்கிக் கொள்ளக் கூடாத பெரியதோர் துன்பம்வந்த காலத்து இச்சான்றாண்மை உடையார் தம் நிலையி னின்றும் மாறுபடமாட்டாரோ?" என்னவும், ஆசிரியர் கூறலா ராயினர்.

989. ஊழி பெயரினுந் தாம்பெயரார் சான்றாண்மைக்
காழி யெனப்படு வார்.

(பரி.) இ-ள். சான்றாண்மைக்கு ஆழியெனப்படுவார்=சால்புடைமையா

ப கடற்குக் கரையென்று சொல்லப்படுவார்,—ஊழி பெயரினும் தாம்பெயரார்=ஏனைக்கடலுங் கரையுள்நில்லாமற் காலந்திரிந்தாலும், தாந்திரியார். எ-று.

சான்றாண்மையது பெருமைநோக்கி அதனைக் கடலாக்கியும், அதனைத் தாங்கிக்கொண்டு நிற்றலின் அஃதுடையாரைக் கரையாக்கியும் கூறினார். "பெருங்கடற் காழியனையன் மாதோ"* என்றார் பிறரும். ஏகதேசவுருவகம்.

விளக்கம்:—சால்புடைமை என்று சொல்லப் படுகின்ற சமுத்திரத்திற்குக் கரை என்று சொல்லக் கூடியவர் எவரோ அவர் தம் சால்புடைமையால், அச்சால்புடைமைக்கு அன்னியமாகிய மற்றைக் கடலெல்லாம் தம் கரை கடந்து மேலே எழுந்து உலகம் அழியும்படி மாறுபட்டு வந்தாலும், அப்போதும் மாறுபடார் என்று இத்திருக்குறள் கூறுவதால், சால்புடையார் கரையையுடைய கடலுங் கரை கடந்தாலும் தம் சால்பென்னும் கடலின் கரையைப் புரளவிடார் என்று அறிகிறோம். இதற்கு அரிச்சந்திரன் தன் மனைவியையும் மைந்தனையும் இழந்த காலத்தும், தான் கொண்ட வாய்மையினின்றும் பிறழாது இருந்தது சான்றாகும் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இச்சால்புடையார் எக்காலத்தும் தம் சால்புடைமையினின்றும் மாறுபடார் என்பதை அறிகிறோம். ஆயின், அங்ஙனம் சால்புடையார் மாறுபடுவாராயின் அதனால் என்னாகும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

---

* புறநானூறு, 330.



990. சான்றவர் சான்றாண்மை குன்றி னிருநிலந்தான்
றாங்காது மன்னோ பொறை.

(பரி.) இ-ள். சான்றவர் சான்றாண்மை குன்றின்=பலகுணங்களாலும் நிறைந்தவர் தந்தன்மை குன்றுவாராயின்,—இருநிலந்தான் பொறை தாங்காது=மற்றை இருநிலந்தானுந் தன்பொறையைத் தாங்காதாய் முடியும்.

தானுமென்னும் மெச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. அவர்க்கது குன்றாமையும் அதற்கது தாங்கலும் இயல்பாகலான், ஒன்றை யொன்றின்று முன

லாகா வென்பது தோன்ற நின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. ஓகாரம் அசை. இதற்கு இருநிலம் பொறைதாங்குவது சான்றவர் தம்மை யாவெருதலான் ஆதலும் அது தாங்கலாற்றாதென் றுரைப்பாருமுளர். இவை மூன்று பாட்டானும் அவரது இன்றியமையாச் சிறப்புக் கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—பல குணங்களாலும் நிறைந்த சால்புடையார் என்போர் ஏதேனும் வழுவியால் பிறழ எண்ணுவாரானால், எல்லாவற்றையும் பொறுக்கும் இப்பெரிய பூமியானது தன்னுடைய பாரத்தைத் தாங்காததாய்க் கெட்டுப்போம் என்று இத்திருக்குறள் கூறுவதால், சால்புடையார் என்பார் ஒரு காலத்தும் தம் சால்புடைமையினின்றும் குறைவது இல்லை என்றும், தமக்குச் சால்புடைமையையே பெரிய பாரமாகத் தாங்குவது இயல்பென்றும், அவ்விதம் இயல்பாகவுள்ள சான்றாண்மை உடைய பெரியோர் ஏதேனும் ஒரு காரியத்தைச் செய்து விடுவாராயின் எல்லாப் பளுவையும் தாங்கி நிற்பதும் தன்னை வெட்டுகின்றவனையும் தாங்கி நிற்பதுமாகிய பூமியும் தன்மீது உள்ள பாரத்தைத் தாங்காது உலகம் அழிய ஏதுவாகும் என்றும் அறிகின்றோம். ஆதலால் சான்றாண்மைக்கு அணிகலமாகவுள்ள பெரியோர் எக்காலத்தும் தம் இயற்கையினின்றும் மாறுபடார் என்று இப்பூமியின் உவமையால் அறிந்தோம். அதுவன்றியும், மேற்கூறிய மூன்று திருக்குறள்களாலும் அச்சான்றாண்மை நிறைந்தவரது சிறப்பினை அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதச் சான்றோர் எல்லோரிடத்தும் தம் சான்றாண்மையை நிலைநிறுத்த வேண்டுமாயின், அவர் எவ்விதம் ஒழுகுதல்வேண்டும் என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---



## 100. அதிகாரம்.

---

(பரி.) அஃதாவது பெருமை சான்றாண்மைகளின் வழுவாது நின்றே எல்லாரியல்புகளு மறிந்தொத்தொழுகுதல்; "பண்பெனப்படுவது பாடறிந் தொழுகல்"* என்றார் பிறரும். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது, பெருமை சான்றாண்மை என்னும் இவைகளில் தாம் சிறிதும் குற்றப்படாது இருந்து கொண்டே உலகத்திலுள்ள எல்லோருடைய இயற்கையையும் அறிந்து அவர்களோடு அவரவர்க்குத் தக்கவிதமாக ஒழுகி வருதல் என்று அறிகின்றோம். இவ்விதம் பெருமை சான்றாண்மை ஆகிய இரண்டையும் உடையவரே அவ்விதம் ஒழுகுதல் கூடுமாதலால், அவ்விரண்டு அதிகாரங்களுக்குப் பிறகு இப்பண்புடைமை என்னும் அதிகாரத்தை வைத்தனர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நாங்கள் மேல் வினவியபடி உலகத்தோடு ஒத்து ஒழுகுகின்ற சால்புடையார் பண்பினை இவ்வதிகாரம் ஆரம்பிப்பதால் இதனை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

991. எண்பதத்தா லெய்த லெளிதென்ப யார்மாட்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

(பரி.) இ-ள். யார்மாட்டும் எண்பதத்தால் = யாவர்மாட்டுமெளிய செவ்வியராதலால்—பண்புடைமை என்னும் வழக்கு எய்தல் எளிது என்ப = அரிதாய பண்புடைமையென்னும் நன்னெறியினை யெய்துதல் எளிதென்று சொல்லுவர் நூலோர். எ-று.

குணங்களானிறைந்த செவ்விபெறுமாயக்காற் பண்புடைமை தானே உளதாமாகலின், 'எண்பதத்தாலெய்தலெளிது' என்றும், அஃதுலகத்தை யெல்லாம் வசீகரித்தற்பயத்ததாகலின் அதனைத் தொல்லோர்சென்ற நன்னெறியாக்கியும், அதனையெளிதினெய்துதற்கு இது நூலோர்கூறிய வழியென்பார் அவர்மேல் வைத்துங் கூறினார். (க)

---

* கலி, நெய்தல், 16.

விளக்கம்:—உலகத்து உள்ள எவரிடத்தும் மிக எளிய காட்சியுடையாராய் இருப்பது ஒன்றே உலகத்தை எல்லாம் அறிந்து ஒத்து ஒழுகுகின்ற மிக அருமையுடைய பண்புடைமை என்னும் நல்வழியினை அடைவதற்கு எளிமையாகிய வழி என்று நூல் வல்லவர் சொல்லுவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆதலால், மேல் அதிகாரங்களுள் சொல்லிய நற்குணங்களெல்லாம் நிறையப் பெற்றுத் தம்மைப் பார்ப்போர்க்கும் அரியராக இல்லாமல் மிக எளியராய் அவரவர் காலத்தில் காணக்கூடியவராயும் இருப்பாராயின், அவ்வித தகுதியுடையார் எல்லோருடைய இயற்கைகளையும் அறிந்து அவரவர்க்குத் தக்க விதமாக ஒழுகுதல் கூடும் என்று அறிகின்றோம். எவ்வெனின்? இவ்விதம் யார்க்கும் சுலபமாகக் காணக் கூடியவராய் இருப்பாராயின், அவ்வொழுக்கத்தைக் கண்ட உலகோர், "இவர் நமக்குச் சுலபமாகக் கிடைக்கக் கூடியவர்; பெரிய தகுதிகளெல்லாம் வாய்ந்த இவர் நமக்கு இவ்வளவு சுலபமாகக் கிடைப்பதுடன் நன்னெறிகளை யெல்லாம் போதிக்கின்றாராதலால் இவர் வழியே செல்லுதல் வேண்டும்" என்று யாவரும் தம்மை யடைவார் என்றும், அவ்விதம் தம்மை யாவரும் அடையும்படிச் செய்யும் வசியமாவது யார்க்கும் சுலபமாகக் காணப் படுபவராய் உள்ளது ஆதலால் இவ்வித வுபாயமே பெரியதோர் உபாயமென்றும், இதுவே பெரியோரெல்லாம் சென்ற நல்வழி என்றும், நூல் வல்லவர்களெல்லாம் சொல்லிய உபாயம் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் யார்க்கும் அவரவர் நினைத்த காலத்துச் சென்று கிடைக்கக்கூடியவராய் இருப்பதாலேயே பண்புடைமை என்னும் பெரிய தகுதியை அடைந்து விடுதல் கூடும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

992. அன்புடைமை யான்ற குடிப்பிறத்த லிவ்விரண்டும்
பண்புடைமை யென்னும் வழக்கு.

(பரி.) இ-ள். அன்புடைமை ஆன்ற குடிப் பிறத்தல் இவ்விரண்டும்= பிறர்மே லன்புடையனாதலும் உலகத்தோடமைந்த குடியின்கட்பிறத்தலு மாகிய இவ்விரண்டும்—பண்புடைமை என்னும் வழக்கு=ஒருவனுக்குப்

பண்புடைமையென்று உலகத்தார் சொல்லும் நன்னெறி. எ-று.

82



அமைதல்=ஒத்துவருதல். குடிப்பிறத்தலென்றது பிறந்தார் செயலை. தனித்தவழி ஆகாது இரண்டுங்கூடியவழியே ஆமென்பதுதோன்ற, முற்றும்மை கொடுத்தார். காரணங்கள் காரியமாக வுபசரிக்கப்பட்டன. இவையிரண்டுபாட்டாலும் பண்புடையராதற் காரணங் கூறப்பட்டது. (௨)

விளக்கம்:—பிறரிடத்து அன்புடையவனும் இருத்தலும், உலகந் தோன்றிய காலமுதல் உலகத்தோடு அமைந்த ஒர் குடியினிடத்தே பிறத்தலும் ஆகிய இவ்விரண்டனையும் உடையவன் எவனோ அவனே பண்புடையான் என்று உலகத்தோர் உயர்த்திக் கூறுவர் என்று இத்திருக்குறள் கூறுவதால், நீங்காத அன்புடைமையும் தொடர்புடையவர்களிடத்து மாத்திரம் இருப்பது அல்லாமல் யாவரிடத்தும் இருத்தல் வேண்டும் என்றும், அதுவன்றியும் உயர்ந்த குடியில் பிறந்திருத்தல் வேண்டுமென்றும், ஆகிய இவ்விரண்டும் ஒத்திருத்தலே ஒருவனுக்குப் பண்புடைமை என்றும், இவ்விரண்டு தகுதிகளுள் ஒன்று இருந்து மற்றொன்று இல்லாவிடின் அது பண்புடைமை யாகாதென்றும், மேற்கூறிய காண்பதற்கு எளியனும் இருப்பதுடன் இவ்விரண்டு குணங்களுடன் இருப்பதே பண்புடைமை என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பண்புடைமை என்பது மக்கள் ஒருவருக்கொருவர் அவர்கள் உறுப்புக்களால் ஒத்து இருத்தலாக் கொள்ளுதல் ஆகாதோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

993: உறுப்பொத்தல் மக்களொப் பன்றால் வெறுத்தக்க
பண்பொத்த லொப்பதா மொப்பு.

(பரி.) இ-ள். உறுப்பு ஒத்தல் மக்கள் ஒப்பு அன்று=செறியத்தகாத வுடம்பாலொத்தல் ஒருவனுக்கு நன்மக்களோ டொப்பாகாமையின் அது பொருந்துவதன்று;—ஒப்பதாம் ஒப்பு வெறுத்தக்க பண்பு ஒத்தல்=இனிப் பொருந்துவதாய வொப்பாவது செறியத்தக்க பண்பாலொத்தல். எ-று.

டைமையால் அஃதொன்றமையின், 'உறுப்பு' என்றார். ஒருவனுக்கு நன்மக்களோடு பெறப்படுமொப்பாவது :—உயிரின்வேறாய் நிலையுதலில்லாவுடம்பொத்தலன்று வேறன்றி நிலையுதலுடைய பண்பொத்தலாகலான், அப்பெற்றித்தாய அவர் பண்பினையுடையனாக வென்பதாம். (௩)



விளக்கம்:—நிலையில்லாத உடம்பானது ஒருவனுக்கு ஒத்திருத்தலாலேயே நன்மக்கள் என்று சொல்லுவார்க்கு ஒப்பாக இராது ஆதலால் அத்தேகத்தால் பண்புடைமை என்பது பொருந்துவது இல்லை என்றும், ஆனால் பண்புடையாரோடு பொருந்தி நிற்கும் பொருந்திய ஒப்பாவது எக்காலத்தும் நிலையாக இருக்கும் தகுதியுடைமையாகிய பண்பினாலே ஒத்திருத்தல் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், உயிருக்கு வேறாய் நிலையில்லாத உடம்பினால் நன்மக்களோடு ஒருவன் சமானமாகக் காணப்படுவானாயினும், அதனை ஒப்பென்று கொள்ளக் கூடாதென்றும், உயிரோடு கூடி எக்காலத்தும் அவ்வுயிர்க்கு நிலையாக நிற்கின்ற நற்குணங்களோடு நிற்றலே நன்மக்களோடு சமானமாகக் கூறிய பண்புடைமை என்றும், இக்குணங்களைப் பெற்றோனே பண்புடையான் என்றும், அறிந்தோம். இதனால் ஒருவனுக்குத் தேகப்பொருத்தம் பொருத்தமன்று என்றும், குணப் பொருத்தமே பொருத்தம் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "முன்னர் கூறிய அன்புடைமையும் நற்குடிப் பிறத்தலும் ஆகிய தகுதிகளால் பண்புடையார் எவற்றைச் செய்வர் ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

994. நயனொடு நன்றி புரிந்த பயனுடையார்
பண்புபா ராட்டு முலகு.

(பரி.) இ-ள். நயனொடு நன்றி புரிந்த பயன் உடையார் பண்பு=நீதியையும் அறத்தையும் விரும்புதலாற் பிறர்க்குந் தமக்கும் பயன்படுதலுடையாரது பண்பினை—உலகு பாராட்டும்=உலகத்தார் கொண்டாடாநிற்பர். எ-று.

புரிந்தவென்னும் பெயரெச்சம் நண்புக் காரணப்பொருட்டு. நயனொடு நன்றி புரிதலும் பயனுடைமையும் பண்புகாரணமாக வந்தமையின், அதனைப்

'பாராட்டும்' என்றார். (௪)

விளக்கம்:—உலகத்து நீதியினையும் அறத்தினையும் தாம் எக்காலத்தும் விரும்புவதால் பிறரும் பயனடையக் கூடிய தகுதியுடையவராது பண்புடைமையை உலகத்தார் கொண்டாடுவர் என்று இத்திருக்குறள் கூறுவதால், உலகத்து பண்புடைமை என்னும் தகுதியை யடைந்தவர் இம்மைப் பயனுக்குக் காரணமாகிய நீதியையும், மறுமைப் பயனுக்குக் காரணமாகிய அறத்தையும்



செய்து தாம் அடையவேண்டிய இருமையையும் அடைவதுடன், உலகத்து மக்கள் மற்றவர்களுக்கும் பயன்படக் கூடியவர்கள் ஆகின்றார்கள் ஆதலால், அவர்களைப் பண்புடையார் என்றும், மேற்கூறிய படிப் பண்புடைமை அடைந்த தகுதியால் பயனை அடையக் கூடியவ ரென்றும், அவர் குணங்களால் அவர் செய்வன நீதியும் அறமுமென் றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் பண்புடையார் நீதியையும் அறனையும் செய்வதன்றி வேறொன்றும் செய்யார் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

995. நகையுள்ளு மின்னா திகழ்ச்சி பகையுள்ளும்
பண்புள பாடறிவார் மாட்டு.

(பரி.) இ-ள். இகழ்ச்சி நகையுள்ளும் இன்னாது = தன்னையிகழ்தல் ஒருவற்கு விளையாட்டின் கண்ணும் இன்னாது;—பாடு அறிவார்மாட்டுப் பகையுள்ளும் பண்பு உள = ஆகலாற் பிறர்பாடறிந் தொழுகுவார்மாட்டுப் பகைமையுள் வழியும் அஃதுளதாகாது இனியவாய பண்புகளே உளவாவன. எ-று.

'பாடறிவார்' எனவே, அவ்வின்னாமையறிதலும் பெற்றாம். அதனை யறிந்தவர் பின் அது செய்யார் இனியவே செய்வாரென்பது கருத்து. இதற்குப் பிறரெல்லாம் இரண்டு தொடருந்தம்முளியையாமலுரைப்பாரும், இன்னாதென்னுஞ் சொற்குப் பிறவாறென் றுரைப்பாருமாயினர். (௫)

விளக்கம்:—ஒருவன் தன்னை விளையாட்டுக்காக இகழ்வானே யானால் அவ்விகழ்ச்சியும் அவனுக்குத் துன்பத்தைத் தருவது உலக வழக்கம் என்றும், அவ்வித உலக வழக்கினை அறிந்தோராய பண்புடையவர் தமக்கும் பிறர்க்கும் பகைமை இருந்த காலத்தும்

துன்பத்தைத் தருகின்ற இகழ்ச்சியை உண்டாக்காது இன்பத்தைத் தருகின்ற இனிய செயல்களையே செய்யும் நற்குண முடையாரவர் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், பண்புடையார் என்பார் தம்முடைய பகைவர்க்கும் துன்பம் உண்டாக்கும் இகழ்ச்சியான விஷயங்களை எடுத்துச் சொல்லாது அப்பகைவர்க்கும் நன்மையும் புகழும் உண்டாகும் சொற்களையும் செயல்களையும் செய்வார் என்று அறிகிறோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ்விதம் கூறுவதால் பண்புடையார் என்பவர் நற்குணங்களாலேயே உலகம் நிலைத்து நிற்கின்றது போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

பண்புடைமை 653

996. பண்புடையார்ப் பட்டுண் டுலக மதுவின்றேல்
மண்புக்கு மாய்வது மன்.

(பரி.) இ-ள். பண்பு உடையார்ப்பட்டு உலகம் உண்டு = பண்புடையார் கண்ணே படுதலால் உலகியல் எஞ்ஞான்றும் உண்டாய் வாராநின்றது;—இன்றேல் அது மண்புக்கு மாய்வது = ஆண்டுப்படுதலில்லையாயின், அது மண்ணின் கட் புக்கு மாய்ந்துபோவதாம். எ-று.

படவென்பது நிச்சதன்றது. உலகு ஆகுபெயர். மற்றைப் பண்பிலார் சார்பன்மையின் அச்சார்புமின்றி மண்ணின்கட்புக்கு மாயுமதுவேண்டாவாயிற்றென்பது பட வின்றமையின், மன் ஒழியிசைக்கண் வந்தது. இவை நான்குபாட்டானும் அதனையுடையாரது உயர்ச்சி கூறப்பட்டது. (௬)

விளக்கம் :—மேற்கூறிய பண்புடையவர் என்று சொல்வோரது நற்குணங்கள் இவ்வுலகத்துப் பயன் தருவதாலேயே இவ்வுலக இயற்கையானது எக்காலமும் நிலைத்து வருகின்றது என்றும், அவ்விதம் அல்லவேல் இவ்வுலகமானது மண்ணுள் மறைந்து மாய்ந்து போய்விடும் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், உலகம் நிலைத்து நிற்பது பண்புடையவர்களுடைய நீதியாலும் அறத்தினாலும் என்றும், அவ்விரண்டு தகுதிகளையும் உடைய பண்புடையோர் இல்லாத காலத்து உலகம் அழிந்துவிடும் என்றும், உலகியல் கெடுவது என்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவர் மேற்கூறிய நற்குணங்களில்லாவிடினும், மிகுதியும் கூர்மையாகிய அறி

வுடையவராக இருக்கின்றனர். அவ்வித அறிவுடைமையால் உலகத்திற்கு ஏதேனும் பயன் உண்டாதல் கூடாதோ?" என்றும், ஆசிரியர் கூறுவாராயினர்.

997. அரம்போலுங் கூர்மைய ரேனு மரம்போல்வர்
மக்கட்பண் பில்லா தவர்.

(பரி.) இ-ள். மக்கட்பண்பு இல்லாதவர் = நன்மக்கட்கேயுரிய பண்பில்லாதவர், — அரம்போலும் கூர்மையரேனும் = அரத்தின் கூர்மைபோலும் கூர்மையை யுடையரேயாயினும், — மரம்போல்வர் = ஓரறிவிற்றாய மரத்தினை யொப்பர், எ-று.

அரம்: ஆகுபெயர். ஓரறிவு = ஊற்றினையறிதல். உவமையிரண்டனுள், முன்னது தான் மடிவின்றித் தன்னையுற்றபொருள்களை மடிவித்தலாகிய தொழில்



பற்றி வந்தது; பின்னது விசேடவறிவின்மையாகிய பண்புபற்றி வந்தது. அவ்விசேடவறிவிற்குப்பயனாய மக்கட்பண்பின்மையின், அதுதானுமில்லையென்பதாயிற்று. (எ)

விளக்கம்:—நல்ல மனிதர்களுக்கே சொந்தமாகிய பண்புடைமை என்பதை இவ்வுலகத்து அடையாதவர் அரம் என்னும் கருவிபோல் கூர்மையுடையவராயினும், ஓர் அறிவினை யுடைய மரத்திற்கே சமானமாவர் என்று இத்திருக்குறள் கூறுவதால், பண்பில்லாதோர் தம்முடைய கூர்மையால் கூர்மைகொண்ட அரமானது தன்னிடத்தே வந்த பொருள்களைத் தேய்த்துத் தேய்த்து மாய்த்து போகும்படிச் செய்வதுபோல் பிறரை அழிப்பதற்காகத் தம் கூர்மையைப் பயன்படுத்திக் கொள்ளுவரே அன்றி, ஓர் அறிவுடைய மரம் உலகத்தார்க்குப் பயன் படுகின்ற பயன் அளவும் பயன் தாராது போவாராதலால், அறிவற்ற மரத்தைக் காட்டிலும் இவர் மிகத் தாழ்ந்தவரென்றும், இவ்வித அறிவுடையார் உலகத்துஇருப்பது உலகத்து மக்கட்கும் ஏனைய வுயிர்களுக்கும் துன்பமே பயக்

கும் என்றும், இவரும் இவரது அறிவுடைமையும் இல்லாதிருந்தலே உலகிற்குப் பயன் தரும் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "நல்லறிவுடைய பெரியோராகிய பண்புடையார் தம்மிடத்து நட்புக் கொண்டார்க்கு நன்மையைச் செய்தல்வேண்டும் என்பது இயல்பேயாம். ஆயின், தம் பகைவரிடத்துப் பண்புடையார் எவ்விதம் நன்மைசெய்வர்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

998. நண்பாற்றா ராகி நயமில செய்வார்க்கும்
பண்பாற்றா ராதல் கடை.

(பரி.) இ-ள். நண்பு ஆற்றாராகி நயம் இல செய்வார்க்கும் = தம்மொடு நட்பினைச் செய்யாது, பகைமையைச் செய்தொழுகுவார்மாட்டும்—பண்பு ஆற்றாராதல் கடை = தாம் பண்புடையராயொழுகாமை அறிவுடையார்க்கு இழுக்காம். எ-று.

நயம் = ஈரம். சிறப்பும்மை அவர் பண்பாற்றாமைக்கிடேனுதல் தோன்ற நின்றது. அதனைச் செய்யிற்றும் அவர்தன்மையராகலென்பார், 'கடை' என்றார். (அ)



விளக்கம் :—தம்மிடத்து நட்பினைக் கொள்ளாது பகைமையைக் கொண்டு இருப்பவரிடத்தும் தாம் பண்பு உடையராய் இல்லாமல் நடப்பாராயின், அறிவுடையார் என்பார்க்குக் குற்றமாக முடியும் என்று இத்திருக்குறள் கூறுவதால், அறிவுடையாரானோர் தமக்கு இயல்பாகவுள்ள நற்குணங்களால் தம்மிடத்துப் பகை கொண்டு தீவினைச் செய்து வருபவர்க்கும் தாம் தீவினைச் செய்யாது நன்மையே செய்வர் என்றும், அவ்விதம் செய்யாவிடில் பண்புடையவர் என்று தம்மை எண்ணியிருந்த அவருடைய தகுதிக்குக் குற்றமாகிப் பண்பில்லாத அப்பகைவர் தகுதியையே அடைவர் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் பண்புடைமை இல்லாது உள்ள மாந்தர்க்கு இவ்வுலகம் எவ்விதம் இருக்கும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்

999. நகல்வல்ல ரல்லார்க்கு மாயிரு ஞாலம்
பகலும்பாற் பட்டன் றிருள்.

(பரி.) இ-ள். நகல் வல்லர் அல்லார்க்கு=பண்பின்மையான் ஒருவரோடுங் கலந்து உண்மகிழ்தல் மாட்டாதார்க்கு—மாயிரு ஞாலம் பகலும் இருட்பாற்பட்டன்று=மிகவும் பெரியஞாலம் இருளில்லாத பகற்பொழுதினும் இருளின்கட்கிடந்ததாம். எ-று.

எல்லாரோடுங் கலந்தறியப்பெருமையிற் பண்பில்லார்க்கு* உலகியல் தெரியாதென்பார், உலகமிருளின்கட் பட்டதென்றார். பாழ்பட்டன்றிருளென்றுபாடமோதி, இருளிலிற்றன் றென்றுரைப்பாருமுளர். (௯)

விளக்கம்:—தமக்குப் பண்பு என்னும் நல்ல தகுதியில்லாமையால் உலகத்து உள்ள மக்கள் ஒருவரிடத்தும் கலந்திருந்து மனத்துக்குள் மகிழ்ச்சியடைய மாட்டாத மனிதர்களுக்கு இப்பெரிய பூமியானது இருளில்லாத பகற் காலத்தும் இருள் நிறைந்து இருப்பது போலாம் என்று இத்திருக்குறள் கூறுவதால், எவரொருவர் உயிர்களெல்லாம் ஒன்றென்று கருததறும் கருதலுடன் மக்கட் பிறப்பையடைந்த மக்களிடத்தே, நட்புக்கொண்டு அதனால் வருகின்ற மகிழ்ச்சியை *அடைதலும் அடையாமல் இருக்கின்றாரோ, அவ்வித பண்பில்லாதவர் இப்பெரிய வுலகத்தன் அறிய வேண்டுவனவற்றை அறிவதற்குக் காரணமாகிய கண்களில்லாத குருடருக்



குச் சமானமாய் கண்ணொளி இழந்து ஒன்றும் அறியாதவராய் நிற்பார்கள் என்று அறிகிறோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் யாரிடத்தும் நட்புக்கொண்டு மகிழாது நிற்கும் பண்பில்லாதவனுக்குப் பெரிய செல்வம் கிடைத்து விடுமாயின், அச்செல்வம் எவ்விதமாம்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1000. பண்பிலான் பெற்ற பெருஞ்செல்வ நன்பால்
கலந்தீமை யாற்றிரிந் தற்று.

(பரி.) இ-ள். பண்பு இலான் பெற்ற பெருஞ்செல்வம் = பண்பில்லாத வன் முன்னை நல்வினையானெய்திய பெரிய செல்வம் அக்குற்றத்தால் ஒருவற்கும் பயன்படாதுகெடுதல் — நன்பால் கலந்தீமையால் திரிந்தற்று = நல்ல வான்பால் ஏற்ற கலத்தின் குற்றத்தால் இன்சுவைத்தாகாது கெட்டாற் போலும். எ-று.

கலந்தீமையென்பது மெலிந்துநின்றது. தொழிலுவமமாகலின் பொருளின்கண் ஒத்ததொழில் வருவிக்கப்பட்டது. படைக்குமாற்றலிலனுதலோன் றப் 'பெற்ற' என்றும், எல்லாப்பயனுங்கோடற்கேற்ற இடனுடைமை தோன்றப் 'பெருஞ்செல்வம்' என்றுங்கூறினார். அச்செல்வமும் பயன்படாதென்ற இதனால் வருகின்ற அதிகாரப்பொருண்மையுந் தோற்றவாய் செய்யப்பட்டது. இவை நான்குபாட்டானும் அஃதில்லாரதிழிவு கூறப்பட்டது. (ம)

விளக்கம்:—எவ்விதம் நல்லபசம் பாலானது அது வைக்கப்பட்டிருந்த பாத்திரத்தின் குற்றத்தினால் இனியதோர் சுவையைக்கொடாமல் கெட்டுப் போகின்றதோ அதுபோல் உலகத்துப் பண்பில்லாத ஒருவன் தான் முன் செய்த நல்வினைப்பயனால் அடைந்த பெரிய செல்வமானது தனக்குப் பண்பில்லாமையாகிய குற்றத்தினால் ஒருவருக்கும் பயன்படாது கெட்டுவிடும் என்று இத்திருக்குறள் கூறுவதால், பெற்ற செல்வத்தைக்கொண்டு தான் பயன் அடைவதற்கு உரிய நற்குணத்தை படையாத ஒருவனது செல்வமானது மிகப் பெரியதாக இருப்பினும் பண்பில்லாமை என்னும் குற்றமுடைய அவனுக்கும் நன்மையைத் தாராது அப்பொருளும் அழிந்து பிறர்க்கும் பயன்படாது ஒழிந்துபோம் என்று அறிவதற்கு நாயனார் உலகத்து யாவராலும் அறியக்கூடிய சிறந்தபொருளாகிய பசும்பாலினை நல்லபாத்திரத்தில் வைக்காது குற்றமுடைய பாத்திரத்தில் வைக்கப்



பட்டிருந்தால் பால் குற்றமில்லாதிருந்தும் அது இருந்த பாத்திரத்தின் குற்றத்தினால் அப்பாலினது இனிமையாகிய சுவையுங் கெட்டுப் பாலுக்கு உரியவனுக்கும் பயன்படாது பிறர்க்கும் பயன்படாது எறிந்து விடப்படுமோ அதுபோலவே இப்பொருளும் அழிந்து போம் என்று அறிவித்தனர் என்று அறிகிறோம் என்றனர். அது

கேட்ட மாணாக்கர், "இவ்வித பெரியதோர் செல்வம் ஒருவனுக்குக் கிடைத்து அவனுக்கும் மற்றையோர்க்கும் பயன்படாமற் போகுமாயின், அவ்வித செல்வத்தை நம் தெய்வப்புலவர் எவ்வித செல்வம் என்று அழைக்கின்றனர் ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 101. அதிகாரம்.

---

### நன்றியில்செல்வம்.

(பரி.) அஃதாவது ஈட்டியார்க்கும் பிறர்க்கும் பயன்படுதலில்லாத செல்வத்தினியல்பு. உடையானது குற்றஞ் செல்வத்தின் மேலேற்றப்பட்டது. அதிகார முறைமை மேற்றோற்றுவாய் செய்தவதனாற் பெறும்.

விளக்கம் :—அதாவது, அச்செல்வத்தைச் சேர்த்தவனுக்கும் மற்றவர்களுக்கும் பயனை உண்டாக்குதல் இல்லாததாகிய செல்வத்தினுடைய இயற்கை. இவ்விதம் பயன்படுதலை உண்டாக்காத செல்வத்துக்குரிய ஒருவனுடைய குற்றத்தை அவனது செல்வத்தின் மீது ஏற்றிச் சொல்லலாயினர். ஏனெனின்? மேல் திருக்குறளில் தோற்றுவாய்ச்செய்த முறையினால் இவ்வதிகார முறைமை அமைந்திருக்கின்றது என்று அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் தனக்கும் பிறர்க்கும் பயன்படாத செல்வத்தின் தகுதியைக் கேட்க ஆசைப்படுகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1001. வைத்தான்வாய் சான்ற பெரும்பொரு ளஃதுண்
செத்தான் செயக்கிடந்த தில். [ணான்

(பரி.) இ-ள். வாய் சான்ற பெரும்பொருள் வைத்தான் அஃது உண்ணான் = தன் மனையகலமெல்லாம் நிறைதற்கேதுவாய பெரும்பொருளை ஈட்டி வைத்து உலோபத்தால் அதனையுண்ணாதவன்—செத்தான் செயக்கிடந்தது





இல் = உளனாயினுஞ் செத்தானும், அதன்கண் அவனாற் செயக்கிடந்ததோருரிமையின்மையான். எ-று.

வைத்தானென்பது முற்றெச்சம். உண்ணுதல்=அதனானைம்புலன்களையும் நுகர்தல். வாய்சான்ற பெரும்பொருளை வைத்தானொருவன் அதனையுண்ணாது செத்தவழி அதன்கண் அவனாற் செயக்கிடந்ததோர் குறையின்மையாகலான், வையாது பெற்றபொழுதே நுகர்கவென் றுரைப்பினுமமையும். இதற்குச் செத்தானென்பது எச்சம். இதனால் ஈட்டியானுக்குப் பயன்படலின்மை கூறப்பட்டது. (௧)

விளக்கம்:—தன் வீடு முழுவதும் நிறையக்கூடிய பெரியதோர் பொருளைச்சேர்த்து வைத்துத் தனக்குள்ள கொடாமை என்கின்ற உலோப குணத்தால் அச்செல்வத்தை அனுபவியாதவன் உயிரோடு இருக்கினும் செத்தவனே யாவான் என்றும், ஏனெனில் அப்பெரியதோர் செல்வத்தால் அவன் செய்வதற்குரிய சுதந்திரம் அவனுக்கு இல்லாமற்போகின்றது என்றும் இத்திருக்குறள் கூறுவதால், பெரும் பொருள்தேடிய ஒருவன் அப்பொருளாலாகிய நலன்களை ஐம்புலன்களும் மகிழும்படி உண்ணுதல்வேண்டும் என்றும், அவ்விதமல்லாது இருப்பவன் அவன் இறந்தகாலத்து எவ்விதம் யாதொரு பாக்கியத்தையும் இல்லாமற் போய்விடுகின்றானோ அவ்விதம் யாதொரு பாக்கியத்தையும் உயிரோடு உள்ள காலத்தும் பெறுவதற்கில்லாமையால் அப்பொருள்களை அனுபவிக்கும் விஷயத்தில் அவன் இருந்தும் இறந்தவனே யாகின்றான் என்றும், அதனால் உயிரோடு உள்ள பொழுதே அனுபவியாது சேர்த்த பொருளால் யாதொரு பயனும் இல்லை என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "சேர்த்தவனுக்குப் பயன் படாததன்மையறிந்தோம். இனிப் பிறர்க்குப் பயன்படாமையையும் அறிவிக்க வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1002. பொருளானா மெல்லாமென் றீயா திவறு
மருளானா மாணாப் பிறப்பு.

(பரி.) இ-ள். பொருளான் எல்லாம் ஆம் என்று=பொருளொன்றுமுண்டாக அதனானெல்லா முண்டாமென்றறிந்து அதனையீட்டி—ஈயாது இவறும் மருளான்=பின் பிறர்க்கீயாது பற்றுள்ளஞ்செய்யு மயக்கத்தாலே—மாணாப்பிறப்பு ஆம்=ஒருவனுக்கு நிறைதலில்லாத பேய்ப்பிறப்புண்டாம்.

இருமையினு மெய்தும் இன்பங்கள் பலவுமடங்க 'எல்லாம்' என்றும், ஈட்டுதற்கு முன்னுண்டாய வறிவு பின் மயங்குதலின் 'மருள்' என்றும், பொருளுண்டாயிருக்கப் பிறர்பசி கண்டிருந்த தீவினைபற்றி உணவுகளுளவா யிருக்கப் பசித்துவருந்தும் பிறப்புளதாமென்றுங் கூறினார். (௨)

விளக்கம்:—இவ்வுலகத்தில் பொருள் ஒன்று கிடைக்குமா யின் அப்பொருளால் எல்லாம் உண்டாகும் என்று அறிந்து அப் பொருளைச் சேர்த்து, சேர்த்ததாகிய அப்பொருளைப் பின்னர் மற்ற வர்களுக்குக் கொடாது உலோபத்தனம் செய்கின்ற ஒருவனுக்கு ஆசை நிறைதலில்லாத பேய்ப் பிறப்பு உண்டாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால், பொருள் தேடுவான் ஒருவன் பொரு ளைத் தேடுவதற்குமுன் 'நாம் பொருளைத் தேடுவோமாயின் அப்பொருளால் இம்மை மறுமை என்னும் இரண்டு இன் பங்களையும் அடைதல் கூடும்' என்று எண்ணிச் சேர்த்து, அப்பொருளைச் சேர்த்த பிறகு முன்னர் இருந்த நல்லறிவா னது உலோப குணம் என்கின்ற நிலைமையினால் மயக்கப்பட்டுப் பிறர் மிகப் பசியோடு பசித்து வாடுவதைக் கண்டு இருந்தும் அவர்க்கு உதவி செய்யாது நிற்பானாயின், அவ்வித மயக்கத்தால் மறு பிறப்பில் பேயாகப் பிறந்து பல உணவுகள் உலகத்தில் இருந் தும் அவற்றை அனுபவிக்கத் தெரியாது பசித்து வருந்துவான் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் தனக்கும் பிறர்க்கும் பயன்படாத செல்வத்தையுடையான் இவ் வுலகத்து இருப்பது யாதொரு பயனும் இல்லை போலும்!" என்ன லும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1003. ஈட்ட மிவறி யிசைவேண்டா வாடவர்
தோற்ற நிலக்குப் பொறை.

(பரி.) இ-ள். ஈட்டம் இவறி இசை வேண்டா ஆடவர் தோற்றம்=யாம் பிறிவ்வர் ஈட்டுதுமென்று பொருளினீட்டன்மாத்திரத்தையே விரும்பி அதன் பயனாய புகழை விரும்பாத மக்களது பிறப்பு—நிலக்குப் பொறை= நிலத்திற்குப் பாரமா மத்துணையே. எ-று.

இசை இருமைக்குமுதலாய அறமாகலின் ஈகையான் அதனையேவேண் டல் செய்யாது ஈட்டற்றுன்பத்தையும் காத்தற்றுன்பத்தையும் வேண்டிய

வழியின்மைபற்றி, 'நிலக்குப்பொறை' என்றார். பிறப்பென்றது அதற்குரிய உடம்பினை. (௨)

விளக்கம்:—உலகத்துள்ள எல்லாரைக் காட்டிலும் தாமே மிகப் பொருளைச் சேர்த்தல் வேண்டும் என்று அப்பொருளினுடைய சேர்க்கையை மாத்திரம் விரும்பிச் சேர்த்து, சேர்த்த அப்பொருளின் பயனாகிய புகழை விரும்பாத மக்களுடைய பிறப்பானது நிலத்திற்குப் பாரமேயன்றி வேறு ஒன்றும் இல்லை என்று இத்திருக்குறள் கூறுவதால், இம்மை மறுமையாகிய இரண்டின் பயனை அடைதற்கு உறுதியாகியது அறம் என எண்ணிக் கொடுத்தல் செயலால் அவ்வுறுதியாகிய அறத்தை விரும்பி அடையாது, பொருளைச் சேர்த்தலால் தனக்கு வரும் துன்பத்தையும் வருந்தித் தேடிய அப்பொருளைக் காத்தலால் வரும் துன்பத்தையும் ஆகிய துன்பங்களையே அடைந்து இன்பம் என்பதே யறியாது இறந்துபோவதால், அவர் இருக்கின்ற காலத்தும் அவர் இருப்பது நிலத்திற்குப் பாரமே அன்றி வேறு ஒன்றிற்கும் அல்ல என்று அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "கொடாத உலோப குணத்தோடு உள்ள உயிரைத் தாங்கும் உடம்பினை நிலத்திற்குப் பாரம் என்று தெய்வப் புலவர் கூறினர் என்பது அறிந்தோம். இவ்விதமிருப்பார் செல்வந்தராயினும், அவரை யாரேனும் விரும்புவரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1004. எச்சமென் றென்னெண்ணுங் கொல்லோ
னச்சப் படாஅ தவன். [வொருவரா

(பரி.) இ-ள். ஒருவரால் நச்சப்படாதவன் = ஒரு பொருளுமீயாமையின் ஒருவராலும் நச்சப்படுதலில்லாதவன்—எச்சமென்று என் எண்ணுங்கொல் = தானிறந்தவழி ஈண்டொழிந்து நிற்பதாக யாதனைக்கருதுமோ!

ஈண்டொழிந்து நிற்கும்புகழ் ஈவான்மேலன்றி இல்லாமையின் அதனைத் தேடியாதுமில்லையென்பார், 'என்னெண்ணுங் கொல்லோ' என்றார்.

தொகாரம் அசை. இவை மூன்றுபாட்டானும் பிறர்க்குப் பயன்படாமை கூறப்பட்டது. (ச)

விளக்கம்:—ஒருவன் தான் தேடிய பொருள்களுள் ஒரு பொருளையும் பிறர்க்குக் கொடுத்து அறியானையால் அவன் ஒருவ



ராலும் விரும்பப்படாதவன் ஆவான் என்றும், அவ்விதம் யாராலும் விரும்பப்படாத அவன் தான் இறந்துபோகும் காலத்து இவ்வுலகத்து எதனை நிலையாக நிற்கும் பொருளாக எண்ணிச் செல்வானோ என்றும் இத்திருக்குறள் கூறுவதால், பிறர்க்கு நன்பொருள் கொடுத்து நிற்பவனே எக்காலத்தும் அழிதல் இல்லாது நிற்கும் புகழ் ஒன்றினைப் பிறகு அடைதல் கூடுமே யன்றி அவ்விதமல்லாதவன் புகழை யடைதல் கூடாதாகையால், பொருளைச் சேர்த்துத் தானும் உண்ணாது பிறர்க்கும் கொடாது நின்றொழிப இவன் இருந்த காலத்தும் ஒருவராலும் விரும்பப்படாது போவதுடன் இறந்த காலத்தும் புகழாகிய பயனை அடையாமற் போவானென்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மேற்கூறிய இம்மூன்று திருக்குறள்களாலும் நன்றியில் செல்வம் பிறர்க்குப் பயன்படாமையை அறிந்தோம். ஆயின், பெரியதோர் செல்வத்தை அடைந்தவர் உலோபகுணத்தால் தாம் ஏதேனும் ஒருபொருளை அடைபவர் ஆவரோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1005. கொடுப்பதூஉந் துய்ப்பதூஉ மில்லார்க் கடுக்கிய
கோடியுண் டாயினு மில்.

(பரி.) இ-ள். கொடுப்பதூஉம் துய்ப்பதூஉம் இல்லார்க்கு=பிறர்க்கீவதும் தாநுகர்வதுமாய இரண்டுசெய்கையுமுடையரல்லாதார்க்கு—அடுக்கிய கோடி உண்டாயினும் இல்=பலவாக அடுக்கிய கோடிபொருளுண்டாயினும் ஒன்றுமில்லை. எ-று.

இன்பத்தினும் அறஞ்சிறத்தலையின், கொடுத்தற்றொழில் முற்கூறப்பட்டது. அடுக்கியகோடியென்றது ஈண்டெண்ணைப்பற்றிப் பொருண்மேனின்றது. ஒன்றுமில்லார்போலப் பயனிழத்தலின் 'இல்' என்றார். (ரு)

விளக்கம் :—பிறர்க்குக் கொடுப்பதும் தாம் உண்பதும் ஆகிய இரண்டு செய்கைகளும் இல்லாதவர்களுக்குப் பல என்ற சொல்லும் பலகோடி பொருள்கள் கிடைக்கினும், அப்பொருள்களால் அவர்களுக்கு யாதொரு பயனும் உண்டாவதில்லை என்று இத்திருக்குறள் கூறுவதால், அறத்திற்கு உரியதாகிய கொடுத்தல் தொழிலையும் இன்பத்திற்குரியதாகிய உண்டல் தொழிலையும் ஆகிய இரண்



டையும் பெறாது போகின்றவர் பொருளில்லாமையால் அவ்வறத்தையும் இன்பத்தையும் அடையாதவர்களில் வேறு அல்லர் ஆதலால், இப்பொருள் பெற்றாரும் பொருளில்லா வறிஞரேயன்றி பொருளுடையார் அடையும் பயன் யாதொன்றையும் அடைவதற்கு உரியரல்லர் என்பது பெற்றோம் என்றனர். *அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் பொருள்படைத்தும் இம்மை மறுமையாகிய இரண்டையும் அடைவதற்கு இல்லாது உள்ள ஒருவன் தான் அடைந்த செல்வத்திற்கு எவ்வித தகுதியுடையனும் உள்ளானென்று புலவர் கூறுவர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1006. ஏதம் பெருஞ்செல்வந் தான்றுவ்வான் றக்கார்க்
றீத லியல்பிலா தான். [கொன்

(பரி.) இ-ள். தான் துவ்வான் தக்கார்க்கு ஒன்று ஈதல் இயல்பிலா தான்=தானுகராதும் அதன்மேலுந் தகுதியுடையார்க்கு அவர்வேண்டியதொன்றீதலியற்கையிலனுமாயினான்—பெருஞ் செல்வம் ஏதம்=இரண்டுஞ் செய்தற்கிடனுடைத்தாய செல்வத்திற்கு ஒருநோய். எ-று.

தகுதி=தானங்கோடற்கேற்புடைமை. ஏதம்—ஆகுபெயர். நுகரப்படுதலும் ஈயப்படுதலுமாகிய தொழிற்குரியதனை அன்றாக்கினமையின், 'நோய்' என்றார். ஈதலியல்பிலாதானது பெருஞ்செல்வம் அவனுக்கு ஈட்டல் காத்தல் முதலியவற்றால் துன்பமேயாமென்றுரைப்பாருமுளர். இவை யிரண்டு பாட்டானும் அவ்விருமையும் உடன்கூறப்பட்டன. (௬)

விளக்கம் :—தானும் உண்ணுந் தானம் கொள்ளுவதற்குத் தகுதியுடையார்களுக்கு அவர் விரும்புகின்ற ஒன்றினைக் கொடுக்கின்ற இயற்கை இல்லாதவனும் உள்ள ஒருவன் பெற்ற பெரிய

செல்வத்திற்கு அவன் ஒரு நோயாக இருக்கின்றான் என்று இத் திருக்குறள் கூறுவதால், உலகத்துத் தானுண்டலும் பிறர்க்குக் கொடுத்தலும் ஆகிய இரண்டையும் இல்லாதவன் பெரிய செல்வத் தைப் பெறுவானாயின், அச்செல்வத்தைச் சேர்த்தல் என்கின்ற துன்பமும் அதனைப் பிறர் கொள்ளாது காத்தல் என்னும் துன்ப மும் ஆகிய இரண்டனையும் இவன் அடைவதன்றி அப்பொருளை யும் அசைய வொட்டாது ஓரிடத்தில் சேர்த்து வைக்கின்றான் ஆதலால், அப்பொருளுக்கும் உயிர்கள் நம்பிக்கை வழி



நடவா வண்ணம் துன்பம் செய்யும் நோய் போலிருக்கின்றான் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஈயா தானொருவன் அவனது பெரிய செல்வத்திற்கு நோய்போலுள் ளான் என்ற உண்மையை நன்கு அறிந்தோம். ஆயின், அவ்விதம் ஈயாது சேர்த்துவைக்கும் பொருளை நம் தெய்வப் புலவர் என் னென்று உவமிக்கின்றனர் என்பதையும் அறிய ஆவலுறுகின் றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1007. அற்றார்க்கொன் றாற்றாதான் செல்வ மிகநலம்
பெற்றாள் தமியண்மூத் தற்று.*

(பரி.) இ-ள். அற்றார்க்கு ஒன்று ஆற்றாதான் செல்வம் = ஒருபொருளு மிலாதவர்க்கு அவர் வேண்டியதொன்றனைக் கொடாதானது செல்வம் கொண்டே கழிதல் — மிகநலம் பெற்றாள் தமியள் மூத்தற்று = பெண்டிரின் மிக்க நலத்தினைப் பெற்றாளொருத்தி கொள்வாரின்மையிற் கொழுநனின்றித் தமியளாய் மூத்ததன்மைத்து. வ-று.

நலம் = வடிவின் நன்மையும் குணத்தின் நன்மையும். இரண்டுமொருங்கு பெறுதலரிதாகலின், 'பெற்றாள்' என்றார். கொடுப்பாருங் கொழுநனுமேயன் றித் தானும் பயனிழந்து கழிந்த குமரியோடொப்பைக் கூறினமையின், தானு மேற்பாலுமே யன்றிச் செல்வமும் பயனிழந்து கழியுமென்பதாயிற்று. (எ)

விளக்கம்:— ஒரு பொருளும் இல்லாது உலகத்துள்ள தரித் திரர்களுக்கு அவர் விரும்பும் யாதொன்றினையும் கொடாத ஒருவ னது செல்வம் யாதொரு பயனையும் அடையாது இருந்து வீணே கழிந்துபோதல் பெண்களில் மிக அழகினைப் பெற்றாள் ஒருத்தி

தன்னைத் தக்க ஒருவனுக்கு நாயகியாகக் கொடுப்பாரில்லாமையால் நாயகனைப் பெறாது ஒன்றியாக இருந்து தன்னலத்தை யாரும் யடையாமலும் தான் யாதொரு நலனும் படையாமலும் வயது முதிர்ந்து இருப்பது போலும் என்று இத்திருக்குறள் கூறுவதால், பெண்களுக்குரிய உருவத்தின் அழகும் குணத்தின் அழகும் ஆகிய இரண்டினையும் பெற்று இருக்கின்ற பெண் ஒருத்தி தக்கதோர் நாயகனுக்கு அவளைப் பெற்றோர் கொடாது வைத்திருப்பாராயின், அவள் எவ்விதம் உலகத்துத் தோன்றியதால் உண்டாகும் பயனை படைவதற்கு இல்லாது போவதுடன் பிறர்க்கும் இன்பம் தரும்



பயனை படையாமல் வீணே தன்னிளமை யழிந்து மூப்பினை யடைந்து எடுத்த தேகமானது பயன்பெறாது ஒழிந்து போமே அதுபோல் வறிஞர்க்குக்கொடாத செல்வம் அதனை படைத்தவனுக்கும் பிச்சை கேட்பவனுக்கும் பயன் தராது போவதுடன் தானும் பயன்படாது அழிந்துபோகும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் கொடாதவன் அடைந்த செல்வத்தால் அடையும் பயனையும் அச்செல்வம் அடையும் பயனையும் இவை என்று அறிந்தோம். ஆயின், இவ்விதம் கொடாதவனது செல்வம் யாருக்கும் நன்மை செய்யாவிடினும், அப்பொருளால் யாருக்கும் யாதொரு தீமையும் உண்டாகாது போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1008. நச்சப் படாதவன் செல்வ நடுவூரு
ணச்சு மரம்பழுத் தற்று.

(பரி.) இ-ள். நச்சப்படாதவன் செல்வம் = வறியார்க்கணியனாயிருந்தும் ஒன்றுங்கொடாமையின் அவரானச்சப்படாதவன் செல்வமெய்துதல் — ஊர் நடுவே நச்சுமரம் பழுத்தற்று = ஊரிடை நிற்பதோர் நச்சுமரம் பழுத்தாற்போலும். எ-று.

நடுவூரென்பது பின்முன்னாகத்தொக்க வாறாம்வேற்றுமைத்தொகை. அண்மையுடைமையாற் பயனில்லையென்பதாம். (அ)

விளக்கம் :—வறியவர்கள் தனக்குச் சமீபத்தில் இருந்தும்

அவர் துன்பத்தை நீக்குவதற்கு ஒன்றும் கொடாததால் அவ்வறியவர்களால் விரும்பப் படாத ஒருவன் செல்வத்தை யுடைதல் ஊரின் நடுவிலே விஷத்தரும் மரம் ஒன்று பழுத்திருத்தல் போலும் என்று இத்திருக்குறள் கூறுவதால், உலகத்தார் விரும்பக் கூடிய பழத்தைத் தரும் மரம் ஒன்று விஷத்தை யுடையதாகி நிற்குமாயின் அது உண்ணும் பழமாயினும் ஊர் நடுவே இருக்கும் அப்பழத்தை எவ்விதம் விரும்பாது அப்பழம் உள்ள மரத்திடத்தும் செல்லாது ஒதுங்கிச் செல்லுவரோ, அதுபோல் சமீபத்தில் உள்ள இச்செல்வர்தனிடத்தும் நெருங்காதும் விரும்பாதும் விலகிச் செல்வர் என்று அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் நச்சுமரம் போல் உள்ளானை ஒருவ



னும் விரும்பாவிடினும், அவனது பொருளையேனும் விரும்பிப் பிறர் கொண்டுசென்று பயன்பெறுதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1009. அன்பொரீஇத் தற்செற் றறநோக்கா தீட்டிய
ஒண்பொருள் கொள்வார் பிறர்.

(பரி.) இ-ள். அன்பு ஒரீஇ = ஒருவன் கொடாமைப்பொருட்டுச் சுற்றத்தார் நட்டார்கண் அன்பு செய்தலையொழிந்து — தற்செற்று = வேண்டுவன நுகராது தன்னைச்செறுத்து — அறம் நோக்காது = வறியார்க்கு ஈதல் முதலிய அறத்தை நினைப்பதுஞ்செய்யாது — ஈட்டிய ஒண்பொருள் கொள்வார் பிறர் = ஈட்டிய வொள்ளியபொருளைக் கொண்டுபோய்ப் பயன்பெறுவார் பிறர், எ-று.

பயனுடைய அறமும் இன்பமுஞ் செய்துகொள்ளாதானுக்குப் பொருளா யின்னது ஈட்டற்றுன்பமேயென்பது தோன்ற 'ஈட்டிய' என்றும், அவன் உரிமையுள்ளார்க்கும் உதவாதென்பது தோன்றப் 'பிறர்' என்றுங் கூறினார்.

விளக்கம் :—ஒருவன் கொடாமையின் காரணமாகச் சுற்றத்தவரிடத்தும் நட்பினரிடத்தும் அன்பு செய்யாது இருப்பதுடன்

தனக்கு வேண்டுவனவாகியவற்றைத் தானுண்ணாது தன்னைத் துன்பப்படுத்தியும் வறியவர்களுக்குக் கொடுத்தல் முதலிய அறச்செயலினைப்பதும் செய்யாது பொருளை அதிகமாகச் சேர்ப்பானாயின் அவனது பெரும் பொருளை அயலவர் கொண்டு சென்று அப்பொருளாலாகிய பயனை அடைவர் என்று இத்திருக்குறள் கூறுவதால், தான் உண்ணாதும் சுற்றத்தவர்க்கும் நட்பினர்க்கும் கொடாதும் அறவழியிற் செலவழியாதும் எவனேனும் பெரும் பொருள் சேர்த்து வைப்பானாயின், அவ்விதம் சேர்த்த பெரும்பொருளை அயலார் கொள்ளை கொண்டு சென்று பயனை அடைவர் என்று அறிகிறோம். அன்றியும், இவ்விதம் பொருள் சேர்த்தவனுக்குப் பொருள் சேர்த்ததாலாகிய துன்பம் ஒன்றே நின்றதுடன் அவன் வழியாராகிய சந்ததியாருக்கும் அப்பொருள் உதவாதல்லாது பிறர் கொள்ளைகொண்டுபோவர் என்றும் கூறியதாயிற்று என்றனர். அது கேட்ட மாணுக்கர், "இவ்விதம் கொடாதவனது பொருளை அயலவர் அடித்துச் சென்று அவனுக்கும் அவன் சந்ததியார்க்கும் வறுமையை உண்டுபண்ணு



வார் என்று அறிகிறோம். ஆயின், யார்க்கும் தம்பொருள் கொடுத்து அதனால் புகழையடைய விரும்புவார் வறியாரவரோ ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1010. சீருடைச் செல்வர் சிறுதுனி மாரி
வறங்கூர்ந் தனைய துடைத்து.

(பரி.) இ-ள். சீர் உடைச்செல்வர் சிறுதுனி = புகழுடைத்தாய செல்வத்தினையுடையவரது நிற்குங்காலஞ் சிறிதாய வறுமை—மாரி வறங்கூர்ந்தனைய உடைத்து = உலகத்தையெல்லாம் நிலைநிறுத்துமேகம் வறுமை மிக்காற்போல்வதோர் இயல்பினையுடைத்து. எ-று.

துனி = வெறுப்பு; அதனைச்செய்தலாற் றுனியெனப்பட்டது. யாவர்க்கும் பயன் பட்டார் அதனுன் வறியராயவழியும் அவ்வறுமை கடிதினீங்குதலிற் பின்புஞ் செல்வராய்ப் பயன்படுவரென்பது உவமையாற் பெறப்பட்டது; படவே, நன்றியில்லாத செல்வம் எஞ்ஞான்றும் பயன்படாதென்பதாயிற்று.

இதற்குச் சீருடைச்செல்வர் இரவலரோடு வெறுக்கும் நிலையில் வெறுப்பு மாரி வறம் கூர்ந்தனைய தன்மையையுடைத்தென அதிகாரத்தோடு பொருந்தாமை மேலும் ஓர் பொருட்டொடர்ப்பு படாமலுரைப்பாருமுளர். இவை நான்குபாட்டானும் அச்செல்வத்தது குற்றங் கூறப்பட்டது. (௰)

விளக்கம் :—புகழ்படைத்தற்கே உரியதாகிய செல்வத்தினை உடையவரது வறுமையானது நிற்கும் காலம் மிகச் சிறியது என்றும், அச்சிறியகாலமுள்ள வறுமையானது இவ்வுலகத்தை எல்லாம் நிலைநிறுத்தும் மேகமானது பெய்யாது வறுமை மிகுந்தால் எவ்விதமோ அவ்வித இயல்பினை உடையது என்றும் இத்திருக்குறள் கூறுவதால், எவர்க்கும் கொடுத்துப் புகழை அடைய விரும்பி நின்றவர் அக்கொடுத்தலால் வறிஞர்களாகுதும் அவர் கொடையின் பயனால் அவர்க்குக் குறைந்த செல்வமானது மறுபடியும் பலவழியாலும் நிரம்பப்பெற்று அவருடைய வறுமையை நீக்கிப் பலர்க்கும் பயன்படும் ஆதலால், மேகமானது பெய்யாது ஒருகாலத்து இருந்தாலும் மற்றோர் காலத்துப் பெய்து, பெய்யாத காலத்து உயிர்கள் வருந்திய வருத்தத்தை நீக்குவதுபோல் இவரும் நீக்குவர். என்றும், இத்தகுதியுடையார் செல்வம் எக்காலத்தும் குறையாது தமக்கும் தம்சுற்றத்தார்க்கும் உதவுமென்றும், அவ்விதமில்லாதார் செல்வம்



நன்றியில் செல்வமாய் அவர்க்கும் பிறர்க்கும் பயன்படாது அழியும் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மேற் கூறிய நான்கு பாட்டினால் நன்றியில் செல்வத்தினது குற்றம் அறிந்தோம். இனிச் சான்றாண்மையுள் மூன்றாவது திருக்குறளில் கூறிய நாண் என்பதின் தன்மையையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 102. அதிகாரம்.

### நாணுடைமை

(பரி.) அஃதாவது மேற்சொல்லிய சால்பு பண்பு முதலிய குணங்களை ஆய்ந்தோர் தமக்கொவ்வாத கருமங்களில் நாணுதலுடையாரது தன்மை. அதிகார முறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது, தமக்குக் கூறிய சால்புடைமை, பண்புடைமை முதலிய குணங்களைத் தமக்கு உயர்வென மதித்து அவற்றால் உயர்ந்தோர் தம் தகுதிக்குப் பொருந்தாத தொழில்களில் தலையிட வேண்டி வருமாயின் அத்தொழில்களால் வரும் பழிபாவங்களுக்கு நாணுதலுடையராய் நிற்குந் தன்மையாகும் என்பதாம். அதுகேட்ட மாணாக்கர், "நாணம் என்பது எல்லோர்க்கும் பொதுவாக இருக்கவும் உயர்ந்தோர்க்கே கூறுவது என்னை?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1011. கருமத்தா னாணுத னாணுத் திருநுதல்
நல்லவர் நாணுப் பிற.

(பரி.) இ-ள். நாணுக் கருமத்தால் நாணுதல்=நன்மக்களுக்காவது இழிந்த கருமங்காரணமாக நாணுதல்;—பிற திருநுதல் நல்லவர் நாணு=அஃதன்றி மனமொழிமெய்களொடுங்கத்தான் வருவனவோவெனின், அவை அவரையல்ல அழகிய நுதலினையுடைய குலமகளிர் நாண்கள். எ-று.

பிற குலமகளிர் நாணென்றதனான் ஈண்டது நன்மக்களுணென்பதூஉம், நாணுதலென்றதனாற் கருமத்தினிழிவும் பெற்றாம். திருநுதனல்லாரென்பது புகழ்ச்சிக்குறிப்பு. பன்மைபற்றிப் 'பிற' என்றார். இனி அற்றமறைத்தன் முதலியன பொதுமகளிர் நாணொடொக்குமென் றுரைப்பாருமுளர்; அவர்க்கு



நாண் கெடுபவர்க்குமென விலக்கப்பட்டமையானும், அவர்பெயராற் கூறப்படாமையானும் அஃதுரையன்மையறிக. இதனான் நாணினிலக்கணங் கூறப்பட்டது. (க)

விளக்கம்:—நன்மக்களாகிய உயர்ந்தோர்க்கு உரிய நாண் என்று சொல்லப்படுவது ஏதேனும் இழிவினைத் தரும் தொழில் ஒன்றினைத் தாம் செய்யவேண்டிவருமாயின் அதுகாரணமாக நாணுதல் என்றும், அவ்விதம் அல்லாது மனத்தாலும், சொல்லாலும், தேகத்தாலும் ஆகிய இவைகளால் வரும் ஒடுக்கத்தினால் வருவதாகிய நாணுடைமை உயர்ந்தோரது நாணமாக இராது, அழகிய நெற்றியினையுடைய குலப்பெண்கள் கொள்ளும் நாணமாகவே உள்ளதென்றும் இத்திருக்குறள் கூறுவதால், உண்மையாகவே நாணுதலால் உயர்ந்தோர் தம் தகுதிக்கு அடாத கருமம் ஒன்றினைத்

தாம் செய்ய நேருமாயின் தமக்கு அது பழிப்பினைத் தரும் என்று எண்ணித் தம் அறிவின் மிகுதியால் அவ்விழிந்த கருமத்தைச் செய்யாது நிற்பதே நாணுடைமை என்றும், அப்பெரியோர் நாணினைத் தமக்கு உறுதியாகக் கொண்டதே நாணுடைமைக்கு இலக்கணம் என்றும், ஏனைய மகளிர்க்குக் கூறிய நான்கு வேலிகளுள் ஒன்றாகிய நாணுடைமையானது அவரது பெண் தன்மையால் தம் கணவரல்லாது பிறரைக் கண்ட காலத்து மனமொழி மெய்யாகிய மூன்றும் அஞ்சி நாணம் கொள்ளுகின்ற அவரது இயற்கை என்றும், அவ்விதம் இயல்பாகக்கொள்ளும் நாண் என்பதை ஈண்டு நாணுடைமை என்று கொள்ளாது ஒரு காரணம் கருதி நாணுதலே நாணுடைமை என்றும், அதுவே சால்புடையார்க்கு உரியதென்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நாணால் சிறப்புடையவர் தாம் சிறந்தார் என்று கொள்ளுதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

**1012. ஊணுடை யெச்ச முயிர்க்கெல்லாம் வேறல்ல
நாணுடைமை மாந்தர் சிறப்பு.**

(பரி.) இ-ள். ஊண் உடை எச்சம் உயிர்க்கெல்லாம் வேறு அல்ல= ஊணும் உடையும் அவையொழிந்தனவும் மக்களுயிர்க்கெல்லாம் பொது— மாந்தர் சிறப்பு நாணுடைமை= நன்மக்கட்குச் சிறப்பாவது நாணுடைமையே, அவையல்ல. எ-று.



ஒழிந்தன= உறக்கமும் அச்சமும் காமமும். சிறப்பு=அவ்வுயிர்களின் வேறுபாடு. அச்சமென்று பாடமோதுவாருமுளர். (உ)

விளக்கம்:—உண்ணுதலும், உடுத்தலும், உறங்குதலும், அஞ்சுதலும், காம இன்பம் துய்த்தலும் மக்களாகப் பிறந்த எல்லோர்க்கும் பொதுவென்றும், அம்மக்களுள் நன்மக்கள் என்று சொல்லப் படுவோர்க்குச் சிறந்த குணம் நாணுடைமை ஒன்றேயாகுமேயன்றி மேற்கூறிய பொதுவாகிய குணங்களல்ல என்றும் இத்திருக்குறள்

கூறுவதால், உயிர்களெல்லாம் உண்பதும், உறங்குவதும், உடுப்பதும், அஞ்ச வேண்டுவதற்கு அஞ்சுவதும், துய்க்கவேண்டிய அளவில் காமத்தைத் துய்ப்பதும் ஆகிய செயல்களால் தம்மைக் காத்து உலகத்து வாழ்வது அத்துணைச் சிறப்புடைமை அல்லவென்றும், அவைகளுக்கு வேறாகிய நாணுடைமை என்பது ஒன்றினைத் தம் உயிரினும் மேம்பட்டதாகக்கொண்டு அந்நாணத்தோடு உயிர் வாழ்வாரே சிறப்புடையவராவர் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "நாணுடையாரே சிறப்புடையார் என்று நாணில்லாத உயிர்களினின்றும் பிரித்துக் காட்டியதை அறிந்தோம். ஆயின், நாணுடைமை சால்புடைமைக்கு மிக இன்றியமையாதது என்பதை ஓர் உவமையால் காட்டல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**1013. ஊனைக் குறித்த வுயிரெல்லா நாணென்னு**
**நன்மை குறித்தது சால்பு.**

(பரி.) இ-ள். உயிரெல்லாம் ஊனைக் குறித்த = எல்லாவுயிர்களும் உடம்பினைத் தமக்கு நிலைக்களனாகக்கொண்டு அதனை விடா;—சால்பு நாண் என்னும் நன்மை குறித்தது = அதுபோலச் சால்பு நாணென்னு நன்மைக் குணத்தைத் தனக்கு நிலைக்களனாகக்கொண்டு அதனை விடாது. எ-று.

உடம்பென்பது சாதியொருமை. நன்மை—ஆகுபெயர். உயிர் உடம்போடு கூடியல்லது பயனெய்தாதவாறுபோலச் சால்பு நாணோடு கூடியல்லது பயனெய்தாதென்பதாம். ஊனைக்குறித்தவென்று பாடமோதுவாருமுளர். (௩)

விளக்கம்:—உலகத்துத் தோன்றிய எல்லாவுயிர்களும் உடம்பினைத் தமக்கு இருக்கை இடமாகக்கொண்டு அவ்வுடம்பினை விட்டு விடா என்றும், அதுபோலவே சால்புடைமை என்பது நாணமென்னும் நல்ல குணத்தைத் தனக்கு இருப்பிடமாகக் கொண்டு அந்நா



ணினை விடாது என்றும் இத்திருக்குறள் கூறுவதால், உயிர் ஒன்று ஓர் உடம்பினைப்பெற்று அவ்வுடம்பினைக் காத்தாலன்றித் தான் எவ்வாறு அடையவேண்டிய பயனை அடைதல் கூடாதோ அதுபோல் சால்பு என்னும் குணமும் நாணுடைமை என்னும் நற்குணத்தோடு கூடியிருந்தாலன்றி அதன் பயனெய்துவதற்கு ஆகாது

என்று அறிகின்றோம். இதனால், உடலானது உயிர்க்கு எவ்வளவு இன்றியமையாததோ அதுபோல் சால்புடைமைக்கு நாண் என்பது இன்றியமையாதது என்று ஓர் உவமை வாயிலாக அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இந்நாணுடைமை என்பது சால்புடையோர்க்கு எவ்வித அழகினைச் செய்யும் என்பதையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1014. அணியன்றே நாணுடைமை சான்றோர்க் கஃதின்
 பிணியன்றே பீடு நடை. [றேற்

(பரி.) இ-ள். சான்றோர்க்கு நாணுடைமை அணியன்றே = சான்றோர்க்கு நாணுடைமை ஆபரணமாம்;—அஃது இன்றேல் பீடு நடை பிணியன்றே = அவ்வாபரணமில்லையாயின் அவர் பெருமிதத்தையுடைய நடை கண்டார்க்கும் பிணியாம் எ-று.

அழகுசெய்தலின் 'அணி' என்றும், பொறுத்தற் கருமையிற் 'பிணி' என்றுங் கூறினார். ஏகாரவிடைச்சொற்கள் எதிர்மறைக்கண் வந்தன. இவை மூன்றுபாட்டானும் அதன்சிறப்புக் கூறப்பட்டது. (௪)

விளக்கம்:—சான்றோர் என்பார்க்கு நாணுடைமை என்பது ஆபரணம் என்றும், அவ்வாபரணம் ஒன்று இல்லையாயின் அவர் பெருமிதங்கொண்டு நடக்கின்ற நடை பார்ப்பவர்க்கு நோயாகும் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், எல்லாச் சிறப்புக்களையும் பெற்று உலகத்து வாழ்ந்தாலும் நாணுடைமை என்னும் அழகு செய்யும் ஆபரணம் ஒன்றினை ஒருவன் அடையாவிட்டால் அவனுக்கு அழகு உண்டாகாதென்றும், அவ்வழகு ஒன்றினை அடையாது தான் மற்றைய குணங்களை அடைந்திருப்பதினாலேயே தன்னைப் பெரியனாக எண்ணிக் கர்வத்தோடு நடக்கின்ற நடையைப் பார்க்கின்ற பிறர்க்கு அந்நடையானது விடாது துன்பத்தைத் தரும் பொறுத்தற்கரிய நோய் போல் இருக்குமென்றும் அறிகின்றோம். இதனால் சால்புடைமைக்கு



நாண் ஒன்றே சிறந்தது என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "சால்புடையார் தமக்கு வரும் பழி ஒன்றிற்கே நாணுவரோ? அன்றி, ஏனையோர்க்கு வரும் பழிக்கும் நாணுவரோ?" என்

னலும், ஆசிரியர் கூறலாயினர்.

**1015. பிறர்பழியுந் தம்பழியு நாணுவார் நாணுக்
குறைபதி யென்னு முலகு.**

(பரி.) இ-ள். பிறர் பழியும் தம்பழியும் நாணுவார் = பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வரும் பழியையும் ஒப்பமதித்து நாணுவாரை — உலகு நாணுக்கு உறைபதி என்னும் = உலகத்தார் நாணுக்கு உறைவிடமென்று சொல்லுவர். எ-று.

ஒப்ப மதித்தல் = அவையுந்தமக்கு வந்தனவாகவே கருதுதல். அக்கருத்துடையார் பெரியராகலின், அவரை உயர்ந்தோர்யாவரும் புகழ்வரென்பதாம். இதனால் அதனையுடையாரது சிறப்புக் கூறப்பட்டது. (௫)

விளக்கம்:—பிறர்க்கு வரும்பழியினையும் தமக்கு வரும் பழியினையும் ஒன்றாகவே மதித்து நாணத்தைக் கொள்பவரே நாண் என்பது தங்குதற்கு ஓர் இடம் என்று உலகோர் புகழ்ந்து சொல்லுவர் என்று இத்திருக்குறள் கூறுவதால், நீங்கள் மேல் வினவிய வண்ணம் நல்லோர் தமக்கு வரும் பழியைக் கருதி அதற்காக நாணுவதுடன் பிறர்க்கு வரும் பழியையும் தமக்கு வந்ததுபோல் எண்ணி நாணத்தை அடைவர் என்றும், அவ்விதம் தம்மைப்போல் பிறரையும் எண்ணும் எண்ணமுடையார் மிகப் பெரியாராதலின், அவ்விதப் பெரியோரை உயர்ந்தோரெவரும் 'இவரே பெரியர்' என்று புகழ்ந்து பேசுவர் என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் நாணினை உடையாரது சிறப்பு இதுவென அறிந்தோம். ஆயின், இவ்விதம் நாணினைத் தமக்கு உயர்ந்த பொருளாகக் கருதுவோர் அதை ஒழித்து வேறு பொருளைத் தமக்குச் சிறந்த பொருளாகக் கருதமாட்டார் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

**1016. நாண்வேலி கொள்ளாது மன்னோ வியன்ஞாலம்
பேணலர் மேலா யவர்.**

(பரி.) இ-ள். மேலாயவர் = உயர்ந்தவர்,—வேலி நாண் கொள்ளாது = தமக்குக் காவலாக நாணினைக் கொள்வதன்றி,—வியன் ஞாலம் பேணலர் = அகன்ற ஞாலத்தைக்கொள்ள விரும்பார். எ-று.

*பழிபாவங்கள் புகுதாமற்காத்தலின், 'வேலி' என்றார். நாணும் ஞாலமும் தம்முண்மாறுபவழி அந்நாணினைக் கொள்வதல்லது அவை புகுநெறியாய ஞாலத்தினைக்கொள்ள விரும்பாரென்பதாம். மன்னும் ஓவும் அசை. நாணாகிய வேலியைப்பெற்றல்லது ஞாலம்பெற விரும்பாரென்றுரைப்பாருமுளர்.* (௬)

*விளக்கம்:—உயர்ந்தவர் ஆகிய பெரியோர் தமக்கு இவ்வுலகத்து இருமையை யடைவதற்குப் பெரிய ஆதாரமாகக் கொள்ளுகின்ற நாண் என்பதைக் கொள்ளுவது அல்லாமல்,மிகுதியும் அகன்ற இடத்தையுடைய இவ்வுலகம் முழுவதும் தாம் பெறுவதாயினும் அதனைக் கொள்ளவிரும்பார் என்று இத்திருக்குறள் கூறுவதால், நாண் ஒன்றினைத் தமக்குக் காவலாகக்கொண்டு நன்னெறியில் செல்ல எண்ணிய பெரியோர் பழியும் பாவமும் அடையவொட்டாது நன்னெறியிற் செலுத்தும் அந்நாணினைக் கொள்வரேயன்றி அந்நாண் ஒழிந்து நிற்பதாயின் இப்பூமி முழுவதையும் தாம் அடைவதற்கு ஏதுவிருக்கினும் இருமையுங் கெடுப்பதாகிய அவ்வழியிற் செல்லார் என்று அறிகின்றோம். இதனால், நல்லோர் இப்பூமி முழுவதையும் தாம் பெற்றுப் பழி பாவத்தை அடைவதானால் அப்பூமியைக் கொள்ளவிரும்பாது பழி பாவத்தைப் போக்கும் நாணினையே அடைய விரும்புவர் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நாண் வேலிகொண்டு வாழ்பவர் உலகத்தையும் மதியார் என்பீராயின், அந்நாண் ஒன்றின் பொருட்டு எதையும் விட்டுவிடுவர் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.*

**1017.** *நாணா லுயிரைத் துறப்ப ருயிர்ப்பொருட்டா*
*னாண்டுறவார் நாணாள் பவர்.*

*(பரி.) இ-ள். நாண் ஆள்பவர்=நாணினது சிறப்பறிந்து அதனை விடாதொழுகுவார்—நாணால் உயிரைத் துறப்பர்=அந்நாணு முயிருந் தம்முண் மாறுபவழி நாண்சிதையாமற்பொருட்டு உயிரை நீப்பர்,—உயிர்ப்பொருட்டு*

நாண் துறவார்=உயிர்நிலையாமைப்பொருட்டு நாணினை நீக்கார். எ-று.

உயிரினும் நாண்சிறந்ததென்பதாம். இவையிரண்டானும் அவர் செயல் கூறப்பட்டது. (எ)



விளக்கம்:—நாணினது சிறப்பு இது என்று அறிந்து அந்நாணினை விடாது நன்னெறியில் ஒழுகுவோர் அந்நாணை விட்டால் மாத்திரம் உயிர் இருப்பதாயினும் அவ்வுயிர் பொருட்டு நாணை விடமாட்டார் என்றும், நாணின் பொருட்டே உயிரை விட்டுவிடுவர் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், நாண் ஒன்றே பழிபாவங்களைப் போக்கிப் புகழையும் புண்ணியத்தையும் தரும் என்று எண்ணிய பெரியோர் தம் இன்னுயிர் நீங்குவதற்கு நாணுடைமையை இழந்தாலன்றி முடியாது என்னும் அவ்வித பெரியோர்க்கு ஆபத்து வந்த காலத்தும் அவ்வின்னுயிர் பொருட்டு நாணத்தைத் துறவார் என்று அறிகின்றோம். இதனால், நாணைச் சிறந்ததாகக்கொண்டவர் அருமையாகிய உயிரை அந்நாணிற்குமுன் சிறப்பாக எண்ணார் என்பது போந்த பொருளாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நாணே சிறப்புடையது என்று கருதிய பெரியோர் வேறு எதனையும் அதற்குச் சமானமாக எண்ணிக் கொள்ளார் என்று அவர் சொல்ல மேற்கூறிய இரண்டு திருக்குறள்களாலும் அறிந்தோம். இனி, இந்நாணிற்கு அஞ்சாதவரது தகுதி எதுவாகும் என்று அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1018. பிறர்நாணத் தக்கது தானாணா னாயி
னறநாணத் தக்க துடைத்து.

(பரி.) இ-ள். பிறர் நாணத்தக்கது தான் நாணானாயின்=கேட்டாரும் கண்டாரும் நாணத் தக்கபழியை ஒருவன் நாணாது செய்யுமாயின்,— அறம் நாணத்தக்கது உடைத்து=அந்நாணாமை அவனை அறம் விட்டுநீங்கத் தக்க குற்றத்தினை யுடைத்து. எ-று.

தானெனச் செய்வானைப் பிரிக்கின்றாராகலின், 'பிறர்' என்றார். நாணுடைமையில்லாதானை அறஞ்சாரா தென்பதாம். (அ)

விளக்கம்:—கேட்பவரும் காண்பவரும் நாணக்கூடிய பழி ஒன்றினை ஒருவன் சிறிதும் நாணாது செய்வானாயின், அவ்விதம் நாணாது செய்தல் அவனை அறம் என்பது விட்டு நீங்கத்தக்க குற்றத்தினுள் செலுத்திவிடும் என்று இத்திருக்குறள் கூறுவதால், நாண் என்பது யாவர்க்கும் ஓர் வேலியாக இருக்கின்றதென்றும், பிறர்கேட்டு காணத் தம் பார்த்த காலத்தும் இவ்வித பழியும் பாவமும் செய்கின்றனே



என்று அஞ்சக்கூடிய அவ்வித பழியையும் பாவத்தையும் சிறிதும் செய்வதற்கு அஞ்சாதும் உலகத்திற்கு நாணாதும் ஒருவன் செய்வானாயின், அவ்வித அஞ்சாச் செய்கையாகிய நாணில்லாமையானது அவனுக்கு அறத்தைப் போக்கிப் பாவத்தையும் உண்டாக்கும் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், “நாண் மனத்து இல்லாதவன் அறத்தை இழப்பான் என்று அறிந்தோம். ஆயின், அவனது நாணில்லாமையானது அறம் ஒன்றினைத்தான் கெடுக்கும்போலும்! வேறு ஓர் கேட்டினையும் அவனுக்கு உண்டாக்காதுபோலும்!” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1019. குலஞ்சுடுங் கொள்கை பிழைப்பி னலஞ்சுடு
நாணின்மை நின்றக் கடை.

(பரி.) இ-ள். கொள்கை பிழைப்பிற் குலம் சுடும்=ஒருவனுக்கொழுக்கம் பிழைக்குமாயின் அப்பிழைப்பு அவன்குடிப்பிறப்பொன்றனையும் கெடுக்கும்;—நாணின்மை நின்றக்கடை நலம் சுடும்=ஒருவன்மாட்டு நாணின்மை நின்றவழி அக்கிலை அவனலம் யாவற்றையுங் கெடுக்கும். எ-று.

நிற்றல்=ஒருபொழுது நீங்காமை. நலம்—சாதிபொருண்மையாகலின், பிறப்பு, கல்வி, குணம், செயல், இனமென்றிவற்றான் வருநலமெல்லாங்கொள்ளப்படும். ஒழுக்க வழியினும் நாணழிவு இறப்பத் தீதென்பதாம். (௯)

விளக்கம்:—ஒருவனிடத்தே உள்ள ஒழுக்கம் தவறுமானால் அவ்வித தவறுடைமை அவன் குடிப் பிறப்பு ஒன்றினையும் கெடுத்துவிடுமென்றும், ஆயின் ஒருவனிடத்தே நாண் இல்லாமை நீங்காது நிற்குமானால் அவ்விதம் நீங்காது நிற்கும் நிலைமை அவனுக்கு உரிய எல்லா நன்மைகளையும் போக்கிவிடும் என்றும் இத்திருக்குறள் கூறுவதால்,

ஒழுக்கம் தவறிய ஒருவனுக்குத் தான் பிறந்த குடியின் பெருமை ஒன்றினையும் இழக்க நேருமென்றும், ஆனால் நாணமற்றவன் ஒருவனுக்கு அவன் பிறப்பு, அவனது கல்வி, அவனுடைய குணம், அவனுடைய செயல், அவனுடைய இனம் ஆகிய எல்லா நலன்களும் போய்விடுமென்றும், உயிரினும் மேம்பட்ட ஒழுக்கத்தைக் காத்தல்வேண்டும் என்று ஒழுக்கமுடைமை என்னும் அதிகாரத்தில் கூறியிருந்தாலும், அவ்வொழுக்கமுடைமையை இழத்தலினும் நாணத்தை இழத்தல் எல்லாத் தீமைகளையும் தரும் என்பதால் ஒழுக்க அழிதலினும் நாண் அழிதல்



மிகத் தீங்கு உடையது என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நாண் இழப்பதால் அறத்தை இழப்பதுடன் எல்லாவற்றையும் இழத்தல்வேண்டும் என்று அறிந்தோம். ஆயின், இவ்வித நாணில்லார் உலகத்து இயங்கும் இயக்கத்தை எவ்விதமாகக் கருதுதல் வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1020. நாணகத் தில்லா ரியக்கம் மரப்பாவை
நாணா லுயிர்மருட்டி யற்று.

(பரி.) இ-ள். அகத்து நாண் இல்லார் இயக்கம்=தம்மனத்தின்கண் நாணில்லாத மக்கள் உயிருடையார்போன்றியங்குகின்ற வியக்கம்—மரப்பாவை நாணால் உயிர் மருட்டியற்று=மரத்தாற்செய்த பாவை இயந்திரக் கயிற்றினால் தன்னியக்கத்தால் உயிருடைத்தாக மயக்கினாற்போலும், எ-று.

கருவியே கருத்தாவாயிற்று. நாணில்லாத மக்களியக்கம் நாலுடைய பாவையியக்கம்போல்வதல்லது உயிரியக்கமன்றென்பதாம். இவை மூன்று பாட்டானும் நாணில்லாரதிழிவு கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—தம்மனத்தினிடத்தே நாணம் என்பதைக் கொள்ளாத மக்கள், உயிருடையவர்கள் போல் வசித்து வருகின்ற வாழ்க்கையானது மரத்தினால் செய்த பொம்மை ஒன்று அதனை அசைக்கின்ற இயந்திரக் கயிற்றில் அசைந்து அதனால் உயிருடையதுபோல உலகத்துள்ளாரை மயக்குகின்றதுபோலும் வேறு அல்ல என்று இத்திருக்குறள் கூறுவதால், மனத்து நாணத்தைக் கொண்டு வாழ்கின்ற மக்கள் வாழ்க்கையே உயிரோடு கூடிவாழும் இயற்கையை உடையது என்றும், அவ்வித

நாணம் இல்லாது எவ்விதமேனும் வாழ்ந்தால்போதும் என்று பழியையும் பாவத்தையும் ஏற்றுக் கொண்டு வாழ்பவர் வாழ்க்கை உயிரில்லாத மரத்தாற்செய்த பொம்மை ஒன்று தானே அசைவதற்கு இல்லாது தன்னை ஆட்டுவிக்கின்றவனது கையிலுள்ள கயிற்றால் அசைந்து உயிருடையதுபோல் பார்ப்பவரை மயக்கி எவ்வாறு தான் ஒரு பலனையும் அடையாது போய்விடுகின்றதோ அதுபோல் உலகத்து அடையவேண்டிய பயன் யாதொன்றையும் அடைவதற்கில்லாமல் போம் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நாணமில்லார்க்கு உண்டாகும் இழிவு இதுவென அறிந்தோம். இனி, நாணம் உடையார் தம்மை எவ்விதம் உயர்த்திக் கொள்வர்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



## 103-ம் அதிகாரம்.

---

## குடிசெயல்வகை.

(பரி.) அஃதாவது ஒருவன்றான் பிறந்தகுடியை உயரச்செய்தலின் திறம். இது தாழ்வின்கண் நாணுதலுடையார்க்குளதாகலின் நாணுடைமையின் பின் வைக்கப்பட்டது.

விளக்கம்:—அதாவது ஒருவன்தான் எக்குடியில் தோன்றினானோ அக்குடியை உயரச் செய்வதற்கு வேண்டிய திறமாகும். நற்குடிப் பிறந்தார்க்குச் செல்வமும் நாணமும் ஆகிய இரண்டும் ஒன்றாக வாய்க்குமென்று குடிமை என்னும் அதிகாரத்திலுள்ள முதற் றிருக்குறளால் கண்டோம் ஆதலால், இங்கும் அக்குடியினை உயர்த்தவேண்டிய ஒருவன் நாணுடைமை கொள்ளுதல் வேண்டும் என்று அறிவதற்கு நாணுடைமை கூறிய அதிகாரத்திற்குப் பிறகு குடிசெயல்வகை என்னும் இவ்வதிகாரம் வைக்கப்பட்டுள்ளது என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவன் தன் குடியை உயர்த்துவது அவனுக்கு மிகுதியும் பெருமையை உண்டுபண்ணும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

**1021.** கருமஞ் செயவொருவன் கைதூவே னென்னும்
பெருமையிற் பீடுடைய தில்.

(பரி.) இ-ள். கருமம் செயக் கைதூவேன் என்னும் பெருமையின் = தன் குடி செய்தற்பொருட்டுத் தொடங்கிய கருமமுடியாமையின் எண்ணியகருமஞ் செய்தற்கியான் கையொழியேனென்னும் ஆள்வினைப் பெருமைபோல — ஒருவன் பீடு உடையது இல் = ஒருவனுக்கு மேம்பாடுடைய பெருமை பிறி தில்லை, எ-று.

குடிசெய்தற்கென்பது அதிகாரத்தான் வந்தது. பலவகைத்தாய கருமஞ் செயலாற் செல்வமும் புகழுமெய்திக் குடியுயருமாகலின், 'பீடுடையதில்' என்றார். குடிசெய்தற் கருமமே நடத்தலால், தன்கருமஞ்செய்யவென்றும் பிறர்கருமஞ்செய்யவென்று முரைப்பாருமுளர்; தன்கருமமும் அதுவேயாகலானும், பிறரேவல் செய்தல் தலைமையன்மையானும், அவை யுரையன்மையறிக. (க)

விளக்கம்:—தன் குடியை உயரச் செய்வதற்காக ஆரம்பித்த தொழிலானது முடியாதுபோமாயின் அவ்விதம் உயரச் செய்வதற்கு



உரியதாகிய தொழிலை 'நான் விட்டுவிடாது செய்து முடிப்பன்' என்னும் முயற்சியால் வருகின்ற பெருமைபோல ஒருவனுக்கு மேலாகிய பெருமை வேறு ஒன்று இல்லை என்று இத்திருக்குறள் கூறுவதால், தன் குடியை உயர்த்த வேண்டுவோன் ஒருவன் பலவித தொழில்களைச் செய்து அத்தொழில்களால் வரும் செல்வத்தையும் புகழையும் அடைந்து அதனால் குடி உயர வேண்டுமென்றும், அவ்விதம் குடி உயர்வதற்கு எடுத்த காரியங்களை விடாது முயற்சிப்பார் பெருமையே பெருமை என்றார், மற்றையவற்றால் வரும் பெருமை அவ்வித மேலாகிய பெருமை அல்லவென்றும் அறிந்தோம் என்றனர். அதைக்கேட்ட மாணாக்கர், "ஒருவன் தன் குடியை உயர்த்த வேண்டுமாயின் முயற்சி ஒன்று இருப்பின் உயர்த்திவிடுதல் கூடும்போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

**1022.** ஆள்வினையு மான்ற வறிவு மெனவிரண்டி

நீள்வினையால் நீளுங் குடி.

(பரி.) இ-ள். ஆள்வினையும் ஆன்ற அறிவும் என இரண்டின் நீள்வினையால் = முயற்சியும் நிறைந்த அறிவுமென்று சொல்லப்பட்ட இரண்டினையு முடைய இடையறாத கருமச்செயலால்—குடி நீளும் = ஒருவன் குடி உயரும்.

நிறைதல் = இயற்கையறிவு செயற்கையறிவோடு கூடி நிரம்புதல். ஆள்வினை—மடிபுகுதாமற்பொருட்டு. ஆன்றவறிவு—உயர்தற்கேற்ற செயல்களும் அவை முடிக்குந்திறமும் பிழையாமலெண்ணுதற்பொருட்டு. இவையிரண்டு பாட்டானும் அச்செயற்குக் காரணங் கூறப்பட்டது. (௨)

விளக்கம்:—முயற்சி என்றும், நிறைந்த அறிவு என்றும் சொல்லப்பட்ட இரண்டு குணங்களையுமுடைய ஒருவன் நடுவில் விட்டுப் போகாமல் எக்காலத்தும் செய்து வருகின்ற தொழிலின் செய்கையால் அவனுடைய குடியானது உயரும் என்று இத்திருக்குறள் கூறுவதால், மேற் கூறியபடி ஒருவன் தன் குடியை உயர்த்துவதற்கு எடுத்த தொழில்களைச் சோம்பலில்லாமல் நடத்தும்வண்ணம் முயற்சிகொண்டிருப்பதுடன் அவ்வித முயற்சிகொண்டு தான்செய்த காரியங்களை முடிக்கின்ற திறத்தையும், முடிப்பதில் கெட்டுப் போகாமல் இருப்பதை எண்ணி எண்ணிச் செய்யும் திறத்தையும் அடைவதற்கு, தனக்குள்ள இயற்கை யறிவோடு செயற்கை அறிவாகிய கல்வி முதலியவைகளும்



வேண்டும் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "குடி உயரச் செய்வதற்குக் காரணம் உணர்ந்தோம். இவ்வித காரணத்தால் எடுத்த தொழிலை முடித்துவிடுதல் கூடுமாயின் ஊழ்வலி என்பது ஒன்று வேண்டுவதில்லைபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1023. குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வ
மடிதற்றுத் தான்முந் துறும்.

(பரி.) இ-ள். குடி செய்வல் என்னும் ஒருவற்கு = என்குடியினை உயரச் செய்யக் கடவேனென்று கருதி அதற்கேற்ற கருமங்களின் முயலும் ஒருவனுக்கு—தெய்வம் மடிதற்றுத் தான் முந்துறும் = தெய்வம் ஆடையைத் தற்றுக்கொண்டு தான் முந்துற்று நிற்கும். எ-று.

முயற்சியை அதன் காரணத்தாற் கூறினார். தற்றுதல் = இறுகவுடுத்தல்.

முன்னடப்பார் செயல் நியதிமேலேற்றப்பட்டது. (௩)

விளக்கம்:—'என் குடியினை உயரச் செய்வதே என்னுடைய கடமை' என்று மனத்துட் கொண்டு அதற்கு ஏற்றவாகிய கருமங்களில் முயற்சி செய்யும் ஒருவனுக்குத் தெய்வமானது தான் உடுத்தியிருக்கும் ஆடையை அவிழ்த்து போகாவண்ணம் நன்றாக இறுக்கிக் கட்டிக் கொண்டு அம்முயற்சியுடையான் முன்னர் வந்து நிற்கும் என்று இத் திருக்குறள் கூறுவதால், முயற்சியுடையவன் ஒருவனுக்கு அவ்வெண் ணத்தை உண்டுபண்ணுவது அவனது ஊழே என்றும், அவ்வூழின் வழியால் எடுத்த கருமம் முடியும் என்றும், முயற்சி என்பது துணைக்கார ணமும் ஊழ் என்பது முதற் காரணமும் ஆக உள்ளன என்றும், எதற்கும் நியதி என்னும் தெய்வத்துணை வேண்டும் என்றும் அறி கின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் ஊழாகிய தெய்வம் முயற்சியைக் கொண்ட ஒருவனது தொழிலை முடிப்பதற்கு அவனுக்கு முன்னே நடந்து செல்லுவதால், அவன் எடுத்த காரியங்கள் பழுதுபடாமல் முடியுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1024. சூழாமற் றானே முடிவெய்துந் தங்குடியைத்
தாழா துஞற்று பவர்க்கு.

(பரி.) இ-ள். தங்குடியைத் தாழாது உஞற்றுபவர்க்கு = தங்குடிக்காம் வினையை விரைந்து முயல்வார்க்கு—சூழாமல் தானே முடிவெய்தும் = அவ் வினை முடிக்குந் திறம் அவர் சூழவேண்டாமற் றானே முடிவெய்தும். எ-று.



குடி—ஆகுபெயர். தெய்வமுந்துறுதலாற் பயன்கூறியவாறு. இவை இரண்டுபாட்டானும் அதற்குத் தெய்வத்துணையாதல் கூறப்பட்டது. (௪)

விளக்கம்:—தம்முடைய குடியை உயரச் செய்வதற்கு ஆகும் தொழிலை விரைவாக முயலவல்லார்க்கு அத்தொழிலை முடிக்கின்ற வல் லமை அவர் ஆலோசியாமலே தானே வந்து முடிவினையடையச்செய்யும் என்று இத்திருக்குறள் கூறுவதால், தெய்வம் முயற்சி செய்பவனுக்குத்

துணையாக நிற்குமென்றும், முதற் காரணமாகிய அறிவும் உடையார்க்கு முயற்சியென்றும் துணைக் காரணம் ஒன்றே வேண்டுவது என்றும், தாம் செய்து முடிக்கும் தொழிலுக்கு ஆலோசனை முதலியவைகளும் செய்யவேண்டாம் என்றும், அத்தொழில் பழுதுபடாது நடக்கும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் குடி உயர முயற்சி செய்வானை உலகோர் எவ்விதம் விரும்புவர்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1025. குற்ற மிலனாய்க் குடிசெய்து வாழ்வானைச்
சுற்றமாச் சுற்று முலகு.

(பரி.) இ-ள். குற்றம் இலனாய்க் குடி செய்து வாழ்வானை=குற்றமாயின செய்யாது தன்குடியை யுயரச்செய் தொழுகுவானை—சுற்றமாச் சுற்றும் உலகு=அவனுக்குச் சுற்றமாகவேண்டித் தாமே சென்று சூழ்வர் உலகத்தார். எ-று.

குற்றமாயின=அறநிலைக்கு மறுதலையாய செயல்கள். தாமும் பயனெய்தலுற்று யாவருஞ்சென்று சார்வரென்பதாம். (௫)

விளக்கம் :—குற்றந் தரக்கூடியனவாகிய காரியங்கள் எவையும் செய்யாது தன்குடி உயரவேண்டிய காரியம் ஒன்றினையே செய்து வாழ்கின்ற ஒருவனை உலகத்தார் தாமே சென்று அவனுக்குச் சுற்றமாக இருக்கவேண்டி அவனைச் சூழ்ந்துகொள்ளுவர் என்று இத்திருக்குறள் கூறலினால், அறத்திற்கும் நீதிக்கும் எதிரான பாவத்தையும் அநீதியையும் செய்யாது ஒருவன் அறத்தோடும் நீதியோடும் தன்குடி உயர்வதற்குரிய செல்வத்தையும் புகழையும் கொண்டு வாழ்வானாயின், அவ்வித தகுதியுடையானை உலகத்தவர் 'நாம் இவனுக்குச் சுற்றமாக இருப்பின் இவன் அடையும் புண்ணியத்தையும் புகழையும் அடைந்து இம்மை மறுமைப் பயன்களை அடைதல் கூடும்' என்று அவனைச் சுற்றிக்கொள்ளுவர் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "குடி



உயரச் செய்வானுக்கு உலகம் யாவும் சுற்றமாகு மென்பதை யறிந்தோம். இவ்வித தகுதியுடையானை உலகோர் சுற்றிக்கொள்ளுவதால் அவர்க்கு இவன் ஏதேனும் செய்தல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர்

கூறுவாராயினர்.

1026. நல்லாண்மை யென்ப தொருவற்குத் தான்பிறந்த
வில்லாண்மை யாக்கிக் கொளல்.

(பரி.) இ-ள். ஒருவற்கு நல்லாண்மை என்பது=ஒருவனுக்கு நல்லாண்மையென்று உயர்த்துச்சொல்லப்படுவது—தான் பிறந்த இல்லாண்மை ஆக்கிக்கொளல்=தான் பிறந்த குடியினையாளுந் தன்மையைத் தனக்கு உளதாக்கிக் கோடல். எ-று.

போர்த்தொழிலின் நீக்குதற்கு 'நல்லாண்மை' என விசேடித்தார். குடியினையாளுந் தன்மை=குடிப்பிறந்தாரை யுயரச்செய்து தன் வழிப்படுத்தல். அதனைச் செய்துகோடல் நல்லாண்மையாமாறு வருகின்ற பாட்டாற் பெறப்படும். (௬)

விளக்கம் :—தான் பிறந்த குடியினை ஆளும் தன்மையினைத் தனக்கு உள்ளதாக்கிக் கொள்ளுதலையுடைய ஒருவனை நல்ல ஆண்மையுடையவன் என்று உயர்வாக உலகத்தோர் சொல்லுவர் என்று இத் திருக்குறள் கூறுவதால், தன் குடிக்கு ஆவன எவை என்று அறிந்து, செய்யுங்காலத்து அவற்றை எல்லாம் தன்மீது சுமத்திக்கொண்டு பிறர்க்கு யாதொரு பாரத்தையும் சுமத்தாது தாங்கிக்கொள்ளும் தன்மையுடையானை நல்ல ஆண்மையுடையவன் என்று உலகத்தோர் சொல்லுவர் என்றும், அவன் குடியில் வந்தார்க்கு அவன்செய்யும் துணை அவரை உயரச்செய்வது என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் போரில் வல்லவர்கள் செய்யும் ஆண்மையை ஆண்மை என்றும், இதனை நல்லாண்மை என்றும் விசேடித்துக் கூறியதால், இவனது நல்லாண்மையை ஓர் உவமை வாயிலாக அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1027. அமரகத்து வன்கண்ணர் போலத் தமரகத்து
மாற்றுவார் மேற்றே பொறை.

(பரி.) இ-ள். அமரகத்து வன்கண்ணர்போல=களத்தின்கட்சென்றார் பலராயினும் போர்தாங்குதல் வன்கண்ணர்மேலதாகும்போல;—தமரகத்தும்

பொறை ஆற்றுவார் மேற்றே = குடியின்கட் பிறந்தார் பலராயினும் அதன் பாரம் பொறுத்தல் அதுவல்லார் மேலதாம். எ-று.

பொருட்கேற்கவேண்டுஞ்சொற்கள் உவமைக்கண் வருவிக்கப்பட்டன. நன்குமதிக்கப்படுவார் அவரேயென்பதாம். இவை மூன்றுபாட்டானும் அது செய்வாரெய்துஞ் சிறப்புக் கூறப்பட்டது. (எ)

விளக்கம் :—யுத்தகளத்தில் சென்றோர் பலராக இருக்கினும் அக்களத்தில் யுத்தத்தைத் தாங்கிநிற்பது அஞ்சாத நெஞ்சுடையார்க்கே ஆவதுபோல், ஓர் குடியில் பிறந்தவர்கள் பலராயினும் அக்குடியின் பாரத்தைப் பொறுத்துக் கொள்ளுதல் வல்லவர்க்கே ஏற்கும் என்று இத்திருக்குறள் கூறுவதால், புறமுதுகிடாத அஞ்சா நெஞ்சினையுடையவனே யுத்தத்தில் முன்னின்று போர் செய்து தன்னையும் தன்னோடு உள்ள ஏனைய வீரரையும் தாங்குவதுபோல், ஒரு குடியில் பலர் தோன்றினும் தோன்றிய அப்பலருள் ஒருவனே தன் குடியை உயர்த்துவதற்கு வேண்டியவை எல்லாம் செய்து அப்பாரம் முழுவதையும் பொறுத்துத் தனக்கும் ஏனையோர்க்கும் புகழையும் புண்ணியத்தையும் உண்டுபண்ணுவான் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "மேற்கூறிய மூன்று திருக்குறள்களாலும் குடியை உயர்த்துவோன் யாவராலும் நன்கு மதிக்கப்படுவான் என்றும், நல்லாண்மை உடையவன் ஆவான் என்றும், அவனுக்குள்ள சிறப்புக்கள் யாவும் அறிந்தோம். இவ்விதம் குடிசெய்பவன் காலம் முதலியவற்றைக் கருதிச் சிறிது சோம்பலாக இருப்பானாயின், அதனால் என்னவாகும்?" என்றதும், ஆசிரியர் கூறலாயினர்.

1028. குடிசெய்வார்க் கில்லைப் பருவம் மடிசெய்து
மானங் கருதக் கெடும்.

(பரி.) இ-ள். மடிசெய்து மானம் கருதக் கெடும் = தங்குடியினை உயரச்செய்வார் அச்செயலையே நோக்காது காலத்தைநோக்கி மடியினைச் செய்துகொண்டு மானத்தையுங் கருதுவாராயிற் குடிகெடும் ;—குடி செய்

(பரி.) இ-ள். இடுக்கண் கால் கொன்றிட வீழும் = துன்பமாகிய நவியம் புகுந்து தன்முதலை வெட்டிச் சாய்க்க ஒருபற்றின்றி வீழாநிற்கும்—அடுத்து ஊன்றும் நல்லாள் இலாத குடி = அக்காலத்துப் பற்றுக்கோடாய்த் தாங்கவல்ல நல்லாண்மகன் பிறவாத குடியாகிய மரம். எ-று.

முதல் = அதன் வழிக்குரியார். வளர்ப்பாரைப் பெற்றுழி வளர்ந்து பயன்படுதலும் அல்லவழிக் கெடுதலுமுடைமையின், 'மரமாக்கினார்; "நன்கு நிறை வாழ்வுறு தொன்மரங் கன்ன—போர்க்குல மயங்க ஊட்பிரக்கு வீர—தாங்கவல்லன்" என்றார் பிறரும். இது ஏகதேசவுருவகம். இதனான் அஃதில்லாத குடிக்குறுவதூஉங் குற்றம் கூறப்பட்டது. . . . (10)



விளக்கம் :—துன்பம் புகுந்த காலத்து பற்றுக்கோடாவனவற்றைக் கொடுத்துத் தாங்கக்கூடிய நல்ல ஆண்மகன் ஒருவன் பிறவாத குடியானது, கோடரி ஒன்று புகுந்து தன் முதலாகிய அடியினை வெட்டிச் சாய்த்தலும் தக்கிய பற்றுக்கோடும் இல்லாமல் வீழ்ந்துவிடும் மரம்போலாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால் மரம் ஒன்று வளர்ப்பார் இருப்பாராயின் வளர்த்தவர்க்கும் பிறர்க்கும் வளர்ந்து பயன் படுவதும் அவ்விதம் வளர்ப்பாரில்லாவிடில் கெட்டுப் போதலும் எவ்விதமோ அதுபோல் ஓர் குடியும் பல துன்பங்களால் கெடாவண்ணம் தாங்கக்கூடிய நல்லாண்மை உடைய ஓர் தக்கோனைப் பெறாவிடின் பயன் தராது அடியோடு அழிந்துபோம் என்று அறிந்ததாகிற்று. இதனால் தனக்கு வரும் துன்பத்தை எல்லாம் பொறுத்துத் தன் குடிக்கு உரியாரைக் காப்பாற்றக் கூடிய ஒருவன் இல்லாவிடில் அக்குடி உயராது என்று கூறியதாகிற்று. இதனை மேல் பரிமேலழகர் குறித்துள்ள சீவக சிந்தாமணி காந்தர்வதத்தையார் இலம்பகம் ஆறாவது செய்யுளால் அறிதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "குடியை உயர்த்துவான் செய்கின்ற முயற்சிகளுள் எவ்வித முயற்சி மிகச் சிறந்தது?" என்னலும், ஆசிரியர் கூறலுறாயினர்.

---

## 104-ம் அதிகாரம்.

பட்டது. (ச)

விளக்கம்:—உழுவதினால் வருகின்ற தேக வருத்தத்தைப் பார்த்து உழுதல் தொழில் நீங்கலாகிய மற்றைய தொழில்களைச் செய்து திரிந்தாலும் முடிவில் ஏர்கொண்டு உழுகின்ற உழவர் வழியில் நிற்பதாகவே உலகம் உள்ளது என்றும், எவ்வித வருத்தத்தை அடையினும் தலைசிறக்கும் தொழில் உழவு என்பதேயாகும் என்றும் இத்திருக்குறள் கூறுவதால் எவ்விதமாகிய தொழிலை எவர் செய்பினும் அத்தொழிலினால் வரும் பொருளைக்கொண்டு பிழைக்கவேண்டிய காலத்ததுக்கு வேண்டிய உணவின் பொருட்டாக அவ்வுணவை உழுது பயிரிடுகின்ற வேளாளரிடத்தே சென்று பெறுதல் வேண்டுமென்றும், ஏனைய தொழில்கள் எத்துணைச் சுலபமாக இருக்கினும் மிருதியும் தேகத்திற்குத் துன்பத்தைத் தரும் உழவுத்தொழிலே தலைமையாகிய தொழிலென்றும் அறிந்தோம். இதனால் உழவுத்தொழிலே சிறந்தது என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்விதம் மெய்வருத்தம் பாராது செய்கின்ற உழவுத் தொழிலே தலை என்பதை இன்னும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



1032. உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா
தெழுவாரை யெல்லாம் பொறுத்து.

(பரி.) இ-ள். அஃது ஆற்றாது எழுவாரை எல்லாம் பொறுத்து=அவ்வுழுதலைச் செய்யமாட்டாது பிறதொழில்கண்மேற்செல்வார் யாவரையுந் தாங்குதலால்,—உழுவார் உலகத்தார்க்கு ஆணி=அதுவல்லார் உலகத்தாராகிய தேர்க்கு அச்சாணியாவர். எ-று.

"காடுகொன்று நாடாக்கிக் குளந்தொட்டு"* என்றாற்போல உழுவாரென்றது உழுவிப்பார்மேலுஞ் செல்லும். உலகத்தாரென்றது ஏனைத்தொழிலாளரைக் கலங்காமல்நிறுத்தற்கண் ஆணிபோறலின், 'ஆணி' என்றார். பொறுத்தலென்பது நிற்கின்றது. ஏகதேசவுருவகம். அஃதாற்றா தொழுவாரேயெல்லாம் பொறுத்தென்று பாடமோதி, அதுமாட்டாதார்

புரப்பார்செய்யும் பரிபகமெல்லாம் பொறுத்து அவரைத் தொழுவாரேயாவ ரென்றுரைப்பாருமுளர். (உ)

விளக்கம்:—அவ்வுழவுத் தொழிலைச் செய்வதற்குத் தம்மால் முடியாமல் அது நீங்களாக வேறு தொழில்களை மேற்கொண்டு செல்லுகின்றவர்கள் எல்லோரையும் தாங்கி நிற்பதால், அவ்வித உழவுத் தொழிலில் வல்லவர்களாய் உள்ளவர்கள் உலகத்தாராகிய தேரினுக்கு அச்சாணி போல் இருக்கின்றனர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆகவே, தேகவருத்தம் நோக்கி உழுதல் தொழிலைச் செய்யாது வேறு தொழில்களில் சென்று நிற்பார்க்கு உணவுப் பொருளைத் தந்து உயிர் வாழ்தலில் கலக்கம் அடையாமல் இருக்கும் வண்ணம் செய்கின்ற உழுதல் தொழிலைச் செய்பவரும் பிறரைக்கொண்டு உழுவித்தலாகிய தொழிலைச் செய்கின்றவரும் தேரைத் தாங்கிநிற்கும் அச்சாணிபோல் இருக்கின்றனர் என்று அறிகின்றோம். உழவுத் தொழிலைத் தாமே செய்து வாழ்பவரை உழுவார் என்றும், தம் செல்வ மிகுதியால் தாம் அத்தொழிலைச் செய்யாது பிறரைக்கொண்டு உழுவித்து வாழ்பவரை உழுவிப்பார் என்றும், வேளாளரிலும் இருவிதமாகிய வேளாளர் உண்டு என்பதைத் தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் இருபத்தொன்பதாவது சூத்திரம் "மேலோர் முறைமை நால்வர்க்கும் உரித்தே" என்பதனாலும் காணக்கிடக்கும். இதனால், உழுதல் தொழிலே சிறந்த தொழில் என்றும், ஏனைய தொழில்கள் தொழில்களாகாவென்றும் பிரித்துக் காட்-

* பட்டினப்பாலை.



டியதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஏனைய தொழில்கள் தொழில்களாகா வென்பதை விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1033. உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்
தொழுதுண்டு பின்செல் பவர்.

(பரி.) இ-ள். உழுது உண்டு வாழ்வாரே வாழ்வார் = யாவரும் உண்ணும் வகை உழுதலைச்செய்து அதனாற்றாமும் உண்டு வாழ்கின்றாரே தமக்குரியராய் வாழ்கின்றார்;—மற்றெல்லாம் தொழுது உண்டு பின்செல்பவர் = மற்றையாரெல்லாம் பிறரைத்தொழுது அதனாற்றாமுண்டு அவரைப் பின்செல்கின்றார். எ-று.

மற்றென்பது வழக்குப்பற்றி வந்தது. தாமு மக்கட்பிறப்பினராய் வைத்துப் பிறரைத்தொழுது அவர் சிலகொடுப்பத் தம்முயிரோம்பி அவர்பின்செல்வார் தமக்குரியரல்லரென்பது கருத்து. (௩)

விளக்கம்:—உலகத்தில் உள்ளார் யாவரும் உண்டு பிழைக்கும் விதம் உழுதல் தொழிலைச் செய்து அதனால் தாமும் உண்டு பிழைத்து வாழ்கின்ற மக்களே தம் சுதந்திரத்திற்கு உரியவராய் வாழ்கின்றவர் என்றும், அவ்விதம் உழுதல் தொழிலைச் செய்யாது வேறு தொழில்களைச் செய்பவர் மற்றவரை வணங்கித் தொழில் செய்து அத்தொழிலால் தாம் மாத்திரம் உண்பதுடன் தம்மைத் தொழிலாளராகக் கொள்ளுகின்ற தலைவர்க்கும் பின் செல்பவராயும் உள்ளனர் என்று இத்திருக்குறள் கூறுவதால், மக்கட் பிறப்பில் தாமும் ஒருவராய் இருந்தும் பிறரை வணங்கி அவர் ஏவிய தொழிலைச் செய்து அத்தலைவர் ஏதேனும் சில கொடுத்தலால் தம்முடைய உயிரைக் காத்துக் கைகட்டி வாய் பொத்தி அவர் மொழியை மீறாது அவருக்குப் பின்பே செல்லுகின்ற மக்கள் சுதந்தரத்தோடு வாழ்வதற்கு உரியரல்லர் என்றும், தமக்கு உரிய உழவுத் தொழிலைச் செய்து சுதந்தரத்தோடு தாமும் வாழ்ந்து உலகத்தாரையும் உண்பித்து அவரையும் வாழச் செய்பவரே மக்கட் பிறப்பினராய் வாழ்பவர் என்றும் அறிகின்றோம். ஆதலால், உழுதற்றொழிலே நற்றொழில் என்பதை நன்றாகக் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வுழவினர் உலகத்தினரைக் காப்பர் என்றமையால் உலகைக் காக்கும் அரசனையும் காக்க வல்லரோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



1034. பலகுடை நீழலுந் தங்குடைக்கீழ்க் காண்ப

அலகுடை நீழ லவர்.

(1௪.) இ-ள். அலகு உடை நீழலவர் = உழுதற்றொழிலான் செல்வினையுடையராய தண்ணளியுடையோர்—பலகுடை நீழலும் தங்குடைக்கீழ்க் காண்பர் = பலவேந்தர் குடைநிழலதாய மண்முழுதினையும் தம்மரசன் குடைக்கீழே காண்பர். எ-று.

அலகு = கதிர்; அஃதீண்டாகுபெயராய் நென்மேலதாயிற்று. உடைய வென்பது குறைந்து நின்றது. நீழல்போறலின், நீழலெனப்பட்டது. நீழலவ ரென்றது இரப்போர்க்கெல்லாம் ஈதலுடையாரை. ஒற்றுமைபற்றித் 'தங்குடை' என்றார். குடைநிழலென்பதூஉம் ஆகுபெயர். "ஊன்று சால் மருங்கி னீன்றதன் பயனே"* என்றதனால் தம்மரசனுக்குக் கொற்றம்பெருக்கி மண்முழுதும் அவனதாகக்கண்டிருப்பரென்பதாம்; "இரப்போர்சுற்றமும் புரப்போர் கொற்றமு முழவிடை விளைப்போர்"† என்றார் பிறரும். (௪)

விளக்கம் :— உழுதற்றொழிலால் செல்வினை உடையவராய அருளுடையோர் தம் வேந்தரல்லாத மற்றைய வேந்தர்களால் ஆளப்பட்ட பூமி முழுவதையும், தம் வேந்தர் ஆணையின் கீழ் இருக்கும்படிச் செய்வார் என்று இத்திருக்குறள் கூறுவதால், உழவர் தம் தொழிலை நன்றாகச் செய்து அதனால் வந்த உணவுக்குரிய செல்வினைமிகுதியும் பெற்றிருப்பாராயின், அவ்வருவாயைக் கொண்டு தம் அரசன் மிகப் பொருள் படைத்தவனாகி ஏனைய அரசர்களை எல்லாம் பொருள் பலத்தால் வென்று அவ்வரசர்களால் ஆளப்படும் நாடுகளையும் தன்னுடையவாக்கிக் கொள்ளச்செய்தலாலும், அன்றியும் யாசிப்போர்க்கெல்லாம் ஈதல் தொழிலைச் செய்து வறுமை என்னும் வெயிலால் வருந்துகின்ற அவரைத் தம் கொடை என்னும் நிழலில் இருத்தி நிலைநிறுத்தலானும், உரையாசிரியர் சிலப்பதிகாரம் நாடுகாண் காதையினின்று எடுத்துக் காட்டிய உதாரணத்தின் வண்ணம் இரப்போர்க்குச் சுற்றமாயும் புரப்போராகிய அரசர்க்கு வெற்றியுமாயும் இருப்பவர் உழவரே என்று அறிகின்றோம் என்றனர். அதைக்கேட்ட மாணாக்கர், "இவ்விதம் அரசர்க்கு வெற்றியும் இரப்போர்க்குச் சுற்றமுமாக உள்ள இவ்வுழவர் எவ்விடத்தும் யாதொன்றினையும் யாசிக்க மாட்டாரோ" என்னவும், ஆசிரியர் கூறலாயினர்.

---

* புறநானூறு, 35. † சிலப்பதிகாரம், நாடுகாண் காதை, 149.

**1035. இரவா ரிரப்பார்க்கொன் றீவர் கரவாது
கைசெய்தூண் மாலை யவர்.**

(பரி.) இ-ள். கைசெய்தூண் மாலையவர் இரவார் = தங்கையா லுழுதுண்டலை யியல்பாகவுடையார் பிறரைத் தாமிரவார்;—இரப்பார்க்கு ஒன்று கரவாது ஈவர் = தம்மை யிரப்பார்க்கு அவர்வேண்டியதொன்றனைக் கரவாது கொடுப்பர். எ-று.

செய்தென்பதற்கு உழுதலென வருவிக்க. கைசெய்தூண் மாலையவ ரென்பது ஒருஞான்றும் அழிவில்லாத செல்வமுடையரென்னும் ஏதுவை யுட்கொண்டு நின்றது. (௫)

விளக்கம்:—தம்முடைய கையால் உழுதல் தொழிலைச் செய்து உண்ணுதலைத் தமக்கு இயற்கையாக உடையவர்கள் தாம் பிறரிடம் சென்று இரக்கமாட்டார்களென்றும், ஆனால், தம்மிடத்து வந்து இரப்பவர்க்கு அவர் வேண்டியதெதுவோ அதனை ஒளிக்காது கொடுப்பர் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், மெய் வருத்தம் நோக்காது பருவமறிந்து உழுதற்றொழிலைச் செய்து அதனால் வந்த அழிவில்லாத செல்வத்தை உடையவர் எக்காலத்தும் எவரிடத்தும் எப்பொருளையும் சென்று யாசியார் என்றும், ஆனால் தம்மிடம் வந்தவர் எவர்க்கும் எக்காலத்தும் எப்பொருளையும் இல்லை என்னாது கொடுப்பர் என்றும் அறிகின்றோம். இதனால் உழவினர் எக்காலத்தும் இழிவாகிய யாசகத்தைச் செய்யமாட்டார் என்பதாயிற்று. அதுகேட்ட மாணாக்கர், "இவ்வுழவர் அரசன் முதல் யாசகன் வரையில் தாங்குவார் என்று அறிகின்றோம். ஆயின், வேந்தனையும் துரும்பாக எண்ணுகின்ற துறவி என்பானுக்கு ஏதேனும் இவரால் உதவி உண்டாகுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

**1036. உழவினர் கைம்மடங்கி னில்லை விழைவதூஉம்
விட்டேமென் பார்க்கு நிலை.**

(பரி.) இ-ள். உழவினார் கை மடங்கின் = உழுதலையுடையார் கை அதனைச்செய்யாது மடங்குமாயின், — விழைவதூஉம் விட்டேம் என்பார்க்கு நிலை இல்லை = யாவரும் விழையுமுணவும் யாம் துறந்தோமென்பார்க்கு அவ்வறத்தின்கணிற்றலுமுளவாகா. எ-று.



உம்மை இறந்ததுதழீஇயன்றும் வந்திலையத்தது. உணவின்மையால், தாமுண்டலும் இல்லறஞ்செய்தலும் யாவர்க்குமில்லையாயின, அவ்வறுப்புமாத்திரமாயவை வாளாவிருப்பின் உலகத்து இம்மை மறுமை வீடென்னும் பயன்கள் நிகழாவென்பதாம். ஒன்றனை மனத்தால் விழைதலு மொழிக்தேமென்பார்க்கென வுரைப்பாரு முளர். இவையிரண்டு பாட்டானும் அதனைச் செய்வாரது சிறப்புக் கூறப்பட்டது. (சு)

விளக்கம்:—உழுதல் தொழிலைச் செய்பவர் கையானது அத்தொழிலைச் செய்யாது இருக்குமாயின், எல்லாரும் விரும்பப்படும் உணவினையும் யாம் துறந்துவிட்டோம் என்று சொல்லுகின்ற துறவறத்தின்கண் நிற்கின்ற துறவிகளுக்கும் அவர் செய்யும் துறவறமானது நடவாது என்று இத்திருக்குறள் கூறுவதால், இல்லறஞ் செய்வார்க்கு உரியதாகிய உண்டலும் இல்லறஞ் செய்தலும் இல்லையாகுல் எல்லாவற்றையும் விட்டு நிற்கின்ற துறவியும் தான் கொண்ட விரதத்திற்குரிய வேள்வி முதலியவற்றைச் செய்தற்கு முடியாது என்றும், உழவன் உறுப்புகளில் கை ஒன்றுமாத்திரம் வேலைசெய்யாது சும்மா இருக்குமாயின் உலகத்தார் இம்மை மறுமை வீடு என்னும் மூன்றின் பயனை அடையமுடியாது என்றும் அறிகின்றோம். இதனுல் துறவிக்கும் உழவனது தொழிலே காவல் என்றதாயிற்று. அது கேட்ட மாணக்கர், "இதுவரையும் அவ்வுழவுத் தொழிலைச் செய்பவருடைய சிறப்பினை அறிந்தோம். இனி, அவ்வுழவுத் தொழிலைச் செய்யும் விதத்தையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1037. தொடிப்புழுதி கஃசா வுணக்கிற் பிடித்தெருவும்
வேண்டாது சாலப் படும்.

(பரி.) இ-ள். தொடிப்புழுதி கஃசா உணக்கின் = ஒரு நிலத்தினை உழுதவன் ஒரு பலப்புழுதி கஃசாம்வண்ணம் அதனைக் காயவிடுவானாயின், —பிடித்து எருவும் வேண்டாது சாலப் படும் = அதன்கட்செய்த பயிர் ஒரு பிடியின்கணடங்கிய எருவுமிடவேண்டாமற் பிணைத்து விளையும். எ-று.

பிடித்து = பிடியின்கண்ணது. பிடித்தவென்பதன் விகாரமென்பாரு முளர். வேண்டாமல், சாலவென்பன திரிந்துநின்றன. (எ)

விளக்கம் :—ஒரு நிலத்தினை உழுத ஒருவன் அந்நிலத்தில் உள்ள ஒரு பலம் என்கின்ற எடையுள்ள புழுதியை ஒரு கஃசு



என்னும் எடையளவாக ஆகும்வரையில் அதனைக் காய விடுவானாயின், அவ்விதம் காயவிட்ட அப்புழுதியில் செய்த பயிரானது ஒரு கைப் பிடியினுள் அடங்கிய எருவும் இடாமலே நன்றாகக் கிளைத்து விளையும் என்று இத்திருக்குறள் கூறுவதால், நிலத்தைப் பயிரிடுபவன் ஒருவன் தன் நிலம் நன்றாக விளையவேண்டுமாயின் பலமுறை ஏரால் உழுதல் வேண்டும் என்றும், அவ்விதம் உழுவதால் புழுதியானது காலுக்குள் உழுந்தோறும் உழுந்தோறும் காய்ந்து பதப்படுமென்றும், அவ்விதம் பதப்பட்ட நிலத்தில் புல் பூண்டுகள் இல்லாது பயிரோங்கிக்கிளைத்துத்தழைத்துப் பலன்தரும் என்றும், அவ்வித நிலத்திற்கு எருவும் இடுதல்வேண்டாம் என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் உழுவதோடு எருவினையும் இடுவானாயின் என்னையாமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1038. ஏரினு நன்றா லெருவிடுதல் கட்டபி
னீரினு நன்றதன் காப்பு.

(பரி.) இ-ள். ஏரினும் எரு இடுதல் நன்று = அப்பயிர்க்கு அவ்வுழுதலினும் எருப்பெய்தல் நன்று;—கட்டபின் அதன்காப்பு நீரினும் நன்று = இவ்விரண்டுஞ் செய்து களைகட்டால் அதனைக் காத்தல் அதற்கு நீர்கால்யாத்தலினும் நன்று. எ-று.

ஏர் — ஆகுபெயர். காத்தல் = பட்டிமுதலியவற்றான் அழிவெய்தாமற்காத்தல். உழுதல், எருப்பெய்தல், களைகட்டல், நீர்கால்யாத்தல், காத்தலென்றிம்

முறையவாய இவ்வைந்தும் வேண்டுமென்பதாம். (அ)

விளக்கம்:—அவ்விதம் கிளைத்துவிளையும் அப்பயிருக்கு மேற் கூறிய உழுதல் தொழிலினும் எருவிடுதல் நன்மை உடையது என்றும், உழுதலையும் எருவிடுதலையும் செய்து அப்பயிரினைக் களை பறிப்பதால் உண்டாகும் நன்மையானது அப்பயிருக்கு ஜலம் பாய்ச்சிக் காப்பதி னும் நன்மையுடையது என்றும் இத்திருக்குறள் கூறுவதால், பயிரிடு வோன் உழுதற்றொழிலும், எருவிடுதலும், களை பிடுங்குதலும், ஜலம் பாயும் கால்களை வெட்டி ஜலமுடையதாகச் செய்தலும், பிறகு பட்டிமாடு முதலியவைகளால் பயிர் அழியவொட்டாமல் காத்தலும் ஆகிய இவ் வைந்து காரியங்களையும் முறையாகவே செய்து முடிக்க வேண்டுமென் றும் அறிந்தோம். இதனால் இவ்வைந்தனுள்ளும் ஒன்று குறைபுமாயினும்



பயிரானது பலன்தாராது என்பதாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக் கர், "இவ்விதம் உழுது பயிரிடுகின்ற ஒருவன் தானே தன் நிலத்தில் சென்று பார்த்தல் வேண்டுமோ? அன்றி ஏவலாளர் பார்ப்பது போதுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1089. செல்லான் கிழவ னிருப்பி னிலம்புலந்
தில்லாளி னூடி விடும்.

(பரி.) இ-ள். கிழவன் செல்லான் இருப்பின்= அந்நிலத்திற்குரியவன் அதன்கணாடோறுஞ் சென்று பார்த்து அடுத்தனசெய்யாது மடிந்திருக்கு மாயின்,—நிலம் இல்லாளிற் புலந்து ஊடிவிடும்= அந்நிலம் அவனில்லாள் போலத் தன்னுள்ளே வெறுத்துப் பின்னவனோடூடிவிடும். எ-று.

செல்லுதல்—ஆகுபெயர். பிறரை யேவியிராது தானேசேறல்வேண்டு மென்பதுபோதரக் 'கிழவன்' என்றார். தன்கட்சென்று வேண்டுவன செய்யாது வேறிடத்திருந்தவழி மனையா ளூடுமாறு போலவென்றது அவன் போகமிழத்தனோக்கி. இவை மூன்று பாட்டானும் அது செய்யுமாறு கூறப் பட்டது. (கூ)

விளக்கம்: —நிலத்திற்குரிய தலைவன் ஒருவன் அவன் நிலத்

திலிருந்தே எந்நேரமும் போய்ப் பார்த்துச் செய்யவேண்டுவன வற்றைச் செய்து முடிக்கானாயின், அங்ஙனமானது அவன் மனைவியைப் போல் வெறுத்து அவனோடு சிறு பிணக்குக்கொள்ளும் என்று இத் திருக்குறள் கூறுவதால், நிலத்திற்குரியான் ஒருவன் மற்றவர்களை ஏவித் தொழிலைச் செய்யாமல் தானே சென்று பார்த்துச் செய்யவேண்டுவன வற்றை ஒன்றின்பின் ஒன்றாக முறையோடு செய்தல்வேண்டும் என்றும், அவ்விதம் செய்யாவிட்டால் கணவன் ஒருவன் தன்னோடு இருந்து தனக்கு வேண்டியவைகளைச் செய்யாமல் பரத்தையர் முதலியோரிடத்திலிருந்து இன்பந் துய்ப்பானாயின், அவன் மனைவியானவள் அவனை வெறுத்துக் கோபித்துக்கொண்டு அவனுக்குப் போகத்தைக் கொடாதது போல் நிலமும் போகம் என்னும் விளைவினைத் தாராது என்று அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணுக்கர், "உழவன் ஒருவன் செய்யும் விதம் இவை என்று அறிந்தோம். ஆயின் நிலத்தைத் தன் மனைவிபோல் காப்பாற்றும் ஒருவன் தான் அடையவேண்டிய பயனை அடையாது போனால் அவனுக்கு எவ்வித குற்றமுண்டாகும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



1040. இலமென் றசைஇ யிருப்பாரைக் காணி
னிலமென்னு நல்லா ணகும்.

(பரி.) இ-ள். இலம் என்று அசைஇ இருப்பாரைக் காணின் = யாம் வறியேமென்று சொல்லி மடிந்திருப்பாரைக் கண்டால், — நிலம் என்னும் நல்லாள் நகும் = நிலமகளென்று உயர்த்துச்சொல்லப்படுகின்ற நல்லாள் தன்னுள்ளே நகாநிற்கும். எ-று.

உழுதன்முதலிய செய்வார் யாவர்க்குஞ் செல்வங்கொடுத்துவருகின்றமை பற்றி 'நல்லாள்' என்றும், அதுகண்டுவைத்தும் அதுசெய்யாது வறுமையுறுகின்ற பேதைமைபற்றி 'நகும்' என்றுங் கூறினார். இரப்பாரையென்று பாடமோதுவாருமுளர். இதனான் அது செய்யாதவழிப்படும் இழுக்குக் கூறப்பட்டது. வருகின்ற அதிகாரமுறைமைக்குக் காரணமும் இது. (௰)

விளக்கம்:—யாம் வறியவராக உள்ளோம். என்று சொல்லித் துன்பப்படுகின்றவரைக் கண்டால் நிலமகளென்று உயர்ந்தோரால் சிறப்பாகச் சொல்லப்படுகின்ற நல்லவள் தனக்குள்ளேயே தானே சிரித்துக் கொண்டிருப்பள் என்று இத்திருக்குறள் கூறுவதால், மேற்கூறிய விதம் உழுதல் முதலிய செயல்களைச்செய்து நிற்கின்ற உழவர்க்குப் பலவித செல்வங்களையும் கொடுத்து வருகின்ற நிலம் என்னும் செல்வியானவள் அது பார்த்திருந்தும் அத்தொழில்களைச் செய்யாது தரித்திரத்தை யடைகின்ற பேதையரைக் கண்டால் சிரிப்பாள் என்று அறிகின்றோம். அதாவது, உழவன் ஒருவன் தன் தொழிலைச் சரியாகச் செய்யாத விடத்து வறுமையை அடைவானேயன்றிச் செய்தவிடத்து எல்லாச் செல்வமும் அடைவான் என்றதாயிற்று. அன்றியும் இனிமேல் வருகின்ற நல்குரவு என்னும் அதிகாரத்தாலும் இதனை அறிதல் கூடும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நல்குரவு என்பதையும் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

---

## 105. அதிகாரம்.

---

### நல்குரவு.

(பரி.) அஃதாவது நுகரப்படுவன யாதுமில்லாமை.

விளக்கம்:—அதாவது, உண்பனவாகிய பொருள்கள் யாவும் இல்லாதிருத்தல். மேல் அதிகாரத்தின் கடையிலுள் கூறிய வறுமை என்பது ஆகும் என்றனர்.



1041. இன்மையி னின்னாத தியாதெனி னின்மையி
னின்மையே யின்னா தது.

(பரி.) இ-ள். இன்மையின் இன்னாதது யாது எனின்=ஒருவனுக்கு வறுமைபோல இன்னாதது யாதென்று வினவின்,—இன்மையின் இன்னாதது இன்மையே=வறுமைபோல இன்னாதது வறுமையே, பிறிதில்லை, எ-று.

இன்னாதது=துன்பஞ்செய்வது. ஒப்பதில்லையெனவே, மிக்கதின்மை

சொல்லவேண்டாவாயிற்று. (௧)

விளக்கம்:—ஒருவனுக்குத் தரித்திரத்தைப்போலத் துன்பஞ்செய்யக் கூடியது எது என்று வினவுவோமாயின், தரித்திரத்தைப் போலத் துன்பம் தருவது தரித்திரமேயாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால் தரித்திரம் என்பது உலகத்துள் மக்கள் அடையும் துன்பங்களுள் துன்பமாக உள்ளது என்றும், அதற்குச் சமானமாகிய துன்பமோ மேலாகிய துன்பமோ இல்லை என்றும் அறிகின்றோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "தரித்திரமானது ஒருவனிடத்து வந்தால் அவனுக்கு இம்மையில் உண்டாகும் இன்பம் என்பது இல்லாமல் துன்பமே வரும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1042. இன்மை யெனவொரு பாவி மறுமையு
மிம்மையு மின்றி வரும்.

(பரி.) இ-ள். இன்மையென ஒருபாவி=வறுமையென்று சொல்லப்படுவதொரு பாவி—மறுமையும் இம்மையும் இன்றி வரும்=ஒருவனுழை வருங்கால் அவனுக்கு மறுமையின்பமும் இம்மையின்பமுமில்லையாக வரும். எ-று.

'இன்மையென வொருபாவி' என்பதற்கு மேல் "அழுக்காறெனவொரு பாவி"* யென்புழி யுரைத்தாங்குரைக்க. மறுமை இம்மையென்பன ஆகுபெயர். ஈயாமையானுந் துவ்வாமையானும் அவையிலவாயின. இன்றிவிடுமென்று பாடமோதிப் பாவியாவென விரித்துரைப்பாரு முளர். (௨)

விளக்கம்:—தரித்திரம் என்று சொல்லப்படும் ஒருபாவி, ஒருவனிடத்தே வருங்காலத்து அவனுக்கு மறுமையில் உண்டாகும் இன்பமும் இம்மையில் உண்டாகும் இன்பமும் ஆகிய இரண்டும் இல்லாதபடி வரும் என்று இத்திருக்குறள் கூறுவதால், தரித்திரமானது இம்மையில்

* திருக்குறள், 168.

அடையவேண்டிய உண்பன முதலியவற்றைச் செய்து இன்பம் அடைவதற்கும் பிறர்க்குக் கொடுத்துப் புகழை அடைவதற்கும் இல்லாமற் செய்வதால் இம்மை இன்பத்தை அடைவதற்கில்லை என்றும், அதுவன்றியும் அறத்தைச் செய்வதற்கு முடியாமற் செய்வதால் மறுமை இன்பத்தையும் அடைவதற்கு இல்லை என்றும் அறிகின்றோம். இவ்வித கொடுமையை உண்டுபண்ணும் தரித்திரத்தைப் பாவி என்றும் அழைத்தனர். இதுபோன்றே துன்பத்தைத் தரும் அழுக்காற்றினையும் பாவி என்று அழைத்ததை நூற்றறுபத்தெட்டாவது திருக்குறளில் காணுதல் கூடும். இதனால் மேல் வினவியபடி தரித்திரம் இம்மைப் பயனை மாத்திரம் அல்லாமல் மறுமைப் பயனையும் போக்கிவிடும் என்று தாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இத்தரித்திரத்தால் ஒருவனது மேலாகிய குடிப்பிறப்பும் தாழ்வுபடும் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1043. தொல்வரவுந் தோலுங் கெடுக்குந் தொகையாக
நல்குர வென்னு நசை.

* (பரி.) இ-ள். நல்குரவு என்னும் நசை=நல்குரவென்றுசொல்லப்படுமாசை—தொல் வரவும் தோலும் தொகையாகக் கெடுக்கும்=தன்னாற்பற்றப்பட்டாருடைய பழைய குடிவரவினையும் அதற்கேற்ற சொல்லினையும் ஒருங்கே கெடுக்கும். எ-று.

நசையில்வழி நல்குரவுமில்லையாகலின் நல்குரவையே நசையாக்கி, அஃது அக்குடியிற்றெல்லோர்க் கில்லாத இழிதொழில்களையும் இழிவந்த சொற்களையுமுளவாக்கலான் அவ்விரண்டனையுமொருங்கு கெடுக்குமென்றார்: "குடிப்பிறப் பழிக்கும் விழுப்பங் கொல்லும்"* என்றார் பிறரும். தோலாவது "இழுமென் மொழியால் விழுமியது நுவறல்"† என்றார் தொல்காப்பியனாரும். இதற்கு உடம்பென்றுரைப்பாரு முளர்; அஃததற்குப் பெயராயினும் உடம்பு கெடுக்குமென்றற்கோர் பொருட்சிறப்பில்லாமை யறிக. (௩)

விளக்கம் :—தரித்திரம் என்று சொல்லப்படுகின்ற ஆசையானது ஒருவனுக்குத் தன்னுடைய பழைய குடிப்பிறப்பினையும், அக்குடிக்கு ஏற்ற புகழுக்குரிய சொல்லினையும் ஆகிய இரண்டினையும் ஒருங்காகவே

* மணிமேகலை, பாத்திரம் பெற்ற காதை, 11.

† பொருள், செய்யுளியல், 239.



கெடுத்துவிடும் என்று இத்திருக்குறள் கூறுவதால், எவனொருவனுக்குத் தன்னுடைய தரித்திரத்தால் பொருள்மீது ஆசையுள்ளதோ அவன் அப் பொருளாசையை நிரப்புவதற்குப் பல இழிந்த தொழில்களையும் செய்ய நேருமாதலால் அதைக்கண்ட ஏனையோர் 'உயர்குடிப் பிறந்தானாகிய இவன் தன் குடிக்கு அடாததாகிய இழிதொழில்களைச் செய்து பொருள் தேட முயலுகின்றான். இவ்விதம் இவன் செய்வதால் இவனது நற்குடிப் பிறப்பும் தாழ்ந்ததாயிற்று. அன்றியும் இவன் முன்னோரது பெரும் புகழையும் கெடுக்கின்றான்' என்று சொல்லும் இழிவினையாம் தரித்திர மானது உண்டாக்கிவிடும் என்றும், இதனால் தரித்திரம் என்பது மேற் கூறியபடி இம்மை மறுமையாகிய இரண்டையும் கெடுப்பதுடன் தன் னுடைய நற்குடிப் பிறப்பினையும் தன் மூதாதையர்க்கிருந்த புகழினையும் கெடுக்கும் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "நற் குடிப் பிறந்தானுக்கும் தரித்திரம் இழிவினை உண்டுபண்ணுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாராயினர்.

1044. இற்பிறந்தார் கண்ணேயு மின்மை யிளிவந்த
சொற்பிறக்குஞ் சோர்வு தரும்.

(பரி.) இ-ள். இற்பிறந்தார் கண்ணேயும் = இளிவந்த சொற்பிறவாத குடிப்பிறந்தார் மாட்டேயும்—இளிவந்த சொற் பிறக்கும் சோர்வு இன்மை தரும் = அது பிறத்தற்கேதுவாகிய சோர்வினை நல்குரவு உண்டாக்கும். எ-று.

சிறப்பும்மை அவர்மாட்டு அது பிறவாமை தோன்ற நின்றது. இளி வந்தசொல் = இளிவருதற் கேதுவாகியசொல்; அஃதாவது எமக்கிது வேண்டுமென்றல். சோர்வு = தாமுறுகின்ற துன்பமிகுதிபற்றி ஒரோவழித் தம்பிறப்பினை மறந்து அது சொல்லுவதாக நினைத்தல். (௪)

விளக்கம்:—இழிவினைத் தருகின்ற சொல் என்பதே ஒருகாலத் தும் உண்டாகாத நல்ல குடியில் பிறந்தவர்களிடத்தும் அவ்விழிவாகிய

சொல் உண்டாவதற்குக் காரணமாகிய மறதியினைத் தரித்திரம் என்பது உண்டாக்கும் என்று இத்திருக்குறள் கூறுவதால், நற்குடிப்பிறந்தான் ஒருவனும் தன்னுடைய தரித்திரத்தினால் உண்டாகும் மிகுந்த துன்பத்தைக் குறித்துத் தன்னுடைய பிறப்பின் உயர்வினையும் மறந்து பலிக்கக் கூடாத இடங்களிலெல்லாம் சென்று தன் தரித்திரம் நீங்குவதற்கு ஏதேனும் உண்ணவும் உடுக்கவும் தருதல் வேண்டும் என்று கேட்பான் என்



பர். அதனால் தரித்திரமானது எவ்வித குருதியுடையவனையும் சோர்வடையச் செய்யும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நற்குடிப் பிறந்தானுக்கு இழிவு வரும்படிச் செய்யும் தரித்திரமானது இன்னும் எவ்விதமாகிய துன்பங்களை அவனுக்கு உண்டுபண்ணும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1045. நல்குர வென்னு மிடும்பையுட் பல்குறைத்
துன்பங்கள் சென்று படும்.

(பரி.) இ-ள். நல்குரவு என்னும் இடும்பையுள் = நல்குரவென்று சொல்லப்படுந் துன்பமொன்றனுள்ளே—பல் துன்பங்கள் சென்றுபடும் = பல துன்பங்களும் வந்து விளையும். எ-று.

குறை—இசைநிறை. செலவு விளைவின்கண் வந்தது. துன்பமுந்தானு முடனே நிகழ்தலின் நல்குரவைத் துன்பமாக்கியும், அத்துன்பமடியாகச் செல்வர்கடைசேர்க்கின் சேறற்துன்பமும், அவரைக்கண்டற்துன்பமும், கண்டால் மறுத்தழி நிரம்பத் துன்பமும், மறுவழியும் அவர்கொடுத்தவை வாங்குற்றுன்பமும், அதுகொடுவந்து நுகர்வனகூட்டற்றுன்பமுமுதலாயின ஈடோறும் வேறுவேறாக வருதலின் எல்லாத்துன்பங்களு முளவா மென்றுங் கூறினர். இவை மூன்றுபாட்டானும் நல்குரவின் கொடுமை கூறப்பட்டன. (௫)

விளக்கம்:—தரித்திரம் என்று சொல்லப்படுகின்ற துன்பம் ஒன்றினுள்ளே பலவித துன்பங்களும் உண்டாகின்றன என்று இத்திருக்குறள் கூறுவதால், தரித்திரத்தை யடைந்த ஒருவன் தனக்கு உணவு முத

யேதுவை இல்லாமையால் அத்துன்ப மிகுதியை நோக்கிச் செல்வரிடத்துச் சென்று நின்று அவரைப் பார்ப்பதற்கு முடியாம லிருப்பதும், நல்வழிப் பார்க்கினும் கொடுப்பதற்குச் செல்வந்தர் மறுப்பதும், நல்லவழி மறுக்காது கொடுத்தாலும் கொடுத்ததொன்றை அவரிடம் வணங்கிப் பெறுவதும், பெற்றதாகிய அப்பொருள் கொண்டுவந்து உண்பவைற்றிற்கு வேண்டுவனவாகிய பலவித பொருள்களைச் சேர்ப்பதும் ஆகிய இவற்றால் உண்டாகும் துன்பங்கள் தினந்தோறும் வேறு வேறாக வரும்

என்றும், ஆகையால் தரித்திரம் என்பது ஒன்றிருந்தாலே எல்லாத் துன்பங்களும் உண்டாகிவிடும் என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "உலகத்தார்க்குச் சொல்ல வேண்டுவனவாகிய நல்ல சொற்



களை அறியாத கல்வியில்லாத ஒருவனுக்கே தரித்திரம் வருமாயின் பல துன்பங்கள் உண்டாதல் கூடும். ஆயின், கற்றுணர்ந்த ஒருவனுக்கும் அவ்விதம் துன்பங்கள் உண்டாதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1046. நற்பொரு ணன்குணர்ந்து சொல்லினு நல்கூர்ந்
சொற்பொருள் சோர்வு படும். [தார்

(பரி.) இ-ள். நற்பொருள் நன்கு உணர்ந்து சொல்லினும்=மெய்ந்நூற் பொருளைத் தெளியவறிந்து சொன்னாராயினும்,—நல்கூர்ந்தார் சொற்பொருள் சோர்வு படும்=நல்கூர்ந்தார் சொல்லுஞ்சொற் பொருளின்மையைத் தலைப்படும்; எ-று.

பொருளின்மையைத் தலைப்படுதலாவது, யாமிவர்சொல்லியன விரும்பிக் கேட்குமாயிற் கண்ணோடி இவருறவின்ற குறைமுடிக்கவேண்டுமென்றஞ்சி யாவருங்கேளாமையிற் பயனில்சொல்லாய்முடிதல். கல்வியும் பயன்படாதென்பதாம். (௬)

விளக்கம்:—உண்மை நூல்களின் பொருள்களை நன்றாக அறிந்து சொன்னார்களானாலும், தரித்திரமாயுள்ளவர்கள் சொல்லுகின்ற அவ்வித உண்மைச் சொற்கள் யாதொரு பொருளும் படாமற் போய்விடும் என்று இத்திருக்குறள் கூறுவதால், மெய்யுணர்வைத் தரும் உண்மை நூல்களை எல்லாம் நன்றாகக் கற்றுக் கேட்டுத் தெளிந்து நின்ற புலவனேனும் தான் கற்றதைச் செல்வந்தரிடத்துச் சென்று சொல்ல முயலுவானாயின், அதுகண்ட செல்வந்தர் 'இவன் தரித்திரன் ஆதலால் இவன் சொல்லுகின்ற விஷயங்களை நாம் விரும்பிக் கேட்போமாயின் அதனால் தாக்ஷிண்யம் கொண்டு இவனுக்குள்ள குறைகளை நீக்க வேண்டி வரும். இதனால் நமக்கும் பொருட் செலவு நேரும். இவன் சொல்லுவதைக் கேளாது விடுவதே தகுதியாகும்' என்று பயந்து யாவரும் கேளாது போய் விடுவர். ஆதலால், கற்றவனது கல்வியும் தரித்திரத்தால் பயனில்லாததாகும். அதனால் மேல் விளக்கியபடி கல்வியுடையவனுக்கும் தரித்திரத்தால் பல துன்பங்கள் உண்டாகும் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "செல்வந்தராய் உள்ள அயலவர்தாம் ஒதுக்கி விடுதல்கூடும். ஆயின், சுற்றத்தவர் இவ்வித கல்வியுடையானைச் சூழ்ந்து இருத்தல் கூடும் அன்றோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



1047. அறஞ்சாரா நல்குர வீன்றதா யானும்
பிறன்போல நோக்கப் படும்.

(பரி.) இ-ள். அறம் சாரா நல்குரவு=அறத்தோடியைபில்லாத நல்குரவுடையான்—ஈன்ற தாயாலும் பிறன்போல நோக்கப்படும்=தன்னையீன்ற தாயாலும் பிறனைக் கருதுமாறுபோலக் கருதி நோக்கப்படும். எ-று.

அறத்தோடியையாமை=காரணமாகிய பொருளின்மையானொன்றும் விளையாமை. நல்குரவு—ஆகுபெயர். சிறப்பும்மை அவளியற்கையன்புடைமை விளக்கிநின்றது. கொள்வதின்றுதலேயன்றிக் கொடுப்பதுண்டாதலுமுடைமையின், அது நோக்கிச் சுற்றத்தார் யாவருந் துறப்பரென்பதாம். (எ)

விளக்கம்:— அறத்தோடு வருதல் இல்லாத தரித்திரம் உடையான் ஒருவன் தன்னைப் பெற்றெடுத்த தாயினாலும் அயலவனை என்னு

வதுபோல எண்ணிப் பார்க்கப்படுவான் என்று இத்திருக்குறள் கூறுவதால், ஒருவன் அறம் முதலியவைகளைச் செய்து தன் கையிலுள்ள பொருள்களைச் செலவழித்து அது காரணமாக அவனுக்குத் தரித்திரம் வந்திருக்குமாயின், அதைக் கண்ட சுற்றத்தவர் அவனை இகழார் என்றும், அவ்விதம் அல்லாது அவனது சோம்பலால் தரித்திரத்தை அடைந்திருப்பானாயின், சுற்றத்தவர் மாத்திரம் அன்றி அவனைப் பெற்றெடுத்த தாயும் தன் இயற்கை அன்பினின்றும் நீங்கி அவனை விரும்பமாட்டாள் என்றும் அறிகின்றோம். இதனால், பொருள் இல்லாத ஒருவனைச் சுற்றத்தவரேயன்றி ஈன்றெடுத்ததாயும் விரும்பமாட்டாள் என்றது பற்றி என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் தரித்திரத்தால் துன்பப்படுபவன் தன் துன்பத்தை மிகுதியும் துன்பமாகக் கருதுவன் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1048. இன்றும் வருவது கொல்லோ நெருநலுங்
கொன்றது போலு நிரப்பு.

(பரி.) இ-ள். நெருநலும் கொன்றதுபோலும் நிரப்பு=நெருநற்றுங் கொன்றதுபோன்ற எனக்கின்னாதவற்றைச்செய்த நல்குரவு—இன்றும் வருவது கொல்=இன்றும் என்பால் வரக்கடவதோ, வந்தால் இனி யாதுசெய்வேன்! எ-று.

இவ்வின்னாதவாவன:—மேற்சொல்லிய துன்பங்கள் *நெருநன்மிக வருத்தித் தன் வயிறெரித்தானொருவன் கூற்று. (அ)

*திருக்குறள், 1045.



விளக்கம்:—'நேற்றைய தினமும் என்னைக் கொன்றால் எவ்வித துன்பமிருக்குமோ அவ்வித துன்பத்தைச் செய்ததாகிய தரித்திரம் இன்றையதினமும் என்னிடத்து வருவதாக உள்ளதோ? அவ்விதம் வந்தால் அதற்கு இனி யான் யாதுசெய்தல்கூடும் என்று ஒரு வறியோனது கூற்றாக இத்திருக்குறள் கூறுவதால், தரித்திரன் ஒருவன் தன் இல்லாமையால் அபிரத்து ஈரப்பத்தைத்தாவது திருக்குறளில் சொல்லியபடி. செல்வரிடத்திற் சென்று வயிறு வளர்த்தல் பெரியதோர் துன்பமென்று

அறிகின்றோம். இதனால் எல்லாத் துன்பங்களினும் தரித்திரனுக்குள்ள துன்பமே பெரியதோர் துன்பமென்று அறிந்ததாயிற்று என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இத் தரித்திரத்தை ஓர் உவமை வாயிலாய் விளக்கல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1049. நெருப்பினுட் டுஞ்சலு மாகு நிரப்பினுள்
யாதொன்றுங் கண்பா டரிது.

(பரி.) இ-ள். நெருப்பினுள் துஞ்சலும் ஆகும்=மந்திரமருந்துகளான் ஒருவனுக்கு நெருப்பிடையே கிடந்துறங்கலுமாம்,—நிரப்பினுள் யாதொன்றும் கண்பாடு அரிது=நிரப்புவந்தவழி யாதொன்றானும் உறக்கமில்லை. எ-று. நெருப்பினும் நிரப்புக் கொடிதென்றவாறாயிற்று. இதுவுமவன்கூற்று. இவை நான்குபாட்டானும் நல்கூர்ந்தார்க்குளதாங்குற்றங் கூறப்பட்டது. (௯)

விளக்கம்:—மந்திரத்தாலும் மருந்துகளாலும் ஒருவனுக்கு நெருப்பின் நடுவே கிடந்து தூங்குதலும் ஆகும் என்றும், ஆயின், தரித்திரம் என்பது வந்தவிடத்து யாதொன்றினாலும் தூங்குவது கூடாது என்றும் இத்திருக்குறள் கூறுவதால், ஒருவன் நெருப்பின் நடுவிலே கிடந்து தூங்குதல் இயற்கை யல்லவாயினும்-ஓர் மந்திரத்தைக் கொண்டேனும் மருந்தைக் கொண்டேனும் செயற்கையினால் தூங்கிவிடுதல் கூடும் என்றும், ஆனால், இத்தரித்திரத்திலோ மந்திரமும் மருந்தும் பயன்படாது போவதால் நெருப்பினுங் கொடியதாம் நிரப்பு என்னும் தரித்திரமானது மிகக் கொடியதாக உள்ளது என்றும் கூறியதாக அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தரித்திரர்க்குண்டாகும் துன்பம் இதுவென்று அறிந்தோம்; ஆனால் இவ்விதத் தரித்திரத்தை உடையவர் வாழ்தலை நம் ஆசிரியர் என்னென்று கூறுகின்றனர்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.



1050. துப்புர வில்லார் துவரத் துறவாமை
யுப்பிற்குங் காடிக்குங் கூற்று.

(பரி.) இ-ள். துப்புரவு இல்லார் துவரத் துறவாமை=நுகரப்படும் பொருள்களில்லாதார் தம்மாற்செயற்பாலது முற்றத்துறத்தலேயாகவும் அது செய்யாதொழிதல்—உப்பிற்கும் காடிக்கும் கூற்று=பிறரில்லின்கணவாய உப்பிற்குங் காடிக்குங் கூற்றாம். எ-று.

மானமழியாமையிற் செயற்பாலது அதுவேயாகலின், முற்றத்துறத்தல்=சுற்றத்தாரைவிட்டமையின் ஒருவாற்றாற் றுறந்தாரேயினும் என்றும் உடம்பினையுந் துறத்தல். அது செய்யாது கொண்டிருத்தல் இரண்டனையு மாளப் பண்ணுதலின், அதனை அவற்றிற்குக் 'கூற்று' என்றார். இனி முற்றத் துறத்தலாவது துப்புரவில்லாமையின் ஒருவாற்றாற்றுறந்தாராயினும் பின் வேட்கை மனத்தாற்றுறவாமையென் றுரைப்பாருமுளர். இதனான் அஃதுடைய தாயவழிச் செய்வது கூறப்பட்டது. (௰)

விளக்கம்:—அநுபவித்தற்கு உரியனவாகிய பொருள்களை அடையாதார் செய்ய வேண்டியது முழுவதும் துறந்து விடுவதாகவே இருக்க அவ்விதம் துறவாது இருத்தல் மற்றவர்கள் வீட்டில் உள்ள உப்புக்கும் காடிக்கும் எமனாக இருத்தல்போலாம் என்று இத்திருக்குறள் கூறுவதால், தரித்திரத்தால் மானமழிந்து உயிர்வாழ்தலினும் இறத்தல் தகுதியாகும் என்றும், அதனைவிட்டுச் சுற்றத்தவர் முதலியோர் கைவிட்ட பிறகும் அவ்வுயிரை ஓம்பி வாழ்வது அவரவர் பொருளுக்கு எமன் போல் இருப்பதேயன்றி வேறு அல்ல என்றும் அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தரித்திரன் ஒருவன் உயிரோடு இருத்தலினும் இறத்தலே நன்று என்று கூறினும், அரிய பிறவியாகிய மக்கட்பிறவியை அடைந்ததற்கு உரிய பயனை அடைவதற்கு இவ்வுடம்பினை எவ்விதமேனும் காப்பாற்றுதல் வேண்டும் என்று நூல்கள் கூறுவனவாகவும் கேட்டிருக்கின்றோம்; அவ்விதம் உடலை ஓம்ப வேண்டுமாயின், யாசித்தலன்றி வேறு வழி இல்லையாதலால் அவ்விதம் இரவு கொண்டு வாழ்தல் தகுமன்றோ?" என்றதும், ஆசிரியர் கூறலாயினர்.

---

## 106. அதிகாரம்.

## இரவு.

(பரி.) இனி மானந்தீர வரா இரவு இரவாமையோ டொத்தலின், அதனானும் வீடெய்தற்பயத்ததாய உடம்போம்பப்படுமென்னும் அறநூல்வழக்குப்பற்றி

மேலெய்திய நல்குரவை துறத்தல் விலக்குதற்பொருட்டு இரவு கூறுகின்றார். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது, மானத்தைப் போக்கிக் கொள்ளாது யாசிக்கின்ற யாசகமானது யாசகம் அல்ல ஆதலாலும் வீட்டினை அடைவதற்குப் பயன் தருவதாகிய இவ்வுடம்பினை மானந்தீரா இரவால் ஓம்புதல் வேண்டும் என்று கூறுகின்ற தருமநூலில் சொல்லிய வழக்கின்படியும் மேல்கூறிய நல்குரவைத் துறத்தல் என்னும் உடம்பினைப் போக்குதலை விலக்குதல் பொருட்டும் இவ்விரவு என்னும் அதிகாரத்தை இங்கு கூறலாயினர் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "மானத்தைப் போக்கிக்கொள்ளாத இரவு என்பது எவ்விதம்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1051. இரக்க இரத்தக்கார்க் காணிற் கரப்பின்
அவர்பழி தம்பழி யன்று.

(பரி.) இ-ள். இரத்தக்கார்க் காணின் இரக்க = கல்கூர்ந்தார் இரத்தற்கு ஏற்புடையாரைக் காணின், அவர்மாட்டு இரக்க;—கரப்பின் அவர்பழி தம்பழி அன்று = இரந்தால் அவர் கரந்தாராயின் அவர்க்குப் பழியாவதல்லது தமக்குப் பழியாகாமையான். எ-று.

இரவென்னும் முதனிலைத்தொழிற்பெயர் இறுதிக்கண் நான்கனுருபு விகாரத்தால் தொக்கது. இரத்தற்கேற்புடையாராவார் = உரையாமை முன்னுணரும் ஒண்மையுடையராய் மாற்றுதலிலோர். அவர் உலகத்தரியராகலிற் 'காணின்' என்றும், அவர்மாட்டிரந்தார்க்கு இரவான்வருமிழிவின்மையின் 'இரக்க' என்றும், அவர்தலிற் குறைகாட்டாமையிற் 'கரப்பின்' என்றும், காட்டுவராயின் அப்பழி தூவெள்ளறுவைக்கண் மாசுபோல அவர்கட்கேயதுசேறலின் 'அவர்பழி' என்றும், ஏற்பிலார்மாட்டிரவன்மையின் 'தம்பழியன்று' என்றுங் கூறினர். (௧)

விளக்கம்:—தரித்திரராயினர் பிச்சை கேட்பதற்கு போக்கிய

ராய் உள்ளவர்களைப் பார்ப்பார்களானால் அவரிடத்துப் பிச்சைகேட்டல் வேண்டும் என்றும், அவ்விதம் அவர் பிச்சைகேட்ட காலத்து வைத்துக் கொண்டே இல்லை என்று ஒளிப்பாராயின் அவ்வித ஒளிப்பு அவர்க்கே பழியாவது அல்லாமல் பிச்சை கேட்ட தமக்குப் பழியாகாதென் றும் இத்திருக்குறள் கூறுவதால், யாசிக்க வேண்டுமாயின் கேட்ப தற்கு முன்னே தாமே உணர்ந்து கொடுக்கக்கூடிய தகுதியுடையாரிடத்



தே யாசித்தல் வேண்டும் என்றும், அவ்விதம் கேட்பதற்கு முன் கொடுப் பவர் அரியராக இருந்தும் அவ்வித தகுதியுடையவரைக் கண்டு கேட்டகாலத்து அவர் கொடுப்பதை ஒளியார் என்றும், ஒர்கால் வழுவலி யால் கொடாது தம் பொருளை ஒளிப்பாராயின் மிகுதியும் வெள்ளையா கிய வஸ்திரத்தினிடத்தே கறைபடிவதானால் அது எவ்விதம் உடனே யார்க்கும் எடுத்துக் காட்டுமோ அதுபோல் பழியானது மிகுதியும் அவர்க்கு வந்துசேரும் என்றும் அறிக்கிறோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர் "ஒருவன் தான் யாசித்த பொருளை இன்புற்று அடைதல் கூடுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1052. இன்ப மொருவற் கிரத்த லிரந்தவை
துன்ப முறாஅ வரின்.

(பரி.) இ-ள். ஒருவற்கு இரத்தல் இன்பம்=ஒருவற்கு இரத்தலும் இன்பத்திற்கேதுவாம்,—இரந்தவை துன்பம் உறா வரின்=இரந்தபொருள் கள் ஈவாரதுணர்வுடைமையாற் றுன்புறாமல் வருமாயின். எ-று.

இன்பம்—ஆகுபெயர். உறாமலென்பது கடைக்குறைந்து நின்றது. துன் பம் சாதியொருமைப்பெயர். அவையாவன:—ஈவார்கட் காலமுமிடனுமறிந்து சேறலும், அவர் குறிப்பறிதலும், அவரைத்தம்வயத்தராக்கலும், அவர் மன நெகிழ்வன நாடிச்சொல்லலு முதலியவற்றான் வருவனவும், மறுத்தவழி வரு வனவுமாம். அவையுறாமல் வருதலாவது:—அவர் முன்னுணர்ந்தீயக்கோடல். இரத்தல் துன்பமுறாவரினென்றபாடமோதி, இரக்கப்பட்டவர் பொரு

சின்மை முதலியவற்றாற்றன்புறுது எதிர்வந்தவரால் னென்றுரைப்பாருமுளர். இவை யிரண்டுபொட்டானும் நல்குரவா னுயிர்நீங்குமெல்லைக்கண் இளிவில்லாவிரவு விலக்கப்படாதென்பது கூறப்பட்டது. (௨)

விளக்கம்.—தான் யாசித்த பொருளைக் கொடுப்பாரது நல்லறிவுடைமையால் தனக்கு யாதொரு துன்பமும் இல்லாமல் கிடைக்குமாயின் அவ்வித யாசகமானது ஒருவனுக்கு இன்பத்தைத் தருவதற்குக் காரணமாம் என்று இத்திருக்குறள் கூறுவதால், பிச்சை கேட்கின்ற காலத்துக் கொடுப்பவனிடத்தில் போகவேண்டிய காலத்தையும் இடத்தையும் அறிந்து போதலும், அவ்விதம் போன பிறகும் அவன் குறிப்பினை அறிதலும், குறிப்பறிந்த பிறகு அச்செல்வனைத் தம் வசமாக்கலும், தம் வசப்பட்ட பிறகு அவர் மனம் உருகும்படி சொல்லவேண்டியவற்றை



ஆராய்ந்து சொல்லுதலும் ஆகிய இவைகளால் வருந்துன்பமும் அவர் இல்லை என்று சொல்லுதலால் வருகின்ற துன்பமும், இல்லாமல் கொடுப்பவர் கொடுக்கும் பொருளால் இன்பமடைதல் கூடும் என்றும், இவ்விதம் பிச்சை வாங்குவது இழிவாகாது என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நல்லவரால் கொடுக்கப்படும் பொருள் இன்பத்தைத்தரும் என்று அறிந்தோம். ஆயின், இவ்வித இன்பத்தைத்தரும் பொருளைப் பெறுவதற்கு அச்செல்வர் முன் யாசகர் எவ்விதம் நிற்பர்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1053. கரப்பிலா நெஞ்சிற் கடனறிவார் முன்னின்
றிரப்புமோ ரேஎ ருடைத்து.

(பரி.) இ-ள். கரப்பிலா நெஞ்சிற் கடன் அறிவார் முன் நின்று இரப்பும்=கரத்தலில்லாத நெஞ்சினையுடைய மானமறிவார் முன்னர் நின்று அவர் மாட்டொன்றிரத்தலும்—ஓரேர் உடைத்து=இரப்பார்க்கோரழகுடைத்து.

"சிறியசுருக்கத்து வேண்டுமவர்" என்றதனால், அவர்க்கு அது கடனெனப்பட்டது. அதனையறிதல்=சொல்லுதலுற்றுரைக்கலாகாமைக் கேதுவாய அதனியல்பினையறிதல். அவ்வறிவுடையார்க்கு முன்னிற்றல் மாத்திரமே யமைதலின் 'முன்னின்று' என்றும், சொல்லுதலான்வருஞ் சிறுமை

செய்யாமையின் 'ஓரேருடைத்து' என்றுங் கூறினார். உம்மை அதனிழிவு விளக்கி நின்றது. (௩)

விளக்கம்:—உள்ளது ஒளித்தல் இல்லாத நெஞ்சினையுடைய மானமிக்க பெரியோர் முன்னர் யாசகன் ஒருவன் எதிர் நின்று அப் பெரியோரிடத்து ஒன்று யாசித்தலும் ஓர்வித அழகினை யுடையதாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால், தொளாயிரத்து அறுபத்து மூன்றுவது திருக்குறளில் கூறியபடி குறைவில்லா புகழ்பெருக்கும் தரித்திரம் என்பது ஒருவனுக்கு உண்டான காலத்துத் தான் செல்வந்தனாக இருக்கும்போது எவ்விதம் தன் உயர்வினின்றும் தாழ்வு வாராமல் தன்னைக் காத்துக்கொண்டு நின்றானோ அதுபோல் இப்போதும் பிச்சைக்கு வருபினும் தனக்குத் தகாத தொழிலைச் செய்தல் கூடாது என்றும், அவ்விதம் செய்யாது நின்று யாசித்தல் ஓர் அழகுடையது என்றும் அறிவுடன் யாசகர் தம்மைப் பணிதல் கூடாது என்று உண்மைச்

*திருக்குறள் 963.



செல்வந்தர்கள் விரும்புவர் ஆதலால் அவரிடத்து நின்று யாசித்தல் துன்பத்தைத் தாராது அழகினையே தரும் என்றும் அறிந்ததாயிற்று என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் நல்லவரிடத்துக் கொள்ளும் பொருள் பிச்சை கேட்டு வாங்குவதாகவே இராதுபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1054. இரத்தலு மீதலே போலுங் கரத்தல்
கனவிலுந் தேற்றாதார் மாட்டு.

(பரி.) இ-ள். கரத்தல் கனவிலும் தேற்றாதார்மாட்டு இரத்தலும் = தமக்குள்ளது கரத்தலைக் கனவின்கண்ணும் அறியாதார் மாட்டுச் சென்றொன்றனை யிரத்தலும்—ஈதலே போலும் = வறியார்க்கீதலேபோலும். எ-று.

உம்மை எண்ணும்மையாய் நின்றது. தான் புகழ்பயவாதாயினும் முன்னுள்ள நல்ல புகழ்கெடாமையின், 'ஈதலேபோலும்' என்றார். ஏகாரம் [illegible].

விளக்கம்.—தமக்குள்ளபொருளை ஒளித்தலைக் கனவினிடத்தும் அறியாத பெரியோரிடத்து ஒருவன் போய் ஒரு பொருளை யாசித்தலும் தரித்திரர்க்குத் தான் ஒன்று கொடுப்பதே போலும் என்று இத்திருக்குறள் கூறுவதால், ஒருகாலத்துச் செல்வந்தனாக இருந்தவன் தான் தரித்திரனாயினும் புகழ் கெடாது பொருளைப் பெற்றுத் தன்னுடம்பைக் காப்பாற்றுதலால் அவ்வித அரிய பிறப்பாகிய மக்களுடம்பைக் காப்பாற்றியதும் ஈகையிற் சிறந்ததாகும் என்று அறிகின்றோம் என்றனர். *அது கேட்ட மாணாக்கர், "அவ்வித செல்வந்தர் இல்லையாயின் உலகத்துள்ள யாசகர் உயிரோடு வாழார் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறலானார்.

1055. கரப்பிலார் வையகத் துண்மையாற் கண்ணின்
றிரப்பவர் மேற்கொள் வது.

(பரி.) இ-ள். கண்ணின்று இரப்பவர் மேற்கொள்வது=சொல்லுதல் மாட்டாது முன்னிற்றல் மாத்திரத்தான் இரப்பார் உயிரோம்பற் பொருட்டு அதனை மேற்கொண்டு போதுகின்றது—கரப்பிலார் வையகத்து உண்மையான்=அவர்க்கு உள்ளதுகரவாது கொடுப்பார் சிலர் உலகத்துளராய தன்மையானே, பிறிதொன்றானன்று. எ-று.

அவரில்லையாயின், மானிக்கமாட்டாமையின் உயிர்விடுவரென்பதாம்.(௫)



விளக்கம்:—தம் வாயால் சொல்லுவதும் இல்லாமல் முன்னின்ற அளவிலேயே யாசிப்போர் உயிர் காத்தற் பொருட்டு அவ்வித யாசகத்தை மேற்கொண்டு செல்லுகின்றது, தம்மிடத்தே உள்ள பொருளை ஒளியாது கொடுக்கின்ற கொடையாளர் சிலர் உலகத்து உண்டு என்கின்ற

தன்மையிலேயே அல்லாமல் வேறு ஒன்றினாலும் இல்லை என்று இத் திருக்குறள் கூறுவதால், அவ்விதம் உள்ளதை இல்லை என்னாது கொடுக் கின்ற கொடையாளர் உலகத்துச் சிலர் இருப்பதால் யாசகர் அவர் முன் சென்று தம் குறையை எடுத்துச் சொல்லாமல் எதிர் நின்ற அள விலேயே பொருளைப் பெற்றுப் புகழ் கெடாது வாழ்கின்றார் என்றும், அவ்வித தகுதியுடையார் இல்லையாயின் உயிரைத் துறப்பார்களே யன்றி யாசிக்கமாட்டார்கள் என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "இவ்வித பெருங்கொடையாளர் உள்ள இடத்தே சென்று அவரைக் கண்டால் யாசகத்திற்குச் சென்ற ஒருவனுடைய துன்பங்கள் என்னாகும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1056. கரப்பிடும்பை யில்லாரைக் காணி னிரப்பிடும்பை
யெல்லா மொருங்கு கெடும்.

(பரி.) இ-ள். கரப்பிடும்பை இல்லாரைக் காணின்=உள்ளதுகரத்தலா கிய நோயில்லாரைக் கண்டால்,—நிரப்பிடும்பை எல்லாம் ஒருங்கு கெடும்= மானம்விடா திரப்பார்க்கு நிரப்பான் வருந்துன்பங்களெல்லாஞ் சேரக் கெடும். எ-று.

காத்தல் ஒருவற்கு வேண்டுவதொன்றன்மையின் அதனை 'நோய்' என் றும், அந்நோயில்லாத இரக்கத்தக்காரைக் கண்டபொழுதே அவர் கழிவுடைய ராவாராகலின் 'எல்லாமொருங்குகெடும்' என்றும் கூறினார். இடும்பை—ஆகு பெயர். முழுதுங்கெடுமென்று பாடமோதி, எஞ்சாமற்கெடுமென் றுரைப் பாருமுளர். (சு)

விளக்கம்:—தம்மிடத்தேயுள்ள பொருளை இல்லையென்று ஒளிக் கின்ற நோய் ஒன்றினை இல்லாதவரைப் பார்த்தால் மானத்தை விட்டு விடாது இரக்கின்ற யாசகருக்குத் தரித்திரத்தால்வரும் துன்பங்களெல் லாம் ஒரு சேரக் கெட்டுவிடும் என்று இத்திருக்குறள் கூறுவதால், யாச கரைக் கண்டகாலத்து அவர் மீது உள்ள அன்பின் மிகுதியால் இல்லை என்னாது கொடுக்கும் செல்வந்தரை யாசகர் காண்பாராயின் கண்ட

பொழுதே அளவில்லாத மகிழ்ச்சி கொள்ளுவார் ஆதலால் அவ்வித மகிழ்ச்சி கொள்ளும் காலத்துத் தரித்திரத்தால் நமக்கு இருந்த துன்பமெல்லாம் முழுவதும் கெட்டுவிடும் என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "உண்மைச் செல்வத்தாரைக் கண்ட காலத்து நீங்காத் தரித்திரமுடையானது துன்பமும் நீங்கிப்போம் என்பது அறிந்தோம். ஆயின், கொடுப்பாரைக் காணின் கொள்வார்க்குத் துன்பம் நீங்குவது எவ்வித மகிழ்ச்சி கொள்வதினால் என்பதையும் அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1057. இகழ்ந்தெள்ளா தீவாரைக் காணின் மகிழ்ந் [துள்ள
முள்ளு ளுவப்ப துடைத்து.

(பரி.) இ-ள். இகழ்ந்து எள்ளாது ஈவாரைக் காணின் = தம்மையவமதித்து இழிவுசொல்லாது பொருள்கொடுப்பாரைக் கண்டால், — உள்ளம் மகிழ்ந்து உள்ளுள் உவப்பது உடைத்து = அவ்விரப்பாரது உள்ளமகிழ்ந்து உள்ளுள்ளே யுவக்குந் தன்மையுடைத்து. எ-று.

இகழ்ந்தெள்ளாதெனவே, நன்குமதித்தலும் இனியவைகூறலும் பெறுதும். இரப்பிடும்பை கெடுதலேயேயன்றி ஐம்புலன்களாலும் பேரின்பமெய்தினாராகக் கருதலான், 'உள்ளுளுவப்பதுடைத்து' என்றார். இவை மூன்று பாட்டானும் அவ்விரத்தக்கார தியல்பு கூறப்பட்டது. (எ)

விளக்கம்:—யாசிக்கச் சென்றகாலத்துத் தம்மை அவமதியாமலும், இழிவாகப் பேசாமலும் பொருள் கொடுத்து உதவுவாரைக் கண்டால், யாசிப்பாரது உள்ளமானது மகிழ்ச்சி யடைவதுடன் உள்ளுக்குள்ளே எல்லாப் புலன்களும் மகிழ்ச்சி யடையும் தன்மையுடையதாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால், நன்குமதித்தலும், இனியவை கூறலும் ஆகியஇரண்டுடன் இன்முகமும் காட்டிப்பொருளையுங் கொடுப்பாராயின் யாசிக்கச்சென்ற ஒருவன் கொடுப்பவனது இனிய முகத்தைப் பார்த்த அளவிலேயே கட்புலன் மகிழ்வெய்துமென்றும், இனியசொல்

இசைகேட்ட அளவிலே செவிப்புலன் இன்பமடையுமென்றும், நன்குமதித் தலாலே மனம் மகிழ்வடையுமென்றும், பொருள் கொடுத்தலாலே நீங் கைத் தரித்திரம் நீங்கி வாய் மெய் முதலிய புலன்களும் இன்பம் துய்த்து மகிழ்வடையுமென்றும், ஆகவே, தரித்திரமுடையானது துன்பங்கள் நீங்



குவதற்குச் செல்வர்களைப் பார்ப்பதே ஓர் காரணமாகவுள்ளது என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "தரித்திரர் இருப்பதினாலேயே ஈவார் இம்மையும் மறுமையுமாகிய இரண்டு பயன்களையும் அடைகின்றார்கள் போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1058. இரப்பாரை யில்லாயி னீர்ங்கண்மா ஞாலம்
மரப்பாவை சென்றுவந் தற்று.

(பரி.) இ-ள். இரப்பார் இல்லாயின் = வறுமையுற்றிரப்பாரில்லையாயின், —ஈர்ங்கண்மா ஞாலம் = குளிர்ந்த இடத்தையுடைய பெரிய ஞாலத்துள்ளார் செலவு வரவுகள் — மரப்பாவை சென்றுவந்தற்று = உயிரில்லாத மரப்பாவை இயந்திரக்கயிற்றாற் சென்று வந்தாற்போலும். எ-று.

ஐகாரம் — அசைநிலை. ஞாலமென்னும் ஆகுபெயர்ப்பொருட்கு உவமை யோடொத்த தொழில் வருவிக்கப்பட்டது. ஞாலத்துள்ளாரென்றது அவரை யொழித்தாரை. அவர்க்கீதலைச்செய்து புகழும் புண்ணியமுமெய்தாமையின் உயிருடையாரல்லரென்பதாம்; "ஈவாரும் கொள்வாரு மில்லாத வானத்து— வாழ்வாரே வன்க ணவர்" என்றார் பிறரும். இத்தொடையின்பநோக்காது இரப்பவரில்லாயினென்று பாடமோதுவாருமுளர். (அ)

விளக்கம்:—தரித்திரமடைந்து பிச்சை யெடுப்பார் இல்லையானால் இப்பெரிய பூமியில் உள்ளவர் போதலும் வருதலும் மரத்தாற் செய்த பொம்மை ஒன்று இயந்திரக் கயிற்றால் முன் சென்றும் பின் வந்தும் இருப்பது போலேயே ஆகும் என்று இத்திருக்குறள் கூறுவதால், பெரிய செல்வத்தை ஒருவர் படைத்து இருக்கினும் அச்செல்வத்தா லாகிய புகழும் புண்ணியமும் அடையவேண்டுமாயின் தரித்திரர் இல்

வெளியின் முடியாதுபோகும், என்றும், அவ்விதம் ஈதல் இல்லாமல் உல குத்து வாழ்ந்து செல்கின்றவர்கள் தாம் பிறந்ததும் இறந்ததும் மரத் தாற் செய்த பொம்மை ஒன்று அதை ஆட்டுகின்ற தலைவனுடைய கையி லுள்ள கயிற்றால் ஆடி யாதொரு பயனும் அடையாமற் போவது போல் எப்பயனும் அடையாமற்போவதற்கேயாகின்றது என்றும் அறிந் தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "தரித்திரத்தால் பிச்சை எடுப்பவர்கள் இவ்வுலகத்துத் தோன்றுவதும் ஒரு பெரும்பயனே போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்



1059. ஈவார்க ணென்னுண்டாந் தோற்ற மிரந்து
மேவா ரிலாஅக் கடை. [கோள்

(ப.ரி.) இ-ள். இரந்துகோள் மேவார் இலாக்கடை = அவர்பாற்சென்று ஒன்றனை யிரந்துகோடலை விரும்புவாரில்வழி—ஈவார்கண் தோற்றம் என் உண்டாம் = கொடுப்பார்மாட்டு என்னபுகழுண்டாம்! யாதுமில்லை, எ-று.

தோற்றம்—ஆகுபெயர். மேவுவாரென்பது விகாரமாயிற்று. கொடுத் தல்வன்மை வெளிப்படாமையின், அதனாற்புகழெய்தாரென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் உலகிற்கிரப்பார் வேண்டுமென்பதுகூறப்பட்டது. (௯)

விளக்கம்:—கொடுப்பவரிடத்திற்சென்று ஏதேனும் ஒருபொருளை யாசித்துக் கொள்ளுதலை விரும்புபவர்கள் இவ்வுலகத்து இல்லையா யின், அக்கொடுப்பவருக்கு ஈதலின்மையின் காரணத்தால் ஒரு புகழும் உண்டாகாது என்று இத்திருக்குறள் கூறுவதால், ஒருவனது கொடுத்த லாகிய வல்லமை பிச்சை எடுப்பாராகிய தரித்திரர் இல்லாவிடின் வெளிப் படாததனாலும், புகழெய்துதல் கூடாததனாலும் உலகத்திற்கு யாசகர் வேண்டுமென்றே யறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்வி தம் உலகத்திற்கு இருந்தே ஆகவேண்டுபவனாகிய யாசகன் தான் யாச கத்தைப் பெறச் சென்றபோது கோபித்தல்கூடுமோ?" என்னலும், ஆசிரி யர் கூறுவாராயினர்.

1060. இரப்பான் வெகுளாமை வேண்டு நிரப்பிடும்பை

தானேயுஞ் சாலுங் கரி.

(பரி.) இ-ள். இரப்பான் வெகுளாமைவேண்டும் = ஈவானுக்குப்பொருளுதவாவழி இவனெனக்கீகின்றிலனென்று அவனை யிரப்பான் வெகுளாதொழிதல்வேண்டும்; —நிரப்பிடும்மை தானேயும் கரிசாலும் = அதுவேண்டிய பொழுது உதவாதென்பதற்கு வேறுசான்று வேண்டா, நிரப்பாகிய தன்னின்மை தானேயுஞ் சான்றுதலமையும். எ-று.

* யாவர்க்கும் தேடவேண்டுதலும் நிலையின்மையுமுதலிய பிறசான்றுமுண்டென்பதுபட நின்றமையின், உம்மை எச்சவும்மை. தனக்கேயன்றி மற்றை யிரந்தார்க்கும் அற்றைக்கன்று பொருள் கொடுக்கப்பட்டதற்கு அவனுறத் துன்பத்தைத் தனக்கேபோலவைத்துத் தானுறத்துன்பந் தானறிந்து வெகுளற்க வென்பதாம். இதனால் அவர்க்கின்றியமையாததோரியல்பு கூறப்பட்டது. (௰)



விளக்கம்:—யாசகம் கொடுக்கின்ற ஒருவனுக்குப் பொருள் உதவாத காலத்து அவன்கொடாமையால் 'இவன் எனக்குக் கொடுக்கவில்லை' என்று அவனை யாசிப்பான் கோபியாது இருத்தல் வேண்டும் என்றும், பொருளானது அவன் வேண்டிய காலத்து வந்து உதவாது என்பதற்கு தரித்திரமாகிய அவனுக்குள்ள துன்பமே அவனுக்குச் சாட்சியாக அமையும் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், பொருளானது எல்லோர்க்கும் வேண்டுவது ஒன்றுயும் ஓரிடத்திலேயே நிலையில்லாது இருப்பதையும், கொடையாளி ஒருவன் ஓர் காலத்துச் செல்வத்தை இருக்கினும் மற்றோர் காலத்துத் தன்னைக் காத்தற்கும் தன்னிடத்தே வந்து யாசித்தார்க்குப் பொருள்கொடுத்தற்கும் அப் பொருளினை விட்டுதல் மிகுதியும் துன்பம் தருவதாயும் உள்ளது என்பதை யாசகன் அறியும் வண்ணம் அவன் தரித்திரத்தால் அவன் துன்பம் அடைவதை அவனே அறிதல்கூடும் என்றும், அவ்விதம் அறிவானாயின் பொருள் கொடாதவனை நோக்கி அவன் துன்பமறிந்து அவன் மீது கோபியான் என்றும் கூறியதாயிற்று என்று அறிந்ததுடன் இதனால் யாசிப்பவனுக்கு இருக்கவேண்டிய ஓர் இன்றியமையாத இயல்பினையும் கூறலாயிற்று என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "இவ்வதிகாரம் மானங்கெடாமல் வரும் பிச்சையை எங்களுக்கு அறிவித்ததாயிற்று. இனி, மானங்கெடவரும் பிச்சையாயின் என் செய்தல்வேண்டும்?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

## 107. அதிகாரம்.

## இரவச்சம்.

(பரி.) அஃதாவது மானந்தீரவரு மிரவிற் கஞ்சுதல். அதிகாரமுறைமையும் இதனானே விளங்கும்.

விளக்கம்:—அதாவது, பெருமைகெட்டு அதனால் வரும் பிச்சை, யெடுத்தலுக்குப் பயப்படுதல். இனி மேல்விளக்கியபடி பெருமை கெட வரும் பிச்சைக்கு அஞ்சவேண்டும் என்றதாயிற்று என்றனர். அது கேட்ட மாணாக்கர், "மிக்கதோர் தருமமுடையார் இடத்தும் இரத்தலுக்கு அஞ்சுதல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



1061. கரவா துவந்தீயுங் கண்ணன்னார் கண்ணு
மிரவாமை கோடி யுறும்.

(பரி.) இ-ள். கரவாது உவந்து ஈயும் கண் அன்னார்கண்ணும் இரவாமை = தமக்குள்ளது கரவாது இவர் வரப்பெற்றேமென்று உண்மகிழ்ந்து கொடுக்குங் கண்போலச் சிறந்தார்மாட்டும் இரவாதே ஒருவன் வறுமைகூர்தல்—கோடி உறும் = இரந்துசெல்வமெய்தலிற் கோடிமடங்கு நன்று; எ-று.

நல்குரவு மறைக்கப்படாத நட்டார்மாட்டும் ஆகாதென்பதுபட நின்றமையின், உம்மை உயர்வுசிறப்பின்கண் வந்தது. அவ்விரவானும் மானக்கேடென்னுந் தன்மையல்லது அதற்கு மிகுதிகூடாமையின், வல்லதோர் முயற்சியானுயிரோம்பலே நல்லதென்பது கருத்து. (க)

விளக்கம்:—தமக்கு உள்ள பொருளைச் சிறிதும் ஒளியாது 'இவர் நம்மிடத்தே வருதற்குப் பெற்றோமே' என்று மனமகிழ்ந்து கொடுக்கின்ற கண்போலச் சிறப்புடையவரிடத்தும் ஒருவன் சென்று பிச்சை பெறாமல் தரித்திரத்தை யடைவானாயின் அவ்வித தரித்திரமானது பிச்சை எடுத்து அடைந்த செல்வம் கோடி

மடங்கினை உடையதாயினும் அச்செல்வத்தைக் காட்டிலும் நல்லதா கும் என்று இத்திருக்குறள் கூறுவதால், ஒருவன் தன்னால் கூடிய அளவு முயற்சி செய்து அதனால் வரும் பொருளைக் கொண்டு தரித்திரத் தோடு வாழ்தலே நன்மை உடையது என்றும், பிச்சை எடுத்துவரும் செல்வம் அளவிற்கு அடங்காதாயினும் அது ஒருவனது பெருமை கெட்டுவருவதால் கோடியளவானாலும் கொள்ளுதல் ஆகாதென்றும் அறிகிறோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஏதோ தம்முயிர் தாங்கும் இடமாகிய உடம்பைக் காப்பாற்றுவதற்கு ஓர் முயற்சியும் செய்வதற்கு இல்லாத ஒருவன் பிச்சை எடுத்தேனும் பிழைத்தல் வேண் டாவோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1062. இரந்து முயிர்வாழ்தல் வேண்டிற் பரந்து
கெடுக வுலகியற்றி யான்.

(பரி.) இ-ள். உலகு இயற்றியான் இரந்தும் உயிர்வாழ்தல் வேண்டின் = இவ்வுலகத்தைப் படைத்தவன் இதன்கண் வாழ்வார்க்கு முயன்றுயிர்வாழ்தலை யன்றி இரந்துமுயிர்வாழ்தலைவேண்டி விதித்தானாயின், — பரந்து கெடுக = அக் கொடியோன்றானும் அவரைப்போன்று எங்கு மலைந்து கெடுவானாக. எ-று.,



மக்களுயிர்க்கெல்லாம் வாழ்நாளும் அதற்கு வேண்டுவதாயவுண்டியும் அதற்கேதுவாய செய்தொழிலும் பழவினைவயத்தாற் கருவொடுகலந்தவன்றே அவன் கற்பிக்குமன்றே, அவற்றுட் சிலவுயிர்க்கு இரத்தலையும் ஒருசெய் தொழிலாகக் கற்பித்தானாயின் அத்தீவினையாற் றானும் அத்துன்பமுறல் வேண்டுமென்பதாம். இவை யிரண்டுபாட்டானும் அவ்விரவின்கொடுமை கூறப்பட்டது. (உ.)

விளக்கம்:—இவ்வுலகத்தைப் படைத்தவனாகிய சிருஷ்டி கருத் தா உலகத்து வாழ்கின்ற மக்கள் முயற்சிசெய்து உயிர் வாழ்வதை விட் டுப் பிச்சை எடுத்து உயிர் வாழவேண்டுமென்று ஓர் விதியினை விதித் திருப்பானாயின், அவ்வித விதியினை உண்டுபண்ணிய அக்கொடியவனா கிய சிருஷ்டி கருத்தா இப்பிச்சை எடுப்பாரைப்போன்று எங்கும் சுழன்று வருந்திக் கெட்டுப்போவானாக என்று இத்திருக்குறள் கூறுவ

தான், எல்லா உயிர்க்கும் வாழவேண்டிய நாட்களையும், அவ்வாழ்விற்குரிய உணவும், அவ்வுணவைப் பெறுவதற்குக் காரணமாகிய செய்தொழிலும் முன்செய்த வினைக்குத் தக்க அளவாகக் கருவில் அமைத்தபோதே இருக்கும்படி கருத்தா அமைக்கின்றான் அன்றோ? அவ்விதம் அமைத்தவன் முயற்சியைவிட்டுப் பிச்சை எடுத்து உயிர் வாழ்தலும் கூடும் என்று ஓர் விதியினைக் கற்பித்திருப்பானாயின் அவன் கற்பித்த பிச்சையின்படி பிச்சை எடுத்து உயிர் வாழ்கின்ற மக்கள் தருவினை அவரவர் செய்த வினைக்குத்தக்க அளவாக முடித்ததாகக் கொள்ளுதல் வேண்டுமேயன்றி இருக்கும்படித்தவனது தவறு அல்ல என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "பிச்சை எடுத்தலின் கொடுமை இதுவென்று அறிந்தோம், இனிப் பிச்சை எடுத்து வாழ்ந்து இருப்போம் என்று எண்ணுதலும் கூடாதுபோலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1063. இன்மை யிடும்பை யிரந்துதீர் வாமென்னும்
வன்மையின் வன்பாட்ட தில்.

(பரி.) இ-ள். இன்மை இடும்பை இரந்துதீர்வாம் என்னும் வன்மையின் = வறுமையான் வருந்துன்பத்தை முயன்று நீக்கக்கடவேமென்று கருதாது இரந்து நீக்கக்கடவேமென்று கருதும் வன்மைபோல — வன்பாட்டது இல் = வலியபாடுடையது பிறிதில்லை, எ-று.



செயலாய முயற்சி நிற்க செயலல்லாத இரவாற்றீர்க்கக்கருதுதலின், வன்மையாயிற்று. வன்பாடு = முருட்டுத்தன்மை; அஃதாவது ஓராதுசெய்து நிற்றல். இதனான் வறுமைதீர்தற்கு நெறி இரவன்றென்பது கூறப்பட்டது.

விளக்கம்:—தரித்திரத்தால் வரும் துன்பத்தினை முயற்சிசெய்து வரும் பொருளால் நீக்குவோம் என்று எண்ணாது, பிச்சை எடுத்து நீக்குவோம் என்று எண்ணும் மன வலிமையைப்போல வலிமையுடையது வேறு ஒன்று இல்லை என்று இத்திருக்குறள் கூறுவதால், முயற்சி செய்து பிழைக்கும் நன்னெறியினைக் கைவிட்டுத் தீநெறியாகிய பிச்சை எடுத்தலால் பிழைப்போம் என்று சிறிதும் ஆராயாது கொள்ளும் முருட்டுத் தன்மையைக் காட்டிலும் வேறு முருட்டுத்தன்மை இவ்

வுலகத்து இல்லை என்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பிச்சை எடுக்க எண்ணுவது நன்னெறி அல்ல என்று அறிந்தோம்; இவ்வித பிச்சை எடாத அமைதியானது உலகத்து எவ்வித தகுதியுடையது என்று அறிய விரும்புகின்றோம்" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1064. இடமெல்லாங் கொள்ளாத் தகைத்தே யிடமில்
காலு மிரவொல்லாச் சால்பு. [லாக்

(பரி.) இ-ள். இடம் இல்லாக்காலும் இரவு ஒல்லாச் சால்பு = நுகரவேண்டுவனவின்றி நல்கூர்ந்தவழியும் பிறர்பாற்சென்றிரத்தலையுடம்படாத அமைதி — இடமெல்லாம் கொள்ளாத் தகைத்தே = எல்லாவுலகும் ஒருங்கேயொத்தாலும் கொள்ளாத பெருமையுடைத்து. எ-று.

அவ்விரத்தலைச் சால்பு விலக்குமாகலின், இரவொல்லாமை அதன்மே லேற்றப்பட்டது. இதனான் அந்நெறியல்லதனைச் சால்புடையார் செய்யா ரென்பது கூறப்பட்டது. (௪)

விளக்கம் :—உண்பதற்குரிய பொருள்கள் ஒன்று மில்லாது தரித்திரத்தை அடைந்தகாலத்தும் பிறரிடத்துப்போய்ப் பிச்சை எடுத்தற்கு மனங்கொள்ளாத அமைதியானது எல்லாவுலகங்களும் ஒன்று சேர்ந்தாலும் நிரம்புதற்கு முடியாத பெருமையை யுடையதாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால், சால்புடையவர் உண்பதற்கு ஒன்றுமில்

லாது உயிர்போங்காலத்தும் பிச்சையெடுத்தல் என்பதைவிரும்பி அந்நெறி யிற் செல்லார் என்றும், அவ்வித தீயநெறியிற் செல்லாத நல்ல அமைதி





யால் வரும் பெருமை எல்லாவுலகங்களிலும் கொண்டு அடைத்தாலும் அடைப்பதற்கு இடம்போதாமல் மிகுந்து நிற்கும் என்றும் கூறியதாயிற்று. இதனால், பிச்சைகேளாதவாறு பெருமையைக் காட்டிலும் வேறொரு பெருமை இல்லை என்று அறிந்தோம் என்றனர். இது கேட்ட மாணாக்கர், "முயற்சியால் வரும் பொருள் பின் வாழ்க்கைக்குப் போதா

தாக இருக்குமாயின் என் செய்வது?" என்னலும், ஆசிரியர் கூறலுற்றாயினர்.

1065. தெண்ணீ ரடுபுற்கை யாயினுந் தாடந்த
துண்ணலி னூங்கினிய தில்.

(பரி.) இ-ள். தான் தந்தது தெண்ணீர் அடுபுற்கையாயினும் = தெறியாய முயற்சி கொடுவந்தது தந்தது தெளிந்தநீர்போலும் அடுபுற்கையேயாயினும்,— உண்ணலின் ஊங்கு இனியது இல் = அதனையுண்டற்குமேலினியதில்லை. எ-று.

தாடந்ததூஉம் செறிவின்றித் தெண்ணீர் போன்றதாயினும் இழிவாய இரவான்வந்ததன்றித் தம்முடைமையாகலின், அமிழ்தத்தோடொக்குமென்பதாம். இதனால் செறிவிறையுடைய சிறிதேனும் அதுசெய்யுமின்பம் பெரிதென்பது கூறப்பட்டது. (௫)

விளக்கம் :—நன்னெறியாகிய முயற்சியைச்செய்து அம்முயற்சியால் கிடைத்த பொருளால் வந்தது மிகுதியும் தெளிவினையுடைய தண்ணீரைப்போல் சமைத்த கஞ்சிச் சோறேயாயினும் அவ்விதக் கஞ்சியைச் சோற்றினை உண்பதற்குமேல் இனிமையையுடையது வேறொன்று இல்லை என்று இத்திருக்குறள் கூறுவதால், தன்னுடைய முயற்சியால் வந்த உணவானது ஒன்றோடொன்று சேராத தெளிந்த நீர்போல் பலன் தாராததாக இருந்தாலும், இழிவாகிய பிச்சை எடுத்தலால் வந்த பொருள் அல்லாது தம்முடைய சொந்த முயற்சியால் வந்த பொருளாக இருத்தலால் அந்த ஊமையாகிய உணவும் அமிழ்தத்திற்குச் சமானமென்றும், நன்னெறியில் கிடைத்த உணவு மிகச் சிறியதாயினும் அவ்வுணவினை உட்கொள்ளுதலால் வரும் இன்பம் மிகப்பெரியது என்றும் அறிந்தோம் என்றனர். அது கேட்ட மாணாக்கர், "தன்னுயிர் காத்தல்பொருட்டுப் பிச்சை எடுத்தல் கூடாதெனினும், மற்றோர் உயிரைக் காப்பதன் பொருட்டாவது பிச்சை எடுத்தல் கூடாதோ?" என்னலும், ஆசிரியர் கூறலுற்றாயினர்.



1066. ஆவிற்கு நீரென் றிரப்பினு நாவிற்
கிரவி னிளிவந்த தில்.

(பரி.) இ-ள். ஆவிற்கு நீரென்று இரப்பினும் = தண்ணீர்பெறாது இறக்கு நிலைமைத்தாயதோராவினைக் கண்டு அறநோக்கி இதற்குத் தண்ணீர் தரல் வேண்டுமென்றிரந்து சொல்லுங்காலும், — இரவின் நாவிற்கு இளிவந்தது இல் = அவ்விரவுபோல ஒருவனாவிற்கிளிவந்தது பிறிதில்லை. எ-று.

ஆ காத்தோம்பல் பேரறமாகலின் 'ஆவிற்கு' என்றும், பொருள்கொடுத்துக் கொள்ள வேண்டாத எண்மைத்தாகலின் 'நீர்' என்றும், இரக்கின்றானுக்கு இளிவு அச்சொல்லளவேயாகலின் 'நாவிற்கு' என்றும், அது தான் எல்லாவிளிவினும் மேற்பட்டதலின், 'இளிவந்தது' என்றுங் கூறினார். இதனான் அறனும் முயன்றுசெய்வதல்லது இரந்து செய்யற்கவென்பது கூறப்பட்டது.

விளக்கம் :—குடிப்பதற்குத் தண்ணீரும் கிடைக்காமல் இறக்கும் தருவாயில் உள்ள ஓர் பசுவினைப் பார்த்து 'இப்பசுவிற்கு நாம் தண்ணீர் தருதல்வேண்டும்' என்று தருமத்தைக் கருதிப் பிறரிடத்திற் சென்று அத்தருமத்தைச் சொல்லிப் பிச்சை எடுப்பதாயினும் சொல்லிய அந்நாவிற்கு வந்த இழிவைக்காட்டிலும் இழிவு வேறு ஒன்றும் இல்லை என்று இத்திருக்குறள் கூறுவதால், பசுவினைக் காத்து நிற்பது தருமங்கள் எல்லாவற்றிலும் பெரியதோர் தருமமாக இருந்தும், அவ்விதம் கேட்கும் தருமமும் பொருள் செலவில்லாத தண்ணீராக இருந்தும், அதையும் யாசித்துக் கேட்குமிடத்தும் கேட்ட நாவினுக்கும் இழிவுவரும் என்று அறிவதால், தருமத்தையும் தான் முயற்சிசெய்து வரும் பொருளால் செய்யவேண்டுமே யன்றிப் பிச்சை எடுத்துச்செய்தல் ஆகாது என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "ஒருவன் தான் பிச்சை எடாவிட்டாலும் பிறர் பிச்சை எடுப்பதையும் தடுத்தல் வேண்டுமோ?" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1067. இரப்ப னிரப்பாரை யெல்லா மிரப்பிற்
கரப்பா ரிரவன்மி னென்று.

(பரி.) இ-ள். இரப்பாரை எல்லாம் இரப்பன் = இரப்பாரையெல்லாம் யானிரக்கின்றேன், — இரப்பிற் கரப்பார் இரவன்மின் என்று = யாது சொல்லி யெனின், நுமக்கிரக்கவேண்டுமாயின் நுமக்குள்ளது கரப்பாரையிரவாதொழிமினென்று சொல்லி. எ-று.

இரண்டாவது விகாரத்தாற்றொக்கது. இவ்விளிவந்த செயலான் வாட்டிய வழியும் உடம்பு நில்லாதாகலின் இது வேண்டாவென்பது தோன்ற, 'இரப்பன்' என்றார். இதனான் மானத்தொடுவருமிரவு விலக்கப்பட்டது. (எ)

விளக்கம்:—'நீங்கள் பிச்சை எடுக்கவேண்டுமானால் தம்மிடத்தே உள்ள பொருளை இல்லை என்று ஒளிப்பாரைப் போய்ப் பிச்சை கேளாதீர்கள்' என்று சொல்லிப் பிச்சை எடுப்பவர்களை எல்லாம் நான் பிச்சை கேட்பேன் என்று இத்திருக்குறள் கூறுவதால், இழிவாகிய பிச்சை எடுக்கும் செய்கையால் வந்த பொருளைக் கொண்டு உண்பித்த காலத்தும் அதை உண்ட உடம்பு நில்லாது என்றும், நில்லாத தேகத்தின்பொருட்டு நிலையாகிய இழிவைத் தரும் பிச்சையைக் கொள்ளாதீர்கள் என்றும், மேல் மானம் ஒழியாத பிச்சையை வாங்குதல் கூடும் என்று கூறிய இவர் இத்திருக்குறளால் மானம் ஒழியவரும் பிச்சையானது கொடுமையையும் பயனில்லாமையையும் தரும் என்றும் எடுத்துக் காட்டியது ஆயிற்று என்றனர். அது கேட்ட மாணாக்கர், "பிச்சை எடுப்பதால் ஒருவன் தன் தரித்திரத்தை நீக்குதல் கூடாது போலும்!" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1068. இரவென்னு மேமாப்பி றோணி கரவென்னும்
பார்தாக்கப் பக்கு விடும்.

(பரி.) இ-ள். இரவு என்னும் ஏமாப்பு இல் தோணி=இல்வறுமையென்னும் கடலை இரவாற்கடத்துமென்று கருதி ஒருவனேறிய இரவென்னுஞ் சேமமற்ற தோணி—கரவு என்னும் பார் தாக்கப் பக்கு விடும்=அதன் கண்ணுள்ளோர் கரத்தலென்னும் வன்னிலத்தோடு தாக்குமாயிற் பிளந்து போம். எ-று.

முயற்சியாற் கடப்பதனை இரவாற்கடக்கலுற்றான் அதன்கண் காணாமையின் 'ஏமாப்பிறோணி' என்றார். ஏமாப்பின்மை தோணிமேலேற்றப்பட்டது. அது கடத்தற் கேற்றதன்மையானும், நிலைமறியாது செலுத்தியவழி உடைதலானும், அதன்கணேற்றக வென்பதாம். இஃதேகதேசவுருவகம். (அ)

விளக்கம்:—இத்தரித்திரம் என்னும் சமுத்திரத்தை யாசித்தலால் கடந்து விடுவோம் என்று எண்ணி ஒருவன் ஏறிச் செலுத்தும் பிச்சை எடுத்தல் என்னும் பலமற்ற தோணியானது அத்தரித்திரக் கடலில் ஒளித்து வைத்துக்கொண்டு இல்லை என்று சொல்லுகின்ற



வலிமை தங்கிய பாறையின் மீது தாக்குமாயின் பிளந்து போய்விடும் என்று இத்திருக்குறள் கூறுவதால், முயற்சிசெய்து கடக்கவேண்டிய தரித்திரக் கடலைப் பிச்சை எடுத்துக் கடப்பேன் என்று ஒருவன் ஆரம் பிப்பானாயின், அக்கடலைக் கடத்தற்கு அவன் கொண்டதாகிய அப் பிச்சை என்னும் தோணி வன்னெஞ்சரிடத்தே அடித்த காலத்து உடைந்து போவதாகும் என்றும், தோணி யோட்டுவோன் ஒருவன் தான் கொண்ட தோணி பலமுடையதும் ஓட்டும் வழி பாறையற்றதும் ஆக இருந்தாலன்றி அக்கடலைக் கடத்தல் எவ்வாறு ஆகாதோ அவ்வாறு, தரித் திரக் கடலைக் கடப்பானும் பிச்சை எடுப்பதாகிய பலமற்ற தோணியைக் கைக்கொண்டவுடன் அத்தோணியையும் ஒளிப்பாராகிய பாறையில் மோதுவானாயின் அத்தோணியும் பிளந்து போவது அல்லாமல் தானும் அத்தரித்திரக் கடலுள் அழுந்தி இறந்துபோவான் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "பிச்சை எடுத்தலால் தரித்திரத் தைக் கடப்பது அருமை என்று அறிந்தோம். ஆயின், பிச்சை எடுப் பவர்களைக் காணுங் காலத்துப் பெரியோர் வருந்துவரோ?" எனவும், ஆசிரியர் கூறலாயினர்.

1069. இரவுள்ள உள்ள முருகும் கரவுள்ள
உள்ளதூஉ மின்றிக் கெடும்.

(பரி.) இ-ள். இரவு உள்ள உள்ளம் உருகும்=உடையார்முன் இல்லார் சென்றிரந்து நிற்றலின் கொடுமையை நினைத்தால் எம்முள்ளங் கரைந்துருகா நிற்கும்,—கரவு உள்ள உள்ளதூஉம் இன்றிக் கெடும்=இனி அந்நிலையைக் கண்டுவைத்தவர் இல்லையென்றலின் கொடுமையை நினைத்தால் அவ்வுருகு

மனவுதாறுமின்றிப் போன்றிவிடும். எ-று.

“இரவினை—யுள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ—கொள் ளுங்காற் கொள்வார் குறிப்பு” என்றார் பிறரும். இரவினுங்கரவு கொடி தென்பதாம். இதற்குப் பிறரெல்லாம் இரக்கின்றவருள்ளமுருகுமென் றுரைத்தார். (௰)

விளக்கம்:—செல்வம் உடையவரிடத்தே சென்று அவர்முன் வறிஞர் யாசித்து நின்று பிச்சை கேட்கும் கொடுமையை நினைத்தால் எம்முடைய மனமானது கரைந்து உருகுகின்றது என்றும், ஆயின், அவ்விதம் அன்றித் தம்முன் நிற்பவர் நிற்கின்ற எளியநிலையைப்



பார்த்த செல்வந்தர் வைத்துக்கொண்டே இல்லை என்று சொல்லுகின்ற கொடுமையை நினைத்தால் முன்னர் மனம் உருகினின்ற அவ்வளவு மல்லாமல் உயிர் தரித்து இருந்தது போல் தரியாது அப்போதே உயிர் போய் விடும்போல் இருக்கின்றது என்றும் இத்திருக்குறள் கூறுவதால், பிச்சை எடுத்தலே மிகுதியும் கொடுமை உடைய செயல் என்றும், அவ் விதக் கொடிய செயலையும் கைகட்டி வாய் பொத்தி நின்று கேட்டகாலத் தும் வைத்துக்கொண்டே இல்லை என்று சொல்லப் புகுந்தால் அதனி னும் கொடியது வேறொன்றில்லை என்றும் கூறவந்தவர் பிச்சை எடுப் பவன் செல்வந்தர் முன் நிற்கின்ற நிலைமையினது பரிதாப மிகுதியைக் கண்டவுடனே மனமுருகிப் போகுமென்றும், அதனினும் வைத்துக் கொண்டே இல்லை என்று சொல்லுவதாகிய வஞ்சகத்தை நினைத்தால் இறப்பே உண்டாகும் என்றும் பிரித்துக் காட்டினாராயினர். இதனை நாலடியார், இரவச்சம் என்னும் அதிகாரத்திலும்,

“கரவாத திண்ணன்பிற் கண்ணன்னார் கண்ணு
மிரவாது வாழ்வதாம் வாழ்க்கை—இரவினை
யுள்ளுங்கா லுள்ள முருகுமா லென்கொலோ

லைக் கேட்டவுடன் 'இனி நாம் என் செய்வோம்?' என்று ஏங்கி யாதொரு செயலுமில்லாமல் நிற்பர் என்றும், அந்நிற்கின்ற நிலையாற்றானே தம் முயிரை இழப்பர் என்றும், இவ்விதம் கேட்ட அளவிலேயே கொல்லுந் தகுதியுடைய சொல் அதைச் சொல்லிய ஒருவனைக் கொல்லாது நிற்பது மிகுதியும் ஆச்சரியமாக உள்ளது என்றும், அன்றியும் அச்செல்வத்தது உயிரானது அவன் தேகத்தில் எங்கேயோ ஒரு சந்தில் ஒளித்துக் கொண்டு இருத்தல் வேண்டுமென்றும் கயமையின் கொடுமையை எடுத்துக் காட்டுவதாயிற்று. இவ்விதம் இல்லை என்று சொல்லிய சொல்லைக் கேட்டவுடன் இரப்பவன் மாய்ந்து விடுவான் என்பதை நாயனார், இரவச்சம் என்னும் அதிகாரத்திலும் :—

“ புறத்துத் தன் இன்மை கவிய வகத்துத்தன்
இன்னுன நீக்கி நிறீஇ—பொருவில்
பிப பெலக்கென் றிரப்பானே லங்கேயே
மாயமாறு மாற்றி விடின் ”

என்று கூறியதால் அறிந்திடலாம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், “இல்லை என்பதால் உண்டாகும் குற்றமும் வைத்துக்கொண்டிட

இல்லை என்று சொல்லுகின்றவனது குற்றமும் அறிந்தோம். இனி, இவ்விதம் கூறிய ஒழிபியலுள் இன்னும் கூறவேண்டுவது ஏதேனும் இருக்குமாயின், அதனையும் கூறுதல் வேண்டும்” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.



## 108. அதிகாரம்.

---

[redacted]

---

(பரி.) அஃதாவது மேல் அரசியலுள்ளும் அங்கவியலுள்ளுஞ் சிறப்புவகையாற் கூறப்பட்ட குணங்களுள் எதிருடையன ஒழிப்பிலுள் யாவர்க்குமெய்த

டத்தை நாம் கண்டது இல்லை என்றும் இத்திருக்குறள் கூறுவதால், மக்களுள் குணமற்றோரைக் கயவர் என்று வேறாய்ப் பிரித்துச் சிறப்பித்தாலும் அக்கயவரும் ஏனைய மக்களோடு உருவத்தால் ஒத்திருப்பதால் அவ்வுருவம் கண்டு அவரைப் பிரித்து அறிதல் முடியாது என்றும், குணம் கண்டே வேறாகப் பிரித்து அறிதல் கூடும் என்றும் கண்டோம். இதனால் கயவர்க்குள்ள குற்றத்தின் மிகுதியைக் கூறியதாக அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணக்கர், "இக்கயவர் குற்றமுடைமையினால் கீழாகிய சாதியார் என்றீர்; எவ்வித மேன்மையுடையவர் என்பதை அறிவித்தல் வேண்டும்" என்னலும், ஆசிரியர் கூறுவாராயினர்.

1072. நன்றறி வாரிற் கயவர் திருவுடையர்
நெஞ்சத் தவல மிலர்.

(பரி.) இ-ள். நன்று அறிவாரிற் கயவர் திரு உடையார் = தமக்குறுதியாவனவறிவாரின் அவையறியாத கீழ்மக்கள் நன்மையுடையர், — நெஞ்சத்து அவலம் இலர் = அவர்போல அவை காரணமாகத் தந்நெஞ்சத்தின்கட் கவலையிலராகலான். எ-று.

நன்றென்பது சாதிப்பொருமை. உறுதியாவன:—இம்மை மறுமை வீடுகட்குரியவாய புகழறஞானங்கள். இவற்றையறிவார் இவை செய்யாநின்றே மிகச்செயப் பெறுகின்றிலேமென்றும், செய்கின்றவிவைதமக்கு இடையூறு வருங்கொலென்றும், இவற்றின் மறுதலையாய பழிபாவமறியாமையென்பன வுற்றன் யாதாமோவென்றும், இவ்வாற்றாற் கவலையெய்துவர்; கயவர் அப்புகழ்முதலியவொழித்துப் பழி முதலிய செய்யாநின்றும் யாதுங்கவலையுடையரல்லராகலான், 'திருவுடையர்' எனக் குறிப்பானிகழ்ந்தவாறு. இதனாற் பழி முதலியவற்றிற் கஞ்சாரென்பது கூறப்பட்டது. (உ)

விளக்கம்:—தமக்கு உறுதியைத் தரும் நன்மைகளை அறிகின்றவர்களைக் காட்டிலும் அந்நன்மைகளை அறியாத கீழ்மக்கள் மிக நல்லவர் என்றும், ஏனெனின், உறுதியானவற்றை அறிந்தவர்போல் கீழ்மக்கள் அவ்வுறுதிப் பொருட்டுத் தம் மனத்தினிடத்தே யாதொரு கவலையும் அடையாது இருக்கின்றார் என்றும் இத்திருக்குறள் கூறுவதால்,

91

இம்மை, மறுமை, வீடு ஆகிய மூன்றிற்கும் உரியனவான புகழ், அறம், ஞானங்களின் பொருட்டுத் தாம் எக்காலத்தும் நன்னெறியிலேயே பழகுகின்ற பெரியோர், 'நாம் செய்கின்ற அறம் முதலியனவைகள் அவற்றின் பயனை அடைவதற்குப் போதுமான அளவாக இல்லையே' என்றும், 'அவ்வாறு சிறிதளவே செய்யும் இல்லறம் முதலியவைகட்கு ஏதேனும் இடையூறு வருமோ' என்றும், 'இவையல்லாமலும் புகழ், அறம், ஞானங்களுக்கு எதிராகிய பழியும், பாவமும், அறியாமை என்பனவற்றுள் ஏதேனும் செய்கின்றோமோ' என்றும் ஆக இவ்விதமெல்லாம் மனத்தினிடத்தே கவலைகொண்டிருப்பர் என்றும், ஆனால், யாதொரு குணமுமில்லாத கயவர் என்னும் கீழ் மக்கள் அப்புகழ் முதலாகச் சொல்லப்பட்ட எல்லாவற்றையும் ஒழித்துப் பழிமுதலாகிய எல்லாத் தீமைகளையும் செய்யும் தம்முடைய அறியாமையினால் இவ்விதம் 'நாம் தீநெறியிற் செல்கின்றோமே' என்று அறியாமலும் மனத்தினிடத்தே யாதொரு கவலையும் கொள்ளாமலும் இருப்பர் ஆதலால், நன்னெறியைக் கடைப்பிடித்துச் செல்பவரைக்காட்டிலும் தீநெறியைத் தமக்கு உறுதியாகக் கொண்டு திரிபவரை நன்மை உடையவர் எனக் குறிப்பால் இகழ்ந்தவாறாயிற்று என்றும் அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "கீழ்மக்கள் பழி முதலியவற்றிற்கு அஞ்சாதவராயின் உலகத்தில் யாவரும் அவரை விலக்குபவர் இல்லையோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1073. தேவ ரனையர் கயவ ரவருந்தா
மேவன செய்தொழுக லான்.

(பரி.) இ-ள். தேவர் அனையர் கயவர் = தேவருங் கயவரும் ஒருதன்மையர்,—அவரும் தாம் மேவன செய்து ஒழுகலான் = அஃதியாதனானெனின், தேவரைப்போன்று தம்மை நியமிப்பாரின்றிக் கயவருந் தாம் விரும்புவனவற்றைச் செய்தொழுகலான். எ-று.

உயர்ச்சியும் இழிவுமாகிய தங்காரண வேறுபாடு குறிப்பாற்றோன்ற நின்றமையின், இது புகழ்வார்போன்று பழித்தவாறாயிற்று. இதனால் விலக்கற்பாடின்றி வேண்டிய செய்வரென்பது கூறப்பட்டது. (௩)

விளக்கம்:—தேவர்களும் கயவர்களும் ஒருவித தகுதியுடையார்

என்றும், அது எவ்விதமெனின்? தேவர்களைப்போலவே நமக்குக் கட்டளையிடுவோர் இல்லாமல் கயவராகிய கீழ்மக்களும் தாம் விரும்பியவற்றை எல்லாவற்றையும் செய்து உகந்து வாழ்ந்து வருகின்றனர் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், விண்ணுலகத்து வாழும்



தேவர்கள் தாம் யாதொன்றையும் சிந்தியாதும் வருந்தாதும் நமக்குக் கிடைத்த கற்பகத்தரு முதலியவற்றின் பயனைக் கொண்டு நல்வினைப்பகுதியால் தம்மை யாரும் ஆள்பவரின்றித் தம் மனம் போன வழிச் சென்று அவ்வழிகளில் உண்டாகும் இன்பங்களை அனுபவித்து நிற்கின்றார்களாதலால், புண்ணிய மிகுதியால் விண்ணுலகத்து உள்ள தேவர்களையும் பாப மிகுதியால் இவ்வுலகத்துள்ள கீழ் மக்களையும் ஒப்புமையுடையவர் போல் எடுத்துக்காட்டி அதனால் இக்கீழ்மக்களைப் புகழ்பவரைப்போல் ஆசிரியர் பழித்தார் என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர் "கீழ் மக்கள் தம்மை விலக்குபவர் ஒருவரும் இல்லாமல் வேண்டியதை எல்லாம் செய்வார் என்று அறிந்தோம். ஆயின், இக்கீழ்மக்கள் எதனால் தம்மை மேம்பட்டவர்களாக எண்ணிக் கொள்வர்?" என்னவும், ஆசிரியர் கூறலாயினர்.

1074. அகப்பட்டி யாவாரைக் காணி னவரின்
மிகப்பட்டுச் செம்மாக்குங் கீழ்.

(பரி.) இ-ள். கீழ்=கீழாயினான்,—அகப்பட்டி ஆவாரைக் காணின்=தன்னிற் சுருங்கிய பட்டியாமொழுகுவாரைக் கண்டானாயின்,—அவரின் மிகப்பட்டுச் செம்மாக்கும்=அவ்வொழுக்கத்தின்கண் அவரின் தான் மேம்பட்டு அதனாற் றன்மிகுதிகாட்டி இறுமாக்கும். எ-று.

அகப்பட்டி=அகமாகிய பட்டி. பட்டிபோன்று வேண்டியவாறேயொழுகலின், 'பட்டி' என்றார்; "சோரக்கசெய்யுஞ் சிறுபட்டி" *என்றார் பிறரும். இதனால் அவர் மேம்படுமாறு கூறப்பட்டது. (௪)

விளக்கம்:-மனத்தினிடத்தே தன்னைக்காட்டிலும் மேம்பட்ட பட்

டியாய் ஒழுகுகின்றவர்களைக் கீழ்மகன் காண்பானாயின், அவரைக் காட்டிலும் தான் மிக வேண்டிய அந்நிய ஒழுக்கத்தில் அதிகமாகச் சென்று தன்னை மேம்பாடுடையவனாக உயர்த்திக் கொள்வான் என்று இத்திருக்குறள் கூறுவதால், கீழ்மகன் ஒருவன் தன்னை அதிகமாக உயர்த்திக் காண்பிப்பது தன்னுடைய தீய ஒழுக்கம் ஒன்றினாலேயே *என்று அறிந்தோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்விதம் தீய ஒழுக்கத்தில் மிகுந்த கீழ் மகனுக்கு அரசனது ஆணையினால் அச்சம் உண்டாகாதோ?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

* கலி, குறிஞ்சி 15.



1075. அச்சமே கீழ்கள தாசார மெச்ச
மவாவுண்டே லுண்டாஞ் சிறிது.

(பரி.) இ-ள். கீழ்களது ஆசாரம் அச்சமே=கயவரதாயவாசாரம் உண்டாதுண்டாயின் அதற்குக் காரணம் அரசனான் ஏதம் வருமென்றஞ்சும் அச்சமே;—எச்சம் அவா உண்டேல் சிறிது உண்டாம்=அஃதொழிந்தால், தம்மால் அவாவப்படும் பொருள் அதனானுண்டாமாயிற் சிறிதுண்டாம். எ-று.

ஆசாரத்தின் காரணத்தை 'ஆசாரம்' என்றும், அவாவப்படுவதனை 'அவா' என்றும் கூறினார். எச்சத்தின்கண்ணென்னுமேழாவது இறுதிக்கட் டொக்கது. பெரும்பான்மை அச்சம், சிறுபான்மை பொருட்பேறு இவ்விரண்டானுமன்றி இயல்பாகவுண்டாகாதென்பதாம். வேண்டியசெய்தலே இயல்பு, ஆசாரஞ் செய்தல் இயல்பன்றென்பது இதனாற் கூறப்பட்டது. (ரு)

விளக்கம்:—கயவராகிய கீழ்மக்களிடத்தே உண்டாகிய ஆசாரம் ஒன்று ஏதேனும் இருப்பதானால் அவ்வாசாரம் உண்டாவதற்குக் காரணம் தமக்கு ஏதேனும் அரசனால் குற்றம் வரும் என்று பயப்படும் பயமே ஆகும் என்றும், அப்பயத்தின் பொருட்டுச் செய்தது அல்லதானால் தம்மால் விரும்பப்படும் பொருள் சிறிது ஏதேனும் கருதியதாகும் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், கீழ்மக்களது ஆசாரம் மிகுதியும் பயத்தால் வருவது என்றும், அல்லது சிறிது பொருளை அடைவதற்கு

என்றும், இவ்விரண்டு விதத்திலும் அல்லாமல் இயல்பாகவே அவர்களுக்கு ஆசாரம் உண்டாவது என்றும், தாம் வேண்டியவழிச் செய்தலே அவர்களுடைய இயற்கை என்றும், ஆயின், கீழ்மக்களுக்கு எக்காலத்தும் அரசன் தம்மைத் தண்டிப்பான் என்ற பயமே முண்டென்று அறிகின்றோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், "இவ்வித கீழ்மக்களிடத்து யாரேனும் நெருங்குவரோ? நெருங்கினால் எதுவுண்டாகும்?" என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

1076. அறைபறை யன்னர் கயவர்தாங் கேட்ட
மறைபிறர்க் குய்த்துரைக்க லான்.

(பரி.) இ-ள். தாம் கேட்ட மறைகளைப் பிறர்க்கு உய்த்து உரைக்கலான் = தாங்கேட்ட மறைகளை இடந்தோறுந் தாங்கிக்கொண்டு சென்று பிறர்க்குச் சொல்லுதலான்,—கயவர் அறை பறை அன்னர் = கயவர் அறையப்படும் பறையினையொப்பர். எ-று.



மறை = வெளிப்படிற் குற்றம் விளையுமென்று பிறரை மறைத்து ஒருவன் சொல்லியசொல். பிறர் = அம்மறைத் தற்குரியர். உய்த்தென்றார், அவர்க்கது பெரும்பாரமாதலின். பறை ஒருவன்கையாற் றன்னையறிவித்த தொன்றனை இடந்தோறுங்கொண்டுசென்று யாவரையுமறிவிக்குமாகலான், இது தொழிலுவமம். இதனால் அவரது செறிவின்மை கூறப்பட்டது. (௬)

விளக்கம்:—தம்மிடத்தே எவரேனும் சொல்லிய மறைவாகிய இரகசியங்களை ஒவ்வொரு இடமும் சென்று மற்றவர்களுக்குச் சொல்லுதலால், கயவர் என்று சொல்லப்படுபவர் ஊரார்க்கு அறிவிப்பதற்கு அடிக்கப்படும் பறை என்னும் வாத்தியத்திற்கே சமானமாவர் என்று இத்திருக்குறள் கூறுகின்றது. ஆகவே, ஊரார் அறியும் வண்ணம் பறை யடிப்பவன் ஒருவன் தனக்கு மேலோர் கட்டளையிட்டபடி இடந்தோறும் போய்ப் பறையை யடித்துச் சொல்லிய விஷயங்களைச் சொல்லுவது வழக்கம் ஆதலின், அதுபோலவே தன்னிடத்தே யாவரும் அறியாத வண்ணமாக மறைவாகிய விஷயங்களை எவரேனும் ஒரு

யன் சொல்லி விடுவானுயின் பிறர் அறிந்தால் குற்றம் வரும் என்று எண்ணி மறைவாகச் சொல்லிய அவ் விஷயத்தைக் கேட் டவனுகிய கீழ் மகன் தான் கேட்டதாகிய அதனை வேறொருவ ருக்குச் சொல்லாவிடின் தனக்குப் பெரும் பாரமாகத் தாங்க முடி யாதவனைப்போல் விரைந்து சென்று எல்லோரிடமும் சொல்லி வெளிப்படுத்திச் சொன்னவனுக்குக் குற்றத்தினை உண்டாக்குவான் என்று அறிந்தோம். இதனால், அக்கீழ்மக்களிடத்து நெருங்குதல் ஆகாது என்றும் அறிந்ததாயிற்று என்றனர். அதுகேட்ட மாணுக்கர், "கீழ் மகன் ஒருவன் தன்னிடத்துள்ள பொருளை ஏதேனும் பிறர்க்கு உதவு வானே?" என்றனம், ஆசிரியர் கூறலாயினர்.

1077. ஈர்ங்கை விதிரார் கயவர் கொடிறுடைக்குங்
கூன்கைய ரல்லா தவர்க்கு.

(பரி.) இ-ள். கயவர் கொடிறு உடைக்கும் கூன் கையர் அல்லாதவர்க்கு= கயவர் தம் கதுப்பினை நெரிப்பதாக விளைந்த கையினையுடையரல்லாதார் க்கு—ஈர்ங்கை விதிரார்=தாமுண்டு பூசிய கையைத் தெறித்தல் வேண்டு மென்றிரக்கவும் தெறியார். எ-று.

விளைந்த கை=முறுக்கிய கை. மெலியார்க்கு யாதுங்கொடார், வலி யார்க்கு எல்லாம் கொடுப்பரென்பதாம். (எ)



விளக்கம்:—கீழ்மக்களானவர் தம் கழுத்தினை ஒடிப்பதாக வளைந்த கைகொண்டு தம்மிடத்தே வருகின்றவர்களுக்கு அல்லாமல் மற் றவர்க்குத் தாம் உணவினை உண்டு எச்சில்-கையையும் தெறிக்கவேண்டு மென்று யாசித்தாலும் தெறிக்கமாட்டார்கள் என்று இத்திருக்குறள் கூற வதால், கீழ்மக்கள் முறுக்கிய கைகொண்டு தம்மை நையப்புடைப் பார்க்கே கொடுப்பர் அல்லாமல் வறிஞராய் உள்ளவர்க்கும் ஒழுக்கத்தால் சிறந்தவர்க்கும் ஒன்றும் கொடார் என்று அறிந்தோம் என்றனர். அது

கேட்ட மாணாக்கர், “கீழ்மகனது கொடுக்கும் தன்மையும் சான்றோரது கொடுக்குந் தன்மையும் ஆகிய இரண்டையும் ஒன்றாகவே எடுத்துக் காட்டல் வேண்டும்” என்னலும், ஆசிரியர் கூறலாயினர்.

**1078.** சொல்லப் பயன்படுவர் சான்றோர் கரும்புபோற்
கொல்லப் பயன்படுங் கீழ்.

(பரி.) இ-ள். சொல்லப் பயன்படுவர் சான்றோர் = மேலாயார் சென்று தங்குறையைச் சொல்லிய துணையானே இரங்கிப் பயன்படுவர் மேலாயினார்;— கீழ் கரும்புபோல் கொல்லப் பயன்படும் = மற்றைக் கீழாயினார் கரும்புபோல வலியார் வைய நெருக்கியவழிப் பயன்படுவர். எ-று.

பயன்படுதல் = உள்ளது கொடுத்தல். கீழாயினார் திறமே தோன்ற, மேலாயினாரையும் உடன் கூறினார். இவை இரண்டு பாட்டானும் அவர் கொடுக்குமாறு கூறப்பட்டது. (அ)

விளக்கம்:—வறிஞர் சென்று அவர்களுடைய குறையைத் தம்மிடத்துச் சொல்லிய அவ்வளவிலேயே இரக்கப்பட்டு வந்த வறிஞர்க்குப் பயன்படும்படித் தம்மிடத்துள்ள பொருளை மேலாயினார் கொடுப்பர் என்றும், மற்றைய கீழானவர்கள் கரும்பைப்போல வலிமையுடையவர் வைய நெருக்கியகாலத்து ஏதேனும் தருவர் என்றும் இத்திருக்குறள் கூறுவதால், சான்றோராவார் தம்மிடத்தேயுள்ள பொருளை வந்து கேட்பவருக்குக் கேட்ட அளவிலேயே அன்பின் மிகுதியால் கொடுத்து விடுவரென்றும், கீழாயினோர் தரித்திரர் முதலாயினோர்க்கு ஓர் இம்மி அளவுங்கொடாது சேர்த்துவைத்து கள்வர் முதலாயினோர் வைய்ப் புடைக்கின்ற காலத்து அவர்களுக்கு முற்றுங்கொடுத்து வறிஞராவர் என்றும் அறிவதுடன் கரும்பானது தன்னிடத்தேயுள்ள இரசத்தினைத் தொட்ட அளவில் கொடாமல் ஆலையின் இட்டு நன்றாக நசுக்கிய காலத்துக் கொடுப்பதுடன் தன் உருவத்திற்கும் பழுது தேடிக்கொள்ளுவது



போல் கள்வர் முதலாயினோர் பொருளைப் பறிக்கின்ற காலத்துப் பொருள் வைத்திருந்த கீழ்மகனை அவன் உறுப்புக்களைச் சிதைத்து உயிரையுங் கொன்றுகொண்டு போவர் என்றும் கண்டோம் என்றனர். அதுகேட்ட மாணாக்கர், “கீழாயினருடைய கொடையினது இழிவை

என்றாக அறிந்தோம். இனிக் கீழ்மக்கள் பிறர் செல்வத்தைப் பார்ப்பாரா யின் என் செய்வர்?" என்னலும், ஆசிரியர் கூறலானார்

**1079.** உடுப்பதூஉம் உண்பதூஉங் காணிற் பிறர்மேல்
வடுக்காண வற்றாகுங் கீழ்.

(பரி.) இ-ள். உடுப்பதூஉம் உண்பதூஉம் கீழ் காணின் = பிறர் செல்வத்தாற் பட்டுடுத்தலையும் பாலோடடிசிலுண்டலையும் கீழாயினான் காணுமாயின்—பிறர்மேல் வடுக் காண வற்றாகும் = அவற்றைப் பொறாது அவர்மாட்டு வடுவில்லையாகவும் உண்டாக்கவல்லனாம். எ-று.

உடுப்பது உண்பதென்பன ஈண்டவ்வத்தொழிலின்மேனின்றன: அவற்றாற் பூண்டல் ஊர்தன்முதலிய பிறதொழில்களுங் கொள்ளப்படும். அவற்றைக் கண்டதனையானே பொறாமையெய்தலிற் 'காணின்' என்றும், கேட்டார் இது கூடுமென்றிலையைப் படைத்தல் அரிதாகலின் 'வற்றாகும்' என்றுங் கூறினார். இதனாற் பிறர்செல்வம் பொறாமை கூறப்பட்டது. (௯)

விளக்கம் :—பிறர் தம்முடைய செல்வத்தால் பட்டுடையும் தரித்தலையும் உடுத்தலையும், பாலோடு அன்னம் உண்டலையும் கீழாயினான் காண்பானானால், அவ்வுடுத்தலையும் உண்டலையும் காணப்பொறாது அவரிடத்தே யாதொரு குற்றமுமில்லாமலிருக்கவும் குற்றம் உள்ளதாகச்செய்ய வல்லவனாகும் என்று இத்திருக்குறள் கூறுவதால், கீழ்மகனானவன் தான் உடுக்காதும் உண்ணாதும் இருப்பதுடன் கல்வியைப் பயனும் மற்றவன் செல்வத்தை படைத்து உண்ணலையும் உடுத்தலையும் செய்வானாயின் அச்செயலைக்கண்ட அளவிலேயே மனம்பொறாது பொறாமையின அடைவான் என்றும், மேலும் அவனிடத்து யாதொரு குற்றமும் இல்லாமலிருக்கவும் குற்றம் உண்டு என்று யாவரும் நம்பும்படிக் குற்றத்தை உண்டுபண்ணித் தூற்றுவான் என்றும் அறிந்தோம் என்றனர். அதை கேட்ட மாணாக்கர், "இத்திருக்குறளால் கீழ்மகன் பிறர் செல்வங்கண்டவிடத்துப் பொறாமைப்படுவான் என்று அறிந்தோம். இனி, இவ்விதக் கீழ்மகன் தனக்கு ஏதேனும் ஒரு துன்பம் வந்தால் என் செய்வான்?" என்னலும், ஆசிரியர் கூறலானார்.

